உ

ஸ்ரீராமஜெயம்.

ஸ்ரீமத்

# மஹாபாரத அம்மானை



பதிப்பாளர்

மதுரை புக்ஷாப்

**M. பழனியாண்டி அன் கோ.**

விலை ரூபாய் 3.

உ

ஸ்ரீராமஜெயம்.

ஸ்ரீமத்

# மஹாபாரத அம்மானை




இஃது

முன்னோர்களால் பாடியுள்ள ஓலை யேட்டுப்பிரதியை,

முத்தமிழ்க்ஷேத்திரம்

மதுரகவி, வீ. நடராஜ பிள்ளையவர்களால்

திருத்தியமைக்கப்பெற்றது.

பதிப்பாளர்

மதுரை புக்ஷாப். M. பழனியாண்டி அன் கோ.

மதுரை விவேகாநந்தா பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

 1933 [விலை ரூ. 3.

உ

ஸ்ரீ ராமஜெயம்.



ஸ்ரீமத்

# மஹாபாரத அம்மானை.



## விநாயகர் காப்பு.

### வெண்பா.

சீரார் வியாசமுனி செப்பமா பாரதத்தைக்
காரார் வடவரையக் காலமதி—லேரார்
மருப்பால் வரைந்தவனும் வல்லபை சமேதன்
திருப்பாத மேதுதிசெய் தேன்.

## கணபதி துதி.

### வெண்செந்துறை.

ஓங்காரத் துள்ளானை யோதுமறைக் கெட்டானை
பாங்காய் நிறைந்தானைப் பாரிலொற்றைக் கொம்பானை
மேரில் வரைந்தானை வேழ முகத்தானை
தாரணிந்த மார்பானைச் சங்கரனார் சேயானை
முத்திக்கே வித்தானை மூலப் பொருளானை
சித்திக்கே நாயகனின் செப்பமலர்த் தாள்பணிவாம்.

## சுப்பிரமணியர் துதி.

சிங்கார வேலோனே தேவர்சே னுபதியே
மங்கா மணிவிளக்கே வானோர்க் கநுகூலா
கானக் குறத்தி கணவா மறைமுதலே
மோனக் குமரகுரு மூர்த்தியே சண்முகனே
செந்திருமா லின்மருகா தென்பழனி யாண்டவனே
மைந்தனு மம்மானை வழுத்தவரு மேயருள்வாய்

கலைமகள் துதி.

வெண்பா.

நான்முகனூர் நாவிலுறை நாயகியே வேதமொரு
நான்கினுமே நின்றே நடனமிடுந்—தேன்மொழியே
பாரதனின் மீதினிலே பாரதவம் மாலைசொலப்
பாரதியென் வாக்கிலிருப் பாய்.

சரஸ்வதி துதி.

வெண்டா மரையாளே வேதமின்னே விண்ணோர்கள்
கொண்டாடு மீஸ்வரியே கோதையே பாரதியே
வேதாவின் நாவிலுறை வித்தகியே வேதமதிற்
காதார மாய்விளங்கு மன்புடைய மாதாவே
புவிராஜர் போற்றிசெய்யும் பூரணியே யெந்நாளுங்
கவிராஜர் வாக்கிலுறை காரணியே கற்பகமே.
வாணியே செந்தமிழின் வாரிதியில் வாசமிடுந்
தோணியே பாவலர்க்குத் துணையா யிருப்பவளே
பாரதனின் மீதினிலே பண்பாகப் பாலனுமே
பாரதவம் மாலை தனைப் பாடவர மேயருள்வாய்.

---

அவையடக்கம்

நன்னூ லொடுநிகண்டு நாலடியார் கோவைகுறள்
பன்னூ லிலக்கியமும் பண்பா ரிலக்கணமுங்
கல்லாட மந்தாதி கம்பரிரா மாயணமும்
நல்லோ னுரைத்ததமிழ் நைடதமுங் காரிகையும்
பிள்ளைத் தமிழுடனே பெருமையுள்ள சாஸ்திரமுந்
தெள்ளியா ராய்ந்திருக்குஞ் செந்தமிழில் வல்லவரே
பாரிலைந்தாம் வேதமென்னும் பாரதத்தைப் பாலனுமே
சீருடனம் மாலையாகச் செப்பினேன் நேசமுடன்
மாசிருந்தா லுங்கள் மைந்தன் றனைப்போல
ஆசிர்வதித் துப்பிழையை யகற்றுவீ ரன்புடனே

---



உ

ஸ்ரீ மத்

# மஹா பாரத அம்மானை

## வியாசர் உற்பத்தி



சீராருந்தேகா ஜெனமே ஜெயவேந்தே
தாராருமார்பா தனபதியே நீர்கேளும்
பூபாரந்தீர்ந்த புனிதவைந்தாம் வேதமென்னு
மாபாரதத்தை வழுத்துகின்றே னம்மானை
நாற்றிசையுங்கொண்டாடும் நல்லபர ராஜமுனி
தோற்றமுள்ள வண்மை துவாபர யுகந்தனிலே
வெள்ளிவரைதன்னிலுறை வித்தகனை யந்நேர
முள்ளமதில்நினைந்தே யுத்தமனு மேகயிலை
செல்லுவோமென்றே சிறப்பாகவேநடந்து
வல்லவருஞ்சிந்தோரம் வந்தனர்கா ணம்மானை
வாரியதனூடே மச்சகந்தியென்றொருபெண்
தீரமாய்த்தோணிவிட்டே தேன்மொழியாள் வீற்றிருந்தாள்
கன்னிகையை யந்நேரங் கண்டே பரராஜர்
மின்னனையேயெந்தனையிவ் வேளையிலே நீமகிழ்ந்து
அக்கரையாய்மின்னரசே அன்புடைய பெண்ணரசே
அக்கரையில்விட்டுவிடு மாரணங்கே யென்றுரைத்தார்
சாந்தணியுமாமுனியைத் தையலுமே தான்வணங்கி
ஏந்திழையுந்தோணியிலே ஏற்றியே சென்றனளே
காமுனிவனந்தக் கடலூடே செல்கையிலே
மாமுனிவனப்போது மச்சகந்திக் கேதுரைப்பான்

நட்சேத்திரமும் நலமுடையராசிகளும்
உச்சமாய்க்கூடி யொருமித்திருக்கிறது
இந்தநல்லவேளையிலே ஏந்திழையேநாம்புணர்ந்தால்
மைந்தன்பிறந்துமே மாசமர்த்தனுயிருப்பான்
மாமயிலேநாமருவ வாருமென்றுரம்மானை
மாமுனிவன் சொற்கேட்டு மச்சகந்தியேதுரைப்பாள்
மாதவசியெந்தனுடல் வல்லவரே துர்நாற்றங்
காதவரைவீசுமென்று கன்னிகையுமேநவின்றுள்
வாய்மையுள்ளமாமுனிவன் வார்த்தைதனைக்கேட்டு
தூய்மையொடுவந்நேரந் துங்கக் கமண்டலத்தில்
தீர்த்தமெடுத்தே சிறப்பாகமந்திரித்தே
பார்த்தேமுகமதனைப் பாவையுடலிற்றெளித்தார்
துற்கந்தமெல்லாந் துலைந்ததேமாதரசி
நற்கந்தமாகியந்த நல்முனிவரைப்புணர்ந்தாள்
பாதிமதிசூடும் பரனுரருளாலே
மேதினியில்வேத வியாசமுனிதான்பிறந்தார்
கரையோரந்தோணிவரக் கண்டுபரராஜமுனி
விரைவாகவேயிரங்கும் வேளைவியாசமுனி
தந்தையுடனிரங்கித் தானேநடந்தனரே
விந்தைதனைப்பார்த்தே மெல்லிகையும்பின்றுடர்ந்து
அப்பாமகனே அருமையுள்ளகண்மணியே
இப்போதுஎன்னைவிட்டு ஏகவுமேஞாயமுண்டோ
உந்தனையேயீன்றேன் ஒளித்துவிட்டுப்போராயே
எந்தனையேபாராய் நீ என்றனளேமச்சகந்தி
மாதாவுரைத்தமொழி மாமுனியுங்கேட்டுநின்று
ஆதாரமில்லையென்ற அம்மணியேநீகேளாய்
ஏதாகிலுமேஇடர் வந்தாலென்னைநினை
மாதாவேயந்நாள் வருவேனெனநடந்தார்
பரராஜமாமுனியும் பாலகரும்பண்புடைய

அரனுரைக்கண்டே யடிபணிந்தாரம்மானை
திங்களொடுகொன்றைதும்பைசென்னிமிசைவைத்தசிவ
சங்கரனுமாமுனிமுன் சாற்றுவாரம்மானை
மண்ணுசைசற்றுமில்லா மாமுனியேதங்களுக்குப்
பெண்ணுசையில்லையென்றீர் பிள்ளைவந்தவாறேது
சொல்லுமென்றேகேட்டுச் சுருதிப்பொருளிருந்தார்
வல்லபரராஜ மாமுனிவரும்புகழ்வார்
சங்கரனேவேதந் தலைகெட்டுப்போனதுவை
இங்கிதமாய்க்கோர்வையிட வந்தோனென்றுரைத்தார்
அந்தவுரைகேட்டே ஐயன்மனமகிழ்ந்து
வந்தவியாசமுனிவன் வதனம்பார்த்துரைப்பார்
என்பிறப்புமுந்தனையே யீன்றெடுத்தவுன்றகப்பன்
றன்பிறப்புமேயுரைப்பாய் சான்றோனேயென்றுரைத்தார்
அப்போவியாச ரருள்முனிவர்தன்பிறப்பும்
தப்பாமலாலமுண்டோன் றன்பிறப்புமேயுரைத்து
பூதலத்தோர் கொண்டாடிப் போற்றியேசெய்திடவே
வேதமதைக்கோர்வைசெய்து விட்டுமேமூன்றுகத்துக்
காலமுறமைகளுங் கங்காதரன்மகிழச்
சீலமுடன்கூறியின்னுஞ் செப்புவாரம்மானை
ஐயனேகேளீரிவ் வம்புவியிலேயினிமேற்
றய்யனே நூற்றுவருஞ் சொற்பெரிய பாண்டவரும்
ஈசனேதான்பிறந்தே எல்லோரும்வாழ்நாளில்
நேசமுள்ள பாண்டவர்கள் நேர்மையுள்ளநாடதனை
நூற்றுவர்கள்சூதால் நொடிக்குள்ளே தான்பறித்தே
வேற்றுமையதாக விரட்டியே கானகத்தில்
ஆண்டுவோர்பன்னிரண்டுமான பின்னேயோராண்டு
வேண்டியுருமாறி வேந்தருமேதானிருந்து
வந்திமே நூற்றுவர்முன் வாகானநாடதனைத்
தந்திடுவீரென்றுரைக்கத் தார்வேந்தரில்லையென

மெத்தப்பகையாகி வில்வீரப்பாண்டவர்கள்
அத்தனை மன்னோர்களிட ஆவிதனைப்பறித்தே
பட்டமே தர்மருக்கே பாங்கான நாள்பார்த்தே
கட்டவுமே போரார்கள் கங்காதராபதியே
பின்னேவரும்பலனைப் பித்தனே நின்சமுக
முன்னேவறைந்தனனே முற்றிலுமே பாருமென்றார்
அந்திமதிதரித்தோ னந்தமுள்ளவேதமதை
விந்தையொடு சேர்த்ததினால் வேதவியாசரென்ற
நாமமதைக்கொடுத்தே நாதனுமேயந்நேரம்
வாமமிகுந்தவத்தி மாமுகனைத்தானழைத்தே
மேருவிலேவேதமுனி விண்டதுவைநன்றான
பாரதத்தைபாலா பதியுமென்றாரம்மானை
அந்தவுரைப்படியே ஐங்கரனோர் கொம்பொடித்தே
விந்தையதாய்மேருவரை மீதில்வரைந்தனர்காண்
இப்படியுமே சிலநா ளேகிடவுமே மகிழ்வாய்ச்
செப்பிடுவேன்கேளுஞ் ஜெனமேஜெயராஜே

சந்தனுமஹாராஜன் வரலாறு

அந்தமுள்ள நீலகண்ட ஞானபரன் சென்னியிலார்
சந்திரகுலத்துதித்த சந்தனுமாராஜனென்போன்
நாட்டைமனு நீதி ஞாயமுறைதப்பாமல்
தாட்டீகமாயரசு தன்னைச் செலுத்திவந்தான்
வேட்டையொருநாளாட வெண்ணியேவேடரொடு
காட்டகத்தைநாடிக் கரடிபன்றி யானைகளை
கொன்றுமே தாகமிகக் கொண்டேமதிமயங்கி
நின்றுமேமன்னவன்றண் ணீரையே தேடிவந்தான்
கங்கைக்குமேவிதியோர் காரணத்தாற்சாபமிட
கங்கைக்கரையோரங் கன்னியுமேவந்திருந்தாள்
தாகமிகக்கொண்டுநொந்த சந்தனுவுங்கங்கையின்மேல்

மோகமிகக்கொண்டே மொழிகுவானம்மானை
இந்தவனந்தனிலே ஏந்திழையே நீதனியாய்
வந்தவிபரமென்ன மாமயிலேநின்றகப்பன்
நாமமென்னமின்னரசே நன்ருய் நவிலுமென்றே
வாமமுள்ளசந்தனுமா மன்னவனுந்தானுரைத்தான்
கங்கையுமேகேட்டுக் களித்தேமனமிகவுஞ்
சங்கைகொண்டு சந்தனுமுன் சாற்றுவாளம்மானை
செந்திருமாலென்றகப்பன் றேர்வேந்தேவேதனுமே
தந்ததொருசாபமதாற் ருனிங்குவந்தனனே
கங்கையென்பேராகுமென்றே கன்னிகையுந்தானுரைக்கத்
துங்கனுமே கேட்டியின்னுஞ் சொல்லுவானம்மானை
கன்னிகையேயெந்தனையே கல்யாணஞ் செய்யுமென
மன்னன்முகம் நோக்கி மாமயிலாளேதுரைப்பாள்
சந்திரகுலத்துதித்த சந்தனுமாமன்னவனே
உந்தன்மனம்போல வுத்தமியுமேநடப்பேன்
வல்லவனேயெந்தன் வயிற்றிலுதிப்பவரைக்
கொல்லுவேனுண்மையிது கொற்றவனேகைகொடுத்தால்
ஒப்பிமனம்புரிவே னுத்தமனேயென்றியம்ப
அப்பொழுதுசந்தனுவு மாரணங்கினுசையினல்
பின்னேவரும் பலனைப் பேதையானெண்ணுது
முன்னமேகைகொடுத்தே முத்துச்சிவிகைதனில்
கங்கையொடுமன்னன் களித்தேறியேநகரில்
மங்களமாய்ச் சென்றே மணமுடித்தாரம்மானை

பீஷ்ம ருற்பத்தி

கங்கையின்மேற்சந்தனுவுங் காதல்தனைச்செலுத்தி
துங்கமதன்ரதிபோற் ருேகைதனையேமருவி
மங்கையுமேகர்ப்ப வதியாகவே யிருந்து
சிங்காரமாகியவோர் செல்வன்றனைப்பயின்று

கங்கையிலேபோட்டுவந்தாள் கங்கையுமேயந்நேரஞ்
செங்கோல்செலுத்துகின்ற தேர்வேந்தன்சந்தனுவும்
அண்டவொண்ணுத் துக்க மரசனுமே தன்மனதிற்
கொண்டுமுன்னே வாக்குக் கொடுத்ததையே நினைந்து
வேந்தன்மவுனமதாய் வீற்றிருந்தாரம்மானை
சாந்தணியுமாதுகங்கை சந்தனுவுடன்கூடி
நங்கையறுபுத்திரரை நன்மையுடனேபயின்று
கங்கையிலேபோட்டுவந்தாள் கண்டுமேயந்நகபோர்
கங்கைதனையேயிகழ்ந்தார் காசினியாள்சந்தனுவுஞ்
செங்கோல்செலுத்துவது சேயரையேகொல்வதற்கோ
இப்படியுமேபலநா ளெல்லோருமேசேர்ந்து
செப்புவதைக்கேட்டரசன் சிந்தைமிகவேமயங்கி
இனிநாமுமென்னசெய்வோ மென்றேயிருந்தனனே
கனிவானகங்கையுமோர் கான்முளையைப்பெற்றெடுத்தே
கங்கையிலேவிட்டெறியக் கங்கைவரும்வேளையிலே
துங்கமுள்ளசந்தனுவுந் தோகைதனையேமறித்து
பட்டமதையாளவிந்தப் பாலகனையீந்திடுவாய்
கட்டழகியேயெனவே கங்கைதனக்கேநவின்முன்
மன்னனிடமந்த மதலைதனைக்கைக்கொடுத்து
முன்னமேசொன்ன மொழிதவறிப்போனதினல்
உந்தனுக்குமெந்தனுக்கு முத்தமனேயாதொருசம்
பந்தமில்லையென்றுகங்கை பாஷித்தேபாலகனை
வேந்தனேதந்தாலே மெல்லிகையான்கொண்டுசென்று
காந்தியுள்ளசேயனுக்கே காங்கேயனென்றுபெயர்
தன்னையுமேசூட்டித் தனுசாஸ்திரமுறையை
உன்னிதமாய்கற்றுவைத்தே யுத்தமனேயுன்னிடமே
கொண்டுவந்துயான்கொடுப்பேன் கொற்றவனேயென்றியம்ப
கண்டுமேமன்னவனுங் கான்முளையைக்கைக்கொடுத்தான்
கங்கையுமேவாங்கிக் களிப்பாகவேநடந்து

கங்கையிலேபோய்மறைந்தாள் காவலனுமேசிலநாள்
வாடிமதிமயங்கி மங்கைதனையேபிரிந்து
தேடிமன்னன்கங்கா தீரமதில்வந்திருந்தான்
கங்கையுமேகொண்டுவந்தே காங்கேயரைவிடுத்தே
மங்கையுமேசென்றே மறைந்தாளே கங்கையிலே
மன்னன்மகிழ்வடைந்து மைந்தனுடேவந்தமுள்ள
நன்னகரைநோக்கி நடந்தார்காணம்மானை
காங்கேயவேந்தனுக்கே காவலனுமேகனிவாய்ப்
பாங்காயிளவரசுப் பட்டமதைக்கட்டினபின்
சந்தோஷமாயிருந்தான் சந்தனுமாராஜனுமே
விந்தையதாய்வேடரொடு வேட்டையதுதானுட
வேந்தனோர்நாளில் விரும்பியே கானகத்தில்
சாந்தகுணமுடையோன் தக்கபடிமானினத்தை
வென்றுதிரும்புகின்ற வேளையிலேமச்சகந்தி
என்றவோர்பெண்ணரசி இன்பமுடனங்கிருக்க
கண்டுமேசந்தனுமன் காதலுமேகொண்டவராய்
வண்டாரும்பூங்குழலாள் மச்சகந்திதன்வரலாற்
கேட்டேவிரைவினிலே கெம்பீரமாய்நடந்தே
தாட்டீகமாய்விளங்குந் தாசராஜன்சபையில்
வந்துமேபெண்கேட்க மன்னவனுக்கேயுரைப்பான்
தந்திடவேவேறு தடையில்லைதார்வேந்தே
மங்கையாளின்வயிற்றில் மைந்தர்பிறந்தாலே
செங்கோல்நடத்திடவே செய்வீரோவென்றறைந்தான்
மன்னவனுங்கேட்டே மனமிகவுமேதயங்கி
நன்னயஞ்சேர்கின்றவத்தி னுபுரத்திலேகிமலர்ப்
பஞ்சணையின்மேற்படுத்தே பாவைதனைவேந்தனுமே
நெஞ்சினிலேதானே நினைந்தேதினந்தினமும்
மெய்யுடைந்தான்மிக்க விசனமொடுநீதிமுறை
செய்யுமிடம்வாரா திருந்தானேசந்தனுவும்

## சந்தனுமஹாராஜன் பரிமளகந்தியைத் திருமணம்புரிதல்

காங்கேயருங்கொலுவிற் கர்த்தன்போலேயமர்ந்து
பாங்காயமைச்சரின்முன் பண்பாகவேயுரைப்பான்
தந்தையுமேயிச்சபைக்குத் தானேவராதிருக்கும்
விந்தையென்னவென்றே விளம்பினாரம்மானை
மந்திரிமாருங்கேட்டே மன்னவனுக்கேநவில்வார்
அந்தமுள்ளபூமா அரசனுமேவேட்டைசெய்து
வந்தநாளன்றுமுதல் வாடியுடல்மெலிந்து
சிந்தைகலங்கித் தியங்குகின்றார் தேர்வேந்தே
ஒன்றுந்தெரியோங்கா ணுண்மைதனையுத்தமனே
என்றேயமைச்ச ரியம்பினர்காணம்மானை
காங்கேயர்கேட்டுக் கனவருத்தமுண்டாகி
பாங்கானசாரதியாற் பார்வேந்தன்சோர்ந்தவகை
வல்லவனுமேதெரிந்து மச்சகந்தியென்றவிள
மெல்லிகையைப்பெண்கேட்க வேண்டுமெனநடந்தார்
தாசராஜன்சபையிற் சற்குணவான்வந்தமர்ந்து
வாசமுள்ளமச்சகந்தி மாதரசிதன்னையென்றன்
தந்தைதனக்கேமணமே தான்முடிக்கவேண்டுமென்று
வந்தேன்காணென்றறைய மன்னவனுமேயுரைப்பான்
சாந்தகுணவானே தடையில்லை பெண்கொடுப்பேன்
ஏந்திழையாளன்பாக வீன்றதொருபாலருக்கே
பட்டமத்தி னுபுரத்தைப் பண்பாகப் பார்வேந்தே
கட்டுகிறேமென்றாலே கன்னிகையை யான்கொடுப்பேன்
என்றியம்ப வேந்தன் இனியமொழிபுகல்வார்
நன்றியுள்ள மன்னவனே நானுமொரு கன்னிகையை
செந்திருமால் வேதனரன் றேவரொடுபூமாது
அந்தவிண் வாணி யறியமணஞ்செய்வதில்லை

சிற்றன்னை தன்னுடைய செல்வருக்கே யான்மகிழ்வாய்க்
கொற்றவனே பட்டங் கொடுப்பே னெனவுரைத்தார்
மூவருமே கொண்டாட மூவுலக மும்புகழத்
தேவருமே பீஷ்மரென்றே செப்பினர் நாமமது
தாசராஜன் கேட்டுச் சந்தோஷ மாகவுமே
வாசமுள்ள மச்சகந்தி மாமயிலுக் கன்னேரம்
பொன்னு பரணமுமே பூட்டியே வந்தமுள்ள
மின்னுள் தனைச்சிவிகை மீதேற்றிக் கொண்டுவந்து
சந்தனுமா ராஜனுக்கே தாசரா ஜன்புதல்வி
அந்தமுள்ள மச்சகந்தி யாளைமணஞ் செய்துவைத்தார்

---

## சித்திராங்கதன், சித்திரவீரியன் உற்பத்தி.

மச்சகந்தி யாள்மீது மன்னவனு மேமகிழ்வாய்
இச்சைமிகக் கொண்டே இரதி மதன்போலே
பஞ்சணையின் மீதினிலே பாவையாள் தன்னுடனே
கொஞ்சிவிளை யாடியுமே கொம்பனையுங் கர்ப்பமதாய்
பத்துமாதஞ் சுமந்து பாவைசித்தி ராங்கதனை
உத்தமியாள் பெற்றெடுத்தே யோர்வருட மானபின்பு
மங்கையுமே கர்ப்ப வதியாக வேயிருந்து
தங்கமினை போன்றபிள்ளை தன்னையே பெற்றெடுத்து
மாசித் திரவீர்ய மன்னனென்று நாமமிட்டு
நேசித் திருவரையும் நேர்மையுட னேவளர்த்து
தக்க பருவதிசை தானுகி யேயவரும்
பக்குவமாய் நீதிமுறை பார்வேந்தர் கள்படித்தே
வில்வித்தையிற் றேர்ந்து மெத்தவலு வாளிகளாய்
மல்வித்தை கற்று நன்ருய் வாகாக வேபலது

மந்திரமுந் தந்திரமும் மன்னவர் களுந்தெரிந்து
சிந்துரமா வேற்றமதிற் சீமான் களுந்தேர்ந்து
நாளுக்கு நாளாக நல்ல வளர்மதிபோல்
வேளுக் கிணையாக வேந்தருமே தானிருந்தார்

சித்தராங்கத மஹாராஜனுக்கு,
மகுடாபிஷேகஞ் செய்தல்.

வாசமுள்ள மச்சகந்தை மைந்தரிட வண்மைகண்டு
நேசமொடு காங்கேயர் நேரினிலே வந்துநின்று
கட்டழகுக் காங்கேயா காவலனே யிப்பொழுது
பட்டமதைக் கட்டுமெந்தன் பாலற் கெனவுறைந்தாள்
சிற்றன்னை சொற்படிக்கே சித்ராங் கதன்றனக்கு
சுற்றத்தார் வந்திருந்தே சூட்டிவைத்தார் மாமகுடம்
தன்னுயிரைப் போலவுமே தார்வேந்த னன்புடனே
மன்னுயிரைக் காத்துவந்தான் மா நீதி வானுக
மெத்த வழகுடையோன் விண்ணுட்டி லேவசிப்போன்
சித்ராங் கதனெனும்பேர் தீரமுள்ளோ னீதறிந்தே
என்னுடைய நாமமதை இட்டரசாள் கின்றவந்த
மன்னவனைக் கொன்ருல் மரியாதை யாமெனவே
பொன்னகரை விட்டெழுந்து போர்க்கோலம் பூண்டுகொண்டு
சின்னமதி யுள்ளவனுந் தேரேரி வந்தனனே
வில்லாளி பீஷ்மரில்லா வேளையிலே தான்வெகுண்டு
வல்லோனுங் கொன்றுவிட்டே வானுலகஞ் சென்றனனே
மச்சகந்தி தானறிந்து மண்மேல் விழுந்தலறி
உச்சிதஞ்சேர் பீஷ்மரின்முன் னேடிவந்து மேபுகன்ருள்
மட்டடங்கா வீரனிந்த வார்த்தையது காதிலுறத்
திட்டெனவே கீழ்விழுந்து செப்புவா ரம்மானை

விண் ணுலகி லுள்ளவொரு வேந்தனுமே சோதரனே
மண் ணுலகி லுந்தனையே மாய்த்துவிட்டுச் சென்ருனே
மித்திரனே யானுமில்லா வேளையிலே கண்மணியே
சத்தியவா னுன்னுயிரைத் தான்பறித்து மேகினனே
என்றுமதி யேமயங்கி ஏந்தலுமே தானெழுந்து
நின்றமச்ச கந்திமுகம் நேர்பனுமே பார்த்துரைப்பார்
என்னவினை செய்தேனே என்சோ தரனிறக்க
அன்னையே யென்றவளை யாற்றினு ரம்மானை

சித்திரவீரிய மஹாராஜனுக்கு முடிபுனைதல்

நல்லசுப வேளையுள்ள நாட்பார்த்தே பீஷ்மருமே
வல்லோன் புகழுடையான் வாய்மைதனை மாருதான்
மாசித் திரவீர்ய மன்னனுக்கே நேமமொடு
பூசித்தே மூவரையும் பொன்முடியைச் சூட்டினரே
மனுசாஸ் திரப்படியே மன்னனர சாண்டிருந்தான்
தனுசாஸ் திரமறிந்த சன்மார்க்க பீஷ்மருமே
சோதரனைக் கூட்டியுமே துங்கமுள்ள காசிநகர்
மாதலத்தை யாளுகின்ற மன்னன் புதல்வியரின்
சுயவரத்திற் கன்போடு சுந்திரரும் வேகமொடு
நயமுடைய பந்தலின்கீழ் நாட்டமாய் வந்தமர்ந்தார்
அந்த மிகுந்தவம்பா அம்பிகையம் பாலிகையுஞ்
சந்தோஷ மாகவுமே தாதியருஞ் சூழ்ந்துவர
மாலையொரு கைப்பிடித்தே மங்கையர்கள் மூவருமே
சேலைப் பழித்தவிழித் தேன்மொழியா ரும்நடந்து
வாலைப் பருவமுள்ள மன்னரெழி லைப்பார்த்து
பாலைப் பழிக்குமொழிப் பாவையரி லேயொருபெண்
மாசித் திரவீர்ய மன்னனுக்கே மாலையிட
நேசித் தருகிலுறும் நேர்மைகண்டு வேந்தருமே
துட்ட விழிகுலத்தார் துங்கமுள்ளோ ராயிருந்தாற்

கட்டழகி மாலையிடக் காரணமோ வென்றறைந்தார்
கேட்டெழுந்தே பீஷ்மருமே கீர்த்தியுள்ள வில்வளைத்தே
பூட்டிச் சரம்விடுத்தே போர்செய்தார் வேந்தரின்மேல்
மன்னருமே தேரேறி வந்தெதிர்த்தே யோடிவிட்டார்
கன்னியர்கள் மூவரையுங் காங்கே யரும்மகிழ்ந்து
நாற்றிசையோர் கொண்டாட நல்லரதத் தின்மீது
ஏற்றி வரும்போ தியம்புவா ளம்பாவும்
சாந்த குணவானே சாளுவமா ராஜனையே
ஏந்திழையாள் மாலையிட எண்ணினே னென்றுரைத்தாள்
கன்னிகையம் பாவைவிட்டே காவலனும் பின்னிரண்டு
மின்னிடையார் தன்னை நல்ல வேளையது தான்பார்த்தே
பட்டணத்தைச் சிங்காரம் பண்ணியே மூவரையுஞ்
சட்டமதா யூர்கோலந் தன்னையே செய்துவைத்து
அம்புவிழி யாரான அம்பிகையம் பாலிகையைத்
தம்பிக்கே நன்மணமே தான்முடித்தா ரம்மானை
அன்னனடை மின்னரசி யம்பாவுஞ் சாளுவமா
மன்னவனைக் கண்டே வழுத்தினு ளெண்ணமதை
சித்தினியே வுன்னைச் சிறையெடுத்தான் பீஷ்மனுமே
இத்தினை நீ விள்ளாதே என்றே மறுத்துவிட்டான்
மெத்தக் கவலைகொண்டே மெல்லியா ளம்பாவும்
சத்தியவான் பீஷ்மரிடஞ் சாற்றுவா ளம்மானை
காங்கேய மன்னவனே கன்னிகையுஞ் சாளுவன்முன்
பாங்காகச் சென்றுரைத்தேன் பாவையெனை யேமறுத்தான்
ஐய்யனே யென்றனையே ஆதரவு செய்துமிக
மெய்யனே யிந்தநல்ல வேளைமணஞ் செய்யுமென்ருள்
இந்தமொழி கேட்டரசன் என்னசொன்னுய் பாவியெனச்
சிந்துவிடம் போலவுமே சீறியே பற்கடித்தான்
கன்னிபல வாறுரைக்கக் காவலனு மேமறுத்தான்

மின்னிடையாள் கேட்டு விசனமுட னேபரசு
ராமரிடம் சென்றறைந்து நங்கை கமலமலர்
வாமமுள்ள பாதம் வணங்கிநின்று ளம்மானை
அந்தணருங் கன்னிகைக்கே ஆசிபல கூறியுமே
சுந்தரஞ்சேர் பீஷ்மனிளந் தோகையுனை யேமணர
செய்துவைப்பேன் வந்திடுவாய் தேரேறி யென்னுடனே
தையலே யென்றறையச் சந்தோஷ மாயிருந்தாள்

பரசுராமமூர்த்தியும், பீஷ்மரும்
போர்செய்தல்.

---

நன்னயமே சேர்பரசு ராமருமே யன்னேரம்
உன்னிதமாய்த் தேரேறி உத்தமியாள் தன்னுடனே
திங்கவத்தி னுபுரத்தைத் துய்யனுமே நோக்கிவரக்
கங்கைமைந்தன் வந்தெதிரே கண்டார்கா ணம்மானை
ஆசிபல கூறியுமே அந்தணருங் கன்னிதனை
மாசில்லா மன்னு மணம்புரியு மென்றுரைத்தார்
காங்கேயர் கேட்டே கவலைமிக வுண்டாகி
பாங்கான வேதியர்முன் பண்பாக வேயுரைப்பார்
தந்தைக்கே முன்மணமே தான்முடிக்கும் நாளையிலே
இந்திரனுந் தேவருமே எல்லோருந் தானறிய
மங்கையரை யான்மணரேன் மன்னவரே உண்மையென்றேன்
துங்கமுள்ள என்குருவே சொல்மாறே னென்றறைந்தார்
அந்தணரும் பீஷ்மரையே ஆரணங்கைத் தான்மணர
எந்தவிதங் கூறியுமே ஏற்காம லேமறுத்தார்
விந்தைமொழி யேபுகன்ற பீஷ்மனே யெந்தனொடு
வந்திடுவாய் போர்பொருத வார்த்தைகே ளாததினல்
உந்தனுயிர் தென்றிசைக்கே யூட்டிவிடு வேனெனவே
விந்தையாய்த் தன்னுடைய வில்லைவளைத் தாக்ரமித்தார்

உத்தமனுங் கேட்டு உருகியே சிந்தையுமே
சத்தியத்தைத் தான்மறந்து தையல் தனைமணந்தால்
மெத்தவசை சொல்வாரே மேதினிமீ துள்ளவர்கள்
இத்தனைக்கும் நாமே யிறப்பதுவே நன்மையென்று
வில்லை வளைத்துவந்தார் பீஷ்மருமே யந்நேரம்
வல்லோனிவையறிந்தே வாளி பலவிடுத்தார்
வாளிவரும் வேகமதை மன்னவருங் கண்டுசில
வாளி தொடுத்தறுத்தான் மாமறையோ ரும்வெகுண்டு
மெய்விரதன் மீதினிலே வேகமாய் நூறுகணை
துய்யனுமே யேவிவிட்டார் துண்டித்தே கங்கைமைந்தன்
பின்னிரண்டு பாணம் பிரயோகஞ் செய்துவிட்டார்
உன்னிதமாய் வாளியுமே யுள்ளமிக வேநடுங்க
சிந்துவிடம் போலவுமே சீறி வருவதுவை
அந்தணருங் கண்டே யறுத்தா ரொருகணையால்
மற்றுமொரு கணையை மாமறையோ ருந்தொடுக்கக்
கொற்றவன்றன் மார்புருவிக் கொண்டுமே சென்றனவே
வில்லாளி பீஷ்மருமே மெத்தவுமே யாக்ரமித்தே
பல்லா யிரங்கோடி பாணமதை யேவிடுத்து
நாட்டமுட னேபரசு ராமரிட தேருடைத்தே
தாட்டிக முள்ளவில்லை தானொடித்தா ரம்மானை
நன்னயமே சேர்பரசு ராமருமே நாணமொடு
மன்னவனை நோக்கி வழுத்துவா ரம்மானை
தனுசாஸ் திரமதனை க்ஷத்திரியர் தங்களுக்கே
இனிப்பயிற்சி செய்துவையே னென்றே சபதமிட்டு
ஓடியே சென்றனரே உத்தம சிகாமணியும்
நாடியத்தி னுபுரத்தில் நன்மையுள்ள கங்கைமைந்தன்
வந்தமர்ந்தே செங்கோல் வழுவாது தம்பிசெய்யச்
சந்தோஷ மாயிருந்தார் தாரணிமீ தம்மானை

## அம்பா, காளியை நோக்கித் தவஞ்செய்தல்.

கன்னிகையா ளம்பா கவலைமிக வுண்டாகி
சின்னமதி கொண்டவளுஞ் செப்புவா ளம்மானை
நன்னயமே சேர்பரசு ராமரிடஞ் சென்றதுவும்
மன்னனிடம் போர்பொருதி மாமறையோ ரோடினதும்
வல்லபஞ்சேர் பீஷ்மருமே மாநகரஞ் சென்றதுவும்
எல்லாம் மனம்நினைந்து ஏந்திழையாள் துக்கமுற்று
மெய்விரதன் றன்னையுமே வெல்லவே வேண்டுமென்று
தையலுமே காளி தனைநோக்கி நற்றவசு
செய்தாள் வெகுகாலஞ் சிந்தை சிதருதபடி
மைவிழியாள் முன்பாக மாகாளி வந்துநின்று
என்னவரம் வேண்டுமென இன்பமுட னேகேட்க
கன்னிமகிழ் வாகவந்தக் காளிதனை யேவணங்கி
ஓங்கார மானவளே உத்தமியே யெந்தனுக்கே
காங்கே யரைமடிக்கக் கன்னிவரந் தாருமென்றுள்
அம்மையுமே கேட்டுமகிழ்ந் தம்பாவுக் கேதுரைப்பாள்
இம்மையிலே கொல்ல விசையாது மாதரசே
சித்தினியே கேள்யாக சேனன் வயிற்றினிலே
உத்தமியே நீயலியா யொண்டொடியே போய்ப்பிறப்பாய்
சந்திரனைப் போல்வளர்ந்து தையலே வாழ்ந்திருப்பாய்
வந்திடுமே பாரதப்போர் மாமயிலே சென்றிடுவாய்
அப்போழுதே பீஷ்மனையே ஆரணங்கே கொல்வையென
செப்பியே மாகாளி சென்றே மறைந்தனளே
அம்பாவு மந்நேர மக்கினியை யுண்டுபண்ணி
கொம்பனையும் பீஷ்மனையே கொல்லுவே னென்றறைந்து
அம்புவிழி மாதரசி அக்கினியி லேவீழ்ந்து
செம்மையுள்ள மாயாக சேனனிட மேபிறந்தாள்

### சித்திரவீரிய மஹாராஜன் பரம பதமடைதல்.

மாசித் திரவீர்ய மன்னனிரு கன்னியொடு
நேசித் தெழிலுடைய நேர்பன் மதன்ரதிபோல்
பஞ்சணையின் மீதினிலே பாவையுட னேமகிழ்வாய்க்
கொஞ்சிவிளை யாடியுமே கொற்றவனும் வாழ்ந்திருந்து
செங்கோல் முறைப்படியே செய்துவந்தா னேசிலநாள்
துங்கமுள்ள சந்திரகுலத் தோன்றலுமே யம்மானை
வருநோ யறியாது மாதருட னேகூடி
பெருநோயு முண்டாகிப் பேச்சடங்கி யேமடிந்தான்
மச்சகந்தி பீஷ்மருமே வாடிமிக வேபுலம்பி
உச்சிதஞ்சேர் மன்னவனை யுத்தமனு மேயடக்கம்
செய்துவந்து தானிருந்தார் சீரான பீஷ்மருமே
வையகத்தை யாளவுமே மைந்தனுமில் லாததினல்
கன்னிகையாள் மச்சகந்தி காவலவன் முன்புவந்து
மன்னவனே பட்ட மதைப்பூண் டரசாட்சி
செய்யுமென்றே யன்னைசொலத் தேர்வேந்த னுங்கேட்டு
தையல்முகம் நோக்கிச் சாற்றுவா ரம்மானை

### பரிமளகந்தைக்கு பீஷ்மர் தருமசந்தான விதியுரைத்தல்.

சிற்றனையே முன்னுளில் செய்தசப தந்தெரிந்தே
கொற்றவனே செங்கோல்கைக் கொண்டரசா ளென்றுரைத்தாய்
தேவர் நகைத்திடுவார் தேர்வேந் தருமிகழ்வார்
மூவர் நகைப்பார் முடிசூடே னென்றறைந்து
தருமசந் தானவிதி தாயாரே நீகேளாய்
ஒருமனதா யென்றே யுரைக்கலுற்று ரம்மானை

பாவையே முன்னே பலிச்சக்ர வர்த்தியுமே
பூவையரு டன்கூடிப் புத்திரனில் லாதிருந்து
மந்திரிமார் தங்கள் வசத்திலர சைக்கொடுத்து
சந்தோஷ மாகத் தவவேடம் பூண்டுகொண்டு
வந்தான் நதிக்கரையில் மன்னவனு மன்னேரம்
பந்தமுள்ள பவ்வியரின் பாலகராந் தீர்க்கதமர்
மாமுனிவர் தெப்பமதில் வந்தார் மகிழ்வுடனே
வாமமுள்ள மன்னன் மலரடியைத் தான்வணங்கி
புத்திரசந் தானமின்று புண்ணியரே தாருமென்று
உத்தமரைத் தானழைத்தே ஓடிவந்தே வேந்தனுமே
பத்தினியைத் தானழைத்தே பண்புடனே வேணபல
புத்திசொல்லப் பள்ளியறை போயிருந்தா ளம்மானை
சிந்தைமிக வேமகிழ்ந்து தீர்க்கதமர் மாமுனிமுன்
வந்தே பணிந்துவெந்தன் மங்கைதனை நீர்மருவி
மைந்தனையே தந்துவிட்டு மாதவரே செல்லுமென்ருன்
அந்த வுரைகேட்டு அருள்முனிவர் பள்ளியறை
சந்தோஷ மாயேகி தையல் தனைமருவி
விந்தையுடன்ருன்மறைந்தார் மெல்லியொருசெல்வனையே
துங்கமுடன் பெற்றெடுத்தே தோகையுமன் பாய்வளர்த்து
அங்கரா ஜன்னெனவே அம்புவியை யாளவைத்தான்
கதிரோன் குலத்துதித்த காவலர்கள் தேவியரும்
இதுபோல வேநடந்து ஏந்திழையே பிள்ளைபெற்ருர்
அன்னையே யிந்தவித மாகவுமே செய்திடுவாய்
நன்னயமீ தாகுமென்றே ராஜனுமே தானறைந்தார்
கேட்டுமே மச்சகந்தி கெம்பீர மாகவுமே
வாட்டமிக வேதீர்ந்து மைந்தனுரை போலவுமே
மெல்லிகையா ளக்காலே வேதந் தனைக்கோர்த்த
வல்லவரைத் தானினைந்து மச்சகந்தி வீற்றிருந்தாள்

## திரிதராட்டிரன் பாண்டு விதுரன் இவர்கள் உற்பவம்

வேதா கமமுணர்ந்த வேதமுனி வந்துநின்று
மாதாவின் பாதமதை வள்ளலுமே தான்பணிந்து
என்னை யழைத்தவகை என்னவென்று மாமுனியும்
அன்னை முகம்நோக்கி யன்புடனே நின்றனரே
வாசமுள்ள மச்சகந்தி மங்கையரை நீமருவி
நேசமுள்ள புத்திரரை நேர்பனே தாருமென்றே
அந்த மிகமிகுந்த அம்பிகையம் பாலிகைமுன்
வந்திருந்து மேநீதி வாக்கியங் களையுரைத்து
அம்பிகைக்கு வேண அலங்காரஞ் செய்துவிட்டு
கொம்பனையே மாமுனியைக் கூடுமென்று ளம்மானை
வஞ்சி மனமகிழ்வாய் மாமுனிவர் வீற்றிருக்கும்
பஞ்சணையில் வந்தவந்தப் பாவையுட னேமருவும்
போதினிலே நாணமொடு பொற்கொடியாள் கண்மூட
மேதினிமீ தந்தகனுய் மெல்லியொரு பிள்ளைபெற்றுள்
அம்பா லிகையாளு மன்னேர முத்தாரங்
கொம்பனையாள் பூண்டுகொண்டு குங்குமகெந் தம்புனைந்து
மாமுனிவர் முன்பாக வந்துநின்று ளன்புடைய
காமுனியும் மாதைக் கலவிசெயும் வேளையிலே
மெல்லிகையாள் நாணமுற மெய்யினிலே வேர்வையுற
வல்லபஞ்சேர் பாண்டு மதலைதனைப் பெற்றெடுத்தாள்
வாசமுள்ள மச்சகந்தி மைந்தரிட வாறுகண்டு
நேசமாய்ச் சேடிதனை நீமருவி வாருமென்றுள்
சேடியுமே சிங்காரஞ் செய்துமகிழ் வாகவுமே
தேடிவந்து மாமுனிக்குத் தெண்டனிட்டுப் பஞ்சணையில்
உல்லாச மாகவுமே உத்தமனுங் கன்னிகையுஞ்
சல்லாப மாகச் சருவிவிளை யாடியுமே

புத்திரனைப் பெற்றெடுத்தே பூரித்தாள் வேதமுனி
சத்தியவா ளுகவிவன் தானிருப்பா னென்றேர்ந்து
மாதாவின் பாதம் வணங்கி மகிழ்வுடனே
வேதா கமமுணர்ந்த வேதமுனி யேகினரே
வாசமுள்ள மச்சகந்தி மைந்தர்கள் மூவரையும்
பாசமுட னேவளர்த்து பார்வேந்தர் தானறிய
நல்லோர் புகழ்திரித ராட்டிரன்மா பாண்டுவென்றும்
வில்லோன் விதுரனென்றும் வீஷ்மர்நா மம்புனைந்தார்

## திரிதராட்டிர மஹாராஜனுக்கு மகுடாபிஷேகஞ்செய்தல்

வல்லபஞ்சேர் பீஷ்மருமே மைந்தர்கள் மூவரையுஞ்
செல்வமுடன் முன்வளர்த்தே சிந்தைமிக வேமகிழ்ந்து
வேதமதை யோதிவைத்தார் விண்ணவர்கள் கொண்டாட
பூதலத்து வேந்தர்களும் போற்றி யடிபணிய
மந்தகரி மாவேற்றம் மன்னரின்செங் கோன்முறைமை
உத்தமருங் கற்றுவைத்தா ருண்மையொடு சேயர்கட்கே
தனுசாஸ் திரப்பயிற்சி தன்னை யுணர்ந்தவராய்
மனுசாஸ் திரமதனில் மா நீதி மானுனர்
நல்ல சுபவேளை நாட்பார்த்தே பீஷ்மருமே
வல்லமைசேர் மன்னவர்கள் வந்தே யமர்ந்திருக்க
நாட்டை யலங்கரித்தே நற்றிரித ராட்டிரர்க்கு
சூட்டினர் மாமகுடந் தொல்லுலகோர் கொண்டாட
காங்கேயர் சிந்தை கனிந்துமே பாண்டினுக்கு
பாங்கா யிளவரசுப் பட்டமதைக் கட்டினரே
தந்திரத்தி லேமிகுந்த சான்றேன் விதுரனையே
மந்திரிக்கு மேலான மந்திரியாய் வைத்தனரே
மங்காது சந்த்ரகுல மன்னவர்கள் மூவருமே

செங்கோல் வழுவாது செய்துவந்தா ரம்மானை
தன்னுயிர்போல் மன்னுயிரை தற்காத் தெழிலுடைய
மன்றிரித ராட்டிரமா வள்ளலுமே வாழ்ந்திருந்தார்

திரிதராட்டிர மஹாராஜனுக்கு
காந்தாரியைத் திருமணம் புரிதல்

வல்லோராம் பீஷ்மருமே மன்றிரித ராட்டிரர்க்கே
உல்லாச மாய்மணமே உத்தமருஞ் செய்யவெண்ணி
சிந்துசூழ் காந்தார தேசமதை யாளுகின்ற
சுந்தரமே வாய்ந்த சுவேதமா ராஜனிட
செல்வியெனுங் காந்தாரி சீர்பொருந்து மாதரசை
நல்ல சுபவேளை நாளிற் றிருமணமே
வேதாகமப்படியே வேந்தருமே சூட்டிவைத்து
பூதானங் கோதானம் பூசுரர்க்கு மேகொடுத்தார்
மன்னவனுங் கன்னிகையும் மாரன் ரதிபோல
நன்னயஞ்சேர் கின்றவத்தி னுபுரத்தில் வாழ்ந்திருந்தார்

கர்னனுற்பவம்

சிந்துசூழ் குந்தியென்னுந் தேசமதை யாளுகின்ற
கந்தமலர்த் தார்புனைந்த காவலவன் முன்பாக
மாதவசி துர்வாச மாமுனிவர் வந்தமர்ந்து
நீதியுள்ள மன்னவனே நேர்பனே யென்றனக்கு
தொண்டுசெய்ய வோராளைச் சுந்தரனே யிப்பொழுது
கொண்டுவரு வாயெனவே கூறினு ரம்மானை
மன்னவனுங் குந்திதனை மாமுனிமுன் கூட்டிவந்து
கன்னிகையே தொண்டுசெய்வாய் கண்மணியே யென்றறைந்தான்
மாமுனிவர் கூறுகின்ற வாக்கியத்தை மாருது
வாமமுள்ள குந்தி மகிழ்ந்தே பணிவிடைகள்
செய்து வரும்நாளிற் சிந்தைகனிந் தேமுனியும்

மைவிழியாள் குந்திதனை மாதவருந் தானழைத்து
மந்திரங்க ளைந்துதனை வாகாக வேயுரைத்து
மைந்தனுமே வேண்டுமென்றால் மாமயிலே நீநவில்வாய்
என்றே துருவாச ரின்பமுட னேபுகன்று
சென்றாரே யந்தமுள்ள தேன்மொழியா ளோர்நாளில்
சந்திரிகை காலமதிற் றையலுமே மாடமிசை
வந்தே யமர்ந்திருந்து மாமுனிவர் சொல்லிவைத்த
மந்திரத்தி லொன்றோத மந்திரா தேவதையும்
சிந்தைமிக வேமகிழ்ந்தே சென்றே கதிரவனை
கண்டியம்ப வக்காலே காந்தியுள்ள சூரியனும்
வண்டாரும் பூங்குழலாள் மாமயிலைச் சேருமென்றார்
குந்தியுமே வெய்யோன்முன் கூறுவா ளன்புடனே
இந்தப் பருவமதி லெந்தவிதஞ் சேர்வதென்றாள்
துங்கமுள்ள மாதரசே தோகையுனை யிப்பொழுது
மங்கைப் பருவமதாய் மாமயிலே செய்திடுவேன்
எந்தனுட னேமருவா யேந்திழையே துங்கமிகு
மைந்தன் பிறந்திடுவான் மாமயிலே பேழையுள்ளே
வைத்தடக்கிக் கங்கையிலே மானேநீ விட்டபின்னே
சித்த மகிழ்ந்திடவே செந்தேனே முன்போல
பெதும்பைப் பருவமுமே பெண்ணரசே நீயடைவாய்
ததும்பு மனமுடைய தையலே யென்றறைந்து
மங்கைப் பருவமதை மாதரசிக் கேகொடுத்து
நங்கையுட னேமருவி ஞாயிறுமே சென்றனரே
கன்னிகர்ப்ப மாயிருந்து கான்முளையை யீன்றெடுத்து
உன்னிதஞ்சே ராடையிலே ஓர்முழத்தை யேகிழித்து
பெட்டியிலே தான்விரித்து பெண்ணரசி சேயனையே
சட்டமுட னேவளர்த்தித் தையலுமே யந்நேரம்
கங்கையிலே விட்டாளே கங்கையத்தி னூபுரத்துத்

துங்கத் துறைதனிலே தோகை யொதுக்கினளே
நல்லோ னெழில்திரித ராட்டிரனின் றேர்நடத்தும்
வல்லான் ரதையனுமே வந்தான் நதியோரம்
கண்டெடுத்தே பேழையுள்ள கான்முளையைச்சந்தோஷங்
கொண்டெடுத்தே தான்வளர்த்தான் கோமானின் தேர்ப்பாகன்
ஆகாய வானி யறைந்த மொழிப்படியே
வாகான கர்னனென்று வைத்தான் றிருநாமம்
நாளுக்கு நாளாக நன்மையுட னேவளர்ந்து
வேளுக் கிணையாக வெய்யோன் மகனிருந்தான்
வேதமொரு நான்கினையும் மிக்கமறை யாறினையும்
நீதிகலைக் யானமுமே நேர்மையுட னேதெரிந்தான்
வில்வித்தையம்புவித்தை வேந்தரின்செங் கோன்முறைமை
மல்வித்தை கற்றே மகிழ்ந்திருந்தா னம்மானை

பரசுராமனால் கர்னன்
சாபம் பெற்றது

---

வாம முடையகர்னன் வண்மையுள்ள மாபரசு
ராமரிடஞ் சென்றே நலமாக வேவணங்கி
மனுசாஸ் திரமறிந்த வள்ளலே யென்றனக்கு
தனுசாஸ் திரமதனைத் தான்பயிற்சி செய்துவைப்பீர்
என்றிடவே கேட்டு இரவிகுல சங்காரன்
நன்றாகப் பார்த்தே நவிலுவா ரம்மானை
விப்பிரனு க்ஷத்திரிய வேந்தனு வென்னிடமே
இப்பொழுதி லேநவில்வா யென்றிடவு மேகேட்டு
அந்தணனு னென்றே யருள்பரசு ராமரிடம்
விந்தையுட னேபுகன்று வில்வித்தை கற்றுவந்தான்
துய்யோன்கருனன் தொடைமீ தொருநாளில்
ஒய்யார மாய்த்தலைவைத் துத்தமனு மேதுயின்றார்

வல்லபமே சேரிரத்த வாரிப் புழுதுளைத்துச்
செல்லத் துடையினிலே செந்நீரும் வந்தனவே
துங்கமுள்ள கர்னன் தொடையெடுத்தால் நித்திரைக்கு
பங்கம் வருமென்றே பயந்துமே தானிருந்தான்
நன்னயமே சேர்பரசு ராமருமே கண்விழித்து
மன்னனிவன் க்ஷத்திரிய வம்மிஷத்தி லேயுதித்தோன்
என்றுமே மாமறையோ ரெண்ணியே தான்வெகுண்டு
நின்றகர்னன் முன்னே நிகழ்த்துவா ரம்மானை
கற்றவித்தை யெல்லாங் கடடமாய்க் கற்றதினல்
உற்ற சமயத்தி லுதவாமற் போகவென்று
சாபமதை யேகொடுத்தார் சற்குணவான் கர்னனுமே
கோபமுடன் வந்தனனே துங்கவத்தி னுபுரத்தே

பாண்டுமேஹா ராஜனுக்கு
குந்திதேவி மத்திரா தேவி யிவர்களைத்
திருமணம்புரிதல்

வில்லாளிபீஷ்மருமே வேந்தனுஞ்செங் கோல்செலுத்தும்
வல்லமையைக் கண்டே மகிழ்ந்திருந்தா ரம்மானை
பாண்டுமா ராஜனுக்கே பண்பாய் மணமுடிக்க
வேண்டுமென வெண்ணி விரைவாக பீஷ்மருமே
சிந்துசூழ் குந்தியெனுந் தேசமதை யாளுகின்ற
குந்திபோ ஜன்பயின்ற குந்திமா தேவியையும்
மத்திர தேசாதிபதி மாசூர சேனனின்சேய்
மத்திரா தேவியையும் மாபாண்டு மன்னனுக்கு
வேதியர்கள் சூழ்ந்திருக்க வேசியர்க ளாடிநிற்க
ஓதியே வேதமதை ஓமமிக வேவளர்த்து
நல்ல சுபமான நாளிகையில் மாதருக்கு
வல்லபமாய் மங்கிலிய மானதுவை யேபுனைந்தார்
மதனும் ரதிபோல மாபாண்டுங் கன்னியரும்

இதமாக வேவாழ்ந் திருந்தார்க ளம்மானை

## அமுதந்திமுனிவராற் பாண்டு சாபம் பெற்றது

பாண்டுமா ராஜனுமே பண்பாக வேட்டைசெய்ய
வேண்டுமென வில்லெடுத்தே வேடர்கள் தன்னுடனே
காட்டினிலே சென்று கரடிபுலி தந்தியுயிர்
ஓட்டியே தென்பதிக்கே யுத்தமனு மேமகிழ்ந்து
இன்னும் விலங்கினங்க ளெல்லா முயிர்விடவே
மன்னவனு மெய்துகொண்டு வந்தான்கா ணம்மானை
சந்தோஷ மாகவமு தந்திமுனி யுஞ்சதியும்
விந்தையுடன் மான்வடிவாய் மேவுவதை வேந்தனுமே
கண்டு தனுவிற் கணைபூட்டி யெய்யவுக்ரங்
கொண்டுவந்து பாய்ந்துருவிக் கொண்டுமே சென்றனவே.
மாமுனியு முன்போல மாறியே ரூபமது
காமுனிவ னும்வெகுண்டு காவலன்முன் னேநவில்வான்
பாண்டுநீ மானெனவே பாணமதை யேவிடுத்து
பூண்டாய் பழிதனையே பொல்லாத காலமதால்
தேவியுட னேமகிழ்வாய்ச் சேர்ந்தாலே யுன்னுடைய
ஆவியுமே போமென் றருள்முனிவர் சாபமிட்டே
மாண்டாரே மாமுனியும் மண்மீதி லேவிழுந்து
பாண்டுமா ராஜன் பதைத்தே மனங்கலங்கி
குந்திமத் திராதேவி கோதையருக் கிம்மொழியை
நொந்துரைத்தே நீங்களுஞ்செய் நோன்புமிவ்வா றெனதென
தவவேடந் தான்புனைந்தே தையலிரு பேருடனே
சிவன்மீது சிந்தைவைத்தே சேர்ந்துமே கானகத்தில்
அத்தனையே நோக்கி யருந்தவமே செய்திருக்க
சத்தியவா னன சதானந்தர் தன்னுடனே
மாமுனிவ ருஞ்சூழ்ந்து வந்தார்கள் பாண்டுகண்டு

வாமமுள்ள பாத மதைவணங்கி யேபுகல்வார்
ஐயனே யிந்தவழி யாகவுமே யெங்குசெல்ல
மெய்யனே வந்த விபரமதைக் கூறுமென
துங்கச் சதானந்தர் சொல்லுவார் வெள்ளிவரைச்
சங்கரனைச் சேவைசெய்யத் தான்போரோ மென்றறைந்து
செல்லுகின்ற போதினிலே சிந்தைமகிழ்ந் தேபாண்டு
வல்லவருங் கூட வருவதையே பார்த்துரைப்பார்
பாண்டுமா ராஜேநீ பாலனில்லா தெங்களொடு
தாண்டவன்வாழ் வெள்ளிவரை தன்னிலுறவொண்ணது
அந்தமுள்ள மன்னவனே அன்புடனே நீருமொரு
மைந்தனையே யீன்றெடுத்து வந்தால் நலமுடனே
ஈசனடி யைப்பெறலா மென்றறைய வேபாண்டு
நேசமுட னின்றே நிகழ்த்துவா ரம்மானை
வல்லவமு தந்தி மாமுனிவர் கானகத்திற்
சொல்லியசா பந்தனையே சொல்லவுமே கேட்டவரும்
தரும சந்தானவிதி தன்னையே பாண்டுவுக்கு
ஒருமனதாய்ச் செப்பியுமே யுத்தமர்க ளேகினரே
பாண்டரசன் கேட்டு பதைத்து மனங்கலங்கி
தாண்டவன்வாழ் வெள்ளிவரை தன்னையென்று காண்பதென
குந்திமத்தி ராதேவி கோதை யிருவரின்முன்
வந்துமே பாண்டு வழுத்துவா ரம்மானை

தருமனுற்பவம்

அன்னநடைக் கன்னியரே அந்தவமு தந்திமுனி
சொன்னசா பத்தையெண்ணித் தோகையரே நாமிருந்தோம்
பாலகனில் லாதிருக்கும் பாவியுமே வெள்ளிவரை
சீலமுடன் முனே செல்லலா காதெனவே
நங்கையரே தாபசதா நந்தமுனி செப்பிடவே
மங்கையரே கேட்டு மனங்கலங்கி வந்தனனே

மின்னரசி நீங்களுமே மேன்மையுள்ள மாமுனியைக்
கன்னியரே கூடியொரு கான்முளையை யீன்றெடுப்பீர்
சந்த்ர குலத்துதித்த தார்வேந்தர் கன்னியரும்
மைந்தனில்லா தேவேத மாமுனியைத் தான்புணர்ந்து
எங்களையே யீன்றெடுத்தா ரேந்திழையே நீங்களுமே
சங்கையில்லா தோர்முனியைத் தானே மருவுமென்றூர்
குந்தியுமே கேட்டுக் கொழுநனுரை தப்பாது
சந்தோஷங் கொண்டிருந்து தையலுமே யந்நேரம்
துருவாச மாமுனிமுன் சொல்லிவைத்த மந்திரத்தில்
தருமன்மா மந்திரத்தைச் சாற்றினு ளம்மானை
மந்திரா தேவதையும் வாகா யெமன்றனையே
குந்திமுன்னே யந்நேரங் கொண்டுவந்து விட்டதுவே
கண்டுகுந்தி யன்புடைய காலனொடு சந்தோஷங்
கொண்டுபல லீலைசெய்து கோதைகர்ப்ப மாயிருந்து
நல்ல சுபமான நாழிகையிற் றேரகையரும்
வல்லமையா யுள்ளவொரு மைந்தனையே யீன்றெடுத்து
மன்னவனும் பாண்டுமுன்னே மங்கையுமே வந்துநின்று
நன்னயஞ்சேர் மைந்தனையே நாயகியு மேகொடுக்க
வாங்கியே வேந்தனுமே மைந்தனிட வாசையெல்லாம்
பாங்காகத் தீர்ந்தனனே பாலனுக்கந் நேரமதில்
ஆகாய வாணி யறைந்தபடி யேபாண்டு
வாகாய் தருமனென்று வைத்தாரே நாமமது
நாளுக்கு நாளாக நன்மையுட னேவளர்த்து
வேளுக் கிணையான மேன்மையுள்ள புத்திரனை
குந்தி மத்திராதேவிக் கொம்பனைமார் கண்டுதினஞ்
சந்தோஷ மேமிகவே தான்கொண்டா ரம்மானை
அன்றுமுதற் பாண்டரச னந்தமுனி வோருடனே
சென்றுவெள்ளி யங்கிரிவாழ் தேவனையு மேபணிந்து

வந்தடவி லேதவமே மாருமல் மன்னவனும்
விந்தையுடன் புரிந்தே வீற்றிருந்தா ரம்மானை

துரியோதனாதியர் உற்பவம்.

வாமமிக வேமிகுந்த மாமுனிவர் நாரதரும்
சேமமுள்ள பாண்டுமைந்தன் செய்திதனைக் கூறவென்று
மன்றிரித ராட்டிரனின் மாசபையில் வந்தமர்ந்து
நன்றியுள்ள வார்த்தை நவிலுவா ரம்மானை
பூவேந்தர் போற்றும் புரவலனே பாண்டுசெதி
மாவேந்தர் போற்றவொரு மைந்தனையே யீன்றனளே
இந்தவகை தன்னையுமே இங்குரைக்க வேண்டுமென
வந்தனனே யென்றெழுந்து மாதவசி சென்றனரே
அந்தப் புரத்திலுள்ள வாரணங்கு காந்தாரி
சுந்தரஞ்சேர் குந்தி சுதனீன்ற செய்திதனை
கேட்டே வருத்தமொடு கிள்ளைமொழி மின்னரசி
தாட்டீக மாய்குழவி தன்னையிரு கைப்பிடித்து
ஓங்கி யிடித்திடவே உத்தமியாள் கர்ப்பமது
தீங்குசெய்ய வேகலங்கிச் செந்நீராய் வந்தனவே
கண்டுமெச்ச கந்தியென்ன காரியஞ்செய் தாயெனவே
தண்டு கமண்டலத்தைத் தாங்குகின்ற வேதமுனி
தன்னையே தானினைந்தாள் சான்றோரு மன்னேரம்
அன்னைமுன் வந்தே யடிபணிந்தா ரம்மானை
என்னை யழைத்தவகை ஏதுவகை கூறுமெனக்
கன்னியுமிக் காரியத்தைக் காமுனிவ ருக்குரைத்தாள்
மாமுனிவர் வேகமொடு வந்துதிரந் தன்னையுமே
வாமமுள்ள வோர்பெரிய மண்சாடி யுள்ளடைத்து
மிஞ்சினதோர் செந்நீரை வேதமுனி யந்நேரங்
குஞ்சிரிப்பைக் கொண்டு குணவான் சிறுசாடி

தொண்ணூற்றி யொன்பதிலே துங்கமுட னேபிடித்து
நன்னயமாய் வாய்விரிந்த நல்லவொரு சாடியிலே
சிந்தினதை யெல்லாந் திரட்டியே தான்போட்டு
சுந்தரஞ்சேர் காந்தாரித் தோகை தனையழைத்து
சாடிதனை நீதழுவித் தானிருப்பா யுஷ்ணமுமே
சாடிடவே நல்ல தனையருமே தானுதிப்பார்
என்றுரைத்தே வேதமுனி இன்பமுடன் சென்றனரே
நன்றெனவே காந்தாரி நாயகியு மேதழுவ
நித்தமொரு சாடியுமே நேர்மையுட னேபிளந்தே
புத்திரர்கள் நூறுமொரு புத்திரியு மேபிறந்தார்
வில்லாளி பீஷ்மருமே மெத்தமன மேகனிந்து
நல்லோர் களையழைத்து நாமமதைச் சூட்டுமென்றார்
வள்ள லுரைபோலே வந்தமர்ந்து மேபெரியோர்
உள்ளமிக வேமகிழ்ந்து ஓதுவா ரம்மானை
துரியோ தனன்சலந்தன் துற்சா சனன்விகடன்
துருவாகன் நாகதந்தன் துஷ்கிரமன் சித்திதரன்
என்றழைத்தார் பின்னு மிருக்கின்ற பாலருக்கே
நன்றியுள்ளோர் துங்கமிகு நாமமதை யேபுனைந்தார்
கடையிலே தானுதித்த கன்னிகையாள் கட்கேதுற்
சடையா ளெனநாமந் தன்னையே சாற்றினரே
மெல்லிகையாள் காந்தாரி மெத்த மகிழ்வடைந்து
சல்லாப மாகவுமே தானிருந்தா ளம்மானை

வீமனுற்பவம்

துங்கமுள்ள நாரதருந் தோகைகுந்தி தேவிமுன்னே
மங்களமாய் வந்தே வழுத்துவா ரம்மானை
அன்னநடை மின்னே யருமையுட னேர்சுதனைக்
கன்னிகைநீ யீன்றெடுத்த கார்ணத்தை யேதெரிந்து

காந்தாரி யோர்குழவிக் கல்லெடுத்தே கைப்பிடித்துக்
காந்தாள மாயிடித்தாள் கர்ப்பமது வேகலங்கி
மெத்த வுதிரமது வெள்ளம்போ லோடிவர
அத்தருணம் வேதமுனி யங்குவந்து நூற்றியொரு
சாடிதனிற் றுனடைத்தே தையலடை காருமென
நாடினார் விண் ணுலகு நங்கையுமே காந்தாரி
மாமுனிவர் சொற்போல மாதரசி காத்திருந்தாள்
வாமமுள்ள வோர்பெரிய மண்சாடி யைப்பிளந்து
இன்றொருவன்றான்பிறந்தா னிந்தவிதம் போற்றினமும்
நன்றாக வேஜெனிப்பார் நங்கையே யீதுரைக்க
வந்தேனென் றேகினபின் மங்கைகுந்தி வாய்வினிட
மந்திரத்தை யேஜெபிக்க மந்திரா தேவதையும்
கூட்டிவந்தங் கேவிடவே குந்தியுட னேமருவி
தாட்டீக மாய்வாய்வு தானடந்தான் றன்பதிக்கே
கன்னிகர்ப்ப மாயிருந்தோர் காண்முளையை யீன்றெடுத்தே
மன்னவனின் கைக்கொடுக்க வாங்கி மகிழ்வடைந்து
ஆகாய வாணி யறைந்த மொழிப்படியே
வாகான வீமனென்றே வைத்தாரே நாமமது
பாலரிரு பேர்களையும் பாண்டுமா ராஜனுமே
சீலமுட னேவளர்த்தே சிந்தைமிக வேமகிழ்ந்தார்

அருச்சுனனுற்பவம்

குந்திமா தேவியுமே கோமுனிவர் சொன்னதொரு
இந்திரனின் மந்திரத்தை ஏந்திழையு மேநவின்றாள்
மந்திரா தேவதையும் வாகாக வோடியுமே
விந்தையுட னேயுரைக்க விண் ணுலக வேந்தனுமே
சந்தோஷங் கொண்டெழுந்தே தாமதஞ்செய் யாமலுமே
வந்தனனே குந்திகண்டு வாசவனைக் கூட்டிவந்து
பஞ்சணையின் மீதினிலே பண்பா யிருவருமே

கொஞ்சிவிளை யாடிவிண்ணின் கோமானுஞ் சென்றனனே
மங்கைகர்ப்ப மாயிருந்து வானோர் மலர்சொரியத்
திங்கள் வதனியொரு சேயனையே யீன்றெடுத்தே
பாண்டரசன் கைக்கொடுத்தே பாலனுக்கே நாமமிட
வேண்டினாள் குந்தியுமே வேள்போன்ற சேயனுக்கே
வாகாக வென்னபெயர் வைத்திடுவோ மென்றுவெண்ண
ஆகாய வாணியுமே யன்பாக வேயறைவாள்
பங்குனியி லேயுதித்தோன் பற்குனனென் றேபுகல்வீர்
சங்கோச மென்னவெனச் சாற்றினா ளம்மானை
பாண்டரசன் கேட்டேயப் பாலனுக்கே யந்தவிதம்
பூண்டார்க ளந்தமுள்ள பொன்னுலகோ ரும்புகழ
மூவரையும் பாண்டரசன் மும்மூர்த்தி கள்போல
ஆவலுட னேவளர்த்தா ரந்தமுட னம்மானை
முன்னாள் துருவாசர் மூலமாய்க் கற்றமந்த்ரந்
தன்னைமத்தி ராதேவித் தையலுக்கே குந்தியம்மாள்
போதித்தா ளன்புடனே புத்திரசந் தானமுற
மாதரசி தானறிந்தே வந்தாச் சிரமமதில்

நகுல சகாதேவருற்பவம்

மந்திரத்தை யுச்சரித்த மாத்திரத்தி லேவிரைவாய்
மந்திரா தேவதையும் வாகாக வேநடந்து
வந்தஸ் வனிதேவர் மாசமுக மேயுரைக்க
சந்தோஷங் கொண்டவருந் தையலிடம் வந்திருவர்
பஞ்சணையிற் பாவைதனைப் பக்குவமா கப்புணர
வஞ்சிகர்ப்ப மாயிருந்து மைந்தரிரு வோரீன்று
ஆகாய வாணி யறைந்த மொழிப்படியே
வாகாய் நகுலனென்றும் வல்லசகா தேவனென்றும்
நாமமதை யேபுனைந்தார் நல்லசுப வேளையிலே
வாமமுள்ள பாண்டுமன்னன் மைந்தரொடு வாழ்நாளில்

ஆண்டவனை நோக்கி யருந்தவமே செய்முனிவோர்
பாண்டுமன்ன னீன்றபஞ்ச பாண்டவர்களென்றறைந்தார்

பாண்டுமேஹாராஜன் மரணமடைதல்

குந்திமத்தி ராதேவி கோமா னெழிற்பாண்டு
அந்தமுள்ள பாண்டவரு மன்பாக வாழ்நாளில்
பாண்டுமன்ன னுக்குமுன்னுட் பாரமுனி சாபமது
மூண்ட துவுந் தோன்ருது மூத்தசதி யில்லாத
நேரமத்தி ராதேவி நேரிழையைத் தான்மருவி
பாரதிலே வீழ்ந்திறந்தார் பாண்டுமக ராஜனுமே
கண்டுமத்தி ராதேவி கண்ணீர் மிகச்சொரிந்து
பண்டு முனிசாபம் பலித்ததையோ வென்றலறிக்
கொண்டிருக்கும் போதினிலே குந்தியொடு மைந்தருமே
தண்டைசிலம் போசையிடத் தாளுேடி வந்தழுதார்
கானகத்தி லேவசிக்குங் காமுனிவ ரெல்லவரும்
ஏனழுகின் றீரெனவே ஏந்திழையைக் கேட்டனரே
பாண்டிறந்த செய்திதனைப் பாவையர்க ளாற்றெரிந்து
பாண்டவரி னுலடக்கம் பண்ணிவைத்தார் மாமுனிவர்
மூத்திரா தேவியிரு மைந்தரையே குந்திகையில்
அத்தினமே தான்பிடித்து அன்பாக வேகொடுத்து
இத்தனைக்குங் காரணம்நா னென்றறைந்து கன்னிகையுஞ்
செத்தாள் நகுலசகா தேவரினு லேயடக்கஞ்
செய்து முடித்தார்கள் சீராய் சடங்கனைத்தும்
மைவிழியாள் குந்தியையு மாபாண் டவர்களையும்
மாமுனிவோர் கூட்டியுமே வந்துஅத்தி னுபுரத்தில்
வாமமுள்ள பீஷ்மரிட மாகவிட்டே சென்றனரே
வல்லமைசேர் பாண்டிறந்த வாசகத்தை யேயெழுதி
நல்ல சுருள்மடித்தே நாடுகட்கே செல்லுமென்ருர்
பந்துகட்கு மேதெரியப் பண்ணினுன் தூதனுமே
வந்தா ரனைவருமே மாருத துக்கமொடு

கருமக் கிரிகைகளைக் காவலர்கள் பாண்டவரால்
தரும விதிப்படியே தான்முடித்தா ரம்மானை
பந்துகளுந் தங்கள் பதிக்கே விரைவினிலே
சந்தோஷ மாகவுமே தானே நடந்தனரே
நூற்றுவரும் பாண்டவரும் நுண்ணியரா யன்றுவரை
வேற்றுமைக ளில்லாது வீற்றிருந்தா ரம்மானை

### துரியோதனன், வீமனைக்கொல்ல எண்ணுதல்.

நல்லோர் புகழ்திரித ராட்டிரனின் மைந்தரிலே
வல்லோன் துரியனுமே வாகான கர்னனையும்
பந்துசூழ் காந்தார தேசமதை யாளுகின்ற
சுந்தரமே வாய்ந்த சுவேதமா ராஜனிட
மைந்தரொரு நூற்று வரிலிளையோ னுஞ்சகுனி
இந்தவிரு போர்கள்தன்னை எக்காலு மென்னுடனே
தானிருக்க வேண்டுமென சாற்றிடவே சம்மதித்தார்
வானவர்கள் தான்புகழ மைந்தரொரு நூற்றியிரு
பேர்களொரு பக்கமுமே பித்த னடிசேர்ந்த
தார்புனைந்த பாண்டுமைந்தர் தானுமொரு பக்கமுமே
விந்தையொடு பந்து விளையாட வேதுணிந்தார்
சந்தோஷ மாய்வீமன் தானேடும் வேகமதில்
துரியோ தனனுடைய சோதரரி லேசிலபேர்
பரிவாக வேயாண்டு பார்மீதில் வீழ்வாரும்
கைதட்டி வீழ்வாருங் காற்றடித்து வீழ்வாரும்
மெய்தட்டி வீழ்வாரும் வீரமற்று வீழ்வாருங்
கண்டுதுரி யோதனனுங் கர்னன் சகுனியொடு
துண்டாக வந்தமர்ந்து துர்யோசனைபுரிந்து
வெய்யோன் மறைந்தபின்னே வேந்தருமே சோலையிலே
செய்தாரே நித்திரைகள் சிந்தைமிக வேமகிழ்ந்து

துரியன் சகுனிகர்னன் தூங்காம லேயிருந்து
பரிவாக வேயெழுந்து பாரமத வீமனையே
கட்டியூ ணுங்கொடியாற் காவலரு மேதூக்கிப்
பொட்டெனவே கங்கையிலே போட்டுவந்து மேபடுத்தார்
வீமனுமே கண்விழித்து மேனியுள்ள கட்டதனை
வாமனுமே தானறுத்து வந்துகரை தன்னிலுமே
கட்டியே நம்மையுமே கங்கையிலே யிப்பொழுது
விட்டெறிய மாற்றலரும் மேதினிமீ தில்லையென்று
துங்கனுமே தானினைந்து தூக்கமொன்றுந் தோன்ருது
தங்கா துருண்டுவந்த தாலே கொடிகள்பின்னி
கங்கையிலேவீழ்ந்ததிந்தக் காரணந்தானென்றுவெண்ணிச்
சங்கோச மாகவுமே தானடந்து முன்றுயின்ற
இடத்திலே வீமனுமே இன்பமுடன் முன்போலே
படுத்தானே வாமமுள்ள பானுவந்து தோன்றினனே
காலையிலே யெல்லோருங் கண்விழித்தே கந்தமலர்ச்
சோலையிலே பந்தாடிச் சுந்திருந் தானிருந்தார்
பரிவாக வீமனையே பார்த்தே கவலையொடு
துரியன் சகுனிகர்னன் துர்யோ சனைபுரிந்து
உண்டிதனை யெல்லவரு மொன்ருக வந்திருந்து
உண்டுபசி நீங்கினரே உத்தமர்க ளந்நேரம்
வெய்யோனுந் தான்மறைந்து விட்டதினுற் சோலையிலே
சையோக மாகவுமே தான்றுயின்ரு ரம்மானை,
பாம்பாட்டுஞ் சோகிதனைப் பாங்காக வேயழைத்து
வீம்புசெய்யு கின்றவிந்த வீமனையே கொல்லுமென்ருன்
நல்லதென்று சோகியுமன் னுழிகையில் மந்திரத்தை
சொல்லவுமே சர்ப்பந் துரிதமா யோடிவந்து
படுத்திருந்த வீமனிடம் பாங்காய்ப் படம்விரித்தே
கடித்துவிட்டுச் சென்றனவே கங்குலுமே நீங்கிடவே

சிங்கார மாகவுமே செங்கதிரோன் ருனுதித்தான்
மங்களஞ்சேர் வாயுவின் தன் மைந்தனத னல்வீமன்
சந்தோஷ மாகவுமே தானெழுந்து சோலையிலே
விந்தையொடு பந்தாடி வீமனுமே தானிருந்தான்
கண்டு துரியன் கவலைமிக வேமனதிற்
கொண்டே நதிதனிலே கூர்வசிகள் நாட்டிவைத்து
கூட்டிவந்தே வீமா குதிப்பாய்நீ கங்கையிலே
தாட்டிகமா யெனவே சாற்றினு னம்மானை
நல்லதென வீமனுமே நாட்டமுடன் வந்துநின்று
வல்லோனும் பார்க்க வசிநாட்டி வைத்ததுவை
கண்டே யிதுபெரிதா காவலனே யென்றறைந்து
தண்டா மரைக்கழலான் தாண்டிவசி யைக்கடந்து
நீந்தி விளையாடி நேர்பன் நெடுநேரங்
காந்தியுள்ள தேகன் கரையில்வந்தா னம்மானை
துரியன் சகுனிகர்னன் துர்யோ சனைபுரிந்து
கறிகா யமுதினிலுங் கண்டபடி நாவிதனை
சேர்த்தே விரைவினிலே தீரமுள்ள வீமனையே
பார்த்தே துரியன் பசிதீரு மென்றறைந்தான்
நஞ்சுடைய சாதமென நல்வீம னெண்ணுது
மிஞ்சா தருந்தியந்த வேளையிலே மூர்ச்சையுற்றுன்
துரியன் சகுனிகர்னன் தூக்கியே கங்கையிலே
பரிவாகப் போட்டுவந்து பாங்காய்ப் பெருநாளைக்
கொண்டாடிக் கொண்டிருந்தார் கொற்றவர்க ளெல்லோரும்
தண்டா மரைவதனத் தான்பிலத்து வாரமதில்
வேகமொடு வீழ்ந்ததினுல் மிக்க வெழிலுடைய
நாகலோ கந்தனிலே நல்வீமன் மூர்ச்சையொடு
திட்டெனவே கீழ்விழுந்தான் தீரமுள்ள நாகருமே
கட்டழகன் றன்னையந்தக் காலமதி லேகடித்தார்

நாகவிடம் பட்டதினுல் நஞ்சுமயக் கந்தீர்ந்து
தாகமதைத் தீருமென்றே தானுரைத்தா னம்மானை
நாகருமே கேட்டு நலமாக வோடிவந்து
நாகரசன் முன்னே நவின்முரே செய்திதனை
நாகரசன் கேட்டே நகைத்தே புகன்றிடுவான்
வேகமொடு நீங்களுமே வீரமுள்ள மன்னனுக்கே
வல்லவிஷ மாம்அமுத மானகல சங்களையே
செல்வரே தானருந்தச் செய்வீ ரெனவறைந்தான்
வீமனிடம் வந்தே விஷவமுதத் தைக்கொடுத்தார்
வாமன்விடாய் தெளிய வாங்கியே தான்குடித்தான்
நன்னயமா யாறுபத்து நான்குகல சந்தனையே
என்ன புதுமையென வெண்ணியே நாகருமே
ஓடிவந்தே வாசுகிமுன் னேதிடவு மேயவனுந்
தேடிவந்தே வாய்வினம்ச சேயனென வேமதித்து
வீமனிங்கு வந்தவகை மேன்மையொடு வாசுகியும்
வாமமுள்ள ஞானதிஷ்டி வல்லபத்தி லுலறிந்து
மன்னவனே வீமா நீ வந்துபல மேயடைந்தாய்
என்மனையி லன்னமுண்டு ஏகுவா யென்றறைந்தான்
பண்டுபல காரமொடு பாரமத வீமனுமே
உண்டியுண்டு கையலம்பி யுல்லாச மாயிருந்தான்
கண்டுமே நாகரசன் காவலவன் றன்னையின்று
கொண்டுவிட்டு வாருமெனக் கூறவே யக்கணமே
தண்டிகையின் மீதேற்றிச் சல்தியிலே நாகருமே
தண்டா மரைமுகத்தான் தன்னைவெளி யேற்றினவே
கட்டழகு வீமனையே காணுமல் நால்வருமே
எட்டுநா ளாகவுமே எங்கெங்கு மேதேடி
சோடிழந்த அன்றிலைப்போற் சுந்திரரு மேயிருக்க
ஓடிவந்தே நால்வரிட முண்மைதனை யேவீமன்

சொல்லவுமே கேட்டுமனத் துக்கமெல்லாந் தீர்ந்தனரே
வல்லமையாய்ப் பாண்டவரும் வாழ்ந்திருந்தா ரம்மானை

கிருபாசாரி வரலாறு.

வில்லாளி வீஷ்மருமே மேன்மையுடன் வந்திருந்த
வல்லோர் முகம்பார்த்து வாகாக வேயுரைப்பார்
நன்னயஞ்சே ருந்திரித ராட்டிரனின் சேயருக்கும்
மன்னவனும் பாண்டுவின்றன் மைந்தராம் பாண்டவர்க்கும்
நல்லவில் லாசிரிய ராலேவில் வித்தைகளைச்
சொல்லிவைக்க வேண்டுமெனச் சுந்தரரே யெண்ணமுற்றேன்
நேமிப்ப தாரையென நேசமுட னேபுகல
வாமமுள மாபெரியோர் வாகாக வேயுரைப்பார்
சதுர்முகவன் பேரன் சரத்துவந்த மாமுனிவன்
சதுருடனே மாதவமே தான்செய் திருந்தனரே
இந்திரனும் ரம்பைதனை ஏவித் தவமழித்து
வந்திடுவாய் பொன்னுலகு மங்கையே யென்றறைந்தான்
அம்பு விழிமாது ளாபரணம் பூண்டுகொண்டு
சம்ப்ரமமாய்க் கானிற் சரத்துவந்த மாமுனிவர்
முன்னாடி நின்றிடக்கண் மூடினதை யேதிறந்து
மின்னாளைப் பார்த்தவுடன் வீரியந்தர்ப் பாசனத்தில்
சிதறி யிரண்டாய்வீழ்ந் திட்டதே ரம்பைசென்றாள்
பதறியே மாமுனியும் பண்பார் தவங்குலைந்தார்
கருவுருவாய்த் தோன்றிடவே கண்டு சரத்துவந்தர்
கிருபன் கிருபியென்றே கீர்த்தியுள்ள நாமமிட்டு
சிந்தைமகிழ்ந் தேவளர்த்துச் சேயன் கிருபனுக்கு
விந்தையொடு தானேவில் வித்தைதனைக் கற்றுவைத்தார்
வில்லிலே வல்லவர்காண் வேந்தனே பாலருக்குச்
சொல்லிவைத்தால் நன்மையெனச் சொன்னார் பெரியோரும்
கேட்டுமே பீஷ்மர் கிருபாசா ரிதனையே
கூட்டிவரச் சொன்னார் குழந்தைகளுக் கோதிவைக்க

தாட்டிகஞ்சேர் கிருபா சாரிதனை மந்திரிமார்
கூட்டிவந்தே விட்டார்கள் கோமான் சமுகமதில்
வாமமுள்ள வீஷ்மர் வணங்கிக் குருகுலத்து
நேமமுள்ள மைந்தருக்கே நேர்மையொடு மாதவனே
தனுசாஸ் திரவிதியைச் சட்டமொடு கற்றுவைப்பீர்
மனுசாஸ் திரமறிந்த வள்ளலே யென்றுரைத்தார்
கிருபருமே யம்மொழியைக் கேட்டுமே சம்மதித்துக்
குருகுலத்து மைந்தரினைக் கூட்டிவந்து மேமகிழ்ந்து
நல்லசுப மாகியவோர் நாளிலனை வோர்களுக்கும்
வில்வித்தை யோதிவைத்து வீற்றிருந்தா ரம்மானை

துரோணசாரி வரலாறு

வல்லோ னெனும்பரத்து வாசருமே முன்னாளில்
நல்லதவங் கானகத்தை நாடியே செய்திருந்தார்
இந்திரனு மேனகையை ஏவித் தவமழித்து
வந்திடுவாய் பொன்னுலகு மங்கையே யென்றறைந்தான்
கானகத்தை நோக்கிக் களிப்பாக வேநடந்து
மேனகையாள் வந்துமணம் வீசவொரு பக்கமுற
கண்டுமே மாமுனியுங் கன்னிகையின் மீதுமயல்
கொண்டுமே மேனகையைக் கூடவே யெண்ணுகையில்
சுக்கிலமுந் தானே துரோணகும்பந் தன்னிலுமே
பக்குவமாய் வீழ்ந்திடவே பாவையுமே சென்றனளே
புண்ணியவான் வீரியத்தைப் போக்கினதை யப்பொழுது
எண்ணி மனதி லிருந்தார் விசாரமொடு
சீலமுள்ள விந்து திரண்டே விரைவாகப்
பாலகனுய்த் தானிருக்கப் பார்த்தே மகிழ்வடைந்து
துரோணகும்பந் தன்னிலுமே தோன்றினதாற் சேயனுக்கு
துரோணரென்று நாமமதைச் சூட்டினா ரம்மானை

வேத மொருநான்கும் விளங்கு மறையாறும்
நீதிநூல் தத்துவமும் நேர்மையுள்ள சாஸ்திரமும்
ஓதிவைத்தே வேதமர்ம வுண்மைதனை யேவுரைத்து
மாதவத்தி லேசிறந்தோர் மைந்தனுக்கே நன்னயமாய்
வில்வித்தை கற்றுவைக்க வேண்டுமென வேநினைந்து
நல்லோ ரெழிற்பரசு ராமரிட மேவிடுத்தார்
வல்லவருந் தன்னிடத்தில் வைத்திருந்த வித்தைகளை
சொல்லிக் கொடுத்தனரே துங்கத் துரோணருக்கே
மாவக் கினிகோத்ர மாமுனிவர் தம்மிடத்து
தேவஸ் திரம்விடுக்குஞ் செய்கைதனைக் கற்றிருந்தார்
துருபதனு மவ்விடத்தே துங்கமொடு வந்திருந்து
இருவரிடம் வித்தைகளை இன்பமுடன் கற்றிருந்தான்
ஒருநாள் துரோணரிட முண்மையொடு வந்தமுள்ள
துருபதனு மேமகிழ்ந்து சொல்லுவா னம்மானை
மாதவனே யான்மகுட மானதுவைப் பூண்டபின்னே
பாதிநா டீய்ந்திடுவேன் பாருமெனச் சென்றனனே
துய்ய துரோணருமே சொர்க்கமுள்ளோ ரும்புகழ
வையகத்தில் வில்லினிலே மா நிபுண ராயிருந்தார்

---

## அஸ்வத்தாம னுற்பவம்

வல்லோ னெனும்பரத்து வாசருமே மைந்தனிட
வில்வீரத் தையுணர்ந்து மெத்த மகிழ்வடைந்து
சரத்துவந்த மாமுனிவர் தானீன் றெடுத்தபெண்ணுள்
சிறுத்த இடையுடைய சிங்காரி யாள்கிருபி
மின்னரசை நல்லசுப வேளை துரோணருக்கே
உன்னிதமாய் மாமணமே யுத்தமருஞ் செய்துவைத்தார்
மதனும் ரதிபோல மானிலத்தின் மீதினிலே

இதமாக வேவாழ்ந்து இருந்தார்க ளம்மானை
மெல்லி கிருபிகற்பை வேத முடிவறிந்த
வல்லோனும் நாரதனும் வந்துரைத்தா ரீசரிடம்
கற்பை யறியவென்று காமதக னன்கயிலை
வெற்பைவிட்டுத் தானே விருத்தாப் பியர்போல
வேடமதைப் பூண்டுகொண்டு மெல்லிகையா ளாச்சிரமம்
நாடிவந்து நக்கன் நவிலுவா ரன்புடனே
திருவாண மாயமுது நேரிழையே நீபடைத்தால்
பரிபூ ரணமாய் பசிபோக்கு வேனெனவே
கன்னிகையுங் கேட்டிதோர் காரணந்தா னென்றுவெண்ணி
தன்னளகா பாரமதாற் றானே யுடல்மறைத்து
அன்னமதைத் தானெடுத்தே யாரணங்கு மன்னேரஞ்
சன்ஞசி முன்புகொண்டு தான்வரவு மீசனுமே
காரிழையாள் கற்புடமை கண்டாசை கொண்டதினுல்
வீரியமும் அந்நேரம் அன்னமதில் விழுந்தனவே
பொட்டெனவே தான்மறைந்து போனுர் கயிலைவரை
கட்டழகி தானே கணவரிட மேயுரைத்தாள்
துய்ய துரோணருமே தோகைமொழி யைக்கேட்டு
நையாம லேமனமே ஞானதிஷ்டி யாலறிந்து
பத்தினிக்கே வுண்மைதனைப் பாங்காக வேயுரைத்தார்
உத்தமியும் பெண்பரிக்கே யுண்டிதனைக் கொண்டுவைத்தாள்
நேயமொடு வுண்டிடவந் நேரமே சூலாகிச்
சேயனையே யீனமறை தேர்ந்த துரோணருமே
சீலமுட னேயெடுத்தே தேவிகரத் திற்கொடுத்து
பாலனுக்கு மேதருமப் பால்வாங்கி யேவளர்த்தார்
துய்ய துரோணர் துருபதனு முன்புசொன்ன
செய்திதனை யேநினைந்து சென்றே யவனிடமே
துருபதனே நீயுமுடி சூடினுற் பாதிநகர்
தருவேனென் றுயதனைத் தந்திடுவா யென்றறைந்தார்

வல்லவனுங் கேட்டு மறையோனே யிந்தவிதஞ்
சொல்லவில்லை யே நீயார் துட்டனே யேகுமென்றான்
நன்னயமாய்க் கேட்டே நவில்வார் துரோணருமே
மன்னவனே கூறினதை மாறினாய் வேண்டாங்காண்
பார்வேந்தே யென்னுடைய பாலகனைத் தான்வளர்க்கத்
தார்வேந்தே யோர்பசுவைத் தந்தனுப்பு மென்றறைந்தான்
விப்பிரனாய் நீபிறந்தும் வீண்வார்த்தை கூறவந்தாய்
அப்புறமே போமென் றரசனுமே தான்புகன்றான்
வல்லதுரோ ணாசாரி வாக்கியங்கேட் டேசினந்து
சொல்லுவா ரன்று துருபதன்முன் னோர்சபதம்
நல்லதடா பாஞ்சாலா நானுனைப்போல் வேந்தனுக்கு
வல்லநல்வில் வித்தைகளை வாகுடனே கற்றுவைத்து
அன்னவனா லுன்னை யடக்கியே தேர்க்காலில்
மன்னவனே கட்டி வரவுரைத்தே யென்சபையில்
பங்கப் படுத்துகிறேன் பாராய்செய் யாவிடிலோ
துங்கத் துரோணனல்ல சூடினது நூலுமல்ல
விப்பிரனு மல்லவிது வில்லுமல்ல வென்றவருஞ்
செப்பிமனை யாளிடமே சென்றார்கா ணம்மானை
பத்தினியும் புத்திரனும் பண்பார் துரோணருமே
மைத்துனனின் சொந்த மனைசெல்ல வேநினைந்து
வந்தார்கள் நூற்றுவரும் வாகான பஞ்சவரும்
பந்தாடிக் கொண்டிருந்தார் பாங்கான சோலையிலே
வீம னெறிந்தபந்து வேகமுட னேகிளம்பி
வாம னொருநூற்று வரின்கரத்திற் சிக்காது
சென்றோர் கிணற்றினில்வீழ்ந் திட்டதுகண் டேயருகில்
நின்றார்கள் மாவீமா நீ யெடுப்பா யென்றிரைந்து
கண்டு துரோணருமே காவலரைக் குந்தவைத்துக்
கொண்டுவர லாறறிந்து கொண்டே யருச்சுனனை
வில்வளைக்கச் செய்துவொரு மேன்மையுள்ள மந்திரத்தைச்

சொல்லிச் செவிதனிலே சுப்பலையு மேதொடுக்க
செய்துவொன்றே டொன்றுபின்னச் செய்தே யெடுத்திடென்றார்
துய்யனுமே நல்லதெனச் சொன்னபடி யேயெடுத்தான்
வல்ல துரோணரடி மைந்தரெல்லோ ரும்பணிய
செல்வருக்கன் பாகவுமா சீர்வதித்து மேவிரைவாய்
தக்கோர் புகழ்கிருபா சாரிமனை சென்றவரும்
பக்குவமாய் பாலனுக்கே பால்கொடுத்து வீற்றிருந்தார்

## குருகுல புத்திரர்கள் நூற்றைவரும் வில்வித்தை பயிலுதல்

பாண்டவரும் நூற்றுவரும் பண்பார்க வீசனடி
பூண்டிருக்கும் பீஷ்மரின்றன் பொன்னடியைப் போற்றிசெய்து
சொல்லினர் துய்ய துரோணரிட வல்லமையை
வல்லவரு மேமகிழ்ந்து மந்திரிமார் தங்களிடம்
தக்கோர் புகழ்கிருபா சாரி துரோணரையும்
இக்கணத்தி லேயழைப்பீ ரென்றறைந்தார் பீஷ்மருமே
மந்திரிகள் வேகமொடு வந்தே யிருவரையும்
சந்தோஷ மாகச் சபைக்கழைத்துச் சென்றனரே
வல்லோராம் பீஷ்மர் வணங்கியிரு பேர்களையும்
நல்லபொற் பீடமதில் நண்பரையு மேயிருத்தி
தக்கோர் புகழ்கிருபா சாரியரே தங்களொடு
பக்குவாய் வந்திருக்கும் பண்புடையோ ராரெனவே
வேந்தன் முகம் நோக்கி விள்ளுவா ரேகிருபர்
சாந்தகுண வானேயென் தங்கைமண வாளரிவர்
மன்னர் புகழ்பரத்து வாசரிட புத்திரர்காண்
நன்னயஞ்சேர் கொற்றவனே நாமந் துரோணரென்றார்
வீட்டுமரு மிந்தமொழி மேன்மையுட னேசெவியிற்
கேட்டு மகிழ்ந்து கிளத்துவா ரம்மானை

தாட்டிகஞ்சேர் துரோணு சாரியரே மாமுகமும்
வாட்டமுற்ற தென்ன வமூத்துவீ ரென்றறைந்தார்
மன்னன் றனைநோக்கி வாகாய்த் துரோணருமே
நன்னயமாய்த் தானே நவிலுவா ரம்மானை
பார்வேந்தே முன்னொருநாட் பாஞ்சால னெந்தனுக்கே
தார்வேந்தன் பாதிநகர் தந்திடுவே னென்றறைந்தான்
அந்தமொழி தன்னைநம்பி அன்புமிகு மெந்தனிட
மைந்தனுக்கோர் பாற்பசுவை வாங்கிவரச் சென்றனனே
சொல்லாத வார்த்தைகளைச் சொல்லியே தூஷணித்தே
செல்லுவீ ரென்றிடவே சிந்தைமிக வேகலங்கி
உன்னைப்போல் வேந்தனுக்கே யோதிவில் வித்தைகளை
நன்னயமாய்க் கற்றுவைத்து நானவனை யேவிடுத்தே
தேர்க்காலிற் கட்டிவரச் செய்துமே யென்சபையில்
பார்ப்போர் நகைக்கவுன்னைப் பங்கமது செய்திடுவேன்
என்றே சபதமிட்டே னென்றுநிறை வேறுமெண்ப
தொன்றே கவலையென வுத்தமரு மேபுகன்றார்
கங்கைமைந்தன் கேட்டே கவலைமிக வுண்டாகித்
துங்கத் துரோணருக்கே சொல்லுவா ரம்மானை
வல்ல குருகுலத்து மைந்தரொரு நூற்றியைந்து
செல்வருக்கு விற்பயிற்சி செய்துவைத்து மேயவரால்
தங்கள் சபதமதைத் தான்முடித்துக் கொள்வதுடன்
எங்களா தீன மிருங்களுயி ருள்ளளவும்
அங்கமதி லெங்களைப்போ லாபரணம் பூண்டுகொண்டு
சங்கையொடு வாலோ சனைக்கருத்த ராயிருப்பீர்
என்றே கிருபருக்கு மிந்தவித மாயுரைத்து
அன்றே யிருவருக்கு மாபரணங் கள்கொடுத்து
இல்லம் பொருளேவ லிம்மூன்று மீய்ந்தனரே
வல்ல துரோணுசாரி வாங்கியே சென்றதற்பின்

நல்ல சுபவேளை நாளிற் குருகுலத்துச்
செல்வரையே கூட்டிச் சிலம்பக்கூ டத்திலுற்று
வேத மொருநான்கும் விளங்கு மறையாறும்
போதித்தே நல்ல புராணங்கள் மூவாறும்
நாலேழு வாகமமும் நாலெட் டறமுடனே
சாலூர மாய்விளங்குந் தக்க கலைக்கியானம்
நேதிதொண் ணூற்ருறும் நெறியுடனே சேயருக்கே
ஓதிவைத்தே பொன்னகர வும்பருமே தான்புகழ்
கரியேற்றந் தன்னையுமே கற்பித்தே யன்புடனே
பரியேற்றந் தன்னைப் பரிவாக வேயுரைத்தார்
மல்யுத்தஞ் சக்கரம்வேல் வாள்சூலந் தண்டுடனே
வில்வித்தை யாவையுமே மேன்மையொடு கற்றுவைத்தார்
நாளுக்கு நாளாக நன்மையொடு கற்றுவைத்தார்
வேளுக் கிணையாக வீரமுள்ள பற்குனனும்
வல்ல துரோணரிட மாய்க்கற்ற வித்தைகளிற்
செல்வன் பதின்மடங்கு செய்திடுவான் யூகமதால்
துய்ய துரோணருமே துங்க வருச்சுனனின்
செய்கைதனை நன்ருய்த் தெரிந்தே யிவனொருவன்
துங்கன் றுருபதன்முன் சொன்ன சபதமதை
மங்களமாய்த் தான்முடிக்க வல்லவன்ரு னென்றறிந்து
அந்தரங்க மாக வருச்சுனனைத் தானழைத்து
விந்தையா யோர்கணையை விட்டாலே நான்காகி
செல்லுமே நான்கு திசைகளிலு மேபரவி
வல்லபஞ்சே ரத்தொழிலின் மந்திரத்தை யேவுரைத்து
இந்த விநோதமுமே என்குருவுக்கு மெனக்குஞ்
சுந்தரனே தான்றெரியுந் தோன்ரு தொருவருக்கும்
என்றே துரோணருமே மின்பமுட னேயுரைத்துச்
சென்ருரே மாளிகைக்குத் தீவிரமா யம்மானை

## ஏகலைவன் வரலாறு.

தக்க துரோணர் தனியா யிருக்கையிலே
மூக்கியவில் வித்தை முழுதுமே கற்கவென்று
கானகம்வாழ் வேடரிலே கம்பீர னேகலைவன்
மான பரன்றன்னை வணங்கிவில் வித்தைதனை
எந்தனுக்கே கற்றுவைப்பீ ரென்றியம்பக் கேட்டவரும்
இந்தச் சமய மிசையா தெனவுரைத்தார்
ஏகலைவன் கேட்டறைவா னெவ்விதமும் உம்மருளால்
யூகவில் வித்தைகளை யோகமாய்க் கற்றிடுவேன்
என்றியம்பி வேட னிருக்கும் வனந்தனிலே
சென்றுவொரு மேடையுண்டு செய்தே துரோணரைப்போல்
உருவமதின் மேல்நிறுத்தி யுண்மையுட னேதினமும்
பரிவாய் வணங்கிவித்தை பாங்காகக் கற்றிருந்தான்
வேட்டைதனை யாடிடவே வேண்டுமென்றே பற்குனனுந்
தாட்டீக மாகவனந் தன்னில் விலங்கினத்தை
கொன்றுவரும் போதினிலே குக்கலொரு மானுடன்பின்
சென்றதுகா ணேகலைவன் செய்யதொரு மேடையிலே
வந்துசிறு நீரைவிட வல்வேட னும்வெகுண்டு
அந்தரங்க மாக அருச்சுனனுக் கோதிவைத்த
மந்திரத்தை யேகுருவிஸ் வாசமதி னலறிந்து
விந்தையாய் வாளி விடுத்தான்வில் லிற்றொடுத்து
வில்லி லிருந்தே விடுபட்டு நான்காகி
வல்லகுக்க லின்முகத்தில் வந்துதைத்து நின்றனவே
வேகமுடன் குக்கலுமே வேந்த னருச்சுனன்முன்
பாகவந்து மேகதறிப் பார்மன்னன் றன்னையுமே
கூட்டியே யெய்தோன்முன் கொண்டுபோய் விட்டனவே
தாட்டீக வேகலைவன் றன்னிடமே பற்குனனும்
இந்தவில் வித்தை யெவரிடங்கற் றாயெனவே

சுந்தரஞ்சேர் வேந்தே துரோணரிட மென்றுரைத்தான்
கேட்டே யருச்சுனனுங் கெம்பீர மாய்நடந்து
நாட்டினிலே வந்தான் நலமாக வம்மானை
தக்கோர் புகழ்துரோணு சாரிதனைக் காலையிலே
பக்குவமாய்ப் பாலர் பணிந்தா ரிவர்களிலே
அண்டாது தூரனின்றே யன்னியர்போ லர்ச்சுனனுந்
தெண்டனிட்டேவிற்ருெழில்கள் செய்துவந்தானம்மானை
இந்தவித மாய்நடப்ப தென்ன வெனத்துரோணர்
சந்தேகங் கொண்டொருநாள் தன்னிலே பற்குனனை
அந்தரங்க மாக வழைத்துமே கேட்டனரே
எந்தன் குருவினுக்கு மெந்தனுக்கு மூந்தனுக்கும்
விந்தையுட னேதெரியு மென்றீரே யத்தொழிலை
வேடனுக்கே யோதிவைத்து விட்டீரே யென்றனனே
கோடகமா பாதனுமே கூறுவா னம்மானை
இக்கணமே யங்குசெல்வோ மென்றே யிருவருமே
பக்குவமாய்ச் சென்றனரே பார்த்துமே யேகலைவன்
வணங்கி யொருகரத்தால் வாய்புதைத்து நின்றருகில்
இணங்கியிரு பேருமிங்கு என்னவகை வந்ததென்ருன்
வல்ல துரோணர் மகிழ்வாக வேடனிடம்
வில்வித்தை கற்ற விபரமதைக் கூறுமென்ருர்
ஏகலைவன் கேட்டே யியம்புவான் துங்கருக்கே
வாகுடன்வில் வித்தைகற்க வந்தேன் மறுத்துவிட்டீர்
சென்றுவொரு மேடையுண்டு செய்துமே தங்களைப்போல்
நன்ரு யுருவமதை நானிறுத்தி யேயிதன்மேல்
நேசமுட னேதினமும் நேர்மையுட னேவணங்கி
ஆசையா யுங்க ளனுக்கிரகத் தாற்படித்தேன்
நன்னயமா யென்றே நவின்ருன் துரோணருமே
மன்னவனும்பற்குனனின்மாமுகத்தைப்பார்த்துரைப்பார்

குருமேல் விசுவாசங் கொண்டதினல் வித்தைகற்ருன்
தெரிகுவா யென்றவருஞ் செப்பின ரம்மானை
அத்ததியே யேகலைவ னன்புடனே யேதுரைப்பான்
உத்தமரே எந்தனிட முண்டான தைக்கேளும்
குருதெட் சணையாய் கொடுப்பே னெனத்துரோணர்
பெறுவேன் வலக்கைப் பெருவிரலைத் தாருமென்ருர்
வீரியமாய் வேடனுமே வேகமொடு தன்னுடைய
சூரியினுற் கையைத் துணித்தே பதத்தினிலே
வல்லவனும் வைத்துநின்ருன்மாமறையோர்கண்டுமெச்சி
செல்வனுக்கே நன்ருயா சீர்வாதஞ் செய்தெழுந்து
நன்னயஞ்சேர் கின்றவத்தி னுபுரமே வந்தனரே
மன்ன னருச்சுனன்விஸ் வாசமொடு தானிருந்தான்

துரியோதனதியர்
ஆசாரியரை நிந்தைசெய்தல்.

மன்றிரித ராட்டிரரின் மைந்தரொரு நூற்றுவரும்
சென்றுமே பீஷ்மரின்முன் செப்புவா ரம்மானை
பாண்டுமன்ன ரீன்றெடுத்த பாலரைவர்க் கோர்விதமும்
பூண்ட புகழுடைய பூசுரர்வில் வித்தைகளை
எங்களுக்கே யோர்விதமு மின்றுவரை சொல்லுகின்ருர்
துங்கமுள்ள பாண்டவரைச் சொந்தம்பா ராட்டுகின்ருர்
என்றியம்ப வேதுரிய னிம்மொழியை பீஷ்மருமே
நன்ரு யுணர்ந்தேயந் நாழிகையி லேகுருவை
மந்திரிமார் தம்மால் வரவழைத்தே பார்த்துரைப்பார்
சுந்தராஞ்சேர் துய்ய துரோணரே தங்களையே
நூற்றைந்து பாலரையோர் நோக்கம்போ லெண்ணுமென்றேன்
வேற்றுமையாய் நூற்றுவரை வீரரே நீர்நினைந்து
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச

பாண்டவரைச் சொந்தமெனப் பாராட்டி வித்தைகளை
ஓதிவைக்க நீதிமுறை யுண்டோ வெனக்கேட்டார்
சேதி யறிந்துரைகள் செய்வார் துரோணருமே
பார்வேந்தே தங்களிட பாலர்நூற் றைவரையுந்
தார்வேந்தே யோர்விழியாத் தானினைந்தே வித்தைகளை
சொல்லிவைத்தேன் வேற்றுமையாய்ச் சொல்லவில்லை பாண்டுவின்றன்
செல்வருத்தி புத்தித் திறத்தால் வருவதற்கு
ஏன்னசெய்கு வேனெனவே இன்பமுட னேயுரைத்து
மன்னரிட மேவிடைகள் வாங்கிமறை யோரகன்றார்
செய்ய குருகுலத்துச் சேய ரிருக்குமிடந்
துய்ய துரோணர் துரிதமாய் வந்துகண்டு
கங்கைசென்று நீராடக் காவலரே வாருமென்று
அங்கவர்க்கே சொல்லி யழைத்தேகும் வேளைதனில்
அன்பு மிகுந்த வருச்சுனனைத் தானழைத்து
இன்ப முடனேகி யென்கிரகந் தன்னிலுமே
எண்ணை நலங்கை எடுத்தே விரைவினிலே
மண்மீது வையாது வந்திடுவா யென்றறைந்து
முன்னருட னால மரத்தடியில் வந்துநின்று
நன்னயஞ்சேர் சக்கரத்தை நன்றாய்மண் மீதெழுதி
பரிவாய் மனதிலெண்ணிப் பாணமதை யாலிலைமேல்
துரியோத னுவிடென்று சொன்னார் துரோணருமே
வல்லமையாய் மந்திரத்தை வாகாக வுச்சரித்து
வில்வளைத்தே பாணம் விடுத்தான் மரமீது
பாணமுமே சென்று துளை பண்ணிற் றிலைகளெல்லாம்
காணத் துரியன் களித்தே துரோணரையே
அக்கணமே தான்பணிந்தா னுசாரி யார்மகிழ்ந்து
சக்கரந் தன்னையுமே தான்கலைக்கா தேயவரை
துங்கருமே கூட்டித் துரிதமுட னேநடந்து
கங்கை நதியின் கரையோரம் வந்தார்கள்

துரோணசாரி முதலைவாயில்
அகப்பட்டது.

குருவாக் கியஞ்சிரமேற் கொண்டே யருச்சுனனும்
பரிவாய் நடந்துகுரு பத்தினியை யேவணங்கி
எண்ணை நலங்குவட்டி லின்பமுட னேவாங்கி
மண்மீதில் வைக்காது வந்தான் விரைவாக
ஆல மரத்தி னடியிலே சக்கரத்தைச்
சீலமுடன் பார்த்தே திகைத்துநின்று மேதெளிந்து
அண்ணுந் திலைகளையே யந்நேரம் பார்க்கவுமே
எண்ணுத் துளைக ளிருப்பதுவை யேதெரிந்து
இந்த விநோதமதை எல்லோருங் கண்டிடவே
சிந்தைமகிழ் வாய்க்குருவுஞ் செய்திருக்க வேண்டுமென்று
எண்ணியே யங்கே யெழுதினதோர் மந்திரத்தை
புண்ணியனு மேபடித்தப் போதுநலங் கெண்ணையிட
வட்டிலையு மோர்கணையால் வானேற்றி வாளியொன்று
விட்டா னுருச்செபித்தே மேதினியில் வீழுமுன்னே
வட்டிலையு மேபிடித்தான் வாகாய் துளைகளையே
இட்டிருக்கக் கண்டுமகிழ் வெய்தியே வேகமொடு
கங்கைக் கரையோரங் காவலனும் வந்துநின்று
மங்களமா யெண்ணைதனை வாரித் துரோணருக்கே
சிங்கார மாகவுமே தேய்த்துவிட்டே யண்ணரிடந்
தங்காது சென்றுதண்ணீர் தன்னிலே நீந்தினனே
செய்ய துரோணரையே தீவிரமா யோர்முதலை
பையவந்து மேகாலைப் பற்றி யிழுத்தனவே
கண்டு யிதுவுமென்ன காலமென வேபயமுங்
கொண்டு குருகுலரைக் கூவிவரக் காணுது
செல்லுவோ ருக்குரைத்தென் சீடருக்கே செப்புமென
வல்லவருங் கேட்டோடி வந்தே யறைந்தனரே

தக்கதொரு நூற்றுவருந் தானோடி வந்துகல்லால்
அக்கணமே தானே யடித்தார் கரையிருந்து
பாண்டோரிற் பற்குண னும் பாங்காக வில்வளைத்து
தூண்டினு னோர்பகழி துண்டாகிற் றேழுதலை
தக்கோர் புகழ்துரோணு சாரி வெளியேறி
மிக்கவெழிற் பற்குணனை மெச்சினர் நூற்றுவர்முன்
மங்கைக் கரையைவிட்டு காவலர்கள் தங்களொடு
மங்கலமா யால மரத்திலையைப் பார்த்தனரே
இலைக்கிரண்டு ரந்தனமா யெய்தவரா ரென்றியம்ப
சிலைக்கரத்தான் பற்குண னுஞ் செய்தே னெனவுரைத்தான்
மன்னு நலங்கு வெண்ணெய் வட்டிலையே கொண்டுவந்தோன்
என்னவித மாகவெய்தா யென்றார் துரோணருமே
அந்தமொழி பற்குண னு மன்புடனே கேட்டவர்முன்
முந்தியே யெய்த முறைப்படியே செய்தனனே
கண்டே துரோணருமே காவலவன் றன்னைமெச்சிக்
கொண்டே துரியனிடங் கூறுவா ரம்மானை
உந்தனுக்கு முன்னே நா னோதிவைத்த வித்தைதனை
விந்தையதைச் சொல்லா விடி னுமே செய்தனனே
முந்திநான் சொன்ன முறைப்படி நீ செய்யுமென்றார்
மந்திரத்தைத் தான்மறந்து வாகாய் துரிய னுமே
ஆலமர மதனை யண்ணுந்து பார்த்தவ னும்
வேல மரம்போல வெட்கியே நின்றனனே
துய்ய துரோணருமே சொல்வா ரவரவர்கள்
செய்த தவப்படியே சேருமே வித்தைகளும்
எங்களுக்கு நன்று யியம்பவில்லை யென்றோடி
உங்கள்மூ தாதைகளோ டுத்தமனே நீபுகன்றாய்
சொல்லிவைத்த வித்தைதனைத் துங்கனே நீமறந்தால்
வில்லா சிரியனென்செய் வேனெனவே தா னுரைத்து

எல்லோரை யும்அழைத்து யில்லமதி லேகியுமே
வல்லவரே யுண்டியுண்டு வந்திடுவீ ரென் றியம்ப
நல்லதெனப் பாலர் நடந்தே விரைவினிலே
செல்வருமே யன்னமுண்டு சீக்கிரமாய் வந்திருந்து
சந்தோஷ மாகத் தநுசாஸ் திரமதனை
மந்திரங்க ளோடுகற்று வந்தா ரிவர்களிலே
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரின் விற்றொழிற்கு பார்வேந்த ரும்புகழ்வார்

குருகுலபுத்திரர்கள்
விநோதப்பரிக்ஷை

மன்னன் துரியனுமே வாகான பாண்டவர்மேற்
சின்ன மதியுடையோன் சிந்தை பொறாமைகொண்டு
தந்தைதாதா பெரியோர் தானிருக்கு மாசபைக்கு
விந்தையுடன் வந்தே விளம்புவா னம்மானை
நூற்றுவர்கள் தன்னையொரு நோக்கம்போற் பார்க்காது
வேற்றுமைய தாகவெண்ணி விட்டே துரோணருமே
பாண்டுமக்க ளைவரின்மேற் பட்சமா யின்றுவரை
காண்டீப வித்தைதனைக் கற்பிக்கின் றாரெனவே
சொல்லவே பீஷ்மர் துரிதமுடன் மந்திரியால்
வல்ல குருவை வரவழைத்தே யேதுரைப்பார்
நூற்றுவரை வேற்றுமையாய் நுண்ணியரே நீர்நினைந்து
ஏற்றபஞ்ச பாண்டவர்க்கு இன்பமுடன் வித்தைகளை
சொல்லிவைத்தே மற்றவர்க்குச் சொல்லா மலுமிருக்க
வல்லவரே நீதிவழு வாகுமே யென்றறைந்தார்
செய்ய துரோணருமே செய்தி தனையறிந்து
துய்யமுள்ள பீஷ்மரிடஞ் சொல்லுவா ரம்மானை
பாக்கியனே நூற்றுவர்கள் பாண்டுமன்ன ரின்புதல்வர்

யோக்கிதையா லோசனையை யூகமதால் நீரறிவீர்
என்றியம்பி வந்தனரே யிம்மொழியைக் கேட்டமன்னர்
நன்றெனநூற் றைவரையே நாம்பரிக்ஷை செய்வமென்று
மன்றிரித ராட்டிரரின் மைந்தரையு மேயழைத்து
பொன்சிலது மேகொடுத்தே போவீர் மனைநிறைந்த
சாமான் றனையே தயார்ச்செய்வீ ரென்றறைந்தார்
பூமான் களுங்கேட்டே போனாரே வேகமொடு
ஐவரையுந் தானழைத்தே யன்புடனே பொன்சிலது
கையினிலே யீய்ந்தே கழறுவா ரம்மானை
பாலகரே நீங்களுமே பாங்காய் மனைநிறைந்த
சீலமுள்ள சாமானைச் சேகரிப்பீ ரென்றறைந்தார்
பாண்டவரும் நல்லதெனப் பார்வேந் தருக்குரைத்தே
நீண்ட புகழுடையோர் நேர்மையொடு வந்தனரே
துரியோ தனன்முதலாய்த் தூயவட வீதிவந்து
பரிவாக யோசனைகள் பண்ணி வரகுவைக்கோல்
தன்னையே வாங்கிமனை தன்னை நிறைத்தடைத்து
மன்னர் பெரியோர் வரவையெதிர் பார்த்திருந்தார்
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவருஞ் சென்றே பசுவின்நெய் சந்தனமும்
வெற்றிலையும் பாக்கும் விதவிதமாய் காய்கறியும்
கொற்றவர்கள் தானணிந்து கொள்ளமலர் மாலைகளும்
பச்சரிசி தேங்காய் பழமுதலாய்ச் சேகரித்து
மிச்சமுள்ள பொன்களுக்கு மெத்தைதிண்டு பாய்களுமே
தைத்துவந்தே தென்வீதி தன்னிலுள்ள மாளிகையை
சுத்தமிகச் செய்தே துரிதமாய்ச் சமையலுமே
செய்துவைத்தே நன்றாய்த் திருவிளக்கை யேற்றியுமே
வையம் புகழ்பாண்டு மைந்தருஞ்சந் தோஷமதாய்
மெத்தைதனை யேபரப்பி மெல்லியதோர் பாய்விரித்து

உத்தமரு மந்நேர முல்லாச மாயிருந்து
மன்னர் வரவதனை வாகாகப் பார்த்திருந்தார்
நன்னயஞ்சே ருந்திரித ராட்டிரனும் பீஷ்மருமே
மைந்தர்களின் யூக மானதுவைப் பார்க்கவென்று
வந்தார் வடவீதி வல்லவரு மம்மானை
துரியோத னுதியருந் துங்கமுட னேடிவந்து
பரிவாக வேவணங்கி பார்வேந்தர் தங்களையே
கூட்டிவந்து யில்லமதைக் கொற்றவரு மேதிறந்து
காட்டியே நன்ருய்க் கழறுவா ரம்மானை
வீடு நிறைந்தபொருள் வேந்தரே யின்றுவெகு
பாடுபட்டு மேயடக்கம் பண்ணினே மென்றறைந்தார்
நன்னயமே சேர்திரித ராட்டிரனும் பீஷ்மருமே
மன்னவரின் யூக மதுதெரிந்தே தென்வீதி
வந்தார்க ளன்னேரம் வாகான பாண்டவர்கள்
சிந்தை மகிழ்ந்தெதிரே சென்றழைத்து வந்தவர்க்கு
போசனஞ்செய் வித்தாரே பூமாலை சந்தனமும்
நேசமுடன் பாக்கிலையும் நேர்மையுட னேயொடுத்து
மெத்தையதின் மீதிருத்தி வேணவுப சாரமுமே
புத்திரருஞ் செய்தனரப் போதினிலே பீஷ்மருமே
வல்லோரைப் பார்த்தே வழுத்துவார் பாலகரே
இல்லம் நிறைந்தபொரு ளெங்கே யெனப்புகல்வார்
வேந்தே திருவிளக்கு வீடு நிறைந்தவைதான்
சாந்தகுண மானவரே தான்பாரு மென்றியம்ப
வல்லவரும் பாண்டவரை வாழ்த்தியே சென்றனரே
செல்வருமே தானே சிறப்பாக வேயிருந்தார்
அன்றுமுத லாய்த்துரிய ஞசாரி மீதுநிந்தை
சென்றுரைத்தாற் கேட்கா திருப்பார்க ளம்மானை

குருகுலபுத்திரர்கள்

விற்பரிக்ஷை

துய்ய துரோணரிடந் துங்கமுள்ள நூற்றுவரும்
செய்யபஞ்ச பாண்டவருஞ் சிந்தை மகிழ்வுடனே
சந்ததம்வில் வித்தையெல்லாந் தானே தெரிந்தனரே
விந்தையுள்ள வாயுதமல் வித்தைதனைக் கற்றனரே
வில்லா சிரியருமே வேகமுட னேயொருநாள்
வல்லோராம் பீஷ்மரின்முன் வந்தே புகன்றிடுவார்
பார்வேந்தே தங்களிட பாலருமே வித்தையெல்லாந்
தார்வேந்தே கற்றுர் சகலமன்னர் பார்த்திருக்க
விற்பரிக்ஷை செய்திடவே வேண்டுமொரு நாள்பாரும்
விற்பனரே யென்றே விளம்பியே வந்தனரே
நன்னயஞ்சேர் பீஷ்மருமே நல்லதினம் நிச்சயித்து
மன்னருக்கும் நற்றவஞ்செய் மாமுனிவோர் தங்களுக்கும்
ஓலைதனை யேவரைந்து வுண்மையுள்ள தூதரிடஞ்
சீலமுட னேகொடுத்துச் செல்லுமென்று ரம்மானை
தூதுவரு மேநடந்து தூரதேச சங்களுக்கே
சேதி தெரியவென்றே சென்றுமே மன்னரிடம்
கொடுத்தாரே யோலைதனை கொற்றவரு மேகவலை
விடுத்தத்தி னுபுரத்தில் மேன்மையொடு வந்தமர்ந்தார்
வாமமொடு கானகத்தில் மாதவஞ்செய் கின்றபல
மாமுனிவ ரும்நகர்க்கு வந்தனர்கா ணம்மானை
நல்ல சுபமான நாழிகையி லேதுரோணர்
வல்லோர் குருகுலத்து மைந்தர்களைக் கூட்டிவந்தார்
ஊருக் கருகினிலே யுன்னிதஞ்சேர் பந்தலிட்டு
வீரத் துடனிருந்தார் வேந்தரொடு மாமுனிவோர்
வானவரு மந்தரத்தில் வந்தே நிறைந்தனரே

ஞானமுள்ள பீஷ்மர் நவில்வார் குருவிடமே
விந்தையொடு யிந்தநல்ல வேளையிலே சுந்தரஞ்சேர்
மைந்தருக்கே வாக்களிப்பீர் வந்துவிளை யாடவென்றார்
வில்லா சிரியருமே வேந்தனுரை கேட்டெழில்சேர்
வல்லவரே யென்னிடமே வாகாகக் கற்றவித்தை
தன்னையுமே நீங்கள் சமராசி யாகநின்று
மன்னவரே செய்யுமென்று வாக்கீய்ந்தா ரம்மானை
அந்தமொழி கேட்டே நூற் றைவருமே தான்மகிழ்ந்து
வந்திருந்த மன்னரையும் மாமுனிவோர் தங்களையும்
வில்லா சிரியரையும் வீஷ்மரையு மேவணங்கி
வல்லமைசே ராயுதங்கள் வைத்திருந்த பெட்டிதனை
நன்னயமாய்த் தான்திறந்தே ராஜாக்க ளன்னேரம்
உன்னிதஞ்சே ராயுதங்க ளுத்தமரு மேயெடுத்தே
ஒருவ ருடனொருவ ருன்னிதமாய்ச் சண்டைசெய்தார்
கிருப ரனைவருமே கீர்த்தியுள்ள சேயரையே
கொண்டாடிக் கொண்டிருந்தார் கோமான் துரியனுமே
தண்டா யுதவீமன் தன்னிடமே போர்பொருதி
கொன்றுவிடு வோமெனவே கொக்கரித்தே வந்தெதிர்த்தான்
நின்றுமத வீமனுமே நெஞ்சினிலே வஞ்சகத்தை
எண்ணு தவனே டிளையாது சண்டைசெய்தான்
புண்ணுகி யேமனப் போதுதுரி யோதனனும்
தண்டா யுதத்தாலே தாக்கினன் பீமனுமே
கண்டான் துரியன் கபட மனமதனை
ஆங்காரங் கொண்டுதண்டை யந்திரத்தி லேயெறிந்து
பாங்காகக் கைபிசைந்த பார்வேந்தன் மார்புதட்டி
வந்ததண்டை யேபிடித்தே வாகான பீமனுமே
சிந்தைமிக வேவெகுண்டு செய்யதுரி யோதனன்முன்
மெள்ளப் பருவதம்போல் வீரமொடு வந்தெதிர்த்தான்
கள்ள மனமுடையோன் கண்டு நெடுநேரம்

ஒருவர்க் கொருவ ருயித்தமே செய்தனரே
இருவரு மேசண்டை யிடுவதனைக் கண்டமன்னர்
தன்னுவி யைமடிக்கத் தானினைந்தா ரித்ததியே
என்னசெய் வோமெனவே ஏங்கியே தானிருந்தார்
வில்லா சிரியரின்றன் மேன்மையுள்ள புத்திரனும்
வல்லவசு வத்தாமர் வாகாக வேயெழுந்து
இருவருக்கு மத்தி யினில்நின்றே யப்பொழுது
பரிவாய் சமாதானம் பண்ணினு ரம்மானை
அந்தமுள்ள பற்குண னு மாசாரி யைப்பணிந்து
விந்தையொடு வில்வளைத்து மேன்மையுள்ள அஸ்திரத்தை
மந்திரத்தை யுச்சரித்து வாகாக வேதொடுத்து
அந்தரத்தில் விட்டனனே யந்நேர மின்னலிடி
மஞ்சுகளுங் கூடியொன்ருய் மாரி பொழிந்தனவே
விஞ்சையரும் மெச்ச விநோதஞ் சிலது செய்தான்
மற்றுமே பற்குணனுர் வாளி தொடுத்துவிட்டான்
புற்றிருந்தே யீசல் புறப்பட் டவைபோல
ஒன்றுபத்து நூருகி ஓரா யிரமாகி
சென்றதுகாண் யாவருமே சிந்தைமிக வேகலங்க
கரியாஸ் திரம்விடுத்தே காட்டினுன் யானைகட்கே
சரியாஸ் திரம்விடுத்தே தானே யொடுக்கினனே
மந்திரத்தின் வல்லமையால் வாளிகளை யேவிடுத்து
விந்தைகளைக் காட்டினனவ் வேளைதனிற் பார்த்திருந்த
மன்னவரு மாமுனியும் வானவரு மேதிகைத்து
என்ன புதுமையென எல்லவரு மேபுகழ்ந்தார்

கர்னன் வாது

பற்குணனைத் தான்புகழ்ந்து பண்பாய்ச் சபையிலுற்ற
விற்பனரே யென்னுடைய விற்பரிகை்ஷ பாருமென்று
வல்லபஞ்சேர் வில்வளைத்து மந்திரத்தை யுச்சரித்து

செல்வனுமே வாளிவிடுத் திட்டே பலவிதமாய்
விந்தைகளைக் காட்டினனே மேன்மையுள்ள கர்னனுமே
சந்தோஷங் கொண்டுபுகழ்ந் தாரேயனைவருமே
தேர்ப்பாகன் பாலன் சினந்தே யருச்சுனனைப்
பார்த்தே திடமாய்ப் பகருவா னம்மானை
விற்குணு நீதெரிந்த வித்தைகளை யென்னிடமே
பற்குணனே காட்டிடுவாய் பார்ப்போமெனவுரைத்தான்
அந்த மிகவுள்ள வருச்சுனனுங் கேட்டறைவான்
விந்தைமொழி நீநவின்று விட்டாய் படிமிசையே
வல்ல ரதையனபி மான புதல்வனெடு
தொல்லுலகாள் மன்சேய் துணிவரோ போர்பொருத
என்றே யறைந்திடவே யிம்மொழியைக் கேட்டகர்னன்
நின்று வெகுண்டு நிகழ்த்துவா னம்மானை
சின்ன மதியுடைய தேர்ப்பாகன் சேயனென்று
மன்னர் சபையிலவ மானஞ்செய் தாய்பயலே
உன்னுடைய சென்னிதனையோர் நிமிஷங்கொய்திடுவேன்
என்னுடைய வல்லமைபா ரென்றே சிலைவளைத்தான்
கண்டுமே பற்குணனுங் காந்தாள மேமிகவே
கொண்டுமே மாசபையிற் கூறுவா னம்மானை
செய்ய கருணுயென் சென்னிதனை யிப்பொழுது
கொய்குவே னென்றுமொழி கூறினுய் வஞ்சகனே
உன்றலையை யானறுப்பே னோர்கணத்தி லேபயலே
என்றனையே யாரேனு மிவ்வேளை யிற்றடுத்தால்
என்ரு கிலுமுனையே என்னுடைய வாளியினுற்
கொன்றிடுவே னுண்மையிது கொல்லா விடில்யானும்
க்ஷத்திரிய னல்லவிது தானும்வில் லல்லவென
உத்தமனும் வில்வளைத்தே யோடிவந்தா னம்மானை
சிந்தைமிக நொந்திருவர் செய்தசப தந்தெரிந்து
அந்தநல்ல வேளையிலே யன்பார் கவுதமரும்
வந்திருவர் மத்தியிலே வாகாக வேயுரைப்பார்

செந்திருவார் திண்புயரே செய்தே சபதமதை
வீணிலே போர்விளைத்து விட்டீர்க ளுங்களின்வில்
நாணிதனை யேதளர்த்தும் நாயகனே யென்றறைந்தார்
மாமுனிவர் தானுரைத்த வார்த்தைபிச காதபடி
நேமமுடன் செய்தாரந் நேரமதி லம்மானை
துங்கமுள்ள பீஷ்மர் துரிதமுட னெழுந்தே
தங்கி யிருக்குஞ் சபையோரைப் பார்த்துரைப்பார்
குருகுலத்து மைந்தரையே கூட்டிவந்து விற்பரிக்ஷை
பரிவாகச் செய்கையிற் தேர்ப் பாகனிட புத்திரனும்
சும்மா யிராமலுமே துங்கமிக வேமிகுந்த
இம்மா னிலவிறைவ னீன்றெடுத்த சேயனிட
சென்னியைக் கொய் வேனெனவே செப்பிடவே ஞாயமுண்டோ
மன்னரே நீங்கள் வழுத்துவீ ரென்றறைந்தார்
அந்தமொழி கேட்டே யரசரொன்றும் பேசாது
சிந்தை நடுக்கமுற்றே செல்வருமே தானிருந்தார்

## கர்ணன் மகுடாபிஷேகம் பெறல்

துங்கமுள்ள பீஷ்மரிடஞ் சொல்வார் கவுதமரும்
இங்குரைத்தாய் கர்ண னிழிகுலத்தா னுமென்றும்
பற்குனனை நற்குலத்துப் பாலகனென் றேபலவாய்
விற்பனன்போ லேபுகன்ருய் வேந்தரிட முன்பாக
ஜாதியா சாரமுறை தன்னையுற்று நோக்கிடிலோ
பேதமில்லை யென்றே பெரியோர்சொற் கேட்கிலையோ
திருமால்கற் தூணிற் ஜெனித்தார் கயிலைவரைப்
பெருமானும் மூங்கிற் பிறந்தா ரறியாயோ
கும்பமுனி யுந்தனுகைக் கொண்ட துரோணருமே
கும்பமதி லேபிறந்தார் கொற்றவனே கேட்கிலையோ
செங்கதிர்வே லாயுதனுந் தீரமுட னேயிலங்கும்
கங்கையிலே தான்பிறந்த காரணமுந் தோன்றிலையோ

செய்யகிருபருமே தெற்பையிலே தான்பிறந்தார்
துய்யவஸ்வத் தாமன் துரகமிட மேஜெனித்தான்
தாங்களெங்கே தான்பிறந்தீர் சாற்றுவீ ரிப்பொழுது
பாங்குடைய தேவரினுற் பத்தியவர்க் கின்னமுமே
தெரியவில்லை கர்ணனையே தேர்ப்பாகன் சேயனென்று
அரியாது சொன்ன யரசர் சபைநடுவே
மானிலத்தி லேயெவனும் வல்லமையைத் தானடைந்தால்
ஞானியரு மேபுகழும் ராஜனெனக் கூறிடலாம்
ஆதலினு லிக்கணமே யன்புடைய கர்ணனையே
மாதவஞ்செய் மாமுனிவர் மன்னவருந் தானறிய
பொன்மகுடந் தன்னை புனைந்தரச னுக்கிவைத்தால்
என்மனது தான்மகிழு மென்றார் கவுதமரும்
கேட்டுமே வீஷ்மர் கிருபைமிகக் கொண்டவராய்
தாட்டீக மாகச் சபையோர் மனமகிழ
அங்கதே சந்தனையே யாளுமென்றே கர்ண னுக்கு
மங்களமாய்ப் பொன்மகுட மானதுவைத் தான்புனைந்து
செங்கோலு மேகொடுத்துச் சேனை சிலதீய்ந்து
அங்கரா ஜன்னெனவே யன்புடனே நாமமிட்டார்
மன்னவருங் கண்டே மகிழ்வடைந்தே தங்கள் தங்கள்
நன்னகரை நோக்கி நடந்தார்க ளம்மானை
வாமமிக வேயுடைய மாமுனிவ ரெல்லவருந்
தாமதங்கள் செய்யாது தானடந்தார் கானகத்தே
அந்தரத்தில் வந்தமர்ந்த அன்புடைய வானவருஞ்
சிந்தமிக வேமகிழ்ந்தே சென்றார்கள் பொன்னகர்க்கே
வில்லா சிரியரையே மேன்மையுட னப்பொழுது
வல்வமைசேர் பீஷ்மர் வணங்கியே மைந்தரொடு
வந்தா ரரண்மனைக்கே வானவரு மேபுகழ
சிந்தை களிகூர்ந்தே சென்றார் துரோணருமே

அங்கரா ஜன்னுடனே யன்பாய்த் துரியனுமே
மங்களமாய் நேசமொடு வாழ்ந்திருந்தா ரம்மானை

### பஞ்சாலனோடு துரியோதனாதிகள் யுத்தம்

செய்ய துரோணர் சிலநாட் கழிந்தபின்பு
துய்யதொரு நூற்றுவரைத் துங்கமுள்ள பாண்டவரை
அன்பாய் வரவழைத்தே யன்னவரின் முன்னுடித்
தென்பாக வேயுரைப்பார் செய்திதனை யம்மானை
வல்லபஞ்சேர் பாஞ்சால மன்னவனு முந்நாளில்
வில்வித்தை யென்னிடமே மேன்மையொடு கற்றபின்னே
பாதிநா டீய்வனெனப் பார்வேந்த னும்புகன்றே
சீதமதி மாமுகவன் சென்றான் சிலநாள்போய்
மைந்தனுக்கே பாற்பசுவை வாங்கிவர வேநினைந்து
விந்தையுள்ள பாஞ்சால வேந்தனிடஞ் சென்றுகண்டு
வல்லவனே முன்கூறி வந்தபடி பாதிநகர்
செல்வனே நீ தாருமென்றே செப்பினே னப்பொழுது
பாதிநக ரீய்வனென்று பண்பாக வும்மிடமே
ஓதவில்லை யேயெனவே யுத்தமனு மேயுரைத்தான்
மன்னவனுங் கூறினதோர் வாக்கியத்தைத் தானறிந்து
நன்னயஞ்சே ருந்தனிட நாட்டிலே பாதியுமே
கோவேந்தே நீருங் கொடுக்கவேண் டாந்ததியே
பூவேந்தே யெந்தனிட புத்திரனுக் கோர்பசுவை
தந்தனுப்பு வீரெனவே சாற்றினே னப்பொழுதே
விந்தைமொழி யென்னிடமே விப்பிரனே கூறவந்தாய்
நில்லாதே யென்றறைந்தான் நேர்பனுமே யான்வெகுண்டு
சொல்லினே னோர்சபதஞ் சுந்தரரே யாதெனிலோ
உன்னைப்போல் வேந்தருக்கே யுண்மையொடு வித்தையெல்லாம்

மன்னவனே சொல்லிவைத்தே வஞ்சகனே யுன்னுடனே
சண்டைசெய்து மேதேர்க்கால் தன்னிலே கட்டியுமே
கொண்டுவரச் செய்தேயான் கோமான் களுஞ்சூழ்ந்த
துங்கச் சபையிற் துருபதனே யுன்றனையே
பங்கப் படுத்துகிறேன் பாரடா வென்றுவந்தே
உங்களுக்கே வித்தைகளை யோதிவைத்தேன் தேர்ச்சியுற்றீர்
சிங்கார மானயெந்தன் சீடரே செப்பிடுவேன்
செல்வரே யின்றுகுரு தெட்சணைக்கு மேபதிலாய்
வல்லவரே பாஞ்சால மன்னனொடு போர்பொருதி
தேர்க்காலிற் கட்டிவந்தே தீரமுட னென்சபையில்
மார்க்கமாய் விட்டிடுவீர் மைந்தரே யென்றறைந்தார்
இந்தமொழி யைக்கேட்டே இன்பமுட னேதுரியன்
வந்தடியி லேபணிந்து வாகாய் விடைவாங்கி
தம்பியர்க ளோடுநற்றேர் தன்னி லமர்ந்திருந்து
கும்பாய் சிலபடையைக் கூட்டியுமே வேகமொடு
நன்னயஞ்சேர் பாஞ்சால நடடைந்து மேமகிழ்ந்து
உன்னிதமாய்க் கோட்டைதனை யுத்தமர்க ளும்வளைந்து
வில்வளைத்தே பாணம் விடுத்தட்ட காசமுமே
வல்லவருஞ் செய்திருந்தார் வாமமிகு பாஞ்சால
மன்னவனோர் தூது வனைவிடுத்தே வந்தவர்கள்
இன்னு ரெனவறிந்து ஏந்தலுமே தான்வெகுண்டு
வாமமுட னேயருகில் வந்தே யமர்ந்திருந்த
சோமகே யாதியர்முன் சொல்லுவா னம்மானை
சற்குணரே முன்னுட் சபையிலொரு விப்பிரனும்
விற்பனரே மாசபத மிட்டதுவைத் தான்முடிக்க
நன்னயஞ்சே ருந்திரித ராட்டிரனின் மைந்தருமே
நன்னகரைச் சூழ்ந்துகொண்டார் நம்மைச் செயித்திடவே
சல்தியிலே நீங்களுமே தானேகி யேய்வரை

வல்லபம தால்விரட்டி வந்திடுவீ ரென்றறைந்தான்
சோமகே யாதியருந் துங்கமுள்ள விற்பிடித்து
வாமமுள்ள தேரேறிவந்தே விரைவினிலே
வில்வளைத்தே வாளி விடுத்தே நொடியினிலே
வல்லமைசே ருந்துரியன் மார்பையுமே தான்பிளந்து
சாரதியை வென்றுபரி தன்னையுமே கொன்றுபின்னும்
வீரமொடு பாணமதை விட்டுமே தேருடைத்து
அஞ்சிடவே சேனைகளு மம்புகளைப் பூட்டிவிட்டார்
துஞ்சினர் கள்பலபேர் துங்கமுள்ள நூற்றுவரும்
கண்டே யிதுவுமென்ன காலமென வேபயமுங்
கொண்டுபுட்ட மீது குதிக்கா லடிபடவே
ஓடியத்தி னுபுரத்தி லுத்தமரும் வந்துபின்னே
நாடியே பாஞ்சால நன்னகரைப் பார்த்தனரே
துரியோத னாதியருஞ் சோர்ந்த முகத்துடனே
பரிவாக வந்தவகை பார்த்தே துரோணருமே
சிந்தைமிக நொந்துவென்ன செய்குவோ மென்றவரும்
வந்தோர்கட் காசி வழுத்தாது வீற்றிருந்தார்

பாஞ்சாலனேடுபோண்டு
புத்திரர்கள்யுத்தம்

பாண்டுமென்ன னீன்றெடுத்த பாண்டவரிற் பற்குனனும்
காண்டீபந் தன்னையொரு கைப்பிடித்து மேமகிழ்வாய்
துய்ய குருபாதந் தொழுதே யெழுந்துநின்று
ஐயனே யென்னை யனுப்பினு லிப்பொழுதே
சென்றுபாஞ் சாலனையே தேர்க்காலிற் கட்டியுமே
இன்று வருவேனென் றியம்பினு னம்மானை
செய்ய துரோணருமே சிந்தைமிக வேமகிழ்ந்து
துய்யபாஞ் சாலனொடு சுந்தரனே பேர்பொருதி

தேர்க்காலிற் கட்டியுமே செல்வனே வந்திடுவாய்
தார்வேந்தே யென்றுவிடை தன்னையுமே யீய்ந்தனரே
குருவடியைத் தான்பணிந்து கொண்டுமே பற்குனனும்
பரிவாக வீஷ்மரின்முன் பாகவந்து மேவணங்கி
சிங்கார மாகியதோர் தேர்வாங்கி யேயவனும்
மங்களமாய் வீற்றிருந்தே வாம நகுலனையே
சாரதியாய்த் தானமைத்துத் தக்கவில்லைக் கைப்பிடித்து
மாருதிபோ லன்புடனே வாகாய் ரதகஜங்கள்
துரகப தாதிகளைச் சுந்தரனு மேநடத்தி
விரைவாகச் சென்றனனே வீரமுட னம்மானை
நன்னயஞ்சே ருந்தரும ராஜனுமே யந்நேரம்
மன்னவனே வீமா வருவா யெனவழைத்தே
பற்குன னுக்கேநீ படைத்துணையாய்ப் போய்வருவாய்
விற்பனனே யென்றே விளம்பினு ரம்மானை
அண்ணலையே தான்வணங்கி யன்புடைய வீமனுமே
விண்ணவருங் கொண்டாடும் வீஷ்மரிடந் தனிலே
வந்துவிடை வாங்கியுமே வாகார் விதுரனையே
சிந்தைமகிழ் வாய்ப்பணிந்து தேர்வாங்கிச் சேனையொடு
வேகமொடு பற்குனன்முன் வீமனுமே வந்தனனே
சேகரம தாயிருவர் சேர்ந்தே விரைவினிலே
வடவா முகாக்கினியும் வாகாயு ழிக்காற்றும்
திடமா யிரண்டுமொன்று சேர்ந்துமே வந்ததைப்போல்
நன்னயஞ்சேர் பாஞ்சால நாட்டினிலே தான்புகுந்து
மன்னரஞ்ச மேல்கோட்டை வாயலிலே பற்குனனும்
கும்பாக வேகீழக் கோட்டையிலே வீமனுமே
சம்ப்ரமம தாகவுமே தானேகி யேமரித்தே
வல்லமையாய் வில்லை வளைத்து விரைவினிலே
செல்வரட்ட காசமொடு சிங்கநா தங்கள்செய்தார்

துருபதனு மேசினந்து சோமகே யாதியர்முன்
துருசாக வேயெழுந்து சொல்லுவா னம்மானை
வல்லவரே யிப்பொழுது வந்திருப்போர் தேவபிண்டம்
செல்வரே மேல்கோட்டை சென்றுபோர் செய்திடுவீர்
மந்திரிமா ரேகிழக்கு வாசலிலே வீமனொடு
தந்திரமாய் போர்புரிவீர் சான்ருேரே யென்றறைந்தான்
நன்றெனவே வேகமொடு நல்லரத மீதேறிச்
சென்ருரே மேற்குத் திசையினிட செய்கைசொல்வேன்
சோமகே யாதியருந் துங்கரத மீதிருந்தே
வாமமுள்ள வில்லை வளைத்தே சரந்தொடுத்தார்
பற்குனனு மக்கணமோர் பாணமதை யேவிடுத்தே
விற்பனரு மேவியுமே விட்டகணை யையறுத்தான்
பாலனிட செய்கைகண்டு பாங்காய் வெகுசரங்கள்
சீலமுட னேவிவிடுத் திட்டாரே பற்குனனும்
மந்திரத்தை யுச்சரித்தே வாகாக வில்லினிலே
விந்தையுடன் பூட்டி விடுத்தா னொருபகழி
ஒன்றுபத்து நூருகி யோரா யிரமாகிச்
சென்றுவரும் பாணமதை செய்ததுவே துண்டுதுண்டாய்
மன்னவனும் பின்புபல வாளிதனை யேவிடுத்து
ஒன்னலரின் வில்லை யொடித்தே யிரண்டாக்கி
கொடியை யறுத்தே குதிரைகளைக் கொன்றுவிட்டு
பொடியாக்கித் தேரதனை பூமி கிடுகிடென
சோமகே யாதியர்மேல் துங்கனுமேழ் பாணமுமே
நேமமுட னேவிவிட்டே நெஞ்சைப் பிளந்தனனே
மண்மீதில் வீழ்ந்தே மரணமூர்ச் சையடைந்தார்
திண்புயவான் பற்குனனுஞ் சீறியே சேனைகள்மேல்
மந்திரத்தை யேபுகன்றே வாளிதனைப் பூட்டிவிட்டான்
விந்தையொடு சேனைகள்மண் மீதில் விழுந்திறந்தார்

வாமமொடு கீழ்கோட்டை வாயலிலே மந்திரிமார்
வீமனொடு போர்பொருதி வீரமற்றே பூமியிலே
விழுந்தார் சிலபேர்கள் மேனியுமே தானடுங்கி
எழுந்தோடு வார்சிலபே ரிந்தவிதஞ் சண்டைசெய்தான்
வீரமொடு பாஞ்சால வேந்தன்போர்க் கோலமொடு
தீரமுடன் தேரேறிச் செங்கரத்தில் விற்பிடித்து
வல்லபமாய் மேல்கோட்டை வாயலிலே வந்துநின்று
வில்லை வளைத்தே வெகுசரங்கள் பூட்டிவிட்டான்
பற்குனனு மேவெகுண்டு பாணமதை யேவிடுத்து
விற்பனனு மேயேவி விட்டசரத் தைப்பொடித்து
ஓடிவிடு வானெனவே உத்தமனும் வாளியினுல்
நாடிச் சரக்கூடம் நன்றாக வேபோட்டு
தேரையசை யாமலுமே தேர்வேந்தன் செய்துபல
பேரையுமே தானே பெருமூர்ச்சை யாக்கிவிட்டான்
பாலன் வலுவறிந்து பாஞ்சால மன்னவனும்
சீல முடனேபல திவ்யாஸ் திரம்விடுத்து
போட்டசரக் கூடமதைப் பூபால னும்முடைத்தே
தாட்டீக மாகவுமே தானிருந்தா னம்மானை
இன்னேர மாக யிவனோடு பூசலிட்டால்
என்ன பெருமையென எண்ணி யருச்சுனனும்
மஞ்சேழுங் கூடியொன்றாய் மாரி பொழிந்தவைபோல்
அஞ்சாது மேன்மையுள்ள அஸ்திரங்க ளைவிடுத்தே
கொடிகுதிரை சாரதியைக் குஞ்சக் குடைதனையே
நொடியினிலே தானறுத்து நுட்பமாய்த் தள்ளிவிட்டான்
துடியாகத் தேரையுமே துங்கக் கவசமதை
பொடியாக்கிப் பாஞ்சால பூபதியின் மார்புதனை
சல்லடைபோ லேதுளைத்தான் தார்வேந்தன் கைபிடித்த
வில்லைரெண்டு துண்டாக்கி விட்டான் விரைவினிலே
கைசோர்ந்து சோகமொடு கண்விழிக்கா தக்கணமே
மெய்சோர்ந்து பாஞ்சாலன் வீரமற்றே மூர்ச்சையுற்றான்

## பாஞ்சாலன் பற்குனனால்
## கட்டுப்படல்

இதுதான் சமயமென வெண்ணியே பற்குனனும்
ததியிலே வேகமாடு தன்ரதத்தைத் தூண்டிவந்து
பாங்காக வேபாய்ந்து பாஞ்சால னின்ரதத்தில்
தீங்கு குருவினுக்கே செய்தவனை யேபிடித்து
வில்நாணி யாலதிக வேகமொடு கட்டியுமே
வல்லமையாய்த் தன்ரதத்தின் வாகான கால்சேர்த்து
சிங்கநா தங்களுமே செய்தானே பற்குனனும்
துங்கமுட னேயெழுந்து சோமகே யாதியரும்
வில்லை வளைத்தே வெகுகோடி பாணமுமே
வல்லவரு மேவிடுத்தார் வாளிதனைப் பற்குனனும்
துண்டித்தே யம்பு தொடுத்துமே வில்லைரெண்டாய்
கண்டித்தே யோடிடவே காவலனுஞ் செய்தனனே
பற்குனனுந் தன்ஜெயத்தை பாங்கான வீமனுக்கே
விற்பனனு மேதெரிய வேண்டுமென்று வேகமொடு
சங்கத்தைத் தானெடுத்தே சப்தித்தா னப்பொழுது
துங்கமுள்ள வீமன் துரிசாகத் தேர்நடத்தி
பற்குனனை வந்துகண்டு பாங்கா யிருவருமே
நற்குணத்தார் வாழுமத்தி னுபுரத்தை நோக்கியுமே
வேகமொடு தேர்நடத்தி வீம னருச்சுனனும்
சேகரம தாகவொன்று சேர்ந்துமே தன்ஜெயத்தை
குருவுமே தானறிந்து கொள்ளவே வேண்டுமென்று
இருபேரு மேதன் னிடத்திலே வைத்திருந்த
சங்கத்தைத் தானெடுத்தே சப்தித்தா ரக்கணமே
துங்கத் துரோணர் துரிசாக வேயெழுந்து
சிந்தை மகிழ்ந்தே சிறப்பாக வீஷ்மரின்முன்
வந்துமே பற்குனனின் வல்லமையைத் தானுரைத்து

தாட்டீக மாகச் சகலரையு மேவிரைவாய்க்
கூட்டிவந் தேசிலம்பக் கூடமதி லேயிருந்தார்
சட்டமொடு பற்குனன்பாஞ் சாலமன்னன் றன்னையுமே
கட்டினகட் டோடுடனே காவலனைக் கொண்டுவந்து
வில்லா சிரியரின்முன் வீரமுட னேவிடுத்து
வல்லவருந் தானே வணங்கிநின்று ரம்மானை
பற்குனனைத் தானே பலவாறு மேபுகழ்ந்து
விற்பனரு மேமகிழ்ந்து வீற்றிருந்தா ரம்மானை
செய்ய துரோணர் சிறுவரையா சீர்வதித்து
கையாற் றழுவியுமே காவலரைக் குந்தவைத்து
வஞ்சகனும் பாஞ்சால மன்னவனைப் பார்த்துரைப்பார்
அஞ்சாமல் யானே யரசர் சபைநடுவே
சொன்னசப தந்தனையே துற்குணனே யான்முடித்தேன்
நன்னயஞ்சேர் பாஞ்சால நாடு முழுவதுமென்
சொந்தமா யானதடா துன்மார்க்கா விப்பொழுது
உந்த னுடைய வுயிரையே காத்தனனே
செப்பினேன் பாஞ்சால தேசமென் பங்கினுக்கே
கப்பங்கொடு வெனவே கட்டினதோர் கட்டுகளை
பற்குனனு லேயவிழ்க்கப் பண்ணினு ரத்ததியே
அற்பனுங்கை காலுதறி யங்குமே வீற்றிருந்த
மன்னர் முகம்நோக்கி வாகாக வேயுரைப்பான்
என்னையே பங்கமது யிச்சபையிற் செய்துவிட்ட
வல்ல துரோணரையே மாய்க்கவொரு புத்திரனுஞ்
செல்வனு மென்னை ஜெயித்தோன்றே னுக்கிசைந்த
கன்னிகையு மேபெறுவேன் காவலரே பாருமென்று
நன்னயமாய்ப் பாஞ்சால ராஜன் சபதமிட்டு
வாட்டமொடு பாஞ்சால மாநகரஞ் சென்றனனே
நாட்டமொடு பாண்டவரும் நன்றாக வாழ்ந்திருந்தார்

## பாஞ்சாலன் புத்திரகாமேஷ்டியாகஞ் செய்து துஷ்டத்தாய்மன் திரௌபதி இவர்களைப் பெறுதல்

மன்னவனும் பாஞ்சால மாநகரம் வந்தமர்ந்து
நன்னயமாய் யோஜனைகள் நன்ருகச் செய்துமதி
மந்திரிகள் தம்மிடத்தில் மாநகரை யொப்பிவித்து
சந்தோஷ மாகவுமே தன்மனையாள் தன்னுடனே
கானகத்தை நோக்கியுமே காவலனு மேநடந்து
ஞானமுனி வோர்களிடம் நாடியே மந்திரங்கள்
கற்றே யிருவர் களிப்பாய்த் தவசுசெய்து
கொற்றவனுந் தேவியுமே கோதிலா தேயிருந்து
உபையாசன் யாசனென்ற உண்மையுள்ள மாமுனிவர்
உபயமலர்த் தாள்பணிந்தே யுத்தமனு மேயுரைப்பான்
வல்லது ரோணரையே மாய்க்கவொரு புத்திரனும்
செல்வனு மென்னை ஜெயித்தோன் ருேளுக் கிசைந்த
கன்னிகையு மேபெறவே காரணத்தைக் கூறுமென்முன்
நன்னயஞ்சேர் மாமுனிவர் ராஜனுக்கே யாசிபல
சொல்லியருகினிலே துங்கமொடு குந்தவைத்து
வல்லோனைப் பார்த்தே வழுத்துவா ரம்மானை
வேந்தனே புத்திரகா மேஷ்டியா கம்புரிந்தாற்
சாந்தகுண வானேயுன் சஞ்சலமே தீருமென்ருர்
சிந்தைமிக வேமகிழ்ந்து தேவியுட னேயெழுந்து
வந்து பணிந்துநின்றே மாமுனிவ ரேகனிந்து
அந்தமா யாகமதை யன்புடனே செய்திடுவீர்
சுந்தரரே யென்றுமவன் சொல்லவு மேசம்மதித்தார்
மன்னவனு மன்னேர மந்திரிமார் கட்குரைக்க
உன்னிதமா யாகமதிற் குள்ளபொருள் சேகரித்து
கானகத்தி லேயமைச்சர் காவலன்முன் கொண்டுவந்தான்

ஞானமுனி வோருரைபோல் நல்யாக குண்டமது
செய்தா ரன்னேரஞ் சிறந்தமுனி வோர்பூசை
செய்தாரே மன்னனையுந் தேவியையும் பக்கமதில்
வைத்துமே யக்கினியை வாகாக வேமூட்டி
உத்தமரு மேமகிழ்வா யோமமதை யேவளர்த்து
வேதமதை யோதியுமே விண்ணவரு மேபுகழ
மாதவத்தோர் யாக மதைமுடித்தா ரக்கணமே
அக்கினிதே வன்மகிழ்ந்தே யன்பா யிரண்டுபிண்டம்
தக்கதொரு தட்டினிலே தானேந்தி நின்றனரே
மாமுனிவர் கள்வாங்க மங்கையுமே பூப்பானுள்
கோமுனிவர் தான்தெரிந்து கூறியொரு மந்திரத்தை
அக்கணமோர் பிண்டமதை யன்புடனே தானெடுத்து
அக்கினிமா குண்ட மதிற்போட்டா ரம்மானை
வல்லமையாய்ப் போர்க்கோல மாகவில்லைக் கைப்பிடித்து
செல்வனுமே நல்லசெம்பொன் தேருடனே தோன்றினனே
மாமுனிவோர் பின்னு மகிழ்ந்தேயோர் பிண்டமதை
வாமமுள்ள குண்டமதில் வாகாக வேபோட்டார்
பொன்னைப் பழித்திடவோர் புத்திரியு மேபிறந்தாள்
நன்னயஞ்சேர் வில்லுமொன்று நன்று யுதித்தனவே
ஆகாய வாணி யறைந்த மொழிப்படியே
வாகான மன்னன் மனமிகவே தான்மகிழ்ந்து
வல்லதுஷ்டத் தூய்மனென்றும் மைந்தனுக்கே பேர்கொடுத்து
செல்விக்கே நாமந் திரௌபதியா ளென்றுவைத்து
மாமுனிவோ ரைப்பணிந்து வாங்கிவிடை மன்னவனும்
வாமமிகு பாஞ்சால மாநகரை வந்தடைந்தார்
துருபதனு மேமகிழ்ந்து துங்கமிக வேமிகுந்த
இருவரையு மேவளர்த்து இன்பமுட னேயிருந்தான்

## துஷ்டத்தாய்மன் துரோணரையடுத்து வில்வித்தை பயிலுதல்

நாளுக்கு நாளாக நல்லதுஷ்டத் தாய்மனுமே
வேளுக்கிணையாக வேவளர்ந்து தானிருந்து
வேதமொரு நான்கும் விளங்கு மறையாறும்
நீதிநூல் தத்துவமும் நேர்மையுட னேயறிந்து
மனுசாஸ் திரந்தெரிந்து மன்னர்தமக் கேயுரிய
தனுசாஸ் திரமதனைத் தான்படிக்க வேணுமென்று
தந்தையிட மேவிடையே தான்வாங்கி வேகமொடு
வந்தே துரோணர் மலரடியைப் போற்றிசெய்து
சொல்லியே பேருருந் துங்கவில் வித்தைகளை
வல்லவரே நீரோதி வைத்திடுவீ ரென்றறைந்தான்
செய்ய துரோணர் சிரித்துமே பாலனுக்கு
துய்யவில் வித்தைகளை சொல்லா திருந்திடிலோ
செல்வனுக்கு மேபயந்து தீரமுள்ள வித்தைகளை
சொல்லவில்லை யென்றுலகோர் சொல்வா ரெனநினைந்து
தன்னிடத்தி லுள்ளவித்தை தன்னையெல்லாங் கற்றுவைத்தார்
மன்னவனும் பாஞ்சால மாநகரில் வந்திருந்தான்

## பரிமளகந்தி, அம்பிகை அம்பாலிகை இவர்கள் பரமபதமடைதல்

நேசமொடு வேதமுனி நெஞ்சமிக வேமகிழ்ந்து
வாசமுள்ள மச்சகந்தி மாதாவின் முன்புவந்து
பாதம் பணிந்து பகருவா ரம்மானை
மாதரசி காந்தாரி மைந்தரொரு நூற்றுவர்க்கும்
குந்தியும்மா ளீன்ற குணமுள்ள பாண்டவர்க்கும்
வீந்துவிடு மேபகைகள் மாதாவே நீயிருந்தால்
புத்திபல வாறுரைப்பாய் பூமான்க ளுங்கேளார்

சத்தியத்திற் கீனமுமே தாயாரே வந்துவிடும்
ஆதலினு லேதா னடவியிலே சென்றிருந்து
மாதவங்கள் செய்தே வருவாய் பரமபதம்
என்றுசில மந்திரத்தை இன்பமுட னேயுரைத்துச்
சென்றுரே வேதமுனி சிந்தைமிக வேமகிழ்ந்து
வாசமுள்ள மச்சகந்தி மைந்தனுரை போல்நடக்க
நேச முடையவளாய் நேர்மையுட னேவிரைவாய்
அம்பிகையம் பாலிகையி னந்தப் புரத்தினிலே
சம்ப்ரமம தாகவந்தே சாற்றினு ளிம்மொழியை
கேட்டே யிருபேருங் கேண்மைமிகக் கொண்டவராய்
வாட்டமில் லாமலுமே வாகாக வேயுரைப்பார்
அத்தையுங்க ளோடு அடவியிலே வந்திடுவோம்
இத்தலத்தின் மீது இருக்கோ மெனவுரைத்தார்
நல்லதென மூவருமே நாடியே பீஷ்மரிடம்
வல்லபம தாய்விடைகள் வாங்கியே மற்றுமுள்ள
வேந்த ரிடந்தனிலும் மெல்லிய ரிடந்தனிலும்
சாந்தகுண மாயுரைத்துச் சட்டமொடு கானகத்தில்
சென்றுமே மூவருமே சிந்தைசித ருதபடி
நின்றுமே மாதவங்கள் நேர்மையுட னேபுரிந்து
வஞ்சியர்கள் மூவருமே வல்லமைய தாகவுமே
பஞ்சாக்னி மத்தியிலே பாவையர்க ளும்மிருந்து
தங்கள்தங்கள் தேகமதைத் தானீங்கி யேமகிழ்வாய்
துங்கப் பரமபதச் சொர்க்கமதி லேபுகுந்தார்
வானவருந் தானே மலர்வாரி யேசொரிந்தார்
ஞானமுனி வோர்களெல்லாம் நற்றவமே செய்திருந்தார்

### தருமனுக்கு இளவரசுப் பட்டங் கட்டுதல்

பாண்டவரும் நூற்றுவரும் பண்பாக வாழ்ந்திருந்தார்
நீண்ட புகழுடைய நீதிவான் பீஷ்மருமே

தருமனிட நற்குணமும் தாட்டீக மும்புகழும்
பெருமை யருளுடைமை பெம்மான்மீ தன்புடைமை
கட்டழகர் கண்டு களித்தே யிளவரசுப்
பட்டமதைக் கட்டிடவே பாங்காக வேநினைந்து
மன்றிரித ராட்டிரனால் மாசபையைக் கூட்டிவைத்து
நன்றியுள்ள மாதரும ராஜர்க் கிளவரசு
பட்டமதை யேகொடுக்கப் பண்பாக நிச்சயித்து
பட்டணத்தைச் சிங்காரம் பண்ணிச் சுபதினத்தில்
அருமை பெருமையொடு அந்தமிக வேமிகுந்த
தருமனையே தானழைத்துச் சான்றோரு மன்னோரம்
கங்கை யமுனையொடு காவிரியின் றீர்த்தமதால்
மங்களமாய் ஸ்தானமது வாகாகச் செய்துவைத்து
சிங்கார மாய்ப்பணிகள் செம்மலுக்கே தான்சூட்டி
சிங்கா தனத்திருத்தித் தேவருமே தான்புகழ
பொன்மகுடந் தன்னைப் புனைந்தார் தருமருக்கே
பொன்னுலகோர் கற்பகமா புட்பமதை யேசொரிந்தார்
வந்திருந்த மன்னருக்கே வாகாக பீஷ்மருமே
சந்தோஷ மாகவுமே தக்கமரி யாதைசெய்தார்
சென்றா ரவரவர்கள் தேசமதிற் கேவிரைந்து
நன்றி யுடையதர்ம ராஜன் துரியனையே
சிங்கா தனமீது தேர்வேந்தன் கூடவைத்து
மங்காது செங்கோல் வழுவாது செய்திருந்தார்
மந்திரிக்கு மேலான மந்திரிய தாய்விதுரன்
மைந்த னுரைபோலே வாகாய் நடந்துவந்தான்

துரியோதனன், கர்னன், சகுனி, துச்சாதனன்
இவர்களோடு
துராலோசனை செய்தல்

செங்கோல் தருமனுமே செய்வதுபொ ருமையொடு
திங்கள் துரியனுமே சோர்ந்த முகத்துடனே

துரிசாய்ச் சகுனிகர்னன் துச்சா தனனிவரை
பரிவா யழைத்துவந்தே பண்பாக வேயுரைப்பான்
வல்ல தருமனுக்கு வாகாகப் பட்டமது
வில்லா சிரியரொடு வேந்தருமே தான்கூடி
கட்டிவைத்தே சொல்லைக் கடவா தவனுரைபோல்
கட்டழகர் யாவருமே காரியங்கள் செய்யலுற்றார்
மன்றிரித ராட்டிரனின் மைந்தராய் நாம்பிறந்து
நன்றிமற வாமலிந்த ராச்சியத்தை யாளாது
வல்லோன் தருமனுமே வாகாக வேதினமுஞ்
சொல்வினதைக் கேட்டுவந்தாற் றொல்லுலகின் மேல்நமக்கு
என்ன பெருமை இருக்கின்ற தந்தமுள்ள
நன்னகர மானவத்தி னுபுரத்தை நானுள
மன்னவரே யோஜனைகள் வாகாக வேநினைந்து
என்னிடமே நன்ரு யியம்புவீ ரென்றறைந்தான்
கேட்டே சகுனி கிளறுவா னன்புடனே
வாட்டமினி வேண்டாங்காண் வல்லவனே பாண்டவரை
பாண்டுவுக்கு மேகிரிகை பண்புடனே பண்ணிவைக்க
வேண்டுமென யோஜனைகள் மேன்மையுட னேயுரைத்து
நன்னயம தாய்வார ணுவதத்திற் கேகிடவே
மன்னுவுன் றந்தையிட வாக்கா லுரைத்திடிலோ
சென்றிடுவா ரேகிரிகை செய்திடவே வேண்டுமென்றே
அன்றுமுத லாயிங் கழைக்காம லேயிருந்தால்
இங்குவர மாட்டா ரிளவரசு நீசூடிச்
செங்கோல் செலுத்திடலாந் தேர்வேந்தே யென்றறைந்தான்
வல்ல துரியனிந்த வார்த்தையது மாமாவே
நல்லவைதா னென்றே நடந்தே விரைவினிலே
மன்றிரித ராட்டிரன்முன் வந்தே பணிந்துநின்று
உன்னிதம தாய்த்துரிய னோதுவா னம்மானை
தந்தையயே கேளீர் தருமனுக்கே பட்டமது

விந்தையுடன் கட்டிவைத்து விட்டீர் விரைவினிலே
எங்களொரு நூற்றுவர்மே லில்லாது பக்ஷமுமே
துங்கமுள்ள பீஷ்மருமே சொன்னபடி யேமுடித்தீர்
இம்மையிற்செங் கோலடைய யில்லா விடினுமன்னு
செம்மையொடு மாதவங்கள் செய்துதான் மைந்தருமே
மறுமையிலே தானடைவோம் மன்னவா கானேகத்
தருவீர் விடையெனவே சாற்றினு னம்மானை
மன்றிரித ராட்டிரனும் மைந்தனுரை யைக்கேட்டே
நன்றியுள்ள நீதி நவின்முன் துரியனுக்கே
எத்தனையோ கூறியுமே ஏற்காதா லுங்கால
வித்தேசத் தாலும் விளம்புவா னந்தகனும்
மைந்தன் றருமனுக்கே வாகா யிளவரசு
தந்ததுவை யுந்தனுக்கே தந்தாலே மன்னவரும்
என்னை நகைப்பாரே யீனம் பலவருமே
மன்னவனே யோஜனைகள் வாகாகச் சொல்லுமென்முன்
அந்தமொழி தன்னை யறிந்தே துரியனுமே
சிந்தைமிக வேமகிழ்ந்து செப்புவா னம்மானை
தந்தையே யென்னுரைபோல் தானடத்தங் கைபோட்டுத்
தந்தாலே செப்பிடுவேன் தார்வேந்தே யென்றனனே
மைந்த னுரைப்படியே மன்னவனுங் கைபோட்டுத்
தந்துமே பாலா நீ சாற்றுவா யென்றறைந்தான்
வல்லோன் துரியனுமே வாகாக வேயுரைப்பான்
நல்லோன் தருமனொடு நால்வரையு மேயழைத்து
பாண்டுவுக்கு மேகிரிகை பண்ணிவைத்தே கீர்த்திபெற
வேண்டு மெனவோதி விரைவாகக் குந்தியொடு
நன்னயம தாய்வார ணவதத்திற் கேகிடவே
சொன்னாலே சென்றிடுவார் துங்கமுட னேயவரை
இங்கழைக்கா தெந்தனுக்கே யீய்ந்தா லிளவரசைச்
செங்கோல் செலுத்திடுவேன் தேர்வேந்தே யென்றறைந்தான்
அந்தகனும் நல்லதென வாசிபல கூறியுமே

மைந்தனே சென்று வருவா யெனப்புகன்றான்
சிந்தைமிக வேமகிழ்ந்தே செய்யதுரி யோதனனும்
வந்தே சகுனிகர்னன் மாமனிட மேயுரைத்தான்

பாண்டவர் குந்திதேவியோடு
வாரணாவதஞ்சேர்தல்

அந்தகனு மேயொருநா ளன்பாய்க் கொலுவினிலே
வந்திருந்தே தானும் வழுத்துவா னம்மானை
வில்லா சிரியர்களே வேந்தரே யிப்பொழுது
சொல்லுமொழி தன்னையுமே துங்கமொடு கேட்டருள்வீர்
பாண்டுமன்ன னெந்தனுக்கே பட்டமதைக் கட்டிவைத்து
ஆண்டிருப்பீ ரென்று அறைந்தே மகிழ்வுடனே
மன்னரொடு போர்பொருதி வாகான நாடனைத்தும்
என்வசம தாக்கிவைத்தே ஏவலுமே செய்திருந்து
மாமுனிவர் சாபமதால் மன்னவனு மாண்டனனே
வாமனையே யான்பிரிந்து மாபாவி யாகினனே
என்றே கவலையொடு ஏங்கியே தானழுதான்
குன்றை நிகர்த்தபுயக் கோமான்க ளெல்லவரும்
வேந்தன் றனைத்தேற்றி விட்டாரே யந்நேரம்
சாந்த குணவான் றருமன் முகம்பார்த்து
மன்றிரித ராட்டிரனும் வாகாக வேயுரைப்பான்
நன்றியுள்ள பாண்டுமஹா ராஜனுமே மோட்சமுற
நன்னயம தாய்வார ணாவதமே நீங்களுமே
உன்னிதமாய் சென்றுதிதி யுத்தமரே செய்திடுவீர்
நன்னகரி லேயிருந்து நன்று யிளவரசு
தன்னைச் செலுத்திடுவீர் சட்டமதா யென்றுரைத்தே
மந்த்ரிபு ரோசனனை மைந்தரொடு சென்றிடவே
அந்தகனு மேவிளம்பி யன்பா யமர்ந்திருந்தான்
தூய தருமனுமே துங்கமிகு தம்பியர்கள்

நேயமுள்ள குந்தியொடு நேர்மையுட னேவிரைவாய்
வல்லமைசேர் பீஷ்மரிடம் வாய்மையுள்ள மன்னரிடம்
வில்லா சிரியரிடம் வேந்தர் விடைவாங்கி
குந்திதனைக் கூட்டியுமே கோமான்கள் வந்தனரே
அந்தச் சமைய மமைச்சன்பு ரோசனனை
துரியோ தனனழைத்தே சொல்லுவா னேபுகழ்ந்து
பரிவாய் மதியமைச்சே பாண்டுமைந்தர் குந்திதனை
எந்தவித மாகவுமே இன்பனே நீமடித்தால்
உந்தனுக்கே செம்பொன் னுதவுவே னென்றுரைத்தான்
வல்ல மதியமைச்சன் வாகாக வேயுரைப்பான்
செல்வனே தங்களிட சித்தம்போற் செய்வமென்றான்
சிந்தைமகிழ்ந் தேதுரியன் செப்புவா னப்பொழுதே
மந்திரியே காசிசென்று மன்னருட னேயிருப்பாய்
நன்னயமாய்ச் செவ்வரக்கி னலேயோர் மாளிகையை
அன்னகரிற் செய்திடுவே னவரொடு குந்திதனை
கூட்டியே சென்று குடியேற்றி யிவ்விடமே
ஓட்டமாய் வந்தா லுரைப்பேன் ரகசியங்கள்
என்றியம்பி னன்றுரிய னிம்மொழிக்கு மேயமைச்சன்
நன்றெனவே சம்மதித்தன் னுழிகையி லவரொடு
வந்துமே சேர்ந்தனனே வாகான பாண்டவர்கள்
மந்திரியைக் கூட்டி மகிழ்வாக வேநடந்து
நன்னயம தாய்வார ணவதத்தி லேபுகுந்து
மன்னரும்வந் தாலிறங்கும் மாளிகையி லேவசித்தார்

துரியோதனன் கட்டின அரக்கு மாளிகையிற்
பாண்டவர் குடிபுகுதல்

செல்வன் துரியன் சிலநாட் கழிந்தபின்பு
வல்ல சகுனிகர்னன் வாக்கியம்போல் மன்னவனும்

செய்ய கனகனென்னுஞ் சிற்பி தனையழைத்து
துய்ய கனகமதைத் துங்கன் மிகவீய்ந்து
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரை யக்கினியாற் பாங்காகக் கொன்றிடவே
நன்னயம தாய்வார ணுவதத்தி லன்புடனே
பொன்னுலகோ ருந்தான் புகழவோர் மாளிகையை
செவ்வரக்குக் குங்கிலியஞ் சீல மெழுகழிஞ்சில்
செவ்வையுட னெண்ணெய்பஞ்சாற் சிங்கார மாயமைத்து
அக்கினியின் மூலையிலே அன்றுசர வத்திவைத்து
தக்கபடி நாற்புறமுஞ் சாட மருந்திறைத்து
இங்குவரு வாயெனவே இன்பமுட னேயுரைத்தான்
மங்களமாய்ச் சிற்பிவிடை வாங்கியே வேகமொடு
நன்னயம தாய்வார ணுவதத்தில் வந்திருந்து
மன்ன னுரைபோல் மனை தனையே வுண்டாக்கி
பாண்டுமன்னர் குந்தியுமே பாரின்மீ தேபிழைக்க
வேண்டுமென வோர்சுரங்கம் மேன்மையொடு செய்துவைத்து
துய்ய துரியன்முன்னே துங்கமுட னேநடந்து
செய்ய கனகனுமே செப்பியே சென்றனனே
தூய புரோசனன்முன் சொன்னபடி யேமுடிக்க
நேயமொடு பாண்டவர்முன் நேர்மையுட னேயுரைப்பான்
நன்னயஞ்சே ருந்திரித ராட்டிரரு முங்களுக்கே
பொன்னுலகோ ரன்பாய்ப் புகழவோர் மாளிகையுங்
கட்டி முடிந்தனவே காவலரே யின்பமொடு
சட்டமதா யிங்குபல தான தருமமதைச்
செய்துநல்ல நாட்பார்த்துச் சிங்கார மாளிகைக்கு
வையகமுள் ளோர்வணங்கு மன்னவரே செல்வமென்று
சாற்றிடவே கேட்டுத் தருமரும்நன் னாட்பார்த்து
போற்றியே பூசுரர்க்குப் பொன்கள் பலவீய்ந்து

தான தருமஞ் சகலமுமே செய்துவைத்து
வானவருங் கொண்டாட மாதாவோ டைவருமே
உல்லாச மாளிகையி லுத்தமரு மேமகிழ்ந்து
சல்லாப மாகவுமே தானிருந்தா ரம்மானை

அரக்குமாளிகையைத்
தீயிடுதல்

சிந்தைமிக வேமகிழ்ந்து செய்ய புரோசனனும்
வந்துதுரி யோதனன்முன் வாகாக வேயுரைப்பான்
வேந்தனே பாண்டவரை வீட்டிற் குடியேற்றிச்
சாந்த குணவானே சட்டமதா யிங்குவந்தேன்
இனிமேல் நடப்பதென்ன இன்பனே கூறுமெனக்
கனிவா யறைந்தனனக் காலமதி லம்மானை
துரியோ தனன்மகிழ்ந்து சொல்லுவா னப்பொழுது
பரிவாய்ப் புரோசனன்முன் பாகவுமே கேளெனவே
வருகின்ற கிருஷ்ணபக்ஷ மான சதுர்த்தசியிற்
பரிவா யிராவிற் பதினைந்து நாழிகைக்கு
அக்கினியின் மூலை யமைத்தசர வத்தியிலே
அக்கினியை மூட்டிவிடு மன்பனே யென்றறைந்தான்
நல்லதென வேவார ணுவதத்தி லேகியுமே
வல்ல கிருஷ்ண பக்ஷ மதனையெதிர் பார்த்திருந்தான்
வேந்தன் றுரியனந்து வேடரையே தானழைத்துப்
பாந்தமாய்ப் பேசிப் பசும்பொன் சிலதீய்ந்து
தேனிலே நஞ்சுதனைச் சேர்த்தே கிருஷ்ணபக்ஷ
மான சதுர்த்தசியின் மாலையிலே பாண்டவர்வாழ்
இல்லமது சென்றவர்க்கே யீய்ந்திடுவீ ரென்றியம்ப
வல்லோனு மேயனுப்பி வைத்தே நினைந்திடுவான்
அன்றுதினம் வேடருமே ஐவரிடந் தேன்கொடுப்பார்

நன்ருய்ப் புசித்திரவில் நன்மையுள்ள பாண்டுமைந்தர்
அக்கணமே சோர்ந்திடுவா ரன்பாய் புரோசனனும்
அக்கினியை மூட்டிடுவா னேவ ரிறந்திடுவார்
துக்கமெல்லாந் தீர்ந்தே சுகமாகச் செங்கோலும்
பக்குவமாய்ச் செய்திடலாம் பார்வேந்த ரும்புகழ
நல்லயுத்தி யீதெனவன் ஞளை யெதிர்பார்த்தே
வல்லோன் துரியன் மகிழ்ந்திருந்தா னம்மானை
அக்கினியைத் தானிடுநா ளறிந்தே கனகனுமே
தக்கதொரு வீமனுக்குத் தானுரைக்க வேண்டுமென்று
நன்னயம தாய்வார ணுவதத்திற் கேகியுமே
மன்னவனும் வீமன் மலரடியி லேபணிந்து
நின்ரு னெழுந்திருந்தன் னேரமதி லேமகிழ்ந்து
நன்றியுள்ள வீமன் நவிலுவா னம்மானை
ஆசீர் வதித்தேநீ யாரெனவே கேட்டனனே
நேசமுட னேகனகன் நேர்மையுட னேயுரைப்பான்
வேந்தனே தாங்களுமே வீற்றிருக்கும் மாளிகையைச்
சாந்த குணவானே தக்கபடி யாயமைத்த
சிற்பியென்பே ரோகனகன் தேர்வேந்தே யிப்பொழுது
அற்பனுமே சொல்லுமொழி யன்பாகக் கேட்டருள்வீர்
வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்ததுரி யோதனனும்
அஞ்சாம லுங்களையு மக்கினியாற் கொல்லவென்று
செவ்வரக்குக் குங்கிலியஞ் சீல மெழுகழிஞ்சில்
செவ்வையுட னெண்ணெய்பஞ்சாற் சிங்கார மாயமைத்து
அக்கினியின் மூலையிலே யன்றுசர வத்திவைத்து
தக்கபடி நாற்புறமுஞ் சாட மருந்திறைத்து
பக்குவம தாகவுமே பண்ணினதோர் மாளிகையில்
அக்கினியை மூட்டிடவே அன்னவனு மேநினைந்து
வருகின்ற கிருஷ்ணபக்ஷ மான சதுர்த்தசியில்

பரிவா யிராவிற் பதினைந்து நாழிகைக்கி
மந்திரியா யுங்களொடு வந்த புரோசனனை
தந்திரமா யக்கினியைத் தான்மூட்ட யேவினர்கள்
இந்த விபரமதை இங்குரைத்தே னின்னமொரு
அந்தரங்கந் தன்னை யறைந்திடுவேன் கேட்டருள்வீர்
தாங்கள் துயில் பள்ளியறை தன்னிலேந்து காலாலே
பாங்காயோர் மண்டபமும் பண்ணியிருக் கின்றவதில்
மத்தியுள்ள காலதின்கீழ் வல்லவனே பாறையொன்று
பொத்திவைத்தே னத்தினையே புண்ணியனே பேர்த்திடி
நல்ல சுரங்கமுண்டு நாடியே சென்றிடுவீர் [லோ
வல்லவரே யென்றே வணங்கிநின்று னம்மானை
கண்டுமே வீமன் கனகன் றனைப்புகழ்ந்து
கொண்டுமே தானணிந்து கொண்டிருக்கும் பூஷணத்தை
வல்லவனு மேகழற்றி வாகாக வேயீய்ந்து
செல்வனே கொண்டுயின்று செல்லுவா யென்றறைந்து
அந்தரங்கந் தன்னை யறையா தெவர்களுக்கும்
சந்தோஷ மாகவுமே தானிருந்தா னம்மானை
வ்ல்ல கிருஷ்ணபக்ஷ மான சதுர்த்தசியும்
செல்வனுமே யின்றுவந்த தென்றுஜா ராயிருந்தான்
பஞ்சணையில் நால்வருமே பாங்காக வேதுயின்றார்
வஞ்சன் புரோசனனும் வந்தே படுத்திருந்து
பக்குவமா யின்று பதினைந்து நாழிகைக்கு
அக்கினியை மூட்ட அவன்நினைந்தே கண்துயின்றான்
கானகம்வாழ் வேடர் களித்தேயோ ரைவர்களுந்
தேனதனில் நஞ்சுதனைச் சேர்த்துமே கொண்டுவந்து
காலையிலே யீய்ந்திடுவோங் காவலர்கை யென்றவரும்
சிலமூட னேபடுத்தே செய்தனரே நித்திரையே
பாரமத வீமனுமே பாதியிரா வானதென

தீரமுட னேயெழுந்து தீயன் புரோசனன்முன்
பாங்காக வந்துநின்று பார்த்துமே மாபாவி
தூங்கினு னென்றே துரிசாக வேயோடி
அக்கினியின் மூலை யமைத்தசர வத்தியிலே
அக்கினியை மூட்டிவிட்டே யக்கணமே வீமனுமே
அன்னைகுந்தி தேவிதனை யன்பாய் முதுகினிலும்
நன்னயஞ்சே ருந்தரும ராஜ னருச்சுனனை
இரண்டு புயங்களிலு மின்ப ரிரட்டையரை
இரண்டு கரங்களிலு மேந்தியே வேகமொடு
மண்டபத்தின் மத்தியினில் வைத்திருந்த காலதனைத்
துண்டாக வேயுதைத்தே தோன்றினகற் பாறைதனை
எத்தியுமே முன்போ லிருந்தபடி மூடிவிட்டு
சத்தியவா னுஞ்சுரங்கந் தன்னில் நடந்துவந்தே
அடைத்திருந்த கல்லதனை யன்னேர முட்டியுமே
உடைத்தெரிந்தே யைவரொடு வுத்தமனு மேவெளியில்
வந்துமே வீமன் மனமிகவு மேமகிழ்ந்து
அந்த விடந்தனிலே யன்பாய்த் தழைகளினல்
மெத்தைதனைப் போலவுமே மேன்மையுட னேவிரித்து
உத்தமனு மைவரையே யுன்னிதமாய்த் தூங்கவைத்து
சிங்கங் கரடியிம்சை செய்யுமென வேநினைந்து
துங்கனுமே கானகத்திற் றூங்காது நின்றிருந்தான்
அக்கினியும் பட்டவுட னுங்கார மாய்க்கிளம்பி
பக்குவம தாகப் படுத்திருந்த வேடரையும்
செவ்வரக்குக் குங்கிலியஞ் சீல மெழுகழிஞ்சில்
செவ்வையுட னெண்ணெய்பஞ்சாற் றீரமொடு கட்டிவைத்த
சுந்தரஞ்சேர் மாளிகையுந் துற்புத்தி மந்த்ரியையும்
வெந்துநீ றாக்கியுமே விட்டதுகா ணம்மானை

துரியோதனுதியர் பாண்டவருக்கு
கருமக் கிரிகை செய்தல்

காசி நகரிலுள்ளோர் கண்டிதென்ன காலமென
பேசி யழுது பிரமைமிகக் கொண்டவராய்
நன்னயஞ்சேர் கின்றவத்தி ளுபுரத்தி லுள்ளவர்க்கு
உன்னிதம தாயோலை யுத்தமரு மேயெழுதி
தூதரிட மேகொடுத்துச் சொல்லுமென்ருர் செய்திதனை
பாதைவழி யேநடந்து பண்பான வேந்தரின்முன்
கொடுத்தாரே தூதுவருங் கோமான்க ளும்பார்த்து
அடித்துப் புரண்டழுதே யந்தோ சிவனேயென்று
வில்லா சிரியருமே வேந்தரனை வோர்களுமே
பொல்லாத காலமெனப் பூமான்க ளும்புலம்பி
நன்னயஞ்சே ருங்காசி நன்னகர்க்கே வேகமொடு
மன்னவரு மோடிவந்தே வாகாக வேயமைத்த
சிங்கார மாளிகையுந் தீப்பிடித்து வெந்ததையுந்
துங்கருமே கண்டுமனந் துக்கமிகக் கொண்டவராய்
எரிந்த இடந்தனையே எல்லோருஞ் சூழ்ந்துகொண்டு
கரிந்து கிடக்கின்ற கட்டைகளை யேபுரட்டி
வெந்துநீ ருய்க்கிடந்த வேடரிட வஸ்திகளை
அந்தமுள்ள பாண்டவர்க ளஸ்தியென வேநினைந்து
வில்லா சிரியருமே வீஷ்மர் விதுரனுமே
வல்லமைசேர் மன்னவரும் மண்மீதி லேபுரண்டு
விழுந்தென்ன செய்திடுவோ மென்றுமே சோகமொடு
எழுந்தே புலம்பி யிருந்தார்க ளம்மானை
துரியன் சகுனிகர்னன் துச்சா தனனிவரும்
பரிவாய்நல் யோஜனைகள் பண்ணியே பாண்டவரை
கொன்றுவிட்டோ மென்றுகளி கொண்டே மனமதிலே

நன்றியில்லாப் பாதகரும் ராஜாக்கள் மத்தியினில்
ஆடுநனைவதற்கு ஆய னழுவதைப்போற்
கேடுசெய்த மூடருமே கீழே விழுந்தழுதார்
வேந்தருமே யன்னேரம் வேட ரெலும்புகளைச்
சாந்த குணமுடையோர் தானே யெடுத்துவைத்து
கருமக் கிரிகை களைமுடித்தே யெல்லவரும்
உருகி மனமுடைந்து உத்தமரு மன்னேரம்
நன்னயஞ்சேர் கின்றவத்தி னுபுரமே சென்றனரே
மன்னவனும் பாண்டுவின்றன் மைந்தரிட செய்கைசொல்வாம்

### வீமன் இடிம்பாசுரனை
### வதைத்தல்

இடும்பா வனமதிலே இன்பமுட னேவீமன்
கடுங்காவல் செய்துநிற்குங் காலமதி லேயிடும்பி
என்னுங் கமலகன்னி இங்கிதம தாகவுமே
நன்னயம தாகவிரை நாடியே தேடவென்று
வந்தாள் வனந்தனிலே மன்னவனும் வீமனையே
சிந்தை மகிழ்ந்துகண்டு செப்புவா ளன்புடனே
மன்னவனே யுன்மேல் மயலாகி வந்தனனே
என்னை மருவு மெனவுரைத்தா ளம்மானை
பாரமத வீமனுமே பாவைதனைப் பார்த்துரைப்பான்
காரிழையே நீயரக்கி காவலனே யானுகும்
பொருத்த மிருவருக்கும் பொற்கொடியே யில்லையென
மறுத்துமே நீதி வசனமதைக் கூறிநின்றான்
இடும்பனுமே தானெழுந்தே யின்னேர மாகியுமே
இடும்பிவர வில்லையென வெண்ணியே வேகமொடு
வந்தானே கானகத்தில் வாகான வீமனிடஞ்
சந்தோஷ மாகநின்ற தையலையே கண்டவனும்

தங்கைதனைக் கைவசமே தானுக்க வேண்டுமென
இங்கிவனும் பேசி யிருக்கின்றா னென்றுவெண்ணி
ஓடிவந்து வீமனையே யோங்கியொரு குத்துவிட்டான்
நாடிவந்தோன் றன்னையுமே நல்வீமன் றானறிந்து
ஆங்காரங் கொண்டு வறைந்தானே கன்னமதிற்
பாங்கா யரக்கனிட பல்லு முதிர்ந்தனவே
கண்டே யரக்கன் கனமோசம் வந்ததெனச்
சண்டைசெய்யும் வேளை தருமரொடு மற்றவரும்
கானகத்தில் வந்திருக்குங் காரணமுந் தோன்றாது
வானத் திடிபோல் மதவீமன் றானடித்து
அரக்கனொடு சண்டையிடு மாண்மையுமே தான்பார்த்து
உறக்கம் வராமலுமே யுத்தமரு மேயிருந்தார்
ஆங்கார வீம னசுரன் றனைப்பிடித்துப்
பாங்காகப் பூமியிலே பார்வேந் தனுமடித்தான்
இடும்பனுமே யன்னேர மேமனூர் சென்றனனே
இடும்பியுமே யண்ண னிறந்தவையு மெண்ணாது
குந்தியம்மாள் முன்னுடிக் கோதையுமே வேகமொடு
வந்து பணிந்தே வழுத்துவா ளம்மானை

வீமன் கமலகன்னியை
மணம்புரிதல்.

இந்த வனத்தி லிரைதேட வேமகிழ்ந்து
வந்தேன் விரைவினிலே வாகாயிம் மன்னவரை
கண்டுமே மோகமது காவலரின் மீதினிலே
கொண்டுமே சென்றருகிற் கூறினேன் செல்லுமென்றார்
மாமியே யுந்தன் மகனுமெனை யேற்றிடவே
பூமியுள்ளோர் போற்றுகின்ற பொற்கொடியே செய்திடுவாய்
இல்லா விடிலிறப்பே னிப்பொழுதுன் பாதமதில்

சொல்வாய் பதிலெனவே தோகையுமே நின்றிருந்தாள்
குந்தி தருமரிடங் கூறியே பெண்பாவம்
வந்துசே ராதபடி மைந்தனே செய்யுமென்றாள்
ஏந்தல் தரும ரிடும்பிதனைப் பார்த்துரைப்பார்
சாந்த குணமுடைய தையலே நீகேளாய்
சிறுத்த யிடையுடைய தேன்மொழியே நீயரக்கி
பருத்த புயவீமன் பாரினிலே வாழுநரன்
பொருத்த மிருவருக்கும் பொன்னே பொருந்தாதே
வருத்த மடையாதே மாமயிலே யென்றுரைத்தார்
மங்கை கமலகன்னி மன்னவருக் கேநவில்வாள்
திங்கள் வதனமுள்ள செம்மலே கேட்டருள்வீர்
பண்டுதிட முள்ளவிடப் பன்மனென்ற மாவசுரன்
பெண்டீன் றெடுத்தவெழிற் பேதைசன் மிஷ்டைதனை
வல்ல யயாதி மஹாராஜன் சோலையிலே
சல்லாப மாய்க்காந் தருவமணஞ் செய்திலையா
அன்னவளின் கெர்ப்ப மதிலே புரூர்வனென்ற
மன்னவனின் கால்வழிதான் வள்ளலே சந்த்ரவம்சம்
இத்தினையே கேட்டு இருக்கிறீரோ நீங்களுமே
சத்தியவா னேயெனையே சாமான்ய மாகவுமே
எண்ணிடவு மேவேண்டா மிங்கிருந்தே யோர்நொடியில்
புண்ணியனே மூன்றுலகும் போய்த்திரும்பு வேன்மகிழ்வாய்
காசினிமீ தேமூன்று காலமுறை யோதிடுவேன்
மாசில்லா மன்னவனே மங்கையெனை யிப்பொழுது
காந்தருவ மார்கமணம் காவலரைச் செய்திடவே
பாந்தமுட னேயுரைப்பீர் பார்வேந்தே யென்றறைந்தாள்
வேந்தன் றருமனுமே மெல்லிகையைப் பார்த்துரைப்பார்
சாந்த குணமுடைய தையலே யிப்பொழுது
முன்னே நடந்ததுவை முற்றிலுமே சொல்வதொடு

பின்னே நடக்கும் பெருமைகளைக் கூறுமென்றார்
அன்ன நடையுடையா ளன்பு மிகுகமல
கன்னி மகிழ்ந்தே கழறுவா ளம்மானை
மன்றிரித ராட்டிரனும் மன்னு யிளவரசு
நன்றியுள்ளோர் தங்களுக்கே நன்றாகச் சூடினதும்
துரியன் பொறுமையொடு சொல்லியே தந்தையிடம்
பரிவாகக் காசிவரப் பண்ணிப் புரோசனனை
தீங்குசெய்ய வுங்களுக்குச் செப்பிக் கனகனிஞற்
பாங்காயோர் மாளிகையை பண்பாக வேயமைத்து
அக்கினியின் மூலையிலே யன்றுசர வத்திவைத்து
அக்கினியை மூட்டிடவே யன்னவனும் நாட்குறித்தான்
செய்ய கனகனென்னுஞ் சிற்பியுமே யோடிவந்து
ஸ்வயம் புகழுமிந்த மன்னரிடம் மாளிகையில்
வைத்த சுரங்கமதை வாகாக வேபுகன்று
சித்த மகிழ்ந்தே துரியன்செய்ய புரோசனனை
அக்கினியை மூட்ட வறைந்ததோர் நாளையுமே
அக்கணமே தானுரைத்தே யன்னவனுஞ் சென்றபின்னே
வஞ்சகனு மேகுறித்து வைத்தநாள் வந்திடவே
பஞ்சமா பாதகனும் பாவி புரோசனனும்
நித்திரைசெய் தானயர்ந்தே நேசமுட னிந்தமன்னர்
அத்ததியே வக்கினியை யன்பாக மூட்டிவிட்டு
உங்களையுந் தானெடுத்தே யுத்தமரு மேவிரைவாய்த்
துங்கச் சுரங்கவழி தோன்றலுமே யோடிவந்து
இடும்பா வனமான இவ்விடம்வைத் துங்களுக்கே
கடுங்காவல் செய்திருக்குங் காலமதில் யானுமுற்றேன்
சோதரனு மெந்தனையே துக்கமுட னேதேடி
பாதைவழி வந்துமிந்தப் பார்வேந்த ரால்மடிந்தான்
வல்லவரே பின்னல் வரும்பயனை யானுரைப்பேன்
நல்லதொரு வேதமுனி நாதரையே காலையிலே

புண்ணியர்கள் நீர்காணப் போகின்றீ ரென்றுறைந்து
விண்ணவருங் கொண்டாட மெல்லிகையாள் நின்றனளே
செய்ய தருமருமே சிந்தைமிக வேமகிழ்ந்து
துய்யமத வீமனிடஞ் சொல்லியே நீதிகளும்
மாதரசை யாதரிப்பாய் வல்லவனே யென்றியம்பக்
காதலுட னேகமல கன்னியையங் கீகரித்தான்

கடோற்கஜன் உற்பவம்

காவலருங் குந்தியுமே காலைக் கடன்முடிக்க
ஆவலுடன் றண்ணீரை யன்பாகத் தேடிவந்தார்
நீதி வியாசருமே நேமித்த வோர்நதியை
மாதவருங் கண்டு மனமகிழ்ந்தே யன்னேரம்
வல்லோ ரிறங்கினதோர் மாத்திரத்தில் வேதமுனி
செல்வரிட முன்பாகத் தீரமொடு தோன்றினரே
பாண்டுமென்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவருங் கண்டே பணிந்துநின்று ரம்மானை
வாமமுள்ள வேதமுனி மன்னரையா சீர்வதித்து
நேமமுடை யோரருகில் நேர்மையுட னேயிருத்தி
மன்னனிட மேநவில்வார் மாமுனியு மந்நேரம்
கன்னி யிடும்பிதனைக் காந்தருவ மாமணமே
செய்துவைத்து வீமனுக்கே சிந்தைமிக வேமகிழ்ந்து
நையாம லேநடந்து நன்றாக முன்னிலங்கும்
குருவா கியசாலி கோத்ரமுனி மாவனத்திற்
பரிவாய்ச் சிலகாலம் பண்ணியே வாசமுமே
நேயமுட னேநடந்து நீங்களுமே தான்வேத்ர
கீயத்திற் சென்றிருப்பீர் கீர்த்திமிக வுள்ளவரே
வேதியர்க ளாகவுமே வேண்டுமென வேநினைந்த
போதி லுருவமது புண்ணியரே வந்துவிடும்

வேண்டா மென நினைந்த வேளையிலே மாறிவிடும்
பாண்டவரே யென்றுவந்தப் பண்பான மந்திரத்தை
சித்தமிக வேமகிழ்ந்து செப்பியே சென்றனரே
உத்தமரு மன்னோர முன்னிதம தாயிலங்கும்
குருவா கியசாலி கோத்ரமுனி மாவனத்திற்
பரிவாக வேவாசம் பண்ணினா ரம்மானை
மைந்தன்மத வீமனையே வாகாகக் குந்தியம்மாள்
சிந்தைமகிழ்ந் தேயழைத்துச் செப்புவா ளப்பொழுதே
நன்னயம தாகவுனை நம்பிவந்த பெண்கமல
கன்னி யிவளின் கருத்தின்போற் செய்யுமென்றாள்
அன்னைசொன்ன வாக்கியத்திற் கட்டியொன்றுஞ் சொல்லாது
கன்னிகையைக் கூடிக் களித்தே சுகித்திருந்தான்
மங்கையுமே கர்ப்ப வதியாக வேயிருந்து
சிங்கார மாகியதோர் செல்வனையே யீன்றெடுத்தாள்
ஆகாய வாணி யறைந்த மொழிப்படியே
வாகாய்க் கடோற்கஜமா மன்னனென நாமமிட்டார்
சிறந்த கடோற்கஜனுஞ் சிந்தைமிக வேமகிழ்ந்து
பிறந்த வுடனெழுந்தே பெற்றெடுத்த வீமனையும்
குந்தியொடு நால்வரையுங் கொற்றவனு மேவணங்கி
அந்த முடனே யவர்களிட மேதுரைப்பான்
மாமனிட காணிதனை வாகாக வேயரசு
நேமமுட னேபுரிய நேர்பரே வாக்கருள்வீர்
என்றுரைக்க வேகேட்டு எல்லவரு மேமகிழ்ந்து
நன்றெனவே சம்மதித்தன் னாழிகையிற் பாண்டவரும்
ஆசிபல கூறியுமே யன்பாய் விடைகொடுத்தார்
மாசில்லா மன்னவனும் மாதா கமலகன்னி
தன்னையுமே யின்பமொடு தானழைத்தே வேகமதாய்
நன்னகரை நோக்கி நடந்தான்கா ணம்மானை

## பாண்டவர் வேத்திரகீயம்
## அடைதல்

குருவா கியசாலி கோத்ரமுனி மாவனத்திற்
பரிவாக வேசிலநாள் பாண்டவரு மேயிருந்து
வேதமுனி சொல்லிவைத்த மேன்மையுள்ள மந்திரத்தை
நீதமுட னுச்சரித்தே நேர்மையுள்ள பாண்டவரும்
குந்தியுமே விப்ர குலத்தி லுதித்தவர்போல்
சந்தோஷ மாகவுமே தானிருந்தா ரம்மானை
நேயமுட னேநடந்து நேர்மையுள்ள மாவேத்ர
கீயமதி லேகியுமே கீர்த்தியுள்ள பாண்டவரும்
வாமமுள்ள முன்னூற்று மங்கலத்தில் வந்தனரே
நேமமுள்ள தர்மமுனி நேசமொடு வந்துகண்டு
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரை வாழும் பதிக்கழைத்துச் சென்றனரே
அந்தணரி னில்லமதி லைவருமே குந்தியொடு
சந்தோஷ மாகவுமே தானிருந்தா ரம்மானை
அன்னகரி லேவசிக்கு மந்தணருஞ் சந்ததமும்
நன்னயமாய்ச் சோறுகறி நல்லபல காரமுமே
வண்டியோ ரைம்பதினில் வைத்தெருமை யைப்பூட்டிக்
கொண்டொருவன் கானகத்திற் கொண்டுபோய் வைத்திருப்பான்'
வல்லபகா சூரன் வண்டிதனிற் கொண்டுவந்த
நல்லவுண்டி காய்கறியை நன்மையுட னேபுசித்து
வண்டிதனைப் பூட்டியுமே வந்தமகி டங்களையுங்
கொண்டுவந்தோன் றன்னையுமே கொன்றுதின்று சென்றிடுவான்
மாமறையோர் தானே மனைக்கொருவ ராய்த்தினமும்
நேமமுடன் கொடுக்க நியமித்தே செய்துவந்தார்
குந்தியுட னைவரையுங் கூப்பிட் டுபசரித்து
வந்தமறை யோர்முறையே வந்ததன்று தர்மமுனி

பத்தினியு மேநமக்கோர் பாலகனல் லால்வேறு
புத்திரரில் லாமலுமே போனதென வேதயங்கி
சிந்தைமிக வேமயங்கித் தேன்மொழியாள் தானழுதாள்
குந்திமா தேவியுமே கொம்பனைமுன் வந்துநின்று
மெல்லியே நீயுமிந்த வேளை புலம்பும்வகை
சொல்லுவா யென்றுகன்னி துக்கமுட னேகேட்க
மாமறையோர் பத்தினியும் வாகாக வேநவில்வாள்
வாமமிக வுள்ளகுந்தி மாதேவி யேகேளாய்
தக்கோர் புகழேகச் சக்ர வனத்தினில்வாழ்
மிக்க பலமுடைய வீரன் பகாசூரன்
இந்தமறை யோர்வசிக்கு மில்லமதி லேதினமும்
வந்தாடு மாடுகளை வாகாக வேபுசித்து
வேதியரைக் கொன்றுதின்று விட்டே மகிழ்வுடனே
பாதகனுஞ் சென்றிடுவான் பார்த்தே யனைவருமே
வல்லபகா சூரனையே வாகாக வேவணங்கி
சொல்லுவா ரந்தணருந் துக்கமுட னம்மானை
நல்ல வசுரேந்த்ரா நாட்டமுட னெங்களையே
கொல்லுவதா லென்னபலன் கூறுமொழி யைக்கேளும்
அன்னமொடு காய்கறிக ளன்பாக வேசமைத்து
நன்னயமாய் வண்டிகளில் நல்லமகி டங்களையே
பூட்டித் தினந்தினமும் புண்ணியனே யோர்நரனை
ஓட்டிவரச் செய்திடுவோ முள்ளமிக வேமகிழ்ந்து
தக்கோர் புகழேகச் சக்ர வனத்தினிலே
பக்குவமாய் வந்தே பசிதீர்ந் திருந்தாலே
குலதெய்வம் போலவுமே கொண்டாடிக் கொண்டிருப்போம்
பலமுடைய வாவெனவே பாங்காக வேயுரைத்தார்
வல்லபகா சூரனுமே மாமறையோர் சொற்படியே
நல்லதெனச் சம்மதித்தன் னுழிகையிற் சென்றனனே

மாறையோர் தானே மனைக்கொருவ ராய்த்தினமும்
நேமமுட னேகொடுக்க நியமித்தே செய்துவந்தார்
எந்தனுக்கே வந்ததுவே இன்றுமுறை சுந்தரவோர்
மைந்தனல்லால் வேறிலையே மாதரசே யென்றழுதாள்

வீமன் பகாசுரனை வதைசெய்தல்.

குந்திமா தேவியுமே கூறுவா ளன்புடனே
இந்தவித மாகவுமே ஏங்கிப் புலம்பாதே
எந்தனிட மைந்தனையே யேகவே செய்திடுவேன்
சிந்தைமகிழ்ந் தேசமையற் செய்குவா யென்றறைந்தாள்
மெல்லிகையு முண்டிகறி வேணதயிர் நெய்யுடனே
சல்லாப மாகவுமே தான்சே கரித்துவைத்து
குந்தியிட மோடிவந்தே கூறினுள் பாவையுமே
அந்தமொழி தன்னை யறிந்தே தருமரின்முன்
வந்துநின்று மாது வழுத்தியே செய்கைதனைச்
சிந்தைமிக வேமகிழ்ந்து செய்யமத வீமனையே
சென்று வரும்படியே செய்வா யசுரனையே
கொன்றுவரு வானெனவே கூறினு ளம்மானை
வல்ல தருமர் மதவீம னையழைத்துச்
சொல்லுவா ரன்புடனே சோதரனே யிப்பொழுது
சென்றுபகா சூரனையே தீரமுடன் கானகத்திற்
கொன்றுவரு வாயெனவே கூறி விடைகொடுத்தார்
நன்றெனவே சம்மதித்தந் நாழிகையில் வீமனுமே
சென்றுவரு வோமெனவே சிந்தையிலே தானினைந்து
வண்டிகளை யோட்டியுமே வாகாய் வனந்தனிலே
கொண்டுவந்து மேநிறுத்திக் கோமான் நதியோரம்
எருமைகளைத் தானவிழ்த்தே ஏகுவீ ரென்றறைந்து
தருமர்க் கிளையவனுஞ் சந்தோஷ மாகவுமே

உச்சிமலை மீதேறி யொய்யார மாகவுமே
அச்சமில்லா வீம னசுரனையே பார்த்தனனே
ஒருயோ சனை தூர முன்னிதமாய்த் தோன்றினதைப்
பரிவாகக் கண்டிறங்கிப் பாங்கான வண்டிகளை
நதியோரந் தானிழுத்து நன்றான வுண்டிதனைச்
சதிராக வுண்டுகறி தன்னைமுன் றுண்டைசெய்து
பரிவா யிரண்டையுண்டு பாங்காக வொன்றிருக்குந்
தருவாயி லேபசியாய்த் தானே பகாசூரன்
வந்தானே வேகமொடு மாமறையோ ரன்னமுமே
விந்தையுட னேயனுப்ப வில்லையோ வின்னமென்று
சந்தேகங் கொண்டுவண்டி தன்னையுமே கண்டருகில்
வந்தான் பசியாத வல்லவனு மந்நேரம்
வண்டிகளி லுண்டியில்லா வாறுகண்டு மேசினமுங்
கொண்டுபெரு மூச்சுவிட்டுக் கொண்டெங்கும்பார்த்தனனே
மொத்தை யடித்திருக்கும் மூர்க்கமத வீமனையே
அத்தருணங் கண்டுவெகு ஆங்காரங் கொண்டுவந்து
என்பசிக்கே யந்தணரு மீய்ந்தவுண்டி காய்கறியை
உன்பசிக்கே யுண்டா யொருநொடியில் மாய்த்திடுவேன்
பாரடா வென்றவனும் பாய்ந்துவீ மன்புஜத்தில்
தீரனோர் குத்துவைத்தான் சிந்தா துருண்டைதனை
வீமனுமே தானருந்தி விட்டே யனங்கறிகைய
வாமமுட னேசெறிக்க வைத்திடுவாய் குத்தியென்று
வல்லபம தாய்முதுகு மார்பையுமே தான்திருப்பி
செல்வனுங் காட்டியுமே சென்றுகைகால் சுத்திசெய்து
வல்லரக்கன் முன்னாடி வந்துநின்று ஏப்பமிட்டான்
பொல்லா வரக்கனுமப் போதுரைப்பான் யாதெனிலோ
உன்னையுமே நீபுசித்த வுண்டியையு மோர்நிமிஷந்
தன்னிலே கொன்றுதின்று தானேகு வேனெனவே

வீரனோர் குத்துவைத்தான் வீமனோ தட்டிவிட்டான்
தீரமுடனே மரத்தை செங்கரத்தி னாற்பிடுங்கி
ஓடிவந்தான் வீமனுமே யோர்மரத்தை யேபிடுங்கி
நாடிவந்தான் கண்டரக்கன் நன்றாக விட்டெறிந்தான்
வந்தமரந் தன்னையுமே வாகான வீமனுமே
சிந்தைமிக வேமகிழ்ந்தே செய்தான் பொடியாக
பருவதத்தை யேபிடுங்கிப் பாங்காக விட்டெறிந்து
இருவருமே சண்டைதனை இட்டுவெகு நேரமுமே
வல்லமைக ளைப்பேசி மல்யுத்தஞ் செய்தனரே
நல்லமத வீமனுமே ராஜாளி போற்பாய்ந்து
தக்க வசுரன் றனைப்பிடித்து மேதலையைப்
பக்குவமா கத்திருகிப் பாரினிலே விட்டெறிந்து
வண்டிதனில் முண்டமதை வைத்தே மயானமதிற்
கொண்டுவந்து காஷ்டமதைக் கொற்றவனு மேயடுக்கி
வைத்துநீ ருக்கிவிட்டு வல்லவனும் நீராடிச்
சித்தமிக வேமகிழ்ந்து சீக்கிரமாய் வீமனுமே
அந்தணர்கள் வாழுகின்ற வக்கிரா காரமதில்
வந்தே தருமரையும் மாதாவை யும்பணிந்தான்
ஆசிபல கூறினரே யன்னை தருமருமே
மாசில்லா மாமறையோர் வாகான பாண்டவரை
கொண்டாடித் தங்கள் குலதெய்வம் போலவுமே
தண்டா மரைமுகத்தார் தானிருந்தா ரம்மானை

பாஞ்சாலன், அசரீரியால் பாண்டவர்
இருப்பிடம் அறிதல்.

வாமமிகு பாஞ்சால மன்னன் கொலுவினிலே
நேமமுடன் வந்திருந்தே நேர்மையுள்ள மந்திரிமார்
தங்களையு மற்ற சபையோரை யும்பார்த்தே

துங்கன் முகஞ்சோர்ந்து துக்கமுட னேயுரைப்பான்
வல்ல துரோணரையே மாய்க்கவொரு புத்திர னும்
செல்வனு மென்னை ஜெயித்தோன்றே னுக்கிசைந்த
கன்னிகையு மேபெறுவேன் காவலரே பாருமென்று
மன்னவனு மேசபதம் வாகாகச் செய்துவந்து
உபையாசன் யாசனென்ற வுத்தமரின் முன்புசென்று
அபயம் புகுந்தே யறைந்து மனக்குறையை
மேன்மையொடு புத்திரகா மேஷ்டியா கந்தனையே
பான்மையுட னேயவரும் பண்ணிவைத்தோர் செல்வனையும்
கன்னிகையு மேகொடுத்துக் காமுனிவர் சென்றபின்பு
நன்னயம தாகவுமே நான்வளர்த்து வந்தனனே
பாலனும்வில் வித்தைகளைப் பாங்காகக் கற்றனன்காண்
சீலமுள்ள செல்வியுமே சிங்கார மாய்வளர்ந்து
மங்கைப் பருவ மதையடைந்து மாடமிசை
மங்களமாய் மாதுமகிழ் வாகாவிருக் கின்றனள்காண்
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவருஞ் செவ்வரக்காற் பண்ணினதோர் மாளிகையில்
வெந்துநீ ருகியுமே விட்டாரென் றேயுலகோர்
விந்தையுட னேதுகின்றார் வேந்தர் சபைநடுவே
வல்லமையாய்க் கூறியுமே வந்தவண்மை வீணுச்சே
நல்லவரே நீங்களுமிந் நாழிகையி லேகியுமே
வல்ல வுலூகமுனி மாதவரைக் கூட்டியுமே
செல்வரே வாருமென்று செப்பிடவே சென்றவரை
நன்னயம தாயழைத்தே ராஜசபை வந்தனரே
மன்னவனு மேயெழுந்து மாமுனிவ ரைப்பணிந்து
பாண்டுமன்ன னீன்றெடுத்த பாண்டவரும் பாரினிலே
மாண்டனரோ மாமுனியே மாளவில்லை யோவெனக்கு
அசரீரி யாலே யறிந்தே யுரைத்திடுவீர்

நிசமான செய்திதனை நேர்பனே யென்றறைந்தான்
வல்ல வுலூகமகா மாமுனிவர் வீடுசென்று
செல்வமுள்ள பாண்டவரின் செய்தியச ரீரியினுல்
உத்தமரு மேதெரிந்தே யோடிவந்து மன்னனிடஞ்
சித்தமிக வேமகிழ்ந்து செப்புவா ரம்மானை
வாமமிகு பாஞ்சால மன்னவனே பாண்டவரும்
பூமிமிசை யேமாண்டு போனுரென் றேபுகன்றீர்
உத்தமருந் தானே வுயிரோ டிருப்பதுவாய்
சித்தமுமே தான்மகிழ்ந்தே செப்பியச ரீரிசென்ருள்
வல்ல வியாசமுனி வந்தால் நமதெண்ணம்
எல்லாம் நிறைவேறும் ஏந்தலே யென்றறைந்தார்
அந்தவுரை கேட்டமன்ன னன்பாய் மனந்தனிலே
சிந்தித்தான் வேதமுனி சீக்கிரம தாய்நடந்து
நன்னயஞ்சேர் பாஞ்சால ராஜனிடம் வந்தனரே
மன்னவனு மேயெழுந்து மாமுனிவ ரைப்பணிந்து
பொற்பீட மீதிருத்திப் புண்ணியனு மேநவில்வான்
விற்பனரே பாண்டவரும் வெந்துநீ ருனதுவாய்
இப்புவியின் மீதிலுள்ளோ ரெல்லோருஞ் சோகமொடு
செப்புகின்ரு ரேயினியென் செய்வே னெனப்புகன்ருன்
செய்ய வியாசருமே செப்புவா ரப்பொழுது
துய்யபாஞ் சாலமன்ன சோகமிக வேண்டாங்காண்
பாண்டவரு மக்கினியாற் பாரிதனின் மீதினிலே
மாண்டிடவு மில்லையெந்தன் வாக்கியத்தைப் போலவுமே
செய்துவைப்பாய் பற்குனனுஞ் சிந்தைமகிழ் வாகவந்து
தையலையே மாலை தரிப்பா னெனப்புகன்ருர்
வேந்தனுமே யந்த விதமதனைக் கூறுமென்று
சாந்த குணமுடையோன் ருனுரைத்தா னம்மானை

### வியாசரன் ஆக்ஞையால் பாஞ்சாலன் லட்சியக்குறி நாட்டி சுயவரம் சாற்றல்

செய்ய வியாசமுனி செப்புவா ரன்புடனே
துய்யபாஞ் சாலமன்னு துங்கமுள்ள வோரிடத்தில்
எழுபதடி நீள மிரண்டுகம் பங்களையே
எழுப தடிப்பரப்பி லின்பமுட னேநாட்டி
எழுபதடி நீள மிருக்கும்விட் டம்பூட்டி
எழுபதடிக் கம்ப மிரட்டித் ததின்மீது
நிறுத்தியே விட்டமதை நேராக வேபூட்டி
பொருத்த முடனதின்மேற் புண்ணியனே யந்தமொடு
இடைவிடா மற்சுழலு மின்பமுள்ள சக்கரத்தை
சடையாமல் வைத்துவந்தச் சக்கரத்தின் மத்தியிலே
மச்சக் குறிபூட்டி வாகாய்விட் டங்களுக்கு
உச்சிதமும் மூன்று துளை யுண்டாக்கிப் பூமியிலே
வெள்ளிக் கடாரமதை மேன்மையுடன் வைத்துவிட்டு
வள்ளலே நன்றான மஞ்சள் நீ ரை நிறைத்து
அந்தவிட்டத் தின்றுளைக ளந் நீரிற்றோன் றவுமே
வந்தே யுபாயமில்லா மற்பார்ப்போர் சாயலது
துளையை மறைக்கவுமே சுந்தரனே செய்துவைத்து
களையாம லந்தவில்லைக் கைப்பிடித்து மேவளைத்து
நாணியே றிட்டுமஞ்சள் நன்னீரி லேதுளைகள்
காணும் வழியாய்க் கணைமூன்று மேதொடுத்து
மேற்சுழலுஞ் சக்கரத்தின் மீது முனைவழியாய்
ஏற்ற முடன்கணையை யின்பமுட னேபோக்கி
மச்சக் குறிதனையே வாகாக வேவீழ்த்தி
மச்ச மதன்நேர் வருவதற்குட் சக்கரத்தை
விழுத்தி யிரண்டும் விழுமுன் கணைதொடுத்து

அழுத்தமுள்ள பூமீ தவைகளுமே வீழாது
மச்சமொடு சக்கரத்தை வாகான செங்கரத்தில்
உச்சிதமா யேந்தினதோ ருத்தமரு மேயெவரோ
மங்கை துரோபதையை வல்லபம தாகவுமே
மங்களம தாயவரும் மாலையிடு தற்குரியோர்
என்றே விளம்பரங்க ளின்பமுடன் செய்துவைத்தால்
நன்றியுள்ள பற்குன னும் நங்கைதனை யேமணப்பான்
மற்றவருஞ் செய்திடவே மாட்டார்க ளுண்மையிது
கொற்றவனே யென்றுமுனி கூறினு ரம்மானை
பின்னும் வியாசர் பெருமையுட னேயிருந்து
மன்னன் முகம்நோக்கி வாகாக வேயுரைப்பார்
ஓவியரைத் தானழைத்தே யுந்தன் மகள்போல
ஓவியமு மேயெழுதி யுத்தமனே யத்தினிலே
இந்தலக்ஷி யந்தனையே இன்பமுட னேவரைந்து
சிந்தை கனிந்துபிர திஷ்டைசெய்து ஸ்தம்பமதை
அதற்குப்பத் தோராதா ளன்றுவில் வளைப்பதென்றும்
அதற்கேழா நாள்மணமே யன்பாய் முடிப்பதென்றும்
சீலமுள்ள நாட்குறித்தே செல்வா மணவோலை
ஞாலமுள்ள மன்னருக்கே நன்றுயனுப்புமென்று
மாமுனிவர் செப்பினரே மன்னவனு மேகேட்டு
வாமமுள்ள வந்தணரால் வாகாய்நன் னுட்குறித்து
உன்னிதமாய் நன்னகருக் குள்ளே யொருவிடத்தில்
நன்னயமா யந்தணரும் ராஜருமே வந்திருக்க
சிங்கா தனங்களிட்டுச் செல்வனுமே கல்யாணச்
சிங்காரக் கொட்டகையைச் செய்து மகிழ்வுடனே
நல்லலட்சி யக்குறியை நன்மையொடு செய்துவைத்தான்
வல்ல வியாசர் மகிழ்வாக வேயெழுந்து
செய்யவில்லி னுந்தரும தேவதையா வாகனமே

செய்துவைத்தே யந்தமுள்ள செம்மலாம் பற்குனனும்
வில்லைவளைத் தால்வளைய வென்றுமே வேறுமன்னர்
எல்லோரு மேவளைக்க ஏற்கா தெனவுரைத்தார்
சம்ப்ரமம தாகவுமே தார்வேந்தன் வில்லினையும்
அம்படைத்த பெட்டியையு மன்பாகக் கொண்டுவந்து
துங்கமுடன் வைத்தே சுயம்வரத்தைச் சாற்றியுமே
மங்களமா யோவியரை வாகாய் வரவழைத்து
மங்கை துரோபதைபோல் மன்னனவ ரால்வரைந்த
சிங்கார வோவியத்தைச் செம்மலுமே வாங்கியதில்
நல்லலட்சி யக்குறியும் நாளையுமே தானெழுதி
வல்லமைய தாய்த்தூது வர்களிட மேகொடுத்து
தேசதே சங்களெல்லாஞ் சென்றுலிகி தங்களையே
நேசமுட னேகொடுத்து நீங்கள் திரும்புமென்றுன்
ந்ன்னயமாய்த் தூதருமே நாடியைம்பத் தைந்துநகர்
மன்னரிட மேகொடுத்து வந்தார்கா ணம்மானை
துரியோத னுதியருந் துங்கமுள்ள மன்னருமே
பரிவாக வேயெழுந்து பாஞ்சால நன்னகரில்
வில்லா சிரியரொடு மேன்மையாய் வந்திருந்தார்
சல்லாப மாகவுமே தாரணியாள் மன்னரெல்லாம்
நன்னயமாய்ப் பாஞ்சால நன்னகரை நோக்கியுமே
உன்னிதமாய் வந்தமர்ந்தா ருத்தமரு மேமகிழ்வாய்
துய்ய துருபதனுஞ் சோகமிக வுண்டாகி
நைய மனமுடைந்து ராஜாக்க ளைப்பார்த்து
பாண்டுமென்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரிற் பற்குனனும் பத்துநா ளாகியுமே
இங்குவர வில்லையென்ற யேக்கமுட னேயவனுந்
துங்கச் சபைதனிலே துக்கமாய் வீற்றிருந்தான்

---

## ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி, பஞ்சவருக்குச் சுயம்வரச்சேதி யறிவித்தல்.

நன்னயமாய்ப் பாஞ்சால ராஜனிட செய்திதன்னை
மன்னவராம் பாண்டவர்க்கு வாகாகச் சொல்லவென்று
அந்தணரைப் போலேதா னுயன் வடிவெடுத்து
வந்தனர்காண் பாண்டவரும் வாழும் மனையெதிரே
கண்டுமே பஞ்சவரக் காலமதி லேயழைத்துக்
கொண்டுபோ யில்லமதிற் கோபா லனையிருத்தி
ஆரையா எந்தநக ராகுமிங்கு வந்தவகை
கூறையா வென்று குணமாகக் கேட்டனரே
பச்சைநிற மேனியனும் பஞ்சவரைப் பார்த்துரைப்பார்
உச்சிதமாய்ப் பூமிதனி லுள்ளநதி தீர்த்தமெல்லாம்
நேசமுட னுடியுமே நீதியுள்ள வேந்தரும்வாழ்
தேசமெல்லா மன்புடனே சென்றுசென்று வந்தனனே
நாற்றிசையோர் கொண்டாடும் நண்பரே யிப்பொழுது
மேற்றிசையி லேகிவர வேண்டுமென வேநினைந்து
வந்தேனே கானில் வழிதவறி யிங்குவந்தேன்
சுந்தரரே யென்றவருஞ் சொன்னர்கா ணம்மானை
அந்தணரின் முன்பாக ஐவருமே யேதுரைப்பார்
சிந்தைமகிழ் வாகவுமே தேசதே சங்களுமே
சென்றுவந்தே னென்றுரைத்த திண்புயனே யவ்விடமே
நன்று விசேடம் நடந்திருந்தாற் கூறுமென்றூர்
மாமறையோ ரப்போது வாகாக வேயுரைப்பார்
வாமமுள்ள பாஞ்சால மன்னவனும் நன்னயமாய்
வல்ல துரோணரையே மாய்க்கவொரு புத்திரனும்
செல்வனு மென்னை ஜெயித்தோன்ருே ளுக்கிசைந்த
கன்னிகையு மேபெறுவேன் காவலரே பாருமென்று
மன்னன் சபதமிட்டே வந்துபையா சன்யாசன்

என்றதவ மாமுனிவ ரின்பமுற வேபணிந்து
கன்றி மனமுடைந்த காரணத்தை யேபுகன்று
விந்தையொடு புத்திரகா மேஷ்டியா கம்புரிந்து
சுந்தரஞ்சேர் மைந்தனையுந் தோகையையு மேயடைந்து
நன்னயம தாய்வளர்த்து ராஜனுமே வந்தனன்காண்
கன்னிருது வாகியுமே கன்னிகா மாடமிசை
இருக்கின்ருள் முன்னுளி லிட்டசப தப்படியே
பெருக்கமுடன் பற்குனர்க்குப் பெண்கொடுக்க நிச்சயித்தே
இருக்கின்ற நாளையிலே யிப்புவியின் மீதிலுள்ளோர்
பெருக்கமுள்ள குந்தியைந்து பேரும் மடிந்ததுவாய்
பேசினதோர் சங்கதியைப் பீமையொடு பாஞ்சால
தேசமன்னன் கேட்டே திகைத்துமே தன்குருவால்
பாண்டுமன்ன னீன்றெடுத்த பாண்டவரும் பாரினிலே
மாண்டிடவு மில்லையென்று வாகாக வேயறிந்து
பற்குனனும் வந்துமணம் பண்பாகச் செய்திடவே
விற்பனனு மேமகிழ்ந்து விண்ணவரு மேபுகழ
நல்லலட்சி யக்குறியை நன்ருகச் செய்துவைத்து
வல்லமைசேர் மன்னருக்கே வாகாய் லிகிதமது
நன்னயம தாயெழுதி நாடுகட்கே செல்லவிட்டான்
மன்னவரும் பாஞ்சால மாநகர்க்கே வந்தனர்காண்
வல்லமைசேர் வில்லை வளைப்பதுவும் நாளையென்று
சல்லாப மாகவுமே சாற்றியே யின்பமொடு
பாண்டவர்கள் தங்களிடம் பண்பாய் விடைவாங்கி
ஆண்டவருஞ் சென்ருரடவிலே யம்மானை

---

பாண்டவர், பாஞ்சால தேசத்திற்குச்
செல்லுதல்.

மாமறையோ ரோதியதோர் வாக்கியத்தைப் பாண்டவரும்
நேமமுட னேயறிந்தே நேர்மையொடு குந்திதனைக்

கூட்டியே கான்வழியாய்க் கொற்றவரு மேநடந்து
தாட்டீக மாகவுமே தான்வந்தா ரம்மானை
செங்கதிரோன் மேற்குத் திசையிலே போய்மறைந்தான்
சிங்காரப் பற்குனனுஞ் சிந்தைமிக வேமகிழ்ந்து
நன்னயமா யங்குளகோ ராங்குச்சி தன்னையெல்லாம்
மன்னவனு மேதிரட்டி வாகாகக் கட்டியுமே
கல்லோடு கல்லடித்தே காவலனு மக்கினியை
வல்லமையா யுண்டுபண்ணி வைத்துமே கத்தைதனை
எரிந்திடவே செய்தவனு மின்பமுட னேவழிகள்
தெரிந்துமே சென்றனனே தீரமுட னம்மானை
நாட்டுவழி தன்னைவிட்டு நன்மையுள்ள பாண்டவரும்
காட்டுவழி யைப்பிடித்தே காவலரு மேநடந்து
கங்கைநதி தன்னையுமே கண்டே விரைவாக
மங்களமாய்ப் பற்குனன்பின் வந்தார்க ளேவருமே
பெருக்க முடன்கதைகள் பேசி நெடுந்தூரம்
குறுக்குவழியாக கொற்றவரும் வந்தனர்காண்

---

பாண்டவரை சித்திராங்கதன்
நேசித்தல்

பொன்னுலகி லேவசிக்கும் புங்கவர்கள் தன்வகுப்பில்
நன்னயமாய்க் காந்தருவ ராஜன் குலத்துதித்த
செய்யசித்தி ராங்கதனுந் தேவிமார் தன்னுடனே
துய்யகங்கை நீராடிச் சுந்தரமா யங்கிருந்தார்
பாண்டவரும் வேலிதனைப் பண்பாகத் தாண்டியுமே
நீண்டவந்தப் பாதைவழி நிருபர் நடந்துவந்தார்
கங்கையிலே நீராடுங் கன்னியருங் கண்டிவரை
சங்கையுட னேதுகிலைத் தானெழுந்து மேபுனைந்தார்
வல்லசித்தி ராங்கதனும் வாகாக வேயெழுந்து

நல்ல கலைபுனைந்து நன்னயஞ்சேர் தேரேறி
வில்லை வளைத்தே விரைவாக வந்தவனும்
சல்லாப மாகவுமே தான்மறித்தே பாண்டவரை
கிட்டியுமே செப்பிடுவோன் கீர்த்தி மிகவுடையான்
கட்டிவைத்த வேலி கடந்தே விரைவாகச்
சட்டமுட னேநடந்து தானேக வுங்களுக்குக்
கட்டளையு மார்கொடுத்தார் காலனூர் சென்றிடவே
கொல்லுகிறே னென்றறைந்து கோபமிக வுண்டாகி
வில்லிற் சரந்தொடுத்து வேகமுட னேவிடுத்தான்
பற்குனனு மேசினந்து பாணம் வருவதெல்லாம்
விற்பனனு மப்பொழுது வேகமொடு கையிலுற்ற
அக்கினியின் கட்டையினு லார்ப்பரித்தே தட்டிவிட்டு
அக்கினியின் மந்திரத்தை யன்பாய்ப் புகன்றுகொள்ளிக்
கட்டைதனை விட்டுவிட்டான் காவலனும் வேகமொடு
சட்டமுட னேகிளம்பித் தக்கசித்தி ராங்கதரன்
விட்ட கணைகளையும் மேன்மையுள்ள தேரினையும்
கட்டிவைத்த நற்கொடியுங் காலாக் கினியெரித்து
வில்லை யொடித்தெறிந்து விட்டுமே பூமிசையே
வல்லசித்தி ராங்கதர மன்னனையுந் தள்ளியுமே
அக்கினியு மேதகிக்க அன்னவனு மூர்ச்சையுற்ருன்
அக்கணமே சென்றே யருச்சுனனு மேயிழுத்து
வந்துதர்மர் பாதமதில் வாகாக வேபோட்டான்
அந்தநல்ல வேளையிலே யன்னவனின் பத்தினிமார்
குந்தி மலரடியிற் கொம்பனைமா ரும்பணிந்து
சந்தோஷ மாகவுமே தையலே யிப்பொழுது
மங்கிலியப் பிச்சைதரு வாயெனவே தானழுதாள்
திங்கத் தருமரையே தோகைகுந்தி பார்த்தனளே
செய்ய தருமருமே சிந்தைமிக வேமகிழ்ந்து

துய்ய வருச்சுனனின் துங்கமுகத் தைப்பார்த்து
வல்லசித்தி ராங்கதனை வாகா யெழுந்திருக்கச்
செல்வனே செய்வையெனச் செப்பினு ரம்மானை
பற்குனனு மேமகிழ்ந்தோர் பாங்கான மந்திரத்தை
விற்பனனு முச்சரித்த வேளைசித்தி ராங்கதனும்
சிந்தைமிக வேகனிந்து செப்புவா னப்பொழுது
எந்தன் றனைஜெயிப்போ ரிப்புவியின் மீதினிலே
வல்ல விஜயனல்லால் மற்றெவரா லாகாதே
செல்வரே யுங்களிட செய்கைதனை நோக்கிடிலோ
பாண்டவர்போற் ருேன்றுதுகாண் பண்பாக எந்தனையே
வேண்டியுங்கள் வரலாற்றை மேன்மையொடு கூறுமென்முன்
துய்ய தருமருமே துங்கன் முகம்நோக்கி
செய்ய முடிதரித்த செய்திமுதற் பாஞ்சால
நன்னகரை நோக்கியுமே நாடியே வந்தவரை
மன்னவரு மேபுகன்ருர் வாகாக வேமகிழ்ந்து
வல்லசித்தி ராங்கதனும் வாகாக வேவணங்கி
நல்லவரே யெந்தனையிந் நாழிகையி லேஜெயித்த
அக்கினியின் மந்திரத்தை யன்பாக வெந்தனுக்கே
பக்குவமா யோதிவைக்கப் பண்ணுமென்று மேபுகன்ருன்
தக்க தருமருமே தம்பி வதனமதை
அக்கணமே பார்த்தா ருருச்சுனனு மேமகிழ்ந்து
வல்லசித்தி ராங்கதனை வாகா யருகழைத்து
நல்லவந்த மந்திரத்தை நன்மையுட னேதிவைத்தான்
மந்திரத்தைக் கற்றவனும் வாகாய்த் தருமரடி
வந்து பணிந்தே வழுத்துவா னம்மானை
குருதெட் சணைக்காகக் கொற்றவரே காந்தருவப்
புரவியிலே ஐநூறு புண்ணியரே யான்கொடுப்பேன்
அங்கீ கரித்திடுவீ ரன்புடனே யென்றறைந்தான்

துங்கன் றருமருமே சொல்லுவா ரம்மானை
நன்னகரைச் சேர்ந்தபின்பு நல்ல புரவிதனை
உன்னிதம தாய்க்கொடுப்பா யுத்தமனே யென்றுரைத்தார்
வல்லவனும் பாண்ட வரைப்பார்த்து மேநவில்வான்
செல்லுகின்ற பாஞ்சால தேசமது தூரவல்லோ
மன்னவரே வாகனங்கள் வாகாக வேதருவேன்
நன்னயம தாயேறி நாட்டமொடு சென்றிடுவீர்
வேந்தரே யென்று விளம்பின னப்பொழுது
சாந்த குணமுள்ள தருமருமே யேதுரைப்பார்
வல்லவனே யெங்களுக்கு வாகனமும் வேண்டாங்காண்
செல்வனே யென்றுமுன்னே செப்பின ரம்மானை
துய்யசித்தி ராங்கதனுஞ் சொல்லுவா னன்புடனே
செய்யமன்ன பாஞ்சால தேசம்வரை யுங்களொடு
வந்துவிட்டு மேவருவேன் வல்லவரே வாருமென்று
சந்தோஷ மாகவுமே தானுரைத்தே பாண்டவர்கள்
குந்தியொடு நல்ல குறுக்குவழி யாய்க்கூட்டி
வந்தனனே துய்ய வசிஷ்டர் சரித்திரத்தைச்
சொல்லி வெகுதூரம் துங்கமுட னேகடந்து
வல்லவனும் பாஞ்சால மாநகரத் தெல்லைவந்து
தருமர் முகம்பார்த்தே சாற்றுவா னன்புடனே
குருவாய்த் தவுமியரைக் கொள்ளுமென வேகூறி
பாங்கா யிருக்கும் பதிதனையே தானுரைத்து
நீங்கின னவரிடம் நேசன் விடைவாங்கி
செய்யசித்தி ராங்கதனுஞ் செப்பியே சென்றபடி
துய்ய தவுமியர்வாழ் துங்கநதி யேகிடவே
வேண்டு மெனமகிழ்ந்து மேன்மையுள்ள பாண்டுமைந்தர்
பாண்டவரு மேநடந்து பார வனங்கடந்து
உற்கயமென் கின்றநதி யோரந் தவுமியரை

விற்பனருங் கண்டுமெகிழ் வெய்தியே தான்பணிந்து
மன்னவரூர் பேரும் வரலாற்றை யேபுகன்று
நன்னயமா யெங்களுக்கே நாதா குருவாக
வேண்டு மெனவே விளம்பினு ரத்ததியே
பாண்டவரு மேபணிந்து பண்பாகக் கூறியதை
வல்லவருங் கேட்டு மனமிகவு மேமகிழ்ந்து
நல்லதெனச் சம்மதித்தார் நட்புடையோ ரம்மானை
தருமருமே குந்தியொடு தம்பிமா ரன்புடைய
குருவையுமே தான்மகிழ்ந்து கூட்டியே வேகமதாய்
காட்டுவழி தன்னையுமே காவலரு மேகடந்து
நாட்டுவழி யைப்பிடித்தே நன்மையுள்ள பாண்டவரும்
செங்கதிரோ னுங்கிழக்குத் திக்கி லுதிக்குமுன்னே
மங்களமாய்ப் பாஞ்சால மாநகரம் வந்தமர்ந்தார்

---

பாஞ்சாலன், திரௌபதியைச் சுயம்வர மண்டபத்திற்கு வரவழைத்தல்.

சிங்கா தனங்களிலே தேசமன்ன ரெல்லவரும்
மங்களமாய் வில்வளைக்க வந்தே யமர்ந்திருந்தார்
மாமறையோர் துண்டாய் வகுத்ததோ ராசனத்தில்
வாமமுட னன்னேரம் வந்துமே தானிருந்தார்
குந்திதனை யைவர் குயவன் மனையினிலே
சந்தோஷ மாகவைத்தே தான்வந் தமர்ந்திருந்தார்
வல்லபாஞ் சாலமன்னன் வாகாக வேயெழுந்து
நல்லபல சேடியரை நன்முக வேயழைத்து
சிங்கார மென்மகட்குச் செய்துமே சீக்கிரமாய்
இங்கழைத்து வந்திடுவீ ரென்றமொழி யைக்கேட்டு
சேடியரும் வேகமொடு சென்றே துரோபதைமுன்

ஓடிவந்து வேந்த னுரைத்ததுவை யேபுகன்று
மஞ்சள்நீ ராட்டி மயிர்கோதி யேமுடித்து
வஞ்சிக்கே யாபரணம் வாகாக வேபூட்டி
பட்டுத் துகிலுடுத்திப் பாங்காய் விழிகளுக்குச்
சட்டமாய் மைதீட்டிச் சல்லாப மாகவுமே
முத்துக் குடைபிடித்து மூன்னூறு சேடியர்கள்
சித்தமிக வேமகிழ்ந்து சிங்கார மண்டபத்தில்
வந்துபொற் பீட மதனிற் துரோபதையைக்
குந்தவைத்தே பக்கமதிற் கொம்பனைமார் நிற்றுகொண்டு
சிங்கா தனமீது சிந்தைமிக வேமகிழ்ந்து
தங்கி யிருக்கின்ற தார்வேந்தர் நாமமதை
கன்னிகைக்குச் சொல்லியுமே காட்டியே யின்பமொடு
இன்னாரின் னாரெனவே ஏந்திழைமார் வீற்றிருந்தார்

அருச்சுனன், வில் வளைத்தல்

வல்லதுஷ்டத் தூய்மனுமே வாகாக வேயெழுந்து
சல்லாப மாகவுமே தானுரைப்பா னம்மானை
வேந்தரே கேட்டருள்வீர் வீண்காலம் போக்காது
சாந்த குணமுடனே தானெழுந்து வில்வளைத்து
நாணியே றிட்டே நலமுடைய பாணமதால்
தோணுலட்சி யக்குறியை துங்கமொடு வீழ்த்திடுவீர்
என்றே யுரைத்தனனே இம்மொழியைக் கேட்டமன்னர்
நன்றெனவே சம்மதித்தன் னாழிகையி லேயெழுந்தார்
சிலபேர் தனுவருகே சென்றுபார்த் தேமீண்டார்
சிலபேர்கள் வில்லையசைத் திட்டேங்கி யேயிருந்தார்
சிலபேர்கள் வில்லையெடுத் திட்டுமே போட்டுவிட்டார்
சிலபேர் கருத்தழிந்து சென்றுமே வீற்றிருந்தார்
பலபேர்கள் பாதிவரை பாங்காக வேவளைத்தார்

பலபேர்முக் கால்வரிசை பண்பாக வேவளைத்தார்
சல்லியமா ராஜனுமே சட்டமுட னேயெழுந்து
வில்லை யெடுத்து விரைவுடனே பாதிவரை
நாணி தனைப்பூட்டி நம்மாலா காதெனவே
நாணித் தலைகவிழ்ந்து ராஜனுமே வீற்றிருந்தான்
வல்லசரா சந்தனுமே வாகாய்வில் லைநிறுத்தி
ஜல்தியிலே நாணியொருச் சாண்குறையப் பூட்டியப்பால்
முடியாமற் துங்க முகங்கருகி யேயிருந்தான்
நொடியிற் துரியனுமே நோக்கமுட னேயெழுந்து
வில்லைலே சாயெடுத்து மேன்மையுட னேவளைத்து
சல்லாபன் நான்குவிரற் ருன்குறைய வேபூட்டி
விட்டவுடன் வில்லுடனே வேந்தனு காயமதிற்
பொட்டெனவே தான்கிளம்பிப் பூமியிலே வீழ்ந்தவனும்
கைகாலு மேதேய்ந்து காவலவ னுந்திகைத்து
மெய்சோர்ந்து மேயெழுந்து வீற்றிருந்தா னம்மானை
வல்ல கருணனுமே வாகாக வந்துநின்று
வில்லைலே சாயெடுத்து வீரமுட னேவளைத்து
தாட்டீக மாய்நாணி தன்னை யொருகுதையிற்
பூட்டிமற் ருேர்குதையிற் போடமுடி யாதுநின்ருன்
வல்லோனும் வில்லை வளைத்தா னெனவேந்தர்
சொல்லி யிருந்தனர்காண் துங்கமுள்ள வில்நிமிர்ந்து
மன்னன் கிரீடமுமே மண்மீதி லேவிழுந்து
சின்னமிக வேயடைந்து சென்றே யமர்ந்திருந்தான்
அலையில்லாச் சிந்தனைப்போ லந்தச் சபையிலுள்ளோர்
தலைகவிழ்ந்து மேயிருந்தார் சட்டமுட னம்மானை
விப்பிரன்போ லேமாறு வேடமுற்ற பற்குனனும்
அப்பொழுதி லேயெழுந்து அன்புடனே யேதுரைப்பான்
வல்லதொரு க்ஷத்திரிய மன்னரே கேட்டருள்வீர்

சல்லாப மாகத் தனுவதனை யேயெடுத்து
எந்தவரு ணத்தாரு மின்பமுட னேமகிழ்ந்து
விந்தை யொடுவளைத்து மேன்மையுள்ள லட்சியத்தைக்
கொய்துமே பாணமதாற் கோதைதனை யேமணமுஞ்
செய்திடலா மாவெனவே செப்பினு னம்மானை
வல்லதுஷ்டத் தூய்மனுமே மாமறையோ ரோதினதை
சொல்லிக் கலந்துகொண்டு துங்கமுடன் தந்தையிடம்
வாமமுட னேயிலங்கு மாமறையோ ரைப்பார்த்து
நேமமுடன் வில்லதனை நேர்பனே நீர்வளைத்து
வல்லலட்சி யக்குறியை வாகாகப் பாணமதைச்
செல்வனே விட்டறுத்தே செங்கரத்தி னிற்பிடித்தால்
மெல்லிகையை மாமணமே மேன்மையொடு செய்திடலாஞ்
சல்லாப னேயெனவே சாற்றினு னம்மானை
சந்தோஷ மாகவுமே தானெழுந்து பற்குனனும்
விந்தையொடு வில்வளைத்தே மேன்மையுள்ள நாணிதனை
பூட்டியுமே வந்திருந்த பூவேந்தர் முன்னேசை
காட்டியுமே வேகமொடு காவலவ னம்பெடுத்து
சந்தானம் பண்ணியுமே தார்வேந்தன் காதளவு
விந்தையுட னேயிழுத்து மேன்மையுள்ள ஸ்தம்பமடி
வாரங் கடாரமதில் வைத்தமஞ்சள் நீரினிலந்
நேரங் குறிநிழலை நேர்மையுட னேபார்த்து
ஆகாயந் தன்னிலுமே யம்புதனை யேவிடுத்து
வாகாக வேயிலங்கு மச்சக் குறிதனையும்
சக்கரமும் வீழ்த்தித் தவரா திரண்டையுமே
பக்குவமாய்ச் செங்கரத்திற் பாங்காக வேபிடித்தான்
மங்கை துரோபதையும் வாகான சேடியொடு
துங்கமுட னேநடந்து தோகைமயில் போலவுமே
மங்களமாய் வாத்தியங்கள் வாகாக வேமுழங்கச்

சிங்கார மாகவந்து தேன்மொழியா ளப்பொழுது
பற்குனனின் றன்கழுத்திற் பாவைமண மாலையிட்டாள்
விற்பனருங் கண்டே மிகமகிழ்ந்தா ரம்மானை
நல்ல விஜயனுமந் நாழிகையி லேமகிழ்ந்து
வல்லதுஷ்டத் தூய்மன் மதிமுகத்தைப் பார்த்துரைப்பான்
நல்லலட்சி யக்குறியை நன்ருய்க்கொய் தேபிடித்தேன்
செல்வனே யென்றறைந்து செந்திருப்போற் பக்கமுற்ற
மங்கை துரோபதையை வாகாகக் கைப்பிடித்து
திங்கள் வதனமுள்ள தேர்வேந்தர் பார்த்திருக்க
மன்னவனும் பற்குனனும் மாதரசை யேகூட்டி
கன்னிகுந்தி தேவிதனைக் காணவரும் போதினிலே

### துரியோதனன் கலகப்போர் விளைத்தல்

வல்லதுரி யோதனனும் வாகாக வேயெழுந்து
சொல்லிடுவான் மன்னவருஞ் சூழ்ந்த சபைநடுவே
வேந்தரே விப்பிரனும் வில்லதனை மந்திரத்தால்
ஏந்தியே தான்வளைத்தே இந்தலட்ச யக்குறியை
அடித்தாற் துருபதனு மாரணங்கை யந்தணர்க்குக்
கொடுத்தான் நமது குலத்துக்கே யீனமல்லோ
மாமறையோன் றன்னுடனே வாகாகப் பூசலிட்டே
தாமதஞ்செய் யாது க்ஷணத்திலே வெற்றிபெற்றே
வாமமுள்ள பெண்ணரசை மன்னவரில் யாரேனும்
நேமமுட னேமணப்போம் நேசரே பாஞ்சால
மன்னவனுஞ் சேனையொடு வந்தெதிர்த்தா லுஞ்சரிதான்
கன்னிதனை விட்டாலே காசினியின் மீதுவசை
சொல்லுவார் நம்மையென்று சொன்னன் மிகச்சினந்து
நல்லதெனச் சம்மதித்தந் நாழிகையில் வேந்தருமே
ஒன்றுகூடித் திரண்டே யுன்னிதமாய்ப் பற்குனன்முன்

சென்றுசினந் தேபூசல் செய்திடவு மெத்தனித்தார்
பற்குனனும் பாவைதன்னைப் பாங்காய்த் தருமரிடம்
விற்பனனு மேவிடுத்து மேன்மையுள்ள வில்லதனை
வளைத்துமே பாணமதை மன்னவரின் மேல்விடுத்துத்
துளைத்தானே மார்பதனைச் சோகமொடு கீழ்விழுந்தார்
கண்டு கருணன் கடுகிச் சினமிகவே
கொண்டு தனுவளைத்துக் கோடிகணை யேவிவிட்டான்
பற்குனனு மேசிலகூற் பாணமதை யேவிடுத்து
விற்பனனு மேயருத்து விட்டே யொருபகழி
சந்தானம் பண்ணியுமே தார்வேந் தனுமேவி
விந்தையுட னேவிடுத்தான் வேகமுட னேகிளம்பி
வந்தே கருணனிட மார்பினிலே பட்டுருவ
சிந்தை கலங்கியுமே தேர்வேந்தன் மூர்ச்சையுற்றான்
சல்லியனுங் கண்டு தனுவளைத்தே வந்தெதிர்த்தான்
வல்லமத வீமனிந்த வாறறிந்து மேயெழுந்து
சுயம்வரத்தின் பந்தலிலே தோன்றினதோர் ஸ்தம்பமதை
நயமெனவே தான்பிடுங்கி நாட்டமொடு வந்தெதிர்த்து
சல்லியனும் விட்டகணை தன்னையெல்லா மேநொறுக்கி
வல்லபமாய் மார்பினிலே வந்துவொரு குத்துவைத்தான்
மயங்கியே சல்லியனும் மண்மீதி லேவிழுந்து
தயங்கியே மூர்ச்சையுற்றான் சட்டமுட னேகருணன்
சல்லாப மாயெழுந்து தாமதங்கள் செய்யாது
வில்லை வளைத்து வெகுசரத்தை யேவிடுத்தான்
பற்குனனு மேசினந்து பாணமதைத் தூண்டிவிட்டு
விற்பனனு மேயருத்து விட்டே யொருகணையை
வில்லிலே பூட்டியுமே விட்டா னதுகிளம்பி
வல்லு கருணனிட மார்பிலே பட்டவுடன்
மெய்நடுங்கிச் சோகமொடு வீரமற்று மண்மீது

கைநடுங்கி யேவிழுந்தான் காவலவ னம்மானை
சல்லியனுங் கொக்கரித்தே தானெழுந்து வீமனையே
வல்லமை யாக்குத்தி மடிக்கவெண்ணி யேபாய்ந்தான்
பாரமத வீமனுமே பாங்கா யவன்றனையே
தீரமுடனே பிடித்தே செங்கரத்தி னுற்சுழற்றி
வேகமொடு பூமியிலே விட்டெரிந்தா னப்பொழுது
சோகமுட னேவிழுந்து தோள்முறிந்து மேகலங்கி
வல்லமை சேர்சல்லியனும் வாகான கர்ணனுமே
சொல்லாம லோடினரே துங்கன் துரியனுமே
கண்டுமே நாணமொடு காசினிமீ தேச்செனவே
வண்டனுமே யோடுகின்ற மன்னரையே கையமர்த்தி
வல்லமையாய்ப் பூசுரனை மாய்த்திடவே வேண்டுமென்று
செல்வருமே யோசனைகள் செய்திருந்தா ரம்மானை
பச்சைமா லச்சுதனும் பாப்பானைப் போலவுமே
உச்சிதமாய் வேடமிட்டே யுத்தமனும் வேகமொடு
வந்து துரியனிடம் வாகாக வேயுரைப்பார்
சிந்தைமிக நொந்திருக்குந் தேர்வேந்தே நீகேளாய்
வல்ல கருணனொடு வாதாடி நின்றவனும்
சல்லியனுர் தன்னுடனே சண்டைமிகச் செய்தவனும்
அருச்சுனனும் வீமனுமா மன்புடனே பேசுகிறுர்
விரித்துரைத்தே னித்தை விளம்பா தெவர்களுக்கும்
செல்லுவீரென்றுரேதிச் சென்றுரே யந்தணரும்
வல்ல துரியனுமே மற்றுரே ரிடமுரைப்பான்
மாண்டார்கள் செவ்வரக்கு மாளிகையி லெந்தவிதம்
மீண்டார்க ளந்த விபர மதனையுமே
நன்று யறிந்திடுவோம் ராஜர்களே வாருமென்று
சென்றுர் குருநாடு தேர்வேந்த ரம்மானை

பாண்டவர்கள் குந்திதேவியைக்
காணல்

தம்பியண்ண மாருடனே சட்டமாய்ப் பற்குனனும்
கொம்பனையைக் கூட்டிக் குயவன் மனையிலுற்ற
குந்தியம்மாள் பாதமதிற் கோமா னருச்சுனனும்
வந்து பணிந்தே வழுத்துவா னம்மானை
அன்னையே நன்னயமா யன்புடனே யோர்கனியை
மன்னவருங் கொண்டு வந்தோம் வாகாக வென்றறைந்தார்
மைந்தன் முகம்நோக்கி வண்மையுள்ள குந்தியுமே
ஐந்துபே ரும்புசிப்பீ ரன்புடனே யென்றறைந்து
ஓடி வெளியினிலே யுத்தமியைத் தான்பார்த்து
வாடி மதிமயங்கி வாய்குளறி யேதிகைத்து
ஐவருமே யெந்தவித மாகவோர் கன்னிகையை
செய்வார் மணமெனவே சிந்தைநொந்து மேயிருந்தாள்
அன்னை முகம்நோக்கி யன்பாய்த் தருமருமே
நன்ன யமதாக நவிலுவா ரம்மானை
ததியே மயங்குவதேன் தாயாரே கேளாய்நீ
விதியின் பயனும் விளம்பிடவே நேர்ந்ததம்மா
ஏதா கிலுமே யிதற்குவோர் காரணமும்
மாதாவே தானிருக்கும் வாடாதே யென்றறைந்தார்
வாமமிக வேமிகுந்த மாது துரோபதையாள்
மாமி மலர்ப்பாத மதில்வணங்கி நின்றனளே
வந்து பணிந்த மருமகளை யேவாழ்த்தி
சந்தோஷ மாகவுமே தானிருந்தா ளம்மானை

பாஞ்சாலன் பாண்டவரை
வரவழைத்தல்.

வல்லபாஞ் சால்மன்னன் மைந்தன் றனையழைத்து
வில்வளைத்தோன் பற்குனனு மென்றே வதந்தியுமே

உண்டாகு கின்றதினு லுண்மைதனைத் தெரிந்து
கொண்டுவரு வாயெனவே கூறினு னம்மானை
தக்கதுஷ்டத் தூய்மனுமே சன்யாசி போலுருவைப்
பக்குவமாய்ப் பூண்டுகொண்டு பாண்டவரு மேயிருக்கும்
குயவன் மனைநாடிக் குந்தியுட னவரையும்
நயமுடனே தானறிந்து ராஜனிடங் கூறவென்று
வீரமுட னேநடந்து வேந்தனிட மோடிவந்து
தீரமுட னேபணிந்து செப்புவா னம்மானை
விந்தையுட னேமாறு வேடமதைப் பூண்டுகொண்டு
சிந்தை மகிழ்வுடனே சென்றே யவர்வசிக்கும்
இல்லமதி லேதுணிவா யேகியுமே யன்னவர்கள்
வல்லமையுஞ் செய்கையையும் வாகாக வேயறிந்தால்
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவர்க ளல்லாது பாப்பாரென் றெண்ணுதீர்
வேந்தனே யின்னும் விஜாரிப்பீ ரென்றறைந்து
சாந்தகுண முடையோன் தானிருந்தா னம்மானை
சிந்தை களிகூர்ந்து செய்யபாஞ் சாலமன்னன்
மந்திரிகள் தங்களையே வாகாக வேவிடுத்து
பஞ்சவர்க ளென்றறிந்து பார்வேந்தன் சிந்தையுள்ள
சஞ்சலமும் நீங்கிவெகு சல்லாப மாகவுமே
மந்திரிமார் தங்களையும் வல்லதுஷ்டத் தூய்மனையும்
விந்தையுட னேயழைத்தவ் வேளைதனி லேபுகல்வான்
வேகமுடன் தேர்குதிரை வேழஞ் சிவிகைபல
வாகனமுங் கத்திதடி வாள்வேல் கதையுடனே
அந்த முடையபல வாபரணம் வஸ்திரமும்
சிந்தைமிக வேமகிழ்ந்து சேகரித்தே சேனையொடு
சென்றுமே பாண்டவர்க்குச் சீதனம தாய்க்கொடுத்து
இன்ற ழைத்துவாரு மெனவே யுரைத்தனனே

வல்லவரும் நல்லதென வாகாக வேநடந்து
செல்வரினைக் கண்டுபல சீதனங்களைக் கொடுத்து
குந்தியுட னைவரையுங் கோதை துரோபதையுஞ்
சந்தோஷ மாகவுமே தானழைத்து வந்தனரே
நன்னயஞ்சேர் பாஞ்சால ராஜனெதிர் கொண்டுகண்டு
மன்னரினைக் கூட்டிவந்து வாகாய்ப் பொற்பீடமதில்
சிந்தைமகிழ் வாயிருக்கச் செய்துமே பாஞ்சாலன்
விந்தை யுடனே விளம்புவா னம்மானை
பாண்டவரே யென்மீது பட்சமிக வுண்டாகி
பூண்டிருக்கும் வேடமதைப் புண்ணியரே நீக்கியுமே
சுயரூபத்தை யெடுத்துச் சுந்தரரே காட்டுமென்றே
நயமாக வேயுரைத்தான் நல்லதென வேமகிழ்ந்து
வேதமுனி சொல்லிவைத்த மேன்மையுள்ள மந்திரத்தை
ஓதிச் சுயரூப முத்தமரு மேயெடுத்தார்
கண்டு பாஞ்சாலன் கவலைவிடுத் தேமகிழ்வு
கொண்டு தருமரின்முன் கூறுவா னம்மானை
பற்குனருக் கின்பமொடு பாவை துரோபதையை
விற்பனரே மாமணமே விண்ணவருங் கொண்டாட
செய்ய விடைதருவீர் தேர்வேந்தே யென்றுரைக்கத்
துய்ய தருமருமே சொல்லுவா ரம்மானை
வல்லவனே தங்கள் மகளையே நாங்களைவர்
சல்லாப மாகமணந் தான்செய் திடத்தெய்வ
காரணத்தா லெங்களன்னை கற்பரசி வாக்கினிலே
சாரமோ டுண்டாகியதை தள்ளிநடக் கோமெனவே
வல்லபாஞ் சாலமன்னன் வாக்கியத்தை யேகேட்டு
தொல்லுலகி லுள்ளமன்னர் சொல்வார் வசையெனவே
எண்ணி யிதற்கினிமே லென்னசெய்வோ மென்றுமனங்
குண்ணியுமே தானிருந்தான் கொற்றவனு மம்மானை

## வியாசர் பாஞ்சாலனுக்குதிரௌபதி பூர்வஜனன வரலாறுரைத்தல்

செய்ய வியாசமுனி சிந்தைமிக வேமகிழ்ந்து
துய்ய பாஞ்சால துருபதன்முன் பாகவந்தார்
கண்டு பிரியமொடு காவலவ னப்பொழுது
தெண்டனிட்டான் மாதவருஞ் செப்புவா ரம்மானை
மனமிகவு மேசலித்த மன்னு துரோபதைமுன்
ஜெனனவர லாறுதனைச் செப்புவேன் கேட்டிடுவாய்
வல்லநள ராஜன் மகளாக வேஜெனித்து
தொல்லுலகின் மீதிலந்தத் தோகை நளாயினியாள்
என்றபெயர் பூண்டுகொண்டு யின்பமுட னேயிருந்தாள்
நன்றி யுள்ளோனுன நளராஜன் முன்புசென்று
வல்ல மவுத்கலிய மாமுனிவ ரன்புடைய
செல்விதனை மாமணமே செய்து வனந்தனிலே
விற்பனருங் கூட்டிவந்து மெல்லிகையாள் தன்னுடைய
கற்பரிய வென்று கருத்தினிலே தானினைந்து
பெருநோய்கள் கொண்டுவுடம் பெங்குங் குளுகுளுத்து
துருநாற்ற மாய்ச்சீழ் சொரியப் புழுக்களுமே
மொய்த்திருக்கச் செய்திருந்தார் மொய்குழலாள் கண்டவர்க்கு
கைத்தா மரையாலே கன்னிகையு மேகழுவி
சிந்தைகோ ணுமலுமே செய்து பணிவிடைகள்
அந்தமுட னேயிருந்தா ளம்முனிவ னேதுரைப்பான்
கன்னிகையே யுன்னைக் கலியாணஞ் செய்தமுதல்
இன்னேய்கள் கொண்டுவுடம் பெல்லாங் குறைவாகி
இருக்கவே நேர்ந்ததடி ஏந்திழையே தீர்த்தமெல்லாம்
பெருக்கமுட னாடிவரப் பெண்ணே முடியாது
போனதுவே யென்னசெய்வேன் பொற்கொடியே யென்றுரைந்தார்
வானவரெல் லாம்புகழும் மாதரசி மாமுனியை

கூடையிலே தானெடுத்துக் கொண்டு நதிதோறும்
பேடைமயில் போல்நடந்து பெண்ணரசி சென்றுதினம்
நீராட்டி மாமுனியை நேசமுட னென்னாளும்
பாராட்டி யந்தப் பதிவிரதை தானிருந்தாள்
மாமுனிவ ரோர்நாளில் மாதிடமே தானுரைப்பார்
வாமமுள்ள விந்நகர்க்கு மத்தியிற்கீழ் வீதியிலே
கொம்பனை யாள்வேசி குலத்துதித்த பெண்ணொருத்தி
ரம்பைதனைப் போலிலங்கு நங்கையவள் மீதினிலே
மோகமிகக் கொண்டேனே மொய்குழலே யெந்தனொடு
போகம் புரிந்திடவே பொற்கொடியே செய்யுமென்றார்
நல்லதென மாதரசி நாயகற்கு மேயுரைத்து
மெல்லி தினமுமவள் வீட்டில் விடியுமுன்னே
சீலமுடன் சென்றுசென்று தேன்மொழியாள் கூட்டியுமே
கோலமிட்டு மேவருவாள் கொம்பனையா ளன்புடனே
ஒருநாளிற் தாசியிந்த வுத்தமியைக் கண்டுரைப்பாள்
தெருவாசல் தன்னிலுமே சீலமொடு கோலமிடுங்
காரணத்தை யெந்தனுக்கே கண்மணியே சொல்லுமென்றாள்
வாரணிந்த பூண்முலையாள் மாமுனிவர் தேவியுமே
தாசிதனைப் பார்த்துரைப்பாள் தையலே யென்பதியும்
நேசி யுனைமருவ நெஞ்சிலெண்ணி யேநவின்றார்
மின்னலிடை யன்னநடை மின்னரசே யுன்றனக்கே
பொன்கொடுக்க வேறுவழி பொற்கொடியில் லாமையினால்
இந்த விதஞ்செய்தே னென்றுரைத்தா ளம்மானை
சந்தோஷங் கொண்டுவந்தத் தாசியுமே யேதுரைப்பாள்
கன்னிகையே யுந்தன் கணவனையே யிங்குகொண்டு
நன்னயமாய் வந்திடுவாய் நங்கையே யென்றறைந்தாள்
மாமுனிவர் தன்னையுமே வாகாயோர் கூடையிலே
நேமமுடன் வைத்தெடுத்தே நேரிழையாள் கொண்டுவந்து

விட்டு மகிழ்வாய் வெளியிலே வீற்றிருந்தாள்
கட்டழகு வேசிதனை காமனைப்போல் ரூபமொடு
மருவி விளையாடி மாமுனிவர் முன்போல
உருவ மதையெடுத்து உத்தமியைத் தானழைத்தார்
கொம்பனையாள் வந்துமுன்போற் கூடையிலே தானெடுத்து
அம்புவிழி யாளிரவி லந்தமொடு வந்தனளே
மாண்டவிய மாமுனியும் மன்னவனி னுக்கினையால்
நீண்ட கழுவினிலே நேர்மையுட னிட்டிருந்தார்
மாதரசி கொண்டு வரும்போது மாண்டவியர்
பாதமதிற் கூடையுமே பட்டுமிக வேமயங்கி
வஞ்சியுன் மாங்கிலிய மானதறு வாய்விடிந்து
வஞ்சகியே செல்லுமென மாமுனிவர் சாபமிட்டார்
மெல்லி யறிந்து விடியா திருக்கவென்று
சொல்லியே சென்றனளே தோகையுமே யம்மானை
துடியிடையாள் சாபமதாற் றொல்லுல கெல்லாம்பொழுது
விடியா திருந்தனவே விண்ணவருந் தானறிந்து
மாண்டவிய மாமுனிமுன் வந்துமிக வேபணிந்து
மேண்டினார் விணனோர் விடியும் படியாக
மாமுனிவர் தானுரைப்பார் வானவரே கற்புடைய
நேமமுள்ள கன்னிகையால் நேர்ந்ததங்கு செல்லுமென்றார்
புங்கவரும் வேகமொடு பூவைதனைச் சென்றுகண்டு
சிங்காரி யேவிடியச் செய்யுமென்று ரம்மானை
விடிந்தாலே யன்புடைய விண்ணவரே யென்பதியும்
மடிந்திடுவா ரிச்சாபம் மாண்டவிய ரிட்டதென்றாள்
மெல்லிகையைக் கூட்டியுமே விண்ணவரு மோடிவந்து
வல்லமைசேர் மாண்டவிய மாமுனியை யேவணங்கி
தையலினுக் கிட்டதொரு சாபமதை மாற்றுமென்றார்
வையம் புகழுகின்ற மாண்டவிய ரப்பொழுது

சந்தோஷ மாய்பிரதி சாபமதையே கொடுத்தார்
சுந்தரியு மேவிடியச் சொன்னாள் விடிந்தனவே
வல்ல மவுத்கலிய மாமுனிவர் துங்கமிகு
மெல்லியின்றன் கற்பினுக்கே மெச்சியே தானுரைப்பார்
கன்னிகையே வுன்னுடைய கற்பைப் பரீட்சைசெய்தேன்
மின்னரசே நன்னயமாய் வேண்டுவரங் கேளுமென்றார்
மாமுனியைத் தான்வணங்கி மாதரசி யேதுரைப்பாள்
வாமனே யைந்துருவ மாகவுமே யென்னுடனே
மருவி யிருந்து மறுஜெனனந் தன்னிலுமே
பரிவா யெனைமணமே பண்பாக வேபுரிந்து
சம்போகஞ் செய்திடுவீர் சாமியே யென்றறைந்தாள்
கொம்பனையா ளன்புடனே கூறினதைக் கேட்டவரும்
நங்கையே பின்னால் நடக்குமென வேபுகன்று
துங்கமுனி மாதைச் சுகித்துவெகு நாளிருந்து
வல்லோர் சுவர்க்க மடைந்தா ரனுமரணஞ்
செல்வியுமே செய்துகொண்டு சேர்ந்தாள் பதியுடனே
செல்வனே பின்பிந்திர சேனை யென்றுபெயர்
மெல்லிகையு மேபுனைந்து மேன்மைமிக வேயடைந்து
தன்புருஷ னாகியமா சற்குணவா னம்முனியோ
டின்ப மனுபவிக்க வெண்ணியே சேர்ந்தவளும்
நந்த வனத்தினிலும் ஞாயிருல கத்தினிலுஞ்
சந்த்ரனுல கத்தினிலுந் தையலுமே வேண்டுபல
போகஸ்தா னங்களிலும் பூவை முனியுரைபோல்
தாகமொடு மேருவரை தன்னிலுமே மாதரசி
எந்தெந்த வேளையினி லெவ்வுருவம் வேண்டினதோ
அந்தந்த வேளையினி லவ்வுருவைத் தானெடுத்து
மோக முடனே முனிவருட னேகூடிப்
போக மதைமாது புரிந்தாள் வெகுகாலம்

மாமுனிவ ரோர்நாள் மனையாளைப் பார்த்துரைப்பார்
வாமமுள்ள பெண்ணே வனமதிலே யானேகி
அருந்தவங்கள் செய்தே யரன்பாதஞ் சேர்ந்திடவே
திருவழகி யேநினைத்தேன் சிந்தைமிக வேமகிழ்ந்து
தருவாய் விடையெனவே சாற்றிடவு மேகேட்டு
கருகி மனமுடைந்து காமுனிவ ரைத்தடுத்தாள்
மாமுனிவோ ரும்வெகுண்டு மானிலத்தில் நீபிறந்து
வாமமுள வைவரை மணரு வாயெனவே
சாபங் கொடுத்தே தவஞ்செய்யச் சென்றனரே
சோபமுடன் கானகத்திற் றோகையுமே சென்று நின்று
வாமமுட னேதவசு மாதரசி செய்திருந்தாள்
சோமனொடு கங்கைதனைச் சூடினதோர் சங்கரனும்
கன்னிகையின் முன்னே களிப்பாக வந்துனக்கே
என்னவரம் வேண்டுமென யின்பமுட னேகேட்க
காலன் றனையுதைத்த கங்கா தராிடமே
சீலமுடன் மாதுபதிந் தேகியென வைந்துதரம்
சட்டமுடனே கேட்கச் சங்கரரு முள்மகிழ்ந்து
கட்டழகி யாளேநீ காசினியி லேபிறந்து
தேவரா ஜன்மகிமை சேர்ந்த பலமுடைய
காவலர்க ளைவரையே கல்யாணஞ் செய்துவிண்ணின்
தேவர்க் கனுகூலஞ் செய்திடுவா யென்றறைந்தார்
பாவையர னார்முன் பாகவுமே யேதுரைப்பார்
நாதனே யென்றனக்கோர் நாயகனை யேகேட்ட
நீதனே யைவரையே நேமித்த தென்னவென்றுள்
பாவையென் முன்னே ப்திந்தேகி யென்றுவெழிற்
பூவைநீ யைந்துதரம் பொற்கொடியே கூறியதால்
அப்படி யுண்டாக வனுக்கிரகஞ் செய்தோம்நீ
இப்பொழுது முன்னே யிருக்கின்ற கங்கையிலே

சென்றுமே மூழ்கியெழுந் தேயெதிரிற் கண்டவரை
இன்றழைத்து வந்திடுவா யென்று ரரிவையுமே
கங்கைநதி யிற்தோய்ந்து காணும லேசிவனை
மங்கைமிக வேதயங்கி வாடி யழுதிருந்தாள்
கங்கையிலே மாதரசி கண்ணீர் விழுந்திடவே
செங்கமலப் பூவாய் சிறப்பாகப் பூத்திருக்கும்
இந்திரனுந் தேவருமே யேகிப் பிரமனிடம்
விந்தை யுடனே விளம்புவா ரம்மானை
மானிலத்தி லுள்ள மனிதருமே துங்கமிகு
வானிலத்தி லேவசிக்கும் வானவர்கள் தங்களையே
மதியாது சாஷ்தி வயதுடையோ ராகவுமே
விதியே யிருப்பதினல் மிக்கபய முண்டாகி
வந்தோம் சமுகமதில் வள்ளலே யென்றறைந்தார்
சிந்தைமிகவே மகிழ்ந்து செப்புவார் வேதனுமே
அஞ்சிடவே வேண்டா மமரரே யிப்பொழுது
சஞ்சலமில் லாதுநைமி சாரணியந் தன்னிலுமே
வானவரோர் யாக மதுமுடிக்கின் றூரதற்குத்
தானியமன் சென்றுவங்கு சாமித் திரந்தனிலே
இருக்கின்று னனதினு லிப்போ மனிதருமே
பெருக்கமுற்றுர் யாகமுடிப் பித்தவுட னேயேமன்
தேகமுங்கள் சக்தியொடு சென்று புவியிற்பிறந்து
சோகமதை நீக்கிடுவான் துங்கரே செல்லுமென்றுர்
இந்திரனுந் தேவருமே ஏக்கமதை யேவிடுத்து
வந்துகங்கை பொற்ரு மரைமலரைப் பார்த்தனரே
வாசவனு மங்கழுத மங்கைமுன்னே சென்றுநின்று
பேசுவா யுன்வரலாற் பேதையே யென்றறைந்தான்
என்பிறகே வந்தாலே எல்லா மறிந்திடுவாய்
அன்புடனே வாவென் றழைத்துவந்தா ளம்மானை

அங்கோர் மலைமீதி லாதித்தன் போல்விளங்கிச்
சிங்கார வோர்புருடன் தேவியொடு பாச்சிகையை
வைத்து விளையாடி மகிழ்வாக வேயிருந்தார்
சித்தமிக வேவெகுண்டு தேவேந் திரன்பார்த்து
நம்மைமதி யாதிவனிந் நாடியிருந் தானெனவே
செம்மையுட னேபார்த்துச் செப்புவா னம்மானை
ஆரடா வென்னை யவதித்தா யென்வீரம்
பாரடா வென்றே பகர்ந்தான் பரம்பொருளும்
இந்திரனே நீயுமினி யிவ்வாற் செருக்கடைந்து
விந்தையொடு பேசாதே மேன்மையுள்ள விம்மலையை
பிரட்டா புரட்டுன் பெருமைதனைக் காட்டுகிறேன்
அரட்டாதே யென்று வரனுரு மேயுரைத்தார்
குன்றுதனை யிந்திரனுங் கோபமுடனே பிரட்டி
நின்று பிலமதனை நேர்மையுட னேபார்த்து
விந்தையுட னங்கிருந்த மேன்மையுள்ள வோர்நான்கு
இந்திரரைக் கண்டுமன தேங்கி முறுக்கழித்து
ஈசனுமை யாளிவர்க ளென்றே மனதிலெண்ணி
வாசவனு மேபணிந்தான் வள்ளலுமே தான்புகல்வார்
வானிறைவா வென்னை மதத்தா லவமதித்தாய்
மானிலத்தின் மீதினிலே வாகா யிவர்களொடு
ஜெனித்தே யிவளைமணஞ் செய்குவீ ரைவருமே
இனித்தா மதம்வேண்டா மென்றார் பரம்பொருளும்
பிலத்திருந்த விந்திரரும் பெம்மானிட முரைப்பார்
நலத்துடைய வாய்வு நமனிந் திரனுடனே
அசுவனிமா தேவருமே யம்புவியின் மீதினிலே
பசுபதியே சென்றுகளிப் பாக மனிதரிட
யோனியடை யும்போது யூகி யவருடனே
தானடைகு வோமெனவே சாற்றினா ரப்பொழுது

வாசவனு மேவணங்கி வாகாக வேயுரைப்பான்
ஈசனே யன்புடனே யெந்தனம்சத் தாலுமொரு
புருஷனையிவ் வைவரிலே பூவி லொருவரென
தருகிறே னென்றனனே சங்கரனுஞ் சம்மதித்து
சம்பத்து லட்சுமியைத் தானழைத்திவ் வைவருக்கு
செம்பவள மெய்யுடையாள் செய்யவிந்த்ர சேனையொடு
சென்றுகலந் தேபிறந்து தேவியா வாயெனவே
நன்றெனவே சம்மதித்தந் நாழிகையில் நாரணரை
கண்டு நடந்தவற்றைக் கன்னியறைந் தாள்மகிழ்வு
கொண்டு யிதன்படியே கோதை ஜெனிப்பாயெனவே
சந்ததமு மன்புடனே தம்மிடத்தி லேயிருந்த
அந்தநரா னென்பவரை ஐவரிலோர் பேராக
கட்டளையு மிட்டனரே காசினிமீ தேபிறந்தார்
ச்ட்ட முடனே தமதுமெய்யி லேவெளுத்த
கேசங் கருப்புநிறக் கேச மிரண்டையுமே
நேசமுடனே யெடுத்து நேர்பரும்பூ மீதுவிட்டார்
வசுதேவ ராஜன் மனைவி யிருபேரில்
சசிவதனி ரோகணியாள் தன்வயிற்றில் வெள்ளையொன்றும்
தேவகியாள் தன்வயிற்றிற் செய்யகருப்பு வொன்றும்
தேவர்க் கனுகூலஞ் செய்திடவே வேண்டுமென்று
சென்றுமகிழ் வாய்ப்பிரவே சித்தே பலராமன்
குன்றுத செல்வமுள்ள கோபால னும்பிறந்தார்
இந்திரரும் வாய்வு இயமன் முதலானோர்
விந்தையுள்ள ஸ்ரூபமதில் மேன்மையுட னேகலந்து
பஞ்சவர்க ளாகவுமே பாரதனி லேபிறந்தார்
வஞ்சியிந்த்ர சேனையொடு மாலட்சுமி யினம்சம்
சீலமுட னேகலந்து செய்ய துரோபதையாய்
ஞாலமதில் யாகுண்ட நற்றீயி லேஜெனித்தாள்

இந்திரனி னம்சைபெற்றோ னின்ப னருச்சுனன்காண்
அந்தநர னென்பவரி னம்சங் கலந்தனவே
வல்லமைசேர் பாஞ்சால மன்னவனே ஞானவிழி
உல்லாச மாகவுமே யுந்தனிடத்திற் கொடுத்தேன்
பஞ்சவர்க ளைவரையும் பாவை துரோபதையைச்
சஞ்சலமில் லாமலுமே தான்பாரு மென்றறைந்தார்
மன்னவனும் பார்த்து மனதின் கிலேசமதை
நன்னயமாய் விட்டுமுனி நாதனடியைப் பணிந்தான்
செய்ய வியாசருமே சிந்தைமகிழ்ந் தேயுரைப்பார்
நையாது மன்னுமிந் நாழிகையில் மாதரசை
பாண்டவர்க்கு மாமணமே பண்ணுவீ ரென்றறைந்து
நீண்டசடை வேதமுனி நேர்மையுட னேயெழுந்து
மங்களமா யங்கிருந்த மன்னவர்கள் தங்களிடம்
துங்கன் விடைவாங்கித் தூய்மையொடு சென்றனரே

பாண்டவர் திரௌபதியைத்
திருமணம் புரிதல்.

வல்லபாஞ் சாலமன்னன் வாகான பாண்டவர்க்கு
செல்விதனை மாமணமே செய்திடவு மேநினைந்து
பட்டணத்தைச் சிங்காரம் பண்ணியே தோரணங்கள்
கட்டியே நாற்றிசையுங் காவலவ னன்புடனே
காதவரை தூரமுமே கல்யாணப் பந்தலிட்டு
கோதில்லா வாழைக் குலையோடு நாட்டிவைத்து
சித்திரங்கள் தானெழுதிச் சிங்காரஞ் செய்தனரே
இத்தலத்தோர் கொண்டாட வேந்தல் மனமகிழ்ந்து
தோழியரைத் தானழைத்துத் துங்கத் துரோபதைக்கிந்
நாழிகையில் நீராட்டி நன்று யலங்கரித்து
கூட்டியிங்கு வாருமென்று கொற்றவனு மேயுரைத்தான்

தாட்டீகமாகவுமே தையலருஞ் சென்றனரே
கங்கைநீ ராடிக் களிப்பாய்த் தருமருமே
சிங்காரஞ் செய்துகொண்டு தேர்வேந்த னன்புடனே
பந்தலிலே வந்தமர்ந்தார் பாவையரு மோடிவந்து
தந்தைமொழிந் ததுவைச் சாற்றித் துரோபதைக்கி
காசினியி லுண்டான கங்கைநதி முதலாய்
மாசில்லாத் தீர்த்த மதைக்கொணர்ந்து மேசொரிந்து
ஈரந் துவட்டி யிழைசேர்ந்த பட்டுடுத்தி
சீரிலங்கு நெற்றியிலே சிந்தூரப் பொட்டுமிட்டு
வாரிக் குழல்முடித்து மைவிழிக்கி மைதீட்டி
காரிழைக்கி நல்ல கனகா பரணமெல்லாம்
பூட்டி யலங்கரித்துப் பூவைதனைச் சேடியர்கள்
கூட்டிவந்தா ரன்புடனே கொற்றவர்கள் வாழ்சபைக்கி
வல்ல தவுமியரும் வாகாக வோமமது
நல்ல சுபமான நாழிகையிற் செய்துவைத்து
தருமரிட கையாலே தையல் துரோபதைக்கி
திருமங் கிலியஞ் சிறப்பாகப் பூட்டிவைத்து
செய்ய சடங்கனைத்துஞ் சிந்தைமகிழ் வாய்முடித்து
வையகத்தை யாளுகின்ற மன்னவர்கள் தங்களுக்கு
சந்தனமுந் தாம்பூலந் தான்கொடுத்தே யின்பமொடு
வந்தவர்க்குத் தக்க மரியாதை செய்துவித்து
உண்டி யறுசுவையோ ருண்டு மகிழ்வுடனே
தண்டா மரைமுகத்தார் தானங் கமர்ந்திருந்தார்
வல்ல தவுமியரும் வாகாய் மறுநாளில்
செல்வி துரோபதைக்குஞ் செய்யமத வீமனுக்கும்
விந்தை யுடன்சடங்கு மேன்மையொடு மேநடத்தி
சிந்தை மகிழ்வாய்த் திருமணமே செய்துவைத்தார்
பற்குணர்க்கு மேயிரட்டைப் பாலருக்கும் பாவைதனை

விற்பனர்கள் மாமணமே மேன்மையொடு செய்துவைத்தார்
சாந்தகுண மன்னருக்குத் தக்கமரி யாதைசெய்து
வேந்தன் துருபதனும் வீற்றிருந்தா னம்மானை
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரு மன்புடனே பாஞ்சாலி யைக்கூடி
நன்னயஞ்சேர் பாஞ்சால நாட்டிலே வாழ்ந்திருந்தார்
மன்னன் துரியன் வரலாறினி யுரைப்பாம்

துரியோதனுதிய ராலோசனை
செய்தல்

மன்திரித ராட்டிரனின் மைந்தரொரு நூற்றுவரும்
சென்றோ ரிடமதிலே சிந்தைமிக நைந்திருந்து
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரைப் பற்றிப் பரிவாகப் பேசவென்று
வல்ல துரியனுமே வாகாக வேயெழுந்து
சொல்லுவா னப்பொழுது துக்கமுட னம்மானை
மன்னவரே பாண்ட வரைவதைக்க வேணுமென்று
நன்னயமாய்ச் செவ்வரக்கி னுலேயோர் மாளிகையை
செய்தே குடியிருக்கச் செய்தேதீ மூட்டிவிட்டோம்
வையகமீ தெந்தவித மாய்ப்பிழைத்து வந்தனர்காண்
மாமறையோர் போலவுமே மாறுவே டந்தரித்து
வாமமுள்ள பாஞ்சால மாநகரந் தன்னிலுமே
வந்துமே வில்லை வளைத்தே யருச்சுனனும்
சிந்தை மகிழ்வாகச் செய்ய துரோபதையை
சீலமொடு மாலையிடச் செய்தனனே நாம்பார்க்க
ஞாலமிசை பாண்டவரும் நற்கீர்த்தி யேயடைந்தார்
பாண்டுமன் னீன்றெடுத்த பஞ்சவரும் பாவைதனை
பூண்டார் மணமெனவே பூதலத்தோர் பேசுகின்றார்
வல்லமைசேர் பஞ்சவரை வாகாக வெவ்விதமுங்

கொல்லும் வகைதனையே கூறுமென்று னம்மானை
செய்ய சகுனியுமே சிந்தைமகிழ் வாயெழுந்து
துய்ய துரியனின்முன் சொல்லுவான் வீரமொடு
மன்னவரை நாம்கூட்டி வாகாகச் சேனையொடு
நன்னயஞ்சேர் பாஞ்சால நாடடைந்து கோட்டைதனை
இடித்தாலே பஞ்சவரு மின்றுமே வந்திடுவார்
பிடித்தே நொடியினிலே பின்கட்டாய்க் கட்டிவைத்து
வல்லபாஞ் சாலனையும் மந்திரிமார் தங்களையும்
வெல்லவே யின்றுநல்ல வேளையிவை தப்பிடிலோ
மன்னவனே யெந்நாளு மாகா தவர்களையே
நன்னயம தாய்ச்செயிக்க நம்மா லெனவரைந்தான்

கௌரவர்க்கும் பாஞ்சாலனுக்கும்
யுத்தம்

வல்ல துரியனுமே மாமா வுரைத்ததுவும்
நல்லவைதா னென்றுவந்த நாழிகையி லேயெழுந்து
சிந்துபோ லந்தமுள்ள சேனைகளை யேகூட்டி
அந்தமுள்ள நூற்றுவரு மன்புடனே கர்ணனொடு
செய்ய சகுனியுமே தேர்மீதி னிலேறி
வெய்யோ னுதிக்குமுன்னே மேன்மையுள்ள பாஞ்சால
நன்னகரைச் சூழ்ந்துகொண்டு நாட்டமொடு வில்வளைத்து
மன்னரட்ட காசமுமே வாகாகச் செய்துநின்றார்
செய்ய துஷ்டத்தூய்மன் சிகண்டி சுமித்திரனும்
துய்யசித்ர கேது சுகேது துருபதனும்
பிரிய தரிசனனும் பெட்புடனே தேரேறி
பரிவாக வந்தெதிர்த்தார் பாண்டவர்க ளீதறிந்து
தேரேறி வில்லதனைச் செங்கரத்தி னிற்பிடித்து
சூராவளி போலே சூழ்ந்து கொண்டாரம்மானை
நன்னயஞ்சேர் பாஞ்சால ராஜன் சயினியமும்

மன் துரியன் சேனைசில மாளவுமே சண்டைசெய்தார்
வல்ல கருணனுமே வாகார் சயிந்தவனும்
வில்லை வளைத்தே வெகுசரத்தை யேவிடுத்து
பற்குண னின்றுய்ய பரிகளையே மாய்த்தனரே
விற்பனனும் வீமனுமவ் வேளை யொருநான்கு
புரவி தனைரதத்திற் பூட்டினன் பற்குணனும்
சருவி யவர்களொடு சண்டை செய்தானம்மானை
துரியன் சகுனிகர்ணன் துங்கன்பூரிச்சிரவன்
பரிவாய்ச் சயிந்தவனும் பற்குணனைச் சூழ்ந்துகொண்டு
சண்டையிட்டு நிற்பதுவைத் தக்கோன் மதவீமன்
கண்டு ரதமதனைக் காவலனும் வேகமொடு
நடத்தியே சென்றுவந்த ராஜாக்கள் மத்தியிலே
திடத்துடனே பூசலது செய்கின்ற தையறிந்து
ஐவருமே துண்டுதுண்டா யைந்துகணை யேவிவிட்டு
செய்யமத வீமனிட தேர்க்குதிரை சாரதியை
கொன்றாரே வீமன் குதித்துமே வாளெடுத்து
சென்றுமே சேனைகளைச் சின்னு பின்னங்களுமே
செய்துகொண்டு கோபமொடு சீறியே நின்றனனே
செய்ய கருணன் திடமா யொருபகழி
தொடுத்து மதவீமன் துங்கக் கவசமதை
பொடித்துமே விட்டான் புலிபோல் வீமன்பாய்ந்து
சேனைகளைத் தும்ஸமது செய்திருந்தான் வீரமொடு
வானவரு மஞ்சிடவே வண்மையுள்ள பற்குணனும்
வல்லதுஷடத் தாய்மனையும் வாகா யிரட்டையரை
சல்லாபமாய்ச் சிகண்டி தன்னையுமே தானழைத்து
பாரமத வீமனிடம் பாங்காக வந்துநின்று
வீரமொடு வாளிகளை விட்டுவதை செய்தனரே
அங்கதே சாதிபதி யாங்காரங் கொண்டுவில்லைச்

சிங்காரமாய் வளைத்துத் தேவாஸ் திரம்விடுத்து
பற்குணனின் தேர்குதிரை பாரினிற் செல்லாதபடி
விற்பனனுஞ் செய்துவிட்டான் வேந்தன் மிகச்சினந்து
வல்லமைய தாய்மூன்று வாளிதனை யேவிடுத்தான்
வல்ல கருணன் மரணமூர்ச் சையடைந்தான்
சேனைகளைப் பற்குணனுஞ் சின்ன பின்னங்களொடு
தானவரு மோடிடவே சற்குணனுஞ் செய்தனனே
வல்ல சகுனி மரித்துமே யோடுவரைச்
சல்லா பன்றனே சமாதானஞ் செய்துவைத்து
கும்பலா யங்குவொன்று கூட்டிவந்தான் போர்பொருத
வம்பன் மதவீமன் வாகாக வோடிவந்து
வீர முடனே விருட்சமதை யேபிடிங்கி
தீரமுடன் பாய்ந்து சேனைகளின் மீதடித்தான்
சிலபேர்கள் பாதை தெரியாம லோடினரே
பலபேர்கள் மண்ணிற் பதைபதைத்து மேவிழுந்தார்
மன்திரித ராட்டிரனின் மைந்தரொரு நூற்றுவரும்
நன்றியில்லாக் கர்ண னுமந் நாழிகையி லோடினரே
பூண்டுமென் னின்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரும் வல்லமைசேர் பாஞ்சாலன் புத்திரரும்
சிந்தைமகிழ் வாகவுமே சிங்கார மண்டபத்தில்
வந்தே யமர்ந்திருந்தார் வாகாக வம்மானை
வல்லபல ராமருமே மாயவனு மீதறிந்து
சல்லாப மாகச் சதுரங்கச் சேனையொடு
வந்தார்கள் நூற்றுவரும் வாகாக வோடினதைச்
சிந்தைமகிழ் வாய்க்கேட்டுச் சீக்கிரமாய்ப் பாண்டவரை
கண்டா ருபசாரங் காவலருஞ் செய்தனரே
வண்டாரும் பைந்துளப மாலையணி கோபாலன்
பாண்டவர்கள் தங்களொடு பாஞ்சால நாட்டினிலே

நீண்ட புகழுடையார் நேர்மையுட னேயிருந்தார்

## பாண்டவரை அஸ்தினபுரத்துக்கு வரவழைத்தல்

மன்திரித ராட்டிரன்முன் வாகாய்த் துரியனுமே
சென்றுமே துக்கமொடு செப்புவா னம்மானை
தந்தேயே பாண்டவர்கள் தங்களையே யெவ்விதமுந்
தந்திரமாய்க் கொல்லவென்றுற் தப்பித்தே கொள்ளுகின்றார்
நன்னயஞ்சேர் பாஞ்சால ராஜன் புதல்வரொடு
மன்னவராம் பாண்ட வரைப்பகைசெப் விப்போமா
குந்திமக்கள் மூவரையும் கோதை மத்திராதேவி
மைந்தருக்கு மேபகையை வாகா யுண்டாக்குவமா
தக்கமத வீமன் தன்னையே யிங்கழைத்துப்
பக்குவமாய்க் கொல்வோமா பாஞ்சாலன் மந்திரியால்
மெத்தப் பகையாக்கி விப்போமா பஞ்சவரை
சித்தமகிழ் வாய்மாழச் சேய்வோமா யெந்தனிட
தந்தையே கூறுமென்று சாற்றினு னப்பொழுது
விந்தை யுடனே விளம்புவான் கர்ணனுமே
துரியோத னுபலவாற் சொல்லுவதி லென்னபயன்
பரிவாக வஞ்சனைகள் பண்ணியே பாண்டவரை
கொல்லுவோ மென்றுவிங்கு கூறுவதை விட்டுவிடு
வெல்லும் வகையை விளம்புகிறேன் யாதெனிலோ
நன்னயஞ்சேர் பாஞ்சால நாடடைந்து வேகமொடு
மன்னன்பாஞ் சாலனையும் வாகான வைவரையும்
சங்கரித்து வந்தாலே சட்டமொடு சீமைதனைச்
செங்கோல் செலுத்திடலாந் தேர்வேந்தே யென்றுரைத்தான்
மன்திரித ராட்டிரனும் வல்ல விதுரனொடு
நன்றியுள்ள வீஷ்மர் நலவான் துரோணரையே
கூட்டிவரச் செய்திருத்திக் கூறினு ரிம்மொழியை

கேட்டுமே வீஷ்மர் கிளருவா ரம்மானை
வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்துமே நீங்களங்கு
அஞ்சாது சென்றுபல வஸ்த்திரத்தை யேவிடுத்து
பஞ்சவர்கள் தங்களையும் பாஞ்சாலன் றன்னையுமே
துஞ்சிடச்செய் வோமெனவே சொல்லத் துணிந்தீரே
மானிலத்தி லுள்ளபல மன்னர் வசைபுகல்வார்
ஏனினிவீண் யோசனைக ளேற்காது பாண்டவரும்
நூற்றுவரு மென்னுடைய நோக்க மொன்றல்லாது
வேற்றுமைய தாகவெண்ண வில்லையின் னுள்வரையே
ஒருவர்க் கொருவ ருயித்தமது செய்யவிட்டுப்
பரிவாக யானிருந்து பார்ப்பதுவும் ஞாயமல்ல
நன்னயஞ்சேர் பாஞ்சால நாடடைந்து பாண்டுமைந்தர்
தன்னை வரவழைத்துச் சந்தோஷ மாகவுமே
பாதிநா டீய்வதுவே பார்வேந்தர் தங்களுக்கு
நீதிமுறை யென்றே நிகழ்த்தினு ரம்மானை
வல்ல துரோணருமே வாகாக வேயெழுந்து
சொல்லுவார் சிந்தை துயரமிகக் கொண்டவராய்
வில்லினிலே பாண்டவரை வென்றே ஜெயமடைந்து
தொல்லுலகாள் வோமெனவே சொல்லுகின்ற தைமறப்பீர்
நெஞ்சினிலே சூது நினைந்தே நெடுநளாய்
வஞ்சனைகள் செய்தீரே மாழாம லேபிழைத்தார்
இனிமே லுஜாரா யிருப்பா ரவர்களையே
கனிவாக வெந்தவிதக் காரணங்கள் தன்னுலும்
வெல்ல முடியாது வீஷ்ம ருரைப்படியே
சல்லாப மாகவுமே தானழைத்துப் பஞ்சவரை
சிந்தை மகிழ்வடைச் செய்துமே பாதிநகர்
தந்தாலே யிந்தநல்ல சந்த்ர குலமும்வாழும்
நூற்றுவர்கள் தங்களொடு நுண்ணியராம் பஞ்சவர்கள்
வேற்றுமைக ளில்லாது மேன்மையுட னெக்காலும்

சிங்கார மாகவுமே செங்கோல் செலுத்திடுவார்
துங்கரே யென்றுபுத்தி சொன்னார் துரோணருமே
வல்ல விதுரனுமே வாகாக வேயுரைப்பான்
வில்லினுற் பாண்டவரை வெல்லவே வேண்டுமென்று
இன்னும் நினைவு யிருக்கின்ற துங்களுக்கு
மன்னவராம் பாண்டவர்க்கு மாளிகையொன் றுண்டாக்கி
வல்ல புரோசனனால் வாகாய்க் குடியேற்றி
செல்வரே நன்னயமாய்த் தீயிட்டீர் மாழவென்று
பாண்டவரு மேபிழைத்துப் பாவை துரோபதியைப்
பூண்டார் திருமணமே போர்செய்தே யோடிவந்தீர்
வாமமிகு கோகுலத்தில் வந்துதித்தோ ரானபல
ராமரொடு கோபால ரான கிருஷ்ணருமே
பஞ்சவர்க்கு வெந்நாளும் பக்கத் துணையாகி
அஞ்சா திவரிருக்க வல்லாமற் பாஞ்சாலன்
மைந்தருமே சூழ்ந்திருக்க வாகுடனே யன்னவரை
எந்தவிதமாய்ச் செயிப்பீ ரின்னமுமே வஞ்சனையாற்
கொல்லுவோ மென்றாலுங் கூடாது மன்னவரே
வில்லாளி பஞ்சவர்க்கு மேன்மையுள்ள நாடதனில்
பாதி கொடுப்பதுவே பண்பாகும் வேந்தருக்கு
நீதி முறையென்றே நிகழ்த்தி னனம்மானை
நன்னயஞ்சே ருந்திரித ராட்டிரனு மேகேட்டு
மன்னன் விதுரனிடம் வாகாக வேயுரைப்பான்
தம்பிநீ யிப்பொழுதே சல்லாப மாகவுமே
கும்பலொடு சென்றவரைக் கூட்டியிங்கு வந்திடுவாய்
நன்னகரிற் பாதியுமே நாம்பிரித்து மேகொடுப்போம்
நன்னயமா யென்றே நவின்றான் விதுரனுமே
கேட்டுமன மகிழ்ந்து கீர்த்தியுள்ள பாண்டவரைக்
கூட்டிவர வேணுமென்று கொற்றவனு மேநினைந்து
வாட்டமதை யேவிடுத்து மன்னவனும் வேகமொடு

தாட்டீக மாகவுமே தானடந்து சேனையொடு
சிந்துசூழ் பாஞ்சால தேசமதில் வந்தனரே
சந்தோஷ மாகவுமே தக்கபஞ்ச பாண்டவரும்
கண்டு விதுரனையே காவலரு மேபணிந்து
கொண்டு மனைக்கழைத்துக் கொற்றவருஞ் சென்றனரே
வல்ல கிருஷ்ணனொடு மன்னவரு முண்டியுண்டு
சல்லாப மாகவுமே தானிருக்கும் வேளையிலே
நன்னயஞ்சே ரும்விதுர ராஜனுமே பாஞ்சால
மன்னவ னின்முன்னே வழுத்தினன் வந்தவகை
வல்லபாஞ் சாலனுமே வாகாகப் பாண்டவரை
செல்லுவீ ரென்றுவிடை செப்பினனே யம்மானை
தக்கபஞ்ச பாண்டவருந் தையல் துரோபதையும்
திக்கோர் புகழுகின்ற தேசுயர்ந்த கோபாலன்
துய்ய விதுரனொடு தோகைகுந்தி தன்னுடனே
செய்யாத மீதேறிச் சிந்தைமிக வேமகிழ்ந்து
நன்னயஞ்சேர் கின்றவத்தி னுபுரமே வந்தனரே
மன்னரெதிர் சென்றுகண்டு வாகா யழைத்துவந்தார்
வில்லா சிரியரையும் மேன்மையுள்ள மன்னரையும்
சல்லாப மாய்ப்பணிந்தார் தக்கபஞ்ச பாண்டவரும்
ஆசிபல கூறியுமே யன்புடனே தானிருந்தார்
மாசில்லா மன்னருமே மன்திரித ராட்டிரன்முன்
சென்று பணிந்தாரே சித்தமிக வேமகிழ்ந்து
நன்றியொடு மன்திரித ராட்டிரனு மேவாழ்த்தி
நன்னயமாய்த் தானிருந்தான் நட்புடையோன் போலவுமே
மன்னவர்க்கு மேதினமோர் மாளிகைமி லேவிருந்து
வல்லகோ பாலனொடு வாகா யருந்தியுமே
செல்வர் சிலகாலஞ் சிந்தைக்னிந் தேயிருந்தார்

---

## தருமராஜனுக்குப் பாதிராச்சிய
## பட்டாபிஷேகஞ் செய்தல்

நன்னயம தாய்த்திரித ராட்டிரனு மோர்நாளில்
மன்னன் விதுரனையே வாகாய் வரவழைத்து
பாண்டுமென்ன னீன்றெடுத்த பண்பார் தருமனுக்கு
நீண்ட புகழுடைய நேர்பருமே சூழ்ந்திருக்க
நன்மையுட னேபாதி ராச்சியத்தை யாளவுமே
மன்னவனே பட்ட மதைச்சூடி வைத்திடென்றான்
வல்ல விதுரன் மனமிகவு மேமகிழ்ந்து
நல்ல சுபமான நாட்குறித்தே வேதியரால்
பட்டணத்தைச் சிங்காரம் பண்ணியே தோரணங்கள்
கட்டியுமே துங்கமொடு காதவரை பந்தலிட்டு
காசினியாள் கின்றபல காவலரைத் தூதுவரால்
நேசமுட னேயழைத்து நேர்பனுமே யந்நேரம்
கங்கைநீ ராட்டிக் கனகா பரணமதாற்
சிங்கார மன்புடனே செய்தே தருமரையே
மங்களமாய் வாத்தியங்கள் வாகாக வேமுழங்க
சிங்கா தனமீது சிந்தைமகிழ் வாகவைத்தார்
செய்ய வியாசரிந்தச் செய்திதனை யேதெரிந்து
துய்ய வரசருமே சூழ்ந்தசபை வந்தனரே
மன்னவருங் கண்டு வணங்கினா ரன்புடனே
நன்னயஞ்சேர் வேதமுனி நாதனுமா சீர்வதித்து
விண்ணுலகோர் கொண்டாட மெல்லியர்க ளாடிநிற்க
மண்ணுலகோ ரும்புகழ மாமுனியும் பொன்முடியைச்
செங்கரத்தி னாலெடுத்துச் செய்ய தருமரிட
துங்கமுள்ள சென்னியிலே சூட்டியா சீர்வதித்து
வேந்த ரிடத்தில் விடைவாங்கி வேகமொடு
சாந்த குணமுனிவன் தானடந்தா ரம்மானை
நன்னயஞ்சே ருந்திரித ராட்டிரனு மப்பொழுது

மன்னன் தருமரிடம் வாகாக வேயுரைப்பான்
சீலனே யிங்கிருந்து செங்கோல் செலுத்திடிலென்
பாலருக்கு முங்களுக்கும் பாங்காய்ப் பகைகளுரும்
ஆனதினுல் முன்னே ரரசாண் டிருந்தவிட
மானதாங் காண்டா வனப்பிரஸ்தஞ் சென்றிருந்து
நன்னகர முண்டாக்கி நட்புடனே தம்பியொடு
மன்னு வரசாட்சி வாகாகச் செய்திடுவாய்
இப்பொழுதே சென்றிடுவா யிங்கிருக்க வொண்ணுது
செப்பினே னென்றே திடமாக வேயிருந்தான்

கண்ணன் காண்டவ வனத்தை யிந்திரனுற் புதிப்பித்தல்.

அந்தகனுஞ் சொன்னமொழி யாலே மனமகிழ்ந்து
விந்தையுட னங்கிருந்த வேந்தரிட மேவிடைகள்
வாங்கித் தருமருமே மங்கை துரோபதையும்
பாங்காகத் தாயுடன்கோ பாலர் சகோதரரைக்
கூட்டிரத மீதேறிக் கொற்றவரும் வேகமொடு
தாட்டீக மாகவுமே தான்வந்தா ரம்மானை
பொன்னகரைப் போலவுமே பூமான்க ளாண்டிருக்க
நன்னகர முண்டாக்கி நாம்கொடுக்க வேண்டுமென்று
இந்திரனைச் சிந்தையிலே யெண்ணினுர் கோபாலர்
சந்தோஷ மாகவுமே தானறிந்து வாசவனும்
பொன்னுலகி லேவசிக்கும் புண்ணியவான் விஸ்வகர்மா
தன்னை யனுப்பினனே தாரணியிற் சிற்பியுமே
வந்து கோபாலர் மலரடியி லேபணிந்தான்
சிந்தை மகிழ்வாயா சீர்வதித்து மேபுகல்வார்
வல்லவனே யிந்த வனத்திலோர் நன்னகரைச்
சல்லாப மாகவுமே தானமைப்பா யென்றறைந்தார்
சிற்பியுமே நல்லதெனச் சித்தமிக வேகனிந்து
விற்பனனுேர் பட்டணத்தை மேன்மையொடு வுண்டுசெய்து

கண்ணனையு மேபணிந்து கம்மாள னின்பமொடு
விண் ணுலகு சென்றனனே மேன்மையுள்ள பாண்டவரும்
பொன்னகரைப் போலவுமே பூமிதனி லுண்டான
நன்னகரைப் பார்த்துளமே நன்றாக வேமகிழ்ந்து
வல்ல கிருஷ்ணன் மலரடியைப் போற்றிநின்றார்
செல்வரையா சீர்வதித்தே செப்புவா ரம்மானை
வல்லவரே யுங்களுக்காய் வாசவனுஞ் சிற்பிதன்னைச்
சல்லாப மாகவுமே தானழைத்து மேகாண்ட
வனப்பிரஸ்தந் தன்னையுமே வாகாகச் செம்மைசெய்து
வனப்பாயோர் நாடமைத்து வந்திடுவா யென்றதினால்
இன்றுமுத லின்னகர்க்கு இந்த்ர பிரஸ்தமென்று
நன்றான நாமமதை நாம்கொடுத்தோம் பஞ்சவரே
பொன்னகரு மென்னகரும் புண்ணியரே நாமமைத்த
இன்னகர்க்குத் தானே யிணைகூற லாகாது
பண்டினிலே பூசா பலம்புரிந்த தாலுமக்கே
வண்டாரும் மாலையணி மார்பா கிடைத்ததென்றார்

பாண்டவர் இந்திரப் பிரஸ்தத்திற்
குடிபுகுதல்

பாண்டவரும் நல்லதினம் பார்த்தே குடிபுகுத
வேண்டுமென வெண்ணியந்த வேளை வியாசரையும்
வல்ல தவுமியரை வாகாய் நினைத்தவுடன்
சல்லாப மாகவுமே தான்வந்தா ரம்மானை
கண்டே யிருவரையுங் காவலர்க ளுள்மகிழ்வு
கொண்டே பதம்பணிந்து கூறுவா ரப்பொழுது
இன்னகரில் யாங்கள்குடி யேறவுமே யன்புடனே
நன்னயம தாகவொரு நாட்பார்த்துக் கூறுமென்றார்
மன்ன ருரைத்தமொழி வாகாக வேயறிந்து
அன்னவரும் நாட்பார்த்தே யன்புடனே தானுரைத்தார்
செய்ய சுபதினத்திற் சிந்தைமகிழ் வாகவுமே

துய்யமறை யோர்களுக்கே சொர்னதா னங்கொடுத்து
பூதானங் கோதானம் புண்ணியரு மேயீய்ந்து
வேதாக மப்படியே வேண சடங்குசெய்து
அன்னதா னங்களையு மன்பாக வேயீய்ந்து
மன்னவருந் துங்கமுள்ள வாகனங்கள் மீதேறி
வீதிவல மாகவந்து மேன்மையுள்ள பாண்டவரும்
நீதியொடு மண்டபத்தில் நேர்பருமே வீற்றிருந்தார்
எந்தெந்த நாட்டி லிருந்த பிரஜைகளும்
வந்து குடிபுகுந்தார் வண்மை யுடனம்மானை
நன்னகரந் தன்னிலுமே நான்கு வருணத்தாரும்
உன்னிதமாய் வந்துகுடி யுத்தமரு மேயிருந்தார்
செய்ய வியாசருமே சென்றார் விடைவாங்கி
துய்யகோ பாலருமே சொல்லுவார் பாண்டவர்முன்
சிங்கார மாகவுமே செல்வரே யெக்காலுஞ்
செங்கோல் வழுவாது செய்திடுவீர் நீதியொடு
வேந்தே துவாரகைக்கி மேவிடவே யிப்பொழுது
சாந்த குணவானே தருவீர் விடைகளென்றார்
பாண்டவரு மேவணங்கிப் பண்பாய் விடைகொடுத்தார்
நீண்ட புகழுடையார் நேர்மையொடு சென்றனரே
மாமறையோர் வேதம் வழுவா துரைத்திடவே
வாமமுள்ள சென்னலுமே வாகாய் விளைவாக
மாதமதில் மூன்றுமழை மாராமலே பொழிய
நீதியொடு தானிருந்து நேர்பரர சாட்சிசெய்தார்

உபபஞ்சபாண்டவாள்
உற்பவம்

செய்ய தருமருமே சிங்கா தனமீது
துய்யதம்பி மாராருகே சூழக் கொலுவிருந்தார்
அந்தநல்ல வேளையிலே யன்புடைய நாரதரும்
வந்தார் மனமகிழ்ந்து மாசபையி லம்மானை

மாதவசி நாரதரை வாகான பாண்டவரும்
நீதமுட னேபணிந்து நின்றார் காணம்மானை
வந்து பணிந்த வரைவாழ்த்தி யேயிருத்திச்
சந்தோஷ மாகவுமே சாற்றுவா ரின்பமொடு
பலத்தில் மிகுந்தோனும் பாரி லிரணியன்றன்
குலத்தினிலே தான்பிறந்தோன் கோப மிகவுடைய
நிரும்பனென்னு மோரசுரன் நேர்மையுட னேயீன்ற
அகம்படைத்தோ ரான வசுர குலசூரர்
சுந்தோப சுந்தாளுந் துங்கமிக வேமிகுந்த
விந்தியமென் கின்றமலை மீதிற் தவம்புரிந்து
வேத னிடந்தானே வேண வரம்வாங்கி
பூதலத்தில் வந்தமர்ந்தே பொல்லாத பாதகரும்
புங்கவர்க்கே துன்பம் புரிந்தா னனைவருமே
தங்காது சென்றுவிதி தன்னிடத்தி லேயறைந்தார்
வாமமுள்ள வேதனுமே மங்கை திலோர்த்தமையை
நேமமுடன் படைத்து நீபோ யசுரருக்கே
மோகமதை யுண்டாக்கி மூடரொரு வர்க்கொருவர்
வேகமுடன் போர்புரிந்து மேதினியில் மாண்டிடவே
செய்துவரு வாயெனவே செப்பு மொழியைக்கேட்டு
தையலுமே சென்றுவனந் தன்னிலே நின்றிருந்தாள்
சுந்தோப சுந்தாளுந் தோகைதனைக் கண்டோடி
வந்தே யெனைமணரு வாயெனவே தானுரைத்து
இரண்டு கரத்தை யிரண்டுபே ரும்பிடித்து
முரண்டுபண்ணு கின்றதுவை மொய்குழலுந் தானறிந்து
இருவருமே யெந்தனிட மிந்தவித மேயுரைத்தால்
மருவுவது யானுரை வல்லவரே யிப்பொழுது
ஒருவ ருடனொருவ ருத்தமுமே செய்துவெற்றி
பெருவோரை மாமணமே பெண்ணரசி யிப்பொழுது
செய்திடுவேன் பூசலது செய்குவீ ரென்றறைந்தாள்

தையல்மொழி கேட்டுச் சல்தியொரு வர்க்கொருவர்
சண்டைபண்ணி யேமாண்டார் தாரணியின் மீதினிலே
கண்டு திலோர்த்தமையுங் கம்பீர மாகவுமே
விண் ணுலகு சென்றனளே மேன்மையுள்ள பாண்டவரே
மண் ணுலகின் மீதுபெண்ணால் மாண்டார் பலபேர்கள்
ஆதலினு லோர்கனிகை யைவருமே மாமணமும்
பூதலத்தின் மீது புரிந்தீரே யெந்தனுரை
போலவுமே தானடப்பீர் பூவையை யொவ்வோராண்டு
சீலமுட னெவ்வருவர் சேர்ந்தே சுகித்திருப்பீர்
சல்லாப மாகவுமே தைய லொருவரொடு
உல்லாச மாயிருக்க வுத்தமரே பார்த்திடிலோ
காசினியி லுண்டான கங்கைமுதற் தீர்த்தமெல்லாம்
மாசில்லா தாடி வருவீ ரொருவருடம்
இந்த விதமாக எல்லவரு மேநடந்து
வந்திடுவீ ரென்றறைந்து மாமுனிவர் சென்றனரே
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரு மன்புடனே பாவையை யொவ்வோராண்டு
ஒவ்வொரு வர்கூடி யுபபஞ்ச பாண்டவரைச்
செவ்வையுட னீன்றெடுத்தே சிந்தை மகிழ்வாகவுமே
பாலகரை யன்புடனே பாங்காக வேவளர்த்துச்
சீலநல் வில்வித்தை சிறப்பாகப் பற்குண னும்
சொல்லிவைத்தா னன்புடனே துங்கமிகு வைவருமே
வல்லவர்க ளாகவுமே வாழ்ந்திருந்தா ரம்மானை

---

அருச்சுனன் நாககன்னியைத்
திருமணம்புரிதல்.

வாமமுள்ள மாமறையோர் மாளிகையி லேதிருடர்
தாமதஞ்செய் யாமலுமே தான்புகுந்து ராத்திரியில்

மாடுகளை யோட்டிவிரை வாகவுமே தானிவரும்
ஓடுகின்ற செய்திதனை யுத்தமனு மேதெரிந்து
சிந்தைமிக வேகலங்கிச் சிங்காரக் கோட்டைமுன்னே
வந்து புலம்பினனே வாகான பற்குணனும்
கோட்டைதனைச் சுற்றிவந்தான் கூச்சலதைக் கேட்டோடி
தாட்டீக மாகவுமே தான்வந்தே வேதியர்முன்
சங்கதியைத் தானறிந்து சட்டமொடு பற்குணனுஞ்
சிங்கார மாளிகையுட் சென்றனே வில்லெடுக்க
துய்ய தருமர் துரோபதையாள் தன்னுடனே
சையோக மாகமஞ்சந் தன்னி லிருந்திடவே
வல்ல வனுங்கண்டு வணங்கித் தருமரையே
வில்லை யெடுத்து வெளியேறி வேகமொடு
வந்துகள்ளர் சென்ற வழியோடி யேமறித்து
சிந்தைகனிந்து வில்லைச் சீக்கிரத்தி லேவளைத்து
அம்புதனை யேவிவிட்டா னன்னேரங் கள்ளரிட
கும்புதனி லேவீழ்ந்து கொன்றனவே பாதகரை
பற்குணனு மாடுகளைப் பாங்காக வோட்டிவந்து
விற்பனனின் முன்னே விடுத்தே வணங்கிநின்றான்
ஆசிபல கூறியுமே யந்தணனுஞ் சென்றனனே
மாசில்லா மன்னவனு மாளிகையிற் போய்ப்படுத்தான்
கங்கு லகன்று கதிரோ னுதித்தபின்னே
சிங்கா தனமீது செய்ய தருமருமே
வந்தே யமர்ந்திருந்தார் வாகான பற்குணனுஞ்
சிந்தைமகிழ் வாய்ப்பணிந்து செப்புவா னம்மானை
வள்ளலே மாமறையோர் மாளிகையி லேபுகுந்து
கள்ளருமே மாடு களையோட்டிச் சென்றதுவாய்
கோட்டைமுன்னே மாமறையோர் கூச்சலிட்டே நின்றனரே
தாட்டீக மாய்க்கேட்டுச் சல்தியிலே வில்லெடுக்க
வல்லவரே மாளிகையுள் வந்தேனே மங்கையொடு

சல்லாப மாகமஞ்சந் தன்னி லமர்ந்திருந்தீர்
கண்டு பணிந்துவந்து கள்ளரிட சென்னிதனைத்
துண்டுசெய்து மாடுகளைத் துங்கமுட னேதிரட்டி
வேதியரின் முன்னே விடுத்தே துயின்றனனே
பாதகனு னுங்களையே பார்த்த படியாலே
வாமமுள்ள விண் ணுலகு மாமுனிவர் நாரதரும்
நேமமொடு சொன்ன நிபந்தனையைப் போலவுமே
காசினியி லுண்டான கங்கைமுதற் தீர்த்தமெல்லாம்
மாசில்லா தாடி வரவிடைக ளீய்ந்திடுவீர்
அண்ணலே யென்றே யடிவணங்கி யேபணிந்தான்
புண்ணியரும் பற்குணனைப் போய்வருவா யென்றுவிடை
தந்தே யனுப்பினரே சட்டமுட னேயெழுந்து
சிந்தைமிகவே மகிழ்ந்து செய்யமறை யோருடனே
வாமமுள்ள காசிநகர் மன்னவனும் வந்தமர்ந்து
மாமறையோர் தங்களுக்கே வாகாய்ப் பலதானம்
துங்கமுடனே கொடுத்தே துக்கந் தனைவிடுத்துக்
கங்கைநீ ராடினனே காவலனு மந்நேரம்
நாகரச னீன்றெடுத்த நங்கை யெழில்மிகுந்த
நாககன்னி யந்த நதியில் விளையாடி
கொண்டிருந்த மின்னரசி கோமா னருச்சுனனைக்
கண்டுவெகு மோகமுற்றே காரிழையா ளந்நேரம்
நன்னயமாய்ப் பற்குணனை நாகலோ கந்தனிலே
கன்னிகையுங் கூட்டிக் களிப்பாய் நடந்தனளே
மன்ன னருச்சுனனும் வாகாகச் சென்றிருந்து
மின்னவிடைப் பெண்ணையந்த வேளையிலே பார்த்துரைப்பான்
மாதரசே யுந்தன் வரலாற்றை யெந்தனுக்கு
ஓதிடுவா யென்றே யுரைத்தா னவள்கேட்டு
நாகரச னீன்றெடுத்த நாககன்னி யெந்நாமம்
நாக ருலகமிது நாயகரே யென்றறைந்தாள்

சாந்த குணமுடையோன் தாம தங்களில்லாது
காந்தருவ மாமணமே கன்னிகையைச் செய்துகொண்டான்

அரவா னுற்பவம்

நாககன்னி யாள்மகிழ்ந்தந் நாழிகையில் வேகமொடு
நாகரசன் முன்புசென்று நன்ருய் நடந்தவற்றை
தைய லறைந்தவரின் சம்மதியின் பேரினிலே
மொய்குழலும் பற்குணன்மேல் மோகமுற்றே துங்கமிகு
பஞ்சணையின் மீதினிலே பார்வேந் தனையிருத்திக்
கொஞ்சிக் குலாவியுமே கொம்பனையும் பற்குண னும்
மதனும் ரதிபோல் மருவி விளையாடி
இதமாக வேயிருந்து இன்ப மனுபவித்தார்
பற்குண னுங் காலையிலே பாங்காக வேயெழுந்து
விற்பன னும் நன்ருய் விளம்புவா னம்மானை
செந்தேனே பூவிலுள்ள தீர்த்தமதை யாடவென்று
வந்தே யுனைமணந்தேன் மாதரசே யிப்பொழுது
செல்லவிடை நீகொடுப்பாய் சித்தங் கலங்காது
மெல்லிகையே யென்று விளம்பினு னம்மானை
கன்னிகையு மேகேட்டுக் காவலவன் சொற்படிக்கி
நன்னயம தாகவிடை நாயகியு மேகொடுத்து
கங்கா நதியோரங் காதலியு மேவிடுத்து
மங்களமாய்ச் சென்றனளே மாதரசி யாள்மகிழ்ந்து
வாமமுள்ள பற்குண னும் வாகாய் வெளியேறி
மாமறையோர் தங்களொடு மாநதியின் தீர்த்தமெல்லாம்
ஆடிவரச் சென்றனனே யன்புடைய நாககன்னி
கோடிக்கதி ரோன்போற் குழந்தையொன்று பெற்றெடுத்து
அரவா னெனநாம மன்பாகவே கொடுத்து
பரிவாய் வளர்த்துவந்தாள் பாவையுமே யம்மானை

## அருச்சுனன் சித்திராங்கதையைத் திருமணம்புரிதல்

விண்ணவர்கள் கொண்டாடும் வேந்த னருச்சுனனும்
மண் ணுலகின் மீதிலுள்ள மாநதிக ளிற்றோய்ந்து
அண்ணு மலைசென் றருணுச லீசரையும்
உண்ணு முலைதனையு முத்தமனு மேபணிந்து
அங்கிருந்த தீர்த்தமெல்லா மாடியே பற்குண னும்
தங்காது தென் றிசையைத் தானேக்கி யேநடந்து
அன்னம் பலத்தி லடியை யெடுத்தாடுகின்ற
பொன்னம் பலவனையே போற்றிசெய்து மேதிரும்பி
திருவரங்க நாதனையே சேவைசெய்து மேமகிழ்ந்து
பெருகிவருங் காவிரியிற் பெட்புடனே நீராடி
நன்னயமாய்க் கண்ட நதிகளிலு மேமூழ்கி
மன்னவனுந் தென்மதுரை வந்தான்கா ணம்மானை
சோமன் றனைத்தரித்த சோமசுந்த ரேசனையும்
வாமமீ னும்பிகையை வாகாக வேபணிந்து
மன்னவனுந் தானே மணலூரை நோக்கிவந்தான்
நன்னயமா யந்நகராள் ராஜன் குமாரியுமே
பூங்கா வனந்தனிலே புட்பம் பறித்துநின்ருள்
பாங்கான பாவைதனைப் பற்குண னு மப்பொழுது
கண்டுமே மோகமொடு கன்னிவர லாறறிந்து
கொண்டுசித்ர வாகனென்ற கோமா னிடந்தனிலே
வல்லதொரு தூது வரைவிடுத்தே வந்தவகை
சொல்லி யனுப்பினனே துங்கனெதிர் கொண்டுவந்து
கண்டழைத்துப் பற்குணனைக் காவலவ னுள்மகிழ்வு
கொண்டுசிங் காதனமேற் குந்தவைத்து மேபுகல்வான்
வேந்தனே வந்த விபரமதைக் கூறுமென்று

சாந்தகுண வானியம்பத் தான்கேட்டு மேநவில்வான்
மன்னவனே யுந்தன் மகளைத் திருமணமே
நன்னயமா யெந்தனுக்கிந் நாழிகையிற் செய்துவைப்பீர்
என்றனனே வேந்தனுமே யின்பமுட னேகேட்டு
நன்றெனவே சம்மதித்து நல்லசுப வேளையிலே
மெல்லிசித்தி ராங்கதையை மேன்மையுள்ள பற்குணர்க்குச்
சல்லாப மாகமணந் தான்முடித்தா னம்மானை
பஞ்சணையின் மீதினிலே பற்குணனும் பாவைதனைக்
கொஞ்சிக் குலாவியுமே கொற்றவனு மூன்றுதிங்கள்
துங்கமுட னங்கிருந்து தோகை யிடத்தினிலே
மங்களம தாகவிடை வாங்கியே மனனவனும்
சிங்கார மாகவின்னுந் தீர்த்தமதை யாடவென்று
தங்காது வேகமொடு தானடந்தா னம்மானை

---

## அருச்சுனன் வந்தையின் சாபத்தைநீக்கல்

தென்றிசையி லுண்டான தீர்த்த மெல்லாந்தானுடி
நன்றியுள்ள பற்குணனும் நல்ல வுபலோப
தீர்த்த மகஸ்தியரின் தீர்த்தங் கரந்தமரின்
தீர்த்தஞ் சவுபத் திரதீர்த்த முன்னிலங்கு
வல்லமை சேரும்பரத்து வாசரிட தீர்த்தமிதைச்
சல்லாப னுடவென்று தானினைந்து மங்குவந்து
செய்யசவு பத்திரமா தீர்த்தமதி லேயிரங்கி
துய்ய வருச்சுனனுந் தோயுந் தருணமதில்
வல்ல முதலையொன்று வந்துமே வேகமொடு
சல்லாபன் காலதனைத் தான்கவ்வி யுள்ளிழுக்க
கண்டு வலிமையினுற் காவலனு மேதூக்கிக்

கொண்டு கரையிற் குதித்தானே வேகமொடு
முதலையுமே பற்குணனின் முன்புருவ மாறிமதி
நுதலையுடைய பெண்ணாள் நூபுரங்க ளோசையிட
முன்னாடி நின்றனளே மொய்குழலை யன்னேரம்
மன்னவனும் பார்த்துயிவ்வாற் வந்தவகை கூறுமென்றான்
வேந்த னுரைகேட்டு மெல்லிகையு மேநவில்வாள்
சாந்தகுணு பொன்னுலகு தன்னில் வசிப்பவள்யான்
சேடியர்கள் நால்வரொடு சென்றுபூங் காவினிலே
ஓடி விளையாடி யுன்னிதமாய்த் தானிருந்தோம்
வாமமுள்ள வோர்மறையோர் வாகான வேதமதை
நேமமுட னேதியங்கு நேர்மையுட னேயிருந்தா
கண்டோடி வந்தருகிற் காவல் வெகுவாகக்
கொண்டு பரிகாசங் கொற்றவனே செய்திருந்தோம்
மாமறை யோர்தானே மனமிகவு மேவெகுண்டு
வாமமுள்ள மங்கையரே மானிலத்தில் நூறுண்டு
வல்ல முதலை வடிவா யிருந்திடவே
செல்வருமே சாபமிட்டார் சிந்தை மிகமயங்கி
அன்னவரை யேபணிந்து ஐயனே யிச்சாபந்
தன்னை விலக்குமென்று சாற்றினே மன்புடனே
மங்கையரே நூறு வருடம் பெரிதுமல்ல
தங்காம லவ்வுருவாய்த் தண்ணீரில் வாசமுமே
செய்வீ ரதிலிரங்குந் தீரமுள்ள பேரையிம்சை
செய்வீ ரொருவன் திடமுடனே தான்தூக்கி
கொண்டு கரையிற் குதித்திடுவா னத்தருணம்
ஒண்டொடியே நீங்க ளுருவாவீர் முன்போல
என்றே யுரைத்தனரே என்சாபந் தன்னையுமே
குன்றுப் பலமுடைய கொற்றவனே தீர்த்துவிட்டீர்
சுந்தரஞ்சே ரெந்தனிட தோழியர்கள் நால்வருமே

இந்த மடுவி லிருக்கின்று ரன்னவரின்
சாபமதை நீக்கிடுவீர் தக்கோரே யென்றறைந்தாள்
பூபதியு மந்நேரம் பூவை யுரைபோல
செவ்வையா யங்குமுள்ள தீர்த்த மிரங்கக்காலே
கவ்வு முதலை களைத் தூக்கி யேயெழும்பி
வல்லோன் கரைமீது வாகாக வேகுதித்தான்
மெல்லியுரு வாகிநின்றார் வேந்தன் மிகமகிழ்ந்து
கன்னியரே நீங்கள் களிப்பாக விப்பொழுது
பொன்னுலகு செல்லுமென்று பூமான் விடைகொடுத்து
அந்தமிகு மின்னரசி யானசித்தி ராங்கதையைச்
சுந்தரனும் பார்க்கச் சுருக்காக வந்தனனே

பப்ரவாக னுற்பவம்

கன்னிசித்தி ராங்கதையுங் கற்பவதி யாயிருந்து
நன்னயமா யோர்சுதனை நங்கையுமே பெற்றெடுத்து
ஆகாய வாணி யறைந்த மொழிப்படியே
வாகாயப் போதுபப்ர வாகனென்று நாமமிட்டு
சிங்கார மாகவுமே தேன்மொழியாள் தானிருந்தாள்
துங்கமிகு பற்குணனுந் தோகைதனை வந்துகண்டு
நன்னயமா யங்குசில நாளிருந்து மேமகிழ்ந்து
கன்னிகை யின்முன்னே கழருவா னம்மானை
அன்னநடை மின்னரசே ஆரணங்கே யிப்பொழுது
மன்ன னெனக்குவிடை மாதரசே தந்திடுவாய்
என்றே யறைந்தனனே யிம்மொழியைக் கேட்டரசி
கன்றி மனமுடைந்தாள் காவலனுங் கன்னிதனை
தேற்றி விடைவாங்கிச் சிந்தைமிக வேமகிழ்ந்து
மேற்றிசையி லுண்டான மேன்மையுள்ள தீர்த்தமதை
ஆடிவர வேண்டுமென்றே யன்னேர மன்புடனே
தேடிக் குடதிசையிற் சென்றான்கா ணம்மானை

## அருச்சுனன் சுபத்திரையைத் திருமணம் புரிதல்.

மேற்றிசையி லுண்டான மேன்மையுள்ள தீர்த்தமெல்லாம்
நாற்றிசையோர் கொண்டாட நன்னயம தாயாடி
பற்குணனும் நல்லபிர பாசதீர்த் தந்தனிலே
விற்பனனு மூழ்கி வெகுதானங்கள் கொடுத்து
மன்னவனு மங்கிரவில் வாகாய்ப் படுத்திருந்தான்
நன்னயம தாகவொரு ஞாபகமும் வந்தனவே
யதுவர் குலத்துதித்தோன் யாம பதிமுகத்தான்
கதனென் கிறவனுமோர் காலஞ் சுபத்திரையின்
வாமமதை யேகூற மன்னவனுங் கேட்டதினல்
தாமதங்கள் செய்யாது தையலையே பார்க்கவெண்ணி
எந்த விதமாக யேகுவோ மென்றவனுஞ்
சிந்தையிலே யோசனைகள் செய்தே சிலநேரம்
தக்க புகழுடைய சன்யாசி போலவுமே
பக்குவமாய் வேடமிட்டுப் பாங்காய்ப் பொதுவரில்லம்
சென்றுமே பிச்சையெடுத் திட்டாற் சுபத்திரையை
நன்ருக வேபார்த்து நாமுங் கோபாலரிட
எண்ணமதைத் தானறிந்து யெந்தவித மாகவுமே
விண்ணவருங் கொண்டாட மெல்லி தனைமணமே
செய்திடுவோ மென்றவனுஞ் சித்தமிசை யேநினைந்து
தையலிட மோகமதாற் சன்யாசி போலானன்
வாரி தனில்நீரை வாரிமேகந் திரண்டு
மாரி பொழிந்தனவே வாகாயந் நேரமதில்
சீலமுள்ள பற்குணனுந் தேகம் நனையாது
ஆலமரப் பொந்தி லமர்ந்திருந்து கண்ணனையே
சிந்தையிலே தானினைந்தான் தேவேந்திரன் மகனும்
அந்தநே ரந்தனிலே ஆயனுமே மஞ்சமிசை

சல்லாப மாகவுமே சத்தியபா மையுடனே
உல்லாச மாய்த்துயிலு முத்தமனு மீதறிந்து
எழுந்து திடீரெனவே ஏந்திழையாள் தானறிய
விழுந்துவிழுந் தேசிரித்தார் மேகவண்ண ரம்மானை
ஆரணங்கு மேயெழுந்து ஆண்டவரே நீர்சிரித்த
காரணத்தை நன்ருய்க் கழறுவீ ரென்றறைந்தாள்
நங்கை மொழிந்தவற்றை நாதனுமே தான்கேட்டுச்
சிங்கார மாகவுமே செப்புவா ரம்மானை
அன்னமே யெந்தனுக்கு அத்தை மகனுன
மன்னவனும் பற்குணனும் மாது துரோபதையால்
தேசமதி லுண்டான தீர்த்தமதை யாடியிங்கு
நேசமொடு வந்து நினைந்தே சுபத்திரையை
சட்டமொடு பார்க்கவென்றே சன்யாசி போலாகிக்
கட்டழகி யித்தருணங் காவலனு மேமழையில்
நனைந்தே கவலையொடு நங்கையே யென்றனையே
நினைந்தான் மரத்தடியில் நேர்மையுட னேயிருந்து
ஆதலினு லுந்தனிட வண்ணலையே போய்ப்பார்க்க
மாதரசே யிப்பொழுது வாருமென்று தானழைத்து
விற்பனரு மன்புடனே வேக முடன்நடந்து
பற்குணன்முன் பாகவந்தார் பார்த்தே பணிந்துநின்ருன்
ஆசி பலகூறி யன்பாயிங் குற்றவகை
மாசில்லா மன்ன வழுத்துவா யென்றறைந்தார்
கேட்டுமே பற்குணனுங் கீர்த்தி யுடையோர்முன்
தாட்டீக மாகவுமே சாற்றுவா னம்மானை
விண்ணவர்கள் கொண்டாடும் வித்தகனே யான்தானும்
மண்ணுலகின் மீதிலுள்ள வாகான தீர்த்தமெல்லாம்
ஆடத் துரோபதையா லையனே நேர்ந்ததினுல்
நாடிவந்தே னென்று நவின்ரு னவர்கேட்டு
பற்குணனை ரைவதக பர்வதத்துக் கேயழைத்து

விற்பனருஞ் சென்று விடுத்தே யதிலிருக்கக்
கட்டளைகள் தான்கொடுத்துக் கண்ணன் துவாரகைக்குச்
சட்டமுடன் சென்றனர்காண் சல்லாப மாகவுமே
சிலகாலம் வாசமதிற் செய்திருந்தான் பற்குண னும்
நலமாக வேயிலங்கும் ரைவதக மாமலையில்
வருட மொருமுறையே வாகாய்ப் பொதுவருக்கு
திருநாளுண் டாகுமந்தத் தெய்திநே ரிட்டனவே
பொதுவர் குலத்துதித்த பூபால ரெல்லோரும்
நதிதனிலே நீராடித் தங்கப் பணிபுனைந்து
தங்கள்தங்கள் பத்தினியைச் சல்லாப மாய்க்கூட்டி
மங்களஞ் சேரந்த வரைக்குவந்தா ரம்மானை
கண்ண னுஞ்சன் யாசிதனைக் கண்டுமே கார்மேக
வண்ணன் பணிந்தனரே வந்தோர்க ளெல்லோரும்
பெரியோரென் றெண்ணிப் பிரியமுட னேவணங்கி
பரிவாக வேநடந்தார் பாவை சுபத்திரையாள்
மங்களஸ்நா னங்களுமே வாகாகச் செய்துகொண்டு
தங்கா பரணமதைத் தையலுமே தான்புனைந்து
துங்க வரைதனக்கே தோகை மயில்போலச்
சிங்கார மாகவுமே தேன்மொழியாள் வந்தனளே
கண்டுமே பற்குண னும் காரிகையின் மீதுமையல்
கொண்டிருந்தா னந்தக் குறிப்பறிந்து கோபாலர்
அன்பா யுரைப்பா ரருச்சுனசன் யாசியிடம்
இன்பாக வென்னுளு மேவியே கானகத்தில்
சஞ்சாரஞ் செய்யுந் தவசியென் தங்கையிள
வஞ்சி சுபத்திரையை வாகாக யிம்மலையில்
கண்டு திடமாகக் காமப்பே யும்பிடித்துக்
கொண்டதுவோ வென்னிடமே கூறுவீர் மாதரசை
மாமணமே செய்துனக்கு வைத்திடுவே னென்றறைந்தார்
வாமமுள்ள பற்குண னும் வாகாக வேயுரைப்பான்

பூபாலா வந்தமிகு பொற்கொடியை மாமணமே
கோபாலா செய்திடவே கூறுவீர் யோசனைகள்
என்று னருச்சுனனு மிம்மொழியை நன்றாகக்
குன்றெடுத்தோ ருங்கேட்டுக் கூறுவா ரம்மானை
சாந்தகுண வானே நீ தானே வலிமையினால்
ஏந்திழையாள் தன்னை யெடுத்துக்கொண் டேகிடுவாய்
மன்னு சமய மதுவருமந் நாள்வரையே
நன்னயமா யின்பமொடு ரைவதகத் தில்வசிப்பாய்
என்றே விடைவாங்கி எம்பெருமா னன்புடனே
சென்றார் துவாரகைக்குத் தீவிரமா யம்மானை
சல்லாப மாகவங்கு தையல் சுபத்திரையென்
றுல்லாச மாக வுருச்செபித்தே வீற்றிருந்தான்
வல்ல பலராமர் வாகாக வீரரொடு
நல்லோர் வசித்திருக்கும் ரைவதக மாவரையில்
சந்தோஷ மாகவந்து சன்யாசி தன்னையுமே
விந்தையுட னேபார்த்து மேதினியின் மீதினிலே
மண்ணாசை யோடுவெகு வான பொருளாசை
பெண்ணாசை யற்ற பெரியவரென் றேநினைந்து
பாதமதில் வீழ்ந்து பணிந்தே பலதேவர்
மாதவரே தாங்கள் வசிக்குமிடங் கூறுமென்றார்
ஆசி பலகூறி யன்பா யருகிருத்தி
நேச முடனே நிகழ்த்துவா னம்மானை
பொதுவர் குலத்துதித்த புண்ணியரே யெந்தனுக்கு
எதுதா னிருப்பிடங்க ளிப்புவியின் மீதிலுள்ள
தேசமெல்லாம் யான்வாசஞ் செய்திடுவேன் தீர்த்தமெல்லாம்
ஆசையுட னாடவென்றே யன்பு மிகுந்தவரே
வந்தேன் சிலதீர்த்த மானதுவைத் தாண்டி
இந்த விடத்தி லிருந்தே மழைகாலம்
சென்றபின்பு சென்றிடவே சிந்தையிலே தானினைந்தேன்

குன்றாத வீரமுள்ள கொற்றவரே யென்றறைந்தான்
வல்லபல ராமருமே வாகாக வேபணிந்து
செல்வரே யாடினதோர் தீர்த்த விசேடமதை
சொல்லுவீ ரென்றனரே துங்கனுமே தான்கேட்டுச்
சல்லாப மாகவுமே தானுரைத்தா னம்மானை
நன்னயஞ்சேர் கின்றபல ராமருமே தானறிந்து
இன்னிலத்தின் மீது யிவர்பெரியோ ராமெனவே
சிந்தையிலே தானினைந்து செய்யசன் யாசிதனை
இந்த மழைகால மெல்லாங் களித்திடவே
எந்த விடத்தி லிருக்கச்செய் வோமெனவே
சிந்தையிலே யோசனைகள் செய்திருந்தா ரம்மானை
விண்ணவர்கள் கொண்டாடு மேன்மை மிகவுடைய
கண்ணனு மந்நேரங் களிப்பாக வந்துநின்று
வாமமிக வேமிகுந்த வல்லசன் யாசிதனை
நேமமுட னேபணிந்தார் நேர்ப னருச்சுனனும்
ஆசி பலகூறி யன்பாக வேயிருந்தான்
தேசுமிக வேமிகுந்த செங்கருட வாகனர்முன்
பாங்கா யுரைப்பார் பலதேவ ரன்னேரம்
ஈங்குமே தான்வீற் றிருக்குஞ்சன் யாசிதனை
மங்கை சுபத்திரையின் மாளிகையிற் கொண்டுவிட்டு
தங்கையிடம் போஜனமுந் தானருந்தி நம்முடைய
தோட்டமதி லேகொடியால் துங்கமொடு கட்டினதோர்
வாட்டி யத்திற்றனே மழைகாலஞ் செல்லுகின்ற
வரைவாசஞ் செய்திடவே மாயா நீ யிப்பொழுது
விரைவா யழைத்தேகி விட்டுவா வென்றனரே
மாயவனும் நல்லதென வாகாய்ச்சன் யாசிதனை
நேயமுட னேயழைத்தந் நேரந் தனிலேகி
மெல்லி சுபத்திரையின் வீடுசென்று தங்கையிடம்
சல்லாப மாகவுமே தானுரைப்பா ரம்மானை

பெண்ணே யிவரும் பெரியோர் நமதுநகர்
திண்ணமொடு வந்திருந்தார் செய்தியறிந் தண்ணலுமே
சென்றுமிக வேடணிந்து செய்யசன் யாசிதனை
குன்ரு வெழிலுடைய கோதா யுனதுமனை
தன்னிலே விட்டுவரச் சாற்றினு ரென்னிடமே
நன்னயமா யிப்பெரியோ ரான தவசியரின்
பாதம் பணிந்து பயபக்தி யாய்த்தினமும்
மாதரசே சொன்னபடி வாகாய் நடந்திடுவாய்
என்றே யருச்சுனனை யின்பமுட னங்குவைத்து
குன்றதனை யேயெடுத்த கோபாலர் சென்றனரே
ஒண்டொடியுங் கண்ண னுரைத்தபடி யேயவரை
உண்டியுண்ணச் செய்து உபசாரஞ் செய்துவந்தாள்
வஞ்சி யழகினையும் வார்த்தை யினிமையையுங்
குஞ்சிரிப்பும் நல்ல குணந்தனையு மேதினமும்
கண்டுமே பற்குண னுங் காரிகையின் மீதுமையல்
கொண்டு மனதடக்கிக் கொண்டுமே தானிருந்தான்
மெல்லி சுபத்திரையும் மேன்மை மிகவுடைய
வல்லவசு தேவரிட மைந்தர் களிலொருவன்
கதனென்போன் முன்னொருக்காற் காவலர்க ளைவருமே
இதமாய்ப் பிறந்தகதை யின்பமுட னேயுரைத்து
பற்குணனின் வீர பலமு மழகினையும்
விற்பன னு மேயுரைக்க மெல்லிகையுங் கேட்டதினுல்
அன்னவனை யெவ்விதமு மன்பாய்த் திருமணமே
கன்னிகையுஞ் செய்யக் கருதி யிருந்தனள்காண்
ஆதலினு லேதினமு மன்ன நடையுடைய
மாதரசி யுங்கபட மானசன் யாசியிட
வாமமும் பேசுகின்ற வார்த்தைகளும் வீரமுமே
தாமரைப்பூப் போன்றசெங்கை தன்னிலே நன்ருக
விற்பிடித்துக் காய்த்திருக்கும் விந்தை தனைப்பார்த்துப்

பற்குணனே வென்றுவந்தப் பாவை மனதினிலே
சந்தேகந் தானுகிச் சன்யாசி முன்போடி
வந்து பணிந்து வழுத்துவா னம்மானை
ஐயனே பூவினிலுண் டாகியதோர் தீர்த்தமெல்லாந்
துய்யா கனிந்தாடித் துங்கமுள்ள தேசமெங்கும்
சென்றவரா லங்குமுள்ள தீர்த்த விசேடமதை
நன்ருக வென்முன் நவிலுமென வேகேட்டு
வல்லோனுஞ் சொல்லி வருகின்ற வேளையிலே
செல்வக் குருநாட்டுச் செய்தியுமே வந்தனவே
மெல்லியுமே சன்யாசி வேடந் தரித்தவர்முன்
சல்லாப மாகவுமே சாற்றுவா னம்மானை
சிந்தை மகிழ்வாயிந் திரப்பிரஸ்த நன்னகரின்
விந்தைதனை யோதிவந்த மேன்மையுள்ள புண்ணியரே
அந்தமிக வேமிகுந்த ஐவரொடு வெங்களத்தை
குந்தியுமே தான்சுகமோ கோதை துரோபதையின்
மூல மருச்சுனரு மோகமொடு தீர்த்தமதைச்
சீலமுட னுடவென்றே சென்றதுவாய்ச் சொல்லுகின்ருர்
கண்டீரோ செப்புமென்ருள் காவலவ னுள்மகிழ்வு
கொண்டுமே கன்னிகைமுன் கூறுவா னம்மானை
மின்னரசே யுந்தனத்தை மேன்மையுள்ள குந்தியுமே
நன்னயஞ்சேர் பாண்டவரும் நங்கையே தான்சுகமே
பற்குணற்கு யாத்திரைகள் பாங்காக வேமுடிந்தும்
விற்பனன்றன் னுடேக வில்லை துவாரகையின்
பட்டணத்திலேமகிழ்ந்து பண்பாய்ச்சன் யாசியைப்போற்
கட்டழகன் வேடமிட்டே கன்னியா மாடமிசை
உத்தமியே நீபார்க்க வுல்லாச மாய்த்தினமுஞ்
சித்தமிக வேமகிழ்ந்து செய்கின்ருர் வாசமென்ருன்
கேட்டுமே மாதுதிடுக் கிட்டாப்போல் மூச்செறிந்து
தாட்டீக மாகத் தலைகுனிந்து நின்றனளே

கன்னிமுகம் நோக்கிக் காவலனு மேயுரைப்பான்
அன்னநடை மின்னே யருச்சுன னும் யான்தானே
மாதரசே நல்லசுப மான தினத்தினிலே
காதலியே யான்மணர்வேன் கன்னியே யென்றறைந்து
மன்னன் கொடியால் வகுத்த மனைதனிலே
நன்னயமாய்ச் சென்றனனே நங்கையுமே பள்ளியறை
தன்னிலுள்ள மஞ்சமிசை தையலுமே போய்ப்படுத்தாள்
உன்னிதமாய்ச் செங்கதிரோ னேடி யொழிந்தனனே
மங்கையுமே பற்குணன்மேல் மையலுமே கொண்டதினல்
அங்கஜனுங் கன்னலின்வில் லைந்துமலர் பூட்டியெய்தான்
பஞ்சணையிற் சோகமுற்ருள் பார்த்துமே சேடியர்கள்
அஞ்சியே தேவகிமுன் னன்பாக வேயுரைத்தார்
வேகமுட னேடிவந்து மெல்லி சுபத்திரைமுன்
பாகவுமே தானிருந்து பாவை மொழிந்தவற்றை
நன்னயம தாய்க்கேட்டு நங்கை வசுதேவ
மன்னரிடம் வந்து வழுத்துவா ளம்மானே
வாட்டியத்தி லேகொடியால் வாகா யமைத்துவைத்த
வாட்டியத்தி லேமகிழ்வாய் வந்திருக்குஞ் சன்யாசி
பற்குணனு மன்னவன்மேற் பாவைவெகு மோகமுற்று
விற்பனியு மேசோர்ந்து விட்டாள் விரைவினிலே
மன்னவனே யோசனைகள் வாகாகச் செய்யுமென்று
நன்னயம தாக நவின்ருள் வசுதேவர்
பாலன் கிருஷ்ணருக்கும் பண்புடனே மற்றவர்க்கும்
சீல முடனேயிச் செய்திதனைத் தானுரைத்து
பன்னிரண்டாம் நாளினிலே பாங்காய் முகூர்த்தமது
மன்னவரு மேமகிழ்ந்து வைத்தார்கா ணம்மானே
வல்லபல ராமருமே மாது சுபத்திரையை
வில்லோ னருச்சுனர்க்கே மேன்மையுட னேகொடுக்க
சம்மதியில் லாததினல் தானேயிச் சங்கதியும்

செம்மை யுடனே தெரியா திருக்கவென்று
சிந்தையிலே யோசனைகள் செய்துமே கோபாலர்
அந்தரங்கந் தன்னை யறையாதொருவருக்கும்
செய்ய சுபத்திரையின் தேகமதி லேயெனமோ
தெய்வகதி யாலவதி சேர்ந்த படியாலே
சிந்து நடுவிருக்குந் தீவிலே யீசனுக்கு
நந்தரே மூன்றுபத்து நான்குநா ளின்வரையில்
நன்றாய்த் திருநாள் நடக்கவே போகிறதால்
இன்றைக்கி நான்காநா ளெல்லோரு மேமகிழ்ந்து
சென்றிடுவீ ரென்று திடமாய் விளம்பரங்கள்
நன்றாகச் செய்துபறை நன்னயமாய்ச் சாற்றிவித்தார்
பொதுவர்க ளுங்கேட்டே பூரித்து வுள்ளமுமே
சதிராகச் சென்றார் சமுத்திரத்தின் தீவினுக்கே
செய்ய வருச்சுன னுஞ் சிந்தைமிக வேகனிந்து
துய்ய சுபத்திரைமுன் சொல்லுவா னம்மானை
கன்னிகையே யிப்பொழுது காந்தருவ மாமணமே
நன்னயமாய்ச் செய்துகொண்டு நாமருவு வோமெனவே
மர்தரசி கேட்டு மனதிற் கிலேசமொடு
காதலுள்ள மன்னனுக்கோர் காரணமுஞ் சொல்லாது
விண்ணவர்கள் கொண்டாடும் மேன்மை மிகவுடைய
கண்ணனையே சிந்தையிலே காரிகையு மேநினைந்தாள்
வாட்டியத்தி லேகொடியால் வாகா யமைத்திருக்கும்
வாட்டியத்தி லேகிமன்னன் வானுலகை யாளுகின்ற
தந்தையா மிந்திரனார் தன்னை மனமதிலே
சிந்தித்தா னன்னேரஞ் செப்பமுட னம்மானை
மைந்தன் நினைந்ததுவை வாசவனுந் தானறிந்து
சிந்தைமிக வேமகிழ்ந்து செய்ய முனிவரொடு
அட்டதிக்குப் பால ரரம்பையர்கள் தேவரையே

சட்டமுடன் தானழைத்தே சல்தி துவாரகையின்
பட்டணத்தைத் தான்தேடி பால னிருக்குமிடஞ்
சட்டமுட னெல்லோரும் தான்வந்தா ரம்மானை
தங்கை நினைந்தவற்றைத் தாரணியெல் லாம்புகழுஞ்
செங்கண்மால் தானறிந்து செய்யபல ராமருமே
தூங்குகின்ற வேளையிலே துய்ய வசுதேவர்
பாங்கான ரோகணியாள் பண்புடைய தேவகியாள்
வல்லகத னக்ரூரன் மங்கைதிரு லெட்சுமியாள்
மெல்லி யுருக்குமணி மேன்மைமிகு வாகுகனைச்
சட்டமுட னேயழைத்துத் தானே துவாரகையின்
பட்டணத்தி லிந்திரனைப் பாங்காக வந்துகண்டு
மெல்லி சுபத்திரைக்கும் வீரமுள்ள பற்குணர்க்குஞ்
சல்லாப மாகமணம் தானடத்து மென்றறைந்தார்
வாசவனுந் தான்கேட்டு மன்ன னருச்சுனனை
நேசமொடு சிங்காரம் நேர்மையுடன் செய்துவைத்தான்
விண்ணவருங் கொண்டாடும் மேன்மை மிகவுடைய
கண்ண னு மந்நேரங் களிப்பாக வேயெழுந்து
செய்ய சுபத்திரையைச் சிங்காரஞ் செய்துவித்து
தையலர்கள் சூழ்ந்துவரத் தான்கூட்டி வந்தனரே
மாப்பிள்ளை பெண்தன்னை மணவரையி லேயிருத்தி
காப்புக் கரந்தனிலே காசிபருங் கட்டிவைத்து
ஓமமிக வேவளர்த்தி யுண்மையுள்ள மந்திரங்கள்
வாமமுட னேயுரைத்து வாகாய்ச் சடங்கனைத்தும்
செய்தே முடித்தனரே சிந்தைமிக வேமகிழ்ந்து
செய்ய சுபத்திரைக்குத் தேர்விசயன் கையாலே
நல்ல சுபமான நாழிகையின் மங்கிலியஞ்
சல்லாப மாகத் தரிக்கவே செய்தனர்காண்
வாசவனுந் தேவருமே மாமுனிவோர் கண்ண னுமே
ஆசி பலகூறி யன்பாக வேயிருந்து

உண்டிதனை யெல்லோரு முண்டு விடைவாங்கி
விண்டலத்தி லேவசிப்போர் வேகமொடு சென்றனரே
வாமமிகு கோபாலர் மன்ன னருச்சுனன்முன்
நேம முடனே நிகழ்த்துவா ரம்மானை
பாங்காக நீயுமிரு பத்திரண்டு நாள்வரையில்
நீங்காம லிங்கிருந்து நேசா சுபத்திரையை
எந்தன் ரதமீதி லேற்றியே யின்பமொடு
இந்த்ர பிரஸ்தமதிற் கேகுவாய் மன்னவனே
நன்னயமா யிங்குமொரு நாட்கூட வேயிருந்தால்
உன்னிதமாய்த் தீவுசென்ற வுத்தமர்க ளெல்லோரும்
வந்திடுவா ரிந்த வகையைப் பலராமர்
சிந்தையிலே தானறிந்தாற் றீங்குவந்து நேர்ந்திடுங்காண்
என்றே விடைவாங்கி எம்பெருமாள் வேகமொடு
சென்றாரே தீவினுக்கே தீரமுட னம்மானை

அருச்சுனனை விபிருது வழிமறித்து
யுத்தஞ் செய்தல்

மங்கை சுபத்திரையை மஞ்சமிசை யேதினமுஞ்
சிங்கார னுங்கூடிச் சிந்தைமிக வேமகிழ்ந்து
பாங்காக வங்குமிரு பத்திரண்டு நாள்வரையில்
நீங்காம லேயிருந்து நேர்மையுள்ள கோபாலன்
துங்க ரதந்தனிலே தூய்மை யுடையதுர
கங்களையே பூட்டினனே காவலவ னம்மானை
மெல்லி சுபத்திரையவ் வேளையிலே வந்துநின்று
வல்லோன் முகம்பார்த்து வாகாக வேயுரைப்பாள்
மன்னவனே யிந்தரத மானதிலே சாரதியாய்
நன்னயம தாகவுமே நானிருந்து மேநடத்து
கின்றவித்தை பாருமென்று கெம்பீர மாயறைந்தாள்
நன்றெனவே சம்மதித்தந் நாழிகையி லேசகடம்

தன்னிலே யேறினனே சட்டமொடு மாதரசி
உன்னிதம தாய்த்தேரை யோட்டினு னம்மானை
பட்டணத்தி லேயிருக்கும் பாவையரு மாடவரும்
சட்டமுட னேயிரைந்தே தையல் சுபத்திரையை
சன்யாசி யாயிருந்த சண்டாளன் பற்குணன்முன்
பின்யோசி யாமலுமே பெண்ணரசைத் தானெடுத்து
வேகமுட னேரதத்தின் மீதேற்றி வஞ்சகனும்
போகின்ரு னென்றே புலம்பினு ரந்நகரோர்
நன்னகரை யெந்நாளும் ரைவதக மாமலையில்
உன்னிதம தாயிருந்தே யுண்மையொடு காத்திருப்போன்
வல்ல விபிருதுவும் மாநகரி லுள்ளவர்கள்
எல்லோருங் கூடி இரைந்துகொண்டு வாரதுவும்
மெல்லி சுபத்திரையாள் மேன்மை யுளரதத்தைச்
சல்லாப மாயோட்டித் தானேசெல் கின்றதுவும்
கட்டழகன் தான்பார்த்தே கண்ணபிரான் முன்னமுமே
சட்டமுட னேயுரைத்த சங்கதியு மேநினைந்து
வெளிக்குக் காட்டாதிருக்க வேண்டுமென வேகமொடு
களிப்பாகச் சேனைகளைக் காவலனு மேகூட்டி
வந்தெதிர்த்தான் வில்லை வளைத்தே சரந்தொடுத்து
அந்தநே ரந்தனிலே யன்பா யருச்சுன னும்
வல்லமையாய் வில்லை வளைத்தே பகழிவிட்டுச்
சல்லாபன் வந்த சரத்தைத் துண்டாக்கினனே
கண்டு விபிருதுவுங் கண்கள் சிவந்துசினங்
கொண்டு விரைவிலொரு கோடிகணை யேவினனே
பற்குண னு மேவெகுண்டு பாங்காக நூறுகணை
விற்பன னு மேவிடுத்து மேன்மையுள்ள வாளிகளை
துண்டாக்கிப் பின்னுந் தொடுத்தே சிலகணையை
தண்டாமரைக் கரத்தான் தானேவி யேவிடுத்து
துவசங் குதிரைகளைச் சுந்தர னு மேயறுத்துக்

கவச மதைப்பிளந்து கைவில்லைத் தானொடித்து
தேரைப் பொடிப்பொடியாய்ச் செய்து விரைவினிலே
தாரையுள்ள பாணந் தனைச்சிலது மேவிடுத்து
ஓடிடவே சேனைகளை யுத்தமனுஞ் செய்தனனே
வாடுகின்ற பேர்களையே வல்ல விபிருதுவும்
நின்றிடவே செய்தோர் நிமிடந் தனில்விரைவாய்
சென்றுமே பற்குணனைச் செய்ய சுபத்திரையை
நில்லுமெனக் கூவி நேர்பனுமே யங்குசென்று
சல்லாப மாகவுமே தானுரைப்பா னம்மானை
வல்லசன் யாசியைப்போல் வந்ததுவும் பட்டணத்தில்
மெல்லி சுபத்திரையின் மீதுமையல் கொண்டதுவும்
மாயவனுந் தங்களுக்கே மாமணஞ்செய் வித்ததுவும்
நேயமொடு தீவினிக்கே நேர்பருமே சென்றதுவும்
எல்லாந் தெரியவரு மேன்பூசல் செய்ததென்றால்
வல்லபல ராமர் மனமிகவு மேமகிழ
என்றே விடைவாங்கி யின்பமுட னேநடந்து
சென்றான் துவாரகைக்குச் சேனைகளைக் கூட்டியுமே
மெல்லி சுபத்திரையாள் வேகமுட னேரதத்தைச்
சல்லாப மாகவுமே தானடத்திச் சென்றனளே
சிந்தைமகிழ் வாயிந் திரப்பிரஸ்த மாநகரில்
வந்தா ரிருபேரும் வாகாக வம்மானை
பற்குண னு மப்பொழுது பாங்காய்த் தருமரையும்
விற்பனனுஞ் செய்யமத வீமனையு மேபணிந்து
தம்பி யிருபேர் தனைத்தழுவி யேநடந்து
சம்ப்ரமம தாகவுமே தாயான குந்திதனை
வந்து பணிந்து மகிழ்வாக வேயிருந்தான்
அந்த நேரந்தனிலே யன்பாய்ச் சுபத்திரையும்
குந்தி மலரடியிற் கோதை பணிந்தெழுந்து
அந்தமிக வுள்ள அரிவை துரோபதைமுன்

சென்றே வணங்கிநின்முள் செய்ய துரோபதையும்
நன்ருயா சீர்வதித்தாள் நட்புடனே யம்மானை
சுந்தரமே வாய்ந்திலங்குந் தோகை சுபத்திரையாள்
அந்தப் புரத்தினிலே யன்பாக வீற்றிருந்தாள்
சிந்து நடுவிருக்குந் தீவினுக்கே சென்றிருந்தோர்
வந்து சுபத்திரையை மன்னவனும் பற்குணனும்
கொண்டுசென்ற சங்கதியைக் கோகுலரு மேகேட்டுச்
சண்டைசெய்ய வென்றுமனந் தன்னிலே தானினைந்து
சேனைகளை யொன்ருகச் சேர்த்தே விரைவினிலே
வானவ ரெல்லாம்புகழும் வல்ல பலராமர்
மாய னிடந்தனிலே வந்தேயிச் சங்கதியை
நேய முடனே நிகழ்த்தினு ரம்மானை
வல்லகோ பாலருமே வாகாக வேயுரைப்பார்
சல்லாப மான தனஞ்செயனைச் சண்டைசெய்து
வெல்ல முடியாது வீண்யோ ஜனைவேண்டாம்
சொல்லினே னுண்மைதனைச் சுந்தரரே யிப்பொழுது
மெல்லி சுபத்திரைக்கி மேன்மையொடு சீதனங்கள்
உல்லாச மாகவுமே யுத்தமரே கொண்டுசென்று
கொடுத்தால் நலமெனவே கூறப் பலராமர்
விடுத்துமே கோபமதை வீற்றிருந்தா ரம்மானை
மாதவனு மேமகிழ்ந்து மங்கை சுபத்திரைக்குச்
சீதனங்கள் வேண்டியதைச் சேகரித்து வீரரொடு
சிந்தைமகிழ் வாயிந் திரப்பிரஸ்த மாநகரில்
வந்தார்க ளிந்த வகையறிந்து பாண்டவர்கள்
எதிர்கொண்டு தானழைத்தே யெல்லோரை யுங்கூட்டிச்
சதிராக வந்தார்காண் சட்டமுட னம்மானை
கொண்டுவந்த சீதனத்தைக் கோதை சுபத்திரைக்குக்
கண்டோ ரெல்லாம்புகழக் கண்ணனுமே தான்கொடுத்து
சந்தோஷ மாகவுமே தானிருந்தார் மற்றவரும்
வந்தார் துவாரகைக்கு மங்களமா யம்மானை

அபிமன்ன னுற்பவம்

மெல்லி சுபத்திரையை மேன்மைமிக வேமிகுந்த
வல்லோ னருச்சுனனும் வாகாய் மலர்விரித்த
பஞ்சணையின் மீதினிலே பாங்காக வேதினமும்
வஞ்சிதனைக் கொஞ்சியுமே மாரன் ரதிபோல
மருவி விளையாடி வாகாய்ச் சுருள்கொடுத்து
இருவருமே யன்பா யிருந்தனர்கா ணம்மானை
மாதவியுங் கர்ப்ப வதியாக வேயிருந்து
மாதமீ ரைந்துசென்று மங்கை மதலைதன்னை
நேமமுடன் பெற்றெடுத்தாள் நேர்மையுள்ள பாண்டவர்கள்
வாம முடையஅபி மன்னுவென நாமமிட்டார்
மைந்தன் றனைவளர்த்து மன்னவனும் பற்குணனும்
ஐந்துவய தானபின்பு அன்பாய வன்றனக்கே
வித்தைகளைச் சொல்லிவைத்து மேன்மையொடு பன்னிரண்டில்
உத்தமனுந் தானே யுபநயனஞ் செய்துவித்து
வல்லநல்வில் வித்தைகளை வாகாகக் கற்றுவைத்து
சல்லாப மாகவுமே தானிருந்தா னம்மானை
வில்லிலுமே மல்லிலுமே வேந்த னபிமனுவும்
வல்லவனு யன்புடனே வாழ்ந்திருந்தா னம்மானை

அக்கினி பகவான் அருச்சுனனுக்கு
தேர், குதிரை, அம்புறுத்தூணி
முதலியவை கொடுத்தல்

வில்லாளி பற்குணனும் மேன்மை மிகவுடைய
வல்லகோ பாலருமே வாகாக வேயெழுந்து
தங்கள் தங்கள் பத்தினியைச் சல்லாப மாய்க்கூட்டி
துங்க முடனே துரிசாக வேநடந்து
நல்லோர் யமுனு நதியோரம் வந்தமர்ந்து
சல்லாப மாகவுமே தையலர்கள் தன்னுடனே

கூடி விளையாடிக் கொண்டிருந்து சிந்துகவி
பாடி யிருந்தனர்காண் பண்புடனே யம்மானை
அக்கினிமா தேவருமே யந்தணர்போல் வேடமிட்டே
பக்குவமாய் வந்திவர்முன் பாங்காக வேயுரைப்பார்
மெத்தப் பசியாகி மேன்மையுள்ள புண்ணியரே
இத்தருணம் வந்தே னெவர்களுமே யெந்தனுக்கு
ஆகாரந் தான்கொடுக்க வன்பரே சக்தியில்லை
வாகாய்நீ ரென்பசியை மாற்றுவீ ரென்றறைந்தார்
பற்குண னு மேமகிழ்ந்து பார்த்தான் கோபாலரையே
விற்பனருங் கண்காட்ட வேந்தனுமே யந்நேரம்
விப்பிரரின் முன்னே விசயன் மனமகிழ்ந்து
செப்ப முடன்முனே செப்பிடுவா னம்மானை
அந்தணரே யெந்தனிட மன்பாக வின்றோடி
வந்துரைத்த தாலே மகிழ்வடைய வேயுமக்கு
பக்குவமாய்ப் போஜனமே பண்ணிவைப்பே னென்றறைந்தான்
அக்கினிதே வன்மகிழ்ந்தே யன்பாக வேபுகல்வான்
அன்பாகக் கேட்டருள்வீ ரக்கினிதே வன்யானும்
இன்பமுட னேயிங் கிருக்குங்காண் டாவனத்தை
நான்புசிக்க வேண்டுமென நன்று யதிற்புகுந்து
தான்புசிக்கும் வேளையிலே சட்டமுட னிந்திரனும்
மஞ்சை யழைத்ததிக மாரிபெய்யச் செய்தெனையே
மிஞ்சாம லேதுரத்தி வேந்தே விடுவதினல்
வெகுநாள் முயர்ச்சிசெய்தும் வீணுகப் போகிறது
தகுதியா யந்தவனந் தன்னையே தட்சகனும்
காவலனே யன்புடனே காவலுமே செய்திருப்பான்
ஆவலுட னேகுருநா டன்னவனு மித்ததியே
சென்முன் மனமகிழ்ந்து சீக்கிரமாய்ச் சொன்னபடி
நன்முய் வனந்தனையே நான்புசிக்க விப்பொழுது

சித்தமிக வேமகிழ்ந்து செய்ய வருச்சுனரே
உத்திரவு மேகொடுப்பீ ருத்தமரே யென்றறைந்தான்
பற்குண னுங் கேட்டுப் பகருவா னக்கினிமுன்
விற்பனனே யெங்களொடு விண்ணுட்டி லேவசிக்கும்
வல்லவனு மிந்திர னும் வந்தெதிர்த்தா லாயுதங்கள்
இல்லாது யாங்களுமே எந்தவிதஞ் சண்டைசெய்வோம்
என்றே யறைந்தனனே யிம்மொழியை யக்கினியும்
நன்ருகக் கேட்டுவந்த நாழிகையி லேமகிழ்ந்து
வல்ல வருணனையே வாகாய் வரவழைத்துச்
செல்வன் முகம்நோக்கிச் செப்புவா னம்மானை
நற்சோம தேவனிஞல் நன்ரு யுனக்களித்த
விற்றூணி தேர்குதிரை மேன்மை மிகுந்தகதை
சக்கரத்தைக் கொண்டுவந்து சல்லாப மாயிவர்க்கு
இக்கணத்தி லீய்ந்திடுவீ ரென்ரு ரவர்கேட்டு
விற்றூணி தேர்குதிரை மேன்மை மிகுந்தவற்றை
பற்குண னுக் கீய்ந்தனரே பாங்காக வம்மானை
திக்கோர் புகழ்ந்தேற்றுஞ் செங்கெருட வாகனர்க்கு
சக்கரமோ டுங்கதையைச் சல்லாப மாய்க் கொடுத்தார்
வல்ல வருச்சுன னும் வாகாய் ரதமீது
உல்லாச மாயேறி யுத்தமனு மேகவசம்
பூண்டு மனமகிழ்ந்து பூமா னுஞ் செங்கரத்திற்
காண்டீ பத்தைவளைத்தே காவலனு மேயிருந்தான்
விண் ணுலகோர் கொண்டாடு மேன்மை மிகமிகுந்த
கண்ண னு மேநல்ல கவசமதைப் பூண்டுகொண்டு
தேர்மீ தினிலேறிச் செய்யகோ பாலருமே
பார்மேல் விளங்கினரே பாங்காக வம்மானை

## அக்கினி பகவான் காண்டா வனத்தை யழித்தல்

அக்கினி மாதேவருமே யன்பா யிருவரிடம்
தக்க விடைவாங்கிச் சந்தோஷங் கொண்டுசென்று
வல்லமை யாய்க்காண்டா வனம்புகுந்து மேசூழ்ந்து
சல்லாப மாயெரிக்கச் சட்டமுட னங்கிருக்கும்
சிங்கங் கரடிபுலி செந்நாய்விலங் கினத்தைப்
பங்கமே செய்தனவே பார்மீதி லேயிருக்கும்
வாம முடைய மரங்களையெல் லாந்தகித்து
நேமமுட னக்கினியும் நேர்மையுட னங்குலவும்
ஜெந்து பறந்தேகும் ஜெந்தை விரைவினிலே
வெந்துநீ ருக்கியுமே விட்டனவே யம்மானை
வல்லகோ பாலருமே வாமமிகு பற்குணனுஞ்
சல்லாப மாகவனந் தன்னைரத மீதிருந்து
விண்ணோர் பயந்தோட வேகமுடன் சுற்றியுமே
மண்ணோர் புகழ்ந்திடவே வந்தாரன் னேரமதில்
சீல முடனே சிலபட்சி தப்பிடவே
மேலே பறந்துசெல்லும் விந்தைதனைப் பற்குணனும்
வல்லகோ பாலருமே வாகாக வேயறிந்து
செல்லுகின்ற பட்சிகளைச் சீக்கிரத்தி லம்பாலும்
சக்கரத்தி னாலும் தலையை யறுத் தேவீழ்த்தி
அக்கினிக்கு மேயுதவி யன்புடனே செய்திருந்தார்

## கோபால ரருச்சுனரோடு தேவர்கள் போர்செய்தல்

அக்கினியும் பற்று மனற்சகிக்க மாட்டாது
அக்கணமே வாசவன்முன் னன்புடைய தேவருமே
சென்று முறையிட்டாரே தேவேந் திரன்பார்த்துக்
கன்றி மனமுடைந்தக் காலையிலே மேகமதால்

வாரிதனில் நீரை வாரியே விண்கிளம்பி
மாரிபொழிந் திடவே வாசவனுஞ் செய்தனனே
வன்னியுமே யோர்புரத்தில் வாகா யணைந்திடவே
உன்னிதம தாய்ப்புகைக ளோங்கி வனஞ்சூழ்ந்து
கொண்டுபல சீவனையே கொன்றனவே பற்குணனுங்
கண்டுமிக வேவெகுண்டு காண்டீபத் தைவளைத்து
வல்ல பகழிகளை வாகாக வேவிடுத்துச்
சல்லாப மாகச் சரக்கூடங் கட்டிவைத்தான்
தக்ஷகனின் பெண்டீர் தனையன் தலைவெளியிற்
பக்ஷமுட னேயிருக்கப் பாங்காக வேவிழுங்கி
கொண்டு வெளியேறக் கொற்றவனு மந்நேரங்
கண்டு வொருமா கணைவிடுத்தே சென்னிதனை
சட்டமொடு துண்டுசெய்தான் தவ்வியஸ்வ சேனனெனுங்
குட்டிப்பாம் பந்தரத்திற் கூசலுட னேகுதிக்க
வாசவனுந் தானறிந்து வாயுவதை யுண்டாக்கி
நேசன் மகன்றனையே நேர்மையாய்த் தப்பிவித்துக்
கொண்டானே பற்குணனுங் கொக்கரித்தே யீதறிந்து
அண்டரின்மேல் வேணபல அஸ்த்திரத்தை யேதொடுத்தான்
அட்டதிக்குப் பாலகரு மந்தரத்தில் வாழ்வோருஞ்
சட்டமுட னஸ்த்திரங்கள் தானே விடுத்தறுத்தார்
திக்கோர் புகழ்ந்தேற்றுஞ் செய்யகோ பாலருமே
சக்கரத்தை யேவிடுத்தார் சல்லாப மாகவுமே
பற்குணனு மேவெகுண்டு பாணம் பலகோடி
விற்பனனு மேவிடுத்தான் வேகமுட னம்மானை
தேவர் சயினியத்திற் சென்றுகைகால் வேறாக
யாவரையுந் தானே யதமாக்கி விட்டனவே
வாகான விந்திரனும் வாட்டமுற்று னென்றறிந்து
ஆகாய வாணியுமே யன்பாக வேயுரைப்பாள்

வாசவனே யிப்பொழுது வாடா தேயுன் னுடைய
நேசனுந் தட்சகனும் நீங்கியே யிவ்வனத்தை
அக்கினியும் பற்றுமுன்னே யன்பாய்க் குருநாடு
பக்குவமாய்ச் சென்றனன்காண் பாங்காயிவ் வன்னியினல்
மாண்டானென் றெண்ண மதுவேண்டாஞ் சக்கரத்தை
பூண்டிருக்குஞ் செந்திருமால் போர்விஜய னிவ்விருவர்
வல்லமையும் பூவினிலே வந்து பிறந்தவகை
எல்லாந் தெரிந்திருந்து மிங்குவந்து சண்டைசெய்தாய்
வெல்ல முடியாது வீண்யோ சனைவேண்டாம்
சொல்லினே னென்றறைந்து சுந்தரியு மேமறைந்தாள்
இந்திர னு மேகேட்டு எல்லோரும் பொன்னுலகு
சந்தோஷ மாகவுமே தானடந்தா ரம்மானை
வன்னியுமே காண்டா வனமுழுதை யும்பிடித்து
நன்னயம தாயெரிய நட்புடைய கோபாலர்
மன்ன னருச்சுனனும் வாகாக நின்றுகொண்டு
உன்னிதமாய் மேலெழும்பி யோடு மரக்கரையும்
கொன்றுவன்னி மேல்வீழ்த்திக் கொண்டு மேதானிருந்தார்
கன்றிமன முடைந்தக் கால மசுரகுல
மயனென்போ னுகாய மார்க்கமாய்த் தப்பிடவே
நயமாக வேபாய்ந்தந் நாழிகையில் வந்திடவே
திக்கோர் புகழ்ந்தேற்றுஞ் செய்ய கோபாலருமே
சக்கரத்தை யேயெடுத்தே தான்விடவு மெத்தனித்தார்
அருச்சுனு வுந்த னடைக்கலமென் றேமயனும்
உருக்கமுடன் பாய்ந்து வோடிவந்தா னம்மானை
கண்டு மயன் றனையே காவலவ னுள்மகிழ்ந்து
கொண்டாசி கூறியுமே கொற்றவனு மேயிருந்தான்
சாதகப்புள் நான்கினையுந் தக்ஷகன் சேயன்றனையும்
நீதன்மயன் றனையும் நேர்மையுள்ள வன்னியுமே

விட்டுவிட்டே யந்தவன மெல்லா மனமகிழ்ந்து
சட்டமுட னேபுசித்தே சல்லாப மாகவுமே
பொட்டலாய்ச் செய்துவிட்டே பூமா னருச்சுனனும்
கட்டழகி லேமிகுந்த கண்ணனுமே வீற்றிருக்கும்
இடந்தேடி யக்கினியு மின்பமுட னேநடந்து
திடமா யிருவரின்முன் சென்றூர்கா ணம்மானை
கண்டுமே பற்குணனுங் கண்ணனுமே யுள்மகிழ்வு
கொண்டுவன்னி தன்னையுமே குந்தவைத்தே பக்கமதில்
சல்லாப மாகவுமே தானிருந்தா ரந்நேரம்
வல்லோ னும்பொன்னுலகு வாசவனு மீதறிந்து
மண்ணுலகோர் கொண்டாடும் மன்ன னருச்சுனனுங்
கண்ணனுமே விற்றிருக்குங் கானகத்தில் வந்துகண்டு
சிந்தை மிகமகிழ்ந்தே செப்புவா னப்பொழுது
கந்தமல ரணிந்த கண்ணரே பற்குணனே
வாமமுள்ள காண்டா வனமதனை வன்னியினல்
நேமமுட னேயெரித்து நேர்பரே பொன்னுலகு
தேவருட னேபூசல் செய்துமே வெற்றிபெற்றீர்
ஆவலு டன்யானே யந்நேர முங்களொடு
வல்லமையைத் தானறிய வந்தெதிர்த்தே யன்புடைய
செல்வரே பூசலுமே செய்தே மனமகிழ்ந்தேன்
என்னவரம் வேண்டு மென்று னேயத்ததியே
மன்ன னருச்சுனனும் வாகாக வேயுரைப்பான்
பாசமுட னெந்தனுக்கே பாசு பதாஸ்த்திரமும்
வாசவனே யிப்பொழுது மற்றுமுள்ள வஸ்த்திரமும்
தந்தையே நீர்மகிழ்ந்து தந்திடு வீரென்றனனே
இந்திர னுங்கேட்டு யியம்புவா னம்மானை
மைந்தனே யுந்தன் மனம்போல வஸ்த்திரத்தைத்
தந்திடுவே னிப்போ தகுதியல்ல சங்கரனை

எண்ணியே சிந்தைதனி லேந்த லேநற்றவசு
பண்ணினு லீசனுமே பாசு பதாஸ்த்திரத்தை
சிந்தை மகிழ்ந்து ஜெகதீச னுங்கொடுப்பார்
அந்தநல்ல வேளையெந்த னஸ்த்திரத்தை யீய்ந்திடுவேன்
என்று னேவாசவனு மிம்மொழியைக் கண்ணனுமே
நன்றாகக் கேட்டு நவிலுவா ரம்மானை
இந்திரனே யெந்தனுடு எக்காலு முந்தனிட
மைந்தன் சிநேகமுமே மாரு திருந்திடவே
தந்திடுவீ ரிந்தவரந் தன்னையென் ருேதினரே
இந்திரனு மவ்வா றிருந்திடவு மேகொடுத்து
விடைபெற் றிருவரிடம் விண்ணுலகு சென்றனனே
சடைவில்லா தக்கினியைச் சட்டமுட னேயனுப்பி
வல்லமயன் பற்குணனும் வாகான கண்ணனுமே
சல்லாப மாகரதந் தன்னிலே தானேறி
சிந்தை மகிழ்வாயிந் திரப்பிரஸ்த மாநகரில்
வந்தே தருமரையும் வாகாக வேவணங்கி
இங்கு நடந்தவற்றை யின்பமுட னேயுரைத்து
மங்களம தாகவுமே வாழ்ந்திருந்தா ரம்மானை

பாண்டவருக்கு மயன்சபா
மண்டபம் நியமித்தல்

வல்லமய னொருநாள் வாகாகப் பற்குணன்முன்
சல்லாப மாகவுமே சாற்றுவா னன்புடனே
என்னுயிரைக் காத்ததற்கு யின்பா வேற்கைம்மாறு
மன்னவனே யிங்குசபா மண்டபமொன் றுண்டாக்க
எண்ணினே னன்புடனே யெந்தன் மனம்போல
திண்ணமா யுத்தரவு செய்யுமென்று னம்மானை
பற்குணனு மேகேட்டு பாங்காக வேயுரைப்பான்
விற்பனனே கார்மேக மேனியனுர் சொன்னபடி

செய்குவா யென்றனனே சித்தமிக வேகனிந்து
செய்யகோ பாலரின்முன் சென்று வணங்கிநின்று
நன்னயம தாக நவின்முனிச் சங்கதியை
மன்னன் வசுதேவ மைந்தனிட மம்மானை
வல்லகோ பாலன் மயன்வதனம் பார்த்துரைப்பார்
உல்லாச மாகவுமே யும்பருல கத்தினிலும்
இல்லையென வேயுலகோ ரின்பமுட னேயுரைக்க
சல்லாப மாய்நீ சபாமண்ட பந்தனையே
உண்டாக்கு வாயெனவே யுத்தமரு மேயுரைக்க
தண்டா மரைமுகத்தான் சந்தோஷங் கொண்டெழுந்து
விருஷ பருவனென்னு மேன்மையுள்ள வோரசுரன்
விரிவான பாரினையாழ் வேந்தரிட மேயெதிர்த்து
வென்றுநவ ரெத்தினங்கள் வேணதுவைக் கப்பமதாய்
நன்றாய் வாங்கிக்கொணர்ந்து நாட்டமொடு விந்துவெனும்
பொய்கையிலே முன்னுளிற் போட்டிருந்த வற்றையெல்லாம்
செய்யமயன் மல்லரொடு சென்றெடுத்துக் கொண்டுவந்து
நல்ல சுபமான நாழிகையில் மண்டபத்தை
சல்லாப மாகச் சமைக்கமன திலெண்ணி
செம்பொன்னு லேசுவர்கள் செய்துவதின் மேல்மாடி
சம்ப்ரமமா யுண்டுபண்ணித் தக்கமர கதத்தால்
வரிசையாய்த் தூணிருத்தி வைத்தே பவளமதாற்
பரிவாக விட்டம் பரப்பி மாணிக்கமதால்
செய்ய கொடுங்கைபல செய்து வயிரமதாற்
துய்ய சிகரமதைச் சுந்தரனு மேயமைத்து
நவமணிக ளாற்கதவு நற்செம்பொன் னால்நிலையும்
புவனமதி லுள்ளோர் புகழவே யுண்டுபண்ணி
ஒன்பது மாரெத்தினத்தா லோவியங்கள் தான்வகுந்து
அன்பாக மண்டபத்தை அன்னவனு மேபடைத்தான்
விண்ணுட்டி லில்லா விநோதம் பலவிதமாய்

மண்ணுட்டி லேயமைத்து வைத்தான் மகிழ்வுடனே
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரு மண்டபத்தைப் பார்த்து மனங்கனிந்து
நல்ல சுபமான நாழிகையி லெல்லோரும்
உல்லாச மாகவந்த வூரைவல மாகவந்து
வல்லவருஞ் சிங்கார மண்டபத்தி லேமகிழ்ந்து
சல்லாப மாகவுமே தானே யமர்ந்திருந்து
பூதானம் பொன்தானம் பூசுரர்க்கு மேவெகுவாய்க்
கோதானந் தன்னைக் கொடுத்துமே துங்கமிகு
சிங்கா தனமீது செய்ய தருமருமே
செங்கோல் வழுவாது செய்திருந்தா ரம்மானை
வாம மயனு மதவீம ராஜனுக்கு
நேம முளகதையை நேர்மையுட னேகொடுத்து
பற்குணர்க்கோர் சங்கமதைப் பண்பாக வேயீய்ந்து
விற்பனனுந் தானே விடைவாங்கிச் சென்றனனே
விண்ணோர்கள் மண்ணோர்கள் மேன்மையொடு கொண்டாடுங்
கண்ணனுஞ் செங்கமலக் கண்ணன் துவாரகைக்கு
செல்லவே வேண்டுமெனச் சிந்தையிலே தானினைந்து
வல்லவரு மந்நேரம் வாகாக வேயெழுந்து
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடை யோரானபஞ்ச
பாண்டோர் களினிடமே பாங்காய் விடைவாங்கி
செய்யரத மீதேறிச் சென்ருர் துவாரகைக்கு
மெய்யுடைய பஞ்சவரு மேதினியை யாண்டிருந்தார்

நாரதர் பாண்டவரிடம் பாண்டு கோரிக்கையைக் கூறல்

திரிலோக சஞ்சாரஞ் செய்கின்ற நாரதரும்
பரிவாய்ச் சிவன்நாமம் பாடி விரைவினிலே
சிந்தை மகிழ்ந்திந் திரப்பிரஸ்த மாநகரில்

வந்தனரே பாண்டவரும் வாழு மிடந்தனிலே
கண்டுமே மாமுனியைக் காவலரு முள்மகிழ்வு
கொண்டழைத்தே பீடமதிற் குந்தவைத்து மேவணங்கி
மாசில்லா மன்னவரும் வாய்புதைத்து நின்றனரே
ஆசிபல கூறி யருள்முனிவர் தானிருந்தார்
வல்ல தருமருமே மாதவரைத் தானோக்கிச்
சல்லாப மாகவுமே தானுரைப்பா ரம்மானை
சீலமுட னெவ்வுலகுஞ் சென்று மகிழ்வாக
ஞாலமிசை வந்தமர்ந்த ஞானியே வங்குமுள்ள
விந்தைதனை யந்தமொடு மேன்மை மிகுந்தோரே
எந்த னிடத்தி லியம்புமென வேகேட்டார்
மாமுனியு மப்போது வாகாக வேயுரைப்பார்
வாம மிகவுடைய மன்னவனே நன்னயமாய்
காலன் சபைதனிலே கண்டேனுன் தந்தைதனை
சீலமுட னென்னிடமே செப்பினது யாதெனிலோ
வல்லோனுந் துங்கவிச்சு வாகு குலத்துதித்த
செல்வ மிகுந்தோன் திரிச்சங்கு மாதவத்தில்
அன்பாய்ப் பிறந்தோ னரிச்சந் திரராஜன்
இன்பமாய்த் தன்னுயிர்போ லெல்லா வுயிரினையும்
எண்ணியே நீதிவழு வில்லா தரசாட்சி
பண்ணியே மன்னனுமே பார்மீதி லுள்ளபல
வேந்தரொடு போர்பொருதி வென்று திரைவாங்கிச்
சாந்த குணமுடையோன் தக்க பெரியோரால்
சுந்தரனு மேராஜ சூயயா கந்தனையே
விந்தையொடு செய்ததினல் மேன்மைமிகு பொன்னுலகு
இந்திரனு மேமகிழ்ந்து எக்காலு மின்பனரிச்
சந்திரனைத் தானே சபையி னிடமிருத்தி
பூசிக்கின் றனெனது புத்திர ரிடந்தனிலே

நேசமொடு சென்றுரைத்து நேர்மையுள்ள யாகமதை
பண்ணி யெனக்கந்தப் பதவிகிடைக் கும்படியாய்
புண்ணியரே செய்யுமெனப் பூபதியு மேயுரைத்தார்
ஆதலினு லந்தமொடு வந்தயா கந்தனையே
பூதலத்தின் மீது புரிந்தேசம் ராட்டெனும்பேர்
பெற்றுனது தந்தையுமே பேணும் பதவிதனைக்
கொற்றவனே நீருங் கொடுப்பீ ரிவைதனையே
செய்யமுடி யாதெனவே சிந்தைதனி லிக்காலே
ஐயமெண்ண வேண்டாங்கா ணன்பாக வேபுரிவீர்
என்றுரைத்து மாமுனியு மின்பமுட னேநடந்து
சென்றார் துவாரகைக்குத் தீவிரமா யம்மானை
வல்ல தருமருமே மாமுனிவர் சொற்கேட்டுச்
சல்லாப மாய்நான்கு தம்பியரைப் பக்கமுமே
வைத்துக்கோ பாலரொடு வாகாக யோசனைகள்
சித்த மகிழ்வாகச் செய்வோ மெனநினைந்து

பாண்டவர் கிருஷ்ணனேடு யாகத்தைக்
குறித்து ஆலோசித்தல்

சிங்கார ஞமிந் திரசேனன் றன்னையுமே
துங்கத் துவாரகையாள் துய்யகோ பாலரையே
கூட்டிவர வேவிடுத்தார் கோமானு மேநடந்து
காட்டுவழி யெல்லாங் கடந்துசென்று கண்ணனையே
கண்டறைந்தான் செய்ய கனக ரதமேறிக்
கொண்டிந் திரப்பிரஸ்தம் கோபாலர் வந்தனரே
வல்லபஞ்ச பாண்டவரும் வாகாக வேயெழுந்து
உல்லாச மாகவெதி ருத்தமருஞ் சென்றுகண்டு
சிந்தைமகிழ்ந் தேயழைத்துச் செய்யகோ பாலரையே
அந்தமிகு பீட மதனிலே வீற்றிருக்கச்
செய்துமே யன்புடனே செப்புவா ரப்பொழுது

ஐயனே பூவி லரசரையே வெற்றிபெற்று
சுந்தரம தாய்ராஜ சூயயா கந்தனையே
விந்தை யுடனடத்த வேண்டி யுமையழைத்தோம்
வல்லவரே நீரிதற்கு வாகாக யோசனைகள்
சொல்லுவீ ரென்றே தொழுதுநின்று ரம்மானை
வாமமுள்ள கண்ணனுமே வாகாக வேதவில்வார்
நேமமுள்ள பாண்டவரே நீணிலத்தின் மீதினிலே
வில்லிலே தேர்ச்சியுள்ள வேந்தர் பலபேர்கள்
மல்லிலே கீர்த்திபெற்ற மன்னர் பலபேர்கள்
எத்தனையோ கோடியுண்டு எந்தவித மாகிலுமே
அத்தனைபேர் தன்னை யதமாக்கி விட்டாலும்
சித்தமகிழ் வாய்மகத தேசமதை யாண்டிருப்போன்
மெத்தவலு வுடையான் வீரன் ரணசூரன்
சராசந்த னென்றபெயர் தன்னையே கூறிடிலோ
சராசரங்க ளுள்ளதெல்லாந் தத்தளிக்கு மேயவனை
வெல்லுவதென் றுலருமை வேந்தரே யின்னமுமே
சொல்லுகிறேன் பக்கத் துணையாக வெக்காலும்
வல்ல சிசுபாலன் மற்றும் பலபேர்கள்
சல்லாப மாகவுமே தானிருக்கின் றூர்சூழ்ந்து
வைத்திவர்கள் தன்னையிந்த வாகான யாகமதைச்
சித்த மகிழ்வாகச் செய்ய நினைந்திடிலோ
விக்கினங்கள் நேர்ந்து விடுஞ்சரா சந்தனையே
பக்குவமாய்க் கொன்றுவிட்டாற் பாங்காக யாகமதை
நன்னயமாய்ச் செய்திடலாம் நானிலத்தின் மீதினிலே
மன்னவரே யென்றறைந்தார் மாயவரு மம்மானை
தக்கபுக ழுள்ள தருமருமே தான்கேட்டு
மிக்க விசாரமொடு வீற்றிருந்தா ரன்னேரம்
பாரமத வீமனுமே பாங்காக வேயெழுந்து
வீர முடனே விளம்புவா னம்மானை

விண்ணவர்கள் கொண்டாடும் மேன்மை மிகவுடைய
கண்ணன் சகாயமுமே காண்டீபன் ரெட்டையரும்
யானு மிருந்திடவே யாம பதிவதனந்
தானுமே வாடுவதேன் தக்கோரே யென்றறைந்தான்
வல்ல வருச்சுனனும் வாகாக வேயெழுந்து
செல்வர் முகம்நோக்கிச் செப்புவா னம்மானை
காண்டா வனமெரிக்குங் காலையிலே வன்னியுமே
காண்டீபந் தேர்மாக் கலேயுங் கணைகளையும்
கொடுத்திருக்க வீரங் குடியிருக்கக் குன்றதனை
எடுத்தோ னருளிருக்க வேனே கலங்குகின்றீர்
எந்தவித மாகவுமே யிப்புவியோர் போற்றுசரா
சந்தனையே கொன்றுவிங்கு சல்லாப மாகவுமே
வருவேன் மனமகிழ்ந்து மன்னு யெனக்குவிடை
தருவீரென் றேபணிந்து சாற்றினு னம்மானை
செய்யகோ பாலருமே சிந்தைமகிழ்ந் தேயெழுந்து
துய்ய தருமரிடஞ் சொல்லுவா ரன்புடனே
சாந்த குணமான தருமரே வீமனொடு
வேந்த னருச்சுனனை வீரமொடு யான்கூட்டி
சென்றுசரா சந்தனையே தென்பதிக்கே யோட்டிவித்து
நன்ருக வந்திடுவோம் நானிலத்தின் மீதிலுள்ள
மன்னரொடு போர்பொருதி வாங்கியே கப்பமதை
நன்னயம தாகவுமே ராஜசூ யந்தனையே
வல்லமையாச் செய்திடலாம் வள்ளலே யிப்பொழுது
சல்லாப மாகவிடை தந்தனுப்பு மென்றறைந்தார்
செய்ய தருமருமே சித்தமிக வேமகிழ்ந்து
துய்யகோ பாலரிடந் துங்கமுட னேபுகல்வார்
விண்ணேரு மண்ணேரு மேன்மையுட னேவணங்குங்
கண்ணனே செங்கமலக் கண்ணனே மூவருமே
சென்றுசரா சந்தனுயிர் தென்பதியி லேகிடவே

வென்றுவரு வீரெனவே மேன்மையுட னேயுரைத்து
சாந்த குணமுடையோர் சல்லாப மாகவுமே
வேந்தர் களுக்கு விடைகொடுத்தா ரம்மானை

கோபாலர், வீமன், அருச்சுனன் மூவரும்
சராசந்தனிடஞ் செல்லுதல்

விப்பிரரைப் போலவுமே வேடமதைப் பூண்டுகொண்டு
செப்பமுட னேநடந்து சென்றார்கள் மூவருமே
நதிகள் பலகடந்து நன்னகரங் கள்சிலது
சதிராக வேதாண்டிச் சந்தோஷ மாகவுமே
கிரிவிரச நன்னகரைக் கிட்டியே வேகமொடு
பரிவா யிராவிற் பதினைந்து நாழிகையில்
கோட்டைவழி புக்காது கோமான்கள் மூவருமே
காட்டுவழி யேபுகுந்து கம்பீர மாய்நடந்து
பருவதத்தின் மீதேறிப் பாங்கா யமைத்திருக்கும்
ஒருவுன் னிதமான வுப்பரிகை மீதிருந்த
பேரிகைகள் மூன்றைப் பெலமா யடித்துடைத்து
வீரமொடு மாளிகையை வேந்த ரிடித்துவிட்டு
வீதிவழி சென்று விளையாடி யேகடையில்
காதவரை வீசுகின்ற கஸ்தூரி யும்புனுகும்
சந்தனஞ்சவ் வாதுகளுந் தக்கமலர் மாலைகளும்
விந்தையொடு கொள்ளையிட்டே வேந்தருமே தானணிந்து
வல்லோ ரரண்மனையின் வாசலதை யேகடந்து
சல்லாப மாகமதில் தன்னையே றிக்குதித்து
மூன்றுகட்டை யுங்கடந்து மூர்க்கமுட னேநடந்து
மூன்றுபே ருங்கனிந்து முன்சென்று வங்குசரா
சந்தனையே கண்டுதிரை தன்னில் மறைந்துநின்று
விந்தை யுடனே விளம்புவா ரம்மானை
நிதிபதியே வுந்தனையே நேர்மையுட னேதேடி
அதிதிகள் மூவருமே யன்பாயிங் குற்றமென்றார்

தாரணியோர் போற்றுசரா சந்தனுமே தான்கேட்டு
தீர முடனெதிரே சென்றழைத்து வந்தவரை
பூசித்து மேமகிழ்ந்து பொற்பீட மீதிருக்க
நேச முடனுரைத்தான் நேர்பருமே யந்நேரம்
மதியா தவன்றனையே வாகாய்ப்பொற் பீடமதிற்
சதிராக வீற்றிருந்தார் சட்டமுட னம்மானை
தக்க பலவான் சராசந்த னும்பார்த்து
மிக்க வெகுண்டு விளம்புவா னப்பொழுது
பூசை புரிந்துமிங்கு பொற்பீட மீதிருக்க
நேச முடனுரைத்தேன் நீங்க ளவமதித்து
வல்லமையா யாசனத்தில் வந்திருந்தீ ரிப்பொழுது
சல்லாப மாகவுமே சந்தனத்தை யேபுனைந்தீர்
உங்களின்செய் கைகுணத்தை யுற்றுமே நோக்கிடிலோ
செங்கோல் செலுத்துகின்ற செம்மலைப்போல் தோன்றுதுகாண்
விப்பிரரைப் போலவுமே வேடமிட்டு வந்தவகை
செப்புவீ ருங்களிட தெய்வமீ தாணையிட்டேன்
என்றுசரா சந்த னியம்பினதைக் கோபாலர்
நன்றாகக் கேட்டு நவிலுவா ரம்மானை
திக்கோர் புகழிந் திரப்பிரஸ்த மாநகரைப்
பக்குவமா யாண்டிருக்கும் பண்பார் தருமருமே
விடைகொடுத்தா ருந்தனையே வெல்லவே யாதெனிலோ
சடையாது கேளாய் சராசந்தா விப்பொழுது
அம்புவியி லுள்ள வரசர் களைக்கொணர்ந்து
வம்பாய்ச் சிறையினிலே வைத்துமொரு தேவதைக்கு
சீலமுட னேபலிகள் செய்திடவு மேநினைந்தாய்
காலனூர் சென்றிடவே காலமுமே நேர்ந்ததினால்
விட்டுவிடு மன்னரையே வீண்யோ சனைவேண்டாம்
கட்டழகா வுண்மை கழறினே மன்புடனே
வல்லகோ பாலனென்பேர் மற்றுமிரு வோர்நாமம்

வில்லோன் விசயனிவன் வீரமத வீமனிவன்
சொல்லினே னுண்மையடா துஷ்டனே யிப்பொழுது
வல்லமைகள் பேசாதே வாடாபோர் செய்திடவே
தேவருமே வந்தால் ஜெயிக்குந் திறமுடைய
மூவரிலே யாருடனும் மூடனே வந்தெதிர்ப்பாய்
என்றுரே கோபால ரிம்மொழியை யேயவனும்
நன்றாகக் கேட்டு நவிலுவா னம்மானை
இடையா பலதரமே எந்தனோ டேயெதிர்த்து
மடையா நடுக்கடலில் வாகாக வேயோடி
பட்டணமு முண்டாக்கிப் பாங்காக வங்கிருந்து
விட்டவனும் நீதானே வெல்லவந்தா யிப்பொழுது
சிறுவர் களைப்பெரிதாய்ச் சிந்தையிலே தானினைந்து
உறுதியாய் வந்தனையே உன்னோ டிவர்களுக்கும்
காட்டுகிறேன் தென்பதியே கண்ணா பொறுவெனவே
தாட்டீக மாயுரைத்துத் தன்னுடைய மைந்தனெனும்
வல்லசகா தேவனுக்கு வாகாய் மகுடமது
தொல்லுலகோர் கொண்டாடச் சூட்டினு னம்மானை

வீமன் சராசந்தனை
வதைத்தல்

கச்சைகட்டி யேவெகுண்டு கண்ணன்முன் வந்துநின்று
உச்சிதம தாக வுரைத்திடுவான் யாதெனிலோ
இடையனே மூவரிலே யெந்தனுட னிப்பொழுது
மடையனே யாரேனும் வந்தெதிர்த்தா லுஞ்சரிதான்
என்றே யறைந்திடவே யிம்மொழியைக் கோபாலர்
நன்றாகக் கேட்டு நவிலுவா ரம்மானை
வாம மிகுந்த மதவீமா விப்பொழுது
தாமதஞ்செய் யாதுசரா சந்தனொடு போர்பொருதி
வெல்லுவா யென்றே விடைகொடுத்தார் வீமனுமே
சல்லாப மாயெழுந்து சட்டமொடு கச்சைகட்டி

கண்ணன் றனைவணங்கிக் காளமுகில் போலவுமே
விண்ணவருங் கொண்டாட வீமனுமே நின்றனனே
வல்லசரா சந்தனுமே வாகாகப் போர்க்களத்தில்
உல்லாச மாகவந்து ஓதுவான் வீமனிடம்
வாடா சிறுபயலே மாயனிட சொல்லைநம்பி
மூடா சமர்புரிய மூர்க்கமொடு வந்தெதிர்த்தாய்
வாட்டி யுடலை மதவீமா வுன்றனக்கே
காட்டுகிறேன் தென்பதியிக் காலையிலே யென்றறைந்தான்
வீமனுமே கேட்டு வெகுண்டு விரைவினிலே
நேம முடனே நிகழ்த்துவா னம்மானை
விந்தை மொழிபுகன்றாய் வீரனைப்போ லின்றுசரா
சந்தனே யுன்னுயிரைத் தான்வதைப்பே னெவ்விதமும்
வீரம் பலபேச வேண்டா மடாபயலே
நேரமதைப் போக்கியுமே நில்லாதே யென்றறைந்தான்
வல்லசரா சந்தனுமே வாகாக வேகேட்டுச்
சல்தி மதவீமன் தன்மீது பாய்ந்தனனே
கண்டுமே லாகவத்தாற் காவலவன் தப்பிவித்துக்
கொண்டுமே கொக்கரித்துக் குத்தினு னம்மானை
குத்துதனைத் தட்டியுமே கோபமுட னேகிளம்பி
எத்தியுமே சுற்றி யிடசாரி யாகவந்து
அடித்துமே வேகமொடு அஞ்சாது வந்துகையைப்
பிடித்துமே தள்ளிப் பெருமூச் செறிந்துகொண்டு
உதைத்துமே வீரமொடு ஓங்கியோர் குட்டுவைத்துப்
பதைத்துமே கீழ்விழுந்து பக்குவம தாயெழுந்து
வலசாரி யாயோடி வந்துகா லைப்பிடித்து
பலமாக வேசுழற்றிப் பாரின்மேல் விட்டெறிந்து
இந்த விதமா யிருவருமே யோயாமல்
விந்தையொடு போர்பொருதி வீரங் குறையாமல்
பதினைந்து நாள்வரையிற் பாங்கா யிரவுபகல்

சதிராக நின்றுகொண்டு சண்டைசெய்தா ரம்மானை
வாம மிகுந்த மதவீம ராஜனுமே
நேமமுள்ள கண்ணனையே நேத்திரத்தி னூற்பார்த்தான்
வீமனுமே பார்த்த விதமறிந்து கோபாலர்
தாமதங்க ளில்லாது சாற்றுவா ரன்புடனே
இந்தச் சமயமதி லேந்தலே செய்யசரா
சந்தன் பலங்குறைந்து தானிருக்கின் றூனவனை
வெல்லமுடி யாதெனவே வீண்யோ ஜனேவேண்டாம்
வல்லபல ராமருமே மாய்த்திடவு மேயிவனை
முன்னூளி லேவெகுண்டு மூர்க்கமொடு செல்லுகையில்
அன்னூளி லேமகிழ்ந்து ஆகாய வாணியுமே
மன்னு யிவனை வதைக்கவே வேண்டாங்காண்
இன்னுஞ் சிலநா ளிருந்துமே வீமனினுல்
மாண்டிடுவான் பொல்லாத வம்பனுமே நீர்மாய்க்க்
வேண்டா மெனவுரைக்க வீரமொடு வந்தனர்காண்
ஆதலினு லேவீமா அஞ்சாதுன் தந்தைதனை
நீத முடனே நினைந்தாற் பலம்வருங்காண்
சென்றுசரா சந்தனெடு தீரமொடு போர்புரிகில்
வென்றிடுவா யென்றே விளம்பினு ரன்னேரம்
கேட்டுமத வீமனுமே கெம்பீர மாகவன்று
தாட்டீக மாய்மனதில் தந்தைதனை யேநினைந்து
வல்லபமு முண்டாகி வந்துசரா சந்தனையே
வெல்லமன தில்நினைந்து வேகமுட னேபாய்ந்து
காலைப் பிடித்துக் கரகரவென் றேசுழற்றிச்
சீலமொடு பூவினிலே செய்யமத வீமனுமே
அடித்தே கிழித்தெறிந்தா னவ்வுடலு மொன்ருகி
திடத்துடனே பூசலது செய்தனன்கா ணம்மானை
தக்க மதவீமன் சராசந்தன் றன்னையுமே

பக்குவமாய் மூன்று தரம் பாங்காக வேகிழித்து
எறியவிரண் டும்பொருதி யேகோபித் தேவெகுண்டு
அரிதான யுத்தமது அன்னவனுஞ் செய்தனனே
வாமமுள்ள கண்ணன் மனமிகவு மேமகிழ்ந்து
நேமமுட னோர் துரும்பை நேராக வேகிழித்து
தலைமாறி யேபோட்டுச் சாடைசெய்தார் வீமனுமே
மலையாம லேபாய்ந்து வாகாக வேபிடித்து
முரண்டுபண் ணு கின்றவந்த மூர்க்கனையே வேகமொடு
இரண்டாய்க் கிழித்து எறிந்தான் தலைமாறி
வண்டன் குருதிகக்கி மாய்ந்தனனே யப்பொழுது
விண்டலத்தி லேவசிப்போர் வேணமலர் மாரிபெய்தார்
மன்ன னரண்மனையின் வாசலிலே கொண்டுவந்து
உன்னிதம தாய்ப்போட்டு உள்ளே நுழைந்தனனே
கண்டுசகா தேவனுமக் காலையிலே கப்பமதைக்
கொண்டுவந்து வைத்துநின்றான் கொற்றவனுமேயெடுத்து
சந்தோஷ மாயாசி தான்கூறி யுந்தனிட
தந்தைதனை யேயெடுத்துச் சல்லாப மாயடக்கம்
பண் ணுவா யென்றறைந்து பார்வேந்த னுங்கனிந்து
திண்ணமுட னேநடந்து தேர்ச்சாலை யில்நுழைந்து
வசுவென்போ னுக்குமுன்னாள் வானுலகு வாசவனும்
விசுவாச மாய்க்கொடுத்த மேன்மை யுளரதத்தில்
குதிரை களைப்பூட்டிக் கொற்றவரு மேயேறிச்
சதிராகச் சென்றுசிறைச் சாலைதனி லேயிருந்த
மன்னவர்கள் தங்களையே வாகாக வேவிடுத்து
உன்னிதம தாகவந்த வூரைவல மாகவந்து
சிந்தை மகிழ்ந்திந் திரப்பிரஸ்த மாநகர்க்கு
விந்தையொடு தேர்நடத்தி வேகமொடு சென்று நின்று
வல்ல தருமரடி வாகாக வேபணிந்து

சொல்லினுர் சங்கதியைத் தூயன் மனமகிழ்ந்து
ஆசி யவர்களுக்கே யன்பாக வேகூறி
நேசமுள்ள கண்ணனுக்கே நேர்மையுட னந்தரதம்
தன்னை யினுமாகத் தான்கொடுத்தார் துங்கமுள்ள
மன்ன ரிடத்தில்விடை வாகாக வேவாங்கி
விண்டலத்தோர் கொண்டாட மேன்மைமிகு கண்ணனுமே
மண்டலத்தின் மீதுரத மானதுவைத் தானடத்தி
சென்ருர் துவாரகைக்குத் தீவிரம தாகவுமே
நன்ருகப் பஞ்சவர்கள் நாட்டினிலே தானிருந்து
செங்கோல் வழுவாது செய்து குடிகளையே
மங்களம தாய்க்காத்து வந்தார்க ளம்மானை

அருச்சுனன் உத்திரதிசையில்
திக்குவிஜயம் புரிதல்

வல்ல தருமருமே மந்திரிமார் தம்பியரோ
டுல்லாச மாகவந்து உத்தமனு மேமகிழ்ந்து
சிங்கா தனமேற் சிறப்பாக வேயிருந்து
துங்கமுனி நாரதருஞ் சொன்னயா கந்தனையே
எந்தவித மாய்முடிப்போ மென்றிருக்கும் வேளையிலே
வந்தார் வியாசருமே மாமுனிவோர் தங்களொடு
கண்டு தருமர் களிப்பா யெழுந்துவெதிர்
கொண்டழைத்துப் பீடமதிற் குந்தவைத்துப் போற்றிநின்ருர்
வந்துபணிந்த வருக்காசி தான்கூறிச்
சந்தோஷ மாகவுமே தானிருந்தா ரம்மானை
செய்ய தருமர் சிறந்தயா கந்தனையே
செய்வதெந்த வாறெனவே சிந்தைகுன்றி யேயிருந்தார்
பற்குணனு மேயெழுந்து பாங்காக வேநவில்வான்
விற்பனரே தாங்கள் விசன மடைவதென்ன
வல்லசரா சந்தனையே மாய்த்துவிட்ட பின்புவியில்
இல்லை பலமுடையோ ரிப்பொழுதே யானேகி

மன்னர் தனைச்செயித்து வாங்கியே கப்பமது
நன்னயமாய் வந்திடுவேன் நல்ல யாகந்தனையே
நன்ருகச் செய்திடுவீர் நானிலத்தின் மீதினிலே
என்றே விசய னியம்பினு னம்மானை
சீரார் வியாசமுனி சிந்தைமிக வேமகிழ்ந்து
தாராரு மார்பன் தனஞ்செயன்முன் னேயுரைப்பார்
பக்குவம தாயெழுந்து பற்குணனே நீவடக்குத்
திக்கிலே சென்று ஜெயஞ்செய்து மன்னவரை
வந்திடுவாய் துய்ய மதவீமா கீழ்திசையிற்
சந்தோஷ மாகவுமே தானேகி வேந்தரையே
வென்றுகப்பம் வாங்கியுமே வேகமொடு வந்திடுவாய்
நன்ருய்ச் சகாதேவ ராஜனே தென்றிசையில்
இருக்கின்ற மன்னவர்க ளெல்லோரை யும்ஜெயித்து
பெருக்கமாய்க் கப்பமதைப் பெற்றுமே வந்திடுவாய்
நகுலா குடதிசையில் நாடியே யங்குமுள்ள
வெகுவான மன்னவரை வென்றுகப்பம் வாங்கியிங்கு
வந்திடுவா யென்றுரைக்க மன்னர் விடைவாங்கிச்
சந்தோஷ மாகவுமே தானடந்தா ரம்மானை
வானவருங் கொண்டாட வாகான பற்குண னுஞ்
சேனைகளைத் தான்கூட்டிச் சென்ருன் வடமுகமாய்
அங்கங் கிருந்தமன்ன ரஞ்சாமல் வந்தெதிர்த்துச்
சிங்கநா தங்களுமே செய்தனரே பற்குண னும்
வில்லை வளைத்து வெகுவாய்ச் சரந்தொடுத்து
வல்லமைய தாகவுமே வந்தெதிர்த்த மன்னரின்தேர்
துவச மதையறுத்துத் துண்டாக்கி யோரதத்தைக்
கவச மதைப்பிளந்து கந்துகத்தைக் கொன்றுபின்னுஞ்
சாரதியின் சென்னி தனையறுத்து மேபோட்டு
வீரமொடு சேனைகளின் மீதுசில பாணமுமே

விடுத்தான் படைமுறிந்து வீறிட்டே வேகமொடு
எடுத்தார் பெருவோட்ட மெல்லவரு மம்மானை
வேந்தருமே கண்டிவனை வெல்லமுடி யாதெனவே
சாந்தகுணன் முன்புகப்பந் தன்னையே கொண்டுவந்து
கொடுத்தே விடைவாங்கிக் கொற்றவருஞ் சென்றனரே
திடத்தோடு மேநடந்து தேசதேச ங்களெல்லாம்
சென்றுவங் கங்கிருந்த தேர்வேந்தர் தங்களையே
வென்றுமே கப்பமதை மேன்மையுட னேவாங்கி
பற்குண னு மேமகிழ்ந்து பாங்காகச் சேனைகளை
விற்பன னுங் கூட்டி வெகுதூரஞ் சென்றிருந்த
மன்னரையே வென்றுகப்பம் வாங்கியே வீரமொடு
நன்னயமாய் வேண நதிகளையு மேகடந்து
தேவ ருலகமது செல்லும் வழியிலுற்றுன்
காவல்கள் செய்திருப்போர் கண்டு மறித்தனரே
பற்குண னும் வந்தவகை பாங்காக வேயுரைத்தான்
விற்பனருங் கேட்டு வெகுவாய்த் திரவியத்தை
கொடுத்தா ரதைவாங்கிக் கொண்டுமே சேனையொடு
விடுத்தே கவலைதனை வேகமுட னேதிரும்பி
சிந்தை மகிழ்ந்திந் திரப்பிரஸ்த மாநகரில்
வந்து தருமரையே வாகாக வேபணிந்து
கொண்டுவந்த கப்பமதைக் கொற்றவ னு மேகொடுத்தான்
கண்டு மனமகிழ்ந்து காவலவன் றன்னைமெச்சி
ஆசி பலகூறி யன்பாய்த் தருமருமே
நேச முடனிருந்தார் நேர்ப னுமே யம்மானை
செய்யமத வீம னுங்கீழ்த் திக்கிலே சென்றுசண்டை
செய்த வகைதனையே செப்புவோ மன்புடனே

வீமன் இந்திர திசையில்
திக்குவிஜயம் புரிதல்

வல்லமத வீம னுமே வாகாகச் சேனையொடு

சல்லாப மாகவுமே தானடந்து கீழ்த்திசையில்
வந்தான் பலரோஜ மானனெனும் ராஜனுமே
சந்தோஷ மாகச் சதுரங்க சேனையொடு
வல்லமைய தாகவுமே வந்தெதிர்த்தா னன்னேரம்
வெல்லவுமே வேண்டுமென வேகமொடு வீமனுமே
சண்டைசெய்து வென்றனனே தக்கபடி கப்பமதை
கொண்டுவந்து தான்கொடுத்துக் கொற்றவனுஞ் சென்றனனே
வீமனுமே யந்நேரம் வேகமாய்ச் சேனையொடு
மாமனுர் பாஞ்சால மன்னவனை வந்துகண்டு
வணங்கியே தானுரைத்தான் வந்த விபரமதை
இணங்கியே பாஞ்சால னீய்ந்தானே கப்பமதை
வாங்கியே மற்றுமுள்ள மன்னரிடங் கப்பமதை
நீங்கியே யந்நகரை நேராக வேநடந்து
சென்றுமே யங்குமுள்ள தேர்வேந்தர் தம்மையெல்லாம்
வென்றுமே கப்பமதை மேன்மையுட னேவாங்கி
கொண்டுவங்க தேசமதைக் கொற்றவனுங் கண்ணுலே
கண்டுசிங்க நாதமுமே காவலவன் செய்துநின்ருன்
வல்ல கருணனுமே வாகாக வந்தெதிர்த்தான்
சல்தியிலே வீமனுமே தான்வெகுண்டு மேபாய்ந்து
சேனைகளைத் தும்ஸமது செய்தா னதுவறிந்து
வானவர்க ளஞ்சிடவே மாரி பொழிவதுபோல்
வில்லை வளைத்து வெகுசரத்தை யேகருணன்
சல்லாப மாகவுமே தான்விடுத்தா னம்மானை
கண்டுமத வீமன் கடுங்கோபங் கொண்டுநின்று
தண்டா யுதத்தாலே சாடிக் கணைகளெல்லாம்
நொறுக்கியே விட்டு நொடியிலே மீசைதனை
முறுக்கி விரைவாக மூர்க்கமுட னேபாய்ந்து
வந்து கருணனிடம் மாரதத்தை யேதூக்கி

அந்தரத்தில் விட்டெறிந்தா னங்கர்கோ னுங்குதித்தான்
வீமனொடு சண்டைசெய்ய வேந்தன் முடியாது
வாமமுள்ள மாளிகையில் வாகாகச் சென்றுகப்பம்
கொண்டுவந்து வைத்தனனே கொற்றவனு மேயெடுத்துக்
கொண்டுமே சேனைகளைக் கூட்டியே மற்றுமுள்ள
தேசமெல்லாஞ் சென்று ஜெயித்துமே வேந்தரையே
நேசமொடு கப்பமதை நேர்மையுட னேவாங்கி
சித்தங் கனிந்திந் திரப்பிரஸ்த மாநகரில்
உத்தமனுஞ் சேனையொடு உல்லாச மாகவந்து
செய்ய தருமர் திருவடியி லேபணிந்து
துய்ய மதவீமன் சொல்லி நடந்தவற்றை
கொண்டுவந்த கப்பமதைக் கோமானு மேகொடுத்தான்
கண்டு மனமகிழ்ந்தார் காவலவ ரம்மானை

சகாதேவன் தேட்சண திசையில்
திக்குவிஜயம் புரிதல்

செய்ய சகாதேவன் சேனைகளை யேகூட்டி
துய்ய ரதமீது துங்கமுட னேயேறி
தென்றிசையை நோக்கியுமே சிந்தைமிக வேமகிழ்ந்து
சென்றானங் கங்குமுள்ள தேசமதை யாளுகின்ற
மன்னவரும் வந்தெதிர்த்து வல்லசகா தேவனையே
நன்னயம தாய்ச்செயிக்க நம்மாலா காதெனவே
கொண்டுவந்து கப்பங் கொடுத்தா ரதைவாங்கிக்
கொண்டுமே மற்றுமுள்ள கோமான்கள் தம்மையெல்லாம்
வென்றுமே கப்பமதை மேன்மையுட னேவாங்கிச்
சென்றுகிஷ் கிந்தையெனுந் தேசமதை யாளுகின்ற
வானரங்க ளோடுநின்று வாகாகச் சண்டைசெய்து
தானவரு மேகொடுத்த தக்ககப்பந் தன்னையுமே
மன்னவனு மேவாங்கி வாகான சேனையொடு

நன்னயம தாக நடந்துவந்தா ரம்மானை
நீலனுமே தானெதிர்த்தான் நேர்பன் சகாதேவன்
சீலமொடு வில்வளைத்துத் திவ்யாஸ் திரம்விடுத்து
சின்னபின் னங்களுமே சேனையைச்செய் தான்வெகுண்டு
வன்னி தனை நினைந்தான் வந்துசகா தேவனிட
வல்ல சைனியத்தை வன்னியுமே தானெரித்தார்
தொல்லைவந்து நேர்ந்ததெனச் சுந்தரனு மேநினைந்து
அக்கினியைத் தோத்தரித்தா னன்னேரம் நீங்கினரே
பக்குவமாய் மீதப் படைகளையொன் றுய்ச்சேர்த்து
கொண்டுமே நீலனொடு கொற்றவனு மேயெதிர்த்தான்
கண்டினிமேல் நாம்ஜெயிக்கக் கையாலா காதெனவே
கப்பமதை நீலனந்தக் காலையிலே கொண்டுவந்து
செப்பமுட னேகொடுத்தான் தேர்வேந்தன் வாங்கியுமே
சிந்தைமிக வேமகிழ்ந்து தென்றிசையை நோக்கியுமே
வந்தானங் கங்குமுள்ள மன்னவருந் தானெதிர்த்து
வெல்லமுடி யாதெனவே மேன்மையொடு கப்பமதைச்
சல்லாப மாய்க்கொணர்ந்து தான்கொடுத்தா ரம்மானை
மன்னவனு மேவாங்கி வாகாகச் சேனைகளை
நன்னயமாய்க் கூட்டி நடந்துமே தென்றிசையில்
வந்துமே சிந்தோர மைந்தன் கடோர்க்கஜனைச்
சிந்தையிலே தானினைந்தான் சீக்கிரம தாயோடி
வந்து தந்தைதனை வணங்கினு னன்புடனே
சிந்தை கனிந்துசகா தேவனுமே தானுரைப்பான்
வல்ல கடோர்க்கஜனே வாகாயிச் சிந்துதனைச்
சல்லாப மாகவுமே தாண்டியே சென்றிலங்கை
வேந்தனிட மிந்த விபரமதை நீயுரைத்துச்
சாந்த குணவான் தருங்கப்பந் தன்னையுமே
வாங்கியே வந்திடுவாய் மைந்தனே யுன்றனக்கோர்

நீங்குநே ராதென்வே செப்பிடவு மேகேட்டு
அந்தரத்தி லேகிளம்பி யந்நேர மேபாய்ந்து
சிந்துதனை யேகடந்து சென்றிலங்கை வேந்தனிடம்
வல்லமையாய் வந்த வகையையுரைத் தான்கேட்டு
சல்லாபன் கப்பமதைத் தான்கொடுக்க வாங்கியுமே
வாரிதியை யந்நேரம் வல்ல கடோர்க்கஜனும்
மாருதிபோ லேகடந்து வந்துதந்தை முன்பாக
கொண்டுவந்த கப்பமதைக் கோமா னிடங்கொடுத்து
தெண்டனிட்டுத் தன்னகர்க்கே சென்ருன் மனமகிழ்ந்து
செய்யசகா தேவனுமே சேனைகளை யேகூட்டித்
துய்ய பசும்பொன்னைத் துரகங்கள் மீதேற்றி
கொண்டிந் திரப்பிரஸ்தம் கொற்றவனு மேயடைந்து
கண்டு தருமரையே கப்பமதை யேகொடுத்து
விழுந்து பதமதனில் மேன்மையுட னேபணிந்து
எழுந்து நடந்தவற்றை யின்பமுட னேயுரைத்தான்
சிந்தைமிக வேகனிந்து செய்ய தருமருமே
சுந்தரனுக் காசிபல சொல்லி யருகிருத்தி
கொற்றவரு மேபுகழ்ந்து கொண்டிருந்தா ரங்குமுள்ள
மற்றவருங் கேட்டு மகிழ்ந்திருந்தா ரம்மானை
நாற்றிசையோர் போற்றும் நகுல மகாராஜன்
மேற்றிசையிற் சென்று விபரமதை யேபுகல்வாம்

நகுலன் வருணதிசையில்
திக்குவிஜயம் புரிதல்

செய்ய நகுலனுமே சேனைகளை யேகூட்டி
வையமிசை யுள்ளபல மன்னவரை வெல்லவென்று
சிங்காரஞ் செய்துநின்ற தேர்மீ தினிலேறி
மங்களமாய் மேற்குமுக மாகவே சென்றனனே
அங்கங் கிருந்த வரசருமே வந்தெதிர்த்தார்

துங்க நகுலன் துரிதமாய் வில்வளைத்து
பாணமதைச் சந்தர்னம் பண்ணிவிடுத் தேஜெயித்தான்
நாணியே கப்பமதை ராஜருமே கொண்டுவந்து
வைத்தே வணங்கிநின்று மாநகரஞ் சென்றனரே
சித்தமிக வேநடந்து சிந்துதே சந்தனிலே
சென்றுகப்பம் வாங்கிமற்ற தேசத் தரசரையே
வென்று நிதிகளுமே வேணமட்டு மேவாங்கி
சிந்து நடுவிலுள்ள தேசங்கள் சென்றனனே
வந்த வகையறிந்து மன்னரெதிர் சென்றுகண்டு
கப்பமதை யேகொடுத்துக் காவலவ ரேகினரே
செப்பமுட னேநகுலன் சேனை களைநடத்தி
ஊணதே சந்தனுக்கே யுத்தமனு மேகினனே
ஊணருமே கண்டுவெகு வூக்கமுட னேயெழுந்து
வந்தெதிர்த்தா ரந்நேரம் வல்ல நகுலனுமே
சிந்து விடம்போலே சீறியே கொக்கரித்து
வல்லபமாய் வில்லை வளைத்தே கணைதொடுத்து
எல்லோரை யுஞ்செயித்தா னீய்ந்தனரே கப்பமது
தூதர் சிலபேரைத் துங்கத் துவாரகைபோய்ச்
சேதி யுரையுமென்று செப்பிடவு மேயவரும்
செய்யகோ பாலனிடஞ் சென்றுரைத்தார் செய்தித்னை
துய்யபல ராமரிடஞ் சொல்லியவ ரோடுவெதிர்
கொண்டுவந்து கப்பமதைக் கோபால ருங்கொடுத்தார்
வண்டாரும் பைந்துளப மாலையணி மாயனிடம்
வல்ல நகுலன் வணங்கியே தான்புகல்வான்
தொல்லுலகோர் கொண்டாடுஞ் சுந்தரரே யும்மருளால்
மேற்றிசையி லுண்டான வேந்தர் தனைச்செயித்தேன்
நாற்றிசையோர் கொண்டாடும் நாதனே யாகமதை
செய்யவதி சீக்கிரமாய்த் தேவனே வந்திடுவீர்
துய்யனே யென்று தொழுதுமே சேனையொடு

மத்திரா தேச மதிற்சென்று சல்லியனை
உத்தமனு மேவணங்கி யோதினன் வந்தவகை
சல்லியனுங் கேட்டுத் தருந்த பொருளதனைச்
சல்லாப மாகவுமே தான்கொடுக்க வேவாங்கி
சிலநாள் வரையிருந்து சேனைகளை யேகூட்டி
பலமான மன்னவரைப் பாங்காக வேஜெயித்து
கப்பங் களைவாங்கிக் காவலனு மேமகிழ்ந்து
செப்பமுட னங்குமுள்ள தேசமெல்லாந் தூதுவரை
விடுத்துமே யங்கிருந்த வேந்தர் மனமகிழ்ந்து
கொடுத்திட்ட கப்பமதைக் கொற்றவனு மேவாங்கி
சித்த மகிழ்ந்திந் திரப்பிரஸ்த மாநகரில்
உத்தமனுஞ் சேனையொடு உல்லாச மாகவந்து
செய்ய தருமரவர் சீர்பாதந் தன்னையுமே
வையம் புகழ்நகுலன் வாகாக வேபணிந்து
கொண்டுவந்த கப்பமதைக் கோமானும் பொக்கிஷத்திற்
கொண்டுபோய்த் தானிறைத்துக் கொற்றவனு மேயிருந்தான்

பாண்டவர்கள் ராஜசூய
யாகஞ் செய்தல்

சிங்கா தனமீது செய்ய தருமருமே
மங்களமா யோர்நாளில் வந்தே யமர்ந்திருந்து
துங்கமிகு தம்பியர்கள் சொன்னபடி கேட்டிருக்கச்
செங்கோல் புரிந்திருந்தார் சிந்தைமிக வேமகிழ்ந்து
மாதமதி லேமூன்று மாரி பொழிந்திடவே
நீதி யுடன்குடிகள் நேர்மையா யாறிலொரு
கடமை தனைக்கொடுத்துக் கம்பீர மீகையறி
வுடமை யுடையோரா யூக்கமுட னேயிருந்தார்
வல்லகோ பாலன் மனமிகவு மேமகிழ்ந்து
சல்லாப மாகரதந் தன்னிலே தானேறி

வந்தனரே பாண்டவரும் வாகாக வேயெழுந்து
சந்தோஷ மாகவுமே தானழைத்து வந்துயர்ந்த
அரியா சனமீதே யன்பாக வேயிருத்தி
பரிவாக வேயிரண்டு பாதமதை யேபணிந்தார்
செய்யகோ பாலருமே சிந்தைமிக வேகனிந்து
வையம் புகழ்பாண்டு மைந்தர் களைத்தழுவி
ஆசிபல கூறியுமே யன்பாக வீற்றிருந்தார்
நேசமொடு தர்மர் நிகழ்த்துவார் கண்ணனிடம்
பைந்துளபத் தாரணிந்து பக்தர் களைக்காக்குஞ்
செந்திருமா லுந்தன் திருவருளா லேபுவியை
சிங்கா தனமேற் சிறப்பாக வேயமர்ந்து
செங்கோல் செலுத்துகின்ற தேர்வேந்தர் தங்களையும்
வென்றுமே கீழ்ப்படுத்தி விட்டோமன் நாடனைத்துங்
குன்றெடுத்தோய் கைப்படுத்திக் கொண்டோம் வெகுதனங்கள்
பொக்கிஷத்தை யேநிறைத்துப் போட்டோமப் பொன்னையெல்லாம்
அக்கினிக்கு மந்தணர்க்கு மன்பாக வேகொடுத்து
தொல்லுலகில் மாராஜ சூயயா கந்தனையே
வல்லமையாய் நீர்நடத்தி வைத்திடுவீ ரென்றுரைத்தார்
வெண்ணெயுண்ட செவ்வாயன் மேன்மைமிகு கார்மேக
வண்ணன் தருமர் வதனம்பார்த் தேபுகல்வார்
தருமமே யோருருவாய்த் தானே திரண்டுதித்த
தருமரே மாயாகந் தன்னைமகிழ் வாய்நடத்தி
தக்கோர் புகழ்ந்திடவே சம்ராட் டெனும்பெயரை
பக்குவம தாய்ப்புனைந்து பாரதனை யாண்டிடுவீர்
செல்வரே யும்மனம்போற் செய்வீ ரினிமேலே
வல்லோய் தடைகளொன்றும் வாரா தெனப்புகன்றார்
செய்ய தருமருமே சிந்தைமிக வேகனிந்து
துய்யதம்பி மார்களிடஞ் சொல்லுவா ரன்புடனே
சுந்தரரே மாராஜ சூயமதை யேநடத்த

அந்தணர்க்கு மக்கினிக்கு மன்பா ரரசருக்கும்
வேண்டியவை சேகரித்து மேன்மைமிகு செங்கோலைப்
பூண்டிருக்கு மன்னரையும் பூமிதனி லேவசிக்கும்
சித்தர் முனிவரையுஞ் சீக்கிரத்தி லேயழைப்பீர்
உத்தமரே யென்றே யுரைத்தாரந் நாழிகையில்
சாந்த குணவான் சகாதேவ ராஜனுமே
வேந்தர் மறையோர் வெகுதவங்கள் செய்முனிவர்
எல்லோர்க்கு மோலை எழுதியே தூதரிடம்
வல்லோன் கொடுத்து வரவழைத்தே யாவருக்கும்
தக்கமரி யாதைசெய்து சந்தோஷ மாகவுமே
இக்குவலை யம்புகழ இல்லம் பொருளேவல்
தன்னைக் கொடுத்தே தவுமியா சாரியருஞ்
சொன்ன முறைப்படியே துங்கமுட னேயாக
சாலைதனை யுண்டாக்கிச் சல்லாப மாகவுமே
மாலை யிதய மதில்நினைந்தே தானிருந்தான்
செய்ய வியாசர் தெரிந்தே விரைவினிலே
துய்ய சபைநடுவே தூயனுமே வந்தனரே
கண்டு தருமருங்கை கட்டியெதிர் சென்றழைத்துக்
கொண்டுவந்து பீடமதிற் குந்தவைத்தே போற்றிநின்றார்
நாற்றிசையோர் கொண்டாடும் நல்ல வியாசமுனி
போற்றிசெய்த வேந்தனுக்குப் புந்திமிக வேமகிழ்ந்து
ஆசிர் வதித்தனர்கா ணந்நேர மேதருமர்
மாசில்லா மாமுனிமுன் வாகாக வேபுகல்வார்
வல்லமையாய் வேத மதைக்கோர்வை செய்தவரே
தொல்லுலகின் மேல்ராஜ சூயமதை யேகனிந்து
நடத்துவீ ரென்றே நவின்றார் தருமருமே
திடத்துடனே மாமுனியுஞ் செப்புவா ரன்புடனே
பாலனே யாகமதைப் பாங்காகச் செய்துவைப்பேன்
சீலனே இப்பொழுது சிந்தைகளிப் பாயெனவே

வந்தமுனி வோர்சிலரை மாரித் துவிக்குகளாச்
சுந்தரனு மேற்படுத்தித் தூயன் தருமருக்கே
வேத முறைப்படியே மேன்மையுள கும்பமதை
மாதவஞ்செய் வோருமன்பாய் வைத்துமே மந்திரத்தை
நன்னயம தாயுரைத்தந் நாழிகையி லேயெடுத்து
சென்னிமிசை யேசொரிந்து சிங்கார மான்மருப்பை
கரத்திலே தான்புனைந்து காமுனிவ ரெல்லோருஞ்
சிரத்தையுட னேயாக தீட்சைதனைச் செய்தனரே
வாமமிக வேயிலங்கு மன்ன னருச்சுனனும்
வீமனுமே யானைகளின் மீதேற்றி யேபசும்பொன்
விந்தையொடு கொண்டுவந்து மேன்மையுட னேகுவித்து
அந்தணர்க்கு மேழைகட்கு மன்பாகப் பூரிதனை
இருகையா லேவாரி யெல்லோர்க்கு மீய்ந்தனரே
தருகாம லேநகுலன் தானேகி யத்திபுரம்
கண்டு குருக்களையுங் காவலரை யுங்கூட்டிக்
கொண்டிந் திரப்பிரஸ்தங் கோமானும் வந்தனனே
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரும் வந்தவரைப் பாங்கா யுபசரித்து
உண்டிதனை யெல்லோரு முண்டுமே கையலம்பிக்
கொண்டே சுருள்தரித்துக் கூட்டமுட னேயாகம்
செய்யுமிடம் வந்தமர்ந்தார் சிங்கார மாகவுமே
துய்யமுனி வோர்களுமே சூழ்ந்துவே தம்படித்து
அந்தமுட னறுவித வக்கினியைத் தான்வளர்த்தி
விந்தையொடு நெய்சொரிந்து மேன்மையொடு யாகமதை
உன்னிதமாய்ச் செய்தனர்கா ணும்பர்க ளும்புகழ
மன்னர் வியப்புறவே மண்டலத்தோர் கொண்டாட
சுத்தியையென் ஞேர்சடங்கு துங்கமுனி வோர்நடத்த
எத்தனிக்கும் போது எழுந்துமே வீட்டுமரும்
வல்ல தருமர் மதிமுகத்தைப் பார்த்துரைப்பான்

செல்வா சபைக்குமுன்பூ சிக்கவே வேண்டியதால்
சட்டமாயந் தந்தவர்ணத் தாரைத் தனித்தனியே
திட்டமுட னேபூசை செய்வா யெனப்புகன்றார்
வல்லதர் மரும்பூஜா வஸ்துகளைக் கொண்டுவந்து
சல்லாப மாகநின்று சாற்றுவார் வீட்டுமர்முன்
குருகுலபி தாமகனே கோமானே யாவருக்குப்
பரிவாய் முதற்பூஜை பண்ணுவது கூறுமென
கங்கைமைந்த னுள்ளங் களித்தே புகன்றிடுவார்
மங்களமா யிச்சபைக்கு மத்தியினில் வீரசிங்கம்
போலிருக்குங் கோபாலர் பூஜைக் குகந்தவர்காண்
சீலமுட னேயருகிற் சென்றுசெய்கு வாயெனவே
துங்கத் தருமர் துரிதமாய்த் தானடந்து
செங்கண்மா லின்றன் திருவடிக்கே பூஜைசெய்து
நாற்றிசையோர் கொண்டாட நன்முனிவ ரும்புகழ
போற்றிசெய்து நின்றாரே பூரித் திதயமுமே

சிசுபாலன் கோபித்தல்

கண்டுசிசு பாலனிரு கண்களுமே தான்சிவந்து
அண்டவொண்ணக் கோபமொடு ஆர்ப்பரித்தே பற்கடித்து
வேகமுட னேயெழுந்து மேன்மையுள்ள ராஜரின்முன்
பாகத் திடமாய்ப் பகருவா னந்நேரம்
வல்லமையி லேசிறந்த மன்னவரு மிங்கிலையா
வில்லினிலு மேசிறந்த வீரருமே தானிலையா
மாதவத்தி லேசிறந்த மாமுனிவ ரிங்கிலையா
நீதிதனி லேசிறந்த நேர்பரொரு பேரிலையா
முதியோ ரொருவருமே முன்னிலையா வேதமதைச்
சதிராக வேயுணர்ந்தோர் தானிலையா யிச்சபையில்
வந்திருந்தோ ருக்குமவ மானமதை யுண்டாக்கி
விந்தையா யிங்குகிழ வீட்ம னுரைப்படிக்கே

மடையன் வெகுதிரளாய் மாடுகளை மேய்த்திருந்த
இடையனுக்கே பூஜைசெய்த தேற்குமோ யாவருக்கும்
தக்கவிந்த யாகமுமே சற்குலத்தி லேபிறந்தோன்
பக்குவமாய்ச் செய்திடிலோ பாரினிலே கீர்த்தியுண்டாம்
வீரத்த னன்பாண்டு வின்பெண்டீர் குந்திவிப
சாரத்தி லேபிறந்தோன் ருனும் யாககர்த்தா
தருமமுப தேசித் தானேயவன் வாலாற்
துரியோத னன்கீழ்செஞ் சோற்றுக்கே காத்திருப்போன்
காசிமன்ன னீன்றெடுத்த கன்னிதனை வாழவொட்டா
தேசி விரட்டினதோ ரீனமதி யுடையோன்
நல்லகுரு வாம்பரசு ராமருமே கூறினதோர்
சொல்லதனை யேமறுத்த துட்டன் கொடும்பாவி
இந்தவி தங்கா ணிவன்பெருமை சந்தனுவோ
மைந்தரை யேகொன்ருலு மங்கைகங்கை தன்னுடனே
போகஞ்செய் தாலுமது போதுமென வேநினைந்து
மோகஞ்ச கிக்காது மொய்குழலைத் தான்மணர்ந்தோன்
வேணிதனை யேபிரிந்து விட்டபின்பு கண்டேமீன்
வாணிபச் சியாளை மணர்ந்த பெருமூடன்
இப்படித்தா ஞரு மிவர்செய்கை யாகமதை
செப்பமுட னேபுவியிற் செய்யவே நேர்ந்திடிலோ
விருப்பமொடு பூசைதனை வேந்தருக்கே செய்யாதிக்
கருப்பனுக்கே செய்ததுவைக் கண்டிருக்க ஞாயமுண்டோ
வீடுகள்தோ றுந்திரிந்து வெண்ணைதிரு டியுண்டு
மாடுகளை மேய்த்த மடையன்கோ பாலனையும்
முன்பூஜை செய்ய மொழிந்ததோர் வீட்மனையும்
அன்பாகப் பூஜைசெய்தோ ஞனதரு மனையும்
வென்றிடுவேன் பாருமென்று வீரமுட னேயெழுந்து
குன்றைக்குடைப் பிடித்த கோபாலன் முன்புவந்து

வண்டனே பூஜைசெய்ய வந்தாலும் நீயேற்றுக்
கொண்டிடவே ஞாயமுண்டோ கூறுவாய் துற்குணனே
நல்லதடா வுந்தனையிந் நாழிகையி லேமடிப்பேன்
வல்லவா பூசலிட வந்திடுவா யென்றறைந்தான்
கண்ணனுமே கண்சிவந்த காலையிலே கார்மேக
வண்ணன் ரதமீது வாகாக வேயேறி
வில்லதனைக் கைப்பிடித்து வீரசிங்கம் போலவுமே
வல்லசிசு பாலனின்முன் வந்துநின்று மேபுகல்வார்
வென்றிடுவே னுன்னையென்ற வீணனே யுன்னுயிரைத்
தென்றிசையி லேகிடவே செய்கு வேனென்றனரே

சிசுபாலன்வதை

சேதிநக ராளுஞ் சிசுபாலன் ருனுமிரு
காதினிலே கண்ணன் கழறினதைத் தான்கேட்டு
வல்லமைய தாகரத மானதிலே தானேறி
வில்லை வளைத்து வெகுசரத்தை யேவிடுத்தான்
செந்திருமா லோன்வெகுண்டு சீக்கிரத்தி லேசீறி
வந்த பகழிதனை வாகாக வேயறுத்தார்
கண்டுசிசு பாலனிரு கண்சிவந்து தேவரச்சங்
கொண்டிட வேகூர்மையுள கோடிகணை யேவினனே
வடவா முகாக்கினிபோல் வந்தபல பாணமதை
திடமாய்நின் றற்றுவிழச் செய்தனர்காண் செந்திருமால்
அந்தரத்தில் மாய்கையதா யன்னவனும் போய்மறைந்து
இந்த்ரசித்தைப் போற்கணைக ளேவினு னேயாமல்
கண்ணனுமே மாய்கைக் கணைகளையெல் லாம்பொடித்து
புண்ணியனு மேயவனைப் போலவுமே போய்மறைந்து
ஒருவருக்குந் தோற்றும லும்பருங்கண் டஞ்சிடவே
இருவருமே சண்டைசெய்தா ரெய்ப்பிளைப்பு மில்லாது
வல்ல சிசுபாலன் மாய்கையாற் கண்ணனையே

வெல்லமுடி யாதெனவே வீரமொடு முன்போல
மண்மீதில் நின்றுகொண்டு மாரிபொழி வதுபோல்
எண்ணவொண் ணுப்பாண மெடுத்தே தொடுத்தனனே
இதுதான் சமயமென எம்பெருமா ளன்னேரம்
சதிராகத் தன்னுடைய சக்கரத்தை யேவிடுத்தார்
அக்கணமே சென்று அவன்விடுத்த வாளிகளைப்
பக்குவமாய்க் கொய்துசிசு பாலனிட சென்னிதனை
வீரமுட னேயறுத்து விட்டே விரைந்துவந்து
தீரமுள செந்திருமால் செங்கரத்தில் நின்றனவே
அந்தரத்தில் துந்துமிக ளார்ப்பரிக்கத் தேவருமே
சிந்தைமிக வேமகிழ்ந்து செய்யமலர் மாரிபெய்தார்
எல்லோ ருங்கூடி யிருக்கு மிடந்தனிலே
வல்லகோ பாலருமே வந்தார் மனமகிழ்ந்து
நாற்றிசை யோர்கொண்டாட நன்முனிவ ரும்புகழப்
போற்றிசெய்து பாண்டவரும் புந்திமிக வேகனிந்தார்
மாண்ட சிசுபாலன் மைந்தனு லவ்வுடற்கு
வேண்டுஞ் சடங்குசெய்து வீர ரெடுத்தடக்கி
பொய்கை தனில்நீராடிப் பூஜைமுடித் தேயாகஞ்
செய்யுமி டத்தினிலே சீக்கிரமாய் வந்தனரே
சுந்தரமாய் மாராஜ சூயமதை மாமுனிவோர்
சிந்தைமிக வேகனிந்து செய்தே முடித்தனர்காண்
அந்தணர்க்கு மன்னருக்கு மன்பாய் முனிவருக்கும்
விந்தை யுடனே விருந்துகளு மேநடத்தி
தரும ரவரவர்க்குத் தக்கமரி யாதைசெய்து
அருமை யுடனே யனுப்பியே வீற்றிருந்தார்
விண்டலத் தோர்கொண்டாட மேன்மைமிக வேயுடைய
மண்டலத்து வேந்தருமே வந்தே யடிபணிய
சட்டமுட னேதருமர் சம்ராட் டெனும்பெயரை

கட்டழகர் பூண்டுகொண்டு கண்ணன் திருவருளால்
சிங்கா தனத்திருந்து செய்யதம்பி மார்களொடு
செங்கோல் புரிந்தனரே தேவேந் திரன்போல

துரியோதனன் சபாமண்டபத்தில்
அவமானமடைதல்

வல்ல தருமரிடம் வாகாய் விடைவாங்கிச்
செல்லத் துரியன் திடமாய் மனம்நினைந்து
செய்யசாப மண்டபத்திற் சென்றான் விரைவுடனே
வையகத் தின்மீது மயனமைத்த விந்தைகளை
கண்டாச் சரியமொடு காவலவ னுள்மகிழ்வு
கொண்டே நடந்தானங் கோரிடத்தி லேபடிக
கல்லா லமைந்ததடா கத்திருந்த நீர்நிலம்போற்
சல்லாபன் முன்னிலங்கத் தானே நடந்ததனில்
விழுந்தே நனைந்துவதி வேகமாய் நாணமொடு
எழுந்தே தலைகுனிந்து யேகினான் வேறுவழி
மண்மீதி லேபடிக மானகல்லொன் றங்கிருக்கத்
தண்ணீர்த் தடாகமெனத் தார்வேந்தன் தானினைந்து
முந்திவிழுந் தோமெனவே மூட னுந்தன் னுடைதனை
விந்தையுட னேதூக்கி வேகமாய்ச் சென்றனனே
அப்பு ரத்திலேதூ ணடர்ந்திருக்கத் தோற்றமல்
செப்பமுள்ள பாதையெனச் சென்றிடித்துக் கொண்டுநின்று
நட்பில் லான்பின்னும் நடந்தான் சபையினிட
உட்புர மீதென்றே யுறுதியுட னேநினைந்து
அந்தவிடம் பின்புரம தானபடி யாலுமவன்
சிந்தைமிக வெட்கித் திரும்பிச் சபைநடுவில்
வந்தான் படியின் வரிசைசம பூமியெனச்
சிந்தையிலே தானினைந்து சென்றுதட்டிக் கீழ்விழுந்தான்
வாம னருச்சுன னு வல்ல விரட்டையரும்

வீமன் துரோபதையும் வேந்தன் விழுந்தவற்றை
எண்ணியே தானகைத்தா ரேங்கித் துரியனகம்
புண்ணுகி நாணமொடு பொட்டெனவே தானெழுந்து
தட்டித் தடுமாறித் தானேறி யேசபையிற்
சட்டமொடு சென்று தருமர் தனைவணங்கி
விடைவாங்கி வெட்கமுற்று வேகமுட னேநடந்து
மடையன் பொருமையொடு வந்தனன்கா ணத்திபுரம்

துரியோதன் சகுனியோடு
தன்விசனங் கூறுதல்

பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவர்செல் வஞ்சிறப்பும் பார்மேல் நமக்கிலையே
என்று நினைந் தேபெருமூச் சிட்டே மதிவதனங்
கன்றிநவ மணிச்சிங் காதனத்தின் மீதினிலே
பித்தம்பிடித் தவன்போற் பேசாதொ ருவரொடு
மெத்தக் கவலைகொண்டு வீற்றிருந்தா னேதுரியன்
மாமன் சகுனி மருகன் முகம்நோக்கி
நேம முடனே நிகழ்த்துவா னந்நேரம்
மண்டலத் தோர்போற்றும் வணங்கா முடிவேந்தே
தண்டா மரைவதனங் தானே மிகச்சோர்ந்து
ஒருவ ரொடும்பேசாம லூமைபோ லேயிருக்கக்
கருமமென்ன கூறுமெனக் காவலவன் முனுரைப்பான்
வாமமிகு பாண்ட வரின்வாழ்க்கை யின்சிறப்பும்
பூமியுள்ள வேந்தர் புகழுகின்ற வார்த்தைகளும்
செல்வச் செருக்குஞ் சிறந்தபல மேடைகளுங்
கல்விப் பெருக்கு களும்பசும்பொன் பொக்கிஷமும்
நவமணிக ளாலமைத்த நற்சபையின் விந்தைகளும்
புவனமதி லுள்ளமன்னர் போற்றித் திரைகொடுக்கும்
பொன்னு பரணமலை போற்குவியுஞ் செய்கைகளும்

என்னு வினாலே யெடுத்துரைக்க லாகாது
மண்டலத்தி லுள்ளபல மன்னவரை யுஞ்செயித்து
விண்டலத்தோர் கொண்டாட 'வேதமுனி வோர்சூழ்ந்து
நேயமொடு செய்தனரே நீணிலத்தின் மேல்ராஜ
சூயமதை யானெடுத்துச் சொல்ல முடியாது
தக்கோர் புகழ்ந்திடவே சம்ராட் டெனும்பெயரைப்
பக்குவமாய்ப் பூண்டனனே பண்பார் தருமனுமே
இப்பெரிய வாழ்வு யிவர்க ளடைந்திடவே
யொப்புமோ வெந்தனிட வுள்ள மதுதானே
இவ்வாழ்வை யானடையா திந்தவுல கந்தனிலே
செவ்வையுடன் ரூனிருப்ப தென்னபல னுதலினுல்
மாண்டிடுவே னுண்மையிது வாருங்கா ணெந்தனையே
. வேண்டியெந்தை முன்போய் விளம்புவீ ரென்றறைந்தான்

சகுனி துரியோதனனைத்
தேற்றுதல்

இந்த மொழிகேட் டெழுந்து சகுனியுமே
விந்தை யுடனே விளம்புவா னந்நேரம்
மர்னிலத் தோர்போற்றும் வணங்கா முடியோனே
ஏனுனக்கு யிந்தமதி யிப்பெரிய செல்வமதை
வாதாடி யேபறிக்க மாட்டோ முறுதியிது
சூதாடி யேபறித்துச் சுந்தரனே தந்திடுவேன்
இந்தத் தொழிலா லெவருமென்னை வெல்வாரோ
சந்தேகம் வேண்டாம் தருவேனச் செல்வமதை
என்றே சகுனி யியம்பிடவு மேதுரியன்
நன்ருகக் கேட்டுவெந்த நாழிகையி லேமகிழ்ந்து
மாமனே யுந்தன் மனம்போல வேநடப்பேன்
தாமதங்கள் செய்யாதென் தந்தையிட மேபுகன்று
பாண்டவரின் நாட்டைப் பறிக்கவே யோசனைகள்

வேண்டியவை செய்வோ மெனநடந்து வேகமொடு
வந்தா ரிருவருமே மன்திரித ராட்டிரன்முன்
சிந்தைமகிழ்ந் தேசகுனி செப்புவா னப்பொழுது

திரிதராட்டிரன் முன் சகுனி
கூறுதல்

அத்தா னேயுந்த னருமைப் புதல்வனுமே
எத்தாலோ நித்திரைசோ றில்லாம லுஞ்சோர்ந்து
பித்தம்பிடித் தாப்போற் பேசா தொருவரொடுஞ்
சித்தமிக வேயுழன்று தேகமுமே தான்மெலிந்து
இருக்கவே காரணந்தா னெந்தனுக்குத் தோற்றவில்லை
பெருக்கமுட னேயழைத்துப் பிள்ளை மனந்தெரிந்து
எண்ணினதோ ரெண்ணமதை யீடேற்றி வைத்திடுவீர்
புண்ணி யாவென்றே புகன்றான் சகுனியுமே
கண்ணில் லான்கேட்டே கவலையொடு மைந்தனையே
திண்ணமுட னேயழைத்துச் செப்புவான் யாதெனிலோ

திரிதராட்டிரன் துரியோதனனை
விசாரித்தல்

மைந்தனே கேளாயிம் மானிலத்தை யோர்குடைக்கீழ்
விந்தையுட னேயிருந்து மேன்மையா யாண்டிருக்க
மன்னர் திரையீய்ந்து வாகாக வேவணங்க
பொன்னுடை வேணபல பூஷணமு மேயிருக்க
வில்லா சிரியரொடு வீட்டுமரு மேயிருக்க
சல்லாப ராமுனது தம்பியருஞ் சூழ்ந்திருக்க
பொக்கிஷமு மேநிறைந்து பொன்னிருக்கச் சேனைபல
பக்குவமாய் வைத்திருக்கப் பந்துக்களுஞ் சொற்கேட்க
கந்துகங்கள் வேணவொட்ட கங்களுமே தானிருக்கச்
சிந்துரங்கள் பொன்ரதங்கள் செப்பமுடி யாதிருக்க
மந்திரிகள் வந்திருக்க மாசபையுந் தானிருக்க

விந்தையுட னேநடிக்கும் வேசைபல ரிங்கிருக்க
என்ன கவலையுட னிந்தவித மேசோர்ந்து
மன்னு விருக்க வகைகூறு மென்றறைந்தான்

துரியோதனன் தந்தையிடங்
கூறுதல்

தந்தைமொ ழிந்தவற்றைத் தான்கேட்டு மேதுரியன்
சிந்தைமிக வேயுழன்று செப்புவா னந்நேரம்
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரு மெந்தனொடு பாதியர சைப்பிரித்து
வல்லபமாய்க் காண்டா வனப்பிரஸ்தஞ் சென்றுவதி
லுல்லாச மாகவுமே யோர்நகர மானதுவை
விண்ணுல கில்வாழும் விசுவகர்மா வையழைத்து
மண்ணுலகின் மீதிலில்லா மாதிரிய தாயமைத்து
சிந்தை மகிழ்ந்திந் திரப்பிரஸ்த மென்றுபெயர்
சுந்தரரு மந்நகர்க்குச் சூட்டிக் குடிபுகுந்து
சிங்கா தனமேற் சிறப்பாய்த் தருமனுமே
செங்கோல் புரிந்திருந்தான் செய்யதம்பி மாருடனே
வீ்ம னருச்சுனனும் மங்கை சுபத்திரையை
நேமமுட னேமணர்ந்து நீணிலத்தோர் கொண்டாட
வன்னிக்கே காண்டா வனத்தையிரை யாக்கிவித்தே
நன்னயம தாயவனும் நட்பாக வேயீய்ந்த
விற்றூணி தேர்குதிரை மேன்மைமிக வேமிகுந்த
வற்றையெல்லாம் வாங்கியிந்த மானிலத்திற் கீர்த்திபெற்றான்
வன்னியினால் நொந்த மயனைக்காப் பாற்றினதால்
நன்னயமா யன்னவனும் நற்சபையொன் றுண்டாக்கி
பாண்டவர்க்கு மேகொடுத்தான் பார்க்கவதைக் கோடிகண்கள்
வேண்டுமிவை யல்லாது வீமன் துரிதமொடு
வல்லசரா சந்தனொடு வாதாடி யேமடித்து

உல்லாச மாகவந்த வூரையே சூரையிட்டு
சிந்தை மகிழ்ந்திந் திரப்பிரஸ்த மாநகர்க்கு
வந்தே சிலகால மானபின்பு பாண்டுமைந்தர்
வாமமிகு பற்குணனும் வல்ல விரட்டையரும்
வீமனுமே வெவ்வேருய் விண்ணுலகோர் கொண்டாட
நாற்றிசை யிற்சென்று நலமாயங் கங்கிருந்த
வேற்றரசர் தன்னையெல்லாம் வென்று வசப்படுத்தி
பொன்னுடை வேணபல பூஷணமும் வாகனமும்
நன்னயஞ்சேர் மாமணியும் நான்குவகைச் சேனையையும்
பொற்பனையும் மட்டடங்காப் பொன்னுட னேமுத்துகளும்
விற்பனரு மேதிரையாய் வேந்தரிடம் வாங்கிவந்து
பொக்கிஷத்தை யேநிறைத்துப் போட்டே பலதிசையில்
பக்குவம தாகப் பசும்பொன் றனைக்குவித்தார்
அந்தணர்க்கு மாமுனிவோ ரானவர்க்கு மக்கினிக்கும்
வந்தவர்க்கும் வேணசெம்பொன் வாகாய்ச் சிலவுசெய்து
தொல்லுலகின் மேல்ராஜ சூயமதை யேமுடித்துச்
சல்லாபன் யாவருக்குந் தானே விருந்துசெய்து
பக்குவ மாய்வேண பரிசளித்து மேயவர்க்குத்
தக்கோர் புகழ்ந்திடவே சம்ராட் டெனும்பெயரை
தருமனுமே பூண்டுகொண்டு தாரணியை யோர்குடைக்கீழ்
பொறுமை யாச்செங்கோல் புரிகின்ருன் கீர்த்தியொடு
பாண்டவ ரின்வாழ்வும் பசும்பொன்னி னுற்சமைத்த
நீண்ட சபையழகும் நேசமொடு மன்னருமே
கொண்டுவந்து கப்பங் கொடுத்தேகும் வண்மையையும்
மண்டலத்தோர் கொண்டாடும் வார்த்தையையுஞ் செய்கையையும்
செல்வச் செருக்குஞ் சிறந்தபல மேடைகளுங்
கல்விப் பெருக்கு களும்பசும்பொன் பொக்கிஷமும்
மாமணிக ளாலமைத்து வைத்த பதுமைகளும்

வாமமிக வேமிகுந்த வாவிகளுஞ் சேனைகளும்
பொன்னுடை வேணபல பூஷணமும் வாகனமும்
என்னு வினுலே யெடுத்துரைக்க லாகாது
இப்பெரிய செல்வ மிவர்க ளடைந்திடவே
யொப்புமோ வென்மனந்தா னுத்தமசி காமணியே
எந்தவித மாகவுமே யிவ்வாழ்வை யானடையா
திந்தப் புவிமீ திருந்தென்ன லாபமையா
பஞ்சவரைத் தானழைப்பீர் பாங்காக வேசூது
வஞ்சனையி னலவராள் மானிலத்தை யான்பறிப்பேன்
இந்தவிதஞ் செய்யா திருந்தாலோ விப்பொழுதே
தந்தையே யென்னுயிரைத் தான்மடிப்பே னென்றறைந்தான்

திரிதராட்டிரன் நீதி கூறுதல்

கண்ணில் லான்கேட்டே கவலைமிக வுண்டாகி
எண்ணுது மெண்ணி யியம்புவான் மைந்தனுக்கே
புத்திரனே பஞ்சவரைப் போலவுமே நீமகிழ்ந்து
மெத்தநவ ரத்தினத்தால் மேன்மையுட னேர்சபையை
உண்டாக்கி வீற்றிருப்பா யும்பருமே தான்புகழ்ந்து
கொண்டாட வேமகனே கூறுவே னின்னமொன்று
மண்டலத்தி லுண்டான மன்னவரென் மேற்பிரியம்
கொண்டி ருப்பதாலே கொடுத்திடுவார் கப்பமதை
சென்று நீ வாங்கிவந்து சித்தமிக வேமகிழ்ந்து
நன்ருக விங்குவந்த ராஜசூ யந்தனையே
மாமுனிவோ ரந்தணரை வாகாய் வரவழைத்து
நேமமுட னேநடத்தி நீணிலத்தோர் கொண்டாட
சாந்த குணவானே சம்ராட் டெனும்பெயரை
வேந்தனே பூண்டுகொண்டு மேதினியை யாண்டிருப்பாய்
பாண்டோ ரைவீணே பகையாக்கி வைத்திடவே
வேண்டா மடாசுதனே மெய்மிகவே நோகாதே

வாதாடி யேஜெயிக்க மாட்டா யுறுதியிது
சூதாட லாகாது தொல்புவியை யாள்வோர்க்கு
ஆடிடிலோ வீண்கலக மானதுவே வந்துவிடும்
வாடிடவே வேண்டாமென் மைந்தனே யென்றறைந்தான்
கண்ணில்லான் சொன்னவற்றைக் காதினுற் கேட்டுமனம்
புண்ணுகி நின்று புகலுவா னந்நேரம்

துரியோதனன் கூறுதல்

தந்தையே பஞ்சவரைத் தானழைத்தே சூதாட
எந்தன் றனக்குவிடை யீயாதிருந் திடிலோ
மாண்டிடுவே னுண்மையிது வாகுங்காண் பின்னிருந்து
ஆண்டிடுவீ ரேநெடிய வம்புவியை யோர்குடைக்கீழ்
நானிருந் தாலென்ன நலமுமக்குப் பஞ்சவரைத்
தானிருக்கச் செய்வீர் சமஸ்தானங் கீர்த்திபெற
என்றே புகன்றனனே யிம்மொழியைக் கேட்டுமுகங்
கன்றிக் குருடன் கழறுவா னப்பொழுது

சூதாடவாலோசனை செய்தல்

எத்தனை தான் சொன்னுலு மேர்த்திடா னிப்பொழுது
செத்திடிலோ நாமதற்கென் செய்வோம் வரும்விதியும்
வந்து தான்தீரும் மரித்தாலே நின்றிடுமோ
மைந்த னுடைய மனம்போல செய்வமென
வல்ல சகுனி மதிவதனத் தைநோக்கிச்
சல்லாப மாகவுமே சாற்றுவா னப்பொழுது
மைத்துன னேயுந்தன் மருகன் கவலைதனை
வைத்துழல வேண்டாங்காண் மாற்றிவிடு வேனதற்கு
எந்தவிதம் பாண்டவரை யிங்கழைப்போம் யோசனைகள்
சிந்தைமிக வேமகிழ்ந்து செப்புவீ ரென்றறைந்தான்
எதுசமய மென்றே யிருந்த சகுனியுமே

சதிராய்க் குருடனிடஞ் சாற்றுவான் யாதெனிலோ
மன்னவனே யிங்குசபா மண்டபமொன் றுண்டாக்கிப்
பொன்னுலகி லில்லாப் புதுமைகளைச் செய்துவைத்து
பஞ்சவர்க்கு மேலிகிதம் பாங்காய் விதுரரிடம்
வஞ்சகம தாயனுப்பி வைத்தா லவர்வருவார்
மண்டபத்தி லெல்லோரு மாயிருந்து சூதாடி
மண்டலத்தை யேஜெயித்துன் மைந்தனிட மேகொடுப்பேன்
வெவ்வேறு யோசனைகள் வேண்டாங்கா ணிந்தவித
மொவ்வுவீ ரென்றே யுரைத்தான் சகுனியுமே
கண்ணில் லான்கேட்டுன் கருத்தைப்போ லேமுடிப்பேன்
விண்ணுலகி லில்லாத விந்தையதாய் மண்டபத்தை
உண்டாக்கி யெந்தனிட மோதுவீ ரென்றனனே
தெண்டனிட்டு மேதுரியன் சென்றே சகுனியொடு

துரியோதனன் சபாமண்டபம்
நியமித்தல்

செய்யகனக னென்னுஞ் சிற்பிதனை யேயழைத்து
வையகத்தின் மீதினிலும் வானோ ருலகினிலும்
இல்லாத விந்தையதா யிங்குசபா மண்டபத்தை
சல்லாப மாகச் சமைத்திடுவா யென்றனனே
வல்ல கனகன் மனமிகவு மேமகிழ்ந்து
நல்லதென வேயுரைத்தந் நாழிகையி லோரிடத்தில்
பொன்னாற் சுவரெழுப்பிப் பூமியுள்ளோர் மெச்சிடவே
நன்னயமாய்த் தூணிறுத்தி நன்ருய் வயிரமதை
வைத்தழுத்திப் போதிகைமேல் மாணிக்கத் தாலமைத்த
உத்திரங்கள் போட்டுவெகு வோவியங்கள் தான்வகுத்து
எத்திசையுந் தோரணங்க ளின்பமுட னேயிலங்க
கொத்தாக முத்துகளைக் கோர்வைசெய்து தொங்கவிட்டு
இந்திரனின் றந்நகரி லில்லாத வேணபல

விந்தைகளைத் தானமைத்து வேந்த னிடம்புகன்றான்
வல்ல துரியனுமே மண்டபத்தின் விந்தைகண்டு
நல்லபசும் பொன்சிலவந் நாழிகையிற் சிற்பனுக்கு
கொடுத்தே யனுப்பிவிட்டுக் கோமான் கவலைதனை
விடுத்தே சகுனியொடு வேகமுட னேநடந்து
வந்தே குருடன் மலரடியி லேபணிந்து
தந்தையே மண்டபத்தைத் தானிருமித் தேனினிமேல்
பாண்டவருக் கோலைதனைப் பாங்கா யெழுதுமென
வேண்டியே நின்றனனே வேந்தன் துரியனுமே
அந்தகனும் வேணபல வாசிதனை யேகூறி
மைந்தன் றனையனுப்பி வைத்தே விரைவினிலே

### பாண்டவர்க்குத் திரிதராட்டிரன் ஓலை யெழுதுதல்

தம்பி விதுரன் றனையழைத்தே தூதுவரால்
வம்பன் துரியன் வழுத்தினதோர் வார்த்தைதனை
சொல்லவே கேட்டுமனஞ் சோர்ந்துவிழுந் தேயெழுந்து
வல்ல விதுரன் வழுத்துவா னண்ணனிடம்
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவ ரின்வாழ்வைப் பறிக்கவே யெண்ணமுற்றான்
வாதாடி யேஜெயித்து மானிலத்தை யாண்டாலும்
சூதாட லாகாது தொல்புவியாள் வேந்தருக்கு
மாண்டுவிட வேகாலம் வந்ததோ பாதகர்க்கு
வேண்டா மடாததொழில் வீணே கலகமுண்டாம்
நூற்றுவர்தான் மைந்தரென்றும் நுண்ணறிவுப் பாண்டவரை
வேற்றுமை யாயெண்ணி விடுவதுமே ஞாயமன்று
புண்ணியரே சேயன் புகன்றபடி செய்திடிலோ
மண்ணிலே பஞ்சவரால் மாளுவார் நூற்றுவரும்
முன்னே வரும்பலனை முற்றிலு மேயானுரைத்தேன்

பின்னே தெரிந்து பெருமோசம் போகாதீர்
நீதிபல வாறவர்க்கு நீரெடுத் துக்கூறுது
பாதகத்தைத் தேடமனம் பற்றினது வோதமக்கு
என்றே புகன்றனனே யிம்மொழியை யந்தகனும்
நன்முகக் கேட்டே நவில்வான் விதுரனிடம்
வல்ல துரியனிடம் வாகாக நீதிபல
சொல்லியுமே கேட்கவில்லை சுந்தரனே யென்னசெய்வேன்
வருகும் விதியை மறித்தாலே நின்றிடுமோ
உருகிமனம் வாடாதே யுள்ளபடி யேமுடியும்
செல்லுவாய் நீயிந் திரப்பிரஸ்த மாநகர்க்கு
வல்லவா வோலைகொண்டு வார்த்தை யொன்றுங்கூறுதே
என்றுவோர் மந்திரியை யின்பமுட னேயழைத்து
நன்முக வோலைதனை நட்புடைய பாண்டவர்க்கு
எழுதுவா யன்புடனே யிப்பொழுதி லென்றவன்முன்
பழுதிலா வாசகத்தைப் பாவிசொல்வான் யாதெனிலோ
கண்ணன் திருவருளாற் காசினியைத் தானரசு
பண்ணுஞ் சிரஞ்சீவி பாண்டவர்க்கு யெந்நாளும்
பாலசந் தானஞ்சகல பாக்கியமு மென்மேலும்
சீலமுட னேபெருகத் தீர்க்காயு ளுண்டாக
துங்கரே யிங்குமது சோதரர்கள் நூற்றுவரும்
சிங்கார மண்டபத்தைச் செய்தே முடித்ததனில்
பந்துவர்க்கத் தாருடனே பாங்காக வேயமர்ந்து
விந்தைதனைப் பார்த்து விளையாடி யேகளிக்க
வேண்டுமென வேயுரைத்தார் மேன்மைமிகு பாண்டுமைந்தர்
பாண்டவரே நீருமிங்கு பாங்காக வந்திடுவீர்
என்றறைந்தா னந்தவித மிங்கிதம தாயெழுதி
நன்முக வேகுருட்டு ராஜனிட மேபடித்து
செந்துருக்கைத் தான்போட்டு சீட்டதனை யுள்சுருட்டி
மந்திரியுங் கைக்கொடுக்க வாங்கி விதுரனிடம்

கண்ணில்லா னிய்ந்தனனக் காலமதி லேமனது
புண்ணாகி யேவிதுரன் போவதுமெவ் வாறெனவே
எண்ணாத யோசனைக வெண்ணியெண்ணி யேயுழன்று
மண்மீதில் முன்காலை வைத்திடவும் பின்னிழுக்க
சிந்தை தனையே திடப்படுத்திப் போங்காலம்
வந்ததிவ ருக்கெனவே வல்லவனு மேநடந்தான்

## விதுரன் பாண்டவரைக் காணல்

காடு மலையோடை களும்நகர்பூங் காவனமும்
மேடுகளு மேகடந்து வெய்யோன் மறையுமுன்னே
திக்கோர் புகழிந் திரப்பிரஸ்த மாநகரைப்
பக்குவமாய்ச் சேர்ந்தனனே பாண்டோர் தெரிந்துவெதிர்
சென்றே யழைத்துவந்து சிங்கா தனமீது
நன்று யிருத்திவைத்தந் நாழிகையி லேபணிந்து
தந்தையே நின்வதனந் தான்வாடக் காரணமேன்
மைந்த ரிடத்தில் வழுத்துவீ ரென்றனரே
வல்ல விதுரன் மனமிகவு மேசோர்ந்து
செல்வ ரிடந்தனிலே செப்புவா னத்ததியே
பாண்டவ ரேயுங்கள் பதிநிதியெல் லாம்பறிக்க
வேண்டியே யோசனைசெய் வித்துமே பாவிகளும்
மண்டபமொன் றுண்டாக்கி வைத்துமே விந்தைகளைக்
கண்டு களிடத்திடவே காவலரே வாருமென
தந்திரம தாகவுமைத் தானழைத்து மேயதனில்
சிந்தைமகிழ் வாயிருத்திச் சேயரே சூதாட
சீட்டெழுதி யெந்தனிட செங்கரத்தி லேகொடுத்துக்
கூட்டிவர வேவிடுத்தார் கொற்றவரே யென்றறைந்து
எடுத்துமே யோலைதனை யேக்கமுற்று மேவிதுரன்
கொடுத்தான் தருமரிடங் கோமா னதைவாங்கி

சங்கதியைத் தானறிந்து சற்றே மனஞ்சோர்ந்து
துங்கமிகு தம்பியர்முன் சொல்லுவா ரந்நேரம்

பாண்டவர் அஸ்தினபுரஞ் சேர்ந்தல்

வாதாடி யேஜெயிக்க மாட்டாது செல்வமதைச்
சூதாடி யேபறிக்கத் துற்யோ சனைநினைந்த
தம்பி துரியனுமே தானெனக்கு வேண்டுமெனில்
அம்புவி யுஞ்செல்வ மதனையும் நாமீயோமோ
பெரியதந்தை தன்னுடைய பிள்ளை மனம்போலே
சரிசரியென் றெப்பிநல்ல தம்பி விதுரரிடம்
சீட்டெழுதி யேகொடுக்கச் சிந்தை துணிந்தனவோ
கேட்டீரோ நாமவர்க்குக் கேடுவொன்றுஞ் செய்திலையே
அனுப்பிய தோர்சீட்டை யவமதித்திங் கேயிருந்தால்
இனிப்பா தகமே யிதற்குமே லொன்றுமில்லை
வருகும் விதியை மறித்திடநம் மாலாமோ
உருகி மனம்வாடி யுழன்றிருக்க லாகாது
சிந்தை மகிழ்ந்துவங்கு சென்றிடுவோம் தீங்குபல
வந்தா லனுபவிப்போம் வாமமிகு தம்பியரே
என்றே யறைந்தனரே யிம்மொழியை நால்வருமே
நன்றாக வேகேட்டந் நாழிகையி லொப்பினரே
வல்ல விதுரனொடு வாகான பாண்டவரும்
மெல்லி துரோபதையும் வேகமொடு தேரேறி
நாற்றிசை யோர்கொண்டாட நான்குவகைச் சேனையொடு
காற்றதனி லுந்துரிசாய்க் காவலருந் தானேகி
செல்வாத்தி னபுரத்தே சென்றுரதம் விட்டிறங்கி
வில்லா சிரியரொடு வீட்டுமரை யும்பணிந்து
துரியன் முதலான சோதரரை யுந்தழுவிப்
பரிவாய்ப் பெரியதந்தை பக்கலுற்றே பாண்டவரும்
நேசமொடு போற்றிசெய்து நின்றூ ரவர்களுக்கே

ஆசி பலகூறி யந்தகனு மேயிருந்தான்
கதிரோனு மேற்குக் கடலிலே போயொழித்தான்
சதிநேரும் பாண்டோர் தனக்கிங் கிருக்கிலென்று
எல்லோரு முண்டியுண்டு யேற்றபல வார்த்தைகளைச்
சல்லாப மாய்ப்பேசித் தான்துயின்று ரோரிடத்தில்
செய்யபஞ்ச பாண்டவர்க்குச் செய்திசொல்ல வாரவன்போல்
வெய்யோனுந் தானுதித்தான் மேன்மையொடு கீழ்திசையில்
வல்லதுரி யன்சகுனி மற்றுமுள்ள வேந்தருமே
வில்லாசி ரியரொடு வீட்டுமரு மேயெழுந்து
மண்டபத்திற் சென்றனரே வஞ்சகத்தை நெஞ்சினிலே
கொண்டுதுரி யன்சகுனி குந்திமைந்தர் தன்வரவை
எதிர்பார்த் திருந்தனரே யெவ்விதமுஞ் சூதாடி
பதிநிதிசெல் வத்தைப் பறிக்கவே வேண்டுமென

## தருமருஞ் சகுனியும்
## சோக்கட்டாடுதல்

சீலமுள்ள பாண்டவருஞ் சிந்தைமிக வேமகிழ்ந்து
காலைக் கடன்முடித்துக் காவலருஞ் சூழ்ந்திருக்கும்
மண்டபத்தை நோக்கியுமே வந்திருந் தாரன்புடனே
வண்டன் சகுனி வழுத்துவான் யாதெனிலோ
அருமை மருமகனே யஞ்சாமை யீகைவெகு
பொறுமை யுடையதர்ம பூபதியே வீண்பொழுது
போக்காம லுண்டியுண்ணப் போகும் வரைநாமும்
பாக்கியனே யோராட்டம் பார்க்கலாம் வாருமென்று
சொக்கட்டான் சாரிதனைத் துட்டனுமே தானவிழ்த்து
பக்குவ மாய்ப்பூவிற் பரப்பிக்காய் கட்டினனே
வல்ல தருமருமே மாமன் முகம்நோக்கி
சொல்லுவா ரப்பொழுது துக்கமிக வேபெருகி
சூதாடல் குற்றமெனச் சொன்னர் மனுநூலோர்
ஈதாலே நாடுசெல்வ மெல்லா மிழந்துபகை

வந்துவிடு மென்றுதள்ளி வைத்திருக்கின் ருர்பெரியோர்
இந்தத் தொழிலாட வெள்ளளவு மேயிசையார்
பந்தயம் வைத்தாடிற் பழிகுலைக்குக் காரணமாம்
புந்திமகிழ்ந் தேபொழுது போக்கிடவே வேண்டுமெனில்
அம்மானே சும்மாவோ ராட்டமதை யாடிடுவோம்
செம்மையுட னிங்குவொரு தீங்குவரா தென்றறைந்தார்
வல்லதுரி யன்கேட்டு வாகாக வேபுகல்வான்
சல்லபா மானயென தண்ணுவே நீர்கேளும்
பந்தயமொன் றில்லாது பாங்காக வாடிடிலோ
சுந்தரனே யாட்டஞ் சுகப்படா தாதலினுல்
கள்ளங் கபடுவஞ்ச கஞ்சூது வென்பதுமே
எள்ளளவுஞ் சிந்தைதனி லில்லாவென் மாமனுக்கே
பந்தயம்நான் வைத்திடுவேன் பண்பாக வேநீரு
மிந்தவிதம் வைத்தாடு மென்ரு னதுகேட்டு
வஞ்சமதி யோன்சகுனி மாமன் வெகுவாகச்
செஞ்சொல் தருமரிடம் செப்புவா னப்பொழுது
பந்தயம் வைத்தாடிற் பசும்பொன் சிலவுபல
வுந்துவிடு மென்ரே மதித்திவ்வா றேபுகன்றீர்
துங்கரே கேட்டிடுவீர் தோற்புஞ் செயிப்பொருவர்
பங்கல்ல யோசனைகள் பண்ணியே பாருமென்ருன்
வஞ்சகராம் நூற்றுவரும் வையமிசை மாண்டிடவும்
பஞ்சவரும் வேணதுக்கப் பட்டலைந்து நொந்திடவும்
பொல்லாத காலம் பொருதியிருக் கின்றதினுல்
வல்ல தருமர் மனதிலொன்றுந் தோன்ருது
நல்லதென வேயிசைந்தந் நாழிகையி லீகைதனை
இல்லாச் சகுனிமுன்னே யின்பமுட னேபுகல்வார்
பொக்கிஷத்தி லேநிறைந்த பொன்னு பரணமெலாம்
பக்குவம தாகவொரு பந்தயமாய் வைத்தனனே

வல்லவரே நீருமென்ன வைக்கின்றீ ரென்றனரே
சல்லாப மாய்த்துரியன் சாற்றுவா னப்பொழுது
எந்த னிடத்தி லிருக்கும்பொன் ஞபரணம்
பந்தயமொன் ருகவைத்தேன் பண்புடனே யாடுமென்ருன்
சாந்தகுண வான்தருமர் சம்மதித்து மேசகுனி
வேந்தனுடு தாஞடி வேணசெம்பொன் ஞபரணம்
தன்னையே தோற்றனரே தவ்வியெழுந் தேசகுனி
நன்னயம தாகவந்த நாழிகையி லேபுகல்வான்
அப்பா மருமகனே யந்தமிகு மன்னவனே
இப்போது பந்தயமே யென்னசொல்வீ ரென்றறைந்தான்
வாம மிகுந்தருமர் வாகாக வேபுகல்வார்
மாமனே யெந்தனிட மாகவே தானிருக்கும்
நன்னயம தானபல நான்குவகைச் சேனைகளை
மன்னனே பந்தயமாய் வைத்திட்டே ஞடுமென்று
செப்பிடவே நான்குவகைச் சேனைகளை யேசகுனி
தப்பிதமொன் றில்லாது தானே கெலித்துரைப்பான்
இந்தவோ ராட்டமதை யெப்படியும் நீர்செயிப்பீர்
பந்தயத்தைக் கூறுமென்று பாதகனும் கேட்டிடவே
துங்கத் தருமருமே சொல்லுவா ரப்பொழுது
செங்கோல் செலுத்துகின்ற தேசமதி லுண்டான
தேவா லயமதனைச் சேர்ந்தவைக ளுந்தவிற
பாவா ணர்வாழும் பதிக ளனைவையுமே
பந்தயம தாகவைத்தேன் பாங்குடனே யாடுமெனச்
சிந்தைமிக வேமகிழ்ந்து தீயன் சகுனியுமே
வல்லபம தாயாடி மானிலங்க ளைக்கெலித்துச்
சல்லாப மாகவுமே சாற்றுவா னந்நேரம்
நாற்றிசை யோர்கொண்டாடும் நற்றரும ரேயுமையே
மாற்றவிலை நீருமினி வைப்பதென்ன பந்தயமே
சொல்லுவீ ரென்றவுடன் தூய்ய தருமருமே

இல்லையொன் றுங் கைவசத்தி லென்றே மனதிலெண்ணி
வாம மிகுந்ததம்பி மார்களுட னென்மீது
பூமனே யோராட்டம் போடுமென வேயுரைத்தார்
வஞ்சமனத் தோன்சகுனி மாமனுமே சூதாடிப்
பஞ்சவரை யுஞ்செயித்தே பாங்காக வேபுகல்வான்
பொறுமை யுடையதர்ம பூபதிநீ ரிப்பொழுது
அருமையுட னெதைவைத் தாடுவீ ரென்றனனே
மெல்லி துரோபதையின் மீதிலே யோராட்டம்
செல்வரே போடுமெனச் செப்பினு ரேதருமர்
இந்தமொழி கேட்டங் கிருந்த பெரியோரும்
சிந்தைமிக வேகலங்கித் தீங்குயென்ன நேர்ந்திடுமோ
தருமனுமே பெண்டீர் தனைவைத்தே சூதாடப்
பெருமையல்ல வென்றுவெண்ணிப் பேசாம லேயிருந்தார்
பாஞ்சால மன்யாகம் பண்ணியே பெற்றெடுத்த
பாஞ்சாலி யைக்கெலித்தான் பாவி சகுனியுமே
சாந்த குணவான் தருமர் தலைகுனிந்து
வேந்தர் சபைநடுவில் வீற்றிருந்தா ரந்நேரம்
வல்லமை யாய்நூற்று வருஞ்சகுனி கர்ணனுமே
சல்லாப மாயிருகை தட்டியே தானகைத்தார்
பஞ்சவரின் செல்வம் பறித்தோ மெனத்துரியன்
வஞ்சன் சகுனிமுன்னே வாகாக வேபுகல்வான்
மாமா வேயுன்றன் மலர்போன்ற கையேகை
சீமானே மற்றவரின் செங்கை மரவுலக்கை
என்று பலவிதமா யின்பமொடு கொண்டாடி
நன்ருக வேவிதுர ராஜனிட மேநவில்வான்
பாண்டவரு மன்னவரின் பத்தினியும் சேனையையும்
நீண்டதோர் பாரினையும் நேர்மையொடு பொன்றனையும்
ஜெயித்திட் டோஞ்சூதாடிச் சீக்கிரமாய் நீரேகி
பயித்தியங் கொண்டயிவர் பாரி துரோபதையை

இங்கழைத்து வந்திடுவீ ரென்றான் துரியனுமே
சிங்கம்போ லேவெகுண்டு செப்பிடுவா னேவிதுரன்
பஞ்சவரின் நாட்டைப் பறித்தோமென் றெண்ணிமத
மிஞ்சியே பேசாதே வீண்யோ சனைவேண்டாம்
சாந்தகுண வான்தருமர் தன்னையே தோற்றபின்பு
ஏந்திழையை வைத்தாட வேற்காது ஞாயமில்லை
அன்ன வளுமுந்த னடிமையா யாகவில்லை
என்னடா வுந்தனுக்கே யெள்ளளவு புத்தியில்லை
மாழாதே பஞ்சவரால் வஞ்சகனே நீநரகில்
வீழாதே யென்றறைந்து வேந்தனுமே தானிருந்தான்

சபைக்குத் துரோபதையை
வரவழைத்தல்

சித்தமிக வேவெகுண்டு தீயன் துரியனுமே
புத்திசற்று மில்லாதப் போதிலே தானுரைப்பான்
இந்த விதுரனுந்தா னென்றுமே நம்பகைவன்
தந்தையல்ல நீதியிவன் தானு புகலவல்லன்
வையகத்தில் நன்றாய்நாம் வாழ மனம்பொறுக்கான்
செய்யாத கேடுகளைச் செய்வா னிவன்குணமே
கோட்டானைப் போலுழறிக் கொண்டிருந்தா லேயதனைக்
கேட்டா நடப்பதிவன் கெட்டா னெனவறைந்து
சட்ட முடனேதன் சாரதியைத் தானழைத்துப்
பொட்டெனவே தானோடிப் போய்நீ துரோபதையை
கூட்டிவரு வாயெனவே கூறினு னம்மொழியைக்
கேட்டிவர்க்குப் போங்காலங் கிட்டினதென் றெநினைந்து
வேகமுட னேநடந்து மெல்லி துரோபதைமுன்
பாகவு மேவந்து பகர்ந்தான் நடந்தவற்றை
கன்னியுமே கேட்டிதென்ன காலமுமே நேர்ந்ததெந்தன்
மன்ன ரிடந்தனிலே வாகாக நீயோடி

என்னைமுன்னே தோற்றபின்பு யேந்தல்நீர் தோற்றீரா
தன்னையே தோற்றபின்பு தானுமென்னைத் தோற்றீரா
சொல்லு மெனக்கேட்டுத் துரிசாய்வா வென்றறைந்தான்
நல்லதென வேயவனந் நாழிகையி லேநடந்து
வல்ல தருமர் மதிமுகத்தைத் தானோக்கி
மெல்லியு மேசொன்ன விபரமதைக் கூறினனே
சாந்த குணவான் தருமரொன்றும் பேசாது
வேந்தர் சபைதனிலே வெட்கமுட னேயிருந்தார்
பாரதனி லேகொடிய பாதகஞ்செய் யுந்துரியன்
சாரதியை நோக்கியுமே சாற்றுவா னந்நேரம்
பட்டி துரோபதையைப் பார்வேந்த ரின்சபையில்
கிட்டிப்பின் வேண்டியதைக் கேட்கலாம் வாருமென
கூட்டி வருவாய்நீ கூசாம லென்றனனே
வாட்டமுட னேநடந்து வந்துரைப்பான் மாதுமுன்னே
அன்னைநீ கூறியதை யன்பாய்த் தருமரிடம்
சொன்னே னதற்குவொன் றுஞ் சொல்லாம லேயிருந்தார்
மெல்லிகை யே நீகேட்க வேண்டியதோர் வார்த்தைகளைச்
சல்லாபர் சூழ்ந்த சபையிலே வந்துநின்று
கேட்டிடலா மென்றுகுடி கேடன் துரியனுமே
கூட்டிவரு வாயெனவே கூறினான் வாருமம்மா
என்றனனே மங்கையுமே யிம்மொழிகேட் டங்கமெலாம்
கன்றிமனம் புண்ணாகிக் காவலர்கள் சூழ்சபைக்கு
எந்தவித மாகவுமே யேகுவோ மென்றேங்கிச்
சுந்தரியு மண்டவொண்ணுத் துக்கமுட னங்குநின்றாள்
தருமனுமே யோர்தூ தனையழைத்தென் பாரிதனை
வருவா யெனவுரைத்து வந்திடுவா யென்றறைந்தார்
தூதுவனுங் கேட்டோடித் தோகைமுன்னே கூறினனே
மாதுமதி வேறுபட்டு மண்மேல் விழுந்தெழுந்து
வருகும் விதியை மறித்தாலே நின்றிடுமோ

உருகிமன மேசோர்ந் துழலுவதா லென்னபலன்
என்று நடந்துவிழி யில்லா னருகினிலே
சென்றுநின் ருள்கண்டு சிரித்தாரே நூற்றுவரும்

---

### துச்சாதனன் துரோபதையின் கூந்தலைப் பற்றியிழுத்து வருதல்

பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரும் பாரிதனைப் பாராம லேயிருந்தார்
பாதகத்தைத் தான்புரியும் பாவி துரியனுந்தன்
சோதரன்துச் சாதனன்முன் சொல்லுவா னப்பொழுது
வல்லவனே வேகமதாய் மன்னர் சபைநடுவே
மெல்லிதனை நீயிழுத்திவ் வேளைவரு வாயெனவே
நல்ல தெனமூடன் நடந்துமே சென்றவள்முன்
சல்லாப மாகவுமே சாற்றுவான் யாதெனிலோ
சந்ததமு மைவர் தனைமருவும் வேசியிங்கு
வந்தொதுங்கி நின்றிடவே மானமென்ன வுந்தனுக்கு
வாடிநீ யெங்களடி மைத்தாசி யானபின்பு
கூடினதோர் மாசபைக்குக் கூப்பிட்டால் வாராதேன்
பஞ்சவரு மின்றுகுரும் பாடுகளைப் போல்தலையை
வஞ்சி குனிந்திருக்கும் வாறுகளைப் பார்த்திடுவாய்
அண்ணன் துரிய னழைத்தார் வாமோடிபல
பண்ணுதே யுன்னைவிடேன் பட்டியே யென்றவனும்
பேசாத வார்த்தைகளைப் பேசியே மாதுசெங்கை
கூசாம லேபிடித்துக் கொண்டிழுத்தா னன்னேரம்
வாமமிக வேமிகுந்த மங்கை துரோபதையும்
மாமிமுன்னே வேகமொடு வந்தே கதறிநின்ருள்
காந்தாரி யொன்றுங் கழருமலேயிருக்க
ஏந்திழையும் வாடிமன மென்னசெய்வே னென்றழுதாள்

பட்டிவிடே னுன்றனையே பாரடியென் றேயுரைத்துக்
கிட்டியே மாதரசி கேசமதை யேபிடித்து
இழுத்துவந் தான்மன்ன ரிருக்குஞ் சபைதனிலே
வழுத்துவாள் பாஞ்சாலி வாடிமன மன்னேரம்
சான்றேரே யிந்தச் சபையோரே கன்னியரை
ஈன்றதிலே யோகொடிய யிம்சைசெய்ய வேபார்த்து
இருக்கமனம் வந்தனவோ வென்ன வொன்றும் பேசவில்லை
பொறுக்கிலேன் பெண்பாவம் போகுமோ வீணுக
தடுப்பா ரொருவரிங்கு தானில்லையோ புத்திபல
கொடுப்பா ரிலையோ கொடியபஞ்ச பாதகர்க்கு
என்றறைந் தேமாது மிருகண்ணீர் தன்னைவிட்டாள்
ஒன்றுமவர் பேசாம லூமைபோ லேயிருந்தார்
பேசா திருந்தவற்றைப் பேதையுமே தானறிந்து
கூசா தொருவார்த்தை கூறுவா ளந்நேரம்
வல்லமை யாய்வேத மதையாய்ந்து வீற்றிருக்கும்
வில்லா சிரியரொடு வேந்தரே வீட்டுமரே
என்னைமுன்னே தோற்றபின்பு யேந்தலுமே தோற்றூரா
தன்னையே தோற்றபின்பு தானுமெனைத் தோற்றூரா
நீதியா யிச்சபையில் நேர்ந்தவற்றை நீரெடுத்து
ஓதிடுவீ ரென்றே யுரைத்துமே மங்கைநின்றுள்
கன்றி முகமுமொரு கையதனை மூக்கதின்மேல்
நன்றுக வைத்திவளால் நாச மடைந்திடுவார்
சந்தேக மில்லையெனத் தானே மனம்நினைந்து
சுந்தரியுங் கேட்டதற்குச் சொல்லாது சோர்ந்திருந்தார்

விகர்னன் பாஞ்சாலிக்கு
நீதி சொல்லுதல்

பாதகத்தை யேபுரியும் பாவி துரியனின்றன்
சோதரரி லேயிளைய தூயன் விகர்னனுமே

மெத்தவே கோபமொடு வேகமாய்த் தானெழுந்து
சத்திய வானந்தச் சபையோரைப் பார்த்துரைப்பான்
பாஞ்சால மன்யாகம் பண்ணியே பெற்றெடுத்த
பாஞ்சாலி கூந்தலதைப் பற்றியே தானிழுத்து
வந்து சபையிலவ மானமுறப் பேசுவதை
விந்தையென வேபார்த்து வீற்றிருக்க ஞாயமுண்டோ
கண்டஞா யத்தையெள்ளுக் காய்பிளந்தாப் போலுமின்று
வண்டாரும் மாலையணி மார்பரே கூறுமென்றூர்
வல்லவி கர்னனிட வாக்கியங்கேட் டெல்லோரும்
சொல்லாம லேபதிலுஞ் சோகமுட னேயிருந்தார்
ஐயய்யோ யீதுமென்ன வன்யாய மூடசெய்கை
தெய்வமதற் கொவ்வாது சிந்தைமிக நைந்திடுதே
ஒன்றுமே பேசாம லூமைபோ லேயிருக்க
நன்றல்ல பாவமிது நான்தெரிந்த மட்டுரைப்பேன்
கன்னியே கேட்டிடுவாய்க் காவலனுஞ் சூதாடித்
தன்னையே தோற்றபின்பு தானுனையே தோற்றனரே
சாந்த குணவான் தருமர்தான் தோற்றபின்பு
ஏந்திழையுன் மீதாட வேற்காது ஞாயமில்லை
ஆடிடினுந் தானே யடிமைநீ யாகவில்லை
ஆடிடவே சம்மதித்தே யாடினேன் மீதுகுற்றம்
அடிமை நீயென்றே யரசர் சபைநடுவே
கொடுமைசெய்வோ மென்றுவுந்தன் கூந்தலிலே கைபோட்டு
இழுத்து மேவந்த திதுவே பெரியகுற்றம்
வழுத்தினே னுண்மையென வாய்மூடி வீற்றிருந்தான்

கர்ணன் விகர்னனைக்
கோபித்தல்

இந்த மொழிகேட் டிருந்ததோர் கர்ண னுமே
சிந்தைமிக வேவெகுண்டு செப்புவா னந்நேரம்

நீதி தெரிந்த நிபுணன்போல் நீயெழுந்து
சேதி சொல்லிக்குற்றஞ் சுமத்தினல் லெங்களின்மேல்
மனு நீதி யாய்ந்தவரிம் மாசபையில் தானில்லையா
தனியாக நீயொருவன் தானுதெரிந்து கொண்டாய்
ஞாயமிது வென்றவையோர் நன்று யிருக்கவனி
யாயமிது வென்றே யறைந்தாய் சிறுபயலே
மெல்லிதனை வைத்தாட வில்லையா பாண்டவரும்
அல்லா திருந்தா லவருமே பேசாரோ
குலத்தைக் கெடுக்கவந்த கோடாலிக் காம்பே நீ
பலத்துடை யோன்போலே பகர்ந்தாயோ நீதிதனை
போடா சிறுபயலே புத்திசற்று மில்லாத
மூடா குடிகேடா முன்பு மேநில்லாது
துட்டனே யென்றறைந்து துச்சா தனனிடமே
சட்டமுட னேயெடுத்துச் சாற்றுவா னப்பொழுது
பாண்டோ ருடையுமிந்தப் பாவை துரோபதையாள்
பூண்ட துகிலையுமிப் போதிலுரி யென்றனனே

துச்சாதனன் துரோபதையைத்
துகிலுரிதல்

வஞ்சகனுஞ் சொல்லியதோர் வார்த்தைதனை யேகேட்டுப்
பஞ்சவரு மாடைதனைப் பாங்காய்க் களைந்தெரிந்தார்
துச்சா தனனுந் துடுக்காய்த் துரோபதைமுன்
உச்சாக மாயோடி யோர்கரத்தி னாற்றுகிலை
பிடித்தே யிழுத்தனனே பேதையுமே மண்மீது
அடித்து விழுந்தெழுந்தே யச்சுதனை யேதுதிப்பாள்
விண்ணோ ரடியளந்த மெய்ப்பொருளே நாரணனே
மண்ணோ ரடியளந்த வள்ளலே சீதரனே
கண்ணனே செங்கமலக் கண்ணனே கார்மேக
வண்ணனே மாகெருட வாகனனே மாதவனே

மாயா பரந்தாமா வாமனனே பொன்மாது
நேயா கரிதுயரை நீக்கியதா மோதரனே
ஓரா யிரநாமா வுத்தமனே ஸ்ரீராமா
பாராதி யண்டமெலாம் பண்பாய் நிறைந்தவனே
ஆலிலையின் மேல்த்துயின்ற வையனே கேசவனே
வாலிக் கேழுத்தி மகிழ்ந்தே கொடுத்தவனே
செந்திருமா லேழுகுந்தா தேவரிடர் தீர்த்தவனே
பைந்துளபத் தாரணிந்து பக்தரையே காத்தவனே
பெற்று ருங்கூடப் பிறந்தாருங் கொண்டோரும்
மற்றுரு மேகாக்க மாட்டா ரிவ்வேளையிலே
மன்னர் சபையிலெந்தன் மானம்போ காமலுமே
மின்னுளை யேகாப்பாய் வெண்ணையுண்ட செவ்வாயா
என்றே பலவிதமா யேந்திழையுந் தான்துதிக்க
குன்றெடுத்த செங்கரத்தான் கோபால னீதறிந்து
மெல்லிதனை யேகாக்க வேண்டுமென வேநினைந்து
சல்லாப மங்கையிட தன்னிலே வேண துகில்
விந்தையுட னுண்டாக வேண்டுமென வேபுகன்று
சிந்தைமிக வேமகிழ்ந்து செந்திருமால் வீற்றிருந்தார்
தோகை துகில்தனையே துச்சா தனன்பாவி
ஈகைகொஞ்ச மேமனதி லில்லாம லேயுரிந்து
உள்ளாடை நன்னயமா யொன்றிருக்கக் கண்டவனும்
வெள்ளாட்டி நீயிவ் விதஞ்செய்வோ மென்றறிந்து
கள்ளியுள்ளே யோர்துகிலைக் கட்டியே வந்தனையோ
உள்ள மகிழ்ந்திதை யுரிந்துபங்கஞ் செய்திடுவேன்
பட்டியே பாரெனவே பாதகனு மேகளைந்தான்
சட்டமொடு பின்புதுயில் தானிருக்கக் கண்டுரைப்பான்
மந்திரத்தைக் கற்றனையோ வஞ்சகியே யுன்னுடைய
தந்திரத்தை யானுமின்று தான்பார்க்கி றேனெனவே

சரிந்த குழலுடைய தையலின்றன் பொற்றுகிலை
உரிந்துரிந்து மேயெரிந்து மோர்மலைபோ லேகுவித்து
மெய்சோர்ந்து நாவரண்டு வேர்வைமிக வேயடைந்து
கைசோர்ந்து கால்சோர்ந்து காவலனுங் கீழ்விழுந்தான்
மெல்லி துரோபதையவ் வேளையிலே தான்மகிழ்ந்து
வல்லகோ பாலனையே வாகாத் துதித்துநின்முள்
உச்சாக மாய்த்துகிலை யோடியே தானுரிந்த
துச்சா தனனுமதி சோர்ந்துவெட்க மேயடைந்தான்
கன்னிகற்பை யச்சபையோர் கண்டுமெச்சிக் கொண்டாடி
மன்னவ ராம்பாண்ட வரையுமே தான்புகழ்ந்து
துரியன் சகுனிகர்ணன் துச்சாதன னிவரைப்
பெரியோருந் தூஷணித்தே பேசா திருந்தனரே

## துரியோதனன் பாஞ்சாலியைத் துடையில் இருக்கச் சொல்லுதல்

வஞ்சன் துரியனுமே வல்லமைமயி லேசிறந்த
பஞ்சவரின் தேவிதனைப் பார்த்துமே கூறிடுவான்
பாண்டரச னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரு மேயடிமைப் பட்டனரே யெந்தனுக்கு
கன்றி வதனமுமே கண்ணீர்விட் டேபுலம்பிக்
குன்றிமன மிங்குநின்று கூறுவதா லென்னபலன்
துக்கமதை யேவிடுத்துச் சுந்தரிநீ யிப்பொழுது
பக்குவமா யோடிவந்து பாங்காய் வலத்துடைமேல்
இருந்தால் வெகுநலங்க ளெக்காலு மேயடைவாய்
வருந்தாம லேமனது வந்திடுவா யென்றறைந்தான்
செய்யபாஞ் சாலியுமே சிந்தைமிக வேவெகுண்டு
துய்ய சபைநடுவிற் சொல்லுவா ளந்நேரம்
வல்லமை யாயெந்தன் வலத்துடையில் வந்திரென
சொல்லியா வுந்தன் துடையிலே மிர்த்துவுண்டாம்

என்றே சபித்தனளே யிம்மொழியைத் தான்துரியன்
நன்றாகக் கேட்டேயந் நாழிகையி லேபுகல்வான்
பஞ்சவரை யேகூடும் பட்டி நீ பத்தினியோ
அஞ்சோடு நாளெருவ னுகாதோ வென்றறைந்தான்
துட்டன் சகுனிகர்ணன் துச்சா தனனிவரும்
பொட்டெனவே தானெழுந்து பூவைமுன்னே சென்றுநின்று
பேசாத வார்த்தைகளைப் பேசியே மூவருமே
கூசா தவமானம் கோதைதனைச் செய்திடவே

வீமன்சபதங் கூறுதல்

கண்டுமேத வீமனிரு கண்களுமே தான்சிவந்து
அண்டவொண்ணுக் கோபமுட ஞர்ப்பரித்தே யேதுரைப்பான்
மெல்லி துரோபதையை வேந்தர் சபைநடுவே
வல்லமை யாய்ச்சென்று மயிர்பிடித்துக் கொண்டுவந்து
மட்டில்லா வார்த்தைகளை வம்பாக வேபேசிக்
கட்டழகி சேலை களைந்ததோர் பாதகனை
சமர்க்களத்தி லேவெகுண்டு சற்றிரக்க மில்லாது
சமர்புரியும் வேளையென்கைத் தண்டாலே மார்பிளந்து
அவ்வழியி லூருசெந் நீ ரானதுவை யள்ளியுண்டு
செவ்வையுட னேதாகந் தீருவேன் சத்தியமே
இவ்வாறு செய்வரையே யென்கரத்தால் நீரையுண்ண
ஒவ்வே னுறுதியிவை யுண்ணிடவே வேண்டுமெனில்
தண்டாற் புனலையெற்றித் தான்மீ தெழுந்திவலை
உண்டிடுவே னின்னமுமே யோர்விரதம் யாதெனிலோ
மாதினையே யெந்தன் வலத்துடைமேல் வந்திரென
ஓதி னவனேடே யுபித்தமே செய்திடுங்கால்
வல்லமை யாய்த்தண்டால் வலத்துடையின் மீதடித்துக்
கொல்லுவே னிவ்விதமே கொற்றவன்செய் யாவிடிலோ

புண்ணியலோ கந்தனையே போயடையா தேயானும்
திண்ணமுட னேநரகம் சேருவே னென்றறைந்தான்

காண்டீபன் சபதங் கூறுதல்

காண்டீபன் தான்வெகுண்டு கர்ச்சனைசெய் தேயெழுந்து
நீண்டசபை யோர்முன் நிகழ்த்துவா னந்நேரம்
பாஞ்சால மன்யாகம் பண்ணியே பெற்றெடுத்த
பாஞ்சாலி யாளைவெகு பட்டியென்ற கர்ணனையும்
தீரமுட னேயிவனைச் சேர்ந்தோ ரவர்களையும்
சூரன்போல் வீற்றிருக்குந் துஷ்டன் துரியனுக்கே
உக பலமதாக வுயித்தமே செய்யவரும்
சகலரையும் வாளியினுல்த் தானே மடித்திடுவேன்
மண்டலமே யாழ்ந்தாலும் வாரியே பொங்கிடினும்
அண்ட மிடிந்தாலு மசைந்தாலு மேருவரை
சந்திரனும் சூரியனும் தான்திசையே மாறிடினும்
எந்தனுரை வீணுகா தென்றே யறைந்தனனே

நகுலன் சபதங் கூறுதல்

வல்லநகு லன்வெகுண்டு மாசபையைத் தானேக்கி
சொல்லுவா னந்நேரம் தோகை துரோபதையை
வம்பாக வாய்க்குவரா வாரோ திடுந்துரியன்
தம்பிமார் தன்னைச் சகுனியுட புத்திரனை
வென்றிடுவே னுண்மையிது வெல்லமுடி யாவிடிலோ
சென்றுவீழ் வேனரகில் திண்ணமென வேயுரைத்தான்

சகாதேவன் சபதங் கூறுதல்

சாத்திரத்தி னெல்லைகண்ட சாதேவ னும்வெகுண்டு
நேத்திரமு மேசிவந்து நேர்மையுட னேபுகல்வான்
வல்ல சகுனிதனை மாய்த்திடு வேன்சத்தியமே
இல்லையெனி லோநரகி லெய்துவே னென்றனனே

துரோபதை சபதங் கூறுதல்

மெல்லி துரோபதையவ் வேந்தர் சபைநடுவே
சொல்லிடுவா ளோர்சபதம் தோகையுமே தான்சினந்து
அரசவையி லேற்றியெனை யஞ்சா தழகமொடு
துரிசாய்த் துகில்தீண்டித் தூஷணித்த பேர்தனையே
கொற்றவரா மென்கொழுநர் கொன்றுரெத்த வாருேட
வெற்றி முரசறையும் வேளையிலென் கூந்தலையே
முடிப்பே னதுவரையே முண்டகச்செங் கையாலே
முடிப்ப திலையென்றே மொழிந்து மேநின்றனளே
வானிலி ருந்துபுட்ப மாரி பொழிந்தனவே
ஞானமறிந் தோருமக்கால் நங்கைதனை யேபுகழ்ந்தார்
மன்திரித ராட்டிரனின் மாளிகையி லேநரிகள்
சென்றூளை யிட்டனவே செங்கமுதை கத்தினதே
தக்க விதுர னுங்காந் தாரியுமே கண்டுபயந்
தக்கணமே சென்றந் தகன்முன்பு மேபுகன்றார்
கேட்டவனு மேபயந்து கேடுவந்து சேருமென
வாட்டமடைந் தேமனது மைந்தரையு மேகடிந்து
மெல்லி துரோபதையை வேந்தனுமே தானழைத்துச்
சல்லாப மாகவுமே சாற்றுவா னந்நேரம்

துரோபதைக்கு திரிதராட்டிரன்
வரங்கொடுத்தல்

பாஞ்சால மன்யாகம் பண்ணியே பெற்றெடுத்த
பாஞ்சாலி துக்கப் படவேண்டா மென்புதல்வர்
மைத்துனியென் றெண்ணிவெகு வாகவிளை யாடினரே
வித்தேச மாய்நினைக்க வேண்டாம் சிரோன்மணியே
என்னவரம் வேண்டுமுனக் கிப்பொழுது கூறுமென்றான்
கன்னியுமே கேட்டுக் கழறுவா ளன்புடனே

மாமா வெனக்கே வரங்கொடுக்க வேண்டுமெனில்
சீமான் தருமரையே செப்பா தடிமையென
நீக்கிடுவீ ரென்றனளந் நேரமதி லேகுருடன்
பாக்யவதி யந்தப் படிகொடுத்தே னின்னுமொன்று
என்னவரம் வேண்டுமென்று னிம்மொழியைக் கேட்டறைவாள்
நன்னயம தாகமற்ற நால்வ ரடிமைதனை
மாற்றிவைப்பீ ரென்றனளே மன்னவனும் கேட்டவளைத்
தேற்றியே யுன்மனம்போற் செய்தனனே மாமயிலே
இன்னு மொருவரமே யெந்தனிடங் கேளுமென்றான்
மன்னனிட முன்னலே மங்கை புகன்றிடுவாள்
வாமமிகு வைசியரும் வாங்கலா மோர்வரத்தை
பூமியுள்ள வேந்தர் புகழ்ந்துபெற லாமிரண்டை
அந்தணரும் நூறுவர மானதுவை யேபெறலாம்
இந்த விதம்நீதி யிருப்பதா லெந்தனுக்கே
இரண்டு வரம்பெற்ற திதுபோது மென்றறைந்தாள்
முரண்டுபண்ணு கின்றகர்ணன் மூடனிட மேபுகல்வான்
வல்லதுரி யோதனனே வாகாகக் கேட்டிடுவாய்
மெல்லி துரோபதையிவ் வேளையிலுன் தந்தைமுன்னே
நின்றே யடிமைதனை நீக்கினள் பாண்டவர்க்கு
நன்றாக யோசனைசெய் நங்கைசெய்த மாயமதை
என்றே யறைந்தனனே இம்மொழிகேட் டேசினந்து
வென்றிடுவே னின்றெனவே வீமார்ச் சுனரெழுந்தார்
தருமமே யோருருவாய்த் தானே திரண்டுதித்த
தருமரிரு பேர்கோபந் தன்னையே சாந்தமுற
புத்தி பலவிதமாய்ப் போதித்தே யந்நேரம்
உத்தமரு மந்தகன்முன் னேதுவா ரேபணிந்து

### திரிதராட்டிரன் பஞ்சவரை இந்திரப் பிரஸ்தமனுப்புதல்

சிந்தை மகிழ்ந்திந் திரப்பிரஸ்த மாநகரைத்

தந்தையே விட்டுவந்துன் சம்மதிபோற் செய்துவிட்டோம்
இன்னுமெதுங் கட்டளைக ளிட்டா லதன்படியே
நன்னயமாய்ச் செய்திடுவோம் ராஜனே யென்றறைந்தார்
கண்ணில் லான்கேட்டே கவலைமிக வுண்டாகிப்
புண்ணிய வான்முன்னே புகலுவா னந்நேரம்
மைந்தனே யிந்தவித மாய்வருமென் றேயறிந்தால்
உந்தனையே யிங்குவர வொட்டே னுறுதியிது
சுந்தரனே சூதாடித் தோற்றதெல்லா முந்தனுக்கே
தந்துவிட்டே னீதைமனந் தன்னிலே வைக்காமல்
தம்பி துரியனையும் தான்பகைத்துக் கொள்ளாது
அம்புவியை முன்போலே யாண்டிருப்பீ ரென்றனனே
வல்ல தருமரிந்த வாக்கியத்தைத் தான்கேட்டுச்
சல்லாப மாகச் சபையோரை யும்பணிந்து
மின்னுள் துரோபதையும் வேந்தரொரு நால்வரையும்
நன்னயஞ்சேர் வேணபல நான்குவகைச் சேனையையும்
கூட்டிரத மீதேறிக் கொண்டுமே வேகமொடு
காட்டகத்தை யேகடந்து காவலரு மேமகிழ்ந்து
திக்கோர் புகழிந் திரப்பிரஸ்த மாநகரைப்
பக்குவமாய் நோக்கியுமே பாதிவழி சென்றனரே

துரியோதனன் தந்தையிடம்
சொல்லுதல்

தந்தையிட மேதுரியன் தானோடி வந்துநின்று
சிந்தைமிக வேசோர்ந்து செப்புவா னப்பொழுதே
பாண்டரச னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரைத் தந்திரங்கள் பண்ணியிங்கு மேயழைத்து
வாதாடி யேஜெயிக்க மாட்டாம லிப்பொழுது
சூதாடி யேஜெயித்த தொல்புவியு மற்றவையும்

கொடுத்தே யனுப்பிவிட்டீர் கோமா படைநாளை
எடுத்துவந் திங்கேபுகுந்து மெல்லோரை யும்மடிப்பார்
சிந்தையிலே யோசனைகள் செய்யாம லெங்களுக்கே
தந்தையே யிந்தவிதந் தானே வினைமுடித்தீர்
செப்பமுட னின்னுமொன்று செப்பிடுவேன் யாதெனிலோ
இப்பொழுது சூதாட வங்கழைப்பீர் பஞ்சவரை
பந்தயங்க ளோர்விதமாய்ப் பண்ணியே தான்செயித்து
விந்தையொடு காடேக விட்டிடுவோ முண்மையிது
மன்னவனே யிந்தவித மாகச்செய் யாதிடிலோ
நன்னயமாய்ப் பஞ்சவரும் நாளையெனைக் கொல்லுமுன்னே
தந்தை யேயுந்தன் சமுகமதி லிப்பொழுதே
மைந்தனுயிர் விட்டிடுவேன் வள்ளலே யென்றறைந்தான்

திரிதராட்டிரன் பஞ்சவரை
வரவழைத்தல்

கண்ணில்லான் கேட்டுமந்தக் காலமதி லேமனது
புண்ணாகி மைந்தனுரை போலவொரு தூதுவனை
பஞ்சவரைக் கூட்டிவரப் பாங்காய் விடுத்தனனே
வஞ்சனைக ளின்னும் வகுத்தலா காதெனவே
வீட்டுமரும் வல்ல விதுரருமே நீதிசொல்ல
கேட்டிடா தந்தகனும் கெம்பீர மாயிருந்தான்
தூதுவனு மோடித் துரிசாகப் பஞ்சவர்முன்
சேதிதனை யோதிடவே சிந்தைமிக வேகலங்கி
விரும்பி நமையழைக்க வேண்டியது மென்னவெனத்
திரும்பியே வந்தனரே செய்யமணி மண்டபத்தில்
பஞ்சவரை யங்கிருந்தோர் பார்த்துப்பே சாதிருந்தார்
வஞ்சமனத் தோன்சகுனி மாமனெடுத் தேயுரைப்பான்

தருமரிடம் சகுனி சொல்லுதல்

நன்றி யுடையதர்ம ராஜேநீர் தோற்றதெலாம்

மன்திரித ராட்டிரரும் வாகாக வேயீய்ந்தார்
சிந்தைமகிழ்ந் தாடியின்னுஞ் செல்வமதைப் பெற்றிடினுன்
தந்தை மறுபடியுந் தானே கொடுத்திடுவார்
இந்தமட்டு மாடினதற் கென்னபல னைந்தனுக்கே
பந்தயங்கள் வேறுவிதம் பண்ணுவோம் யாதெனிலோ
மன்னவனே தோற்றோர் வருடமே பன்னிரண்டு
நன்னயமாய்க் கானகத்தை நாடி வசித்திருந்து
ஓராண்டு தானே யுருமாறி யேயிருந்து
பாராண் டிடவரலாம் பார்த்திபா யிந்தவிதம்
ஒவ்வி நீ ராடுமென வோதினு னேசகுனி
செவ்வையுட னேதருமர் செப்புவா ரந்நேரம்
முன்னாலே யிவ்வாற் மொழிந்ததுவு மேசரிதான்
பின்னாலே நீயும் பெருநரகில் வீழாது
எண்ணியே பார்த்தாடு மென்று ரதுகேட்டுத்
திண்ணமுட னேபுகல்வார் செய்ய துரோணருமே

துரோணர் தருமருக்குச் சொல்லுதல்

பொறுமை மிகுந்தரும பூபதியே யிப்பொழுது
வருமைமிக வந்ததென வாடாதே யுள்ளமுமே
காரார் குழலுடைய கன்னி துரோபதையும்
தாராரும் மார்பா நீர் தம்பிமார் நால்வருடன்
ஆண்டுவோர் பன்னிரண்டு மாகும் வரையிலுமே
நீண்டதோர் கானகத்தில் நேர்மையுட னேவசித்து
மற்றுமோ ராண்டு மறைவா யிருந்திடுங்கால்
கொற்றவனே யார்கண்டு கொண்டாலு மிந்தவிதம்
பதிமூன்று வாண்டு பழையபடி சென்றிடவும்
சதிராக வேதுரியன் தந்தையிட மேயுரைக்க
அன்னவரின் சம்மதத்தா லாடவே யுங்களையே
மன்னவரு மேயழைத்தார் மற்றுமே வேறிலைகாண்

தந்தையிட வெண்ணமதைத் தள்ளாதீ ராமபிரான்
சந்தோஷ மாகவனந் தானேகி யீரேழு
ஆண்டுங் கழிந்தபின்பு ஐயோத்தி மாநகர்க்கு
மீண்டுவந் தாண்டதுபோல் வேந்தரே கானேகி
வந்திடலாம் நீங்கள் வனமேகு தல்நலமென்
றெந்தனுக்குத் தோற்று தெனவுரைத்தா ரன்புடனே
மங்கை துரோபதையவ் வார்த்தைதனைத் தான்கேட்டுச்
சங்கையில் லாமலுமே சாற்றுவா ளந்நேரம்
கட்டளைபோல் நாங்களுமே கானிலெய்து வோமடிமைப்
பட்டே கிடுதலிது பாங்கல்ல வென்றறைந்தாள்
வல்ல தருமரிந்த வாக்கியத்தை யேகேட்டுச்
சல்லாப மாகச் சபையோ ரிடம்புகல்வார்
அடிமை யொடுகானி லடைந்துமே மீண்டுவந்து
படிதனையே கேட்டிடிலோ பஞ்சவரே நீங்களுமே
அட்ட திசையோ ரறியவெங்க ளுக்கடிமைப்
பட்டிருக்க வெந்தவிதம் பார்தனை யீந்திடுவோம்
என்றிடுவா ரானதினு லின்றோர் தாஞ்சூது
நன்ருகப் போட்டிடவே நானினைந்தே னென்றனரே

மறுமுறை சூதாடுதல்

வல்ல தருமரிட வாக்கியங்கேட் டேசகுனி
கல்லெனவு மேசிரித்துக் கைதட்டி யேபுகல்வான்
இந்தவித மேபுகன்று யெந்தனொடு சூதாடப்
பந்தயங்க ளென்ன பகருமென்று னந்நேரம்
தருமருமே கேட்டுச் சகுனியான் செய்திருக்கும்
தரும மதையேபந் தயம்வைத்தே னுடுமென்றார்
நல்லதெனச் சம்மதித்தந் நாழிகையி லேசகுனி
வல்லமைய தாயாடி வந்துமே தோற்றுவிட்டான்
பாண்டோரு மேயடிமைப் பட்டதுவைத் தான்நீக்கி

நீண்ட காடேக நினைந்தங்கே வீற்றிருக்கும்

### பாண்டவர் வனவாசம் செய்யச் செல்லுதல்

துய்ய கிருபர் துரோணரசு வத்தாமன்
செய்ய விதுரன் திடமிகுந்த சோமதத்தன்
சஞ்சயன்பூ ரிச்சிரவன் சாந்தகுணப் பாகிலிகன்
வஞ்சஞ் செயுங்குருடன் மந்திரிமார் வில்வேந்தர்
கங்கைமைந்தன் பூரியொடு காந்தாரி யானோரை
மங்க ளமதாக வணங்கிவெளி வந்துநின்று
குந்திக்கே வேணமதி கூறி விதுராகம்
சிந்தைமகிழ்ந் தேயிருக்கச் செய்து மேயன்னேரம்
பாண்டவரும் பத்தினியும் பாங்காய் மரவுரியைப்
பூண்டிடையில் மான்தோலைப் போர்த்தியே வீதிவழி
சென்றாரே யந்நகரோர் செய்திதனை யேதெரிந்து
கன்றிழந்த கோவுங் கதறுவதைப் போலழுது
கொண்டுமே பின்தொடர்ந்து கூடவரு வோமெனவே
கண்டே தருமரந்தக் காலமதி லேயவர்க்கு
புத்திபல வாறெடுத்துப் போதித்தே யங்கிருத்திச்
சத்தியவான் பத்தினியும் தம்பியரை யுங்கூட்டி
அச்சுதனே கோகுலனே யாதிநா ராயணனே
பச்சைமா லேமுகுந்தா பாலாழி யிற்றுயின்ற
கண்ணனே செங்கமலக் கண்ணனே கார்மேக
வண்ண னேயென்று மனதிலெண்ணி யேநடந்தார்

### பாண்டவர்கள் வனம்புகுதல்

நாடு நகரமதை நன்றாக வேகடந்து
காடதனி லேபுகுந்து கண்ணனே தஞ்சமென
தக்கோர் புகழுஞ் சவுனகரின் றன்வனத்தில்

பக்குவமாய்ச் சென்றமர்ந்தார் பஞ்சவரும் பத்தினியும்
வல்ல தருமரிட மாகவே தானிருந்த
பல்லா யிரமறையோர் பாண்டோருங் காடுறைந்த
சங்கதியைக் கேட்டுமனம் தத்தளித்து.மேதியங்கி
எங்கிருந்த போதிலுமே யேகி விரைவினிலே
மண்டலத்தோர் கொண்டாடு மன்னவராம் பஞ்சவரைக்
கண்டே யவர்களொடு கானகத்தி லேவசிப்போம்
வாருமென வேபுகன்று மாமறையோ ருந்திரண்டு
சீருடைய பஞ்சவர்வாழ் செய்யவனம் வந்துகண்டார்
தருமமேயோ ருருவாய்த் தானே திரண்டுதித்த
தருமருமே தம்பியரைச் சல்தியாய்த் தானழைத்து
எதிர்சென்றே கூட்டிவந்தங் கெல்லோரையு மிருத்திச்
சதிராய் நடந்தவற்றைச் சாற்றினு ரேதருமர்
விப்பிரர்க ளுங்கேட்டு மேன்மைமிகு மன்னவன்முன்
செப்புவா ரப்பொழுது சிந்தைமிக வேகலங்கி
மன்திரித ராட்டிரரின் மக்களுமே யேமபுரம்
சென்றிடவு மேகாலம் சேர்ந்த படியாலே
வ்ாதாடி யேஜெயிக்க மாட்டாது மானிலத்தைச்
சூதாடி யேஜெயித்துத் தோன்றலே யுங்களையும்
காடேகச் செய்தனன்காண் கண்ணன் திருவருளால்
நாடேகுங் காலமட்டும் நாங்களுமே யிங்கிருப்போம்
தேசமதி லிப்பொழுது செல்லோம் மறுத்துமொழி
பேசிடுதல் வேண்டாம் பிரியோ மொருநாளும்
நீங்களடை யும்பயனை நேர்மையுட னிங்கிருந்து
நாங்க ளடைந்திடுவோம் ராஜனே யென்றறைந்தார்
வல்ல தருமரிந்த வாக்கியத்தைத் தான்கேட்டு
நல்லதெனச் சம்மதித்தந் நாழிகையி லேயிருந்தார்
அந்தணருஞ் சந்தோஷ மாகியக லாமலங்கு

சுந்தரஞ்சேர் பஞ்சவரைச் சூழ்ந்திருந்தா ரன்புடனே
பொறுமை யுடையதர்ம பூபதியு மேசோர்ந்து
அருமையா யிங்குநமை யண்டியே வந்திருக்கும்
அந்தணர்க ளும்பசிக்குள் ளாகிமெலி வாரெனவே
சிந்தை கலங்கியென்ன செய்வோ மெனவிருந்தார்

சூரியபகவான் தருமராஜனுக்கு
அக்ஷயபாத்திர மளித்தல்

அந்த வனத்துக் கதிபதியாய்த் தானிருந்து
சந்ததம் வாசஞ்செய் சவுனகரு மந்நேரம்
பாண்டுமன்ன னீன்றெடுத்த பாண்டவரும் நாடைவிட்டு
நீண்ட வனத்திலுற்ற நேர்மைதனை யேதெரிந்து
சிந்தைதனைப் பஞ்சவர்க்குத் தேற்றிவரு வோமெனவே
வந்தனரே சந்தோஷ மாகவுமே மாமுனியும்
கண்டுமே பாண்டவரும் காமுனிவ ரைப்பணிந்து
விண்டனரே தங்கள் விதிவசத்தை யப்பொழுது
மாதவத்தி லேசிறந்த மாமுனிவ ரும்புகல்வார்
பூதலத்தோர் போற்றுதர்ம பூபதியே நீர்கேளும்
விதியின் பயன்றனையே வெல்லமுடி யாதெவரும்
பதியிழந்து காடடைந்தோம் பத்தினியோ டென்றுவெண்ணி
சிந்தை கலங்காதீர் செல்வரே யென்றனரே
அந்த வுரைகேட் டறைவார் தருமருமே
வாமமிக வேயிலங்கு மாமுனியே யெங்களிட
பூமி யிழந்தேகான் புகுந்ததுவு மேமனதில்
வருத்தமில்லை யென்னையண்டி வந்தமறை யோர்பசியைப்
பொறுத்திரா தேவாடிப் போவாரென் றேகவலை
சிந்தைதனில் நின்றிமிசை செய்புதென வேபுகன்றார்
சுந்தரஞ்சேர் மாமுனியும் சொல்லுவா ரன்புடனே
விந்தையுட னிப்பொழுதே வேந்தனே யுன்றனக்கோர்

மந்திரத்தை யானேதி வைத்திடுவே னேகவலை
மாற்றுவீ ரென்றுவெய்யோன் மந்திரத்தை யேகாதில்
சாற்றியே சென்றார் சவுனகரு மந்நேரம்
செய்ய தருமருமே தீர்த்தமது தானடி
வெய்யோனின் மந்திரத்தை மேன்மையுட னுச்சரித்து
பண்ணினர் நற்றபசு பாங்கான வெய்யோனும்
புண்ணியர்முன் மாமறையோர் போலவே வந்துநின்று
என்னவரம் வேண்டுமுனக் கின்பமொடு கூறுமென
மன்னவனுங் கண்டுவணங்கியே தானுரைப்பான்
ஐயனே கேளுமெனை யண்டிவந்த மாமறையோர்
வையமீ தேபசியால் வாடியுழ லாமலுமே
செய்வீர் கிருபையென்ச் செப்பிடவு மேகேட்டு
வெய்யோன் மனமகிழ்ந்தவ் வேளையெழி லுள்ளதொரு
அக்ஷயமா பாத்திரத்தை யன்னவரின் செங்கரத்தில்
பக்ஷமுட னீய்ந்து பகருவான் சூரியனும்
மன்னு வனத்திருக்கும் மட்டுமிதை வைத்திருந்து
நன்னயமாய் நீங்கள் நகரேகும் போதினிலே
எந்தனிடந் தந்திடுவீ ரென்றுரைத்தே சென்றனனே
சிந்தைமிக வேமகிழ்ந்து செய்ய தருமருமே
மாமறையோர் முன்போடி வந்துவெய்யோ னுங்கொடுத்த
வாமமுள்ள பாத்திரத்தை மன்னவனும் தானீய்ந்து
உண்டி களையுதவு முத்தமரே யிதைவைத்துக்
கொண்டுமே யாதோர் குறைவுமின்றிச் சீவனமே
செய்துவா ருங்களெனச் செப்பினு ரம்மொழிபோல்
செய்ய மறையோருஞ் சீவனஞ்செய் தேயிருந்தார்
பாண்டுமென்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரும் பத்தினியும் பாங்கார் வனத்திலுள்ள
கந்தமூ லங்களையக் காலமதி லேயருந்திச்
சிந்தைமிக வேமகிழ்ந்து செய்யமறை யோருடனே

அன்றிரவு தங்கினரே யாதித்தன் கீழ்திசையில்
நன்றுயு தித்தனனந் நாழிகையி லெல்லவரும்
காலைக்கடன் முடித்தக் கானகத்தை யேகடந்தோர்
சோலைகண்டு தங்கியுமே சோகமெலாந் தீர்ந்துபின்னர்
எல்லோருமாக வெழுந்துநடந் தவ்வனத்தைச்
சல்லாப மாய்க்கடக்கத் தானே மனதிலெண்ணி
சீதரனை யங்குதுதி செய்துகொண்டு மேவிரைவாய்ப்
பாதி வனங்கடந்தார் பானுவுமே போய்மறைந்தான்

வீமன் கிம்மீரணனை வதைத்தல்

வம்பன் பகாசுரனு மாய்ந்தவற்றை யன்னவனின்
தம்பிகிம் மீரணனும் தானறிந்து கொன்றமத
வீமனையென் றுகிலுமே வென்றுபழி வாங்கிடவே
பாமரனும் யோசனைகள் பண்ணியந்தக் கானகத்தில்
வாசமே செய்திருந்தோன் மன்னவராம் பாண்டவரை
நாசமடை வானுமந்த நாழிகையிற் கண்டனனே
ஐவரிலே வீமனிவ னுகுமென வேமதித்துக்
கைவிரல்க ளைப்பிசைந்து கண்சிவந்து கோபமொடு
வெல்லுவோ மென்றோடி வேகமொடு வந்தனனே
மெல்லி துரோபதையின் மேதைதனைக் கண்டாசை
கொண்டிருளை யுண்டுபண்ணிக் கொம்பனையைத் தானெடுத்துக்
கொண்டுசென்றான் விண்வழியே கோதை கதறுவதை
கண்டுமத வீமனிரு கண்சிவந்து கையிலுள்ள
தண்டதனைப் பூமீது தானூன்றி யேவிரைவாய்
பாய்ந்தே யவன்காலைப் பற்றியிழுத் தானசுரன்
ஓய்ந்துவிசை யந்நேர மொண்டொடியைத் தானெரிந்து
பூமிதனி லேகுதித்தான் பொற்கொடிகீழ் வீழுமுன்னே
வாமமுள்ள காண்டீபன் மங்கைதனை யேபிடித்து
வருத்த மொன்றும்நேராது மண்மீ திறக்கினனே

பருத்தபுய வீமனுமே பாரதனி லேகுதித்தான்
கிம்மீர ணன்ருனுங் கெர்ச்சனைசெய் தாக்ரமித்துக்
கெம்பீர வீமனையே கிட்டியொரு குத்துவிட்டான்
தட்டியதைக் கையாலே தானுமொரு குத்துவிட்டான்
பட்டதனைக் கோபமொடு பாரமலை யைப்பிடிங்கி
விட்டெறிந்தா னேயசுரன் வீமன் கதையினடி
பட்டேபொடிப் பொடியாய்ப் பார்மேல் விழுந்தனவே
வல்லமை யாய்ப்பாய்ந்து மதவீம னைப்பிடித்தான்
நல்லதடா வுன்னையிந்த நாழிகையி லேமபுரி
செல்லும் படியாகச் செய்வே னெனச்சினந்து
சல்தியாய் வல்லசுரன் றன்னையிரு கப்பிடித்து
மலையாம லேவீமன் வானிடிபோற் குத்துவிட்டுத்
தலையதனை யேதிருகிச் சந்தோஷ மாயெறிந்து
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமராடி
அருமையுட னேபணிந்தா னந்நேர மேமகிழ்ந்து
ஆசிபல கூறி யருகிருத்தி யெல்லோரும்
மாசில்லா மன்னவனை வாகாய்ப் புகழ்ந்தனரே

பாண்டவர் காமியவனத்தில்
வசித்தல்

வல்லமைசேர் பாண்டவரும் வாமமிகு மாமறையோர்
எல்லவரும் யோஜனைசெய் திந்தவ னந்தனிலே
இன்றிரவு தங்கவொண்ணு தென்றே விரைவினிலே
சென்றூர் பருதிவனம் செங்கதிரோன் வந்துதித்தான்
சல்லாப மாய்நடந்து தைதவனத் துக்குவந்து
உல்லாச மாய்மரங்க ளோங்கிவிண்ணைத் தாவிநிற்கும்
விந்தையைப் பார்த்தெல்லோரும் வேகமுட னேநடந்து
சிந்தைமகிழ்ந் தவ்வனத்தைச் சேர்ந்தமலை யுங்கடந்து
மேன்மை மிகுகா மியவனத்தைக் கண்டுபெரும்

பான்மைவள முள்ளதெனப் பஞ்சவரும் நீராடி
சித்தமகிழ்ந் தேபூசை செய்துகந்த மூலமதை
உத்தமரும் பத்தினியு முண்டுபசி தீர்ந்திருந்தார்
மறையோருஞ் சட்டரச வர்க்கமுட னுண்டிதனைக்
குறையா மலுமருந்திக் கொண்டிருந்தார் பாத்திரத்தால்

பாண்டவரைப் பந்துக்கள்
வந்து காணுதல்

பாண்டுமன்ன னீன்றெடுத்த பஞ்சவருங் கன்னிகையும்
நீண்ட வனமுறைந்த நேர்மைதனைத் தூதுவரும்
சொல்லவே கேட்டுமனம் சோர்ந்துபாஞ் சாலமன்னன்
வல்லதுஷ்டத் தூய்மனொடு மற்றுமுள்ள சேனைகளும்
மாமணலூர்ப் பட்டணத்தை வாகா யரசுசெய்யும்
வாமமுள்ள பாண்டியனும் மந்திரியுஞ் சேனைகளும்
மாதவனும் நான்கு வகைச்சேனை யோடெழில்சேர்
மாதவியும் துய்யனபி மன்னன்க டோர்க்கஜனும்
பாண்டவரு மீன்றவிளம் பாண்டவருங் குந்தியுமே
நீண்டவனந் தன்னிலுறை நேர்மை யுள்ளபஞ்சவரை
கண்டு வரவே கருத்திலெண்ணி யேகவலை
கொண்டுரத மீதேறிக் கொண்டே யனைவருமே
விந்தை மிகுகா மியவனத்தை நாடியுமே
வந்தனர்காண் பாண்ட வருமிவரைக் கண்டுவெதிர்
சென்றழைத்து வந்திருக்கச் செய்துமுன்பு நின்றவரும்
மன்திரித ராட்டிரனின் மைந்தரிட வஞ்சனையை
ஒன்று மொழியாம லுள்ளபடி செய்தவற்றை
நன்று யுரைக்கவந்த நாழிகையி லெல்லவரும்
அண்டவொண்ணுக் கோபமுட னுர்ப்பரித்தே வில்லேந்தி
வண்டரையே கொன்று வருவோ மெனவெழுந்தார்
கோபால ரன்னவரின் கோபமதை யேதணித்துப்

பூபாலர் முன்னே புகலுவா ரப்பொழுது
செய்யதுரோ ணச்சாரி தீர்ப்பின் படிவனத்தில்
ஐவருமே பன்னிரண்டாண் டாகும் வரைவசித்து
மற்றுமோ ராண்டு மறைவாக வேயிருந்து
குற்றமொன்று மில்லாது கொற்றவரும் வந்தபின்னர்
சூதாடி யேஜெயித்த தொல்புவியீ யாவிடிலோ
வாதாடி யந்நாள் மடிக்கலாம் பாதகரை
இப்பொழுது செல்லவொண்ணு தென்றனரே யம்மொழியை
யொப்பிமனத் துக்கமதை யோட்டியுண்டி யுண்டுவன்று
தங்கிமறு நாளுதையந் தன்னிலெழுந் தெல்லவரும்
மங்களம தாகவிடை வாங்கியே வேகமொடு
நன்று யவரவர்கள் நாடதனை யேநோக்கிச்
சென்றார் மனமகிழ்ந்து சேனைகளை யேகூட்டி
பாண்டவரும் பத்தினியும் பண்புடைய வேதியரும்
நீண்ட வனந்தனிலே நேர்மையொடு வாழ்ந்திருந்தார்

துரோணச்சாரி இந்திரப்
பிரஸ்தம் செல்லுதல்

வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்ததுரி யோதனனும்
சஞ்சலமொன் றில்லாது சட்டமுட னேயமர்ந்து
பஞ்சவரின் நாட்டைப் பறித்தோமென் றெண்ணிமத
மிஞ்சியே யோர்நாள் விதுரனிட மேபுகல்வான்
சிந்தை மகிழ்ந்து சிறியதந்தை யேகேளும்
சுந்தரஞ்சேர் பாண்டவரின் தொல்புவியை யுங்கெலித்து
வனத்திலே யேகுமென்ற வாக்கியத்தை யேகேட்டுச்
சினத்துடனே பாண்டவரும் சென்றார் விரைவினிலே
விண்ணுலகி லில்லாத விந்தைதனை யேமயனும்
மண்ணுலகி லுண்டாக்கி வைத்தசபா மண்டபஞ்சூழ்
செய்யவிந் திரப்பிரஸ்தஞ் சென்றே யரசாட்சி

செய்திடவே யானினைந்தேன் தீரமுட னிப்போது
வல்லவரே யெல்லோரு மாகவே யந்நகர்க்குச்
செல்லுவோம் வாருமெனச் செப்பிடவு மேகேட்டு
எண்ணாத வெண்ணமெல்லா மெண்ணி விதுரனகம்
புண்ணாகி யங்கிவனும் போகலா காதெனவே
மதித்துமே சொல்வான் வணங்கா முடியோனே
இதத்துடனே கேட்டிடுவா யென்னவெனி லோபாலா
குருகுலத்தி லேயுதித்த கொற்றவர்க ளுங்களித்து
ஒருகுறைவு மில்லா துலகாண்டா ரிங்கிருந்து
அல்லாம லெந்நகரி லாகினுமே தானிருந்து
வல்லோ ரரசாட்சி வாகாகச் செய்யவில்லை
முன்னோர்க ளெந்த முறையரசு பண்ணினரோ
மன்னவனே நீயுமந்த வாருக விங்கிருந்து
வையகத்தை யோர்குடைக்கீழ் வாகா யமர்ந்தரசு
செய்திடுவா யந்நகர்க்குச் சென்றிடவே வேண்டுமெனில்
உன்னைத் தடுக்கவல்லோ ருண்டோ வுலகினிலே
என்னுரையைத் தள்ளாதே இன்றே துரோணரையே
செல்லவிடுத் தன்னவராற் செய்துலக காரியத்தை
வல்லமைய தாய்முடிப்போம் வள்ளலே யென்றறைந்தார்
வணங்கா முடியோனவ் வாக்கியத்தைத் தான்கேட்டு
இணங்கி யேநல்ல தெனப்புகன்றவ் வேளையிலே
திக்கோர் புகழிந் திரப்பிரஸ்த மாநகர்க்குப்
பக்குவமாய்ச் செல்லும் படியே துரோணரிடம்
சாற்றினா னன்னவரும் சம்மதித்தே யங்குசென்று
நாற்றிசையோ ரும்புகழ நன்னயமாய் வாழ்ந்திருந்தார்

பாண்டவரிடத்தில்
விதுரன் வருதல்

பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச

பாண்டவரின் சொத்துகளைப் பாவிதுரி யோதனனும்
கண்டாசை கொண்டு கவர்ந்துமே சூதாலே
மண்டலத்தை யெல்லா மகிழ்ந்துமே தன்னரசு
புரிந்தே கவலைதனைப் போக்கியிருந் தானிதனைத்
தெரிந்துவிழி யில்லாதான் சிங்கா தனமீது
ஆனந்த சாகரத்தி லாழ்ந்தி விதுரனிடம்
தானந்தப் பஞ்சவரின் சங்கதியைக் கேட்டிடுவான்
வல்ல விதுரா வனஞ்சென்ற பாண்டவரும்
வில்லா சிரியர் விளம்பினதீர்ப் பின்படியே
பதிமூன்று வாண்டினையும் பாங்காக வேகழித்துப்
பதிமீண்டு தானேயன் பாய்வருவா ரோவலது
சீலமொடு கான்வாசஞ் செய்துபசி யால்வாடிப்
பாலகரு மாழ்வாரோ பண்பாகக் கூறுமென்றான்
கண்ணில்லான் சொன்னவற்றைக் காதினுற் கேட்டுமனம்
புண்ணுகி நொந்து புகல்வான் விதுரனுமே
ஆண்டுவோர் பன்னிரண்டு மன்பாகப் பஞ்சவர்கள்
நீண்டதோர் கானகத்தில் நேர்மையுட னேவசித்து
மற்றுமோ ராண்டு மறைவாக வேயிருந்து
கொற்றவனே நாட்டைக் கொடுமென்பா ரிங்குவந்து
உந்தனிட மைந்த னொருபோதும் நாடுகொடான்
சுந்தரஞ்சேர் பாண்டவரும் சொன்ன சபதமதை
முடித்திடுவா ருண்மை மோழிந்தே னெனப்புகன்றான்
துடித்துவிழுந் தேயெழுந்து சொல்லுவா னந்தகனும்
நேர்பனே யிக்கெடுதி நேரா திருக்கமணி
மார்பனே யோசனைகள் வாகாகக் கூறுமென்றான்
வல்லவிது ரன்கேட்டு மன்திரித ராட்டிரன்முன்
சொல்லுவான் மெத்தத் துணிவாக வேயெழுந்து
வஞ்சன் துரியனிந்த மண்மீதி லுள்ளவரை
பஞ்சவர்மீ துள்ள பகையைவிடா னதலினல்

மைந்தனையே கொன்றுவிட்டால் வாரா தொருபகையும்
சிந்தையிலே தோற்றுதெனச் செப்பினு னப்பொழுது
கண்ணில்லான் மெத்தக் கவலைகொண்டு சோர்ந்துமனம்
புண்ணுகி வீழ்ந்தெழுந்தப் போதுரைப்பா னேசினந்து
மந்திரிக்கு மேலான மந்திரியாய் வைத்துனையோர்
தந்திரத்தைக் கூறுமெனத் தான்கேட்கி லோமூடா
மைந்தனையே கொன்றுவிடு வாயெனவே நீயுமெத்தச்
சிந்தைதுணிந் தெந்தனிடம் செப்பினுய் பாதகனே
இன்றுமுத லெந்த னிடத்திலிரா தெங்கினுமே
சென்றிடுவா யுந்தனிட சித்தந் தனைத்தெரிந்தேன்
என்றே புகன்றனனே யிம்மொழியைக் கேட்டுமுகம்
கன்றி விதுரன் கவலைமிக வுண்டாகி
இங்கிருக்க வொண்ணு தெனநினைந்தே வேகமொடு
தங்காம லெங்கினுமே சட்டமுட னேநடந்து
பாண்டுமன்ன னீன்றெடுத்த பாண்டவரும் வாழ்ந்திருக்கும்
நீண்டதோர் கானகத்தின் நேராக வனந்தனரே
வல்ல விதுரன் வரவுதெரிந் தைவருமே
சல்லாப மாயேகித் தந்தைதனை யேபணிந்து
கூட்டிவந்து மோரிடத்திற் குந்தவைத்து வந்தவகை
வாட்ட மடையாது வழுத்துவீ ரென்றனரே
கண்ணில்லான் சொன்னவற்றைக் காவலரின் முன்பாகத்
திண்ணமுட னேயெடுத்துச் செப்பினு னேவிதுரன்
சாந்த குணவான் தருமரங்கு மேவிதுர
வேந்தன் மனந்தேற்றி வீற்றிருக்கச் செய்தனரே
கண்ணில்லான் மற்றுநாட் காலையிலே வந்தமர்ந்து
எண்ணுத வெண்ணமெலா மெண்ணி விதுரனையே
கூட்டிவரு வாயெனவே கூறினுன் தூதுவனும்
காட்டிலே பாண்டோர் களினிடமே சென்றவற்றை
நன்னயமா யோதினனந் நாழிகையி லேகுருட்டு

மன்னவனு மெத்த மனக்கவலை கொண்டேங்கி
பாண்டரச னீன்றெடுத்த பாண்டவரும் வல்லமையைப்
பூண்டவர்க ளன்னவர்முன் போயிவனும் சேர்ந்திருந்தால்
மைந்த ரொருநூற்று வரைமடிப்பா ரென்பதற்குச்
சந்தேக மில்லையிவர் தானுரு மேயேமன்
வடவா முகாக்கினியும் வல்லவூ ழிக்காற்றும்
திடமா யிரண்டுமொன்று சேர்ந்தவற்றைப் போலிருக்கும்
என்று மனதினிலே யெண்ணியொரு தூதுவனை
நன்ருக வேவிடுத்தந் நாழிகையிற் சோதரனை
வரவழைத்தே துக்க மதுதீர்ந் தருகினிலே
பரிவாக வேயிருத்திப் பண்பார் விதுரனுக்கே
புத்திபல வாறெடுத்துப் போதித்தே யந்தகனும்
சித்தமகிழ்ந் தேயிருந்தான் சிம்மா சனமீது

துரியோதனன் அத்திரிய முனிவரால்
சாபம் பெறுதல்

அந்தகனுஞ் சிந்தைமகிழ்ந் தன்புடனே பெற்றெடுத்த
மைந்த ரொருநூற்று வருஞ்சகுனி கர்ணனுமே
வில்லா சிரியரொடு வேந்தருமே யோர்நாளில்
சல்லாப மாகச் சபையிலே சூழ்ந்திருந்தார்
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவருங் கன்னிகையும் பார வனமுறைந்த
சங்கதியுஞ் சூதாடித் தன்னரசு செல்வமதைத்
துங்கத் தருமருமே தோற்றதுவுஞ் சோர்ந்ததுவும்
வாமன் மயித்திரிய மாமுனிவ ருந்தெரிந்து
நேமமுள்ள பஞ்சவர்க்கு நேர்ந்த துயரதனை
நீக்கிடு வோமென்று நினைந்துதுரி யன்சபையை
நோக்கிவிரை வாய்நடந்து நுட்பமொடு வேதமதை
நன்ருக வேயுணர்ந்த நன்முனிவ ரங்குவந்தார்

மன்திரித ராட்டிரனின் மைந்தன் துரியனுமே
மாமுனி யைக்கண்டு வணங்கியோ ராசனத்தில்
நேமமுட னேயிருத்தி நீதியில்லா னோதிடுவான்
நற்றவசு செய்யுமுனி நாதரே யென்சபையில்
உற்ற விபரமதை யோதுவீ ரென்றனனே
இந்த மொழிகேட் டெழில்சேர் முனிவருமே
சிந்தைமிக வேமகிழ்ந்து செப்புவார் யாதெனிலோ
மானிலத்தோர் போற்றும் வணங்கா முடியோனே
வானிலத்தோர் கொண்டாடு மன்னவராம் பாண்டவரும்
காட்டிலே சென்றதற்குக் காரணம்நீ ரானதினால்
வாட்டமொன்று மில்லாது வல்லபஞ்சேர் பஞ்சவரை
கூட்டிவந்து நாட்டைக் கொடுத்திடு வீரென்றனரே
கேட்ட துரி யன்சினந்து கெம்பீர மாய்ப்புகல்வான்
வல்லபமா யிச்சபையில் வந்தே யமர்ந்திருக்கும்
சல்லாப ரேகேளும் தந்தை விதுரனுமே
வாக்கிலொன்று நெஞ்சிலொன்று வைத்துமென் தந்தையிடம்
போக்கிரியு மேதோ புகன்றான மன்னவரும்
மெத்தச் சினந்து விழியாதே யென்முகத்தில்
புத்தியில்லா மூடா நீ போவென்றே கூறினராம்
வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்த விதுரனுமே
தஞ்சமில்லாப் பஞ்சவரும் தானிருக்கிங் கானகத்தில்
சென்றனனா மன்னவனின் செய்திதனை யேகேட்டு
மன்திரித ராட்டிரரும் வஞ்சன் றனையழைத்து
புத்திபல வாறெடுத்துப் போதித்தே வைத்தனராம்
சத்தியவான் போலென் சமஸ்தானச் சொத்துகளை
உண்டெனக்குக் கேடுதனை யுண்டாக்கி விட்டனனே
கண்டீரோ பஞ்சவர்வாழ் கானகத்திற் சென்றிருந்த
போது வெகுயுக்தி புகன்று முனிவரையே
தூதுவிடு மென்றிவனும் சொல்லியே வந்திருப்பான்

பாண்டவரு மந்தப் படியே முனிவரையே
வேண்டியே யிங்குவர விட்டதுவாய்த் தோன்றுதுகாண்
இல்லா விடிலோ யிவர்வருகக் காரணமோ
வல்லோரே நன்ருய் மனதிலெண்ணிப் பாருமென்று
வணங்கா முடியோனம் மாமுனிவ ரைப்பார்த்து
இணங்காத வார்த்தை யெடுத்தோது வான்வெகுண்டு
வில்லா சிரியரொடு வேந்தருமென் தந்தையுமே
சொல்லினதை யேமறுத்துச் சோகமொடு பஞ்சவரும்
வனத்திலே செல்லவிட்டேன் மாமுனியே தூதியம்ப
மனத்திலே யெண்ணியிங்கு வந்தீரோ போங்காணும்
முன்ன மேசொன்ன முதியோர்க்கு நீர்மேலோ
சின்னமடை யாதெழுந்து செல்லுவீ ரென்றனனே
மாமுனியு மேசினந்து வஞ்சகனே யுந்தனொடு
வீமனுமே போர்பொருதும் வேளையவன் தண்டாலே
துடையி லடிபட்டுத் துடித்துமே கீழ்விழுந்து
மடையனே நீயும் மடிவா யெனச்சாபம்
கொடுத்துவிரை வாயெழுந்து கோப மதனைமுனி
விடுத்துமே சென்றனரே வேந்தனுங்கேட் டேவெகுண்டு
இந்தச் சபையி லிருக்கும் பெரியோரே
சந்தேக மில்லையிந்தச் சாபமதிற் குள்ளாக்கி
விட்டான் விதுரன் விளங்குது நன்ருகவுமே
மட்டியாம் பாண்டவரை மாய்த்துவரு வேனெனவே
சிங்கா தனத்திருந்தோன் திட்டெனவே கீழ்குதித்தான்
தங்கி யிருந்த சபையோர்க ளுந்தடுத்தார்
வஞ்சன் துரியனிவர் வாக்கியத்தை நன்றெனவே
நெஞ்சினிலே சற்றும் நினையாம லேமறுத்து
வல்ல சகுனிகர்ணன் மற்றுமுள்ள தம்பியரும்
வில்லெடுத்தே நல்லரத மீதேறிச் சேனைகளை

கூட்டி விரைவாகக் கொக்கரித்தே பஞ்சவர்வாழ்
காட்டி னிலேவந்தனரே காவலரு மந்நேரம்

வேதவியாசர் அருச்சுனனுக்கு
மந்திரோப தேசஞ்செய்தல்

சிந்தைமிக வேமகிழ்ந்து செய்ய வியாசருமே
வந்தனரே கானின் வழியாக வேநடந்து
மாமுனி யைக்கண்டு வணங்கா முடியோனும்
வாம முடையரத மானதுவை விட்டிறங்கி
சென்று பணிந்தான் திரியோ தனன்கருத்தை
நன்று யுணர்ந்து நவில்வார் வியாசமுனி
மன்னவ னேபஞ்ச வரைச்செயிக்க வேநினைந்து
நன்னயமாய் வந்தனையோ நான்குவகைச் சேனையொடு
வில்லா சிரியர் விளம்பினதீர்ப் பின்படியே
வல்லவருங் கானில் வசித்தே மறைந்திருந்து
வந்துமே பாண்டுமைந்தர் மானிலத்தை நீமகிழ்ந்து
தந்திடுவீ ரென்றவுரை சாற்றுகின்ற காலமதில்
உந்தன் கருத்தினுக்கே யொவ்வினதைப் போல்முடிப்பாய்
இந்தச் சமயமதி லேகியே போர்புரிந்தால்
மானிலத்தி லுண்டான மன்னவருங் கேட்டுனையே
தானிழிவு சொல்வார் தகுதியல்ல வென்றனரே
வணங்கா முடியோனவ் வாக்கியத்தைத் தான்கேட்டு
இணங்கியே கர்ணனொடு யெல்லோரை யுந்திருப்பி
மாமுனிவ ரைப்பணிந்து மன்னவனும் சென்றனனே
காமுனி யுஞ்சிந்தை களித்துமே பஞ்சவர்முன்
நன்னயமாய் வந்தனரந் நாழிகையி லேவருமே
உன்னிதமாய் சென்றுவெதி ருத்தமரை யேபணிந்து
விற்பனருங் கூட்டிவந்து வேதமுனி நாதனையே
தெற்பா சனமீது சிந்தைமகிழ் வாயிருத்தி

முன்ன மேநின்ருர் முனிவருமே கண்டவர்க்கு
நன்னயமா யாசிபல நல்கியே வீற்றிருந்தார்
செய்ய தருமர் திரியோ தனன்தீது
செய்த துவும்வில்லா சிரியருரை போலவுமே
காட்டினிலே வந்தவரை காமுனிமுன் ஞேதினரே
வாட்ட முற்றபஞ்ச வரின்மனதைத் தேற்றிடவே
சிந்தையிலே தானினைந்து செய்யவி யாசருமே
சுந்தரஞ்சே ரைவரின்முன் சொல்லுவா ரன்புடனே
வருகும் விதியை மரித்தாலே நின்றிடுமோ
உருகி மனம்வாடி யுழலுவதி லென்னபலன்
வந்தவற்றை யெல்லாம் மகிழ்ந்தே யநுபவிப்பீர்
சந்த்ர குலத்துதித்த தர்மரே யின்னுமொன்று
சொல்லுகின்றே னன்புடனே சுந்தரனே யாதெனிலோ
வில்லா சிரியர் விளம்பினதீர்ப் பின்படியே
ஆண்டுபனி ரெண்டு மடவிலிருந் தெவ்வுருவும்
பூண்டுமறைந் தோர்வருடம் போக்கி யேவந்தாலும்
வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்ததுரிய யோதனனும்
துஞ்சிடுவோ மென்றுமனந் தோன்ரும லப்பொழுது
சூதாடி யேஜெயித்த தொல்புவியை யானீயேன்
வாதாடி யேஜெயிப்பீர் மன்னவரே யென்றறைவான்
பாண்டவரே யன்னவனின் பக்கலிலே வில்லதனைப்
பூண்டசில வல்லவரைப் போர்பொருதி வெல்லவென்ருல்
அற்ப மதில்முடியா தாதலினு லீசனிட
வெற்பை யடுத்து வெகுவாய்த் தவம்புரிந்து
நேசமொடு பாலகரே நீலகண்டன் கையிலுற்ற
பாசுப தாஸ்திரத்தைப் பற்றி யேவந்தாலே
துரியோத ஞதியரைச் சொற்பமதில் வென்றிடலாம்
தெரிகுவீ ரிந்தவிதம் செய்திடுவோ ருரெனிலோ
காண்டீபந் தன்னையொரு கைப்பிடித்து வல்லமையைப்

பூண்ட விஜயனென்றன் போடுமே கூறினரே
வாமமிகு பற்குணனிவ் வாக்கியத்தைக் கேட்டெழுந்து
நேமமொடு சென்றுநதி நீராடி மாமுனிமுன்
வந்தே பணிந்தனனே மாதவஞ்செய் வேதமுனி
சிந்தைமிக வேமகிழ்ந்து செய்ய விசயனுக்கே
ஆசி பலகூறி யருகில் வரவழைத்து
மாசில்லா நீலகண்டன் மந்திரத்தைத் தானோதி
விற்பனனே யின்பமொடு மேன்மை மிகுகயிலை
வெற்போரஞ் சென்று வெகுவாய்த் தவமியற்றி
காசினியோர் போற்றிடவே கங்கா தரனிடமே
பாசு பதாஸ்திரத்தைப் பற்றி வரக்கடவை
மன்னவ னேயென்று மகிழ்வாக வேவாழ்த்தி
நன்னயமாய் வேதமுனி நாதனுமே யந்நேரம்
சாந்த குணவான் தருமரொடு மற்றுமுள்ள
வேந்த ரிடத்தில் விடைவாங்கி வேகமொடு
விண்ணுலகஞ் சென்றனரே வெய்யோனும் போய்மறைந்தான்
மண்ணுலகோர் போற்றுகின்ற வாமமிகு பாண்டவரும்
கண்ணன் றனை நினைந்து கந்தமூ லங்களையே
புண்ணியரு முண்டுபசி போக்கித் துயின்றனரே

அருச்சுனன் கயிலைசென்று
தவம் செய்தல்

செங்கதிரோ னுங்கிழக்குத் திக்கிலே தானுதித்தான்
துங்கமிகு பார்த்தன் துரிசாக வேயெழுந்து
சென்று நதிதனிலே தீர்த்தமது தானாடி
நன்றாய்த் திருநீறந் நாழிகையி லேபுனைந்து
இடையின் மரவுரியை யின்பமுட னேயணிந்து
சடைமுடியைச் சென்னி தனிலே தரித்தரசன்
காண்டீப மேந்திக் கணைப்புட் டிலைமுதுகில்

பூண்டு தருமரிட பொன்னடியி லேபணிந்து
விடைவாங்கி மேன்மை மிருகா மியவனத்தைத்
தடைக ளொன்றுமில்லாது தான்கடந்து வேகமொடு
காடு மலையும் கனத்த சுனைகுகையும்
மேடுபள்ள முள்ளதெல்லாம் வேந்துநடந் தேதாண்டி
அங்கங் கிருக்கு மதிசயங்க ளைப்பார்த்துச்
சங்க ரனைச்சிந்தை தனிலே மிகநினைந்து
விற்பனனு மேகயிலை வெற்போரஞ் சென்றதனின்
அற்புதங் களைப்பார்த் தரனே யெனப்பணிந்து
சித்தரொடு மாமுனிவர் செய்யதவஞ் செய்திடக்கண்
டுத்தமனுஞ் சற்றேநின் றுல்லாச மாகவுமே
ஈசன் றனையிதய மெண்ணித் தவம்புரிந்து
பாசு பதாஸ்திரத்தைப் பற்றிடவே வேண்டுமென
வல்லவனும் வெள்ளி மலையின்தென் பாரிசத்தில்
சல்லாப மாகத் தவநிலையொன் றுண்டாக்கி
பஞ்சாக் கினிவளர்த்திப் பார்மீதோர் காலூன்றி
அஞ்சாம லோர்கா லதனைமடித் தேதுடைமேல்
வைத்துமே துங்கமிகு மன்னன் வயிராக்ய,
சித்தமொடு தன்னிரண்டு செங்கரத்தை யும்மேந்தி
சங்கரா சம்போ சதாசிவனே தற்பரனே
திங்களொடு கங்கைதனைச் சென்னிமிசை யேபுனைந்த
முக்கண்ணு காளமுண்ட மூர்த்தியே சாம்பசிவா
நக்கனே வெள்ளிவரை நாயகனே மாமணியே
அண்டபகி ரண்டமெல்லா மன்பாய் நிறைந்தவனே
தொண்டருக்கு முத்திநல்குந் தூண்டா மணிவிளக்கே
விடையோனே மாற்றலரை வென்று ஜெயம்பெறவே
சடையாது பாசுபதந் தந்தருளு வாப்பரனே
என்றுபல வாற்துதித்து இன்பமுட னைந்தாண்டு
குன்று தருந்தவமே கொற்றவனுஞ் செய்திருந்தான்

## இந்திரன் அருச்சுனன் தவ நிலையறிதல்

சாரணருங் காண்டீபன் தன்தவசைக் கண்டுமெச்சி
தீரமுட னிந்திரன்முன் சென்றே யடிபணிந்து
செப்பினார் பற்குண னுஞ் செய்யும் தவத்திறத்தை
அப்பொழுது விண்ணோர்க் கதிகார னுள்மகிழ்ந்து
காண்டீபன் செய்யும் கடுந்தவசை நாமறிய
வேண்டுமென மேனகையே மெல்லிதி லோர்த்தமையே
ஊர்வசியே ரம்பாசென் றோர்நொடியி லோர்நான்கு
பேர்வசியஞ் செய்து பெருந்தவத்தை நீரழித்து
வந்திடுவீ ரென்றறைந்த வாக்கியங்கேட் டெல்லவரும்
புந்திமிக வேமகிழ்ந்து போய்வருகின் றோமெனவே
விடைவாங்கி யிந்திரன்முன் மெல்லியரும் வேகமொடு
சடையாம லேமனது சட்டமுட னேநடந்து
கண்டவர்க ளாசைகொண்டு காலினிலே தான்வீழ்ந்து
தெண்டனிட மங்கையர்கள் சென்றார் கயிலைவரை
ஓரமதிற் பற்குண னு முல்லாச மாகநின்று
தீரமுட நற்றவமே செய்யுமிடங் கண்டனரே
நால்வருமே வாசனைகள் நன்றாக வேதிமிர்ந்து
மால்கொளவே பற்குணன்முன் வந்துநின்று ஜாடைசெய்து
கொண்டிருந்து மத்தொழில்கை கூடா ததையறிந்து
வண்டாரும் பூங்குழலார் மன்னன் தவமதனை
எந்தவிதத் தாலழிப்போ மென்றே மனதிலெண்ணி
சுந்தரிக ளங்கோர் சுனையோர மாகநின்று
ஆடை தனை யேகளைந்து அங்கையிலே தானேந்தி
பேடைமயில் போல்நடந்து பெண்கள்நிர் வாணிகளாய்
நீராடு வோர்போலும் நின்றாடு வோர்போலும்
போராடு வோர்போலும் பூவையர்கள் செய்தனரே

வாசமிகு நல்ல மலர்பறித்துப் பற்குணன்மேல்
நேசமுட னேயெறிந்து நேர்மையுட னேசிரித்தார்
வீணைதனை யேயிருவர் மீட்டியே பாடிடவே
நாணமில்லா தேயிருவர் நாட்டியமே செய்தனரே
தையலர்கள் மாமோக ஜாலவித்தை கற்றதெல்லாம்
மையலுற வேபுரிந்தார் மன்னவனும் காண்டீபன்
சிந்தை தனையே சிவன்மீ திருத்தியதால்
சுந்தரிகள் செய்தவிந்தை தோன்று திருந்தனனே
மடவார்கள் காண்டீபன் மாதவத்தை நாமழித்து
விடலாகா தென்றுவெட்கி விண் ணுலக மேயடைந்து
வாசவனைக் கண்டு வணங்கியே சென்றவற்றை
நேசமுட னேபுகன்று நேரிழைமார் நின்றனரே
இந்திர னுங்கேட்டு இதயமிக வேமகிழ்ந்து
மைந்தன் மனவுறுதி வாகாக நாமறிய
வேண்டுமென வேவிரைவாய் விப்பரன்போல் வேடமதை
பூண்டுகொண்டு மாதவசி போலவே தானடந்து
வந்துமே பற்குணன்செய் மாதவத்தைக் கண்டுமெச்சி
விந்தைமொழி கூறிடவே வேண்டுமென வங்குநின்றான்
சித்த மதைப்பார்த்தன் சிவன்மீ தினில்நிறுத்தி
வைத்துமே மாதவர்க்கு வந்தனங்கள் செய்தனனே
கண்டுமே விப்பிர னுங் காண்டீப னுக்காசி
விண்டுமே பாலா நீ மேன்மைமிகு மாதவங்கள்
செய்வதற்குக் காரணமேன் செப்பிடுவா யென்றவுடன்
வையம் புகழ்பாண்டு மைந்தனுமே கூறிடுவான்
அண்டபகி ரண்டமெல்லா மன்பாய் நிறைந்வனை
கண்டுதரி சிக்கவென்ற காரணங்கா ணென்றனனே
அண்டர் முனிவ ரரியய னும் காணாத
தொண்டருக்குத் தொண்டனையே துங்காவுன் னுயுளுள்ள
மட்டுமே வேணதவ மானதுவைச் செய்தாலும்

கிட்டானுன் கண்களுக்குக் கேவலமே வந்திடுங்காண்
மன்னவனே யுந்தனிட மாநகர்க்குச் சென்றிடுவாய்
நன்னய மாயென்றே நவின்ருனே விப்பிரனும்
பற்குணனு மேகேட்டுப் பாங்காக வேடுகல்வான்
விற்பனரே கண்ணுல் விமலனை யேகாணுது
செல்வேன் தவத்தைவிட்டுத் தேகமுள்ள மட்டுமுண்மை
வல்லோ ரேயென்று வழுத்திஞ னீதறிந்து
சிந்தைமிக வேமகிழ்ந்து செய்யசுய ரூபமதை
இந்திர னுங்காட்டி இனிய மொழிகூறி
பாலனே ஈசனிடம் பாசுபத மேபெறுவாய்
சீலனே நீதவமே செய்திடுவா யென்றறைந்து
பொன்னகர்க்கு வாசவனும் புக்கிஞ னன்புடனே
நன்னயமாய்ப் பற்குணனும் நாகா பரணனையே
நெஞ்ச மதனில் நிறுத்தியே மாருமல்
அஞ்செழுத்தை யுச்சரித்து அன்பாய்த் தவம்புரிந்தான்
இந்த விதமா யிவனிருக்கும் நாளையிலே
அந்தகனின் மைந்த னவன்வறலா ரைப்புகல்வாம்

அருச்சுனனைக் கோல்ல துரியோதனன்
மூகாசுரனை ஏவுதல்

வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்ததுரி யோதனனும்
சஞ்சல மொன்றில்லாது தம்பியரும் சூழ்ந்திருக்க
வல்லவிது ரன்சகுனி மந்திரிமார் வீஷ்மருமே
வில்லா சிரியரொடு வேந்தருமே வந்திருக்க
பூலோக விந்திரனைப் போலக் கொலுவிருந்தான்
மேலோகத் தில்வசிக்கும் மேன்மைமிகு நாரதரும்
வந்தனரே கண்டு வணங்கா முடியோனும்
வந்தனங்கள் செய்தமர வைத்துமே யேதுரைப்பான்
நீண்டதோர் கானகத்தில் நேர்மையுட னேவசிக்கும்

பாண்டவரைக் கண்டதுண்டோ பண்பாய்ப் புகலுமென்றான்
திரிலோக சஞ்சாரி செப்பிடுவார் பற்குணனும்
பரிவாய்க் கயிலையின்தென் பாரிசத்தில் மாதவமே
இருக்கின்றான் பாசுபத மீசனிட மேபெறவே
செருக் குடையமன்னு தெரிவித்தே னுண்மைதனை
மாது துரோபதையாள் மற்றுமுள்ள நால்வரிட
சேதிக ளொன்றும் தெரியா தப்பாநமக்கு
எச்ச ரிக்கையாக இருப்பீ ரெனப்புகன்று
உச்சிதஞ்சேர் மாமுனிவ ரும்பருல கம்புகுந்தார்
இடுக்க மொன்றுமில்லா திருக்கலா மென்றிருந்தோன்
நடுக்கமுற்று நாவரண்டு நாரதரின் சொற்கேட்டு
கொற்றவ னுந்தானே கொலுவைக் கலைத்துவிட்டு
மற்றோ ரிடத்திருந்து வல்லமூ காசுரனை
சிந்தை நினைத்தான் தெரிந்தே யசுரனுமே
விந்தை யுடனே விரைவாய்முன் வந்துநின்றான்
கண்டே துரியன் களித்தவனை யேபுகழ்ந்து
கொண்டாடி யந்நேரம் கூறுவான் யாதெனிலோ
வெள்ளி மலையோரம் விமலன் றனைநோக்கி
வள்ளலே பற்குணனும் மாதவஞ்செய் கின்றானும்
பன்றியுரு நீயெடுத்துப் பாதகனை யேவிரைவாய்
கொன்றுவரு வாயெனவே கூறவ சுரனுமே
நன்றெனவே சம்மதித்தந் நாழிகையி லேமகிழ்ந்து
பன்றி யுருவெடுத்துப் பாரமலை போல்நடந்து
காடு மலையும் கனத்தசுனை யாறுகளும்
மேடுபள்ள முந்தாண்டி வேகமுட னேகயிலை
மலையோர மோர்புதரில் வந்தே தகையாரி
மலையாம லுமிருந்தான் வண்டனுமே யந்நேரம்

---

## கைலாசபதி அருச்சுனனிடத்தில் வேடுவனாக வருதல்

பற்குணன்செய் மாதவத்தைப் பார்வதியு மேதெரிந்து
நற்குணமார் சங்கரன்முன் னங்கையுமே போய்ப்புகன்றுள்
மதிசூடி கேட்டு மலையரசன் புத்திரியே
பதியோர் மிகப்புகழும் பார்த்திபன் தன்னையுமே
வல்லமூ காசுரனை வாகாய் வரவழைத்து
கொல்ல விடுத்தான் கொடும்பாத கன்துரியன்
வண்டனு மேபன்றிவடி வாகித் தகையாறிக்
கொண்டிருக் கின்றான்புதரிற் கொஞ்சநே ரங்கழிந்தால்
பற்குணனைக் கொன்றிடுவான் பாபமிக வந்துவிடும்
பொற்கொடியே வேடுவச்சி போலநீ வந்திடுவாய்
என்றறைய நன்றெனவே ஈஸ்வரியாள் வேடமுற்றாள்
கொன்றைமுடி சூடியவெங் கோன்வேடன் போலவுமே
வேடமதைப் பூண்டுகொண்டு வேதமொரு நான்கினையும்
ஓடிவரும் நாய்களதா யுண்டுசெய்து சாஸ்திரங்கள்
தன்னையறு சங்கிலிய தாயாக்கி யேபூட்டி
உன்னிதமாய்க் கைப்பிடித்தா ருள்ளமிக வேமகிழ்ந்து
பூதகணம் வேடுருரு பூண்டுகொண்டு முன்னடக்க
மாதரசி பார்வதியாள் மைந்தரொடு பின்னடக்க
வந்தனரே வெள்ளி மலைச்சார லின்புதரில்
வந்திருந்த பன்றிதனை வாகாக வேதேடி
இடிமுழக்கம் போலிரைந்து எல்லவரு மேநடந்து
கொடிசெடிக ளைக்கலைத்துக் கொண்டுமே யோர்புதரில்
பன்றிதனைக் கண்டனரப் பாவியசு ரன்தெரிந்து
கன்றி மனமுடைந்தக் காலமதி லேவெகுண்டு
வல்லமைசேர் பற்குணனை மாய்த்திடவே வேண்டுமென
புல்லறிவு கொண்டோனப் போதுவிரை வாய்க்கிளம்பி

மலைகள் பொடிபடவே மண்டலமு மேகுலுங்க
நிலைமாறச் செங்கதிரோன் நீராழி தான்கலங்க
விண்ணேரு மேநடுங்க மேன்மை மிகுதவமே
பண்ணுமிடம் வந்ததுவே பன்றியுமே யந்நேரம்
வெள்ளி மலைவேடன் விடுவேனே நானெனவே
துள்ளி விரைவாய்த் துடர்ந்துமே வந்தனனே
அந்த ரத்திற்தேவ ரதிசயமீ தாமெனவே
சிந்தைமிக வேமகிழ்ந்து செய்யமலர் மாரிபெய்தார்

கைலாசபதி மூகாசுரனை வதைத்து அருச்சுனனோடு
வில்யுத்தம் மல்யுத்தம் செய்தல்

குன்று மனமுடைய கொற்றவனும் வேகமதாய்
பன்றி வருவதுவைப் பார்த்துமே காண்டீபம்
தன்னைவளைத் தோர்கணையைத் தானேவி விட்டனனே
சென்னிமிசை பட்டுருவிச் சென்றதுவே பின்புறமே
வில்லைவளைத் தேபரமன் விட்டா ரொருபகழி
சல்லாப மாய்க்கிளம்பித் தைத்துமே பின்புறமாய்
முகம்பிளந்து சென்றதுவே மூகா சுரன்மடிந்தான்
அகமகிழ்ந்தே வேடரெல்லா மன்பாக வங்குவந்து
தவசியே யெங்கள் தலைவனெய்யும் பன்றிதனை
தவராக யெய்வ தடுக்குமோ வென்றனரே
காண்டீபன் கேட்டுக் கலகலன வேநகைத்து
நீண்டதோர் கானகத்தில் நேர்மையுடன் வாழ்வோரே
எந்தன் தவத்துக் கிடையூறு செய்ததினுல்
வந்த பன்றிதன்னை வதைத்தே னேயல்லாது
உங்களையான் கண்டேனே யுங்கள்தலை வேடுவனை
இங்குவரக் கண்டேனே ஏகுவீ ரென்றனனே
வெள்ளிமலை மீதிலுரை வேட னருச்சுனன்முன்
துள்ளியே வந்துநின்று சொல்லுவார் யாதெனிலோ

வல்லாண்மை கூறுகின்ற மாதவசி நீயுமொரு
வில்லாளி போலவெண்ணி விட்டே சரந்தனையே
கொன்றேனென் றென்னிடமே கூறினாய் வஞ்சகனே
நன்றுநன்று ஊரார் நகைப்புக் கிடமாச்சே
தூரமதில் நின்றே தொடுத்தகணை பின்புறமே
வீரமொடு பட்டுமுக மீதுருவிச் சென்றதுவே
கொற்றவனே நீவிடுத்த கூர்வாளி பன்றியிட
நெற்றிபட்டுப் பின்பிறமே நேரா யுருவினதே
உன்பாணத் தின்குறியீ துண்மை மனந்தெளிவாய்
என்பாணத் தின்குறிதா னீதாகுங் கண்டாயே
இந்த விதமா யிருக்கநான் பன்றிதனை
விந்தையுட னேமாய்த்து விட்டதுவா யென்னிடமே
வல்லமை யாய்க்கூறவுமே வந்தா யடாதவசி
செல்லாதுன் செங்கைத் திறமைதனைக் காட்டாதே
ஆண்டவனு மிவ்வா றறைந்திடவே தான்கேட்டு
காண்டீப னுதானே கடுஞ்சினமே கொண்டுரைப்பான்
வேடனே நீயும் வெகுதூரம் தானிருந்து
மூடனே யெய்தேயென் முன்னமே கூறவந்தாய்
வில்லாளி நீயானல் வேணசரக் கூடமிட்டு
கொல்லாது பன்றிதனைக் கூடத் துடருவரோ
வாதுமொழி கூருதே வந்தவழி செல்லுமென்றான்
காதுற்றுக் கேட்டேமுக் கண்ணனுமங் கேநவில்வான்
பொய்த்தவசி வேடமதைப் பூண்டுகொண்டு கண்டோர்க்கு
மெய்த்தவசி போலே விளங்கியே யிவ்வனத்தில்
இந்த வழியோடி எங்களுக்குத் தப்பியுமே
வந்த மிருகமதை வாளிவிடுத் தேவதைத்து
தின்று பசியாறித் தினத்தைக் கழிப்பவனே
நன்றுநன்று வுந்த னடத்தைதனை நானறிந்தேன்
கொல்லாம லுன்னைவிடேன் கொஞ்சமுமஞ் சேனுனது

வில்லின் திறத்தையிந்த வேளையிலே காட்டுமென்றார்
வல்ல விசயன் மனத்திலே தற்பரனை
சல்லாப மாயிருத்திச் சட்டமுடனே தோளில்
மாட்டிய காண்டீப மதைவளைத்து வாளிதனை
பூட்டியே விட்டனனே பூலோகம் தத்தளிக்க
நக்கனுமே தான்சினந்தன் னாழிகையில் வில்வளைத்து
பக்குவமாய்க் கூர்மையுள்ள பாணம் தனைவிடுத்தார்
காண்டீ பன்விட்ட கணைகளையெல் லாமறுத்து
நீண்டதோர் மார்பினிலே நேராகப் பட்டுருவ
சிந்தைநோ காதபடி தேர்விசய னப்பொழுது
விந்தையொடு பாணமதை விட்டே யதனிடையில்
சீலமொடு மூன்றுகணை செல்லவிடுத் தான்பரமன்
பீலிமுடி தன்னைப் பிளந்தொன்று சென்றதுவே
பின்னிரண்டு பாணமுமே பித்தனிட தோள்மார்பில்
உன்னித மாய்ப்பட்டு உருவியே சென்றதுவே
வாள்விசய னம்மையுமே மாற்றிவிட்டா னென்றுபரன்
தோள்பிரள வாங்கியுமே தூண்டினார் நூறுகணை
வல்லமைசேர் பற்குணனின் மார்பினிலே பட்டுருவி
சல்லடைக்கண் போலாகத் தானேசெய் திட்டனவே
கலங்கா மனமுடைய காண்டீப னப்பொழுது
கலங்கியே மற்றுமொரு காலதனைப் பூவூன்றி
சித்தமதிலுள்ள சிவனிடத்தி லேமுறையிட்
டுத்தமனு மவ்விடம்விட் டோரிடத்தில் வந்துநின்று
வனவேட னுமவ மானமுற நீலகண்டா
உனதருளோ வென்றறிவா லுத்தமனு மேநினைந்தான்
வள்ளலு மேயிந்த வகையறிந்து மேவிசயன்
உள்ளமா றுதபடி உத்தமருஞ் செய்தனரே
சித்தந் திடமானன் செய்யவில்லில் வேணகணை
அத்தருண மேதொடுத்து அங்கசனைக் காய்ந்தவனை

கைகாலா டாதபடி காண்டீபன் செய்தனனே
ஐயனுமே பார்த்தினிமே லாபத்து நேருமென்றே
விந்தையுள்ள பாணமதை விட்டுமே நின்றனரே
அந்தரத்து விண்ணோர்கண் டஞ்சியே சென்றனரே
இருவருமே விட்டகணை எங்குங் கயிலாச
பருவ தத்தை மூடினதே பார்நடுக்க முற்றதுவே
சந்திரனைச் சென்னிவைத்த சங்கரனு மோர்பகழி
அந்தமொடு விட்டே யறுத்தார் வில்நாணிதனை
வில்நிமிர வேசினந்து வேந்தனுமவ் வில்லதனை
வல்ல கதாயுதம்போல் வாகாய்க் கரம்பிடித்து
மன்னவனு மேசுழட்டி வந்தே பரமனிட
சென்னிமிசை தானடித்தான் தீரமுட னவ்வடிதான்
விண்ணிலுறை வானோர் விரிஞ்சனரி மாமுனிவோர்
மண்ணுலகி லுள்ளோர் வனவிலங்கு மற்றுமுள்ள
சகல விதஜீவன் தனக்குமடி பட்டதுவே
பகல வனுந்தானே பயந்தோட வேநினைந்தான்
அஞ்செழுத் தோன்சற்று மசையாம லோர்நாழி
நெஞ்சமிக வேகலங்கி நின்றூர் விழித்தபடி
காண்டா வனமெரிக்கும் காலவன்னி தானீய்ந்த
காண்டீப நாணியறும் காரணமே னென்றுலோ
அண்டபகி ரண்டமெல்லா மன்பாகவே நிறைந்தோன்
தொண்டர் மனத்திலுறை சுந்தரனு மானதினல்
சொன்னமொழி மாறுது துங்கமிகு காண்டீப
மென்னுந் தனுநாணி விட்டதுவே தானறுந்து
ஆலமுண்ட ஈச னருச்சுனன்மீ தன்புவைத்து
சீலமாய் வந்துநின்றே செப்புவா ரப்பொழுது
விற்போரென் னேடுசெய்து வில்நாணி தானிழந்தாய்
மற்போர் புரிந்திடவே வந்திடுவா யென்றவுடன்
பற்குணனு மேபுலிபோல் பாய்ந்தான் விரைவினிலே

விற்பனவி வேகபர மேசனுமே தானகைத்து
நல்ல தடாதவசி நானுனையே கொன்றிடுவேன்
வல்லமையை நீகாட்டு வாயெனவே தானறைந்தார்
வேடா வுனையாய்த்து விட்டிடுவே னிப்பொழுது
வாடாநீ யோடாதென் வல்லமையைப் பாருமென்றான்
இருவருமே மார்புதட்டி இட்டா ரடிவரிசை
பருவதமொன் றோடுவொன்று பாங்கா யெதிர்த்ததுபோல்
எட்டிக் கரங்களையே யேகோபித் தேபிடித்து
கட்டிப் புரண்டுருண்டு காலோடு கால்பிணைத்து
குத்தியொரு வர்க்கொருவர் கோபமுட னெத்திடவே
தத்திவிழுந் தேயெழுந்து ஜாக்கிரதை யாகவுமே
ஒருவர்க் கொருவரவ ரோங்கியே தானறைந்து
ஒருவர்க் கொருவ ருளம்வாடக் கீழ்மோதி
வனத்திலே யுள்ள மரங்கள் தனைப்பிடுங்கி
சினத்துடனே விட்டெறிந்து சிம்மம்போ லேபாய்ந்து
சளையா திருபேரும் சாடி விரைவினிலே
களையாமற் போர்புரிந்தார் கண்டவிண்ணோ ரஞ்சினரே
தற்பரனும் பார்த்தனுமே தானோர் முகூர்த்தம்வரை
மற்போர் தொடுத்தனரே மண்ணடுங்க விண்ணடுங்க
பித்த னிடகாலின் பெருவிரலா லெத்தினரே
அத்தருணங் காண்டீப னந்தரத்தி லேகிளம்பி
மேகமண்ட லங்கடந்து வெஞ்சினமே கொண்டுவிரை
வாகவே செங்கதிரோன் மண்டலத்தி லேநெருங்கி
மீண்டுவரும் போதினிலே வெள்ளிமலை நாதனையே
காண்டீ பனுமே கருத்திலே தானினைந்து
தன்முதுகு சத்துருக்குத் தான்தெரியா தேயிருக்க
மன்னன் கருதி மறைத்தே முதுகதனை
வனவேடன் மீதினிலே மட்டி லடங்காத
சினமாகி யேசுழன்று தீவிரமாய் வாரானே

துங்கமலை யத்துவச தோன்றல் தவத்திலுற்ற
சங்கரியும் சிந்தைமிகத் தத்தளித்து மேதியங்கி
பொங்கரவை சூடினதோர் புண்ணியனே யிங்குசிவ
சங்கரனே பார்த்தனுக்கோர் சங்கடமில் லாதருள்வீர்
என்றே வணங்கிநிற்க எம்பெருமா னுங்கனிந்து
கன்றாதே பெண்மயிலே காண்டீப னுக்குமொரு
தீங்குநே ராதபடி செய்தருளு வோமெனவே
பாங்காக வேமறைந்தார் பார்வதியோ டெல்லவரும்
விண்ணி லிருந்தே விசயன் விரைவாக
மண்ணிலே தான்குதித்து மாராத கோபமொடு
வேட னுமே யிங்கிருக்க வில்லையென்றே கானமெங்கும்
தேடியுமே காணாது சித்தமிகச் சோர்ந்துநின்றான்

கைலாசபதி அருச்சுனனுக்கு
பாசுபதாஸ்திர முதலியவை கொடுத்தல்

அந்தரத்தில் துந்துமிக ளார்ப்பரிக்க வேகனிந்து
விந்தையொடு தேவரெல்லாம் வேணமலர் மாரிபெய்தார்
சங்கரனும் பார்வதியும் தானே விடைமீது
துங்கமுட னேறிவந்து தோன்றினார் விண்மீது
பச்சைநிற மேனியனும் பாவைதிரு லெட்சுமியும்
மெச்சிக் கெருடன் மிசையேறி வந்துநின்றார்
அன்னமதி லேறி அயனோடு வாணியுமே
நன்னயமாய்த் தோன்றினரே நற்றவஞ்செய் பற்குணன்முன்
அத்திமுகன் மூஷிகமே லாறுமுகன் மாமயின்மேல்
சத்திவடி வேலுடனே தானங்கு வந்தனரே
அட்ட திக்குப்பால ரவரவர்கள் வாகனமேல்
சட்டமுட னேறியங்கு தானேவந் துற்றனரே
முப்பத்து முக்கோடி முனிவர் ரிஷிகளுமே
செப்பமுட னேநிறைந்தார் சிந்தைமிக வேமகிழ்ந்து

எண்டிசையோர் போற்று மெழில்விசயன் மூர்த்திகளைக்
கண்டே சிரமேற் கரங்குவித்து மேதொழுவான்
சம்போ கயிலாசா சாம்ப சதாசிவனே
அம்போ ருகப்பாதா ஆதியே சங்கரனே
பத்தரொடு சித்தர் பணியும் ஜெகநாதா
முத்தி முதலான மூர்த்தியே மங்கைபங்கா
எங்கும் நிறைந்தவனே யேமனையே கொன்றவனே
பொங்கரவைச் சூடினதோர் புண்ணியனே தற்பரனே
ஆலமுண்ட நீலகண்ட ஐயனே மெய்ப்பொருளே
சீலமிகு தொண்டரிட சிந்தையி லுகந்தவனே
என்றே பலவிதமா யேந்தலுமே தானிறைஞ்சி
நின்றுமே மாலயனை நேர்மையுட னேவணங்கி
மற்றுமுள்ள தேவரையு மாமுனிவர் தங்களையும்
கொற்றவனுஞ் செங்கைதனைக் கூப்பியே நின்றனனே
காம தகனனுமே காண்டீப னைப்பார்த்து
நேம முடனே நிகழ்த்துவா ரப்பொழுது
வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்ததுரி யோதனனும்
சஞ்சல மில்லாதரசு தன்னைச் செலுத்தவென்று
வல்லமூ காசுரனை வாகாய் வரவழைத்து
கொல்லவுனை யேவிடுத்தான் கொஞ்சமுமஞ் சாதபடி
பன்றி யுருவெடுத்தப் பாதகனும் வந்தனனே
நன்றியுனக் கேபுரிய நாமிங்கே வேடரைப் போல்
வந்துமே பன்றிதனை மாய்த்துவிட்டே யுந்தனொடு
விந்தையாய்ப் போர்பொருதி வேகமுட னேமறைந்தோம்
மைந்தனே யுந்தன் மனவுறுதி நாமறிந்து
சந்தோஷ மாகவிங்கு தான்வந்தே காட்சிதந்தோம்
மன்னவனே என்ன வரம்வேண்டுங் கூறுமென்றார்
நன்னயமாய்ப் பார்த்தன் நவிலுவா னேகனிந்து

ஈசனே மாற்றலரை யேமனூர்க் கேற்றிடவே
பாசுப தாஸ்திரத்தைப் பாங்காக யீய்ந்தருள்வீர்
என்றே புகன்றனனே யிம்மொழிகேட் டெம்பெருமான்
குன்று மனமுடைய கோமான் கரந்தனிலே
அழியாக் கவச மருநாணி வச்ரமுடி
ஒழியாத பாண மொடியாத வில்லுடனே
பாசுப தாஸ்திரமும் பாங்காக வேகொடுத்து
நேசமாய் மந்திரத்தை நேர்மையுட னோதிவைத்தார்
செந்திருமால் வேதனுமா தேவிகுகன் வேழமுகன்
இந்திரன்மா வானவர்க ளெல்லோரு மேமகிழ்ந்து
தங்கள்தங்கள் பாணமதைத் தானீந்த தற்குரிய
துங்கமிகு மந்திரத்தைச் சொல்லியே வைத்தனரே
விற்பனவி வேகபர மேசனுமே தான்கனிந்து
பற்குணனே நீயுமிந்தப் பாசுப தாஸ்திரத்தை
மானிடர்மீ தேவாதே வானோ ரசுரரின்மேல்
தானேவு வாயெனவே சங்கரனும் சென்றனரே
மற்றுமுள்ளோ ரெல்லோரும் வாழுமிட மேயடைந்தார்
நற்றவஞ்செய் பற்குணன்மு னோடியே வாசவனும்
வந்துமைந்த னுக்காசி வாழ்த்தியே சல்லாபன்
விந்தையுள்ள பொன்னிரத மீதேற்றிச் சென்றனனே
அங்கங் கிருக்கு மதிசயத்தைத் தானுரைத்து
துங்கமுள்ள தேவர்களுஞ் சூழ்ந்திருக்கு மாசபையில்
இட்டசிங் காதனமீ தேறியிரு பேர்களுமே
சட்டமுட னேயிருந்து சந்தோஷ மாகவுமே
மேனகைதி லோர்த்தமையாள் மெல்லிரம்பை யூர்வசியும்
தானடன மேபுரிந்து சங்கீதம் பாடிவர
அன்புமிகு சப்தரிஷி யாசிபல கூறிடவே
இன்புறவே மாமுனிவோ ரெல்லோரு மேயிருந்தார்
விற்பனவி வேகபர மேசனருள் பூண்டிலங்கும்

பற்குணனிவ் விந்தைகளைப் பார்த்துமே தானிருந்தான்

### அருச்சுனனுக்கு ஊர்வசியால் பேடிரூபம் கிடைத்தல்

செங்கதிரோன் போயடைந்தான் தேவேந் திரன்கொலுவை
இங்கிதமாய் விட்டெழுந்து எல்லோரை யுமனுப்பி
மைந்தனொடு கைகோர்த்து மாளிகைக்கு வந்தனனே
புந்திமகிழ்ந் தேபார்த்தன் பூவை புலோன்மிசைக்கு
வந்தனமே செய்தனனே மாதரசி யாள்கனிந்து
சுந்தரனுக் காசிபல சொல்லியே வீற்றிருந்து
கன்னிகையுந் தானோர் கலத்திலன்ன மேபடைத்தாள்
நன்னயமாய் வாசவனும் நற்குணமார் பற்குணனும்
உண்டெழுந்து கையலம்பி யோரிடத்தி லேயமர்ந்து
வண்டார் மலர்மாலை மன்னவருந் தானணிந்து
சவ்வாது பூசியுமே தாம்பூலந் தான்தரித்து
செவ்வையுட னங்குபல சேதிகளை யேநவின்று
பற்குணனுந் துண்டாயோர் பள்ளியறையில்த் துயின்றான்
பொற்கொடியா ளூர்வசியெப் போபொழுது நீங்குமென்று
கன்னிகையா ளந்தமிகு காண்டீப னைப்புணர
நன்னயமா யெண்ணமுற்ற நங்கையவ ளானதினால்
வாள்விசயன் தான்துயின்ற மாளிகையிற் பொற்கதவின்
தாள்தனை யேதிறந்து சட்டமொடு மஞ்சமிசை
ஏறினாள் பார்த்த னெழுந்தின்னா ரென்றறிந்து
கோரியென்னை யிங்குவந்த கோதையே நீகேளாய்
மூதாதை சந்தனுவை மோகமொடு கூடியநீ
மாதா வெனக்காகும் மாதரசே செல்லுமென்றான்
கன்னிகையுங் கேட்டுக் கடுங்கோப முண்டாகி
மன்னாயென் னாசைதனை மைந்தனென்று நீமறுத்தாய்

பேடியாய்ப் போகப் பெருஞ்சாப மேகொடுத்தேன்
வாடி யிருப்பாய்நீ மைந்தனே யென்றுசென்றாள்
மன்னவனும் பேடியுரு வாகியே தானிருந்தான்
அன்னவனின் செய்தி யறிந்துமே யிந்திரனும்
மங்கையெழி லூர்வசியை வாகாய் வரவழைத்து
சங்கையொன்று மில்லாது சாபமதை நீக்குமென்றான்
என்றிவ் வடிவ மெடுக்கவே தானினைந்தால்
அன்றுவரு மென்றே அறைந்தாளே யூர்வசியும்
மன்னவனு முன்போல் வடிவாகி மாசபைக்கு
நன்னயமாய் வந்தனனே நற்குணத்தி லேசிறந்தோன்
வாசவனு மங்குவந்த மைந்தனையே தன்னுடைய
ஆசனத்தில் வைத்தே யமர்ந்திருந்தா னன்புடனே

தேவேந்திரன் அருச்சுனனுக்கு
இளவரசு பட்டாபிஷேகம் செய்தல்

இந்திரனு மோர்நா ளிதயமிக வேமகிழ்ந்து
மைந்த னருச்சுனனை வாசாய் வரவழைத்து
ஆகாய கெங்கையினு லன்பாய்நீ ராட்டிவைத்து
வாகான தேகமிசை வாசனைகள் தான்பூசி
சிங்கா தனமேற் சிறப்பாக வேயிருத்தி
மங்கா நவமணிகள் வைத்திழைத்த வேணபல
ஆபரணந் தானணிந்து அண்டருமே கொண்டாட
சோபனங்கள் செய்து சுமுகனு மிந்திரனும்
வெய்ய வனைப்போலே விளங்கியே தானிலங்கும்
செய்ய கிரீடமதைச் சிந்தைமிக வேமகிழ்ந்து
பற்குணனின் சென்னிமிசை பாங்காக வேபுனைந்து
விற்பனவி வேகனுமே வீற்றிருந்தா னன்புடனே
வல்ல முனிவோரும் வானவருஞ் சப்தரிஷி
எல்ல வருங்கிரீடி என்றுமே கூறினரே

இந்திரனும் பார்த்தனுமே இந்திரபோ கந்தனையே
அந்த முடனே யநுபவித்தே தானிருந்தார்
சிலநாட் கழிந்தபின்பு தேவேந் திரன்றனும்
நலமா யெடுத்துரைப்பா னட்புடைய மைந்தனிடம்
வல்லமையி லேசிறந்த வாள்விஜயா யிப்பொழுது
நல்லவர மொன்றெனக்கு நல்கிடவே வேண்டுமென்றான்
தந்தையே யெந்தனிடந் தான்கேட்ட வோர்வரத்தை
தந்தனனே யின்னதெனச் சாற்றுவீ ரென்றறைந்தான்
வாசவ னுங்கேட்டு மனமிகவு மேமகிழ்ந்து
நேச முடனே நிகழ்த்துவா னன்பாக
காண்டீபா மேற்குக் கடலோர மோர்நகரில்
நீண்ட விகார நிவாத கவசரென்று
முக்கோடி பேர்களுண்டு முற்றிலுமே வீரமுள்ளோர்
எக்காலு மிங்குவந்து எந்தனொடு போர்பொருதி
பொன்னுலகி லுள்ள பொருளையெல்லாங் கொள்ளையிட்டு
மன்னவனே செல்லும் வழக்கமிவர்க் குண்டுவந்த
பொல்லா வசுரரொடு போர்பொருதி யேமாய்த்து
வல்லவனே வந்திடுவாய் மற்றெவர்க ளானாலும்
வெல்ல முடியாது வில்லிலே வல்லவர்கள்
செல்வனே யென்றறைந்த செய்திதனை யேகேட்டு
தந்தையே மாற்றலரைச் சங்கரித்து வெற்றிபெற்று
வந்திடுவே னோர்நொடியில் வாகா யனுப்புமென்றான்

அருச்சுனனுக்கும் நிவாதகவசர்களுக்கும் யுத்தம்

வாசவனுங் கேட்டு மனமிகவு மேமகிழ்ந்து
தேசுயர்ந்த மாதலியைச் சீக்கிரமாய்த் தானழைத்து
இந்தநல்ல வேளையிலே எந்தனுக்குக் கொண்டுவரும்
விந்தையுள்ள பொன்ரதத்தில் வேகமொடு விண்வழியே

செல்லும் புரவிகளாய்ச் சேகரித்தோ ராயிரத்தை
வல்லவனே பூட்டியெந்தன் மைந்தனுக்குச் சாரதியாய்
இருந்து நீ வானோர்க் கிடுக்கம் புரிந்துமனம்
வருந்தவே செய்திடும்நி வாத கவசரையே
கொன்றுவரு வீரெனவே கூறவே மாதலியும்
நன்றெனவே சம்மதித்தந் நாழிகையில் வேகமொடு
இந்திரனின் சொற்போ லிரதமதைக் கொண்டுவந்தான்
சந்தோஷ மாகவுமே சட்டமொடு பற்குணனும்
அழியாக் கவச மணிந்து முடிபுனைந்து
ஒழியாத பாணமிக வுள்ளதோர் புட்டிலையே
வல்லோன் முதுகணிந்து மாற்ருற் கருநாணி
வில்லதனைச் செங்கைதனில் வீரமுட னேபிடித்து
தந்தையா மிந்திரனைச் சட்டமுட னேவணங்கி
விந்தையுள்ள பொன்ரதத்தின் மீதேறி வீற்றிருந்தான்
வல்லமையி லேசிறந்த மாதலியு மோர்நொடியில்
செல்லவிட்டான் விண்வழியே தேரதனை யேவிரைவாய்
கலங்கா நிவாத கவசருமே வாழ்ந்திருக்கும்
அலங்கார மானநக ராந்தோய மாபுரத்தில்
பற்குணனு மெச்சிடவே பாங்கான வோரிடத்தில்
நற்குணனுந் தானே ரதத்தை நிறுத்தினனே
மாதலியை மெச்சியுமே வல்லசித்ர சேனுநீ
பாதகமே செய்கொடிய பாவி யசுரரிடம்
சென்றுநான் வந்தயுத்தச் செய்திதனை யேபுகன்று
இன்றுவரு வாயென் றியம்பினு னப்பொழுது
நீண்ட விகார நிவாத கவசரிடம்
காண்டீபன் தூதனென்றுங் காரணந்தா னின்னதென்றும்
செப்பியே வந்தனனே தீரமொடு பற்குணன்முன்
அப்பொழுதி லேயசுர ராங்காரங் கொண்டெழுந்து
முக்கோடி பேர்களுமே முக்கோடி தேரேறி

பக்குவமாய் வேண படைகளுமே முன்னடக்க
திக்குக ளெட்டுந் திடுக்கிடவே தானிறைந்து
சிக்கினன் பார்த்தனென்று தேரதனைச் சூழ்ந்துகொண்டார்
வல்லமையி லேசிறந்த வாள்விஜய'னப்பொழுது
வில்லைவிரை வாய்வளைத்து மேன்மைமிகு பாணமதை
பூட்டியே விட்டனனே போர்வீரன் சேனைகள்மேல்
வாட்டமுட னேகிளம்பி மாற்றலர்கள் விட்டபல
வேலா யுதமெறிவாள் வீரமுள்ள சக்கரங்கள்
சூலா யுதங்களையுந் துண்டுதுண்டாய்ச் செய்தனவே
கண்டவுணர் சேனைகளும் கண்கள் மிகச்சிவந்து
அண்டவொண்ணுக் கோபமுடனுர்ப்பரித்து மேவிரைவாய்
மாரி பொழிவதுபோல் வாளிகளை யேவிடுத்தார்
தேரிலிருந் தேவிஜயன் தீரமுடன் கொக்கரித்து
ஒன்றுபத்து நூருகி யோர்கோடி சங்கமதாய்
சென்றவுணர் மேற்சாடச் செய்யவில்லி லேவேண
வாளிகளைப் பூட்டியுமே மந்திரித்து விட்டனனே
வாளியொன்று கோடிசங்க மாகவே சென்றவுணர்
அம்புகளை யெல்லாந்துண் டாக்கி யவுணரிட
கும்புகளி லேபுகுந்து கூக்குரலிட் டோடிடவே
கால்வேறு தோள்வேறு கைவேறு சென்னியும்வேற்
மேல்வேறு தாள்வேறு வேருகச் செய்தனவே
கரிக ளொருகோடி கண்டமற்று வீழ்ந்தனவே
பரிக ளறுகோடி பார்மேல் மடிந்தனவே
சேனைத் தலைவருமே சித்தமிக வேவெகுண்டு
சோனை மழைபோலே சொரிந்தாரே பாணமதை
விட்ட கணைகளெல்லாம் விசயனுமே தானறுத்து
மட்டிலடங் காதபல வாளிகளை யேவினனே
அந்தரத்தில் விண்ணோர்கண் டஞ்சியே போய்மறைந்தார்
விந்தையுட னேகணைகள் வேகமுட னேகிளம்பி

வந்தே யவுணரிட வாளிகளைத் துண்டாக்கி
கந்துகங்க ளுங்குருதி கக்கியே மாய்ந்திடவே
செய்துமே சாரதிகள் சென்னிதனை யேவிழவே
செய்துமே நன்னயமாய்ச் செய்தபல தேர்களிட
குத்துக்கால் வேறு கொடுங்கை கொடிவேறுத்
தத்தியே கீழ்விழவே சாடினது மல்லாமல்
அச்சுகள்வே ருணிகள்வே ருக்கியவு ணர்த்தலைவர்
உச்சிதஞ்சேர் மார்பி லுருவியே சென்றனவே
பின்பு வெகுபாணம் பிரையோகம் செய்தனனே
அன்பில்லா ஈன ரவுணசே னைத்தலைவர்
சின்னுபின் னங்களதாய்ச் சென்றார் சிலபேர்கள்
சென்னியற்றே கீழ்வீழ்ந் திறந்தார் பலபேர்கள்
தக்க பலசேனைத் தலைவருமே மாண்டவற்றை
மூக்கோடி பேரறிந்து மோசமிக வந்ததென்று
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரி லந்தமிகு பார்த்தனிட தேரதனை
ஓடிவந்தே சூழ்ந்துகொண்டா ரோர்நொடிக்குள் ளேநரனை
வாடிடவே செய்து மடிக்கவே வேண்டுமென்று
கோடான கோடிகணை கொக்கரித்தே விட்டனரே
வாடா மனமுடைய மன்னவனும் பற்குணனும்
மாதலியே நம்மையுமே மாற்றலர்கள் சூழ்ந்துகொண்டார்
ஆதலினு லித்தே ரதனைக் குலாலனிட
சக்கரத்தைப் போற்சுழலத் தானேநீ செய்திடுவாய்
மூக்கோடி பேர்களொடு மூர்க்கமாய்ப் போர்பொருதி
வென்றிடுவே னெந்தனிட வீரமதைப் பாருமென்றான்
நன்றெனவே செம்பொன் ரதஞ்சுழலச் செய்தனனே
நீண்டகாண் டீபமதை நேராக வேநிறுத்தி
காண்டீபன் தானோர் கணைகோடி சங்கமதாய்
செல்லுகின்ற பாணமதைத் தீரமுட னேபூட்டி

செல்வனுமே மந்த்ரோப தேசமது செய்துபல
கூர்மையுள்ள வாளிகளைக் கொற்றவனு மெய்தனனே
நேர்மையுட னேகிளம்பி நெய்நெருப்பில் விட்டாப்போல்
எவரெவரெத் திக்கினில்நின் றெய்தார்க ளோசினந்து
அவரவர் கள்பாண மதனைரெண்டு துண்டாக்கி
ஒருகோடி பேர்கள்தனை யோர்நொடிக்குள் மாய்த்தனவே
இருகோடி பேர்வந் தெதிர்த்தே சரந்தொடுத்தார்
மன்னன் வெகுண்டேபிர்ம் மாஸ்திரத்தை விட்டனனே
நன்னயமாய் மேலெழும்பி நான்கு முகத்தோடு
வடவா முகாக்கினிபோல் மாற்றலரி லோர்கோடி
திடமான பேர்களிட சென்னிகளைக் கொய்தனவே
காண்டீபன் மீதே கடுங்கோபங் கொண்டவுணர்
மாண்டோரை முன்போல வாகாக வேயெழுப்பி
வந்தெதிர்த்தா ரிந்த வகையறிந்தே பார்த்தனுமே
சிந்தைமிக வேவெகுண்டு செய்யகாண் டீபமதில்
நாராய ணாஸ்திரத்தை நன்ருய்த் தொடுத்துவிட்டான்
தாராள மாகவுமே தான்கிளம்பி யந்தரத்தில்
ஒருபக்க மின்னலிடி யோர்பக்கம் பர்வதங்கள்
ஒருபக்க மேமழைக ளோர்பக்க மேயிருள்கள்
இந்தவித முண்டாகி எங்கினுமே தான்பரவி
விந்தையொடு சென்றவுணர் விட்ட கணைகளையும்
துங்க ரதங்களையுந் துண்டாக்கிக் கோடிதுர
கங்களையுங் கொன்று கனல்வீசிச் சாரதிகள்
கண்டங் களையறிந்து காலாட் களைவதைத்து
வண்டரா முக்கோடி வல்லவுண ரைமடித்து
அந்தமிகு பார்த்தனிட அம்பருத் தூணிதனில்
வந்தடைந்து விட்டதுவே மாண்டோர்க ளும்பிழைத்து
மண்மீ தமர்புரிய மாட்டோமென் றேநினைந்து

விண்மீதி லேபாய்ந்து மேகமதி லேமறைந்து
வல்லமா யாஸ்திரத்தை வாகாக விட்டனரே
வில்லி லிருந்து வெளிப்பட்டவ் வஸ்திரங்கள்
வீர மொடுமாயா விநோதமதை யுண்டாக்கி
தீரமுட னெங்கினுமே சென்றுமிக வேபரவி
பற்குண னும் விட்ட பகழிகளைத் துண்டாக்கி
சற்குணவா ணகியதோர் சாரதியுஞ் சோர்ந்திடவே
வந்திடுமவ் வேளையிலே வாள்விசயன் தானறிந்து
சிந்தைமிக வேவெகுண்டு செய்யஞா னஸ்திரத்தை
மந்திரித்து விட்டனனே மாயாவஸ் திரத்தையெல்லாம்
விந்தையொடு சென்று துண்டாய் வெட்டியே விட்டதுவே
மூக்கோடி பேரவுணர் மோசமிக வந்ததென்று
கொக்கரித்தே மண்மீது கூடியே தானெதிர்த்தார்
மன்னவனுந் தானேதே வாஸ்திரத்தை யேவிடுத்து
நன்னயமாய் மூக்கோடி ராட்சதரை யேமடித்தான்
அப்பொழுதி லேயுயிருண் டாகியே யெல்லோரும்
செப்பமுட னேயெழுந்தார் தேர்விசய னீதறிந்து
இந்த விதமா யெழுந்துமே வந்தாலே
எந்த விதமா யிவர்களையே வெல்வதென்று
சிந்தைமிக வேகலங்கித் தேர்மீ திருந்தனனே
அந்தரத்தின் மீதினிலே யன்பா யசரீரி
வில்லிலே வல்ல விஜயா வெனக்கூவி
வெல்ல முடியாது வெகுகாலம் போர்புரினும்
உத்தமனே மற்றோ ருபாயமுண்டு யாதெனிலோ
இத்தருண மேகடும்போ ரிட்டே யிவர்களிட
வாயோடு கையுமொன்றாய் வைத்திடவே செய்திவர்மேல்
சேயா வுனக்கரனுர் சிந்தைமகிழ்ந் தேகொடுத்த
பாசுப தாஸ்திரத்தைப் பாங்காய்த் தொடுத்திடுவாய்

மாசில்லா மன்னவனே மாள்வா ரவுணரென்முள்
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரி லந்தமிகு பார்த்தனுமே தான்கேட்டு
வல்லமையி லேசிறந்த மாதலியே யிப்பொழுது
சல்லாப மாய்க்கடும்போர் தன்னையே செய்திடுவேன்
அத்தருணம் பொன்னிரத மானதுவைப் பின்னோட
சித்தமகிழ் வாகவுமே செய்திடுவா யென்றனனே
மாற்றலர்கண் டஞ்சிடவே வாளிகளை யேவினனே
ஆற்று மணலதனை யள்ளியிறைத் ததுபோல்
கூற்றுவனைப் போலவுமே கோடான கோடிகணை
சீற்றமுட னேயவுணர் சீக்கிரத்தி லேவிடுத்தார்
காண்டீபன் தானே கடும்போர் புரிந்தனனே
நீண்ட விகார நிவாத கவசருமே
விந்தையுள்ள பாணமதை விட்டுமே தான்களைத்தார்
அந்தரத்தில் விண்ணோர்கண் டஞ்சியே போய்மறைந்தார்
பாரதிலே பார்த்தன் பயந்தோடும் பாவனைபோல்
சாரதியுந் தேரதனை தானேபின் னோடவிட்டான்
கண்டே யவுணருமே காண்டீப னச்சமிகக்
கொண்டே புறங்காட்டிக் கொண்டோடி னனெனவே
மூக்கோடி பேர்களுமே மூக்கின்மேல் தன்விரலை
பக்குவமாய் வைத்திவனைப் பார்த்தபடி நின்றனரே
தேசுயர்ந்த பார்த்தனிந்தச் செய்தியறிந் தீசனிட
பாசுப தாஸ்திரத்தைப் பாங்காக வேவிடுத்தான்
வில்லிலே நின்று வெளிப்பட்ட மாத்திரமே
நல்லதே வாஸ்திரங்கள் நாராய ணாஸ்திரங்கள்
வாய்வாஸ் திரங்கள் வருணாஸ் திரங்களொடு
தேய்வாஸ் திரங்களயன் திவ்யாஸ் திரங்கொடிய
இந்திரானி னஸ்திரங்க ளேமாஸ் திரங்களுமே

சந்திரனி னஸ்திரங்கள் சங்கோப சங்கமதாய்
உண்டாகி மாற்றலரை யோர்நொடிக்குள் ளேவிரைவாய்
கண்டங் களையறிந்து கால்வேறு கைவேருய்
செய்துமே பாலாழி சென்று நீ ராடியுமே
வையம் புகழுகின்ற மன்னனிடம் வந்ததுவே
முக்கோடி பேர்களுயிர் முற்றிலுமே யேமபுரி
பக்குவமாய்ச் சென்றனவே பார்த்தனுமே யீதறிந்து
செம்பவள வாயினிலே செய்யவெற்றிச் சங்கைவைத்து
பம்பம்ப மென்ருெலித்தான் பண்ணவரு மேபுகழ்ந்தார்

அருச்சுனன் காலகேயர்களை
வதைத்தல்

சாரதியை நோக்கித் தனஞ்செயனு மேநவில்வான்
தேரதனை விண்வழியே தீவிரம தாய்விடுவாய்
மாற்ற லரில்யாரும் மறைந்திருப்பா ரன்னவரை
கூற்றுவனி னூர்க்குக் குடியேகச் செய்திடுவோம்
என்றதுவை மாதலியு மின்பமுட னேகேட்டு
நன்றெனவே செம்பொன் ரதத்தை நடத்தினனே
விண்ணிலே தானே விசயனுமே தான்பார்த்து
கண்ணுக்கு மாற்றலரைக் காணும லேமகிழ்ந்து
பொன்மயமா யங்கோர் புதுநகரைக் கண்டுமன்னன்
நன்னயஞ்சே ரிந்த நகர்யா ருடையதென்ருன்
மன்னனிட மேபுகல்வான் வாகாகச் சாரதியும்
இன்னகரைச் சொர்னபுரி யென்றுமே கூறிடுவார்
தக்கபல வானறுப தாயிரம்பே ரீதினிலே
பக்குவமாய் வாழ்ந்திருப்போர் பஞ்சமா பாதகர்கள்
கேடுநினைப் போர்கால கேயரென்று பேருடையோர்
மூட மதியுடையோர் முற்றிலுமே வஞ்சகர்கள்

விண்ணவர்க்கு மாற்றலர்கள் வில்லிலே வல்லவர்கள்
புண்ணியனே யென்று புகன்றுனே மாதலியும்
காண்டீப னுங்கேட்டுக் கண்ணிரண்டு மேசிவந்து
தூண்டிவிடு வாய்ரதத்தைத் துங்கனே யந்நகர்க்கு
இக்கொடிய பாதகரை யேமனூர்க் கேற்றிவிட்டு
புக்கிடுவோ மேவிரைவாய் பொன்னகர்க்கே யென்றனனே
மாதலியு மேயிரத மானதுவை யேவிடுத்தான்
பூதலமெல் லாம்புகழும் போர்விசய னப்பொழுது
வில்லா னதுவைவெகு வேகமுட னேவளைத்து
உல்லாசன் டங்கார ஓசையது காட்டினனே
கேட்டோசை யைக்கால கேயருமே தான்சினந்து
கூட்டமாய்ப் போர்க்கோலங் கொண்டுமே சேனையொடு
வீரமொடு தேர்களிலே வேகமொடு தானேறி
ஆடா வென்றே யதட்டியே கொக்கரித்து
பருதிதனை மேகமது பாங்காய் மறைத்ததுபோல்
கெருவமொடு வந்தே கிரீடி ரதந்தனையே
சுற்றி வளைந்துகொண்டார் துங்கமிகு காண்டீபன்
வெற்றிபெறு வோமெனவே வேகமாய் வில்லினிலே
சங்கோப சங்கமதாய்த் தானுகும் வாளிகளை
சிங்காரன் மந்த்ரோப தேசமது செய்துவிட்டான்
காலகே யர்களுமே கண்டுவெகு கோபமொடு
சீலமுள்ள வாளியெல்லாம் செய்துமே துண்டுதுண்டாய்
கோடான கோடிகணை கொக்கரித்தே யெய்தனரே
வாடா மனமுடைய மன்னவனு மீதறிந்து
நீண்டகாண் டீபமதை நேராக வேநிறுத்தி
காண்டா வனதகன காலமதில் விட்டாப்போல்
கண்ணிமைக்கு முன்னே கணைமாரி போற்பொழிந்தான்
விண்ணிலே தான்கிளம்பி வெவ்வே றுருவாகி

சேனைகளைத் தும்ஸமது செய்தனவே பின்பவனும்
சோனை மழைபோலே சொரிந்துமே பாணமதை
வல்லமையாய் வந்தெதிர்த்த மாற்றலரின் மார்புகளை
சல்லடைபோ லாக்கியுமே சாரதியைக் கொன்றேதேர்
குத்துக்கால் வேறு கொடுங்கை கொடிவேருய்
எத்திடவே செய்தனனே எகோபித் தேயவுணர்
அந்தரத்தி லேமறைந்து அம்புகளை யேவிடுத்தார்
வந்தபல வாளிகளை வாள்விசயன் தானறுத்து
பாசுப தாஸ்திரத்தைப் பாங்காக வேதொடுத்தான்
தேசுயர்ந்த ஈசன் திருவருளா லக்கணைதான்
வில்லிலே நின்று வெளிப்பட்ட மாத்திரமே
நல்லபிர்ம் மாஸ்திரங்கள் நாராய ணாஸ்திரங்கள்
அட்டதிக்குப் பாலகரி னஸ்திரங்கள் மென்மேலும்
மட்டிலடங் காதபல வாளிகளா யுண்டாகி
காலகே யர்களையே காலன் பதிசேர்த்து
சீலமுள்ள பாலாழி சென்றுநீ ராடியுமே
மன்னனம்ப ருப்பொதியில் வந்தே யடைந்ததுவே
நன்னயமாய்ப் பார்த்தனந்த நாழிகையி லேமகிழ்ந்து
செம்பவள வாயினிலே செய்யவெற்றிச் சங்கைவைத்து
பம்பம்ப மென்றெலித்தான் பண்ணவரு மேகனிந்து
கற்பகப்பூ மாரிபெய்தார் காண்டீப னைப்புகழ்ந்து
விற்பனவி வேகனுமே வீற்றிருந்தே தேர்மீது
சாரதியே விண்ணோர் தனக்கிடரு பண்ணிவரும்
பேரிருந்தா லின்னும் பிரபலனே கூறுமென்றான்
மண்ணிலுமே விண்ணிலுமே வானவர்க்கு மாற்றலர்கள்
புண்ணியனே யில்லையென்றப் போது புகன்றனனே
மன்னவனுஞ் சிந்தை மகிழ்ந்துமே மாதலிநீ
பொன்னுலகை நோக்கிரதம் போகவே செய்யுமென்றான்

## அருச்சுனன் பரதசாஸ்திரம் பயிலுதல்

சிங்கார மானசித்ர சேனனுமே முன்னோடி
சிங்கா தனத்திலுற்ற தேவேந் திரன்றனையே
போற்றியே காண்டீபன் போர்புரிந்து மாற்றலரை
கூற்றுவனூர்க் கேற்றினதைக் கூறிடவு மேகனிந்து
மைந்தனையே காணவெதிர் வந்தனனே வாசவனும்
தந்தை தனையே தனஞ்சயனும் போற்றினனே
இந்திரனும் பற்குணனை இன்பமுட னேவாழ்த்தி
சுந்தரமே வாய்ந்த சுவர்க்க புரிக்கழைத்து
வந்தே அயிரா வதமதனைச் சிங்காரித்
தந்த விஜய தரனையதின் மீதேற்றி
அந்தரத்தில் துந்துமிக ளார்ப்பரிக்க மாதருமே
விந்தையுட னுடிவர விண்ணவருங் கொண்டாட
விண்ணுலகி லுள்ளபல வீதிகளைச் சுற்றிவந்து
மண்ணுலகில் வாழ்ந்திருக்கும் வாள்விஜயன் றன்னையுமே
சிங்கா தனமேற் சிறப்பாக வேயிருத்தி
மங்கா முடிதரித்த வாசவனும் வீற்றிருந்தான்
இந்தவித மாகவுமே இந்திரபோ கந்தனையே
அந்த முடனே யநுபவித்தோர் நாள்விசயன்
தந்தையையே யெந்தன் தமையரிடஞ் சென்றிடவே
சந்தோஷ மாகவிடை தந்தனுப்பு மென்றனனே
வானவர்கோன் கேட்டு மகனேமுன் நான்காண்டு
கானகத்தி லேவசித்துக் காணும லோர்வருடம்
இருக்கவுமே வேண்டி யிருப்பதினு லுந்தனுக்கு
பெருக்கமுட னூர்வசியும் பேடியாய்ப் போகவென்று
இட்டதோர் சாப மெடுத்திடவும் மாற்றிடவும்

கட்டழக னேயிருக்குங் காரணத்தா லவ்வுருவை
அக்காலம் பூண்டா லதற்குச் சரியாக
தக்கோனே நீபரத சாஸ்திரத்தைக் கற்றிருந்தால்
குற்றமொன் று மில்லாது கோமா பிறர்களுக்கே
கற்றுவைத்தே யோர்வருடக் காலங் கழித்திடலாம்
தீர முடனே நீ சிலகால மிங்கிருந்து
நாரதர் தும்புருவ ராலேயச் சாஸ்திரத்தை
கற்றிடுவா யென்றனனே காண்டீபன் சம்மதித்தே
நற்றவஞ்செய் தும்புருவர் நாரதரா லந்நூலை
மெத்தவினை யத்துடனே வேந்தன் தினந்தினமே
சித்த மதனைச் செலுத்தியே கற்றுவந்தான்

உரோமசன்மர், தருமர் முதலானவர்களைத்
தேற்றுதல்

சட்டமுட னேரோம சன்மரையே வாசவனும்
பொட்டெனவே தானழைத்தப் போது புகன்றிடுவான்
விண் ணுலகை மாதவரே விட்டே விரைவினிலே
மண் ணுலகி லேகி வனத்திலே வாழ்ந்திருக்கும்
பாண்டவரைக் கண்டே நீர் பார்த்தன் தவவேடம்
பூண்டே கயிலைமலை போனமுத லாகவுமே
இங்குவந்து தானே இருக்கும் வரைநடந்த
சங்கதியைக் கூறித் தருமரொடு நால்வரிட
சஞ்சலத்தை நீக்கியங்கு தங்கியே தானிருப்பீர்
கொஞ்சநாட் சென்றபின்பு கொற்றவனும் வந்திடுவான்
உத்தமரே பின்புவிந்த உம்பருல கந்தனக்கே
சித்தமகிழ் வாகவந்து சேருவீ ரென்றறைந்தான்
ஞானமிக வேயுணர்ந்த நன்முனிவ ரன்புடனே
கானகத்தை நோக்கிவந்தார் கண்டே தருமரொடு

வீமன் நகுலனதி மேன்மைச் சகாதேவன்
வாமமிக வேமிகுந்த மாதரசி பாஞ்சாலி
வந்தே யடிபணிந்து மாமுனியே யெங்களிடம்
வந்த கரும மதைக்கூ றுமென் றனரே
மாதவத்தி லேசிறந்த மாமுனியா சீர்வதித்து
ஓதினு ருண்மைதனை யொன் றும் விடாதபடி
சிந்தைமகிழ் வாய்க்கேட்டுச் செய்யமுனி வோர்தனையே
விந்தையுட னேபுகழ்ந்து வீற்றிருந்தா ரன்புடனே
பொறுமையே பூஷணமாய்ப் பூண்டுமிக வேயிலங்கும்
தருமருமே யோர்நாளிற் சாற்றுவார் மாமுனிமுன்
தக்க புகழுடைய தம்பியரின் வார்த்தைதனை
பக்குவமாய்க் கேளாது பாவி துரியனொடு
சொக்கட்டா னுடியெங்கள் தொல்லுலகைத் தானிழந்து
இக்கொடிய கானி லிருக்கவே நேர்ந்ததுவே
மண்டலமீ தென்போல மாபாவி யோர்வரையுங்
கண்டதில்லை யென்றதுவைக் காமுனிவ ருங்கேட்டு
மன்னன் தருமர் மனமதனை யாற்றவென் று
நன்னயமாய்ச் செய்ய நளராஜ னின்சரிதை
ஆதிமுத லந்தம்வரை யன்னவரி டந்தனிலே
ஓதினதைத் தான்கேட் டுளமிகவு மேகனிந்து
விதியிருந்தால் நம்மை விடுமோ வெனத்தருமர்
மதிமிகுந்த மாமுனிமுன் வாகாய்ப் புகன் றிருந்தார்

## தருமர் முதலியோர் உரோமசன்மருடன் தீர்த்தயாத்திரை செய்தல்

ஞானமிக வேயுணர்ந்த நாரதரு மோர்நாளில்
கானகத்தை நோக்கிவரக் கண்டே தருமரொடு
எல்லோருஞ் சென்றே யெதிர்கொண் டழைத்துவந்து

உல்லாச மாகவுமங் கோரிடத்தி லேயமர்த்தி
நின்றதுவைக் கண்டுமுனி நேர்மையுள்ளா ரெல்லோர்க்கும்
நன்முயா சீர்வதித்தந் நாழிகையி லேமகிழ்ந்தார்
சாந்த குணவான் தருமருமே வீணைதனை
வந்து முனிவ ரிடமதனி லேபுகல்வார்
மாதவத்தி லேசிறந்த வள்ளலே யிப்பெரிய
பூதலத்தி லுள்ளபல புண்ணியதீர்த் தங்களுமே
எத்தனைக ளுண்டெமக்கு இன்பமுட னப்பலனை
உத்தமரே கூறிடுமென் றேதிரு ரப்பொழுது
திரிலோக சஞ்சாரி சிந்தைமிக வேகனிந்து
பரிவான மன்னவன்முன் பாங்காக வேபுகல்வார்
கீர்த்திமிகு கொற்றவனே கேட்டிடுவாய் முக்கோடி
தீர்த்தமுண் டொவ்வொன்றின் திருநாம மின்னதென்றும்
சென்றவையில் மூழ்கிடிலோ சேருபல னின்னதென்றும்
நன்றாக வேபுகன்று நாரதரும் சென்றனரே
எல்லோரு மேகேட் டிதயமிக வேமகிழ்ந்து
சல்லாப மாய்த்தீர்த்தந் தாடுை வேண்டுமென்று
சட்டமுட னேரோம சன்மரையே தானழைத்து
கட்டழக ரெல்லோருங் கானகத்தை யேகடந்து
வந்தார்க ளங்கோர் வனமதனைத் தர்மருமே
அந்தமுட னேபார்த்தி தாருடைய தென்றனரே
நற்றவத்தி லேசிறந்த ஞானமுனி வோர்கேட்டு
கொற்றவனே யீதுங் குருமுனிவர் மாவனமே
என்றறைய மன்ன னுமே யிம்முனிவ ரின்சரிதை
நன்று யெனக்கே நவிலுவீ ரென்றனரே
ஜெகத்திலே கீர்த்திபெற்ற செய்யமுனி வோர்கனிந்து
அகத்தீச ரின்சரிதை யன்பாக வேபுகன்றும்
நன்னயஞ்சே ரும்பரசு ராமர் கலைக்கோட்டார்
மன்னன் சிபிச்சக்ர வர்த்திபிர குத்துய்மன்

வாமமா ரஸ்வ மஹாராஜன் துல்பவக்ரன்
சோம மஹாராஜன் துப்யவஷ்ட கோணரிஷி
சாந்த குணவான் சவுனகர்தம் மெய்ச்சரிதை
வேந்த னிடத்தில் விளம்பியங்கங் கேயிருந்த
துப்யபல தீர்த்தமதில் தோய்ந்துமே யெல்லவரும்
செய்ய முனிவோரைத் தெரிசித்தே விந்தையுள்ள
கங்கா நதியின் கரைவந்தே நீராடி
தங்களையுங் கண்டு தரிசித்தே வேகமொடு
சீல மிகுமந் திரகிரியோ டேயிந்த்ர
நீல சயிலமலை நீண்டகாந் தர்ப்பமலை
விந்தைகளை ரோமசன்மர் மேன்மையுட னேகாட்டி
கந்தமூ லங்கள் கனிகளையு மேபுசித்து
தவத்தி லொருவருடந் தானிருக்க வேண்டுமென்றே
பவத்தை யொழிக்கும் பரனையெண்ணி யங்கிருந்தார்

### வீமன் மந்தாரபுஷ்பங் கொண்டுவரச் செல்லுதல்

பாஞ்சாலன் வேணதவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சாலி முன்னே பரிமளத்தி லேமிகுந்த
மந்தார புஷ்பமொன்று வாசவனின் சென்னிதப்பி
விந்தை யுடனே விழுந்ததுவை மாதுகண்டு
எடுத்துவந் தேவீம னெழில்கரத்தி லன்பாக
கொடுத்துமே தான்பணிந்து கோதையுமே கூறிடுவாள்
மன்னவனே யிந்த மலர்போல வெந்தனுக்கே
தென்னவனே நீர்சிலது சேகரித்தே யீயுமென்றாள்
வீமன் மிகமகிழ்ந்து மின்னரசே யுன்றனக்கு
வாம மிகுந்த மலர்தாரே னென்றறைந்து
சட்டமுட னேரோம சன்மரிடஞ் சென்றுகண்டு

பொட்டெனவே தாள்பணிந்தப் புட்பமதை யேகொடுத்து
வல்லவரே யிந்த மலரெவிடத் திற்கிடைக்கும்
சொல்லுவீ ரென்றனனே துங்கமுனி வோர்கேட்டு
பூமா வளகா புரிபொன் னுலகினிலும்
நேமா கிடைக்குமல்லால் நீண்டபுவி மீதேது
என்றே நவின்றனரே யிந்தமொழி யைக்கேட்டு
குன்ற மனமுடைய கொற்றவனு மேவணங்கி
மெல்லி யிடமே விடைவாங்கி வேகமொடு
சல்லாப மாய்த்தானே தண்டுவில்லுந் தானெடுத்து
பாரமத வீமனுமே பாங்காய் வடதிசையை
தீரமொடு நோக்கியுமே சென்றான் மனமகிழ்ந்து

### வீமன் அனுமாரோடு வாதித்து
### பின்புநேசித்து விஸ்வருபத்தைத் தரிசித்தல்

காடு மலையும் கனத்தசுனை கானாறும்
மேடுபள்ள முள்ளதெல்லாம் வேகமுட னேநடந்து
கடந்து மதவீமன் கதலி வனமுமொன்று
அடர்ந்து குலைகுலையா யங்குமே காய்த்திருக்கக்
கண்டவ் வழியாகக் காவலனும் வந்தனனே
வண்டரா மந்த வனமதனைக் காத்திருப்போர்
வெஞ்சினங்கொண் டெல்லவரும் வேகமுட னேகிளம்பி
அஞ்சாமல் நின்றே யதட்டி வழிமறித்தார்
வாம மிகுந்த மதவீமன் தண்டாலே
எமபுரி சென்றிடவே எல்லோரை யும்மடித்து
வடமேற்குத் திக்கு வழியாகச் சென்றனனே
திடமிகவு மேமிகுந்த தீரனனு மான்றனையே
கண்டு நடுநடுங்கி காவலவ னச்சமிகக்
கொண்டுமே யண்ணல் குலத்தினரென் றங்குநின்றான்

ஆஞ்சனே யன்பார்த் ததட்டி யருகிலுற்று
வாஞ்சையுட னிந்த வனமதனில் யாரேனும்
வந்திருக்க மாட்டாரே மானிடவா யிப்பொழுது
உந்தனையே கொன்றிடுவே னோடாதே நில்லெனவே
மதவீம னுஞ்சினந்து வானரமே யிந்நேரம்
இதமாய் வழிவிலகி யேகுவா யென்றனனே
அஞ்சனையாள் மைந்த னறைவான் மிகச்சினந்து
அஞ்சாம லிங்குவந்த தல்லாது செங்கரத்தில்
தண்டா யுதமுந் தனுவிருக்கு தென்றவெண்ணங்
கொண்டாநீ வாதுமொழி கூறினு யித்ததியே
வல்லவனு னுலெனது வாலையெடுத் தப்புறத்தில்
உல்லாசா போடென் றுரைத்திடவு மேகேட்டு
நன்னயஞ்சேர் கின்றரகு ராம ரிடதூதன்
தென்னிலங்கை சென்றிடவே சிந்துதனைத் தாண்டினவன்
தீரமொடு சீதாவைத் தேடியே சென்றுகண்டோன்
வீரமுள்ள ராக்ஷதரை வென்றே வனமழித்தோன்
இலங்கா புரியேதீ யிட்டே கொளுத்தினவன்
அலங்கார மாகியதோ ரஞ்சனு தேவிமைந்தன்
சீலமிகு வாய்வினிட சேய னெனதுவண்ணன்
வாலதனைப் பார்க்கிலுமுன் வால்பெரிதோ வென்றனனே
அஞ்சனையாள் சேய னகமிகவு மேமகிழ்ந்து
கொஞ்சமுமஞ் சாதுரைத்த கோமாநீ யாரெனவே
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரில் வீமனென்பேர் பாங்கான வாயுசுதன்
என்றே புகன்றனனே இம்மொழியைத் தானறிந்து
குன்று மனமுடைய கோமானே நீபுகழ்ந்து
செப்பியதோ ரஞ்சனையாள் சேயனு மானெனவே
இப்புவியின் மீதிலுள்ளோ ரெந்தனையே கூறிடுவார்

வாமமிக வேமிருந்த வள்ளலே யென்றியம்ப
வீமனுமே கேட்டு மிகவே நடுநடுங்கி
பாதமதில் வீழ்ந்து பணிந்தே யெழுந்துநின்றான்
காதலுட னேயனுமான் கையா லெடுத்தணைத்து
ஆசி பலகூறி யருகினிலே தானிருத்தி
மாசில்லா மன்னுநீ வந்ததென்ன யிங்கெனவே
மதவீமன் வந்த வரலாறைத் தானெடுத்து
இதமாய்ப் புகன்றனனே இம்மொழியைத் தான்கேட்ட
அஞ்சனு தேவிமைந்த னம்மலர்கு பேரனிட
மஞ்சனவா விக்கரையில் மன்னவனே யுண்டெடுப்பாய்
இன்னுமென்னு லாவதுவு மென்னவதைக் கேளிய்வேன்
நன்னயமா யென்றே நவின்றார் மனமகிழ்ந்து
அண்ணலே நாங்க ளடவிலே தான்வசித்து
கண் ணுக் கெவர்களுக்குங் காணும லேயிருந்து
வந்தாலும் நாடுகொடான் மன்னன் துரியனுமே
சிந்தை வெகுண்டேபோர் செய்திடவே நேருமக்கால்
தம்பி விசயன் தனக்கே துணையாக
செம்பொன் ரதமீது சிந்தைகனிந் தேயிருப்பீர்
செய்யவிஸ்வ ரூபமதைத் தேவரீ ருங்கிருபை
செய்தே யெடுப்பீர் தெரிசிக்க வேண்டுமென்றான்
அஞ்சனையாள் மைந்த னகமிகவு மேகனிந்து
வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்த பகைவரொடு
பூசலிடும் போதுதம்பி பொன்ரதத்தின் மீதினிலே
மாசில்லா தேதுவஜ மாகவே வந்திருப்பேன்
வீமனே யென்று விளம்பிவிஸ்வ ரூபமதை
நேமமுட னேயெடுத்து நின்றார் புவிநடுங்க
மன்னவனுங் கண்டு வணங்கினன் பாதமதை
நன்னயஞ்சேர் கின்றரகு ராமரிட தூதுவரும்

முன்போல் வடிவாகி முன்னமே நின்றனரே
அன்பாக வீம னவரை வணங்கிவிடை
வாங்கியே வேண மலேகளேயு மேகடந்து
பாங்காய்க் குபேரன் பதிநோக்கி யேநடந்தான்
நில்லடா வென்றுபுண்ட ரீகனென்ற வோரசுரன்
கொல்லுவே னென்றதட்டிக் கொக்கரித்தே வந்தெதிர்த்தான்
கண்டுமத வீமனுமே கண்கள் நெருப்பெழவே
தண்டா யுதத்தாலே சாடினன் வேகமொடு
அந்தவடி பட்டே யசுரன் மடிந்தனனே
சிந்தைமிக வேமகிந்து சென்ருனே தீவிரமாய்

உருத்திரசேனன் வீமனைச் சமாதானம் செய்து
மந்தாரபுஷ்பங் கொடுத்து அனுப்புதல்

அஞ்சனையாள் மைந்த னறைந்தபடி துங்கமிகு
மஞ்சனவா விக்கரையில் மந்தார மாமலரும்
பூத்திருக்கக் கண்டுமனம் பூரித்தே சென்றனனே
காத்திருந்த பொல்லாத காவலரு மேசூழ்ந்து
ஆரடா வென்றே யதட்டிவெகு ஆக்ரமித்து
பாரடா யேம பதியிலுனை யேகிடவே
செய்குவோ மென்றுவெகு தீரமொடு வில்வளைத்து
எய்தனரே பாணமதை ஏகோபித் தெல்லவரும்
கண்டு மதவீமன் கடுங்கோபங் கொண்டெழும்பி
தண்டா யுதத்தாலே தாக்கியே வாளிகளை
துண்டாக்கி வந்தெதிர்த்த துஷ்டரையே தீவிரமாய்
கண்டதுண்ட மாக்கியுமே கர்ச்சித்தே நின்றனனே
வல்ல குபேரனிட மாயோடி யோரசுரன்
சொல்லவே கேட்டுச் சுருக்கா யருகிருந்த
சங்கோடனையழைத்துச் சட்டமொடு போர்பொருதி

இங்கவனைக் கட்டி யிழுத்துவா வென்றனனே
பூனையுமே சிங்கமிடம் போர்புரியு மோவெனவே
சேனைகளைக் கூட்டியுமே சீக்கிரம தாய்நடந்து
வந்தேசங் கோடனனும் மன்னவனைப் பார்த்துரைப்பான்
விந்தைநீ யிங்குவந்து விட்டதன்றிக் காவலரை
கொன்றுமே யுந்தனையான் கொல்லுவே னென்றதட்டி
நின்றுமே வில்வளைத்து நேர்மையுள்ள வாளிகளை
பூட்டி மழைபோலே பொழிந்தானே விண்ணவரும்
வாட்டமடைந் தோடிடவே வந்தபல வாளிகளை
வீமனுமே வில்வளைத்து வேணகணை விட்டறுத்தான்
பூமனின்மேற் சூலமதைப் பொட்டெனவே விட்டெறிந்தான்
சூல மதனைரெண்டு துண்டாக்கிச் சேனைகளை
சீலனுமே தும்ஸமது செய்தேசங் கோடனனை
தண்டா யுதத்தாலே தாக்கினான் மார்பினிலே
வண்டனுமே ரெத்த மதுகக்கி யேமயங்கி
நடுங்கிவிரை வாயோடி நல்லகு பேரனிடம்
ஒடுங்கிப் பணிந்தவனு மோதிடுவான் யாதெனிலோ
மண்டலத்தி லின்பமொடு வாழ்நரனோ டேயெதிர்த்து
சண்டைசெய்து வேண சைனியத்தை யானிழந்து
ஓடிவந்தே னற்றுது உண்மையிது வன்னவனே
நாடியே கப்பம் நயந்துகொடுக் காவிடிலோ
இன்னகரி லேபுகுந்து எல்லோரை யும்மடித்து
நன்னயமாய்க் கொள்ளையிட்டு நாடியே சென்றிடுவான்
என்றே புகன்றனனே இம்மொழியை யந்நேரம்
குன்று மனத்தோன் குபேரனுமே தான்கேட்டு
சிந்தை மயங்கிருத்ர சேனனையே தானழைத்து
வந்த நரனின் வரலா றதையறிந்து
மைந்தனே யிங்கு வருவா யெனப்புகன்றான்

தந்தையுரை போலவனும் சட்டமுட னேநடந்து
சென்று மதவீமன் திடமறிந்து முன்னுடி
நின்றே மனமகிழ்ந்து நேர்மையுட னேபுகல்வான்
மண்டலத்தி லன்புடனே வாழ்ந்திருக்கு மன்னவனே
விண்டலத்தைத் தேடிவந்து வீரமொடு போர்பொருதி
பூங்கா வனமதையெப் போதுமே காத்திருந்த
பாங்கான காவலரைப் பாணமதி னுல்மடித்தாய்
என்ன கருமமதா யிங்குவந்தா யுண்மைதனை
நன்னயமாய்க் கூறிடிலோ நானதனை யீய்ந்திடுவேன்
மன்னவனே யென்ருன் மதவீம னுங்கேட்டு
உன்னிதமாய்த் தன்வரலா ருேதியே யிந்நகர்க்கு
மந்தார புஷ்ப மதைவேண்டி வந்ததென்ருன்
சிந்தை மகிழ்ந்துருத்ர சேனனுமே தான்கேட்டு
அடுத்தேபூங் காவனத்தை யம்மலரைக் கொய்துபல
கொடுத்தே விடைவாங்கிக் கொண்டுவந்து தந்தையிடம்
வந்துபணிந் தேநடந்த வற்றையெடுத் தோதினனே
அந்தமுட னேகேட் டகமகிழ்ந்து மேயிருந்தான்
மஞ்சனவா விக்கரையில் வந்துமத வீமனுமே
அஞ்சாது வாவியில்நீ ராடியே தானிருந்தான்
தருமமே யோருருவாய்த் தானே திரண்டுவந்த
தருமருமே பக்கமதில் தம்பிமத வீமனையே
காணுதிருப் பதற்குக் காரணமு மின்னதென்று
தோணு மலுமெழுந்து தோகை துரோபதைமுன்
சென்றுமே கேட்டனரே சேயிழையு மன்புடனே
நன்ருய்ப் புகன்ருள் நடந்ததொளி யாமலுமே
செய்ய தருமருமே சித்தமிக வேகலங்கி
துய்ய கடோர்க்கஜனைத் தோன்றலுமே தானினைந்தார்
மைந்தனுமே யிந்த வகையறிந் தோடிவந்து

தந்தைதனை யேபணிந்து சட்டமொடு நின்றனனே
இன்பமாய் வாரி யெடுத்தே யறவணைத்து
அன்புடனே பாலகனுக் காசிமொழி கூறியுமே
மந்தார புஷ்ப மதையெடுக்க வீமனுமே
சிந்தை மகிழ்வாகச் சென்றதுவை யேபுகன்று
வல்லவனே தேடி வரவேண்டு மென்றுவெண்ணி
சல்லாப மாகமனந் தன்னிலுனை யேநினைந்தேன்
செல்வனே யுந்தனிட தேரி லிருபேரும்
செல்லுவோ மென்றறைந்த செய்திதனை யேகேட்டு
நல்லதெனச் சம்மதித்தந் நாழிகையி லேயிருவர்
உல்லாச மாயேறி உம்பரள காபுரியை
நாடியே விண்ணில் ரதமான தைவிடுத்தே
தேடியே வந்தனரே தீரமுட னந்நேரம்
நேமமுள்ள தர்மரையும் நேர்மையுள்ள மைந்தனையும்
வீமனுமே கண்டு விரைந்தே நடந்துவந்து
செய்ய தருமர் திருவடியி லேபணிந்தான்
வையம் புகழுகின்ற மன்னனையா சீர்வதித்தார்
தக்கோன் கடோற்கயனுந் தந்தைதனை யேபணிந்தான்
பக்குவமா யாசி பகர்ந்தான் மதவீமன்
பொறுமையே பூஷணமாய்ப் பூண்டுகொண்டு தானிருக்கும்
தருமருமே வல்லமைசேர் தம்பிக்கே வேணபல
புத்திதனை யேயெடுத்துப் போதித்தே யன்புடனே
சித்தமிக வேமகிழ்ந்து தேர்மீதில் மூவருமே
ஏறியே விண்வழியி லேகவிட்டே கானகத்தை
கோரியே வேகமொடு கோமான்கள் வந்தனரே
மங்கை துரோபதைக்கு மந்தார புஷ்பமதை
செங்கை தனிலீய்ந்தான் செய்யமத வீமனுமே
பாலன் கடோர்க்கயனும் பாங்காயெல் லோர்களிடம்
சீலன் விடைவாங்கிச் சென்றனனே தன்பதிக்கே

## வீமன் சடாசுரனை வதைத்தல்

பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரும் கானகத்திற் பாங்குடனே வாழ்ந்திருந்தார்
வேந்தருட னேயிருந்த விப்பிரர்க ளெல்லோரும்
சாந்த குணவான் தருமரிட மோடிவந்து
தருமமே யோருருவாய்த் தான்வந் தவதரித்த
தருமரே யிந்தவனந் தன்னில்வி லங்கினங்கள்
இம்சை சகித்திடவே எங்களினு லாகாது
தும்சம் புரிந்திடவே சொல்லுவீ ரென்றனரே
துய்ய தருமரிந்தச் சொற்கேட்டுப் பக்கமுள்ள
செய்யமத வீமன் திருமுகத்தைப் பார்த்தனரே
வில்லம்பு தண்டெடுத்து வேகமுட னேவீமன்
சல்லாப மாய்க்கானந் தன்னிலே சென்றனனே
தக்க பலவான் சடாசுரனென் றோரசுரன்
அக்கான கந்தனிலே யந்தணர்போல் வேடமிட்டு
தீங்குசெய்ய வேணுமென்று சிந்தையிலே தானினைந்து
பாங்கா யமைத்திருக்கும் பர்னகசா லைக்குளுள்ள
மங்கை துரோபதையை மாயமந் திரத்தாலே
அங்குள்ளோர்க் குத்தெரியா தந்தரமார்க் கந்தனிலே
எடுத்தேகும் போதினிலே ஏந்திழையுங் கண்ணீரை
விடுத்தே யபயமென்று மெல்லிசொல்லித் தானழுதாள்
நகுலன் சகாதேவன் நங்கையப யக்குரலை
வெகுவாக வேகேட்டு வில்லம்புந் தானெடுத்து
சென்றே ககனவழி செல்லுகின்ற பாதகன்மேல்
நின்றேமண் மீதினிலே நேர்மையொடு வில்வளைத்து
வெஞ்சினமே கொண்டிருவர் விட்டார் வெகுபாணம்

அஞ்சா தசுரனுமே அந்தரத்தே சென்றிருந்தான்
வல்ல மதவீமன் வனவிலங்கை மாய்த்துவிட்டு
உல்லாச மாய்வரும்போ துத்தமியாள் பாஞ்சாலி
அந்தரத்தி லிட்ட அபயக் குரல்கேட்டு
சிந்தைமிக வேவெகுண்டு சீக்கிரமா யோடிவந்து
மண்ணிலே நின்ற மரமதனை யேபிடுங்கி
விண்ணி லசுரனின்மேல் விட்டெறிந்தான் வேகமொடு
வல்லசுரன் மீதுபட மண்மீ தினிலிறங்கி
மெல்லிதனைப் பூமியிலே விட்டுமே வீமனின்மேல்
பாய்ந்தானே மேரு பருவதத்தைப் போலவுமே
சாய்ந்தே யசுரன் றனைப்பிடித்தே வீமனுமே
விண்ணிலே வேகமொடு விட்டெறிந்தா னவ்வசுரன்
மண்ணிலே வீழ்ந்து மடிந்தான் மலைபோலே
மெல்லி துரோபதையை வீமனுமே தான்தேற்றி
சல்லாப மாகவுமே தம்பிமார் தன்னுடனே
வந்தே தருமர் மலரடியி லேபணிந்து
வந்த விபத்தை வழுத்தவே கேட்டுமனம்
மெத்தக் கலங்கி விசனித்தே தானிருந்தார்
அத்தருண மாமறையோ ரன்னவரை யேதேற்றி
மன்னன் மனமகிழ மாமுனிவர் கள்சரிதை
தன்னையே கூறினரே சட்டமொடு கேட்டிருந்தார்

---

வீமன்பாரிஜாத புஷ்பம்
கொண்டு வரச்செல்லுதல்

இன்பமுள்ள பாண்டவர்க்கு இந்தமட்டு மேயாண்டு
ஒன்பதுமே தான்முடிந்து உற்றதுவே பத்தாண்டு
கொடிக ளடர்ந்தவஷ்ட கோணரிஷி யின்வனத்தில்

வடிவுடைய குந்திமைந்தர் வாழ்ந்திருந்தா ரன்புடனே
அந்த வனத்தி லழகான வோர்நதியில்
விந்தையுட னேபுதிய வெள்ளமிக வந்திடவே
பாஞ்சாலன் வேண தவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சாலி மாமறையோர் பத்தினிமார் தங்களொடு
புக்கியே நீராடும் போதினிலே யந்நதியில்
தக்கமண மார்பாரி ஜாதமல ரொன்றுவர
கண்டுமே பாஞ்சாலி கையா லதையெடுத்து
தண்டா யுதவீமன் தன்னிடமே சென்றீய்ந்து
மன்னவனே யிந்த மலர்போல வெந்தனுக்கே
தென்னவனே நீர்விரைவாய்ச் சேகரித்தே தாருமென்று
வணங்கியே நின்ருள் மதவீமன் சிந்தைமிக
இணங்கியே பெண்மயிலே யின்றுனக்கு யீய்ந்திடுவேன்
என்றே யொருவ ரிடத்திலுஞ்சொல் லாதபடி
சென்ருன் வடதிசையைத் தீரமுட னேக்கியுமே
காடு மலேயும் கனத்தசுனை காறும்
மேடுபள்ள முந்தாண்டி வேகமுட னேநடந்து
தக்க விரத்னகிரிச் சார லருகிலுற்று
பக்குவமாய்த் தானே பலமணிக ளேயடித்து
கொண்டுவருங் காற்றைக் கொற்றவனுங் கண்ணுலே
கண்டுமிக வேகளித்துக் காற்றிலுமே வேகமொடு
நடந்துமே பாதைவழி நானூறு யோசனேயை
கடந்தேகு பேரனள காபுரியைக் கண்டுசென்று
வல்லமையாய் மேல்கோட்டை வாயிலிலே வந்துநின்று
சல்லாப மாகவெற்றிச் சங்கமதை யூதினனே

வீமன் மணிமாலனே
வதைத்தல்

பட்டணத்தி லுள்ள பலஜனங்க ளுங்கேட்டு
கிட்டினதோ காலமென்று கீழே விழுந்தெழுந்து

சென்றே குபேரனிட சேனைத் தலைவரிடம்
நன்ருய்ப் புகன்றனரந் நாழிகையி லேகேட்டு
செய்ய குபேரனிட சேனைத் தலைவரெல்லாம்
துய்யமணி மாலனிடம் சொன்னுர் விரைவினிலே
வல்லோன் மணிமாலன் மட்டிலடங் காச்சேனை
எல்லாந் திரட்டியொன்று யேறியே பொன்ரதத்தில்
வேகமுட னோடிவந்து வீரமுள்ள வீமனின்முன்
பாகவுமே நின்று பகருவார் யாதெனிலோ
மண்டலத்தின் மீதினிலே வாழும் நரனேநீ
விண்டலத்தில் வந்தனையே வீரவான் போலவுமே
செல்லடா வந்தவழி செல்லா விடிலுனையே
கொல்லுவே னென்றறைந்து கொக்கரித்தே நின்றனரே
தண்டா யுதவீமன் சட்டமுட னேபுகல்வான்
வண்டரே யுங்களிட மாநகர்க்கு வந்தொருநாள்
எந்த னிடமே யெதிர்த்தபல பேரைவென்று
மந்தார புஷ்ப மதைவாங்கிச் சென்றவற்றைக்
கண்டிருந்தும் சேனை களைவேக மாய்க்கூட்டிக்
கொண்டுவந்து இன்றெதிர்த்தாய் கொல்லும் புலிபோலே
தக்கமண மார்பாரி ஜாதமல ரீய்ந்திடிலோ
இக்கணமே சென்றிடுவே னில்லா விடிலுமையே
தண்டா யுதத்தாலே தாக்கியே கொன்றிடுவேன்
கண்டிடுவீ ரென்றனனே கண்சிவந்தே யக்ஷயரும்
மூடனே யென்ன மொழிந்தாய் நொடிக்குளுனை
வாடவே செய்து மடிக்கிரேும் பாருமென்று
தங்கள் தங்கள் விற்களையே சல்லாப மாய்வளைத்து
துங்கமுள்ள வாளிகளைத் தூண்டியே விட்டதிக
வல்லமைசேர் வீமனிட மார்பதனை யோர்நொடியில்
சல்லடைபோ லாக்கிவிட்டார் தண்டாயு தன்சினந்து

சிங்கமதைப் போலவுமே சேனைகளி லேபுகுந்து
சங்கரித்தே சேனைத் தலைவரையு மேமடக்கி
கண்ட துண்ட மாக்கினனே கண்டுமணி மாலனுமே
அண்டவொண்ணுக் கோபமுட ஞர்ப்பரித்தே பற்கடித்து
தப்பியே யோடும் சைனியத்திற் கேமதிகள்
செப்பி விரைவாய்த் திரட்டியொன் ருகவுமே
சிந்துபோ லேவளைந்து செய்யமத வீமனின்மேல்
அந்தமொடு வில்வளைத்து அம்புகளை யேவிடுத்தான்
வாமமுள்ள வீமனதி வாளிகளை யேதொடுத்து
தாமத மில்லாதச் சரங்களையே தானறுத்தான்
சீலமிக வேமிகுந்த தீரனதி சூரமணி
மாலனுமே பாணமதை மாரிபோ லேபொழிந்தான்
குந்திமைந்த னம்புகளைக் கூறுகூ ருக்கியுமே
சிந்தைமிக வேவெகுண்டு சேனைகளை மாய்த்தனனே
வாய்வாஸ் திரமும் வருணஸ் திரங்களையும்
தேய்வாஸ் திரங்களையும் செய்யமணி மாலனுமே
மந்த்ரோப தேச மதுசெய்தே விட்டனனே
வந்தபல பாண மதனையே தண்டாலே
அடித்தே யொடித்தனனே அஞ்சா மதவீமன்
துடித்தே மடியத் துரகமேற் சாடினனே
இந்த விதமா யிருவருமோர் சாமமட்டும்
விந்தையொடு போர்புரிந்தார் விண்ணடுங்க மண்ணடுங்க
சல்தியாய் வீமன் தனைமடிக்க வேண்டுமென்று
வல்லமையி லேசிறந்த மாயாஸ் திரம்விடுத்தான்
நாராய ணஸ்திரத்தால் நல்லமத வீமனுமே
கூறுகூ ருக்கியுமே கொக்கரித்தே யந்நேரம்
நேசமுள்ள கிருஷ்ண னுமே நேர்மையுட னேதிவைத்த
பாசுபத மந்திரத்தைப் பாங்காக வேஜெபித்து

வல்லருத்தி ராஸ்திரத்தை மன்னவனு மேதொடுத்தான்
வில்லி லிருந்து வெளிப்பட்டே வேகமொடு
அந்தரமீ தேகி யநேக வுருவாகி
வந்துமே செய்ய மணிமாலன் சென்னிதனை
வெட்டியே பூவில் விழச்செய்து பாலாழி
கிட்டியே நீராடிக் கீர்த்தியுள்ள வீமனிடம்
வந்துமே சேர்ந்ததுவே மன்னவனு மீதறிந்து
சிந்தைமிக வேகனிந்து செய்யவெற்றிச் சங்கமதை
செம்பவள வாயினில்வைத் தேவிண்ணோ ரஞ்சிடவே
பம்பம்ப மென்றொலித்தான் பாரமத வீமனுமே
இனியார் வருவா ரெனத்திரும்பி யேபார்த்து
தனியாக நின்றிருந்தான் சல்லாப மாகவுமே

---

தருமர் முதலியோர் கடோர்க்கயன் தேரிலேறிச்
சென்று வீமசேனனைக்கண்டு புத்திமதி கூறுதல்

தக்க புகழுடைய தர்மருமே யந்நேரம்
பக்கமதில் வீற்றிருந்த பாரமத வீமனையே
காணாது சென்றதற்குக் காரணங்க ளொன்றுமனந்
தோணும லுந்திகைத்துச் சோகமுட னேயிருந்தார்
சட்டமுட னேரோம சன்மருமே யவ்வேளை
திட்ட மாய்ஞான திருஷ்டியா லேதெரிந்து
சென்ற விடந்தனையும் சேனைகளைக் கொன்றவையும்
நன்று யெடுத்தே நவின்றார் முனிவருமே
துய்ய தருமருமே சோர்ந்தே யிடும்பிமகன்
செய்ய கடோற்கயனைச் சிந்தையிலே தானினைந்தார்
தந்தை நினைந்ததுவைத் தானறிந்து தேரேறி
வந்துமே செம்பொன் மலரடியி லேபணிந்தான்

வாரி யெடுத்து மகனையா சீர்வதித்து
தீரமொடு வீமனிட செய்கைதனை யேபுகன்று
அந்த மிகுந்த அளகா புரிக்குனது
தந்தைமுன்னே யெங்களையே தானேற்றித் தேர்மீது
கொண்டுவிட வேண்டுமென்று கூறவே சம்மதித்தான்
கெண்டைவிழிப் பாஞ்சாலி கீர்த்திமிகு ரெட்டையரும்
சீலன் தருமருமே தேர்மீதி லேறினரே
பாலன் கடோற்கயனும் பாங்காக விண்வழியே
செல்லவிட்டே சென்றனரே செய்ய குபேரபுரி
வல்லபமாய் மேல்கோட்டை வாயிலிலே நின்றிருந்த
வீமனுமே கண்டு விரைவாய்வந் தண்ணரிட
வாமமுள்ள பாத மதனையே போற்றிநின்றான்
பாலன் கடோற்கயனும் பாஞ்சாலி ரெட்டையரும்
சீலமுள்ள வீமனிட சேவடியி லேபணிந்தார்
எல்லோர்க்கு மாசி யியம்பியே நின்றனனே
வல்ல தருமர் மதவீம னைப்பார்த்து
தம்பிநீ யென்னோடோர் சங்கதியுஞ் சொல்லாது
கொம்பனையாள் சொற்கேட்டுக் கொண்டே குபேரபுரி
வந்தோர் மலராலே மாய்த்துவிட்டாய் சேனைகளை
உந்தனுக்கு யீதழகோ ஓகோகோ பாவமல்லோ
மண்ணோ ருடன்பகைத்து வந்தோம் வனந்தனிலே
விண்ணோ ருடன்பகைத்தால் வேறெங்கே சென்றிடுவோம்
என்மொழியைக் கேளா திருந்தாலுன் தம்பியர்கள்
உன்மொழியைக் கேட்பாரோ உத்தமனே நீதெரிவாய்
மந்தார புஷ்ப மதைவேண்டி முன்னொருநாள்
வந்துவெகு சேனைகளை மாய்த்தனை நீ யல்லாது
இன்றோர் மலரை யெடுக்கவந்தெல் லோர்களையும்
கொன்றேயே யுந்தனிட கொள்கைபெரு மோசமல்லோ

வல்லகு பேரனிந்த வாறறிந்தே சேனையொடு
வில்லெடுத்தே வந்தெதிர்த்தால் வீமா நீ யென்னசெய்வாய்
என்றுபல நீதிகளை யின்பமுட னேயெடுத்து
நன்று யுரைத்தனரந் நாழிகையி லேதருமர்

குபேரன் தருமர் முதலானவர்களுக்கு
விருந்தளித் தனுப்புதல்

தப்பியே சென்றொருவன் தானேகு பேரனிடம்
செப்பினன் நான்குவகைச் சேனைகளு மாண்டவற்றை
கேட்டுமே கோபமொடு கெர்ச்சித்தே சேனைகளை
கூட்டியே போர்க்கோலங் கொண்டுமே தேரேறி
மண்டலத்தின் மீதிருந்து வாழும் நரன்நமது
விண்டலத்தி லேபுகுந்து வீரமொடு போர்பொருதி
சேனா பதிகளையும் சேனைகளை யும்மடக்கி
தானாக நின்றொருவன் சங்கரித்தே வெற்றிபெற்றால்
என்ன பெருமை யிருக்குநமக் கென்றுவந்த
மன்னவனை யின்று மடிப்பே னெனப்புகன்று
வில்லேந்திச் சேனைகளை வீரமொடு முன்னடத்தி
வல்லவனு மேல்கோட்டை வாயிலிலே வந்தனனே
துய்ய தருமர் துரிதமா யோடிவந்து
செய்ய குபேரன் திருவடியி லேபணிந்து
அந்த மிகுந்த அளகா புரிக்கிறைவா
சந்திரனைச் சென்னிவைத்த சங்கரநண் பாசுகுண
தனத்தில் மிகுந்த தனதனே புண்ணியனே
மனத்திலே கொண்ட வருத்தமதை நீக்கிடுவீர்
சிறியோனிங் கோடிவந்து செய்த பிழையதனை
அறிவுடையோ னேபொறுத்து ஆண்டருள்செய் வீரெனவே
துதித்தேமுன் னின்றனரே துய்ய தருமரையே
மதித்தே குபேரன் மனமிகவு மேமகிழ்ந்து

ஆசி பலகூறி யருகிருத்தி யேபுகழ்ந்து
மாசில்லா மன்னவரை வாகாக வேபழைத்து
அந்த மிருந்த அளகா புரிதனக்கே
வந்தே கனக மயமாக வேதுலங்கும்
விந்தையுள்ள மண்டபங்கள் வீதிகளை யுங்காட்டி
சிந்தைமிக வேமகிழச் செய்தே குபேரனுமே
இல்ல மதனி லிருத்தியெல் லோர்களையும்
உல்லாச மாக உபசரித்தே மேன்மையொடு
தக்க விருந்துசெய்து தாம்பூல முண்டபின்பு
பக்குவமாய் வேண பரிசலித்து யாவருக்கும்
சட்டமுட னேபாரி ஜாதமலர் வேண்டியதோர்
மட்டுந் துரோபதைக்கு வாஞ்சையுட னேகொடுத்து
மண்ணுலகு சென்று வருவீ ரெனப்புகன்று
விண்ணுலகில் வாழ்வோன் விடைவாங்கிச் சென்றனனே
வல்ல கடோற்கயனின் மாரதத்தின் மீதேறி
எல்லோரும் வந்தனரே இன்பமொடு கானகத்தில்
தந்தைகளை யேவணங்கித் தக்கோ னிடும்பிமகன்
சிந்தைமிக வேகனிந்து சென்றனனே தன்பதிக்கே
தருமமே யோருருவாய்த் தானே திரண்டிலங்கும்
தருமரும்வந் தேரோம சன்மரையே தான்வணங்கி
அங்கு நடந்த அதிசயத்தைத் தானுரைத்து
மங்களமாய்க் கானில் வசித்திருந்தா ரன்புடனே

தருமர்முதலியோரை அருச்சுனன்
வந்துகாணுதல்

பொன்னுலகி லேவசிக்கும் புண்ணியவா னிந்திரன்முன்
நன்னயமாய்ப் பார்த்தன் நவிலுவா னன்புடனே
தந்தையே நற்பரத சாஸ்திரத்தை முற்றிலுமே
சிந்தை தனையே செலுத்தியே கற்றுவிட்டேன்

விந்தையுள்ள கானகத்தை விட்டே தவம்புரிய
வந்து வெகுகால மானதினு லண்ணருமே
ஏக்கமுட னேயிருப்பா ரெந்தனையே பார்த்திடவே
பாக்கியனே யின்று தடை பண்ணும லின்பமொடு
விடையீய்ந் தெனையனுப்பு வீரெனவே தாள்பணிந்தான்
சடையாம லேமனதில் தான்கேட்டு வாசவனும்
சட்டமுட னன்னேரம் சாரதியைத் தானோக்கி
கட்டழக னேநீ கனகமதி னுலமைத்த
நற்றே ரதனையிந்த நாழிகையி லந்தமொடு
சற்றே மனதுவைத்துத் தானே யலங்கரித்து
கொண்டுவரு வாயெனவே கூறவே கேட்டவனும்
அண்டருமே கண்டு அதிசயிக்கத் தேரதனை
சிங்காரஞ் செய்தே சிறப்பாகக் கொண்டுவந்தான்
மங்கா மணிமுடியான் வாசவனு மேமகிழ்ந்தான்
மன்னன் விசயனுமே மாளிகையி னுள்ளேகி
அன்னை புலோன்மிசையை யன்பாக வேவணங்கி
நன்னயஞ்சேர் செம்பொன் ரதமீதி லேறினனே
உன்னிதமாய் மாதலியு மோட்டினன் வேகமொடு
அந்த மிருந்த அயிரா வதமீது
இந்திரனுந் தானேறி யேகினன் தேரோடு
அந்தரத்தில் துந்துமிக ளார்ப்பரிக்க விண்ணவரும்
சிந்தைமிக வேமகிழ்ந்து செய்யமலர் மாரிபெய்தார்
பாண்டவரு மேவாசம் பண்ணியே தானிருக்கும்
நீண்டதோர் கானகத்தில் நேர்மையொடு வந்தனரே
அருமை யுடனே யருச்சுனன்றேர் விட்டிறங்கி
தருமரையும் வீமனையும் சாஷ்டாங்க மாய்ப்பணிந்தான்
கண்டே தருமர் கவலைவிடுத் தேகனிவு
கொண்டாசி யின்பமொடு கூறியே தானிருந்தார்

வாசவனும் பூமீது வந்தே யிறங்கினனே
நேசமுள்ள பாண்டவர்கள் நேர்மையுட னேதொழுதார்
இந்திரனு மாசி யியம்பியெல் லோர்களுக்கும்,
அந்த முடனே யருகி லமரவைத்து
வில்லிலே வல்ல விசயன் பெருமைகளை
சொல்லியே தான்புகழ்ந்து சுந்தரஞ்சே ரிந்திரனும்
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவ ரிடத்தினிலே பாங்காய் விடைவாங்கி
தக்கோர் புகழ்ரோம சன்மரையே தானழைத்து
திக்கோர் புகழ்ந்திடவே தேர்மீ தினிலேறி
இந்திரனு மாதலியை எச்சரித்தா னப்பொழுது
அந்தரத்தில் நற்றே ரதனையே விட்டனனே
சிங்கார மாகவுமே சென்றுமே பொன்னுலகு
சிங்கா தனமீது தேவேந் திரனிருந்தான்
சாந்தம் பொறுமை தயையீகை வாய்ந்திலங்கும்
ஏந்தல் தரும ரிடத்திலே பற்குணனும்
நற்றவஞ்செய் வேதமுனி நாதருப தேசமது
பெற்றுமே சென்று பெருந்தவங்கள் செய்தமுதல்
சட்டமுட னேபரத சாஸ்திரத்தைக் கற்றுவனம்
திட்டமொடு வந்தவரை செப்பியே தானிருந்தான்
எல்லோருங் கேட்டு இதயமிக வேகனிந்து
சல்லாப மாகவுமே தானிருந்தார் கானமதில்

வீமசேனனை
மலைப்பாம்பு பிடித்துக்கொள்ளுதல்

வீர முடையமத வீமனுமே யோர்நாளில்
தீரமுட னேவேட்டை செய்திடவே வேண்டுமென்று
தரும ரிடத்திலொரு சங்கதியுஞ் சொல்லாது
மரும முடனெழுந்து வாகுடனே தண்டேந்தி

கானகத்தை நோக்கி கரடிபன்றி வேங்கையொடு
மானினத்தைக் கொன்று வரும்பொழுதி லோர்மலையின்
சாரலினி லேயிருந்து சண்டனுங்கண் டஞ்சிடவே
பாரவிட முள்ளவொரு பாம்பான தோடிவந்து
பக்குவமாய் வீமனையே பாதாதி கேசம்வரை
சொக்கிமனம் வாடிடவே சுற்றியே கொண்டதுவே
குந்திமைந்த னுந்திமிரிக் கொண்டுசெல்ல வேண்டுமென்று
சிந்தையிலே தானினைந்து சீக்கிரமாய் மூச்சடக்கி
பார்த்தானே யொன்றும் பலிக்காம லேதேகம்
வேர்த்தானே யின்று விதிமுடிந்த தென்றேங்கி
மாற்றலரை முன்புவென்ற வல்லமையைத் தானினைந்து
ஏற்ற பதினா யிரம்யானை யின்பலத்தைத்
தோற்று மனதிலொன்றுந் தோன்றாம லேகளைத்து
வேற்றுமுக மாகியுமே மேனிமிக வேயிளைத்து
நயமொழியி னாலுமிந்த நாகரா ஜேந்த்ரனிடம்
இயல்பாக வேமொழிந்து எந்தவித மாகவுமே
தப்புவதே மெத்தச் சரியெனவே தானினைந்து
அப்பொழுதி லேவீம னன்பாக வேபுகல்வான்
நன்னயஞ்சேர் போகேந்த்ரா நாகேந்த்ரா யிவ்வுலகில்
மன்னவன்யான் மெத்தவலு வாளியெனப் பேராகி
எத்தனையோ பேரைவென்றே னிக்கான கந்தனிலே
இத்ததியி லுந்த னிடத்திலகப் பட்டுவிட்டேன்
இத்தேக மோவனித்ய மென்றைக் கிருந்தாலும்
நித்தியமா மென்று நினைப்பதினா லென்னபலன்
நாய்கள் பருந்து நரியெறும்போ டுங்கழுகு
பேய்க ளருந்தும் பெரிய புழுக்கூடு
இந்த வுடலு மிரையாக வேயுமக்கு
எந்தனுக்கு லாபமல்லோ என்மீதி லேமகிழ்ந்து

உத்தமனே நீர்யாரோ உம்பருஞ்செய் தீங்கிதுவோ
சத்துருக்கள் செய்த சதியோ எனைப்பிடிக்க
உங்களுக்கு மெங்களுக்கு முற்றபூர் வப்பகையோ
துங்கமிகு நாகேந்த்ரா சொல்லுவீ ரென்றனனே
வீரமிக வேயுடைய வீமனுமே தானுரைத்த
சாரமதை நாகமது தான்கேட்டு மேசீறி
இத்ததியி லெந்த னிடத்திலகப் பட்டிறப்போன்
மெத்தப் பரிதாப மேன்படுகின் றாய்நீயே
எந்தனையுந் தானேயா ரென்றுகேட் கத்துணிந்தாய்
உந்தன் வரலாற்றை யோதுவா யென்றதுவே
அந்த மிகுவீம னறைகுவான் நாகேந்த்ரா
சந்த்ர குலத்துதித்த சல்லாப னும்பாண்டு
புத்திரரி லேதரும பூபதிக்கு நேரிளைய
மெத்த வலுவுடைய வீமன்யான் வாயுமிசை
பெற்றோ னெனத்தானே பேசிடுவார் மண்டலத்தோர்
நற்றவத்தி லேசிறந்த நாகேந்த்ரா வென்றனனே
வல்லமைசேர் நாக மதுமிகவு மேசினந்து
நல்லதடா வீமா நவிலு மொழிகேளாய்
சீலமொடு மருந்தைத் தேடியே சென்றதுவும்
காலி லகப்பட்ட கதைபோ லுனைப்பிடித்தேன்
உன்தந்தை வாயுவுந்தா னோர்நாளில் மேருவிலே
என்தந்தை சேட னிடத்திலே போர்புரிந்து
மானபங்கஞ் செய்தனனே மர்மந் தெரியேனோ
வானுலகி லேவசிக்கும் வாசவனுக் கேயுரிய
காண்டா வனமெரித்த காலமதி லேவிஜயன்
காண்டீபந் தன்னிற் கணைபூட்டி யேவிடுத்து
தக்கோனுந் தக்ஷகன்பெண் சாதிதனை யேமடித்து
பக்குவமா யன்னவரின் பாலனஸ்வ சேனனிட

வாலறுத்து விட்ட தன்றி மற்றுமுள்ள பந்துகளை
சீலமுட னக்கினிக்குச் செய்தா னிரையாக
இந்தப் பகைக ளிருக்கவே யுந்தனையே
எந்தவித மாய்விடுவே னிப்போ விழுங்கிடுவேன்
வில்லிலே வல்ல விஜய னிருக்குமிடம்
உல்லாச மாயேகி யோர்நொடியி லன்னவனை
கொன்று புசிப்பேன் கொடியவி ரோதிதனை
என்றுமே நாக மியம்பினதை வீமனுமே
கேட்டு விதியுங் கிழிந்ததென வேநினைந்து
வாட்டமிக வேயடைந்து மாறுபட்டு மேமனது
பஞ்சபூ தங்கலங்கி பார்வையுமே பஞ்சடைந்து
துஞ்சினோன் போலவுமே துக்கமுட னேயிருந்தான்

நகுஷனுன நாகத்திடமிருந்து வீமனைத் தருமர்
விடுவித்துக் கொண்டு செல்லுதல்

பொறுமை யுடையதர்ம பூபதியு மந்நேரம்
அருமையுள வீம னருகினிலே காணுது
மங்களமாய்ப் பக்க மதிலிருந்த மாமறையோர்
தங்களையே பார்த்தேயென் தம்பியெங்கே யென்றனரே
மாமறையோர் கேட்டு மதவீம ராஜனுமே
தாமதஞ்செய் யாமலுமே தண்டேந்திக் கானகத்தை
நாடினு ரென்றே நவின்றமொழி யைக்கேட்டு
வாடியே மெய்சோர்ந்து மன்னவனு மேயெழுந்து
எல்லோருங் கூடிவர எங்கெங்குந் தான்தேடி
வல்லோ னடிச்சுவட்டை வாகுடனே பார்த்தேகி
தக்கமத வீமாயென் தம்பியென வேகூவி
பக்குவமாய்த் தானழைத்தார் பாரமலை போலரவு
சுற்றிமத வீமனுமே சோர்ந்தே யிருப்பதுவை

கொற்றவனுங் கண்டமுது கொண்டே யருகிலுற்று
பாரமலை போலிருக்கும் பாம்பதனை யேபார்த்து
வீரமுள்ள நாகேந்த்ரா வீமனையே நீபிடித்து
தின்றாலு முன்பசியுந் தீராதே சிற்றுருவை
கொன்றதினு லென்னபலன் கூறுவே னின்னமொன்று
நன்னயமாய் விட்டிடிலோ நாடோறு மேயுனக்கு
மன்னன் கொடிய வனவிலங்கைத் தான்வதைத்து
வேண்டியதோர் மட்டும் விருந்தளித்து வந்திடுவான்
நீண்டதோர் கானகத்தில் நேர்மையுட னேவசித்து
கால மதனைக் கடத்திவரு வாயெனவே
சீலமுட னேதருமர் செப்பினு ரப்பொழுது
கண்டுமே நாகங் கலகலென வேநகைத்துக்
கொண்டுமிக வேசீறிக் கொற்றவனை யேபார்த்து
திடமாக வென்பசிக்குச் சிக்கியதோர் தேகமதை
விடுவேனே வென்றே விளம்பினதைக் கேட்டுநொந்து
வீரமுள்ள நாகேந்த்ரா விட்டு விடாவிடிலோ
தீரமுட னெந்தனையுந் தின்றுபசி தீருமென்று
முன்னமே சென்றனரே மூர்க்கமுள்ள நாகமது
மன்ன னுரைத்த வசனமதை யேகேட்டு
சிந்தைமிக நொந்துருகுந் தேர்வேந்தே நீயாரு
எந்த னிடத்தி லிருப்பவனு முந்தனுக்கு
என்ன முறைவேண்டு மின்பமுட னேயெடுத்து
நன்னயமாய்க் கூறுமென்று நாகமது கூறிடவே
கண்டே தருமர் கவலைமுற்று மேவிடுத்து
மண்டலத்தைத் தாங்குகின்ற வல்லமைசேர் சேடனிட
குலத்திற் பிறந்தோரே கூறுவேன் கேட்டருள்வீர்
நலத்தில் மிகுந்தஜெக நாதனிட சென்னியுரை
வாமமுள்ள சந்த்ரகுல வாஞன பாண்டுமைந்தர்

நேமமுள்ள பாண்டவரில் நேர்மையொடு முன்பிறந்தோன்
என்னைத் தரும னெனவே புகல்வார்கள்
உன்னிதமாய் நீர்பிடித்த உத்தமனு மேயிளையோன்
வீம னெனவே விளம்புவார் மேதினியோர்
வாமமிக வேமிகுந்த வல்லரவே மற்றவரும்
நன்னயஞ்சேர் பார்த்தன் நகுலன் சகாதேவன்
என்னுந் திருநாம மிம்மூவ ருக்குமுண்டு
பங்காளி யாகியதோர் பாவிதுரி யோதனனும்
எங்களையே தானழைத்து இஷ்டமொடு சூதாடி
நாடு நகரமொடு நான்குவகைச் சேனையையும்
சூடும் பணிகளையுந் துங்கமுட னேகெலித்து
பாஞ்சாலன் வேணதவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சாலி யைச்சபையிற் பற்றித் துயிலுறிந்தான்
வில்லா சிரியரொடு வேந்தருமே தான்கூடி
உல்லாச மாக உரைத்தபடி கானகத்தில் .
வந்தே வசித்திருந்தோம் வல்வீம னைப்பிடித்தீர்
எந்தன் வரலா றிதுதா னெனப்புகன்றார்
பாரமலை நாகமது பாங்காக வேகேட்டு
வீர மதனைவிட்டு விம்மியே தானழுது
நலத்துடைய வாதரும ராஜனே செய்யமதி
குலத்தி லவதரித்தோன் கோமா னெழிலாயு
நற்றவத்தி லுற்ற நகுஷனென் நாமமது
கொற்றவனே யானோர் குடைநிழலி லேயிருந்து
ஆண்டுவந்து மேநூறு அஸ்வமேத யாகமது
பாண்டுமைந்தா செய்துவெகு பாக்கியம்பெற் றேசுகுண
அண்ட ருலக மதற்கரச னாயிருந்து
எண்டிசையோர் கொண்டாட இன்ப மனுபவித்தேன்
அற்ப மதியா லருள்சேர் குருமுனிவர்
சர்ப்பமாய்ப் போகச் சபித்தனரே யன்னவரை

வணங்கியே யிச்சாப மானதென்று மாறுமென்றேன்
இணங்கியே கும்பமுனி எந்தன் முகம்பார்த்து
தாரணியி லுள்ளமலைச் சாரலினி லேவசித்து
வீரம் பொருந்தி விலங்குகளை நீயருந்தி
கால மதனைக் கடத்துவா யுன்குலத்தில்
சீலமுள்ள பாண்டவர்கள் ஜெனித்துமே பங்காளி
வஞ்சன் துரியன் வசத்திலர சாட்சிதனை
பஞ்சவருஞ் சூதாற் பறிகொடுத்தே கானகத்தில்
வந்திருக்கும் போதினிலே வல்லமத வீமனையே
விந்தையுட னேபிடிப்பாய் மேன்மை மிகுதருமர்
தேடியே கானகத்திற் சிந்தைமிக வேவருந்தி
ஓடிவரும் போதினிலே உந்தனையே கண்டவரும்
இனிய வசன மெடுத்துரைத்தே தம்பிதனை
கனிவாய் விடுமெனவே காவலனு மேபுகல்வான்
பொறுமை மிகுதரும பூபதியின் நாவாலே
தருமசந் தேகமதைத் தான்கேட்டா யாமானல்
உத்தமனே முன்போ லுருவாகு மென்றுமுனி
சித்தமிக வேமகிழ்ந்து செப்பின ரானதினல்
விந்தையொடு யான்கேட்கு மேன்மை மிகுதரும
சந்தேகந் தன்னையுமே சாற்றிடுவா யாமானல்
வீமன் றனையே விடுத்தேயென் முன்னுருவை
வாமமொடு பெற்றேயான் வானுலுகு சென்றிடுவேன்
என்றே புகன்றனனே இம்மொழிகேட் டேதருமர்
நன்றியுள்ள மன்னவனே நானென்று மேயறியேன்
செய்ய திருமாலின் திருவருளாற் கற்றமட்டும்
ஐயனே கூறிடுவே னன்புடனே கேளுமென்ருர்
நன்னயமாய்த் தானே நகுஷனுமே கேட்டதற்கு
மன்னன் தருமருமே வாகாய் விடைகொடுத்தார்
வீமன் றனையே விடுத்துமுன் போலுருவை

நேமமுட னேயெடுத்து நேர்மையுள்ள பாண்டவர்க்கு
ஆசி பலகூறி யருகினிலே தானிருத்தி
நேசமுட னங்குபல நீதிகளை யேபுகன்று
மைந்தா மதவீமா வல்லரவா யானிருந்தேன்
அந்தப் பலமு மடைவதுனை யென்றுரைத்து
பூமான் நகுஷனுமே பொன்னுலகஞ் சென்றனனே
சீமான் றருமருமே சிந்தைமிக வேமகிழ்ந்து
சட்டமுட னேநான்கு தம்பியரை யுங்கூட்டி
மட்டில்லா வந்தணர்கள் வாழுமிடம் வந்தமர்ந்து
வீமனுக்கு வந்த விபத்தையெடுத் தேகூறி
வாமமுட னெல்லோரும் வாழ்ந்தார் வனந்தனிலே

பாண்டவர் மனதை
மார்க்கண்டேயமுனிவர் தேற்றிச்செல்லுதல்

உத்தமராம் பாண்டவரு முளமகிழ வேவருடம்
பத்து முடிந்து பதினொன்றும் வந்ததுவே
மன்னவரும் வேதியரும் மாகா மியவனத்தில்
நன்னயமாய் வாழ்ந்திருக்கும் நாளில்மார்க் கண்டமுனி
மாதவத்தி லேசிறந்த மாமுனிவோர் சூழ்ந்துவர
நீதமுள்ள பாண்டவர்முன் நேர்மையொடு வந்தனரே
வல்லமைசேர் பாண்ட வருமெதிரே சென்றுகண்டு
எல்லோரை யும்பணிந்து இன்பமுட னேயழைத்து
வந்தமுனி வோர்களுக்கு வாகாக ஆசனங்கள்
தந்தமரச் செய்தனரே சட்டமாய் மாமுனிவோர்
ஆசி பலகூறி யருகினிலே தானிருத்தி
நேசமுட னேபுகழ்ந்தார் நீணிலத்தோர் கொண்டாட
பொறுமை மிகுதருமபூபதிமார்க் கண்டரையே
அருமையுட னேபார்த் தறைகுவார் யாதெனிலோ
ஆசை யுடனே அரனைக் கடையூரில்

பூசை மிகவே புரிந்திடவே யக்காலம்
சங்கரனு மேமறலி தன்னையுதைத் தேமடித்து
இங்கிதமாய்ப் பூவினிலே என்றும் பதினாறாய்
இருக்கவரம் பெற்றாரே எங்களுக்கு வந்தவிதி
பெருக்கமுள்ள நாடிழந்து பித்தரைப்போற் கானகத்தில்
வசித்திருக்க வாச்சுதென மாமுனிவோ ருங்கேட்டு
நசிப்பார் பகைவரெல்லாம் நாரா யணரருளால்
என்றே புகன்றனரே இம்மொழிகேட் டேதருமர்
நன்றாக வேபணிந்து நம்ப னடியாரே
சட்டமாய் வேண ஜலப்பிரள யத்தையுமே
திட்டமாய்க் கண்டறிந்த செய்ய முனிநாதா
எல்லாந் தெரிந்தவரே இன்பமுட னேயெனக்கு
சல்லாப மாய்முனிவர் தங்கள் சரிதையையும்
மண்ணாண்டு கொண்டிருந்த மன்னர் சரிதையையும்
புண்ணியரே யின்று புகலுமென வேபுகன்றார்
மாதவத்தி லேசிறந்த மார்க்கண்ட மாமுனிவர்
சீத மதிவதனச் செம்மல் தருமரிடம்
அயராஜன் தர்க்கமுனி அத்திரிம காமுனிவர்
நயவான் மனுராஜன் நல்லபரி சித்துமன்னன்
சீல மிகுமிந் திரதூய்மன் செய்யகலி
கால முறைமையொடு கௌசிகன்ரா மன் றுந்து
மார மகாராஜன் வாம ஜலனலன்கு
மார சுவாமியிந்த வள்ளல் களின்சரிதை
தக்க பிரபஞ் சலயோற் பவந்தனையும்
பக்குவமாய்க் கூறியுமே பாண்டோ ரிடத்தினிலே
மார்க்கண்ட மாமுனிவர் வாகாய் விடைவாங்கி
தீர்க்கமுட னேவாசஞ் செய்யுமிடஞ் சென்றனரே
பொறுமை மிகுதரும பூபதியு மற்றவரும்
அருமையுட னேகேட் டானந்த மாகியுமே

கந்தமூ லங்கள் கனிகளையு மேபருகி
விந்தையுட னெல்லோரும் வீற்றிருந்தா ரன்புடனே

பாண்டவரை அவமானப் படுத்தவேண்டி
துரியோதனுதியர் புறப்படுதல்

பாண்டவர்கள் தான்வசிக்கும் பாங்கான கானகத்தில்
ஆண்டவனைச் சிந்தை யதனிலெண்ணி யோர்மறையோன்
வந்துமே பஞ்ச வரைக்கண்டா சீர்வதித்து
சிந்தைமிக நைந்துருகிச் செம்மலே யுங்களுக்கு
இந்த விதிவருமா என்றே புகன்றுபல
விந்தை மொழிபேசி விடைவாங்கி வேகமொடு
கண்ணில்லான் முன்புசென்று கானகத்திற் பஞ்சவரும்
புண்ணுகி யேமனது போஜனமு மில்லாது
காற்றுமழை வெய்யில் களிலே திரிந்துழன்று
வேற்றுமுக மாகி மேனியுமே தான்கருகி
இருக்கின்ருு ரென்று இயம்பியே சென்றனனே
உருக்கமிக வேமனதி லுண்டாகி யந்தகனும்
பாண்டரச னேடுமுன்பு பாரில்நா மில்லாது
மாண்டிருந்தா லிந்தமொழி வாராதே நம்செவிக்கு
என்றே மனமுடைந்து என்னசெய்கு வோமெனவே
குன்றிமெய் சோர்ந்து குருடனுமே யந்நேரம்
வல்ல விதுர மகாராஜ னையழைத்து
சொல்லினுன் சங்கதியைத் துங்கனுமே தான்கேட்டு
அண்ணுவே கான மதனிலே வீற்றிருந்து
புண்ணியதீர்த் தங்களிலும் பூமான்கள் நீராடி
மாதவத்தி லேசிறந்த மாமுனிவ ராசிபெற்று
பூதலத்தோ ரெல்லாம் புகழவிருக் கின்ருர்கள்
நேசனே பார்த்தனுமே நீலகண்ட னேடெதிர்த்து
பாசுப தாஸ்திரத்தைப் பாங்காக வேவாங்கி

பொன்னுலகு சென்று புனைந்தே கிரீடமது
நன்னயமாய் முக்கோடி ராக்ஷதரை யேமடித்து
விண்ணோர்க் குதவிசெய்து மேன்மைமிக வேயடைந்து
மண்ணுலகு வந்தனனே வல்லமைசேர் காண்டீபன்
அந்த மிகுந்த அளகா புரிநகர்க்கு
மந்தார புஷ்பமதை வேண்டியே வீமனுமே
சென்றே குபேரனிட சேனு பதிகளையும்
கொன்றுமே தண்டாலே கோமானு மேகனிந்து
மந்தார மாமலரை வாங்கி மறுபடியும்
விந்தையுள்ள வோர்மலரால் வீரமொடு போர்புரிந்து
வல்ல குபேரனுற வாகவே செய்துவெகு
சல்லாப மாகவுமே சன்மானம் பெற்றுவந்தான்
செய்ய நகுலன் திடவான் மதியூகி
துய்ய சகாதேவன் சொல்லுவான் முக்காலம்
வல்லமைசேர் பாண்டவரும் மந்திரத்தாற் கட்டுண்ட
நல்லரவைப் போலடங்கி நாட்டமொடு கானகத்தில்
இருக்கின்றார் மன்னவனே இன்னுமே யோர்வருடம்
பெருக்க முடன்போக்கி பெரியோ ருரைப்படியே
உருமாறி யேயிருந்து உத்தமரு மேகனிவாய்
வருவார்கள் மெத்த வருத்தமே னென்றனனே
கண்ணில்லான் கேட்டே கவலைமிக வுண்டாகி
புண்ணாகி யேமனது பூமானு மேபுகல்வான்
தம்பியே பாண்டவருஞ் சல்லாப மாகவந்து
அம்புவியைக் கேட்டா லரவக் கொடியோனும்
இல்லையெனச் சொல்வானே என்னநான் செய்திடுவேன்
வல்லமைசேர் பாண்டவரும் வாகான நூற்றுவரை
சட்டமாய் முன்னே சபையிலே கோபமொடு
இட்டசப தப்படியே யேமபுரி யேகிடவே
துஞ்சிடவே செய்வாரே துங்கமுள்ள நூற்றுவர்க்கு

அஞ்சாரே பஞ்சவரு மையையோ யென்னசெய்வேன்
வல்லமைக ளெந்தனிட மக்களுக்குக் கொஞ்சமுமே
இல்லையே பாண்டவரை எந்தவித மாய்ச்செயிப்பார்
என்றே விதுர னிடமே நவின்றிருந்தான்
கன்றி மனமுடைந்து கண்ணில்லா னப்பொழுது
விதுரனுமே யண்ணன் விசன மதையாற்றி
சதிராக நன்மொழிகள் சாற்றியே தானிருந்தான்
இங்கிவர்கள் பேசினதை யெல்லா மறிந்தொருவன்
தங்காது வேகமொடு தானே நடந்துசென்று
மன்னன் துரியனிட மாகவே தானுரைத்தான்
அன்னவனுங் கேட்டு அருகினிலே வீற்றிருந்த
வல்லகரு ணன்சகுனி மாமன்றுச் சாதனனை
சல்லாப மாகவுமே தானழைத்து வந்தேயோர்
இடத்திலமர்ந் தேயிருந்து இம்மூவ ரைப்பார்த்து
அடத்துடனே சொல்வா னரவக் கொடிவேந்தன்
காட்டிலுள்ள பாண்டோர் களினிடத்தி லேவிதுரன்
நாட்டைவிட்டுச் சென்றிருப்பான் நாதியில்லாப் பஞ்சவரும்
கண்டு விதுரனிரு காலினிலு மேவீழ்ந்து
தெண்டனிட்டே கஷ்டமதைச் செப்பி யழுதிருப்பார்
எந்தை யிடத்தினிலே இன்பமுட னேயோடி
வந்துமே பாண்டவர்கள் மாதவத்தி லேசிறந்து
வல்லமையும் வேண வரத்தையும்பெற் றேயவர்கள்
சல்லாப மாகவுமே தானிருக்கின் றாரெனவே
பொய்களையே நன்றாய்ப் பொருதியே வேந்தனிடம்
மெய்போல வேபுகட்டி விட்டா னதைக்கேட்டு
பஞ்சவரு மெத்தப் பலசாலி போலவுமே
நெஞ்சினிலே தானினைந்து நேர்மையுள்ள நூற்றுவர்க்கு
பலமில்லை யென்று பகர்ந்தே சலித்தனராம்
நலமாகத் தந்தையுமே நம்முடைய பிள்ளைகளும்

பஞ்சவர்க்கு மேலே பலமுடையோ ராமெனவே
நெஞ்சினிலே தானே நினைந்திடவே செய்வதற்கு
என்ன வுபாயமுண்டு இன்பமுட னேயெடுத்து
மன்னரே கூறுமென்றான் வஞ்சன் துரியனுமே
வல்ல கருணனுமே வாகாக வேகேட்டு
சொல்லுவேன் கேளுந் துரியோ தனவேந்தே
நாட்டி லிருந்தே நலமடைகின் றீரவர்கள்
காட்டி லிருந்தே கனிசருகு காய்களையே
தின்றே தினம்பசியுந் தீராம லேதேகம்
குன்றியுரு வங்குலைந்தார் கோமானே யின்னமொன்று
மங்களமாய் நாமுமற்ற வல்லமைசேர் தம்பியரும்
சிங்காரம் நன்றாகச் செய்துகொண்டு மேமகிழ்ந்து
அந்தப் புரத்து அரிவையர்க்கு வேணபணி
விந்தையொடு பூண்டுகொள்ள வேகூறி யின்பமொடு
மன்னு பலகார வர்க்கமொடு வேணபணி
நன்னயமா யெல்லோரும் நான்குவகைச் சேனையொடு
பாண்டவரு மெத்தப் பசிநோ யடைந்திருக்கும்
நீண்டதோர் கானகத்தில் நேர்மையுட னேயிறங்கி
பலவிதமு மான பலகாரங் கச்சாயம்
பலவிதங்க ளாகவுமே பாயாசம் பச்சடியும்
பலவிதவர்க் கன்னமுமே பாங்காக வேசமைத்து
நலமாக வுண்டிருந்து நற்களபம் பூசியுமே
வெற்றிலைகள் போட்டு விளையாடி நாமிருந்தால்
கொற்றவருங் கண்டுமனங் கூசியே மாண்டிடுவார்
பாஞ்சாலன் வேணதவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சாலி நம்முடைய பத்தினிக ளைப்பார்த்து
சிந்தைமிக நைந்துருகித் தேர்வேந்தே யும்மிடத்தில்
வந்தெனையே யாதரிப்பாய் மன்னு யெனப்புகல்வாள்

வணங்கா முடியோனே மாருமலென்வார்த்தை
இணங்கியே செய்திடிலோ எல்லாங்கை கூடிவரும்
என்று புகன்றனனே இம்மொழிகேட் டேதுரியன்
நன்றெனவே சம்மதித்து நல்லயுக்தி யென்றுமெச்சி
கொண்டுமே நால்வரொன்று கூடியே வேகமதாய்
மண்டபத்தில் வந்திருந்து வல்லமைகள் கூறியுமே
வெய்யோன் மறைந்தவுடன் வேந்தரொடு மற்றவரும்
செய்ய கிரகமதிற் சென்றுமே தான்றுயின்றூர்
வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்ததுரி யோதனனும்
கொஞ்சமுமே நித்திரைகள் கொள்ளா மலுமிருந்து
செங்கதிரோ னுங்கிழக்குத் திக்கி லுதித்தவுடன்
மங்களம தாயெழுந்து மாமன் சகுனியொடு
கண்ணில்லான் முன்புசென்று காவலனு மேபணிந்து
புண்ணியனே கானம் புகுந்துதம்பி மாருடனே
வேட்டைசெய்து பொல்லா விலங்குகளை மாய்த்துவிட்டு
நாட்டையடை வோமெனவே நன்னயம தாய்ப்பேசி
விடைவாங்கி வஞ்சனுமே வேகமுட னேநடந்து
கொடையாளன் றன்னையுமே கூட்டியே வந்தமர்ந்து
அந்தப் புரத்து அரிவைமா ரெல்லவர்க்கும்
சுந்தரஞ்சேர் தம்பியர்க்குந் தூதுவனை யேவிடுத்து
சிங்காரஞ் செய்துகொண்டு சீக்கிரமாய் வாருமென்று
இங்கிதமதாய்க் கூறி இங்குவா வென்றனனே
தூதுவனு மோடிவந்து சொல்லினு னெல்லவர்க்கும்
காதினிலே கேட்டுவலங் காரமே செய்துவந்தார்
நன்னயம தாய்த்துரியன் நான்குவகைச் சேனையொடு
மன்னவராம் பாண்டவரும் வாழும் வனம்நோக்கி
அந்தப் புரத்து அரிவையரெல் லோர்களையும்
விந்தையுட னேசிவிகை மீதேற்றி யேகனிந்து
பூலோக விந்திரனைப் போலரத மீதேறி

மேலோகத் தாரும் வியப்புறவே சென்றனனே
காடு மலையுங் கனத்தசுனை காணும்
மேடுபள்ள முந்தாண்டி வேந்தருமே யோர்வனத்தில்
தங்கி யிருந்து சமையல்செய் துண்டிரவை
மங்களமாய்ப் போக்கி மறுநா ளுதயமதில்
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவர்கள் வாழ்ந்திருக்கும் பார வனம்புகுந்தார்

### சித்திரசேனன் துரியோதனுதியரையும் அவர்கள் பத்தினிமார்களையும் கட்டிக்கொண்டு போகுதல்

அம்புவியை யாளு மரவக் கொடிவேந்தன்
தம்பிமார் தங்களொடு சல்லாப மாகவுமே
ப்ாண்டவருங் கண்டு பதைத்துமனம் புண்ணுகி
மாண்டிடுவா ரென்று நினை வாகியே கானகத்தில்
கும்புகும்பா கத்திரிந்து கொண்டுமே தானிருந்தார்
அம்புவிழி மாதரெல்லா மஞ்சாம லவ்வனத்தில்
பாஞ்சாலன் வேண தவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சாலி முன்னுடிப் பாங்கான மாமயில்போல்
அன்னமுங் கண்டு அதிசயிக்க வேநடந்து
உன்னிதமாய்த் தானே யுலாவியே தானிருந்தார்
பாண்டவரும் இன்னவரைப் பாராதார் போலவுமே
நீண்டதோர் கானகத்தில் நேர்மையுட னேயிருந்தார்
வஞ்சன் கபடன் வணங்கா முடியோனும்
அஞ்சாம லேதிரிந்து அங்கர்கோன் தன்னுடனே
செங்கதிரோன் றன்கிரணந் தேகமிசை பட்டுநொந்து
துங்கமுகம் வாடியொரு தோப்பினிலே கூடாரம்
அடித்துமே தங்கி அருமையுட னெல்லோரும்
வடித்தே பலவிதமாய் வர்க்கான்னஞ் செய்தருந்தி

பலவிதங்க ளான பலகாரம் பாயாசம்
பலவிதங்க ளான பழங்களையு மேபுசித்து
விளையாடி நாமிருக்க வேண்டுமென வெல்லோர்க்குங்
களையாம லேபுகன்று காவலவ னந்நேரம்
சந்தனனற் சோலையிலே சட்டமாய்க் கூடாரம்
விந்தையுடன் போட விடுத்தான் சிலபேரை
துரியனுரை போலவுமே தூதுவருந் தானேடி
விரிவான சோலையிலே வேகமுட னேநுழைந்தார்
கண்டுமே விண்ணிலுறை கந்தருவ சேனைசிலர்
வண்டரே யிங்கு வரலாகா தென்றனரே
மண்டலத்தில் வாழ்வோரும் வாகாக வேகேட்டு
விண்டலத்தோர் போற்றுமெங்கள் வேந்த னுரைபோல
இந்த விடந்தனிலே இன்று தங்கக் கூடாரம்
விந்தையுட னேபோட வேண்டியதால் நீங்களுமே
சென்றிடுவீ ரெங்கினுமே செல்லா திருந்திடிலோ
கொன்றிடுவா ருங்களிட கூட்டமதை யென்றனரே
கந்தருவர் கேட்டுக் கலகலென வேசிரித்து
விந்தை மொழிபுகன்று விட்டீரே யிப்பொழுது
வல்லசித்ர சேனனுமே மங்கைமார் தங்களொடு
சல்லாப மாகச் சலக்கிரீடை யாடியிங்கு
இருக்கின்று ரானதினு லிங்கிறங்க வொண்ணுது
பெருக்கமுடன் நீருரைத்த பேச்சறிந்தா ராமானுல்
உங்க ளரசனையு முங்களையு மோர்கணத்தில்
பங்கமே செய்திடுவார் பாங்கான வேறிடத்தில்
தங்கிடுவீர் யாங்களுமே சாற்றியதோர் சங்கதியை
உங்க ளரசனிட மோதுவீ ரென்றனரே
தூதுவரு மோடித் துரிய னிடந்தனிலே
ஓதியே நின்றனரே யொன்றுந் தவாமல்

வஞ்சகன் கபடன் வணங்கா முடிவேந்தன்
நெஞ்சினிலே கோபமொடு நீலவிழி தான்சிவந்து
தக்க பலமுடைய தம்பியரே சேனையொடு
இக்கணத்தில் வேகமொடு ஏகியே விண்ணவரைக்
கொன்றுவரு வீரெனவே கூறிடவே சம்மதித்து
சென்றுமே நான்குவகைச் சேனைகளை முன்னடத்தி
வல்லமையாய் வில்லை வளைத்தே வெகுசரத்தை
உல்லாச மாய்விடுத்தா ரும்பருங்கண் டேசினந்து
விந்தையொடு வில்வளைத்து வேண கணைவிடுத்து
வந்தபல பாண மதனைரெண்டு துண்டாக்கி
சிங்கார மானபல தேர்களையு மேயுடைத்து
துங்க முடைய துரகங் களைமடித்து
வல்லமையாய் வந்தெதிர்த்த மன்னவரின் மார்புகளை
சல்லடைபோ லாக்கியுமே தக்கபல சேனைகளை
கொன்றுமே விட்டனரே கொற்றவரு மேபயந்து
சென்று வணங்கித் திரியோ தனனிடத்தில்
சங்கதியைக் கூறியுமே தானே பனைமரம்போல்
அங்குமே நின்றிருந்தா ரந்தமொழி யைக்கேட்டு
வெஞ்சினமே கொண்டு விழிகள் மிகச்சிவந்து
நஞ்சுக் கொடியோனன் னாழிகையில் வேகமொடு
அங்கதே சாதிபதி யம்மான் சகுனிதனை
சிங்கார மாய்க்கூட்டிச் சேனைகளை முன்னடத்தி
வந்துமே வில்லை வளைத்துமே யெல்லோரும்
விந்தையுட னேககணைகள் விட்டுமே விண்ணவரை
சிந்தைமிக நொந்திடவே செய்தனரே யந்நேரம்
கந்தருவர் மெத்தக் கலங்கியே தானோடி
வல்லசித்ர சேனனிட மாகவே செப்பினரே
மெல்லியரைப் புட்ப விமானமதி லேற்றிவிட்டு

சிங்கார மானசித்ர சேனனுமே தேரேறி
அங்கர்கோன் முன்னடி யஞ்சாமல் வந்துநின்று
வில்லை வளைத்து வெகுபகழி யேவினனே
வல்ல கருணனுமே வந்த கணைகளையே
துண்டு துண்டாகத் துணித்தே சரத்தையுரங்
கொண்டமட்டு மேயிழுத்துக் கொற்றவனு மேவிடுத்து
வல்லசித்ர சேனனிட மார்பதனை யோர்நொடிக்குள்
சல்லடைபோ லாக்கிவிட்டான் சட்டமுட னேகருணன்
சித்திரசே னன்சினந்து தேவாஸ்ஸ திரங்களையே
மெத்தவிடுத் தேகருணன் மேனிதனை யேதுளைத்து
சாரதியைக் கொன்றுரதந் தன்னை யுடைத்தெறிந்தான்
பாரதிலே நின்றதுவைப் பார்த்தே விகர்ணனுமே
தன்னுடைய தேரதனைத் தான்கொடுத்தே சென்றனனே
மன்னன் நடத்தி வரும்வேளை சேற்றினிலே
சக்கரமு மேபதிந்து தான்வெளியே ருதிருக்க
தக்க கருணனுமே சஞ்சலம தாயிருந்தான்
சித்திரசே னன்வெகுண்டு சீக்கிரமாய் வந்தெதிர்த்த
மெத்த வலுவுடைய வேந்தர் களைமடக்கி
செய்ய ரதங்களையே சீக்கிரம தாயுடைத்து
கைகாலா டாதபடி கந்தருவன் செய்தனனே
சிந்தைமிக லேவெகுண்டு செய்ய சகுனியுமே
வந்தெதிர்த்தே பாணமதை மாரிபோ லேசொரிந்தான்
சிங்கம்போ லேபாய்ந்து சித்திரசே னன்சினந்து
துங்கமுள்ள தேரதனைத் தாண்டி யருகினிலே
வில்லைதே ராய்நிறுத்தி வேண பகழிவிட்டு
வல்லமையா யோடி வருங்கணையைத் துண்டாக்கி
திக்குகளெல் லாம்வெடிக்கத் தேவாஸ்ஸ திரங்களையே
பக்குவமா யேவினனே பாங்கா யவைகிளம்பி

வந்தே சகுனிதிட மார்பினிலே பட்டுருவ
சிந்தைமிக வேமயங்கித் தேரைவிட்டு மேகுதித்து
ஓட்டம் பிடித்தா னொருவரிடஞ் சொல்லாது
வாட்ட மடைந்தே வணங்கா முடிவேந்தன்
தம்பிமார் தங்களொடு சட்டமுட னேவேண
அம்புகளை விட்டனனே யஞ்சாம லந்நேரம்
கந்தருவ ராஜனுமே கண்டுவெகு கோபமுற்று
வந்த கணையையெல்லாம் வாளிவிடுத் தேயறுத்து
பலவிதங்க ளானவெகு பாணங் களைத்தொடுத்து
சிலஜனங்க ளோடிடவே செய்தே யரவுயர்த்தோன்
கவச மதைப்பிளந்து கைவில்லைத் தானொடித்து
துவச மதையறுத்துச் சோனைமழை போற்பொழிந்தான்
வஞ்சன் துரியனொடு மற்றதம்பி மார்களுமே
துஞ்சினவர் போலவுமே சோகமுற்றே கீழ்விழுந்தார்
எதுசமய மென்றே யிருந்தசித்ர சேனனுமே
இதுசமயம் வாய்த்ததென எண்ணிவிரைந் தோடிவந்து
நாகக் கொடியனையும் நல்லதம்பி மார்களையும்
சேகரமாய்க் கூடவந்த தேவியரெல் லோர்களையும்
இடைகளிலே பூண்டு இருந்தநல் லாடைகளால்
சடையாது கட்டிவிட்டுத் தன்னுடைய தேர்மீது
ஏற்றியே சாரதியை எச்சரித்தா னப்பொழுது
நாற்றிசையோர் போற்ற ரதமா னதைவிடுத்தான்

துரியோதனுதியரை
மீட்டுவருதல்

பாம்புக் கொடியோன் படைத்தலைவ னுமொருவன்
தேம்பியழு தோடிவந்து செய்ய தருமரிடம்
வல்லசித்ர சேனன் வணங்கா முடியனையும்

நல்லதம்பி மார்களையும் நங்கையரெல் லோர்களையும்
கட்டிரத மீதுவைத்திக் காலையிலே செல்லுகின்றான்
அட்டியொன்று மில்லா தவர்கள்மீ தன்புவைத்து
மீட்டிவரு வீர்களென வேவாய் திறந்துபல்லைக்
காட்டியழு தேயவரின் காலடியி லேவீழ்ந்தான்
சிந்தைமிக வேகலங்கிச் செய்ய தருமருமே
வந்தவனைத் தேற்றி மதவீமா இப்பொழுது
சென்றுமே மீட்பாய் திரியோத னதியரை
என்று புகன்றனரே இம்மொழியைத் தான்கேட்டு
அண்ணாவே யிந்தமதி யாகுமோ தங்களுக்கு
பண்ணாத வஞ்சனைகள் பண்ணியதோர் பாதகரை
மீட்டிவரு வோமானால் மென்மேலுந் தீங்குகளை
காட்டி விடுவாரே கபடரென வேமொழிந்தான்
மெய்விரதன் கேட்டுமத வீமனே வேணமட்டுஞ்
செய்யாத தீங்குகளைச் செய்தே யிருந்தாலும்
சத்துருவுங் கொண்டுசெல்லத் தானேநாம் பார்த்திருந்தால்
இத்தலத்தி லுள்ளவரு மேசிடுவா ரானதினால்
வேந்தரையே நீங்களுமே மீட்டு வரும்வரையே
சாந்த முடையோரே ஜலபானஞ் செய்யேனே
என்றே புகன்றனரே இம்மொழியை நால்வருமே
நன்றாக வேகேட்டந் நாழிகையில் வேகமொடு
சென்றே வடக்குத் திசைநோக்கித் தேவரையே
குன்றா மதவீமன் கோபமொடு வில்வளைத்து
சிந்தைமிக நொந்திடவே செய்தா னிரட்டையரும்
விந்தையொடு வில்வளைத்து வெங்கணைக ளேவினரே
கந்தருவர் மெத்தக் கலங்கியே யோடினரே
அந்த மிகுந்த அருச்சுனனு மப்பொழுது
விண்ணிலே யோடி விடுவா ரெனநினைந்து

கண்ணிமைக்கு முன்னே கணைமாரி போற்பொழிந்து
சல்லாப மாகச் சரக்கூடங் கட்டிவிட்டு
வல்லமையி லேசிறந்த வாளியொன்றை யேவினனே
தீரமொடு சென்றுசித்ர சேனனிட மார்பினிலே
வீரமொடு தைத்ததுவே வேகமுடனக்கணையை
பிடுங்கி யதில்வரைந்த பேரதனை யேதெரிந்து
ஒடுங்கி விரைவினிலே ஓடிவந்து பற்குணனை
கொண்டாடி யேமகிழ்ந்து கூறிடுவா னப்பொழுது
வண்டரையே கட்டி வரும்படியா யும்முடைய
தந்தையா மிந்திரனுந் தானே மொழிந்தபடி
விந்தையொடு வந்ததல்லால் வேறொன்று மில்லையென்றான்
பற்குணனு மண்ணல் பகர்ந்த சபதமதை
நற்குணவான் முன்னே நவின்றா னதைக்கேட்டு
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமரிடம்
அருமை யுடன்வந்து அனைவரையு மேவிடுத்து
விடைவாங்கி வேகமொடு விண்ணுலகு சென்றனனே
சடைவாகி யேமனது தர்மருமே யந்நேரம்
எல்லோர்க்கும் புத்தி யெடுத்தோதி யேநகர்க்கு
செல்ல விடைகொடுத்தார் சிந்தைமிக வேமகிழ்ந்து

துரியோதனனுக்கு பாதலத்தரக்கர்
மிர்த்தியுசஞ்சீவி மந்திர முபதேசித்தனுப்புதல்

அவ்வனத்தை விட்டு அரவக் கொடியோனும்
செவ்வையுள்ள தம்பியர்கள் சேனைகளை யுங்கூட்டி
வந்தே மறுவனத்தில் மன்னவனுங் கூடாரம்
விந்தையுட னேயடித்து வீற்றிருந்தா னந்நேரம்
சேற்றி லவதியுற்ற செய்ய கருணனுமே
நாற்றிசையோர் போற்ற ரதத்தை நடத்திவந்து

கண்டே துரியன் கவலைதன்னை மாற்றவெண்ணங்
கொண்டுமே தானிருந்த கோலமதைக் கூறினனே
வஞ்சன் கபடி வணங்கா முடியோனும்
பஞ்சோ ருபகாரம் பண்ணினதை யெண்ணாது
கந்தருவ மன்னனிட கையிலகப் பட்டவரை
விந்தையொடு பாண்டவர்கள் மீட்டிவந் தாரெனவே
மண்டலத்தோர் மெத்த வசைகூற வானதென்று
கொண்டே வெகுதுயரங் கூடாரத் தோரறையில்
நன்னயமாய்ச் சென்றவனும் ராஜாங்க யோகமது
தன்னையே செய்பவன்போற் சட்டமுட னேயிருந்தான்
பூதலத்தி லேவசிக்கும் பூமான் துயரமதைப்
பாதலத்தில் வாழரக்கர் பாங்காக வேயறிந்து
தங்களிஷ்ட தேவதையோர் சத்திதனை யேவிடுத்து
இங்கு மயக்கி யெடுத்துவா வென்றனரே
மாயமாய்ச் சென்றே வணங்கா முடியோனை
நேய முடனெடுத்து நேரில்வந்து விட்டதுவே
வல்லவுணர் தானே மரியாதை செய்திருத்தி
சல்லாப மாகவுமே சாற்றுவார் மன்னனுக்கே
பொன்னுலகை யாளுகின்ற பூமா னெடுநாங்கள்
நன்னயமாய்ப் போர்புரிந்த நாளிற் சிலபேரை
வாசவனு மேமடித்தான் வந்துமே நாங்களிங்கு
ஈசனையே நோக்கி இருந்தோம் நெடுந்தவமே
சங்கரனும் வந்து தனையரே மாண்டோர்கள்
மங்களமாய் பூவினிலே மன்திரித ராட்டிரனின்
மைந்தரா கப்பிறந்தார் மற்றுஞ் சிலபேர்கள்
சிந்துதே சாதிபதி செய்யகரு ணன்சகுனி
சோமதத்த னாகவுமே தொல்லுலகி லேபிறந்தார்
நேமமுட னென்றறைந்தே நீலகண்ட னெங்களுக்கோர்

மந்திரத்தைக் கூறி மறைந்தார் சிவபெருமான்
சிந்தை மிகனைந்த திரியோ தனவேந்தே
பஞ்சவர்க்கு முங்களுக்கும் பாரதப்போர் நேருமக்கால்
அஞ்சாம லுந்தனுக்கா யங்குவந்து சண்டைசெய்வோம்
வல்லவனே யென்றறைந்து மாண்டோர்க ளும்பிழைக்கும்
சல்லாப மானமிர்த்யு சஞ்சீவி மந்திரத்தை
உன்னிதமாய்த் தானே உபதேசஞ் செய்தவுணர்
மன்னன் றனையனுப்பி வைத்தார் மனமகிழ்ந்து
வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்ததுரி யோதனனும்
சஞ்சலமொன் றில்லாது தம்பிமார் சேனையொடு
வேட்டைக ளாடி விடாய்கொண்டு வந்தவர்போல்
நாட்டையடைந் தேயிருந்து நல்ராஜ சூயமென்னும்
விந்தையுள்ள யாகமதை மேன்மையொடு செய்திடவே
தந்தைமுத லானவர்முன் சாற்றவே வீஷ்மருமே
நன்னயமாய்க் கேட்டு நடத்தமுடி யாதிதனை
மன்னவனே யும்முடைய மக்களுக்கும் பஞ்சவர்க்கும்
மெத்தப் பகைகள் விளைந்தே யிருப்பதினுல்
சித்தியடை யாதுமற்றுந் தேசதே சங்களுமே
சென்றரசர் தன்னைச் செயித்துமே கப்பமதை
நன்ருக வாங்கி நடத்தவே வேண்டுமெல்லால்
அற்பமதில் முடியா தாதலினு லிப்பொழுது
சொற்பமதில் முடிக்கத் தோன்றலே யொன்றுண்டு
துங்கமுட னேராஜ சூயயா கப்பலனை
மங்களமா யீயும் வைணவயா கந்தனையே
விந்தையுட னேநடத்த வேண்டுமென வேகூறி
அந்த முடைய அரசருக்கு ஓலைவிட்டு
வேந்தருமே வந்தபின்பு வீஷ்மரொடு மற்றவரும்
சாந்தகுண மாமறையோர் தங்களால் யாகமதை

சிங்கார மாய்முடித்தார் தேசதே சாதிமன்னர்
தங்கா தவரவர்கள் சட்டமொடு தம்பதிக்கே
சென்றனர்கள் வேகமொடு தீயன் துரியனுமே
நன்றியுள்ள பாண்டோர் நமக்கிணையோ வென்றிருந்தான்

## சிந்துராஜன், துரோபதையைத் தன் தேர்மேற் கொண்டு போகுதல்

பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரு மோர்நாளிற் பார வனம்நோக்கி
வேட்டைக ளாடிடவே வேகமொடு சென்றனரே
வாட்டமொன்று மில்லாது மாதரசி பாஞ்சாலி
ஒண்டியாய்த் தானிருந்தா ளுல்லாச மாகவுமே
திண்டோள னுனகௌட தேசமன்னன் றன்னுடைய
கன்னி சுயவரத்திற் காகவே சென்றிருந்த
மன்னன் சயிந்தவனும் வாத்தியங்கள் தான்முழங்க
வந்தனனே யந்த வனத்தின் வழியாக
அந்தநே ரந்தனிலே ஆரணங்கு பாஞ்சாலி
வாத்தியத்தைக் கேட்டுமுன்பு வந்தவணங் காமுடியோன்
பூத்திருக்கு மிவ்வனத்தைப் போய்ப்பார்க்க வேண்டுமென்று
வந்தனனோ வல்லாது மற்றெவரு மோவெனவே
சந்தேகங் கொண்டுநின்று தையலுமே பார்த்தனளே
சிந்துதே சாதிபதி சேயிழையைக் கண்டுமெச்சி
இந்த விடத்தி லிருக்கின்ற பெண்கொடியாள்
வனதே வதைதானோ வானுலகுக் கன்னிகையோ
எனவேசந் தேகமுற்றே எந்தலுமே யந்நேரம்
இன்பமுட னேயருகி லேகினன் பாஞ்சாலி
அன்புமிக வேயுடைய அண்ண வருகவென்று
மெத்த வுபசரித்து வேந்தனையோ ராசனத்தில்

உத்தமியு மேயிருத்தி உல்லாச மாகநின்முள்
சிந்துதே சாதிபதி சேயிழையைத் தான்பார்த்து
வந்து வெகுநேர மானதுயான் சென்றிடவே
தருவாய் விடையெனவே சாற்றினு னப்பொழுது
திருவாய் தனைத்திறந்து செப்பிடுவாள் பாஞ்சாலி
வந்திடுவா ருங்களிட மைத்துனன்மா ரெல்லோரும்
சிந்தைமகிழ்ந் தேபார்த்துச் சென்றிடுவீ ரென்றனளே
வல்ல சயிந்தவனும் மங்கைதனை யேபார்த்து
மெல்லிகையே பஞ்சவரை வீரமுள்ளோர் போலவுமே
எண்ணி வனத்தி லிருந்திவரோ டேமனது
குண்ணியுண வில்லாது கோலமிக வேயழிந்து
கந்தமூ லங்கள் களையருந்தி யேவனத்தில்
சுந்தரியே வாடுவதேன் துக்கமினி வேண்டாமே
தலைகீழாய் நின்று தவஞ்செய்தே பாண்டவர்கள்
மலையாம லெந்தனிட மைத்துனனின் முன்னுடி
வந்துமே நாடதனை வாகாக வேகேட்டால்
தந்திடுவா னென்று மனந்தனிலே யெண்ணுதே
அல்லா மலுமே அரவக் கொடியோனை
வெல்ல முடியாது வெகுகாலம் போர்புரினும்
பஞ்சையாய்ப் போனபஞ்ச பாண்டவரை யின்றுவரை
வஞ்சியே நம்பி வருத்தமிக வேயடைந்து
இருப்பதினு லுந்தனுக்கு என்னபல னென்றுமில்லை
திருப்தி யடையவொன்று செப்பிடுவேன் யாதெனிலோ
உருவ மதிற்சிறந்த உத்தமியே யுன்னுடைய
பருவங் கடந்தபின்பு பாரிலிருந் தென்னசுகம்
உனக்கதிக மானவெழி லுள்ளபெண்க ளெங்குமில்லை
எனக்கதிக மானமன்ன ரில்லை யுலகினிலே
கண்மணியே யெந்தனுடு காதலியே வந்திடுவாய்

பெண்மணியே யென்று பிரியமொழி கூறினனே
கன்னிகையுங் கேட்டுஇரு காதினிலே கையைவைத்து
என்னமொழி கூறவந்தா யேற்குமோ வுந்தனுக்கு
அண்ணனென்று வுன்னை யழைத்தே யுபசாரம்
பண்ணினதற் கோகொடிய பாதகனே யுந்தனிட
எண்ணமதைக் காட்டிவிட்டா யென்றுமே பாஞ்சாலி
புண்ணுகி யேமனது புத்திசற்று மில்லாத
மூடன் முகத்தில் முழிக்கலா காதெனவே
சேடன்மீ தேதுயின்ற செந்திருமா லைத்துதித்து
மெல்லி வெளியினிலே வேகமுட னோடிவந்தாள்
வல்ல சயிந்தவனும் வாரியெடுத் தோரதத்தில்
ஏற்றியே சாரதியை எச்சரித்தா னப்பொழுது
காற்றிலுமே வேகதுர கங்களையே தூண்டிவிட்டான்
பாஞ்சாலன் வேணதவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சாலி யங்கம் பதறிமிக வேசோர்ந்து
சாந்த குணமான தௌமியாச் சாரியரே
வேந்தரே பாண்டவரே வெண்ணையுண்ட கோபாலா
இந்த விடத்தி லிருக்கும் வனவிலங்கே
வந்த விபத்தையின்று மாற்றியே வைத்திடுவீர்
அபய மபயமென்று ஆரணங்கு மச்சுதனின்
உபய பதமலரை யுள்ளமதி லேநினைந்து
மயங்கியே வாய்குழறி மங்கைமுகம் வேறுபட்டு
தியங்கியே மூர்ச்சையுற்று தேர்மீ தினில்வீழ்ந்தாள்

### வீமார்ச்சுனன் சயிந்தவனைத் தேர்மீதுகட்டிக் கொண்டுவருதல்

ஆரணங்கு மிட்ட அபயக் குரல்கேட்டு
ஆரணங்க ளோதுகின்ற அந்தணர்க ளெல்லோரும்

சாந்த குணமான தௌமியாச் சாரியரும்
பூந்தே ரதைத்துடர்ந்து போனார் விரைவினிலே
சிந்துதே சாதிபதி சீக்கிரமாய்ச் சென்றனனே
அந்தணர்க ளெல்லோரு மங்கமிக வேசோர்ந்து
வாட்டமடைந் தங்கவரும் மண்மீ தினில்விழுந்தார்
வேட்டைக ளாடிவந்த வீரமுள்ள பாண்டவர்கள்
தங்கள் குருவான தௌமியாச் சாரியரை
துங்க மறையோரைத் தோகைபாஞ் சாலிதனை
காணாது வாடிக் களைத்தே மனத்திலொன்றுந்
தோணாம லவ்வனத்தைச் சுற்றியே தான்பார்த்து
தேரின் தடமதனைச் செல்வருங்கண் டேவிரைவாய்
வார பொழுதினிலே மாமறையோர் தங்களையே
கண்டுமே செய்தி களைத்தெரிந்து கோபமிகக்
கொண்டுவீ மார்ச்சுனருங் கூற்றுவனைப் போலவுமே
வல்லமையா யோடி வரும்பொழுது சிந்துமன்னன்
சல்லாப மாகத் தளங்களொடு தேர்மீது
மெல்லிகையைக் கொண்டுசெல்லும் விந்தைதனைக் கண்டிவர்கள்
வில்லை வளைத்து வெகுவாய்ச் சரந்தொடுத்து
சேனைகளைத் தும்சமது செய்தே பலபகழி
சோனை மழைபோலே சொரிந்தாரே விண்ணடுங்க
சிந்துதே சாதிபதி சிங்கார வில்வளைத்து
வந்த கணைகளையே வாளிவிடுத் தேயறுத்து
விந்தையுள்ள பாணமதை விட்டான் மிகச்சினந்து
அந்தமுள்ள காண்டீப னக்கணையெல் லாமறுத்து
மந்த்ரோப தேச மதுசெய்தோர் பாணமதை
சிந்தைவெகுண் டேவிடுத்தான் சிந்தரசன் மார்பினிலே
பட்டுருவிச் சென்றதுவே பண்ணவரு மேபுகழ
மட்டிலடங் காவருத்த மானதடைந் தேசயிந்தன்

ஓடிப் பிழைப்பதுவே உத்தமமென் றேநினைந்து
வாடிமனஞ் சோர்ந்திருந்த மங்கைபாஞ் சாலிதன்னை
பூமியிலே தள்ளிப் புரவிகளைத் தாண்டிவிட்டு
வாமமுள்ள சிந்துபதி மன்னவனுஞ் சென்றனனே
பற்குணனும் வீமனுமே பாங்காக வோடிவந்து
பொற்கொடியின் சோகமதைப் போக்கியே தானிருந்தார்
நற்றரும ராஜன் நகுலன் சகாதேவன்
மற்றுமுள்ள வேதியரும் வந்திவரைக் கண்டனரே
பாஞ்சாலன் வேணதவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சாலி கொண்ட பயந்தீர்த் தெழுந்துநின்று
எந்தனையே தேர்மீ தெடுத்தே விரைந்தோடி
வந்த சயிந்தவனை மாய்க்காமல் விட்டீரோ
வஞ்சகனைக் கொன்று வருவீ ரெனப்புகன்றாள்
கொஞ்சுங் கிளிமொழியாள் கூறினதைத் தான்கேட்டு
கஞ்ச மலர்வதனங் காய்ந்தே தருமருமே
வெஞ்சினமே யின்றுகொள்ள வேண்டாமென் தம்பியரே
தங்கை மணவாளன் தன்னையே கொன்றிடிலோ
மங்கலமும் போய்விடுமே மாதரசி துற்சலைக்கு
என்ன பெருமையுண்டு எந்தனிட தம்பியரே
மன்னன் சயிந்த வனைப்பிடித்துக் கட்டியிங்கு
கொண்டுவரு வீரெனவே கூறவே பற்குணனும்
தண்டதர னுங்கேட்டுச் சல்லாப மாகவுமே
சிந்துதே சாதிபதி தேரதனை யேபிடிக்க
வந்தார்வாய் வேக மனவேக மாயோடி
வல்லமத வீமனையும் வாகான பார்த்தனையும்
புல்லறிவோன் கண்டு புரவிதன்னைத் தாண்டிவிட்டான்
வீமனொடு பார்த்தன் விரைவாய் வருவதுவை
சாமத் துரோகி சயிந்தவனு மேபார்த்து

பதறியே தேரைவிட்டுப் பார்வேந்த னுங்குதித்தோர்
புதரினுள்ளே யோடிப் புகுந்தே மறைந்துகொண்டான்
வல்ல மதவீமன் மனவேக மாகவந்து
சல்லாப மாகரதந் தன்னிலே சிந்துபதி
மன்னவனைக் காணு துவாகாகப் பாய்ந்தேறி
உன்னிதமா யெங்கே யொளிந்தா னெனவோங்கி
சாரதியின் சென்னி தனிலேயோர் குட்டுவைத்தான்
பாரதிலே வீழ்ந்து பதைத்துமே யுள்ளவற்றை
ஓதினுன் கானி லொளிந்தது வை யந்நேரம்
காதினிலே தான்கேட்டுக் கண்கள் மிகச்சிவந்து
வீமனுமே யந்தவன மெங்கும் புதரினிலே
வாமமுள்ள தண்டாவே மாட்டியே வந்தனனே
அங்கோர் புதரி லடிக்கவே யுள்ளிருந்தோன்
அங்கமதின் மீதுபட்டு ஐயையோ வென்றனனே
அந்தமொழி யைக்கேட்டு ஆங்காரங் கொண்டோடி
வந்த சயிந்த வனைவெளியி லேயிழுத்து
கன்னமதி லேயறைந்து காலால் மிகவுதைத்து
சென்னி மயிரையொன்ருய்ச் சேர்த்துமே தான்பிடித்து
பம்பரத்தைப் போலாட்டிப் பார்மீ தினில்மோதி
செம்பவள வாயினிலே செந்நீ ரொழுகிடவே
ஓங்கியோர் குத்துவைத்தா னேலமிட்டே தான்கதறி
தூங்கினவன் போலாகச் சோர்ந்தே விழுந்தனனே
அந்த முடைய அருச்சுன னு மேவிரைவாய்
வந்தே சயிந்தவனை வாகாக வேயெடுத்து
தண்ணீர் கொடுத்துமுகந் தன்னையே சுத்திசெய்து
புண்ணியனும் சோகமதைப் போக்கியே கூட்டிவந்து
அன்னவனின் தேர்க்காலி லஞ்சாது கட்டிவைத்து
மன்னன் விஜயன் மனமிகவு மேமகிழ்ந்தான்

துங்க மதவீமன் துரிதமா யோடிவந்து
சிங்காரம் மாப்பிள்ளைக்குச் செய்திடவே வேண்டுமென்று
மைத்துனனுக் கைந்துவித மாகக் குடுமிதனை
வைத்துமே யக்கினியால் மற்றமயி ரைக்கொளுத்தி
முகத்திலே மீசைதன்னை முற்றிலுமே தான்பொசுக்கி
ஜெகத்திலுள்ளோர் கொண்டாடச் செம்மண் கரியாலே
புள்ளியிட்டு மேனியெங்கும் பூமான் முகந்தனிலே
வெள்ளை நிறத்தில் விதவிதமாய் நாமமிட்டு
எருக்கலம்பூ மாலைதனை யிட்டே கழுத்தினிலே
பொறுக்கமனங் கூடாது பூமான்க ளுஞ்சிரித்து
குத்துமேற் குத்துவைத்துக் கொண்டே யவன்புலம்ப
மொத்துமேல் மொத்துவைத்து மூடனே யிப்பொழுது
பாண்டவரின் தாசனென்று பண்பாகக் கூறிடிலோ
மாண்டிடா தந்தமிகு மண்புவியின் மீதிருப்பாய்
நன்னயமாய் வைத்ததிரு நாமமியம் பாவிடிலோ
உன்னைவதைப் பேனெனவே ஓங்கியோர் குத்துவிட்டான்
தேசுகுன்றி யேயிருக்குஞ் சிந்தரசன் பாண்டவர்கள்
தாசனென்று வோயாது சாற்றியே வந்தனனே
சாரதியைத் தூண்டிரதந் தன்னைவிடு வாயெனவே
பாரதிலே வேகமொடு பாங்காக வேவிடுத்தான்
வீமார்ச் சுனர்களுமே வேந்தனையே கொண்டுவந்து
சீமான் தருமரிடஞ் சிந்தைகனிந் தேவிடுத்து
பொன்னடியி லேவிழுந்து போற்றியே நின்றனரே
மன்னன் சயிந்த வனைப்பார்த்து மேசிரித்தார்
பொறுமைமிகு அண்ணுவே பொல்லாத பாவியிவன்
அருமைமிகு நாம மதனையே கேளுமென்று
செங்கரத்தைப் பூமியிலே தேய்த்தான் மதவீமன்
அங்கம் பதறி யடிக்கடிவா யோயாது

நான்பாண் டவதாசன் நான்பாண் டவதாசன்
நான்பாண் டவதாசன் நான்பாண் டவதாசன்
என்றுமே கூறினனே எல்லோரு மேசிரித்தார்
குன்றிமனஞ் சென்னி குனிந்தபடி யேயிருந்தான்
பண்ணாத கேலியெல்லாம் பாண்டவரும் பண்ணினரே
புண்ணாகி யேமனது பூமான் சயிந்தவனும்
ஒன்றும்பே சாதபடி ஊமைபோ லேயிருந்தான்
நன்றி யுடையதர்ம ராஜனுமே யந்நேரம்
புத்திபல வாறெடுத்துப் போதித்தே யன்னவனை
சித்தமகிழ் வாகவுமே சென்றுவா வென்றனரே
மலைவுற்று மேயிருந்த மன்னன் சயிந்தவனும்
தலைதப்ப விட்டதுவுந் தம்பிரான் புண்யமென்று
வாடியே வீமன் வருவானோ யின்னுமென
ஓடியே சென்றனனே ஓரியைப்போல் வேகமதாய்
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவருங் கானகத்திற் பாங்காய் வசித்திருந்தார்

சயிந்தவன் கைலாசபதியை நோக்கித்
தவஞ்செய்து பாண்டவரை வெல்ல
வரம்பெற்றுச் செல்லுதல்

சிந்தாசன் தன்னுடைய சேனைகளிற் கூடாது
சிந்தைமிக வேசடைந்து சென்றோர் வனமதனில்
சாந்த குணவான் தயைசாந்த மாமுனியை
வேந்தனுங்கண் டேபணிந்து மேன்மையொடு நற்றவசு
செய்யு முறையுந் திருமந் திரந்தனையும்
வையம் புகழுகின்ற மாமுனிவ ராற்றெரிந்து
வாகாய்த் தவவேட மானதுவைப் பூண்டுகொண்டு
ஆகார நித்திரையு மன்றியே சங்கரனை

சித்த மதில்நிறுத்திச் செய்தா னருந்தவமே
சித்தஜனைக் காய்ந்த சிவபெருமா னங்குவந்தார்
அன்பாக வேவணங்கி ஐயனே மெய்ப்பொருளே
வன்பா ரதப்போரில் மன்னவராம் பாண்டவரை
வெல்ல வரந்தனையும் வீரமுள்ள வாயுதமும்
சல்லாப மாகவுமே தந்தருள்வீ ரென்றனனே
சங்கர னுங் கேட்டுச் சயிந்தவனே காண்டீபன்
மங்களமாய் வேண தவ மானதுவை யேபுரிந்து
வன்பா ரதப்போரில் மாற்றலரை வென்றிடவே
அன்பா யெனைத்துதித்து அஸ்திரம்பெற் றேகினதால்
மன்னவராம் பஞ்ச வரையெவ் விதமடிப்பாய்
உன்னலா காதெனவே யோதினர் சங்கரனும்
சிந்துதே சாதிபதி திங்களணிந் தோன்றனையே
அந்தமுட னேபணிந்து ஆதிசிவ சங்கரனே
மெய்யனே வேறுவரம் வேண்டாங் கருணைசெய்து
வையம் புகழ்பாண்டு மைந்தரையே கொன்றிடவே
இந்த வரந்தனையே ஈய்ந்திடுவீ ரென்றுபின்னுஞ்
சுந்தர னு மேபணிந்து தோத்திரங்கள் செய்தனனே
நல்லது நீ மாதவங்கள் நன்னயமாய்ச் செய்தமையால்
வில்லிலே வல்ல விஜய தரன்றவிர
வல்லபம தாய்நான்கு மன்னரையு மோர்நாளில்
வெல்லக் கடவையென்று வேந்த னிடந்தனிலே
சீலமாய்க் கங்கைதும்பை திங்களொடு வைத்தகொன்றை
மாலை தனையே மனமகிழ்ந்து மேகொடுத்து
விடைவாங்கி வேகமொடு வெள்ளிமலை சென்றனரே
சடைவா னதைநீக்கித் தக்கோன் சயிந்தவனும்
சிந்தை கனிந்து சிலநா ளிருந்தபின்பு
வந்துமே தன்னகர்க்கே வாழ்ந்திருந்தா னன்புடனே

## பஞ்சவர்களிடம்
## துருவாசமகா முனிவர் வருதல்

பாண்டுமென்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவர்கள் வாழ்ந்திருக்கும் பார வனம்நோக்கி
வந்தார் துருவாச மாமுனிவர் சீடரொடு
சிந்தைமிக வேமகிழ்ந்து சீலமுள்ள பஞ்சவர்கள்
காமுனிவர் தன்னையுமே கண்டெதிர்சென் றேவணங்கி
மாமுனிவ ரைக்கூட்டி வந்தா சனமளித்து
எங்கள்முன் னோரு மிழைத்தபூ ஜாபலத்தால்
இங்குவரப் பெற்றோ மெனவே யிருகரத்தை
சென்னிமிசை யேகுவித்துச் சீலமொடு நின்றனரே
மன்னருக்கு மாசி வழங்கியே மாமுனிவன்
தக்க புகழுடைய தர்மரே நீர்மகிழ்ந்து
இக்கால மெங்க ளிளைப்புகளும் நீங்கிடவே
அன்ன மதனை யளிக்கவே வேண்டுமென்றார்
மன்னன் தருமருமே மாமுனியைத் தானோக்கி
பூதலத்தோ ரெல்லாம் புகழ்ந்துமே போற்றிசெய்யும்
மாதவத்தி லேசிறந்த வள்ளலே யிப்பொழுது
எல்லோரு மன்புடனே யேகித் தடாகமதில்
வல்லோரே நித்யகர்ம மானதுவை யேமுடித்து
வந்திடுவீ ரென்றனரே மாமுனிவ ருங்கேட்டு
சிந்தைமிக வேமகிழ்ந்து சீடரொடு சென்றனரே
பாஞ்சாலன் வேணதவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சாலி முன்புசென்று பண்பார் தருமருமே
வஞ்சியே வந்ததுரு வாசருக்கும் மற்றவர்க்கும்
பஞ்சகச் சாய பரமான்னந் தன்னுடனே
போசனத்தைச் செய்திடுவாய் பொற்கொடியே யென்றனரே
தேசுயர்ந்த பாஞ்சாலி சிந்தைநொந்து கைநெறித்து

துங்கமிகு சந்த்ரகுலத் தோன்றலே யன்புடனே
செங்கதிரோன் றனீய்ந்த சீரான பாத்திரத்தில்
பதினைந்து நாழிகைமேற் பட்டாலுண் டாகிடுமோ
ததிவந் துரைத்தீரே சட்டமொடு மாமுனிக்கு
எந்தவிதம் போசனமே இட்டிடுவே னென்றறைந்து
சிந்தை மயங்கித் தியங்கியே நின்றனளே
மின்னேநல் ஞாபகமும் மில்லாது மாமுனிக்கு
அன்னமிடு வேனென் றறைந்தேனே யென்னசெய்வேன்
வல்ல துருவாச மாமுனிவர் கோபமொடு
மெல்லிகையே சாப மிடுவாரே யிப்பொழுது
ஆசைமொழி கூறி யரும்பாவி யானேனே
மோசமிகச் செய்த முழுமூட னானேனே
என்றே புலம்பி யிருந்தோர் நினைவாகி
குன்றதனைத் தானெடுத்த கோபாலன் றன்னையுமே
சித்தமதி லெண்ணினரே செங்கெருட வாகனனும்
அத்தருணம் பொற்றே ரதனிலே தானமர்ந்து
வந்தனரே கானகத்தில் மன்னவராம் பாண்டவர்கள்
சிந்தை மகிழ்ந்துவெதிர் சென்றழைத்துக் கொண்டுவந்து
ஆசனத்தில் வைத்து அடிபணிந்து நின்றனரே
தேசுயர்ந்த தர்மருமே செய்யகோ பாலரிடம்
மாமுனிவர் சீடரொடு வந்ததுவுங் கானகத்தில்
காமுனிவர் மெத்தக் களைப்பாகிப் போசனமும்
வேண்டு மெனவே விளம்பினது மங்கவர்க்கு
ஆண்டவனே நீங்க ளருந்துவீ ரென்றதுவும்
எல்லோரு மன்புடனே யேகித் தடாகமதில்
வல்லவரே நித்யகர்ம மானதுவை யேமுடித்து
வந்திடுவீ ரென்றதுவும் மாமுனிவர் சென்றதுவும்
சிந்தைமிக வேமகிழ்ந்து செங்கதிரோன் றனளித்த

பாத்திரத்தின் நேர்மையையும் பாங்காக வேபுகன்று
நேத்திரத்தில் நீர்ததும்பி நின்றார் தருமருமே

## கிருஷ்ணமூர்த்தி துருவாச முனிவர் முதலியோர்க்கு அமுத விருந்தளித்தல்

வல்லகோ பாலன் மனமதில்யோ சித்துவங்கு
மெல்லிபாஞ் சாலிதன்னை மேன்மையுட னேயழைத்து
அம்மணியே வெய்யோ னளித்ததோர் பாத்திரத்தில்
செம்மை யுடனே தினையளவு சாதமது
ஒட்டி யிருக்கிறதா உத்தமியே பாருமென்று
சட்டமுட னேபுகன்றார் சங்குசக்ர பாணியுமே
இத்தலத்தோர் போற்றுகின்ற எந்தனிட அண்ணாவே
சுத்த முடனே துலக்கியே தான்கவிழ்த்த
பாத்திரத்தி லேது பரமன் செயலெனவே
ஆத்திரமா யோடி யதனையே பார்க்கையிலே
ஒட்டியே கொண்டு ஒருசாதந் தானிருக்க
சட்ட முடனேபாஞ் சாலியுமே கொண்டுவந்து
கண்ணபி ரான்றன் கரத்திலே தான்கொடுத்தாள்
புண்ணியனு மேநாவிற் போட்டுமே தான்சுவைத்தார்
அண்டபகி ரண்டமதை யன்பாய்த்தன் கர்ப்பமதில்
கொண்டபி ரானான கோபாலன் றான்சுவைத்த
அன்ன ரசமு மவர்கருப்பத் தில்விழவே
நன்னயமா யெண்பத்து நான்குலெட்சஞ் ஜீவனுக்கும்
பரிபூ ரணமாகிப் பண்பாய்க் களித்தனவே
அரிகே சவன்செய் யமுத விருந்ததினால்
வல்ல துருவாச மாமுனிவர் சீடரொடு
சல்லாப மாய்த்தீர்த்தந் தானாடி யேகனிந்து
நித்தியகர் மங்களையே நேர்மையுட னேமுடித்து

சித்தமதை யொன்று செலுத்திச் செபம்புரிந்து
இருக்குந் தருணமதி லெல்லோரு மேயமுதம்
பெருக்க முடன்புசித்துப் பிர்ம்மானந் தங்களொடு
வாய்வழியே மூக்கின் வழியே வழிந்திடவே
தாய்முலைப்பா லுண்ட தனையர் களைப்போல
ஏப்பமிட்டுக் கொண்டு எழுந்தே யுலகமதை
காப்பவனு மானதிருக் கண்ணன் மனமகிழ்ந்து
செய்த விருந்தெனவே சிந்தையிலே தானறிந்து
வையம் புகழ்பாண்டு மைந்தரின்முன் வந்தனரே

துருவாசமுனிவர் தான்வந்த விதங்கூறி
ஆசீர்வதித்துச் செல்லுதல்

பாண்டவருங் கண்ணனுமே பாங்காக வேயெழுந்து
நீண்டசடை மாமுனியே நீங்களெல் லோர்களுமே
போசனத்திற் கேயெழுந்து புண்ணியரே வாருமென்றார்
மோசமுறு மென்றே முனிவருமே தான்பயந்து
வண்டாரு மாலையணி மார்பனே யும்மருளால்
அண்டர் புசிக்கு மமுத மதனையுண்டோம்
கொண்டோம் மகிழ்ச்சி குசேலனவ லுண்டவரைக்
கண்டோமே யிவ்விடத்திற் கண்கள் மிகக்களிக்க
சுந்தரகோ பாலன் துணையாக வுங்களுக்கு
வந்திருக்கத் துன்பமது வந்திடுமோ கானகத்தில்
தருமமே யோருருவாய்த் தானே திரண்டிலங்கும்
தருமரே யிங்குவந்த சங்கதியைக் கேட்டிடுவீர்
வஞ்சகத்தை வைத்த வணங்கா முடியோன்முன்
கொஞ்சநா ளைக்குமுன்னே கூட்டமொடு சென்றிருந்தேன்
வந்தெதிரே யென்னை வணங்கியே யாசனங்கள்
விந்தையுட னேகொடுத்து வீற்றிருக்கச் செய்துபின்பு

துங்கமுட னறு சுவையுண் டிளைப்பாறி
மங்களமாய்ச் சந்தனமு மாலைதாம் பூலமதை
எந்தனுக்கு மற்றவர்க்கு மீய்ந்தனனே யான்மகிழ்ந்து
உந்தனுக்கு வேண்டினதை யோதுவா யென்றனனே
வேந்தனும் வேறொன்றை விரும்பாம லேவனத்தில்
சாந்தமுட னேயிருக்குந் தக்கபஞ்ச பாண்டவர்முன்
ஏகியே யெந்தனிடம்புசித்த வண்ணமதாய்
யோகியே நல்லமுதை யுண்ணவர மீயுமென்றான்
அப்படியே தான்கொடுத்து அன்பாகச் சீடரொடு
செப்பமுள்ள கானகத்தைத் தேடிவந்து வுந்தனையே
கண்டே னொருநாளுங் காணா வமுதமதை
உண்டே னுனதருளா லுத்தமனே யத்துரியன்
தீங்குசெய்ய வேணுமென்று சிந்தைதனி லேநினைந்து
பாங்காய்நல் லன்னம் படைக்கமாட் டீர்களென்றும்
கோபமொடு யானுங் கொடுத்திடுவேன் சாபமென்றும்
பூபதியே நீங்களுமே போவீர்கெட் டென்றவனும்
எண்ணி மனந்தனிலே என்னை யனுப்பிவைத்தான்
புண்ணியரே நீங்களுமே பூமிதனை யோர்குடைக்கீழ்
ஆண்டிருப்பீர் நூற்றுவரு மம்புவியைத் தானிழந்து
மாண்டிடுவா ரின்னும் வருடமிரண் டானாலே
என்றுமே தான்புகன்று எல்லோர்க்கு மாசிதனை
நன்றாக வேவழங்கி நன்முனிவர் சென்றனரே
வல்லகோ பாலன் மனமிகவு மேமகிழ்ந்து
எல்லோ ரிடத்தினிலு மின்பமுட னேவிடைகள்
வாங்கித் துவாரகைக்கு மாதவனுஞ் சென்றபின்பு
பாங்காய் வனந்தனிலே பஞ்சவரும் வாழ்ந்திருந்தார்

---

## இந்திரன் கர்னன் கவச குண்டலத்தைக் கவர்ந்து செல்லுதல்

வாமமுள்ள கண்ணன் மனமதனில் வாசவனை
நேமமுடன் ருனே நினைந்தார் துவாரகையில்
இந்திரனுந் தானறிந்து இன்பமுட னேயோடி
வந்துகோ பாலன் மலரடியைப் போற்றிநின்ருன்
விண்ணுலகு வாசவனை வீற்றிருக்கச் செய்தபின்பு
புண்ணியனுங் கர்னனிட பூர்வோ ந் திரம்புகல்வான்
திக்கோரெல் லாம்புகழுந் தேவர்கோ னேயாயி
ரக்கவச னென்றவொரு ராக்ஷதனு மாகுமிவன்
திண்ணமொடு விண்ணுலகு சென்றுதே வர்க்கிடைஞ்சல்
பண்ணித் தினந்தினமும் பாதகனும் வந்ததினல்
செந்திருமால் முன்னுடிச் சென்றுமே தேவரெல்லாம்
வந்த விபத்தை வழுத்தியே சென்றனரே
நன்னயமா யச்சுதனும் நாரா யணரிஷியாய்
உன்னிதஞ்சே ரிந்த உலகில் நரனேடு
வந்த சுரனேடோர் வருடம் வரையிலும்
சிந்தைமிக வேவெகுண்டு செய்தே பெரும்பூசல்
செப்பமுடன் ருனே செயிக்கமாட் டாதவனே
அப்போ களைத்து அருந்தவங்கள் செய்திடவே
சென்றனரே பின்புநரன் தீரமுட னேடிவந்து
நின்ருேர் வருடம்வரை நேர்மையொடு சண்டைசெய்து
தானுங் களைத்துத் தவஞ்செய்யச் சென்றனனே
ஞானமிக வேயுணர்ந்த நாரா யணரிஷியும்
வந்தோர் வருடம் வரையிலுமே போர்புரிந்து
சிந்தைமிக வேகளைத்துச் சென்ருர் தவம்புரிய
சீலமுட னேடிவந்து செய்யநர னேர்வருட

காலவரை நின்று கடும்போர் புரிந்திளைக்க
இந்த விதமா யிருவருமே மாறிவந்து
விந்தையொடு ராக்கதனை விட்டுவி டாமலுமே
வல்லபோர் செய்து வருட மொருகவசம்
சல்லா பருமழித்துச் சட்டமொடு வந்ததினால்
ஆயிரத்தி லொன்று அழியா திருக்கையிலே
நேயமொடு போர்புரிந்து நிற்கமாட் டாமலஞ்சி
மெத்தவிரை வாயோடி வெய்யோ னிடந்தனிலே
அத்தருணந் தானே அபயம் புகுந்துகொண்டான்
அந்த வசுரனுமே அம்புவியின் மீதினிலே
வந்தே கருணனென வாகாக வேபிறந்து
வில்லிலே வல்ல விஜயன் றனைப்பகைத்து
கொல்லுவே னென்றுறுதி கூறியிருக் கின்றனனே
அல்லா மலுமே அருச்சுனன்காண் டாவனத்தை
சல்லாப மாகத் தகனமே செய்திடுங்கால்
வல்லசுவ சேனனுமே வாலறுபட் டேவாடி
எல்லைதனை யேகடந்து ஏகிக் கருணனிடம்
வாகாகத் தாய்பழியை வாங்கவே வேண்டுமென
நாகாஸ் திரமாக நன்னயம தாய்வளர்ந்து
பெருக்கமுட னென்று பெரும்போர் விளையுமென்று
இருக்கின்ற தங்கு எதிர்பார்த்து வெஞ்சினமாய்
வண்டன் கருணனையே மாய்ப்பதற்கு மேகவச
குண்டலமு முள்ளவரை கூடாது ஆதலினால்
விப்பிரனைப் போலவுமே வேடமதை நீரெடுத்து
இப்பொழுது கர்னனிட மேகித் தியாகமது
வாங்கியே குண்டலத்தை வந்திடுவீ ரென்றுகண்ணன்
பாங்காக வேபுகன்ற பண்பறிந்து வாசவனும்
மாமறையோன் போல வடிவாகி யந்நேரம்

தாமதஞ்செய் யாமலுமே தானே நடந்தனனே
இங்கிவர்கள் பேசினதை எல்லா மறிந்துவெய்யோன்
அங்கர்கோன் முன்னுடி அந்தணர்போல் வேடமிட்டு
சென்றுசி கூறியெந்தன் சேயனே யுன்னிடத்தில்
இன்றுமே வானுலகு இந்திரனும் விப்பிரன்போல்
மண்டலத்திற் கீர்த்திபெற்ற வள்ளலே யுன்கவச
குண்டலத்தைத் தானமது கொள்ளவரு கின்றனனே
ஈய்ந்துவிடு வாயாகி லிப்புவியின் மீதினிலே
மாய்ந்துவிடு வாய்பார்த்தன் வாளியினு லென்றறைந்து
தன்னுடைய ரூபமதைத் தானெடுத்தே காட்டியங்கு
மன்னவனே யெந்தனிட மைந்தனும்நீ யானதினுல்
அந்தரங்கந் தன்னை அறைந்திடவே யானேடி
வந்தேனென் ருேதி மறைந்தானே செங்கதிரோன்
விருத்தாப் பியமான விப்பிரனைப் போலவுமே
வருத்த மடைந்துவந்த வாசவனுந் தள்ளாடி
வல்ல கருணனிட மாகவே சென்றனனே
சல்லாபன் கண்டு தரிசித்தோ ராசனத்தில்
வீற்றிருக்கச் செய்துமக்கு வேண்டியதைக் கூறுமென்முன்
சாற்றினதை மாமறையோன் முன்கேட்டு மேகனிந்து
வேந்தனே யின்றெனக்கு வேண்டியதை யன்புடனே
சாந்தகுண வானே தருவீரோ வென்றனனே
வல்ல கருணனுமே மாமறையோ ரைப்பார்த்து
இல்லையென்ற சொல்லதுவு மெந்த னிடந்தனிலே
உண்டுமோ வேண்டினதை யோதுவீ ரென்றனனே
அண்டர்கோன் மெத்த அகமகிழ்ந்து மேபுகழ்ந்து
மண்டலத்தோர் போற்றுகின்ற மன்னவனே யுன்கவச
குண்டலத்தை யன்பாய்க் கொடுத்திடுவீ ரென்றனனே
கொடையாள னப்போ கொடுத்திடவு மெத்தனித்தான்

சடைவா யசரீரி சாற்றுவாள் விண்மீது
பூதனையா ளாவிதனைப் போக்கினவ னைகண்ணன்
போதனையி னுலுமின்று பொன்னுலகு வாசவனும்
அந்தணன்போல் வேட மதனையே பூண்டுகொண்டு
வந்திருப்ப தாலுமிங்கு மன்னவனே யுன்கவச
குண்டலத்தைத் தானே கொடுக்காதே கொற்றவனே
மண்டலத்தின் மீதினிலே வாள்விஜயன் வாளியினுல்
மாண்டிடுவா யென்று வழுத்தினு ளப்பொழுது
காண்டீப னெய்யுங் கணையா லிறந்தாலும்
இல்லையென்ற சொல்லதனை என்னுயு ளுள்ளவரை
சொல்லே னெனப் புகன்று துங்கமுள்ள குண்டலத்தை
செய்ய கருண னுமே சிந்தைமகிழ்ந் தேகழற்றி
வையம் புகழ்ந்திடவே மாமறையோர்க் கீய்ந்தனனே
வச்ரா யுதன்வாங்கி வல்ல கருணனையே
மெச்சித்தன் ரூபமதை மேன்மையுட னேயெடுத்து
உன்னிதமாய் நின்றனனே உம்பருல காதிபனை
மன்னவ னுங் கண்டு மலரடியைப் போற்றிநின்ருன்
வாசவனுஞ் சிந்தை மகிழ்ந்துமே கர்ன னுக்கு
நேசமொடு வைத்திருந்த நீண்டசத்தி வேலதனை
கொடுத்துவிஜ யன்றவிரக் கோமானே மற்றவர்மேல்
தொடுத்துவிடு வாயெனவே சொல்லியே சென்றனனே
வல்ல கருண னுமே வாங்கியே மாளிகைக்கு
உல்லாச மாய்நடந்து உத்தமனு மேகினனே
அண்டர்கோன் கண்ண னடிபணிந்து மேகவச
குண்டலத்தைத் தானே கொடுத்துமே நின்றனனே
செந்திருமா லுங்கனிந்து தேவேந்தி ராவுனது
மைந்தனுக்குத் தீங்கினிமேல் வாராதொருநாளும்
நாகாஸ் திரந்தனக்கு நானிருக்கின் றேனெனவே

வாகாய் மொழிந்தனரே வாசவனு மேகேட்டு
குடையாகக் குன்றெடுத்த கோபாலன் றன்னிடமே
விடைவாங்கி வேகமொடு விண்ணுலகு சென்றனனே

### பாஞ்சாலி மொழிக்கிணங்கி அருச்சுனன் நெல்லிக் கனியைக் கொய்தல்

பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவருங் கானகத்திற் பாங்காக வாழ்ந்திருந்தார்
பாஞ்சாலன் வேணதவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சாலி யோர்நாளிற் பார்த்தனோ டவ்வனத்தை
சல்லாப மாகவுமே தான்பார்த்து வந்திடுங்கால்
உல்லாச மாகவுமே ஓங்கிமிக வேவளர்ந்த
நெல்லிமர மீதினிலே நேர்மையுட னோர்கனியை
மெல்லியுமே கண்டு விஜயன் றனைவணங்கி
இந்த மரமீதி லிருக்குங் கனியதனை
அந்த முடனே அறுத்தியு மென்றனளே
பற்குணனு மன்புடனே பாவையுமே கூறினதை
விற்பனனு மேகேட்டு வில்லைவளைத் தோர்சரத்தை
விட்டறுத்துக் கீழே விழுந்த கனியதனை
கட்டழகி யாளின் கரத்திலே தான்கொடுத்தான்
அந்த வனத்தி லருந்தவமே செய்திருந்த
சுந்தரஞ்சேர் மாமுனிவோர் சூழ்ந்துமே பற்குணனை
காண்டீபா நீயுமென்ன காரியஞ்செய் தாயடடா
நீண்டசடை மாமுனியால் நேருமே சாபமது
பாலகனே பொல்லாப் பழிதேடிக் கொண்டனையே
சீலனே யாங்களென்ன செய்வோ மெனப்புகன்று
எங்க ளிடந்தனிலே இக்கனியின் நேர்மைதனை
எங்கோனே கேட்டா லெடுத்தியம்ப மாட்டோமா

என்றுமே கூறியங்கு எல்லோரு மேசோர்ந்தார்
கன்றி வதனமுமே காண்டீப னப்பொழுது
வல்லமுனி வோரை வணங்கியே யெய்தறுந்த
நெல்லிக் கனியதனின் நேர்மையதைக் கூறுமென்றான்
துங்கமுனி வோர்கேட்டுச் சுந்தரனே யிக்கனிதான்
எங்களுக்குச் சொந்தமல்ல யிந்த வனந்தனையே
மன்னவனே வல்லமித்ர மாமுனிவர் கானமென்று
நன்னயமாய்க் கூறிடுவார் நானிலமீ துள்ளவரும்
இங்குமே நிற்போர்க ளெல்லா மவர்க்கடிமை
மங்களமா யிந்த வனமதனில் மாமுனிவர்
நித்தமொரு வேளைவந்து நெல்லிவிருட் சத்தடியில்
உத்தமரு மேயமர்ந்து உல்லாச மாகவுமே
சற்றுயோ கம்புரிந்து சட்டமுட னெங்களுக்கு
கொற்றவனே நீதிபல கூறியே சென்றிடுவார்
மாமுனிக்கு ஆகார மாகச் சிவனருளால்
வாமமிகு நெல்லி மரந்தனிலே மன்னவனே
இரண்டு வருட மிளம்பிஞ்சு வுண்டாகி
இரண்டு வருட மிருந்துமே காயாகி
இரண்டு வருட மிருந்துசெங் காயாகி
இரண்டு வருடமதி லின்பமுட னேதிரண்டு
மன்னவனே நான்கு வருடமதி லேகனிந்து
நன்னயமா யந்தமுனி நாதரிட செங்கரத்தில்
வந்திறங்கு மக்கனியை வாமமுள்ள ஈசனுக்கு
சிந்தைமகிழ்ந் தர்ப்பணமே செய்துஎல் லோர்களுக்கும்
நன்னயம தாயீய்ந்து நன்முனிவ ரும்புசித்து
மன்னு களித்து மறுபடியும் பன்னிரண்டு
ஆண்டுவரை காத்திருப்பா ரம்மா முனிவரிங்கு
காண்டீப னேநாளைக் காலையிலே வந்திடுவார்

அம்முனிவர் நாளை யருந்துதின மானதினல்
செம்மலே யுந்தனுக்குத் தீங்குவருந் தப்பாது
கன்னிகைசொற் கேட்டுக் கனிதனையே கொய்தனையே
என்னசெய்கு வோமெனவே எல்லோரு மேதியங்கி
மன்னவனும் பார்த்தன் வதனந் தனைப்பார்த்து
மன்னிக்க மாட்டாரே மாமுனிவ ரென்றறைந்தார்

கிருஷ்ணபகவா னேழுந்தருளிப்
பாண்டவரை ஆதரித்தல்

காண்டீபன் நெல்லிக் கனிதனையே தானெடுத்து
நீண்டதோர் கானகத்தை நேர்மையுட னேகடந்து
வந்தே தருமர் மலரடியி லேவிழுந்து
விந்தையுட னேபணிந்து விம்மிவிம்மித் தானழுது
கன்னிகைசொற் கேட்டுக் கனியதனை யெய்ததுவும்
நன்னயமா யங்கிருந்த நன்முனிவ ரெல்லோரும்
ஓடிவந்து அக்கனியின் உண்மைதனை யோதினதும்
வாடிமனம் புண்ணுகி வந்ததையு மேபுகன்று
செய்ய தருமரிட செங்கரத்தி லேகனியை
வையம் புகழ்பார்த்தன் வாகாக வேகொடுத்து
என்னசெய்கு வேனெனவே ஏங்கியே நின்றனனே
மன்னன் றருமரிந்த வாக்கியத்தைத் தான்கேட்டு
நெல்லிக் கனியிருக்கும் நேர்மையையு மேபார்த்து
பொல்லாத காலமதாற் பூவைசொல்லைத் தான்கேட்டு
கொம்பி லிருந்து குலுங்கியதோ ரிக்கனியை
அம்பு தொடுத்து அறுத்தாயே யென்னசெய்வோம்
கற்பகத்தைச் சார்ந்தவர்க்குக் காஞ்சிரங்கா யீய்ந்ததுபோல்
முற்பவத்திற் செய்தவினை மூண்டதிங்கு தம்பியரே

வந்தவினை தன்னை மறித்தாலே நின்றிடுமோ
அந்தவினை தன்னை யனுபவிப்போ மென்றறைந்து
எண்ணாத யெண்ணமெல்லா மெண்ணி மனமிகவே
புண்ணாகி யேசோர்ந்து பூமியின்மேல் வீழ்ந்தனரே
வல்ல சகாதேவன் வந்திவரின் சோகமதை
உல்லா சனும்போக்கி யோதுவான் யாதெனிலோ
அண்ணாவே யிங்குவந்த ஆபத்தை நீக்கிடவே
எண் ணுவீர் சிந்தைதனி லின்றுகோ பாலனையே
என்றே புகன்றனனே இம்மொழியைத் தான்கேட்டு
குன்றதனைத் தானே குடையாக வேபிடித்த
நந்தகோ பாலனையந் நாழிகையி லேதருமர்
சிந்தை தனிலே தியானமே செய்தனரே
செந்திருமா லீதறிந்து தேர்மீ தினிலேறி
வந்தாரே கான மதைநோக்கிப் பாண்டவர்முன்
கண்ணன் றனைத்தானே கண்டுமே பஞ்சவரும்
திண்ணமுட னேயெதிரே சென்றுமே தான்பணிந்து
நெல்லிக் கனியாலே நேர்ந்த குறைதனையே
சொல்லியே நின்றனரே துக்கமுட னப்பொழுது

பஞ்சவரும் பாஞ்சாலியும்
தங்கள்தங்கள் மனோநிச்சய முரைத்தல்

கண்ண னுமே தான்கேட்டுக் கண்கள் மிகக்கலங்கி
புண்ணாகி யேமனது பூமான் களைப்பார்த்து
காவலரே யின்று நல்ல காரியஞ்செய் தீர்களேயோ
பாவமிக வந்ததுவே பாண்டரசன் புத்திரரே
ஈசனடி யார்சினந்து இட்டாலே சாபமது
மோச மதுவாய் முடியுமே யென்னசெய்வோம்
என்றுமே கண்ண னிவர்களோ டேபுலம்பி
நின்றனரே வந்தவினை நீக்கவறி யாதவர்போல்

பஞ்சவருங் கண்ண பகவானை யேபார்த்து
தஞ்சமையா சிந்தை தளரவிடா தீர்களென்று
தோத்திரங்கள் சொல்லினரே துங்கமுள்ள கோபாலன்
ஆத்திரத்தோ டொன்று மறியாதார் போலவுமே
சித்தந் தனிலேயோ சித்துநின்று சற்றுவரை
உத்தமரே யிப்பொழுது உங்களிஷ்டம் போல்முடிக்க
நான்தேவ னல்லமந்தி ரங்களிலே வல்லனல்ல
நான்பெரியோ னல்லவென்றந் நாழிகையி லன்புடனே
எல்லோ ரையுங்கூட்டி யேகியே கானகத்தில்
நெல்லி மரத்தின் நிழலிலே நின்றுகொண்டு
பூதலத்தோ ரெல்லாம் புகழுகின்ற புண்ணியரே
வேதமொழி யொன்றுண்டு வேந்தரே யாதெனிலோ
உற்றதுவைச் சொன்னு லொளிக்காம லேமனதில்
வைத்ததோ ரென்ன மதனையே கூறிடுவீர்
என்றுமே கோபால னின்பமுட னேபுகன்று
நின்றே கனியதனை நேர்மையுட னேதருமன்
செங்கரத்தி லீய்ந்துவன தேவதையே சங்கரனே
மங்களஞ்சே ராகாய வாணிபூ மாதேவி
மன்னவர்சொல் லுண்மை வசன மதினுலும்
கன்னிபாஞ் சாலி கழறுமுண்மை தன்னுலும்
அம்பதனை விட்டே யறுத்தகனி யானதுவும்
கொம்பிலே முன்னிருந்த கொள்கைபோ லேகிளம்பி
பொருந்தக் கடவதென்று புண்ணியனு மேபுகன்று
வருந்தியே யங்குநின்ற மன்னவரைத் தான்பார்த்து
கள்ளமொன்று மில்லாது காவலரே நெஞ்சமதில்
உள்ளவெண்ணந் தன்னையெடுத் தோதுவீ ரென்றனரே
செய்ய தருமருமே சிந்தைமிக வேமகிழ்ந்து
வையமிசை பூதனையை மாய்த்தவனைத் தான்பார்த்து

சத்தியமும் நல்ல தருமம் பொறுமையொடு
நித்தியமா யென்னிடத்தில் நீங்காம லேநீரும்
கண்ணனே நீடூழி கால நிலை பெற்றேகார்
வண்ணனே யின்பமொடு வாழவே தக்கதென்று
பொல்லாத பாவமதும் பொய்மொழியுங் கோபமதும்
பொல்லா வரக்கர்குலம் போல்நசித்துப் போகவென்று
எண்ணியென் னுள்ள மிரவும் பகலிலுமே
புண்ணியனே யோர்தொழிலைப் போல்நடத்தி வந்ததல்லால்
மற்றொன்று மெந்தன் மனமதனி லில்லையென்று
கொற்றவனு மேபுகலக் கோபாலன் றன்னருளால்
அங்கையிலே தானிருந்த ஆமலக மானதுவும்
மங்களமாய் ரெண்டுமுழம் மட்டுயர்ந்து நின்றதுவே
தண்டதர னப்பொழுது சல்லாப மாகவுமே
கொண்டல் நிறமேனிக் கோபால னைக்கூவி
பிறர்மனைவி யாவரையும் பெற்றமா தாவெனவும்
பிறர்பொருளை யெட்டிப் பெரிய கனியெனவும்
பிறர்வசைச் சொற்கூறல் பெருமையா காதெனவும்
பிறர்துயரங் கொண்டு பிதற்றலெனக் குற்றதென்றும்
எண்ணியிருக் கின்றேனு னென்னுயு ளுள்ளவரை
புண்ணியனே சிந்தைவிட்டு போகா தெனப்புகன்றான்
அந்தரத்தில் நின்றிருந்த ஆமலக மானதுமே
விந்தையொடு ரெண்டுமுழம் மேலுயர்ந்து நின்றதுவே
அந்த மிகுந்த அருச்சுனனு மப்பொழுது
சிந்தைமிக வேமகிழ்ந்து செந்திருமா லைப்பார்த்து
மாமிசஞ்செந் நீர்நரம்பு வல்லெலும்பு சீய்தோலால்
நேமமுட னேகூடி நீர்க்குமிழி போலழியும்
இவ்வுடலைப் பற்றி யிருக்குமாத் மாவதனை
இவ்வுலகின் மீது இழந்தா கிலுந்தானே

நல்லொழுக்கஞ் சத்யமொழி நற்குடியி லேபிறப்பும்
தொல்லுலக மீது சுகமா யிவற்றினையே
பெற்றிடவே வேண்டும் பெறுமல் மனுத்தேகம்
பெற்றுமே யொன்றும் பிரயோ சனமுமின்றி
மாண்டிடுவ தாலேயாத் மாவுக்கே யீனமல்லோ
ஆண்டவனே யல்லாம லாடவரா கப்பிறந்தோர்
அஞ்ஞானந் தன்னை யகற்றியே யின்பமுள்ள
மெஞ்ஞான போதமதை வேண்டுமே தானறிய
அல்லாது யுத்த மதனிலே தேர்ச்சியுற்று
வில்வீர ஞகிடவே வேண்டுமென்று மென்னுடைய
எண்ண மதிலே யிருக்கிறது மல்லாமல்
மண்ணுலகின் மேல்வசிக்கும் மன்னரெவ ராஞலும்
எந்தனையும் வில்லினையு மென்தமயர் தங்களையும்
நிந்தனைசெய் தேபழித்த நீதியில்லார் தங்களையும்
என்னேடு தானே எதிர்த்தோ ரவர்களையும்
சென்னிதனைக் கொய்து ஜெகத்தின்மீ தந்தமுள்ள
வெற்றிக் கொடிதனையே விண்ணவருங் கொண்டாட
நற்றவனே நாட்டிடவே நன்னயமா யென்னிதயம்
எண்ணமே கொண்டு இருப்பதன்றிச் செங்கமலக்
கண்ணனே மற்றுமொரு காரணமு மில்லையென்றான்
அச்சுதனின் றன்னருளா லாமலக மானதுவும்
உச்சிதமாய் மேலே யுயர்ந்த திரண்டுமுழம்
பரிக்கு நகுலன் பரந்தாம னைப்பார்த்து
விரிவான மண்டலத்தின் மீதினிலே நற்குலத்தில்
உற்றவர்க ளாஞலு மோங்குசெல்வந் தன்னைமிகப்
பெற்றவர்க ளாஞலும் பெம்மா னருளாலே
நல்லழகும் எல்லா நலமுடையோ ராஞலும்
கல்வியுமே வேண்டுமந்தக் கல்விதனக் குத்தகுந்த

நல்ல கியானமுமே நாதனே கொஞ்சமுமே
இல்லாதோர் தங்களையே இப்புவியின் மீதினிலே
மாயா முருக்க மலர்போல் மதிப்பதன்றி
தூயா அவரைத் துதிக்கே னெனப்புகன்றான்
ஆமலக மானதுவு மந்தரத்தி லேகிளம்பி
நேமமொடு ரெண்டுமுழம் நின்றதுவே தானுயர்ந்து
வல்ல சகாதேவன் மாதவனைத் தான்கூவி
சல்லாப மாகவுமே சாற்றுவான் யாதெனிலோ
சத்தியமே தாய்ஞானந் தந்தை தருமமுமே
இத்தலத்தின் மீதினிலே என்னோ டுடன்பிறந்தோன்
சாந்தகுணம் நன்மை தருந்தரும பத்தினியாள்
பாந்த மிகுபொறுமை பாலன் கிருபையுமே
சுந்தரஞ்சேர் தோழனென்போன் சொல்லியவாற் பேர்களுமே
இந்தப் புவிமே லெனக்கு உறவினர்கள்
குந்திமத்தி ராதேவி கோமா னெழிற்பாண்டு
எந்தனுக்குத் தாய்தந்தை இல்லை பரந்தாமா
தருமர்வீ மன்பார்த்தன் தக்க நகுலனுமே
அருமைச் சகோதரர்க ளன்று நீர் தோழனல்ல
பாஞ்சாலன் வேணதவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சாலி யெந்தனுக்குப் பத்தினியு மன்றுகண்ணா
நல்விரகு கோத்திரனும் ஞானசுத சேனனுமே
இல்லையெனக் குப்புதல்வ ரென்றே நவின்றனனே
உல்லாச மாக உயர்ந்தே யிரண்டுமுழம்
நெல்லிக் கனிதானே நின்றதுவே யந்தரத்தில்
கண்ணனே செங்கமலக் கண்ணனே யென்னுடைய
அண்ணனே யென்று அழைத்துமே பாஞ்சாலி
ஐம்புலன்கள் போலவுள்ள ஐவருமென் நாயகராய்
அம்புவியின் மீதினிலே யன்பாக வேயிருந்தும்

இன்னமுமே வேறொருவ னெந்தனுக்கு வேண்டுமென
நன்னயமா யென்மனது நாடுகின்ற தண்ணுவே
பூதலத்தின் மீது புருடரென்ற பேர்களற்றால்
மாதரெல்லாங் கற்புடைய மங்கையரென் றேதிடலாம்
அம்புவியின் மீதினிலே ஆடவரு முள்ளவரை
நம்புதற்குக் கூடிடுமோ நங்கையரெல் லோர்களையும்
என்றுமே பாஞ்சாலி இன்பமுட னேபுகன்றாள்
நின்றகனி மேலெழும்பி நேர்மையுட னேமரத்தில்
இருந்த யிடந்தனிலே எம்பெருமான் றன்னருளால்
பொருந்தியே கொண்ட துவே பூமான்க ளும்மகிழ்ந்தார்
செங்கமலக் கண்ணனுமே தேர்மீ தினிலேறி
அங்குமே நின்றிருந்த ஐவரிட மேவிடைகள்
வாங்கித் துவாரகைக்கு வாகாகச் சென்றனரே
பாங்குடையோ ரானபஞ்ச பாண்டவரு மவ்வனத்தை
கடந்துமே வேகமொடு காவலரு முன்னிருந்த
இடந்தனிலே சென்று இதயமிக வேகனிந்து
வாமமிக வேமிகுந்த மாமறையோ ரெல்லவர்க்கும்
நேமமுட னேதருமர் நெல்லிக் கனியாலே
வந்த விபத்துகளை வாகாக வேபுகன்றார்
அந்தணருங் கேட்டு அகமிகவு மேமகிழ்ந்து
நீண்டதோர் கானகத்தில் நேர்மையுட னேயிருந்தார்
பாண்டவரு மெத்தப் பயபக்தி யாகவுமே
வல்லமுனி வோர்சரித மானதுவை யேகேட்டு
சல்லாப மாகவுமே தானிருந்தார் கானகத்தில்

துரியோதனுதிகள் காளமாமுனியைக் கொண்டு
பாண்டவர்களைக் கொல்ல மாரணஓமஞ் செய்தல்

வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்ததுரி யோதனனும்
சஞ்சலமாய்க் கர்னன் சகுனிதுச் சாதனனை

பார்த்துமே தானுரைப்பான் பாண்டவருங் கானகத்தில்
நேர்த்தியுட னேவசித்து நீணிலத்தோர் கொண்டாட
பன்னிரண்டாண் டானதிலே பாக்கிகொஞ்ச நாளதனை
அன்னவரு மேகழித்து அக்ஞாத வாசமதை
செய்தோர் வருடமுமே சென்றபின்பு இங்குவந்து
வையகத்தைக் கேட்டு வழக்குமிகச் செய்வாரே
மங்களமாய்ப் பாண்டோர் வருவதற்கு முன்னடி
அங்கவரைக் கொன்றிடவே அன்பாக இப்பொழுது
தக்கதொரு யோசனையைச் சாற்றுவீ ரென்றறைந்தான்
அக்கணத்தி லேசகுனி அங்கமிக வேகுளிர்ந்து
அருமை மருகா அரவக் கொடியோனே
பெருமைசற்று மில்லாத பித்தராம் பஞ்சவரை
மடித்துவிட லாங்காள மாமுனிவர் வந்தாலே
எடுத்துரைத்தே னென்றனனே எல்லோருஞ் சம்மதித்து
தூள மகாமுனியைச் சுந்தரம தாய்விடுத்து
காள மகாமுனியைக் கையோ டழைத்துஇங்கு
வந்திடுவீ ரென்றனரே மாமுனிவ னேகியுமே
அந்த முனிவோரை யழைத்துமே வந்தனனே
சிந்தைமகிழ்ந் தேதுரியன் சென்றெதிரே போற்றிநின்று
விந்தையுள்ள ஆசனமேல் வீற்றிருக்கச் செய்தவரை
மன்னவனு மேபார்த்து வாகாக வேபுகல்வான்
நன்னயஞ்சேர் கின்றமுனி நாதரே யென்மீது
மெத்தக் கிருபைசெய்து மேதினியோர் கொண்டாடுஞ்
சத்தியனே கானிலுறை தக்கபஞ்ச பாண்டவரை
மாண்டிடவே செய்துமிந்த வையமெல்லா மோர்குடைக்கீழ்
ஆண்டிடவே செய்வீ ரடிமைதனை யென்றறைந்தான்
மாமுனிவர் கேட்டு வருந்திமிக வேமனது
நேம முடனே நிகழ்த்துவார் யாதெனிலோ

பஞ்சவர்கள் மெத்தப் பகையா யிருந்தாலும்
வஞ்சனையாய்க் கொல்லு வதுஞாய மல்லமன்னு
என்றே புகன்றனரே இம்மொழியைத் தான்கேட்டு
நன்றிசற்று மில்லாத நால்வருமே சேர்ந்துகொண்டு
மாமுனிவர் பாத மதனிலே தான்விழுந்து
வாமமிக வேமிகுந்த வள்ளலே யெவ்விதமும்
பாண்டவரை மாண்டிடவே பண்ணுவீ ரென்றோதி
வேண்டியே நின்றனரே வேந்தருமே யந்நேரம்
வணங்கா முடியோன்றன் வார்த்தைக்கே மாமுனிவர்
இணங்கியே யாகமதிற் கேற்றபல வஸ்துகளை
சேகரித்து வேகமொடு சென்றே மயானமதில்
வாகுடனே மாமுனிவர் மாரணவோ மந்தனையே
அதர்வண வேதத்தை யநுசரித்தே செய்திருந்தார்
இதமுடனே பாண்டோ ரியல்பதனைக் கூறுகின்றோம்

இயமனுலுண்டாகிய நச்சுப் பொய்கையால்
வீமனுதிய நால்வருமிறக்க
தருமருயிர் சோர்தல்

நீண்டதோர் கானகத்தில் நேர்மையுட னேவசிக்கும்
பாண்டவரை மாய்த்திடவே பாங்காய் மயானமதில்
மாரணவோ மந்தனையே மாமுனிவர் செய்திருக்கும்
காரணத்தைச் செங்கமலக் கண்ணனுமே தானறிந்து
சிந்தைதனி லேநினைந்தார் செய்ய மறலிதனை
அந்தநல்ல வேளையிலே அன்னவனு மோடிவந்து
நாற்றிசையோர் கொண்டாடும் நந்தகோ பாலனையே
போற்றிசெய்து என்னைநீர் புண்ணியனே கூறுமென்றான்
கண்ணபிரா னப்பொழுது காலன் றனைப்பார்த்து
மண்ணுலகை யாளும் வணங்கா முடிவேந்தன்
வார்த்தைகேட் டேகாள மாமுனிவ ரிப்பொழுது

நேர்த்தியுள்ள கானகத்தில் நேர்மையுட னேவசிக்கும்
பஞ்சவருந் துஞ்சிடவே பாங்காய் மயானமதில்
வஞ்சமுனி மாரணவோ மந்தனையே செய்வதினுல்
இப்பொழுது கானமதற் கேகியே பாண்டவரை
செப்பமொடு காத்திடுவீர் தீங்குநே ராதபடி
என்றே புகன்றனரே இம்மொழியைக் காலனுமே
நன்ருக வேகேட்டந் நாழிகையில் வேகமொடு
வந்துமே கானகத்தில் வாகாய்த்தன் வல்லமையால்
புந்திமகிழ்ந் தங்குநச்சுப் பொய்கையொன்று உண்டாக்கி
தண்ணீ ரிதனைத் தவிரவெங்கு மில்லாது
பண்ணியே பாப்பாரப் பாலகன்போல் வேடமிட்டு
நீண்டதோர் கானகத்தில் நேர்மையுட னேயிருக்கும்
பாண்டவரின் முன்னுடிப் பாலகனு மேயோடி
அபயமென்று தானே அலறியே கீழ்விழுந்தான்
அபயமிட்ட தென்னவென ஐவருமே வந்துநின்று
பாலகனே யிங்கு பகர்வா யெனப்புகன்ருர்
சீல முடனே சிறுவனுமே கூறிடுவான்
மன்னவரே யானே மறையோர் குலச்சிறுவன்
இன்னு முபநயன மெந்தனுக்கு ஆகவில்லை
எந்தனையே மாமறையோ ரெல்லோருஞ் சூழ்ந்துகொண்டு
நிந்தனைகள் செய்தனரே நிற்கா தவர்களிடம்
விரைவாய்ச்சென் ருேர்பெரிய விப்பிரரைக் கண்டவர்முன்
உரைசெய்தே னென்குறையை உத்தமரு மேகேட்டு
சீலனே யுன்மனம்போற் செய்துவைக்கின் றேனதற்கு
பாலனே தேகம் பரிசுத்த மாகவுமே
நான்குகால் வெள்ளையதாய் நன்னயம தாயிலங்கும்
மான்குட்டி பாலை மறந்துதர்ப்பை யைப்புசிக்கும்
பருவமதி லேபிடித்துப் பாங்கா யதன்ருேலை

தருவதா னுனக்குச் சட்டமொடு முப்புரிநூல்
தன்னிலே கட்டிச் சகலருமே கொண்டாட
உன்னிதமாய்த் தானே உபநயனஞ் செய்துவைப்பேன்
என்றே புகன்றனரே இம்மொழியை யான்கேட்டு
நன்றெனவே சம்மதித்தோர் நாளிலே கானகத்தில்
வந்தோர் வருடம் வரையிலோர் வேடனொடு
சிந்தைகனி வாய்நேசஞ் செய்தவனோ டேதிரிந்து
கொண்டிருக்குங் காலமதிற் குட்டியொன்று முன்வரவே
கண்டுபிடித் தத்தோலைக் கையா லுரித்துலர்த்தி
எந்த னிடந்தனிலே ஈய்ந்தான் வனவேடன்
அந்தமொடு வாங்கி யடவில் வரும்பொழுது
கலைமானொன் றோடிவந்து கையிலுள்ள தோலதனை
நிலைகுலைய வேபிடுங்கி நேராக இந்தவழி
சென்றதையோ வென்னயினிச் செய்வே னெனப்புகன்று
நின்ற படியே நிலத்திலே வீழ்ந்தனனே
பஞ்சவரும் வீழ்ந்தசிறு பாலகனைத் தானெடுத்து
அஞ்சாதே யிப்பொழுது அம்மானைப் பின்றுடர்ந்து
சென்று வதைத்தே சிறுவனே தோலதனை
இன்றுதரு வோமெனவே எல்லோரும் வேகமொடு
வீரமாய்ச் சென்றனரே விற்களையே கைப்பிடித்து
தீரமா யங்கு சிறுவனைப்போல் வந்தயமன்
கலைமான் வடிவாகிக் கவ்வியே தோலதனை
மலையாது பாண்ட வரின்கண்ணிற் றென்படவே
பாண்டோர் கலைமானைப் பற்றியே வேகமொடு
நீண்ட வனத்தில் நெடுந்தூரஞ் சென்றனரே
மாயமான் பஞ்ச வரின்கையிற் சிக்குதல்போல்
நேயமொடு சற்றுவரை நின்றே யிளைத்திருக்கும்
கிட்டவந்த போது கிளம்பியே கானகத்தில்

மட்டிலடங் காவேக மாயோடி நின்றிருக்கும்
இந்த விதமாய் இவர்களையே யேமாற்றி
விந்தை யுடனே வெகுதூரங் கானகத்தில்
கொண்டுபோய் விட்டே குதித்தோடி யேமறைந்து
கொண்டதுவே மான்றானுங் கொற்றவர்க ளுங்களைத்து
சிந்தை வருந்திச் சிறுவனுக்கு மான்றனை
எந்தவித மாய்க்கொடுப்போ மென்றுமே கானமெங்கும்
தேடியுமே காணாது தேகமிகச் சோர்ந்துமதி
வாடியுமே பாலை வனமதிலே வந்துழன்று
நெஞ்சுலர்ந்து நாவறண்டு நிற்கமுடி யாமலுமே
பஞ்சவருங் காலோய்ந்து பஞ்சடைந்து கண்களுமே
சந்தனம ரத்துநிழல் தன்னிலே யோடிவந்து
சிந்தைமிகச் சோர்ந்துவிழுந் திட்டனரே பூமியிலே
சிலநேரஞ் சென்றபின்பு செய்ய தருமருமே
நலமாய்ச் சகாதேவ ராஜனையே பார்த்துரைப்பார்
உத்தமனே யெந்த னுயிர்நீங்கு தையோ நீ
இத்ததியே சென்று எடுத்துமே தண்ணீரை
வந்திடுவா யென்று வழுத்தினு ரப்பொழுது
சிந்தைநோ காதபடி சென்றே சகாதேவன்
வனத்திலெங்கெங் குந்தேடி வந்துநீர் காணாது
மனத்தினில்யோ சித்தோர் மலைமீ தினிலேறி
பாங்காக நாற்றிசையும் பார்த்தனனே மேற்றிசையில்
ஓங்கிமிக வேவளர்ந்து உன்னிதமாய் நின்றவொரு
ஆலமரங் கண்டனனே யங்குதண்ணீ ருண்டெனவே
சீலமுட னத்திசையிற் சென்றுபார்க் கும்பொழுது
பொய்கையொன்றைக் கண்டுமனம் பூரித் ததிலிறங்கி
கைகாலைச் சுத்திசெய்து காவலவன் தண்ணீரை
வாரிப் பருகி மயக்கமுட னேகரையைக்

கோரிவந்து தள்ளாட்டங் கொண்டுவிழுந் தேயிறந்தான்
இங்கிறந்து போனதுவை எண்ணாமலேதருமர்
துங்க நகுலனிடஞ் சொல்லுவார் யாதெனிலோ
தம்பியுன் தம்பி சகாதேவனைக்காணோம்
வெம்பி வனத்தில் விழுந்தானோ வல்லாது
தேடியே தண்ணீரைச் சிந்தைமிக வேவருந்தி
வாடிமெலி கின்றானோ மர்மந் தெரியவில்லை
சென்றுநீ தம்பிசகா தேவனையே தானழைத்து
இன்றுமே தண்ணீ ரெடுத்துவரு வாயெனவே
செய்ய நகுலனுமே தேடியே தண்ணீரை
கைகாலுஞ் சோர்ந்தெங்குங் காணாமலேவாடி
குன்றின்மே லேறிக் குளந்தனையே கண்டுவங்கு
சென்றுமே தம்பிசகா தேவன் றனைப்பார்த்து
மயக்கமோ யிங்கோடி வந்தகளை யோவலது
தயக்கமாய் வீழ்ந்தானோ தண்ணீ ரருந்தாது
என்றுமே சிந்தைதனி லெண்ணியே தண்ணீரை
நன்றான பொய்கைதனில் நாமருந்தி யிப்பொழுது
வல்லசகா தேவன் மயக்கமது தீர்ந்திடவே
நல்லதண்ணீ ரீய்ந்தெழுப்பி நன்னயமா யண்ணருக்கு
எடுத்துமே நீரதனை யேகுவோ மென்றுவெண்ணி
அடுத்துமே பொய்கை யதனிலே தானிறங்கி
பக்குவமாய் நீரைப் பருகினான் பார்வேந்தன்
அக்கணமே தான்களைத்து அங்ஙனே வீழ்ந்திறந்தான்
மெய்விரதன் றானே விஜயன் றனைப்பார்த்து
மெய்யோ மிகமெலிந்து விட்டதுயிர் சோர்கிறது
தம்பியே கொஞ்சஞ் ஜலமெடுத்து உன்னுடைய
தம்பிகளைக் கூட்டியிங்கு ஜல்திவா வென்றனரே
காண்டீப னப்போ கனவேக மாயோடி

நீண்டதோர் கானமெங்கும் நீரிருக்கக் காணுது
குன்றின்மீ தேறிக் குளந்தனையே கண்டுசென்று
நின்றுதம்பி மார்கள் நிலத்திலே வீழ்ந்தவற்றை
எண்ணிமனம் புண்ணுகி இன்பமொடு நீர்பருகி
மண்ணின்மேல் வீழ்ந்து மடிந்தானே பார்த்தனுமே
துய்ய தருமருமே சோர்ந்தே விழுந்தனரே
வையம் புகழும் மதவீம ராஜனுமே
அண்ணன் றனையே அணைத்துமே மார்மீது
தண்ணீரைக் கொண்டுவந்து தந்திடுவே னென்றறைந்து
சந்தனம ரத்தடியிற் சாயவைத்து வேகமொடு
அந்தவன மெல்லா மலைந்துமே தண்ணீரை
எங்கினுமே காணுது ஏங்கிமனம் புண்ணுகி
அங்கோர் மலைமீதி லன்னவனுந் தானேறி
பாங்காக நாற்றிசையும் பார்த்தனனே மேற்றிசையில்
ஓங்கிமிக வேவளர்ந்து உன்னிதமாய் நின்றவொரு
ஆல மரமும் அருகிலே பொய்கையொன்றும்
சீலமுட னங்குகண்டு சென்றுமே மூவரையும்
பார்த்துமே தாகம் பறந்து திரேகமுமே
வேர்த்து விதிர்த்து விசார மதில்மூழ்கி
கண்ணீரு மாருய்க் கசிந்து பெருகிடவே
எண்ணுத வெண்ணமெல்லா மெண்ணியே மூவரையும்
கையா லசைத்தினிமேற் காரியமு மில்லையென்று
வையமிசை வீழ்ந்து மயங்கியே தானெழுந்து
மன்னர் சபைநடுவே வல்லபமாய் நால்வருமே
சொன்ன சபதந் துலைந்ததே யின்றேடு
பாஞ்சாலன் வேணதவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சாலி கூந்தற் பறக்கவே செய்தோமே
வையகத்தின் மீதினிலே மாபாவஞ் செய்தோமோ

தெய்வமே யுந்தன் றிருவருளு மிப்படியோ
இந்த விஷத்தாலே யிவர்க ளிறந்திடவே
அந்தரத்தோர் கூடி யமைத்தாரோ வல்லாது
சத்துருக்க ளிங்கு சமைத்த ஜலமிதுவோ
இத்தலத்தின் மீதினிலே யெப்போது முள்ளதுவோ
அண்ணரிடஞ் சென்று அறைவதனைப் பார்க்கிலுமே
கண்ணிலே நீரைக் கறப்பதுவைப் பார்க்கிலுமே
தண்ணீர் தனைக்குடித்துத் தம்பிமா ரோடுவின்று
மண்ணின்மேல் வீழ்ந்து மடிவதுவே நல்லதென்று
சிந்தைதனி லேநினைந்து செய்ய தருமருமே
வந்தாலோ சோக மதுநீங்கி யிங்கிலுமே
தாக மிகவுடைய தாலே விஷஜலத்தை
வேகமுட னேபருகி வீழ்ந்திறப்பா ரென்றேங்கி
அண்ணர் தனக்கே அறிவிக்க வேண்டுமென
மண்ணைப் பரப்பி மகாராஜ ராஜஸ்ரீ
அண்ணு ரவர்க்கு அடியேன் சரணமொரு
விண்ணப்பந் தன்னை விளம்புவது யாதெனிலோ
நாங்களுமே வந்தஇந்த நஞ்சுறைந்த பொய்கையிலே
பாங்குடனே நீரைப் பருகியே மாண்டுவிட்டோம்
அண்ணுவே யீதை யறியாமற் றண்ணீரை
உண்ணுதீ ரென்றெழுதி யுத்தமனு மந்நேரம்
சென்றுமே நீர்பருகிச் சீவனையே மாய்த்தனனே
நன்றியுள்ள தம்பியர்கள் நால்வர் பிரிந்திடவே
தாகமே லிட்டுத் தருமருமே மெய்தளர்ந்து
சோகமே லிட்டுவிக்கிச் சோர்ந்துமே கீழ்விழுந்தார்

மாரணயாகத் துண்டானபூதம் பாண்டவர் இறந்ததை
நோக்கி காளமகா முனியை வதைத்துச் செல்லுதல்

ஓமகுண்டந் தன்னி லுதித்தே யொருபூதம்
வாமமிக வேமிகுந்த மாமுனியைத் தானோக்கி

மாரணவோ மம்புரிந்து வாகா யெனைப்படைத்த
காரணத்தைத் தானே கழறுவீ ரென்றதுவே
மாமுனிவர் கேட்டு மனமிகவு மேமகிழ்ந்து
நேம முடனே நிகழ்த்துவார் யாதெனிலோ
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரைக் கொன்றுவிட்டுப் பாங்காக வந்திடுவாய்
என்றே புகன்றனரே இம்மொழியைத் தான்கேட்டு
நன்றெனவே சம்மதித்தந் நாழிகையி லாங்காரம்
கொண்டுமே யிந்தக் குவலயமெல் லாம்நடுங்க
சண்டனுமே கண்டொழியச் சப்த கடல்கலங்க
கரங்கால் விசையாலே கானகத்தி லேயிருக்கும்
மரங்கள் முறிபடவே வானோர்க ளஞ்சிடவே
வந்துமே கானகத்தில் வல்ல பெரும்பூதம்
சந்தனம ரத்தடியிற் றானே தருமருமே
முடிசாய்ந்து மேதாக மூர்ச்சையதி னாலிறந்து
படிமேற் கிடப்பதுவைப் பார்த்துமே வேகமொடு
நடந்தேகிப் பொய்கையண்டை நால்வர் களுமாண்டு
கிடந்திடவே கண்டருகிற் கிட்டியே பூதமது
கையா லிவர்கள் களைப்புரட்டி யேபார்த்து
வையமிசை மாண்டவர்மேல் மாமுனிவ னேவினனே
என்றுமே சிந்தைதனி லெண்ணியே கோபமொடு
சென்றே முனிவன் சிரந்தனையே சூலமதால்
துண்டாக்கி யேயதனைத் தூக்கியே நல்லோம
குண்டமதிற் போட்டுமகிழ் கொண்டே மறைந்ததுவே
மாரணவோ மம்புரிந்த மாமுனிவர் தானிறந்த
காரணத்தைக் கேட்டு கலங்கித் துரியனுமே
எண்ணாத வெண்ணமெல்லா மெண்ணி மனமிகவே
புண்ணாகி யூமையனைப் போலவே தானிருந்தான்

தருமராஜனுக்கு யமன் சுயரூபங்காட்டி

வீமனுதியருக்கு உயிர்தந்தேகுதல்.

சந்தனம ரத்தடியிற் ருனே யுயிர்சோர்ந்த
அந்த மிகுதருமர்க் கந்நேரந் தன்னிலுமே
கானகத்தி லேகுளிர்ந்த காற்றுமே வீசிடவே
போனவுயி ரானதுதன் பொந்திதனில் வந்திடவே
புண்ணியனு மங்கே புரண்டெழுந்து தம்பியர்கள்
தண்ணீருங் கொண்டுவரா தாலே மனந்தளர்ந்து
தாக மிகவாகித் தம்பிகளைத் தான்றேடி
வேகமுட னேநடந்து மெய்விரதன் றூரமதில்
ஆல மரமு மருகிலே பொய்கையையும்
சீலமொடு கண்டருகிற் சென்றுமே நால்வரையும்
பார்த்துமே யங்கம் பதறியே கீழ்விழுந்து
வேர்த்து விதிர்த்து விழிகளில்நீ ரோடவிட்டு
சத்துருக்கள் செய்த சதியோ தவமுனிவர்
மெத்தநொந்து மேசாப மிட்டனரோ வல்லாது
தெய்வச் செயலோமுன் ஜென்மாந் திரந்தனிலே
செய்த வினையோ தெரியே னெனப்புலம்பி
தம்பியரைத் தானே தனித்தனியே தான்புரட்டி
வெம்பியே மேனி விழுந்துமே மண்மீது
தம்பியரே யென்னைத் தனியாக வேவிடுத்து
அம்புவியின் மீதிறந்தீ ரையோ வெனக்கூவி
மண்ணைப் பரப்பி வரைந்திருந்த வாசகத்தை
புண்ணியனும் பார்த்துப் புலம்பியே தானெழுந்து
என்னைப் பிரியாத எம்பியரு மேமாண்ட
பின்னேயென் னுவி பெரிதோ இவர்களொடு
துஞ்சுவது நல்லதென்று சுந்தரனு மேநினைந்து

நஞ்சுறைந்த பொய்கைதனில் நன்னயம தாயிறங்கி
வாமமுள்ள தேக மதனையே சுத்திசெய்து
நேமமுட னேபருக நீரதனை யள்ளினரே
அந்தரத்தின் மீது அசரீரி போலயமன்
விந்தை யுடனே விளம்புவான் யாதெனிலோ
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டோர் முதல்வா பருகாதே நஞ்சிதுகாண்
என்றே தடுத்தனனே யிம்மொழிகேட் டேதருமர்
சென்றவரோ டேயானுஞ் சேர்வே னெனப்புகன்றார்
அம்மொழியைக் கேட்டு அசரீரி போலயமன்
செம்மையுட னேயெடுத்துச் செப்பிடுவா னப்பொழு து
சாந்தகுண வானே தருமசந் தேகமதை
பாந்த முடனே பகர்ந்து ஜலமதனை
உல்லாச மாயெடுத்து உண் ணுவா யென்றதற்கு
நல்ல தெனவே நகைத்தார் தருமருமே
அன்பாகத் தானே அசரீரி போலயமன்
இன்பனே நூலி லெதுபெரிது வென்றனனே
இம்மா நிலமீ திலங்குகின்ற நூல்களிலே
அம்மாகேள் வேத மதுவே பெரிதாகும்
வல்லவனே தர்ம மதனிற் சிறந்ததென்ன
இல்லறதர் மந்தா னெதிலுமே லானதம்மா
மன்னவனே யாரும் வணங்குங் கடவுளெவன்
நன்னயமா யண்டபகி ரண்டமெங்கு மேநிறைந்து
முத்திதனை நல்கும் முகுந்தனே யாகுமெனச்
சித்தமகிழ்ந் தேதருமர் செப்பினா ரப்பொழுது
வல்ல மறலி மனமிகவு மேமகிழ்ந்து
சல்லாப மாகவுமே தன்சுயரூ பந்தனையே
எடுத்தே தரும ரிடத்திலே வந்துநின்றான்

விடுத்தே கவலைதனை மெய்விரத னப்பொழுது
செய்ய மறலி திருவடியைப் போற்றிசெய்தார்
வையம் புகழுகின்ற மைந்தனையே தானெடுத்து
ஆசிபல கூறி யருகினிலே தானிருத்தி
மாசில்லா மன்னனுக்கோர் மந்திரத்தை யேபுகன்று
இறந்தோர் செவியி லிதனையே கூறுமென
சிறந்த தருமருமே செப்பினு ரப்படியே
விந்தையுட னேநான்கு வேந்தருமே தானெழுந்து
வந்தே மறலி மலரடியைப் போற்றிநின்றார்
அங்கவரைக் கையா லணைத்தே யமதருமன்
மங்களமா யாசி வழங்கி யருகிருத்தி
மாரணவோ மங்காள மாமுனிவர் தான்புரிந்த
காரணமுஞ் செங்கமலக் கண்ணன் புகன்றதுவும்
நஞ்சுறைந்த பொய்கை நலமாயுண் டாக்கியதும்
அஞ்சாது கானி லபயமிட்டு வேதியரின்
பாலன்போல் வந்ததுவும் பாங்காக மானுருவை
சீலமொடு பூண்டுகொண்டு சென்றதுவுங் கானகத்தில்
ஒன்றும் விடாதபடி யுண்மைதனை யேபுகன்று
நன்றியுள்ள பாலகரே நன்மையினி மேலடைவீர்
மாண்டிடுவார் நூற்று வருஞ்சகுனி கர்ணனொடு
பாண்டவரே நீங்கள் பயமடைய வேண்டாங்காண்
நீண்டதோர் கானகத்தில் நேர்மையொடு பன்னிரண்டு
ஆண்டுங் கடந்தினி யக்கியாத வாசமுமே
ஒருவருக்குந் தோன்று துருமாறி யோர்நகரில்
ஒருவருடம் போக்கிடவே யுங்களுக்கு இப்பொழுதோர்
மந்திரத்தைத் தானோதி வைக்கின்றே னென்றுயமன்
சிந்தைமகிழ் வாகவுமே செய்ய தருமருக்கு
உன்னிதமாய்த் தானே யுபதேசஞ் செய்துவைத்து

மன்னவருக் காசி வழங்கி விடைவாங்கி
செய்ய மறலியுமே சென்றனனே தன்னகர்க்கே
வையம் புகழ்பாண்டு மைந்தருமே யந்நேரம்
நேமமுட னேவசிக்கும் நீண்டதோர் கானகத்தில்
மாமறையோர் முன்புவந்து வாகாய் நடந்தவற்றை
அன்புடனே தான்புகன்று அந்த வனந்தனிலே
இன்பமுட னேவாழ்ந் திருந்தார்க ளெல்லோரும்

அக்ஞாத வாசஞ்செய்யத் தருமர்
தம்பிமாரோடு ஆலோசித்தல்

பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவருங் கானகத்திற் பாங்காக வேவசித்து
மங்களமா யீராற் வருடங் கடந்தபின்பு
சிங்கார மானமறு தேசஞ்சென் றோர்வருடம்
அக்ஞாத வாச மதனையே செய்யவென்று
பக்குவமா யோஜனைகள் பண்ணி மனந்தனிலே
தங்களுட னேகானந் தன்னிலக லாதிருந்த
துங்கமறை யோர்களிடஞ் சொல்லியே சேதிகளை
எல்லோ ரிடத்தினிலு மின்பமுட னேவிடைகள்
சல்லா பரும்வாங்கித் தௌமியாச் சாரியொடு
பாஞ்சாலன் வேண தவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சாலி யைக்கூட்டிப் பாங்காய்வந் தோரிடத்தில்
வீற்றிருந்தா ரந்தமிகு வெய்யோன் மறைந்தனனே
நாற்றிசையோர் கொண்டாடும் நற்றரும ராஜனுமே
தம்பிமா ரின்வதனந் தன்னையே தான்பார்த்து
வெம்பி மனமுடைந்து விள்ளுவார் யாதெனிலோ
துரியோத னதியர்க்குத் தோன்றுமமே லோர்வருடம்
பரிவாகவே வாசம் பண்ணவே வேண்டியதால்

எந்த நகரமதிற் கேகுவோ மென்றனரே
அந்த மிகுந்த அருச்சுன னு மேபுகல்வான்
அண்ணுவே தங்க ளடுமையின் யோசனையை
மன்னுகே ளென்று வழுத்துவான் யாதெனிலோ
இந்த வுலகினிலே இருக்கும் விராடபுரம்
சொந்தமதாய்ச் செங்கோல் சுருதிப் படிநடத்தும்
மன்ன னிருக்கின்முன் மனுநீதி களறிந்த
பின்னமில் லாதமன்னன் பெருவாழ்வு பெற்றவள்ளல்
விதிமுறை களறிந்து விராடனெனப் பேர்பூண்டோன்
அதிதிகளை காப்பதற்கு அதிகச்சிந் தையுடையான்
அவனிடமே சென்று அண்டிநா மோர்வருடம்
தவரு திருந்திடுவோம் சாமியே யென்றனனே
தம்பி யுரைத்ததையே தயவாய்க்கேட் டேதருமர்
வெம்பிநிற்கும் வீமனிடம் விளம்புவார் யாதெனிலோ
தம்பி விசயனுமே சாற்றினதோர் சங்கதியும்
தம்பியரே சம்மதமா சல்தியுரை யென்றனரே
அப்போது வீமன் அண்ண னிடந்தனிலும்
தப்பாது சொல்வான் தன்யோச னைதனையே
அண்ணுவே தங்கள்மொழி அட்டியொன் றில்லாது
மன்னுவும் பின்னுலும் வருவோ மெனமொழிந்தான்
மற்றிருவர் தன்னை மன்ன ருகழைத்து
வெற்றிபெற்ற தம்பிகட்கும் விளம்பியே சங்கதியும்
உங்கள்தம் யோசனையை யோசித் திருவருமே
சங்கை யில்லாதபடி சாற்றுவீ ரென்றனரே
இருவரதைக் கேட்டு எண்ணியோ சனைபுரிந்து
வருகிறேம் பின்னுலும் மன்னவரே யென்றனரே
எல்லோ ருரைத்ததையும் ஏந்தல்தர் மர்கேட்டு
நல்லாயா சீர்வதித்தார் நலமான தம்பியர்க்கு

பாஞ்சாலன் வேணதவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சாலி யையழைத்து பாரரசன் புகல்வார்
அன்னமே யுந்தன் அகத்திருக்கும் யோசனையை
மின்னரசே சொல்லென்று வேந்தனுங் கேட்டனரே
பொறுமை மிகவுடையார் புகன்றதைக்கேட் டேமாது
அருமையாய் வாய்திறந்து அரைவா ளவரிடமும்
வையகத்தோர் கொண்டாடும் மன்னரே யும்மனம்போல்
செய்வோமே நாங்களென்றும் செப்பினு ளேயவளும்
தங்களிஷ்ட் டப்படியே தப்பாம லேநாங்கள்
எங்கேநீர் சென்றாலும் ஏகுவோம் பின்னாலே
தடையில்லை யென்று தைய லுரைத்திடவும்
தடைசொல்லாத் தம்பியரும் சாற்றிய சங்கதியை
தரும ரதைக்கேட்டு சந்தோஷ முண்டாகி
பொறுமை மிகவுடையார் புகழ்ந்தா ரவர்களையும்
தம்பியரே செல்வோம் தையலரே நீங்களுமே
வெம்பாது வாருமென்று வேந்தனெழுந் தேநடந்தார்
நாற்றிசையுங் கொண்டாடும் நல்ல தவுமியரை
போற்றி விடைவாங்கி புண்ணியர்கள் நடந்தார்
அடுத்த வனமேகி ஐவர்களு மங்கிருந்து
வடுப்படாத் தம்பியர்க்கும் வழுத்துவா ரேதருமர்
வேந்தர்க ளேநமது விசன மதைத்தீர்க்கும்
வேந்தன்கோ பாலனையே விரைவா யழையுமென்றார்
எல்லவருஞ் சேர்ந்து எம்பெருமா னைநாடி
சல்லாப மாகவும் தான்தொழுதா ரேவரவும்

மாயவன் பாண்டவரிடம் வருவது.

பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரு நம்மை பரிவாயழைத் தாரென்றே

தஞ்சமென்றே ரைக்காக்கும் தற்பர ஞானமாயன்
பஞ்சவரைக் காக்க பகவான் மனத்தில்வைத்து
நல்லதொரு தேரில் நயமான வான்பரியை
சல்லாப மாய்ப்பூட்டி தானேறி யேரதத்தில்
பாகனை ரதம்விடவும் பகர்ந்திட வேயவனும்
வேகமாய் நடத்தினனே மேன்மையா னபாகன்
நாடு கடந்துமவர் நதிகளையு மேதாண்டி
காடுகள் பூராவும் கடந்துமை வரிருக்கும்
இடத்தினி லேரதமும் ஏகி வருவதையும்
படபடப்பைக் கண்டும் பாரரச ரோடிவந்தும்
பாதமத னைப்பிடித்து பரிவாகக் கண்ணில்வைத்து
வேதனையே புகழ்ந்தார் மெல்லிமுத லைவர்களும்
ஐவருடன் வந்து அமர்ந்துமே யோரிடத்தில்
ஐவர்களே யெந்தனையே அழைத்தவா றென்னவென்றார்
தொழுது மிகத்தருமர் சொல்லுவார் மாயனிடம்
பழுதுபடா மேனியனே பனிரெண்டு தன்வருடம்
அடவிகளில் சஞ்சரித்து ஐயனே யுன்னருளால்
தடைகளொன்று மில்லாது தப்பித்தோம் நாங்களுமே
இன்ன மொருவருட மிருக்கிறதே மக்ஞாதம்
மன்னவரே நாங்கள் மறைவா யிருப்பதற்கும்
யோசனை யெங்களுக்கு யுரைப்பீ ரகமகிழ்ந்து
நேசனே சொல்லுமென்று நிகழ்த்தினர் தர்மருமே
ஆயனதைக்கேட் டகமும் மிகமகிழ்ந்து
நேயர்களே யுங்கள் நினைப்பையே யென்னிடத்தில்
ஓதுமென்று கேட்டார் உலகை யளந்தகண்ணன்
சாது தருமருமே சாற்றுவார் சங்கதியும்
ஐயனே தங்க ளடிமைகள் யாவருமே
செய்திருக்கும் யோசனையைச் செப்புகி றேன்கேளும்

மெஞ்ஞான தேசம் விராட புரமதனில்
அஞ்ஞாத வாச மதில்கழிக்க வுத்தேசம்
செய்யலா மென்று தீர்மானித்தோம் நாங்கள்
ஐயனே கேட்பதற்கு மழைத்தோ முமையென்றார்
என்றுமே தர்மர் எடுத்தோதி யேமொழிய
நன்றெனவே சம்மதித்தார் நாரா யணன்றானும்
ஐவருரைத்த வார்த்தை ஆயனதைக் கேட்டும்
செய்யபுகழ் தர்மரிடம் செப்புவார் யாதெனிலோ
இவ்வுருவத் தோடு ஏகிநீர் சென்றாலும்
அவ்வரசன் தெரிவான் மானக்கே டாகிவிடும்
அரவக் கொடியோ னறிந்தானே யாமாகில்
திரமாய்ப் பெரியோரிடஞ் செப்பியே சங்கதியை
அந்தநாளிற் சபையி லரைந்தபடி நீங்கள்
சிந்தைநொந்து செல்லவேண்டும் செப்பிய வோராண்டும்
அப்படிக்குச் செல்வது ஆகாது மன்னர்களே
இப்போது யாவருமே எடுத்துமே வேற்றுருவம்
சென்று விராடபுரி செப்புவீர் வெவ்வேறாய்
நன்றாக வேயிருந்து ராசனின் சொற்படிக்கு
நடக்கவே வேண்டும் ராசாக்க ளேநீங்கள்
திடமான வார்த்தைகளை செப்பவே கூடாது
தருமரே நீரும் சரியான வேதியராய்
பொறுமை கங்கபட்டரென்று பூணுவாய் நாமமதை
மதவீமா நீயும் மடப்பளித் தொழில்தனிலே
இதமாய்ச் சமைக்கும் இயல்பாக னேயாவாய்
பலாயினனென் றேபெயரை பகர்வா யரசனிடம்
பெலமான பேச்சு பேசாதே யென்றனரே
அருச்சுன வுந்தனுக்கும் அந்தரம்வா ழூர்வசியால்
திருத்தமொடு சபித்த சேயிழைபே டியுருவம்

பொருந்த வெடுத்து பூவரசன் மனையில்
திருந்தவே நாட்டியத்தை செப்பிவைப்பா யென்றனரே
நகுலனே நீயும் நல்ல பரிகளுக்கே
விகுவான பாகனும் மேவு மரசனிடம்
தாமக் கிரந்தியெனச் சாற்றுவாய் நாமமதை
வாமனே கோபமது மணுகாம லோர்வருடம்
சாஸ்திர மதைக்கரைத்து தானுண்ட பாலகனே
ஆத்திரங் கொள்ளாமல் ஆயர்குலம் போலாவாய்
விந்தையர சனிடத்தில் மேவியே யுன்பேரு
தந்திர பாலனெனவும் சாற்றுவா யென்றனனே
பாஞ்சாலன் வேணதவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சாலி யாள்தனக்கும் பகருவா ராயருமே
மின்னாள் துரோபதையே விரதசாரணி யெனவும்
மன்னனின் மங்கையிடம் வழுத்துவாய் தங்கையரே
இன்று வுருமாறி ஏகுவீர் விராட நகர்
நன்றாகவே வாழ்வீர் நான்போரே னூர்க்கென்றார்
பஞ்சவர்கள் நின்று பகவானையே தொழுது
வஞ்சகம் நினையாமலும் வளர்நகர் செல்லுமென்றார்
ஆயன் ரதமேறி அதிவிரை வாகவுமே
மாயனும் வந்தார் மகிழ்ந்து மவர்நகர்க்கு
ஐவரு மோரிடத்தி லமர்ந்துமே தையலுடன்
துய்யதொரு தருமர் சொல்லுவார் தம்பியர்க்கு
அன்பான தம்பிகளே ஆயிரங்கண் ணிந்திரனை
மன்னர்களே யழைத்து மகிழ்ந்து மவரிடத்தில்
சங்கதியை யுரைத்து தான்செல்வோ மென்றுமவர்
சங்கையெல் லாம்விடுத்து தானினைந் தார்வரவும்
வானவர்கோ னப்போது மைந்தர் நினைத்ததையும்
தானவரு மறிந்து சல்தியாய்க் கானில்வந்தார்

ஐவர்களுங் கண்டு மவர்பாத மேபணிந்து
செய்தா ருபசாரம் செப்பவொண் ணாததுவே
மைந்தர்களை வாழ்த்தி வானவர் கோன்தானும்
எந்தனை யழைத்ததுவும் என்னவகை யென்றார்
பொறுமையே பூஷணமாய் பூண்ட தருமருமே
அருமையாக மொழிவார் ஆயிரங் கண்ணனிடம்
ஐயனே நாங்கள் அடவிதனில் பன்னிரெண்டு
மெய்யா யிருந்து வேந்தே வெளியானோம்
இன்னுமொரு வருட மெங்களுக்கு மக்ஞாதம்
மன்ன விருக்கிறதே மறைவாக நாங்களுமே
தங்கி யிருந்திடவே தயவுசெய்ய வேணும்
எங்கோனே யென்று மிருகரத்தால் தொழுதார்
இவருரைத்த வார்த்தைதனை இந்திரனு மேகேட்டு
தவரு துரைப்பார் தன்னுடைய வெண்ணமதை
பூவரசர் போற்றும் புண்ணியரே நீங்கள்
பாவமதை யெண்ணி பாவி துரியனையே
வதைத்திடாது விட்டும் மன்னர்களே கானகத்தில்
பதைத்துமே சென்றீர் பரம னருளதினால்
பன்னிரண்டு தன்வருடம் பாங்காய் கானில்வசித்து
எண்ணியே யீசனையே எல்லாங் கழித்தீர்கள்
இன்னுமொரு வருட மிருக்கமறை வாகவுமே
கண்ண னுரைப்படியே காவலரே செய்வீர்கள்
இன்று விராடனக ரேகியீராற் மாதம்
நன்றாகவே நடப்பீர் நல்லரசன் சொற்படிக்கு
இவ்வரு டங்கழித்து எகித் துரியனிடம்
செவ்வையாய்க் கேட்போம் செப்பினபடி தேசம்
இல்லையென் றுரைத்தாலே எழுப்பிப் படைதனையே
தொல்லைமிக விளைத்து துரியனையும் மடிப்போம்

சந்தேகம் வேண்டாம் தனையர்களே இப்போது
எந்தன் தனக்கு மேகவிடை தாருமென்றார்
மாது துரோபதையும் மாம னிடந்தனிலே
ஓதினாள் துயரமதை ஒன்றுங்குறை யில்லாமல்
வானவர்கோன் கேட்டு மங்கை துயரமதை
வேண கதைகளையே விளம்பியே மெல்லியர்க்கு
அம்மையே யுன்சபதம் ஆரணங்கே ஐவர்களும்
செம்மையாய்த் துரியனையே செப்பிய சபதம்போல்
மடித்திடுவார் சீக்கிரமும் மன்னுளும் பாண்டவர்கள்
துடித்து விழுவான் துரியனிட தம்பியர்கள்
வருகிறேன் நானும் மங்கையரே யுங்களுக்கு
தருகுவா னீசன் தையலரே நல்யோகம்
என்று வுரைத்து ஏக விடைகேட்டார்
நன்றாகப் பஞ்சவர்கள் நலமாய் விடையளித்தார்
வானவர்கோன் தானும் வந்தானே விண்ணுலகம்
தானவர் போனபின்பு தையலுட னைவர்களும்
வந்துவோரி டத்தினிலும் வாகா யவரமர்ந்து
சந்தோஷ மாய்த்தருமர் சாற்றுவார் தம்பியர்க்கும்
வெற்றிபெற்ற தம்பிகளே விளம்பிடுமென் சொல்லதனை
குற்றமொன் றில்லாது கோமானே கேட்பீர்கள்
ஆயுதம் நம்மிடத்தி லாகாது தம்பியரே
ஆயிகாளி யிடத்தி லைவருட வாயுதத்தை
கட்டியே வைத்து காவலா யன்னவளைக்
கெட்டியாய்ப் பார்த்திடவும் கெஞ்சியே ஆயியையும்
வேண்டியே கொள்வோம் வேந்தரே வாருமென்று
காண்டீபன் தன்னிடத்தில் காவ லனுமுரைத்தார்
மற்றவரெல் லோரும் மனப்படி நல்லதென்றார்
குற்றமொன் றில்லாது கோவில்முன் னேகினரே

பாண்டவர்க ளாயுதத்தை வன்னி மரத்தில் வைப்பது

சன்னதிமுன் வந்து தழைத்திருக்கும் வன்னிமரம்
மன்னர்களும் பார்த்து மகிழ்ந்துமே யங்கிருந்து
தக்க புகழ் தருமர் சாற்றுவார் தம்பியர்க்கு
மிக்கவுல கம்புகழும் மேன்மையான மன்னர்களே
இப்பொழுது நல்வேளை யெடுப்பீரே வேற்றுருவம்
தப்பாது செல்வோம் சடுதி விராட நகர்
என்று மவர்மொழிந்து எண்ணியெம தர்மனையும்
நன்ருன வேதியராய் நல்லரசன் தானுனர்
வேதியர்கள் முன்செய்த வேண தவப்பயனே
பாதி மதிசூடும் பரமனென்றே செப்பிடலாம்
தொடுத்த சிவமாலை துலங்கிடும் பூணூலும்
வடுப்படா மேனிதனில் மாமறை யோர்தரித்து
சடைதனி லேமதியை தான்தரித்த சங்கரன்போல்
தடைசொல்லாத் தம்பியர்முன் தர்மரும் நின்றனரே
தம்பி மதவீமன் தானெண்ணி யீசனையே
நம்பும் படியாரும் நல்வேடம் பூண்டனனே
மடப்பளித் தொழில் தனக்கு மகாபலவா னுயிவனும்
திடத்தோடு நின்ருன் சிறுவர்க ளும்பார்த்து
காண்டீப னப்போது காவலவ னிந்திரனை
வேண்டித் துதித்து மெல்லியா ளூர்வசியை
எண்ணியே சிந்தையிலே இப்பொழுது எந்தனுக்கு
அன்னுளின் சாபம் அருளுவா யென்றனனே
மங்கை யரைப்பழிக்கும் மாது திருவழகும்
சங்கை யடைந்திடுவார் தையலருங் கண்டாக்கால்
மண்ணுசை பொன்னுசை மறந்த முனிவர்களும்
இன்னு ளிவனையே எண்ணி மடிவார்கள்

பூவேந்தர் மோகமது பொங்கிடப்பே டியுருவம்
பூவேந் தனுமெடுத்தான் பொல்லா விதியதனுல்
நகுலனுமே யப்போது நற்பரியைத் தானடத்தும்
லெகுவான பாகனுமாய் லேசா யுருவெடுத்தான்
தம்பி சகாதேவன் தரித்ததொரு கோலுடனே
நம்பும் படியாரும் நல்லகோன் தானுனன்
பாஞ்சாலன் வேணதவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சாலி யப்போது பகவானே யேநினைந்து
எடுத்திட்டா ளேயுருவம் இவ்வுலகத் தோர்மதிக்க
வடுப்படா மேனியதாய் மங்கைதோழி போலானுள்
பஞ்சவரும் பத்தினியும் படைத்த வுருவமதை
சஞ்சலங்கொண் டேதேவர் தனையர் களைப்பார்த்து
மைந்தர்களே வுங்களுக்கு மகாதேவன் கற்பனையோ
இந்தவிதி வந்ததென்று ஏங்கிநின்றுர் தேவர்களும்
தருமருமே யப்போது தம்பிமா ரைப்பார்த்தும்
பொறுமை மிகவுடையார் புகலுவார் யாதெனிலோ
என்னருமைத் தம்பியரே இப்பொழுது வாயுதத்தை
மன்னவரே தாருமென்று மாமறையோர் கேட்டனரே
தம்பிமாருங் கேட்டு சல்தியா யாயுதத்தை
நம்பி யவரிடத்தில் நால்வரும் வைத்தனரே
வில்லையெல் லாமெடுத்து வேந்தனென் றுய்ச்சேர்த்தும்
தொல்லையெல் லாம்விடுத்து சுருக்காகக் கட்டினரே
தம்பிமத வீமனையே தானழைத்து தர்மருமே
தம்பியே வாயுதத்தை தயவுடன் நீயெடுத்தும்
இந்த மரத்தினிலே ஏறிநீ யின்பமொடு
விந்தையான பொந்தில் வீமனே வையுமென்றுர்
அண்ண னுரைத்ததையே அன்பாயவன்கேட்டு
மன்ன னுரைப்படிக்கு மரமதனில் தானேறி

அங்கிருக்கும் பொந்ததனி லாயுதமெல் லாம்வைத்து
சிங்கக் கொடிவீமன் திகைத்து மிறங்கினனே
தம்பிமா ரையழைத்து சன்னதி முன்னேகி
வம்பி யிடத்திலுமே வழுத்துவா ரேதருமர்
மாயிமக மாயியே நீ மைந்தர்க ளாயுதத்தை
ஆயியே காத்துக்கொள் ளம்பிகையே யோர்வருடம்
எங்களுட வாயுதமு மிந்த மரந்தனிலே
சங்கரியே வைத்திருக்கோம் தற்பரியே நீகாப்பாய்
யானும் நரனன்றி யாரொருவர் தொட்டாலும்
காணுமுன் னேயவர்க்கு கடிக்கும்விஷப் பாம்பாவாய்
என்று மவர்சாப மிட்டுமே யன்னேரம்
நன்ருக வீமனையே நாத னழைத்தனரே
வீமனே நாமும் விளம்பியதோர் சாபமதை
நேமனே பார்த்திடுவோம் நீயேறு வாய்மரத்தில்
தம்பியர்க்கு தர்மருமே சாற்றியதோர் சங்கதியை
நம்பி மதவீமன் நல்லமர மேறினனே
மரத்தினி லேறியவன் மறைத்துவைத்த வாயுதத்தில்
திர்த்துடன் கரத்தைவைக்க சீறிய தேயரவும்
படமதனை யேவிரித்து பாரரசன் தன்னையுமே
திடமாய் விரட்டிடவே தேம்பி யவனிறங்கி
வந்துமே யண்ணனிடம் வழுத்தியே சங்கதியை
நொந்து இருந்தனனே நோக்கியத னைநினைத்து
தரும ரதைக்கேட்டு சந்தோஷ முண்டாகி
பொறுமை மிகவுடையார் புகழுவார் தம்பியர்க்கும்
என்னருமைத் தம்பிகளே இப்போது நானேகி
மன்னன்விரா டன்சபையில் வழுத்தியே சங்கதியை
அங்கிருப்பேன் யானும் அரசர்களே பின்னாலே
தங்காது வாருமென்று சாற்றினுர் சங்கதியும்

பாண்டவர்கள் விராடன் சபைக்கேகுதல்.

பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரில் தருமன் பகருவான் தம்பியர்க்கு
தம்பிகளே யான்சென்று தரையர சன்னிடத்தில்
நம்பும் படியவனும் நான்மொழிந்து வார்த்தைகளும்
இருந்தபின் நீங்களுமே ஏகி நகர்தனக்கு
வருவீ ரெனமொழிந்து மன்ன வரும்நடந்தார்
தக்க புகழுடையார் தரும ரவர்நடந்து
மிக்கவிரா டன்சபையை வேந்தனுங் கண்டாரே
நன்ருய் சபைதனக்கு நல்வே தியர்வரவும்
நின்றதொரு சேவகர்கள் நிகழ்த்தினர் ராசனுக்கும்
அரச னதைக்கேட்டே அவசரமா யோடிவந்து
இரவான் பணிந்தனனே செப்பியுப சாரமதை
அருமையாய் வேதியரு மாசீர்வா தம்புரிய
வருக வருகவென்று மன்ன னழைத்தனனே
தரையரச னழைக்க தருமரும் பின்செல்ல
விரைவாய்ச்சிம் மாதனமே வேந்தன் கொடுத்தனனே.
வேதிய ரதிலிருக்க வேந்தனு மப்போது
வேதியர் தன்னிடமும் விளம்புவான் யாதெனிலோ
புண்ணியனே நின்னகரும் பூண்டதொரு போதனை
என்னிடத்தில் தாங்களு மியம்பவே வேணுமென்ருன்
சோதிமய மாயிருக்கும் துங்கமுள்ள வேதியரும்
வேதனை யில்லாமல் விளம்புவா ரேயவரும்
அரசனே நீர்கேளு மஸ்தினு புரிதனையே
திரமா யரசதையே செய்ததொரு பாண்டவர்கள்
தன்னிடத்தில் யானிருந்தேன் சாமிபோல் வைத்திருந்தார்
மன்னவ ரைத்துரியன் மாயத்தால் சூதாடி
நாடு நகரமதை நாகக்கொடி யோன்கவர்ந்து

காடுதனி லோட்டிவிட்டான் காவல ரைவரையும்
வந்தனரே கானகத்தில் மன்னர்களீ ராற்வருடம்
சிந்தைமகிழ்ந் தேகழித்து சேயர்களு மோர்வருடம்
அக்ஞாத வாசமது அவர்கள் மறைந்திருக்க
தக்க தொருவிடத்தில் தான்சென்று ரேயவரும்
அரசன் தருமர் அறைந்தது மெந்தனுக்கு
திரமா யொருவருடம் சென்றுமே வேறிடத்தில்
இருப்பீரே நீங்களு மேவியே நாங்கள்சென்று
திருத்தமா யோர்வருடம் தெரியாம லேயிருந்து
வந்துமே நாங்களும்மை வரவழைத்துக் கொள்ளுகிறோம்
சிந்தைநோ காதபடி செல்லுமென் றுரைத்தனரே
ஆனதினு லேகா ணரசனே வும்மையேநான்
காணவே வந்தேனென்று காவல னிடமுரைத்தார்
பூபாலன் கேட்டு புண்ணிய ரைப்பணிந்து
மாபா ரதனில்வந்த மறையோ ரிடம்மொழிவான்
சாமியே யென்பதியை தன்பதிபோ லேநினைந்து
நேமியே நீராளும் நிச்சய மென்றனனே
சந்தோஷங் கொண்டு தானிருந்தா ரேயவரும்
அந்தநாட் போக அடுத்த மறுநாளில்
மடப்பளி வேடமதை மன்னனும் பூண்டதொரு
திடப்புயத் தானடந்து சீக்கிர மாகவந்தான்
அரசன் சபைதனிலே அதிவேக மாகவந்து
திரவானும் நின்று செய்தா னமஸ்காரம்
அப்போ விராடனு மவனை வரவழைத்து
செப்பென்றுர் வரலாற்றை செப்புவ னேயவனும்
அரசனே யானு மத்தினு புரிதனையே
திரமதா யாண்ட செய்யபஞ்ச பாண்டவரில்
தருமருக்கு நேரிளையான் தன்னிடத்தி லேயானும்

விரும்புஞ்சம யற்றொழிலில் வேந்த னிடமிருந்தேன்
என்பேர் பலாயினனென் றியம்புவார் யாவருமே
மன்ன ரிடந்தனிலே மகாபிரிய மாயிருந்தேன்
பாவிதுரி யோதனனால் பாண்டவர்கள் காடேகி
மேவி வசித்திருக்க வேந்தர்கள் சென்றார்கள்
ஆனதினா லும்மிடத்தி லடியே னொருவருடம்
மானபரனான மன்னா யிருக்க வந்தேன்
எந்தனுக்கும் நீங்க ளேற்றதொழி லைக்கொடுத்து
சிந்தை மகிழ்ந்திருக்கச் செய்குவா யென்றனனே
பதியரச னப்போது பார்த்து இவன்றனையும்
ததிசமையல் செய்திடவும் சாற்றினா னேயரசன்
மடப்பளியில் சென்று மன்னன் பலாயினனும்
திடத்தோடு வங்கிருந்து செய்துவந் தான்சமையல்
அப்பா லருச்சுனனு மன்பான பேடியைப்போல்
தப்பாது வந்தான் தரையரசன் தன்சபையில்
வந்ததோர் பேடிதன்னை மன்னன்விரா டன்பார்த்தும்
சிந்தை மிகமகிழ்ந்து செப்புவான் யாதெனிலோ
எந்தவூ ரம்மா இங்குவந்த காரியமும்
உந்தனது பேரும் ஓதுவாய் என்றனனே
நல்லரசன் கேட்கவுமே நற்பேடியோ சித்தங்கே
மெள்ள மொழிவாள் வேந்த னிடந்தனிலும்
அடியே னிடதேசம் அஸ்தினா புரியரசே
படிதவறு தாண்டவர்கள் பாண்டுவின் பிள்ளையிடம்
பாஞ்சாலன் வேணதவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சாலிக்கு யானே பரதநாட் டியமதனை
கற்றுக் கொடுத்துவந்தேன் கன்னிகைது ரோபதைக்கும்
விற்றிறமை மன்னர்களும் வெகுபிரிய மென்மேலே
பாவிதுரி யோதனனும் பஞ்சவரைத் தானழைத்து

மேவியே மண்டபமும் வேந்தருடன் சூதாடி
ஐவரைத் தோற்கடித்து அரசையெல் லாம்பறித்தும்
செய்யாத வேலைகளும் செய்தானே பாதகனும்
பனிரெண்டு தன்வருடம் பாழான கானகத்தில்
தனியே யிருந்திடவே சாற்றினன் பாதகனும்
பாண்டவரும் பத்தினியும் பாதசாரி யாய்நடந்து
நீண்டதொரு கானகத்தில் நேர்மையொடு சென்றார்கள்
அவர்க ளுடனே அடியாளும் பின்சென்றும்
தவராது பணிவிடையும் தான்செய்தே னம்மையர்க்கும்
ஐவருட னோராண்டு அடவிதனில் சஞ்சரித்தும்
செய்திடவக் ஞாதமது சேயர்க ளோர்வருடம்
சென்றார் மறைந்திருக்க சேயிழை யோடவர்கள்
நன்றாக வெந்தனையும் நாதாக்க ளோர்வருடம்
எகி மறுநகரி லிருந்திடச் செப்பியவர்
எகினு ரெவ்விடமோ யானறியே னரசே
எந்தனையு மிங்கு எந்தலே யோர்வருடம்
சந்தோஷ மாகவுமே தானிருக்கச் செய்வாயே
என்றிமே பேடி யியம்பினதைக் கேட்டரசன்
நன்றாக ருத்திரைக்கு நாட்டியம தைப்பழக்க
விடைகொடுத் தனுப்பினனே வேந்தனும் பேடிதனை
தடையில்லாது சென்று தையலாம் ருத்திரைக்கு
எங்குமில்லா நாட்டியமு மியல்பா டலுமுரைத்து
தங்கி யிருந்தானே தக்கபல வான்பேடி
இப்படிக் காகவே இவர்கள்போய்ச் சேர்ந்தபின்பு
சொற்படி யேனடக்கும் துய்யபரி யிற்சிறந்தோன்
மிக்கவரசன் சபையில் வேகமா யோடிவந்தும்
தக்க பெருஞ்சபைக்கு சாஷ்டாங்கம் பண்ணினனே
நின்றவனை யப்போது நீதிமன்னனும் பார்த்து

அன்றவனைக் கேட்பா ரன்புமிகப் பெருகி
எந்தவூ ரையாநீ இங்குவந்த காரியத்தை
எந்த னிடந்தனிலே இயம்புவா யென்றனரே
அரச னுரைத்தனதையே அச்சிறுவ னுங்கேட்டு
திரமா யவரிடமுஞ் செப்புவான் யாதெனிலோ
பாரதையே யாண்ட பஞ்சவ ரைவர்களில்
வீரமாய்ப் பரிநடத்தும் வேந்தன் நகுலனிடம்
பரிதனக்கே யெசமான் பண்ணிவைத் தாரெனையும்
அறியவே தானுரைத்தே னரசனே வுண்மையிது
வேந்தனே யெந்தனுக்கு விளம்புகின்றபேரும்
சாந்தனே சொல்வார் தாமக் கிரந்தியென்றும்
தங்களிட மோர்வருடந் தங்கி யிருப்பதற்கு
எங்கோனே வாக்கு மியம்புமென் றுரைத்தனனே
அரசன் மிகக்கேட்டு அந்தச் சிறுவனையே
திரமாய்ப் பரிதனக்கே செய்தான் யெசமானுய்
அதிகப் பிரியமாய் அவன்லாய மேபுகுந்து
பதியரசன் வான்பரியைப் பாதுகாத்து வந்தனனே
தம்பிசகா தேவனுமே தரித்ததொரு கோலுடனே
வெம்பியர சன்சபையில் வேகமாய் வந்துமவன்
அரசனைத் தான்தொழுது அங்குநிற் கச்சிறுவன்
அரசனு மேபார்த்து அவனிட முங்கேட்பார்
எந்தவூ ரப்பா இங்குவந்த காரணமும்
சொந்தமான பேருஞ் சொல்லுவா யென்றனரே
அப்போ சிறுபால னரச னிடந்தனிலும்
தப்பா துரைப்பானே சங்கதி பூராவும்
அரசனே நீர்கேளு மஸ்தினு புரிதனையே
திரமா யரசதையே செய்ததொரு பாண்டவரில்
ஐவர்களி லிளையோன் ஆனசகா தேவனிடம்

செய்தேன் தொழிலொன்றைச் செப்புகிறேன் கேளும்
வேண பசுக்களையே வெம்பாது நானோட்டி
கானகத்தில் சென்று காப்பாற்றும் வேலையென்றான்
தரையரசே யென்பேரு தந்திர பாலனென
முறைதெரிந்த பெரியோர் முடிமன்னா தானழைப்பார்
தங்க ளிடந்தனிலே தங்கியே யோர்வருடம்
தங்கி யிருந்திடவும் சாற்றுவா யெந்தனுக்கும்
என்று சிறுவனுமே இயம்பியதைக் கேட்டரசன்
நன்றாக வேயிவனை நற்பசுவுக் கெசமானாய்
கொடுத்துமே வேலைதனை கூட்டி யிவன்றனையும்
விடுத்து பசுவினிடம் வேந்தனை யங்குவைத்தார்
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவ ரைவர்களும் பரிவா யமர்ந்தனரே
பாஞ்சாலன் வேணதவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சா லியுமன்று படைத்த வுருவமுடன்
சுத்த முடன்மாது சுதர்க்கணை மாளிகையை
நத்தி நடந்தனளே நங்கையும் வேகமொடு
மாளிகையின் முன்புவந்து மங்கை யொருத்தியையும்
நாளிகையி லேயழைத்து நங்கை யவளிடமே
சங்கதியை யுரைக்கத் தானினைந்து தையலரும்
அங்கவ ளிடந்தனிலே அறைவாளே சங்கதியும்
மாதுமேநீ சென்று மங்கை சுதர்க்கணைக்கு
ஓதுவா யென்வரவை உங்க ளரசியிடம்
என்று மிவள்சொல்ல ஏகியு மேதோழி
கண்டு வரசியைத்தான் காலில்வீழ்ந் துபணிந்து
அம்மைநம் வாசல்தனில் அரம்பையைப்போ லோர்மாது
திம்மை யடைந்துவந்து செப்பச்சொன் னாள்தாயே
எந்த வுலகமோ இந்திரன் தன்னுலகோ

வந்திருக்கும் மாதை வருந்தி யழையுமென்றாள்
சந்தோஷங் கொண்டு தையல் சுதர்க்கணையும்
வந்தமங் கையிடத்தில் வந்தனளே சீக்கிரமே
மங்கையுங் கண்டு மகிழ்ந்துவுப சாரமதை
சங்கையில் லாதபடி தானேதி யேயவளும்
வாருமம்மா வென்று மங்கையரைக் கைப்பிடித்து
நேரு பிசகாமல் நேர்மையொடு வந்தார்கள்
மாளிகைபி னுள்நுழைந்து மங்கையரை யாசனத்தில்
நாளி யிருக்கவைத்து நங்கை யருங்கேட்பாள்
தங்கையே யிங்கேநீ தனியாக வந்ததென்ன
எங்கே வுன் னூரு மென்னிட மேபுகல்வாய்
என்றுமாது கேட்க இதைக்கேட்டு மங்கையரும்
நன்றாக வேமொழிவாள் நல்லவா சியிடத்தில்
அன்னையே என் னூரு அஸ்தின புரிதனையும்
முன்னாண்ட பஞ்சவர்கள் மொழிதவருப் பத்தினிக்கு
இஷ்டத் தோழியாக இருந்தேனே தாயேநான்
கட்டழக ரைத்துரியன் காட்டுக்கு வோட்டிடவும்
இஷ்டமுட னேகாடே ஏகியே நாங்களுந்தான்
கஷ்டமிகப் பட்டோம் காடதனி லோராண்டு
இன்னு மொருவருட மிருந்ததா மக்ஞாதம்
மன்னர்கள் மறைந்திருக்க மாவனத்தி லென்னைவிட்டு
செப்பிச்சில சேதியதை சேயிழையே யென்னிடத்தில்
தப்பினா ரேயவர்கள் தையலரே காணேனே
உந்தன் பெருமைதனை ஓதினா ரிவ்வூரார்
அந்தமொழி கேட்டு அடியேன்வந் தேன்தாயே
எந்தனை யோர்வருட மிங்கிருக்க நீவைத்தால்
வந்தபின் னவர்களும் வரவழைத்துக் கொள்வாரே
உன்னுடைய தஞ்சம்நான் உகந்துகாப் பாயெனையே

என் னுடைய விர்த்தாந்தம் இதுதா னெனப்புகன்ருள்
அம்மணி நீயஞ்சாய் அடியே னுனைக்காப்பேன்
செம்மையாக மதியைச் செப்பிஞ ளேயரசி
அப்போது வண்ணமக ளரசியைத் தான்பார்த்தே
செப்புகின் ருளே செகவரசி தன்னிடமே
அம்மணியே கேளாய் அடியேனிட வாக்கியத்தை
எம்மை மணந்தவர்கள் இருக்குருர் விண் ணுலகம்
வா னுலகு கெந்திருவர் மன்னர்க ளைந்துபேரை
நா னும் கலியாணம் நடத்திக்கொண் டேன் தாயே
யானிருக்கு மிடத்தி லாடவர்கள் கூடாது
தானிருக்கச் செய்து தாயே யெனைக்காப்பாய்
வந்துமே ஆடவர்கள் வம்பு புரிந்தாலும்
நொந்திடவே கெந்திருவர் நோக்கியவ ரைமடிப்பார்
இந்தச்சங் கதிதனையே எடுத்துரைத் தே னுனக்கும்
சந்தேக மில்லையென் றும் சாற்றிஞ ளேயவளும்
அம்மையே வுன்மனம்போ லாடவர்கள் வாராது
செம்மையான காவல் செய்துவைப் பேனென்ருள்
பாண்டுமன்ன னீன்றெடுத்த பாண்டவரும் பத்தினியும்
பூண்டவேட முடனே புகழ்ந்திருந்தா ரம்மானை
மாதமும் மாரிகளும் வழிந்தோடிப் பெய்யவுமே
பூதலங்கள் யாவும் பொங்கிட வேபயிர்கள்
மாதரசி குந்தியம்மாள் மைந்தர்களும் சேமமதாய்
பூதலத்தோர் காணுது புண்ணியர்கள் தாமிருந்தார்
மனத்தினிலே மாயவனை மறவாம லேயவர்கள்
தினந்துதித் தேயிருந்தார் செங்கருடன் வாகனனை

விராட ராஜன் சபைக்கு
வாசவனென்னும் மல்லன் வருதல்.

அப்பால் கொலுமுகத்தி லமர்ந்த சமயமதில்

தப்பாது ராசன்வந்து தானமர்ந் தார்கொலுவும்
இந்த வுலகத்திலே எங்குமே சஞ்சரித்து
வந்தா னொருவனுமே வாசவ னுமல்லன்
காத வழிதூரம் கையே னிகழுமது
ஓதலாஞ் சரீரமதை உயர்ந்த மலையெனவே
மத்த வுருவமதனை மதித்துக் கொள்ளவேண்டும்
எத்தலத்தி லும்புகழ எங்கும் கியாதிபெற்று
பெலத்தில் மிகுந்ததொரு பெரியவன் நானென்று
மலைத்திடாது வந்தான் மன்னன் சபையதிலே
அரசை மிகத்தொழுது அடிபணிந்து தெண்டனிட்டான்
திரவானே யென்னுடனே செய்யவே யுத்தமது
மல்லருண்டோ வும்மிடத்தில் மனதிலே யுண்டான
நல்லதொரு மல்லனையே நம்மிடம் போர்க்குவிடும்
அவனுரைத்த வார்த்தைதனை அரசனுங் கேட்டுமதை
இவன்பெலவா னென்று எண்ணி யரசனுமே
வேண வருசைகளும் விதவிதமா யாடைதனை
பூணவே ஆபரணம் புகழ்ந்தளித்தா ரன்னேரம்
கண்டே வரசன்மல்லர் கனகோப முங்கொண்டு
விண்டுயெச மானிடத்தில் விளம்பியே சங்கதியை
இன்றுஇம் மல்லனையே எம புரிதனக்கும்
சென்றிடவே செய்வோம் சீக்கிரம் விடைதருவீர்
என்றுசொல்லிக் கேட்டார் இராசன் தனைப்பணிந்து
நன்றெனவே கோமான் நடவுங்க ளென்றனனே
சொன்னதே போதுமென்று சுறுக்காக சென்றுமவர்
மன்னனும் பார்த்திடவும் மல்லனிடம் வந்தனரே
வந்தவரில் வாசவனை வைகுந்தமே சேர்ப்பேன்
இந்தவேளை னென் றேகினு னவனிடமும்
என்று வரசன்மல்லன் எதிர்த்து அவனோடு
ரெண்டுபேரு மல்லதனை ராசன்முன்னே செய்தார்கள்

ஒருவர்க் கொருவருமே ஓயாது குத்துவிட்டும்
தெருவுகள் பூராவும் திகிலடை யும்படியே
சாம பரியந்தரம் சண்டை யவர்செய்தும்
வாமமுள்ள வாசவனும் வந்தமல் லன்தலையில்
வேகமொடு குத்திடவும் வேந்தனிட மல்லன்றனை
போகவே காலனூர்க்குப் போக்கினன் சீக்கிரமாய்
இன்னமுண்டோ மல்லரென்று ராசனைக் கேட்டிடவும்
பின்னு லிநக்தொருவன் பெரியசத்தம் போட்டெழுந்தான்
வாடா பயலேயுன்னை வைகுந்த நற்பதிக்கு
நாடவே நான்வதைப்பேன் நாயே வுனைச்சணத்தில்
வைதுமே வந்துமவன் மற்றெருரு மல்லனுடன்
கைகலந்து குத்துமிட்டார் கடுங்கோப மாயவர்கள்
மெய்பதறி யேயவர்கள் வேணயுத்தம் செய்ததையும்
ஐயையோ பார்த்தாலு மதிகத்தோ சம்வருமே
மட்டில்லாக் கோபமதாய் மன்னர்மல்லன் நெஞ்சுதனில்
நிட்ரேமாய்க் குத்திடவே நெஞ்சடைத் தவன்மடிந்தான்
காலை யுதறியவன் கணைத்துக்கண் ணையுருட்டி
நாளை யுதயமதில் நாம்வரு வோமென்று
அரச னிடத்தினிலு மவனு மிதையோதி
திரவான்போ லேநடந்து சென்றுனே சாகைதனில்
அரசனு மப்போது அந்தமல்ல ரைநினைத்து
திரவானே நம்மல்லரை செயித்தா னிவன்றனையும்
கங்கப்பட்ட ரிடமே காவலனுந் தானுரைத்து
பொங்கமில் லாதபடி பூபா லனுமிருந்தான்
நம்மிடத் திருந்தமல்லர் நாசமாய்ப் போனூர்கள்
வெம்பிடச் செய்யயிவனை வேறெருருவ ரைக்காணேன்
என்றுசொல். லியரசன் ஏங்கி யழுவதையும்
நன்றான தர்மருமே நவிலுவார் ராசனுக்கு

அரசனே யேன்கவலை அடைகுறீர் நம்மிடத்தில்
திரவா னிருக்கின்றான் செயித்திடுவான் மல்லனையே
பாலடி சில்சமையல் பண்ணும் பலாயினனை
சாலவே சங்கதியைச் சாற்றி யவனிடத்தில்
இந்தமல்ல னோடு ஏகியே போர்க்குவிட்டால்
சொந்தமாய்க் காலனூர்க்கு சுருக்கா யனுப்பிடுவான்
வீமசே னனிவனை வெகுபேர்கள் மல்லருடன்
நேமமாயுத் தஞ்செய்து நிமிசம்வதை யென்றிடவும்
வந்ததொரு மல்லர்தனை வழுத்தினது போதுமென்று
சிந்தைநோக அவரைச் சேர்த்தானே வைகுந்தம்
பார்த்திருக்கேன் நானும் பாரரசே யவனை
நேர்த்தியாய் வாசவனை நிமிசம் வதைப்பானே
நல்லதெனக் கேட்டு ராசன் மனமகிழ்ந்து
மெள்ளவே சென்றானே வேந்தனும் மாளிகைக்கு
நாற்றிசையோர் துதிக்கும் நல்லசோதி யருணன்
கீற்றிசையி லிருந்து கிளம்பினான் விண்ணோக்கி
கதிரோன் வருவதையுங் கண்டு வரசர்களும்
ததியே காலைக்கடனை சல்தி முடித்தார்கள்
நேசமொடு வரசர் நிறைந்தார் கொலுவினிலும்
வாசவ னென்றமல்லன் வந்து தொழுதனனே
தமக்குள்ள மல்லர்தனைச் சண்டாளன் கொன்றுவிட்டேன்
எனக்கு விடைதாரு மேகவே யூர்தனக்கும்
என்றுசொல்லிப் பணிந்து விராசனையே கேட்டான்
அன்று வரசனுமே யவனை யிருக்கவைத்தும்

பலாயினனை அழைத்து
வாசவனோடு மல்லுக்கு விடுதல்

அரசனும் சேவகரை அழைத்து மவர்களிடம்
சரசரென நடந்து சல்தி மடப்பளியில்

இருக்கும் பலாயினனை இவ்விடமே நீரழைத்து
வருகுவீர் சல்தியென்று மன்ன னுரைத்தனரே
அவ்வார்த்தை யைக்கேட்டே யாவ லுடனடந்து
அவ்வசரன் மாளிகையி லான மடப்பளியில்
இருக்கும் பலாயின னிடமேகிச் சேவகரும்
திருத்தமாய்ச் செப்பினரே செய்திகள் பூராவும்
அரச னழைத்தாரென் றவனுக் குரைத்திடவும்
திரவானுங் கேட்டு தேகமது பூரித்து
அன்றுகச் சைதனையே அவனிருக்கி யேசீராய்
நன்முக வந்தானே நல்லவர சன்சபையில்
வந்து சபைதனிலே வணங்கி யரசனையே
எந்தனை யழைத்ததுவும் ஏதுவகை சொல்லுமென்முன்
அப்போகங் காபட்டர் அவனை யருகழைத்து
செப்புவார் சங்கதியை தீரவான் தன்னிடத்தில்
பலாயினனே யிந்த பாவிவா சவனோடு
பெலமான யுத்தம் பிரியமாய்ச்செய் யென்றனரே
அரசனும் சொல்லிடவே அவ்வார்த்தை கேட்டவனும்
திரமுடனே வந்தான் செய்யவே யுத்தமது
வாசவ னென்றதொரு மல்லனுக்கு பின்புவந்து
நேசமொடு மவனும் நின்று துடை தட்டினனே
அப்போது வாசவனு மரச னிடத்தில்வந்து
செப்புகின் றனவனே செய்தியு மாதெனிலோ
சொந்தமல்ல ரிருவர் தொலைந்தாரே நேற்றேதான்
இந்தமல்ல னொருத்த னிருக்கா னென்றேநீர்
என்னிடத்தில் போர்செய்ய இவனையே கொண்டுவந்தாய்
மன்னு சனந்தனிலே மடிகுவா னென்றனனே
இவன்தா னொருத்த னிருக்கட்டு மேமன்னு
இவன்தனைக் கொல்லுதற்கு என்மனம் நோகுதே

இன்னும் பலவிதமு மெடேட்ட மானவார்த்தை
மன்னனது சபையில் வழுத்தினன் வாசவனும்
மல்ல னுரைத்ததையே மகராச னுங்கேட்டு
நல்ல பலாயினனே நடத்தென்றான் மல்யுத்தம்
அரச னுரைத்ததையே அவனு மிகக்கேட்டு
திரவா னிடத்தினிலே சென்றானே சீக்கிரமும்
பலாயின னுஞ்சென்று பாவிவா சவனோடு
பெலமான யுத்தம் பிரியமாய்ச் செய்தனனே
பலாயினனுங் குத்தினன் பாவியாம் வாசவனை
விலாவிலே பட்டிடவும் வேணரத்தங் கக்கினதே
களைத்துமே கீழ்விழுக காலனு மங்குவந்து
வளைத்தே யவனுயிரை வாங்கியே சென்றனனே
பிணமாக வாசவனும் பெருமைகொண்டு மரசன்
இனவான் பலாயினனை இவாழைத்து மருகே
சிந்தை மகிழ்ந்தரசன் செப்புவார் பட்டரிடம்
விந்தையா யிங்குவந்தான் மிகத்திடவா னுலெனக்கு
இனிமேல்சமை யற்றொழிலி லிருக்கலா காதுவென்று
தனியாளா யொன்று சல்தியாய் வைத்தனனே
மடப்பளி தன்னிலுமே மன்னன் பலாயினனை
திடமான பேரைவைத்துச் செய்யென்றான் மானேசர்
வேணவருசைகளும் விதவிதமா யாடையொடு
பூணவே ஆபரணம் புகழ்ந்தளித்தா னன்னேரம்
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரும் பத்தினியும் பரிவா யிருந்தனரே
விந்தையுள்ள பஞ்சவர்கள் விசனமொன் றில்லாது
சந்தோஷமாகவுமே தானிருந்தா ரம்மானை
வைசம்பா யணரும் வழுத்தசென மேசயனுக்கு
ஐயாவே சொல்லுமென்று அடிபணிந்து கேட்டனனே

கீசகன் துரோபதையைக் கண்டு மோகித்தல்

பாண்டவரும் பத்தினியும் பத்துமா தம்வரையில்
நீண்டமச்ச னுடதனில் நீதியோ டிருந்தார்கள்
சுதர்க்கணை யுடதம்பி துஷ்டனுங் கீசகனும்
இதத்துட னந்தப்புர மேகி தமக்கையிடம்
ராச்சியத்தின் சேதி நல்ல வுகமைகளும்
பாச்சி யமுதன்னம் பாதகனு மேயுண்டு
பின்னுஞ்சில சேதியுமே பிரியம தாய்ப்பேசி
விண்ணுலகோர் புகழ மேன்மை யொடுவமைந்த
அந்தப்புர நந்தவன மங்கிருக்க வும்பார்த்து
விந்தையைப் பார்க்கவென்று மேவினன் துஷ்டனுமே
வந்து மதிலுள்ள வளங்களை யும்பார்க்க
விந்தையுள்ள செடியும் வேண பறவைகளும்
மந்தாரை பிச்சியொடு மலருமிரு வாட்சிகளும்
செந்தா மரைச்செடியும் சேகரமாய்ப் பார்த்தனனே
வருசையாய்ப் பார்த்துமவன் வளங்கள்கண் டேமகிழ்ந்து
திரும்பியே வந்தான் தெய்வரம்பை யைப்போல
அங்குமொரு மாது மவள்கைக் குடலையுடன்
தங்கி யிருந்திடவே சண்டாள னுங்கண்டும்
அரசனவ ளைப்பார்த்து ஆனந்த முங்கொண்டு
சரசரென வேனடந்தான் தைய லிருக்குமிடம்
நின்றுமே பார்த்தான் நேரிழையாள் தன்னழகை
கண்டுமே பாதகனும் கழறுவான் யாதெனிலோ
பாவிப்பிர்ம னிவளைப் படைத்தது மேயவனும்
மேவி சுகிக்கவென்று வெண்ணி யமைத்தானோ
தேவர்களுங் கண்டால் தினஞ்செய்கு வார்தொண்டு
மூவரும் பணிவிடையே முற்றிலுஞ் செய்வார்கள்
பாவைதனைக் கண்டு பாவிமதன் நாணமுற்று

பாவைரதி யோடுமவன் பறந்தானே விண்ணேக்கி
தேரியவ னுள்ளமது தேடி மலர்க்கணையை
மாரியெந்தன் மீது மாபாவி யுந்தொடுத்தான்
அந்த மலர்க்கணையு மடியே னுடற்பாய்ந்து
சிந்தைமிக நோகவும் செய்யுதே பாவிகணை
மங்கை யிடஞ்சென்று வரலாற் றனைக்கேட்டு
இங்கையே கூடி இவளுட னேனுனும்
என்னுடைய மாளிகையி லிவளை யழைத்தேகி
மின்னிடையாள் தன்னை மேவி சுகித்திடுவேன்
என்று மவன்மொழிந்து ஏகியே மங்கையிடம்
நின்றுமே பாதகனும் நிகழ்த்துவான் யாதெனிலோ
தேடிவந் தேனுனையே செந்தேனே யிப்பவும்நீ
மோடிகள் செய்யாது மொய்குழலே கூடிடுவாய்
சித்தசனும் வில்லதனை தேவிவளைத் தேகணையை
இத்ததி பூட்டியுமே என்மேலு மேவினனே
சித்தமதில் தைத்து சேயிழையே யிப்போது
மெத்த மயக்குதடி மேவி யெனைச்சேர்வாய்
காம வெறியதனுல் கண்ணே மயங்குவதை
மாமயிலே தீர்ப்பாய் மயக்குங் காமமதனை
வாதுகள் செய்யாது மாமயிலே வாய்திறந்து
ஓதுவா யெந்தனிடம் ஓவியமே தப்பாமல்
நன்ருகத் தொண்டுகளும் நான்செய்வேன் நாயகியே
இன்றுவந்தென் மாளிகையி லென்னுடைய பஞ்சணையில்
கூடிடுவோம் நாமும் கோமளமே தப்பாமல்
நாடிவரு வாயென்று நங்கையைத் தானழைத்தான்
அவனுரைத்த வார்த்தைதனை அம்மையு மேகேட்டு
தவருய் மொழிகின்ருன் சண்டாளன் நம்மிடத்தில்
நாசமழி வானிடத்தில் நாமென்ன சொல்வதென்றும்

பேசாது நின்ருள் பெரும்பதுமை யைப்போல
அப்போது கீசகனு மங்கிருக்கும் தோழிதனை
தப்பா தழைத்துமவன் சல்திவா வென்றனனே
தோழி யதைக்கேட்டு சுருக்காக வோடிவந்து
காலில் வீழ்ந்துபணிந்து கன்னிகையு மேனென்ருள்
கும்பிட்டு நின்றதொரு கோதைய ரைப்பார்த்து
வம்பனுங் கீசகனும் வழுத்துவான் யாதெனிலோ
இந்தமங்கை யுமாரு இவளிருக்கும் தேசமதும்
சொந்தமன்னன் பேரும் சொல்லுவா யென்றனனே
என்னரசே யுன்தமக்கை இடத்திலுமே யிந்தமங்கை
மன்னவரே வேலைசெய்ய வந்திருக் காள்தெரியும்
வேருென்றும் நானறியேன் வேந்தனே யென்றுமவள்
பாரோர் புகழும் பாவியிடஞ் செப்பினளே
அரச னதைத்கேட் டாங்கார முங்கொண்டு
திரமான வார்த்தைகளும் செப்பத் துணிந்தனனே
இன்றுநான் கேட்பதற்கு என்னை மதிக்காது
நன்று வேலைக்கிருந்த நாரி பெருமையென்ன
மேட்டிமையு மேண்டி வேலைக்காரி நீதானே
காட்டுகிருய் யென்னிடத்தில் கன்னிகையே யுன்சமர்த்து
பதுமையைப்போல் நிற்குருயே பாவையரே யிப்போது
இதுவுமென்ன மோடி இரும்போடி யுன்மனது
கல்லாணு லுங்கூட கரைந்திடுமே கன்னிகையே
சொல்லாகிலும் மொழிவாய் சொர்னமே யென்னிடத்தில்
இத்தனைநே ரம்வரையில் ஏந்திழையே யுன்னிடத்தில்
எத்தனை நான்மொழிந்தும் இரங்கலையோ வுன்மனது
இன்னும் பலவிதமா யேகமதா யுரைத்தும்
மன்னனுமே சென்ருன் மங்கை யருகினிலே
வண்ணமக ளப்போதும் வருவதையு மேபார்த்து

மன்னன் மடையனுக்கு வழுத்துவாள் யாதெனிலோ
எட்டவே நில்மூடா இங்குயேண் டாவாராய்
கெட்டிடுவாய் சீக்கிரத்தில் கேடு வருமுனக்கு
துஷ்டனே யுந்தனுக்கு தொலையுங்கால மானதினுல்
இஷ்ட முடனேகி இங்குமே நீவாராய்
மாது வுரைத்தனளே மகாகோப மாகவுமே
தீதுசெய்ய வந்தோன் செவியதனில் பட்டிடவும்
கீசகனுங் கேட்டுமதை கிலேசமொடு மாதுவிடம்
பாசமொடு தானே பகருவான் பாதகனும்
மாதரசே யெந்தனுடு மருவிச் சுகித்தாக்கால்
பாதந் தொழுதிடுவேன் பைங்கிளியே யுந்தனுக்கு
காத்திடுவாய் பெண்ணே காமனின் வேதனையை
தீர்த்திடுவா யெந்தனுக்குந் தேனே யிதுசமயம்
என்று பலவாருய் எடுத்துரைத்தும் பாதகனும்
நின்று தொழுதானே நேரிழை யாள்தன்னை
மாது மிதைக்கேட்டு மன்னவ னைப்பார்த்து
ஓதுகிரு ளவளே உள்ளபடி தப்பாமல்
எமைக்காக்கும் கெந்திருவ ரிருக்கின்ரு ரைந்துபேர்
தமைக்கே தெரிந்தாக்கால் சல்தியுனை மடிப்பார்
அதிலொருத் தன்பெலவா னறிந்தா லுனையேவிடான்
சதிவரு முன்னே நீ தான்செல்லு வாய்மூடா
கற்புடைய மாதர்தம்மேல் காதலது கொண்டவர்கள்
விற்பிடித்த ராவணனும் வேரழிந்தான் சீதையினுல்
பெண்ணையெண்ணி மடிந்தோர் பேருலகில் ரெம்பவுண்டு
என்னை யெண்ணிமடிய இங்குவந்தாய் பாதகனே
பாவிபிர்ம னுந்தனையே படைத்த படிநீயும்
மேவியே யென்னிடத்தில் விளம்புருய் வாதுகளை
மாதுமே யந்த மடையனுக்குச் சங்கதியும்

தீது வாராதபடி செப்பியப் பால்நடந்தாள்
அன்னையுஞ் செல்வதையு மறிந்து முழுமூடன்
முன்னேவந்து கையால் மொய்குழலைத் தான்மறித்தான்
அவனு மறித்திடவே அம்மையுமே மெய்பதறி
தவறுவந்த தென்று தையலரு மேநினைந்து
திரும்பிப் பாராதபடி சேயிழையு மப்போது
விரும்பியே யோடிவந்தாள் வேகமாய் மாளிகைக்கு
சுதர்க்கணையின் மாளிகையில் சுருக்காக வேபுகுத
விதமாய் வருவதையே மெல்லி யறிந்தனளே
அம்மையே யிப்படி நீ அழுது வருவதுமேன்
திம்மையார் செய்தார்கள் செப்புவாய் தாயேயென்றாள்
மங்கையின் கண்ணீரை மகராசி யுந்துடைத்து
எங்கேநீ சென்ருய் இப்படி வந்ததென்ன
அவளுக்கு ஆதரவும் அன்பாக வேமொழிந்து
தவராது சொல்லுமென்று தையலருங் கேட்டனளே
வண்ணமக ளப்போது மனதைத் திடப்படுத்தி
மன்னன் மனைவியிடம் வழுத்துவாள் சங்கதியை
அம்மையுன் தம்பியுமே அண்டிவந் தேயெனையும்
செம்மையாய் வேணதையே செப்பினு னேதாயே
போடிவாடி யென்றான் பொல்லாத துஷ்டனுமே
நாடியே யெந்தனிடம் நாயு மிழுக்கவந்தான்
வாடியென் னரண்மனையில் மங்கையரே நாமிருவர்
சோடியாய்ச் சென்று சுகத்தை யனுபவிப்போம்
இன்னும் பலவிதமே யெனைப்பேசி னான்தாயே
சொன்னதையு முரைத்தால் துயர மிகவடைவாய்
அன்னையே யுன்னிடத்தி லடியேன் வரும்போது
முன்னே மொழிந்திருக்கேன் மொய்குழலே யோர்செய்தி
அந்தரம்வாழ் கெந்திருவ ரைவர்களு மெந்தனையே

சொந்த மதாய்மாலை சூட்டினவ ரென்றுரைத்தேன்
எந்தனை யாடவர்க ளிச்சித்தா லேயவரை
வந்தே வதைத்திடுவார் வானவர்கள் தப்பாமல்
சண்டாளன் தன்னை தான்வைத்தாய் ராச்சியத்தில்
உண்டே வெகுதுன்பம் உன்னுடை மேயழியும்
அன்னையே யிச்சங்கதியை அறைந்திடவே கூடாது
உன்னிடத்தில் நான்தாயே உகந்து புசித்ததினுல்
சங்கதி பூராவும் சாற்றினே னம்மையேநான்
இங்கேதான் வந்ததற்கு மிதுபோது மென்றுரைத்தாள்
அழுதிடு மங்கைதனை யந்தச் சுதர்க்கணையும்
அழவேண்டா மென்று அடியில்வீழ்ந் தேபணிந்தாள்
வேண தைரியத்தை மெல்லி தனக்குரைத்து
மானபரன் தேவி மங்கையை யிருக்கவைத்தாள்

கீசகன் சுதர்க்கணையிடம் வந்து
வாதாடுவது

பாழான கீசகனும் பணிப்பெண்ணின் பின்னுலும்
கோலாகல மாகவுமே கோபித் தவன்வந்தான்
வேணதொரு சங்கதியை விளம்பியப் பாதகனும்
மானங்கெட்ட மூடன் மங்கைய ரிடத்தில்வந்தான்
தமக்கையரிடம் வந்தும் சாற்றுவான் சங்கதியும்
எமக்கிந்த மங்கையரை இன்றுகூட நீசெய்வாய்
தாள்பணிந்து மேயவனும் தையலரே யெந்தன்மேல்
வேள்மதனு மிப்போது விட்டான் கணையேவி
மானரத் துளைக்கிறதே மலர்க்கணைக ளிப்போது
சேரவண்ண மகளை செய்துவைப்பா யெப்படியும்
இல்லா விடிலோதா னிறப்பது நிச்சயமே
சல்லாப மாய்க்கூட தையலரே யுரைப்பாய்
நம்மிடம் வேலைசெய்யும் நாரியிவ ளாகையினுல்

உம்மிட வார்த்தைதனை ஒருக்காலுந் தட்டாளே
தமக்கை யிடத்திலுமே சாற்றியே சங்கதியை
எமக்குவரு மாபத்தை இன்றுதீ ரென்றனனே
சுதர்க்கணையு மப்போது துடியனிட மேயிதையும்
இதத்துடனே மொழிவா ளிருக்கும் நல்மூடனுக்கு
என்னடா புத்திகெட்ட எருமையே வுந்தனையும்
நன்னகர்வாழ் காலனுனை நாடி யழைத்திடுவான்
அந்தமங்கை தனையே யாரென்று நீவந்தாய்
அந்தரத்திலே வசிக்கு மருந்ததிக் கொப்பிடலாம்
இந்தப்பெண்ணின் கணவ ரிருக்குமூர் கெந்திருவர்
சொந்தமைந்து பேராம் தோகை யிவள்கணவர்
தெரிந்தா லவர்களுக்குஞ் சீக்கிர மாயுனையே
அரிந்திடுவார் சிரசை அவர்களுந் தப்பாமல்
நீயும் மடிவதொடு நேரான ராச்சியமும்
போயியே பாழாக புழுதி யடைந்திடுமே
மிச்சமுள்ள யாவரையும் வேந்தராங் கெந்திருவர்
லெச்சை கெடுத்திடுவார் லேசென்று எண்ணாதே
நம்மிட நகரத்தில் நல்லதொரு தாசியர்கள்
செம்மையான பேர்களிடஞ் சென்றுமே நீயிருப்பாய்
மங்கை யவன்றனக்கும் மனுநீதியை யுரைத்து
இங்கையேண் டாநிற்குமூய் ஏகுவா யென்றனளே
அந்த மொழிதனையும் அவனுமே கேட்டதற்கு
சிந்தைமிக நொந்து செப்புவான் யாதெனிலோ
முப்பத்து முக்கோடி முனிவருடன் கூடி
செப்பவொண்ணு ருத்திரனும் சினங்கள்கொண் டெந்தனுடன்
எந்த னிடத்திலுமே இன்றுமே போர்புரிய
வந்தா லவர்களையே வாளுக் கிரையிடுவேன்
எந்தனுடன் போர்புரிய யாரொருவர் வந்தாலும்

சிந்தைநோக வேயவரைச் செய்திடுவேன் கணத்தில்
திருமூர்த்தி யானாலும் செய்யயுத்த மென்னுடனே
வருவாரோ நீயறிய மங்கையே சொல்லுமென்றான்
அந்தரம்வாழ் கெந்திருவர் அடியே னிடத்தினிலும்
வந்தா லவர்களையே வானுலகு சேர்த்திடுவேன்
காட்டுப் பிடாரிகளும் கறிகளை யேபொசிக்க
வாட்டுவேன் பாணமதால் மங்கையரைச் சேரவையும்
இனித்தடை சொல்லாது எந்த னுடனவளை
தனித்து வரச்சொல்லும் சல்தியாய் மங்கையரை
என்றுமொழிந் தவனும் இறுமாப் புடனின்றான்
நன்றாகக் கேட்டாளே நங்கை சுதர்க்கணையும்
நில்லாதே யிங்கேயடா நீசெல்லு யெந்தனுக்கும்
எல்லாந் தெரியவரு மேகுவாய் பாதகனே
உந்தனுக்கு மிப்போது உலகவா சைவெறுக்க
பந்தவினை வந்துமே படர்ந்த துனைமூடா
இங்கிருந்தால் சிட்சை இனியிடுவேன் தப்பாது
தங்காது செல்லென்று தைய லுரைத்தனளே
அவனு மதைக்கேட் டதிக விசனமுடன்
மவுனமாய்ச் சென்றானே மன்னனும் மாளிகைக்கு

கீசகன் மாளிகைசென்று வருத்தப்படுவது.

மாளிகையி னுள்நுழைந்து மன்னவனு மன்னேரம்
நாளிகை பஞ்சணையில் நங்கையையெண் ணியமர்ந்தான்
அப்போது மன்மதனு மரும்புக் கணைதனையே
தப்பாது ஏவினனே சண்டாளன் தன்மேலே
கணைகள்வேக மாய்வந்து கண்டபடி தைத்திடவும்
நினைப்பதுவு மாறி நெஞ்சடைத் தவன்படுத்தான்
வஞ்சகன் கால்கையை வளைக்கக் கணைகளுமே

சஞ்சலங்கள் கொண்டு தவித்துமே கத்தினனே
காய்ச்சல் குளிர்முதலாய் கண்டசன்னி யும்வரவும்
பேச்சதுவும் மாறி பிதற்றிஞ னேயரசன்
புலம்பலது தானுகி புரீண்டு வருவதையும்
பலமான தாதிகண்டு பாதக னிடத்தில்வந்து
ஐயோயீ தென்ன அனியாயம் நம்மரசன்
கையோ அசந்ததுவே காவலனு மிப்போது
சென்றிடுவார் தென்திசையே சீக்கிரத்தில் நாமிதையும்
சென்று சுதர்க்கணைக்கு செப்புவோம் வாருமென்று
அதிவேக மாகவுமே அத்தோழி கள்நடந்து
பதியரசன் தேவியிடம் பதைத்துமே சென்றனரே
தாதி வரவதனைத் தையலரு மேபார்த்து
ஓதிடுவீர் நீங்களுமே உள்ளதைத் தப்பாமல்
என்றரசி கேட்க எண்ணியே தோழிகளும்
நன்று யவளிடமும் நவிலுவார் யாதெனிலோ
அம்மையே யுந்தனது அருமையான தம்பியரும்
திம்மை யடைகுருர் செப்பவந் தோம்நாங்கள்
புலப்பமது வுண்டாகி பூவரசன் தன்னைமிக
அலப்பு தவரையுமே ஐயையோ சன்னிசுரம்
பிழைப்புக் கிடமில்லை பெண்ணர சேகாலன்
அழைத்துச் செல்வான்போலு மடியேன் நினைக்கின்றேன்
அம்மையே யிப்போது அடியே னுடன்வந்து
திம்மை யடைவோனை சேயிழையே பாருமென்ருள்
தாதி யுரைத்ததுவைத் தையலரு மேகேட்டு
வேதனை யோடவளும் விளம்புவாள் தாதியிடம்
என்னடி தோழிகளே எந்தனுட தம்பியர்க்கும்
என்னதான் செய்திடலாம் ஏந்திழையே சொல்லுமென்ருள்
அம்மை யிடத்தினின்று அத்தோ ழியுமொழிவாள்

திம்மை யடைந்திருக்கும் சேயன் தனக்குமொரு
மருந்துண் டதுதனையும் மன்னனிடம் விட்டாலும்
இருந்தமன்னன் போல எழுந்திருப் பாரவரும்
நம்மிடத்தி லேயிருக்கும் நல்லதொரு வண்ணமகள்
தம்மை யரசனிடம் தான்செல்ல நீங்களுமே
விடைகொடுத்து வந்தாலே வேந்த னதைப்பார்த்தும்
தடையில்லை பிழைப்பதற்கு தையலரே யென்றுரைத்தாள்
தாதி வழுத்தினதை தையலரு மேகேட்டு
ஓதிடுவா ளேபதிலு முள்ளது தப்பாமல்
என்னவிதி தோழி எந்திழை வரும்போது
முன்னமே வண்ணமகள் மொழிந்தது மெந்தனிடம்
அவளுடைய கணவர் ஐவராங் கெந்திருவர்
தபசுக்குப் போனார்களாம் சங்கதியை யென்னிடத்தில்
அந்தமங் கையுரைக்க ஆரணங்கே கேட்டிருக்கேன்
இந்த மொழிதனையே என்னிட மேபுகன்றீர்
வண்ண மகள்மேலே மன்னர்கள் மோகித்தால்
திண்ணமாய்க் கெந்திருவர் சிரத்தையே கொய்வார்கள்
வரும்போ தந்தமாதுமே வழுத்தினு ளென்னிடமும்
விரும்பினன் கீசகனும் வேரழியுங் காலமதால்
அம்மாது தன்னையுமே அரச னிடத்தினிலும்
எம்மா திரியாக யானனுப்பு வேன்தோழி
மங்கையரு மென்பேச்சை மறுக்காது மேகேட்டு
அங்கையே சென்றாலு மரசனுந் தீங்குசெய்வான்
விற்பிடித்த கீசகனும் மேவியே மங்கையிடம்
வற்புறுத்தி யேயிழுத்தால் வந்துவிடும் பொல்லாங்கு
ஐயோ யீதென்னமோ அரும்பாவி யெண்ணமது
செய்த பெருவினையோ செல்லுங்கா லந்தானோ
வைது மவன்தனையே மங்கையு மப்போது

னைந்து மழுதனளே நங்கையுந் தோழியிடம்
தாதியதைக் கேட்டு தையல் தனக்குமொரு
சேதிதனை நன்ருய் செப்புவாள் யாதெனிலோ
அம்மையேயம் மங்கையிடம் அடியேன் கூடவிருந்து
திம்மைவிளை யாதபடி சேயிழையை யான்காப்பேன்
அந்த உதவிதனை அடியாள்செய் வேன்தாயே
இந்த வேளையவளை எந்தனுடன் நீரனுப்பும்
என்றுமே தாதியவ ளெடுத்துரைக்க வேயவளும்
நன்றெனவே கேட்டு நங்கையரு மப்போது
வண்ண மகளிடத்தில் வரசியு மேநடந்து
பெண்ணு ளிடத்தினிலும் பிதற்றுவாளோர் சங்கதியும்
என்னருமை நாயகமே என்குடியைக் காக்கவந்த
அன்னமே யெந்தனையு மாளாக்கி வைப்பாயே
எந்தனது தம்பியுமே எந்திழையுன் மையலினல்
சிந்தைநொந்து பதவி செல்லும் படியாக
காய்ச்சல் சன்னிமுதலாய் கண்டு மவன்தனக்கும்
பேச்சதுவு மாறியவன் பிணம்போலு மாயினதாய்
தாதியர்க ளென்னிடத்தில் தையலரே யோடிவந்தும்
ஓதினு ரேயவர்க ளுள்ளபடி தப்பாமல்
அம்மையே தாங்களுமே அடியனிட வாக்கியத்தை
திம்மை நினையாதபடி சேயிழையே கேட்பாயே
பாவிகீச கன்தனக்கும் பாதகம் நினையாமல்
மேவி யவனிடத்தில் மெல்லியேவோர் வார்த்தைதனை
பேசிடுவா யன்புமிகப் பெருகும் படியவனும்
நேசியே யுன்வார்த்தை திருமடையன் கேட்கிலுமே
காய்ச்சல் சுரம்நீங்கி கண்மணியே யுந்தனிடம்
பேச்சுந் தொடுத்திடுவான் பெண்ணே பிணிநீங்கி
மதுவொடுபுட் பமதனை மங்கையரே நான்தாரேன்

அதுதனையே நீவாங்கி அவனிடமேகொடுத்து
பையவே வந்திடுவாய் பாவையரே யெந்தனிடம்
தையலரே செல்லுமென்று சாற்றினாளேவரசி
சுதர்க்கணை யிவ்வாறு சொல்லி யதைக்கேட்டு
இதத்துடனே வண்ணமக ளியம்புவாள் யாதெனிலோ
பாதிமதி தரித்த பரமனே நானுமிந்த
சேதிதனைக் கேட்கவுமே செய்தாய் பரம்பொருளே
செங்கருடன் வாகனனே செப்பியதோர் வார்த்தைகளும்
நின்கருணை யாலெனக்கு நேர்ந்த விதியிதுவோ
இம்மாது மெந்தனையு மேக அவனிடமும்
சும்மா போமென்று சொல்லுகிறு ளேயரசி
காமவெறி கொண்டிருக்குங் கசடனிடஞ் செல்லவுமே
சோமவத னிதாங்கள் சொல்லுவ துஞ்சரியோ
நான்போனலவ்விடத்தில் நாடியெனைத் தொட்டிழுப்பான்
யான்போகேன் தாயேயென் றழுதாளே சிந்தைநொந்து
இவ்வூர் தனிலிருக்கு மேற்றதொரு வேசையரை
அவ்வரச னிடத்தி லனுப்புவா யென்தாயே
என்னிடத்தி லவ்வார்த்தை இனிமேலுஞ் சொல்லாதே
மின்னரசே யென்றுமவள் வேண்டியே கேட்டனளே
சுதர்க்கணை யிவ்வார்த்தை சொல்லியதைக் கேட்டு
இதத்துடன் வண்ணமகட்கு இயம்புவாள் யாதெனிலோ
அன்னமே யென்வார்த்தை அட்டிசெய் யாதேயம்மா
உன்மேலுங் கொண்டமையல் ஒருவர்தீர்க்க லாகாது
ஆகையால் நீசென்று அன்னுன் பிழைத்திடவே
வாகுடனே செய்து வருவாயே பெண்மயிலே
உந்தனையே யவனும் ஒன்றுகுறை செய்யாது
வந்தங்கு நிற்பார்கள் மாமயிலே தோழியர்கள்
இன்னும் பலவிதமும் எடுத்தோத வேயவளும்

நன்னயமாய் வண்ணமகள் நல்லதென்று சம்மதித்தாள்
அம்மணியுன் சொற்போல அடியே னங்குபோரேன்
திம்மை விளைந்தாலே செப்பாதே யெந்தனையும்
நான்போவே னென்று நங்கை யிடமுரைத்து
தானடந்தா ளேயவளும் தையலர்கள் தாதியுடன்
அப்போது மாதுமேதா னுயிரங்கண் ணிந்திரனை
தப்பாது எண்ணியே தன்னுடைய சிந்தையிலும்
முப்பத்து முக்கோடி மூவர் களை நினைத்து
செப்பரிய மாயனையே சிந்தையி லெண்ணியவள்
ஆதிகைலை மலையி லமர்ந்த பரம்பொருளே
வேதினை வாராமலெனை விமலனே காத்தருளும்
பன்னிருகை தன்னோடு பரங்குன்றில் வாழ்பவனே
பின்னம் வராமலெனை பித்தன்சுத னேகாரும்
விண்ணிலிருந்து வசிக்கும் வேணதொரு தேவதையை
எண்ணி யந்தமாது இரண்டு கரமதினால்
சந்திர சூரியரைத் தையலு மேதொழுது
இந்தவேளை யென்னுடனே ஏகி வருவீரென
தாதியுடன் கூடி தையலு மேசென்றும்
வேதினை யடைந்திருக்கும் வீரவான் தன்னிடமே
செல்லுவதைப் பார்த்து செங்கதிரோ னப்போது
நல்ல தொருபரியை நாதன் மிகத்தூண்டி
நாற்றிசை யோர்துதிக்கும் நல்லசோதி யருணன்
மேற்றிசை யாழிதனில் விசனமொடு போயடைந்தான்
கதிரோ னடைந்ததையும் கன்னிகையு மேபார்த்து
விதியையவ ளெண்ணியுமே விசன மொடுநடந்தாள்
கீசகன் தன்னிடத்தில் கிட்டியவள் சென்றிடவே
பாசமொடு பாதகனும் பணிப்பெண்ணின் ஞாபகமாய்
கண்ணே பெண்ணேயென்னை கலந்தணைய வேமாது

இன்னேரங் காணேமே என்னசெய்வே னென்றுமவன்
புலப்ப மதுவாகி புரண்டு வருவதொடு
அலப்புதே சன்னிசுரம் ஐயோவப் பாதகனை
சொற்படியே போன தோகையரு மப்போது
நற்புத்தி யில்லாதிருக்கும் நாயினிடம் போவதற்கு
சந்தேக முண்டாகித் தையலரு மப்போது
வந்தே கதவோரம் மடையனைப் பார்த்துநின்றாள்
மாதுமே வந்து மறைந்து யிருப்பதையும்
ஏதுமில்லா மூடனுமே இருவிழி யால்பார்த்து
கண்டுமே பாதகனும் கன்னிகை யிடத்தினிலே
விண்டுமே வார்த்தைகளை விளம்புவான் யாதெனிலோ
சித்தசனும் வில்லதனில் செம்மலர்க் கணைபூட்டி
இத்ததியி லேயெய்தான் என்னுடைய மேனியதில்
பாவிகணை வந்தும் பாதகியே யெந்தனிடம்
மேவியே வாதனையே மின்னரசே செய்கின்றதே
இனிப்பொறுக்க மாட்டேன் ஏந்திழையே யென்னோடு
தனித்துவந் தென்னுடனே தையலே செய்போகம்
வாதுநீ செய்யாது மங்கையரே யெந்தனிடம்
ஓதுவாய் வாய்திறந்து உத்தமியே யித்தருணம்
மின்னரசே யெந்தனிடம் மேவிச்சு கிக்காவிடில்
இன்னுமரை நாழிகையி லேகுவேன் காலனூரில்
மாதரசே யிப்போது மஞ்சமதி லெந்தனுடன்
பேதம்நினை யாதபடி பெண்ணே சேரவருவாய்
பாவிமத னென்மேலே பகர்ந்துவிட் டகணையை
தாவியே னுங்கூடி சல்தி விரட்டிடுவோம்
வருவாயென் பெண்ணே மஞ்ச மதிலிருந்து
தருவா யொருமுத்தம் தையலரே யிப்போது
மோடியது வேண்டாம் மொய்குழலே தப்பாமல்

வாடியிருபேரும் மனம்போல் சுகித்திடலாம்
இத்தனை நேரம்வரை யானுரைத்து மங்கையரே
சித்த மிரங்கிலையே சேயிழையே யுந்தனை நான்
விடுவதில்லை யென்றவனும் வேகமதா கவெழுந்தும்
படுபாவி யோடிவந்தான் பாரரசன் தேவியிடம்
மடையன் வருவதையே மங்கையருந் தான்பார்த்துத்
திடத்தை விடாதபடி சேயிழையுஞ் செப்பலுற்ருள்
கண்டு வருவதையே காதலியு மப்போது
கொண்டுவந்த சாமானைக் கொட்டி யவன்பேரில்
இங்கேயேண் டாவாராய் ஏதுங்கெட்ட நிர்மூடா
அங்கேதா னேயிருப்பா யரும்பாவி யுந்தனுக்கும்
மறலியதி வேகமாக மன்னனே பாசமதை
கறகறெனச் சுழற்றி காவலா வுந்தனையும்
அழைத்துமே செல்வான் அதிசீக் கிரமதிலே
மலைத்திடா தேநீயு மடையனே தப்பாது
இன்னுஞ் சிலசேதி எடுத்தோதி யேமாது
பின்னுல் நகர்ந்தாளே பித்தனை யெண்ணியவள்
மங்கை திரும்பினதை மாபாவி யும்பார்த்து
எங்கே போராயென்று எட்டி நடந்தவனும்
அதிவேக மாயோடி அவன்வந்து மங்கைதனை
ததியே பிடிப்பதற்குத் தயாராய் வந்தனனே
அவனும் வருவதையே ஆரணங்கு மேகண்டு
தவறுகள் செய்வோனிடம் சங்கதிகள் சாற்றுவளே
பொல்லாத காலமது பிடரியிலே யுந்தனுக்கு
சொல்லாமல் வந்திருக்கு தோசியே தூர நில்லு
போக்கிரியே யிப்பவும்நீ பொல்லாங்கு தேடுகிருய்
சாக்கிரதை யென்றும் தைய லருமொழிந்து
நாசமுறும் கீசகனும் நங்கையொடு பின்தொடர்ந்து

பாசமொடு மவளைப் பற்றி விரட்டினனே
வலையிலகப் பட்டதொரு மானை விடுவாருண்டோ
நிலையில்லை யிக்காயம் நிச்சய முந்தனையே
விடுவதில்லை நானும் மெல்லியரே யுன்னாலும்
வடுப்படுத்தி னாலுஞ்சரி வந்திடுவாய் கூடுதற்கு
பாதகனு மிப்படியே பலவிதத்திலும் ஓதி
பேதகம் நினைந்துமவன் பெண்ணை விரட்டினனே
அம்மையு மேதிரும்பி அவன் வரவை யும்பார்த்து
திம்மை விளைந்ததென்று சேயிழையு மோடினளே

### வண்ணமகள் விராடராசன் சபையில் முறையிடுவது

கன்னியு மப்போது காவலன் விராடனிட
சன்னதி முன்புவந்து தையல ருமழுதாள்
எந்தனிட சங்கதியை இன்றுகேளும் அரசே
தொந்தரவு ரெம்பவென்று சொல்லினிற் குஞ்சமயம்
பின்னாலே கீசகனும் பெரியசத்த மும்போட்டு
மின்னாள் தனையிழுக்க வேகமா யோடிவந்தான்
கிட்ட வரும்போது கிரணமொன்று பாதகனை
சட்டெனவே யாள்போலத் தள்ளினது கீழ்விழுக
கீழே விழுந்தமன்னன் கிலேச மதுவடைந்து
மேலே பாராதபடி வேந்தனு மோடினனே
கண்டான் விராடமன்னன் கலங்கியே சிந்தையது
கொண்டான் வருத்தமது கோமானு மச்சமயம்
மாதுமே யந்த மன்னனிடஞ் சங்கதியை
ஓதுகிறு ளவளே உள்ளபடி தப்பாமல்
போக்கிரி தங்களையும் புண்ணியனே நாட்டில்வைத்து
ஆக்கிரமம் செய்குவது மரசே யிதுசரியா

ஆதரிப்பீ ரென்றுநான் அரசனே யிங்குவந்தும்
பேதகத்தை யெண்ணினனே பெரும்பாவி கீசகனும்
இந்தச் சபைதனிலே இருக்கு மாசர்களே
சொந்தப்பெண் ணைப்போலத் துரத்திவந்தான் கீசகனும்
மன்னர்களே யுங்களுக்கு மனச்சம் மதந்தானு
பின்னமில் லாதுரைத்தாள் பெரிய சபைதனிலே
அரசன் விராடனுமே அந்தமொழி யைக்கேட்டு
திரமான மன்னரிடம் செப்புவா னேர்செய்தி
இங்குவந்த சண்டாளன் எந்தனது மைத்துனனே
எங்குமவ னைச்செயிக்க யாருமில்லை நானறிய
அப்படிக் கொத்த அதிக பலவானை
எப்படி யான்மடிப்பேன் என்னால் முடியாது
தவசிகங்கா பட்டரேநீர் சங்கதி யையெடுத்து
தவராது மங்கையர்க்கு சாற்றுவீ ரென்றனனே
பதியரசன் சொன்னதையும் பட்டரு மேகேட்டு
ததியேயம் மங்கையர்க்குச் சாற்றுவார் யாதெனிலோ
அச்சமட நாணமுதல் அரிவைய ரேமறந்து
இச்சபை தன்னிலேநீ என்வந்தாய் மாதாசே
உன்னெஜ மானிடத்தி லோதினலிச் சங்கதியை
அன்னவளே பாதகனை ஆக்கினை மிகப்புரிவாள்
அரசன்வெகு நீதிதனை யறிந்துமே யிப்பூமான்
திரமான வார்த்தைதனைச் செப்பமாட் டாரிவரும்
அந்தமங் கையிடத்தி லநேகமான வார்த்தைகளை
விந்தையா கமொழிந்து வீற்றிருக்குந் தற்சமயம்
மடப்பளியி லேயிருந்த மன்னன் பலாயினனும்
திடமான கோபமதை செப்பவே யொண்ணுது
இந்த விராடனையு மிருக்கு மாசரையும்
சொந்தநகர் பூராவும் தொலைத்திட வெண்ணியவன்

கண்ணை மிகவுருட்டி கனகோப மாகவுமே
மன்னன் சபைதனிலே மடையனும் வந்துநின்ருன்
பொறுமையே பூஷணமாய்ப் பூண்டதொரு தர்மருமே
அருமையா கமொழிவார் அறியவே தம்பியரும்
மடையனே யிந்தமரம் மகாபச்சை யேயிரம்
உடைத்தா லுலராது உனக்குமிது வொவ்வாது
கானகத்தில் நீசென்று காய்ந்த விரகுகளை
வேணதைக் கொண்டுவந்து விரைவாய்ச் சமையுமென்ருர்
அண்ண லுரைத்ததையே ஆணழக னுங்கேட்டு
மன்னனுங் கீசகனை வனத்தினி லேமடிக்க
தெரிவித்தா ரண்ணரென்று சீக்கிரத்தி லேமடிக்க
அறியாதான் போல அவனுமே சென்றனனே
வண்ணமக ளப்போது மனக்கவலை தன்னேடு
மன்னன்மனை யிடத்தில் மங்கையும் வந்தனளே
சுதர்க்கணை யப்போது தோகைய ரைப்பார்த்து
இதமான வார்த்தைதன்னை இயம்புவா ளேயவளும்
அம்மையே நீயுமிங்கே அழுது வருவதையும்
செம்மையா யென்னிடத்தில் செப்புவா யேதாயே
உந்தனது பேச்சைக்கேட் டோடிநான் போனதற்கு
இந்தவிதி யென்று ஏங்கி மிகவழுதாள்
பாவிகீச கனிடத்தில் பாவையே நீயெனையும்
மேவிடச் செப்பினதால் மெல்லியே யவனெனையும்
வம்புகள் மிகப்படுத்தி வைத்ததி னலரசன்
தம்மிடத்தில் சென்றுமேநான் சாற்றிநிற் குஞ்சமயம்
வந்துமே யெந்தனையும் வம்பு புரிந்ததனுல்
கொந்துவந்தே னிவ்விடத்தில் கொடியதனில் நான்தானும்
உன்பேச்சு கேட்டேயான் ஓகோகோ சென்றதற்கும்
என்மானக் கேடென்று ஏகினள் மறுபுரத்தில்

சாம மதற்குமேல் தையலரு மேநினைந்து
வீம னிடத்திலே விளம்பவும்போய் சங்கதியை
நன்றாக யோசித்து நங்கையரு மப்போது
சென்றாள் மடப்பளிக்கு திடப்புய வானிடத்தில்
காவலர்கள் காணாது கன்னியரு மேநடந்து
மேவலர்கள் கொண்டாடும் மேன்மையான மன்னனிடம்
சயனமது செய்கின்ற தன்னெஜ மான்றனையும்
பயமில்லா தபடியே பாவையுந் தட்டினளே
மங்கை யடித்திடவே மதவீம னப்போது
சிங்கம்போ லேயெழுந்து சேயிழையைக் கண்டானே
மாதுநீ யிங்கேவந்த வரலாறு தன்னையுமே
ஓதுவா யென்றுமவ னுரிமை யுடன்கேட்டான்
பாஞ்சாலன் வேணதவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சாலி யப்போது பகருவாள் வீமனிடம்
எந்தனைக் கீசகனு மிழுக்கவந்த சங்கதியை
வந்துமே நீர்பார்த்தும் வம்பனைக்கொல் லாதபடி
லேசாய் நினைத்தவனை நின்றுபோர் செய்யாமல்
பேசாது வந்துவிட்டீர் பெரும்பிழை யும்மேலும்
இன்னும்பல சங்கதியை எடுத்தோதி மன்னனிடம்
மின்னிடையாள் கண்ணீரை விசனமொடு சோரவிட்டாள்
மங்கை யழுவதையும் வாய்வு சுதன்பார்த்து
எங்கையோ கோப மிருந்ததெல்லா மூண்டிடவே
மதகரி யானுமந்த மங்கையழுங் கண்ணீரை
இதமாய்த் துயிலதையே எடுத்துத் துடைத்துமவன்
கன்னியே நீகலக்கம் கனவருத்த மத்தனையும்
இன்னிமிடம் விட்டுவிடு ஏந்திழையே நானவனை
மடித்திட வேணுமென்று மங்கையரே கோபமொடு
துடித்துமே யான்வரவே சொல்லினு ரண்ணருமே

தம்பியே நீயிவனைத் தனித்துமே கானகத்தில்
நம்பிவரச் செய்தும் நரனையே கொல்லுமென்று
சாடை யதனாலே சாற்றினா ராகையினால்
பேடை மயிலன்னமே பேசாது நான்வந்தேன்
ஆனாலோர் யோசனையே அடியே னுரைப்பதையும்
மானாளே கேளுமென்று மன்னன் புகலலுற்றான்
நாளையே நந்தவனம் நங்கையே சென்றால் நீ
வேளைவருவானே வீணனுங் கீசகன்தான்
வேண பலவிதமே விளம்புவான் பாதகனும்
பூணவே யாபரணம் பூவையே தாரேனென்பான்
வேசையர்கள் செய்யுமொரு வெகுளித்தொழில்பூராவும்
ஆசைகொள்ள அவனும் அறைகுவாய் தையலரே
கைச்சாடை யுங்காட்டி காவலனை யும்மயக்கி
மெய்ச்சாடை யென்றவனு மெல்லியே யுன்னிடத்தில்
உள்ளதொரு சங்கதியை ஓதுவா னேயவனும்
மெள்ளவே நீகேட்டு மேன்மை யொடுமவனை
கைவசத்தி லேயடக்கி கன்னியே யவன்தனையும்
வையகத்தோர் புகழுமந்த வசந்தமண்ட பந்தனக்கு
வரும்படி செய்தாலே மங்கையே நானவனைத்
திருகிச் சிரமதையே சேர்த்திடுவேன் வைகுந்தம்
அன்னமே யவனுக்கு அதிகவுப சாரமதாய்
மின்னரசே பேசி விரைவாக வேயவனை
வசந்தமண்ட பந்தனக்கு வரும்படியா யேற்படுத்தி
நிசமாக நானுமே நின்னையெதிர் பார்த்திருப்பேன்
அட்டியது செய்யாது அரசேயம் மண்டபமும்
சட்டெனவே வந்திடெனச் சாற்றுவாய் மூடனுக்கு
சென்றிடுவாய் பெண்ணே சீக்கிரம்நா ளையிரவில்
கொன்றிடலாம் பாதகனை கோதையே போமென்றான்

மதவீமன் வார்த்தைதன்னை மங்கையரு மேகேட்டு
இதமாய் நடந்தனளே இருக்கின்ற மாளிகைக்கு
வாய்வுசுத னப்போது மங்கை யரைய னுப்பி
பேய்பிடித்தால் போலே பிதற்றிக்கொண் டேயிருந்தான்
நல்லிருளில் தூக்கமது நாடாது மேயவனும்
சல்லியாய்த் துளைப்பதற்கே தானேக்கி யேயிருந்தான்
வண்ணமக ளப்போது வாகா யரண்மனையில்
எண்ணிப் பருதியையே இராமுழுது மேதவித்தாள்
கதிரோனு மம்மை கவலைதீர்க்க வேநினைந்து
ததியே ரதமேறி தானுதித்தான் கீழ்திசையில்

வண்ணமகள் நந்தவனத்தில் மலரேடுக்கும்போது
கீசகன் கண்டு பேசுவது.

பருதி தனைக்கண்டு பாவையரு மேதொழுது
வருதியது வாங்கி வந்தனளே நந்தவனம்
மல்லிகை பிச்சிமுதல் மலருமிரு வாச்சிகளை
மெல்லிகையுந் தானெடுத்து மேன்மையொடு சுற்றிவந்தாள்
பாசமொடு கீசகனும் பணிப்பெண்ணின் ஞாபகமாய்
நாச மடைவானும் நந்தவனம் வந்தனனே
கண்டுமே மாதுதனை கலந்தணைய ஞாபகமாய்
ரெண்டுயெட் டில்நடந்து நெருக்கினன் கன்னியிடம்
வம்பன் வருவதையும் வதனியுமங் கேபார்த்து
நம்பும்படி சாடைசெய்ய நாயகி தொடர்ந்தனளே
கீசகனைப் பார்த்துமவள் கீழே குனிவதுடன்
பாசமாய் மங்கையரும் பார்த்தே சிரிப்பதுவும்
சாடை சயிக்கினையை தான்செய்ய மங்கையரும்
பேடைமயில் சாடைதன்னை பெருமடைய னும்பார்த்து
சந்தோஷங் கொண்டுமவன் தைய லிடத்தில்வந்தும்

விந்தையாய்ப் பாதமதில் வீழ்ந்து நமஸ்கரித்தும்
என்னுசை யின்கனியே இன்பநவ ரத்தினமே
என்னைமரு வியணைய இன்னும் மனமிலையோ
கண்ணுக்குநான் போதாதா கண்ணேசம் மதமிலையோ
விண்ணுலகோர் வந்தாலும் வில்லில் கணைபூட்டி
மடிப்பே னரை நாழி மங்கையரே யுந்தனையுந்
துடித்திடவே நான்விரட்டி துரத்திவந் தேன்சபையில்
விராடனுமே யெந்தனையே விதிக்கிலையே தண்டனையும்
விராட னிடத்திலேயும் வேணவரச ரிருந்தார்
தவறுகள் செய்தேனென்று தையலரே யெந்தனையும்
அவர்கள்கூட கேட்கிலையே அன்னமே தெரிந்தாயா
அவனுடைய பட்டணத்தை அழிப்ப தொடுமவனை
சிவன்பதவி சேரவேதான் செய்வேன் க்ஷணத்தினிலே
அப்பட்டந் தன்னையும்நான் அளிப்பேனே யுந்தனக்கு
செப்பினேன் பொய்யென்றுமே தேனே நினையாதே
உந்தன் தனக்குமே யுகந்ததொரு கெந்திருவர்
எந்தனையு மேயவர்க ளென்னதான் செய்தார்கள்
வந்தா லவர்களொடு வாகான போர்தொடுத்து
சிந்தைநோக வேயவரைச் செய்துமே யான்மடிப்பேன்
வரவில்லை கெந்திருவர் வானுலகத் தேயிருந்து
தெருவிலே விட்டுவிட்டார் சேயிழையே யுந்தனையும்
வாதுகள் செய்யாது வந்திடுவா நீயணைய
ஓதுவாய் வாய்திறந்து ஓவியமே யென்றனனே
அவனுரைத்த வார்த்தைகளை அன்னையுமே தான்கேட்டு
தவறுகள் செய்வோன் றனக்குமே யோதுவளே
மன்னவனே யுந்தனுடு மருவி யணைவதற்கு
நன்னயமாய்ச் சமயம் நான்பார்த் திருந்தேனே
அந்தரம்வாழ் கெந்திருவ ரைவர் களுமெனையே

சந்தியிலே விட்டுவிட்டார் தற்பரனே யெந்தனையும்
பெண்களுக் குள்ளகுணம் புருடர்களைக் கண்டாக்கால்
திண்ணமாய்ப் பலவாறுய் செப்புவ துவழக்கம்
எந்தனையுந் தாங்களுமே எண்ணி யொருபொருளாய்
வந்துமே கேட்டதற்கு வழுத்தினதா லெனையும்
சிந்தை நோகும்படியாய்ச் செய்திடா தேயரசே
இந்தவேளை யிருந்தும் யானடிமை தங்களுக்கும்
மன்னவனே யிவ்விடத்தில் மருவினுல் கேவலமே
இன்றய ராத்திரிக்கு இவ்வூர்க்கு மேற்கிருக்கும்
வசந்த மண்டபந்தனிலே மன்னவரே நாமிருவர்
நிசமதாய்க் கூடிடுவோம் நீர்வருவீர் தப்பாமல்
வந்திடா திங்கிருந்தால் மன்னவரே யான்தானும்
நொந்திடுவே ணுகையினுல் நொடியில் வருவீரே
சந்தேக மில்லையிதில் சாமியே யென்மொழியும்
வந்தங்கு பாருமென்று மங்கையரு முரைத்தாள்
அந்த மடையனுமே ஆரணங் குரைத்ததையும்
சந்தோஷ மாய்க்கேட்டு தாநடந்தான் மாளிகைக்கு
அப்போது வண்ணமக ளங்கிருக்கும் புஷ்பமதை
தப்பா தவளெடுத்து தான்சென்ருள் மாளிகைக்கு
நாற்றிசை யுந்துதிக்கும் நல்லசோதி யருணன்
மேற்றிசை யாழினில் வீழ்ந்தானே வேகமொடு
வண்ணமகள் தனக்கும் வாரா துறக்கமது
எண்ணியே கீசகனை இருந்தாளே மங்கையரும்
வீமனுரை தனையே மெல்லியரும் நினைந்தும்
சாமத்துக்கு மேலே தையல் நடந்தனளே
காவலர்கள் காணுது கன்னியரும் நடந்தும்
மேவலர்கள் கொண்டாடும் வீமனை வந்துகண்டாள்
தையல ருடனேயவன் தானேகி வேகமதாய்

வையோர் புகழும் வசந்தமண்ட பம்வந்தும்
தங்கி யிருந்து தையலுட னவனும்
பொங்கியே கோபம் பொருந்தியே வங்கிருந்தும்
சிங்கார மானதொரு சேயிழை போல்வடிவம்
மங்கை மகிழவெடுத்து மன்னவனு மங்கிருந்தான்
படுத்திருந்த கீசகன்மேல் பாவிமதன் வில்வளைத்து
தொடுத்து மலர்க்கணையை தூண்டிவிட் டானவன்மேல்
பாவிமதன் வாதனையைப் படின் சகியாதபடி
மேவி யரண்மனையில் மேன்மையொடு செய்துவைத்த
வேணபல காரவகை வேண்டிய தையெடுத்து
பூணவே யாபரணம் பூவையர் தனக்குகந்த
பட்டுட னேரவிக்கை பாரிசா தமலரும்
கட்டியே மூட்டையதாய்க் காவலனுஞ் சீக்கிரமாய்
சந்தனு தித்தயிலந் தக்கதொரு வத்தர்களும்
சிந்தை மகிழும்புனுகு சேயனுமே சேர்த்தெடுத்து
நாமந் தனக்குகந்த நல்யோக மும்பார்த்து
சாமத்துக்கு மேலே சரியென் றவன்நினைந்தும்
மூட்டை தனைக் கையெடுத்து மோடியோ டேயவனும்
மாட்டிய சடாவுடனே மன்னன் நடந்தனனே
மன்னர்களெல் லாம்புகழும் வசந்தமண்ட பந்தனையே
மன்னனும்பெண் ணிநடந்து மகிழ்வோடு வந்துகண்டு
சென்றனே வுள்ளேயும் சேயிழை தனைப்பார்க்க
நன்றாகச் சுத்திவந்தான் நாலுபக்கங் களிலும்
மங்கைதனைக் காணாது மடையனு மப்போது
சங்கையெல் லாம்விடுத்து தானும் மொழிவானே
என்னாசை யின்கனியே இன்பநவ ரத்தினமே
என்னை வரமொழிந்து எங்குசென்றாய் கன்னிகையே
இன்னம் வரவில்லையே ஏந்திழையே நீயுமிங்கு

பின்னால் வருகுருயா பெண்ணே மறந்தாயோ
நான்முன் வருவேனென்று நங்கையே யென்னிடத்தில்
வீண்மொழி யாகவுமே விளம்பினை யோமாதே
பாவிமதன் வில்லதனில் பாசக்கணை தொடுத்து
மேவிட யென்மீது மெல்லிகையே யெய்துவிட்டான்
அந்தக் கணைகளுமே அடியே னுடற்பாய்ந்து
சிந்தைமிக நோகவுமே செய்யு தவன்வாளி
இந்தவேளை யென் னுடனே ஏந்திழையே நீகலந்து
சந்தோஷ மானபோகந் தனையே தருவாயே
இங்குமே நீயும் எனக்குமுன் னோடிவந்து
தங்கியே மறைவாக தைய லிருக்காயோ
இந்த மோடிஏண்டி எனக்குவாய்த் தலேடி
வந்திடுவாய் சேர மாகுதடி நேரமுமே
என்று மவன்மொழிந்து ஏந்திழையைக் காணாது
நின்று னொருபுரமே நேர்மையில் லாமடையன்

பீமனுக்கும் கீசகனுக்கும் யுத்தம்

வாய்வுசுத னப்போது வழுத்தி யதைக்கேட்டு
பேய்பிடித்தால்ப் போல பிதற்றுவான் மங்கையர்க்கும்
பாஞ்சாலன் வேணதவம் பண்ணியே தான்பயின்ற
பாஞ்சாலி யிங்கையே பயப்படா துயிருப்பாய்
மடையனை யிப்பொழுது மடிக்குறேன் நான்தானும்
தடையில்லை பார்ப்பாய் தையலரே யென்றுரைத்து
சந்தோஷ மாகவுமே தானடந் தன்பாக
வந்தேயோர் தானோரம் மன்ன னைதுங்கியுமே
வளையல் கலகலங்க மன்னன்சா டைகாட்ட
வளைய லதுதொனியை மடயனு மேகேட்டு
தையலரும் வந்துமே தங்கி யொளிந்திருந்து

செய்கிருள் சாடையதை சேயிழையாள் தன்னிடமே
செல்லுவோ மென்றவனின் தேகமது பூரித்து
நல்லகால மென்றும் நடந்தனனே தூணருகே
அன்னமே முன்னையே ஆரணங்கே யிங்குவந்தும்
மின்னரசே யுன்னையுமே வெகுநேரங் காணேனே
ஆசையின் பொக்கிஷமே அளவில்லா ரத்தினமே
ஆசையைத் தீர்ப்பதற்கும் அட்டியென்ன பாவையரே
ஏண்டிசாலங் காட்டுகிருய் என்னிடத்தி லேநீயும்
வேண்டியேகூ டவருவாய் வேண்டாமிவ் வாதுகளும்
இன்னும் பலவிதமே எடுத்தோதிப் பாதகனும்
மன்னவனுஞ் சென்ருன் மணித்தூணின் தன்னருகே
அவ்விடத்தில் வந்துமவ னதிகப் பிரியமதாய்
எவ்விடத்தில் நிற்குருய் எனக்கிசைந்த பெண்மணியே
தூண்மறை வுதனிலே தோகைநிற்கு ருளெனவும்
வீண்மடைய னப்போது வேண்டி யவளிடத்தில்
மங்கையவ ளென்று மதித்துத் தனதுகையை
அங்கையே நீட்டினனே அத்தூணின் தன்னிடமே.
இருந்த தொருபெலவான் இதையறிந்து சீக்கிரத்தில்
அருமையான தூணதனே அவன்மத்தி யில்வைத்து
தன்கரத்தை நீட்டினனே சந்தோஷ மாகவுமே
மன்ன னதைப்பார்த்து மகிழ்ந்து தனதுகையை
அங்கேயே நீட்டினனே யதையறிந்து பீமனுமே
சிங்கம் பிடிப்பதுபோல் சீக்கிர மேகரத்தை
அழுந்தவே தான்பிடித்து அந்தப்படு பாவியையும்
இழுத்தான் பெலமாய் இருகரத்தைத் தூணேடே
மோகமதால் வந்ததொரு முழுமடை யன்தனேயும்
வேகம தாய்யிழுக்க வேந்தனு மேபார்த்து
ஐயோயிவள் பெண்ணல்ல ஆண்பிள்ளை யிவ்வேலை

செய்கின்ருன் நம்மையும் தெரிவில்லை யேயவனும்
மங்கை வடிவமது மாகியப் பாதகனும்
இங்கேயே வந்திருக்கா னிதுவறி யாமலேநாம்
பாவி யிடந்தனிலும் பாராம லேயானும்
மேவியகப் பட்டேன் விபரீதக் காலமதால்
ஐயோயீ தென்னமோ அம்மாது மேசொன்ன
மெய்யான கெந்திருவர் மேவி யெனைப்பிடித்தார்
பாவியு மெந்தனையே படுத்துமொரு செய்கையினுல்
ஆவியும் போய்விடுமே ஐயையோ யெந்தனுக்கும்
இன்னும் பலவிதமே எடுத்தோதிப் பாதகனும்
என்னசெய்வோ மென்றுமவ னேங்கித் தவித்தனனே
வீமனைப் போதவனை வேகமாய் யிழுத்திடவும்
காமவெறி கொண்டதொரு கசடனு மேமயங்கி
இன்றுமே நாமும் ஏமாந் திருந்தாலே
கொன்றிடு வானிவனே கொழுத்த பெலமுடையான்
தன்னிடத்தில் நாமுந் தயிரியத் தைக்காட்டி
மன்னனிட கைபிடிங்கி மற்றுமே போர்புரிவோம்
மன்னனுமே யோசித்து மறைந்திருப்போன் தன்கையை
பின்னங்கள் செய்துமே பிடிங்கியே யப்பாலும்
ஒதுங்கி யொருபுறத்தி லோடியே நின்றவனை
பதுங்கியிருந் தபெலவான் பார்த்துமே சீக்கிறத்தில்
விடுவேனே யென்றுமவன் வேகம தாயோடி
படுபாவி யின்சிரத்தில் பலமதாய்க் குத்திடவும்
அவனு மதைவாங்கி அதிக விசாரமுடன்
தவரா தடித்தானே தடியனுட மேனிதனில்
அந்தவடி பட்டிடவு மவனெண்ணி லேசாக
இந்தவே ளையிவனை எமலோகஞ் சேர்க்கவென்றும்
எண்ணியே சிந்தையிலே இழுத்து வெளியவனை

கண்ணிமை மூடுமுன்னே கால்வாரி யேயடித்தான்
எழுந்துமே சீக்கிரத்தில் ஏகியே பீமனையும்
அழுந்தயிரு கால்பிடித்து அடித்துமே பூமிதனில்
நெஞ்சினி லேயிருந்து நேராய்க் கரமதினுல்
வஞ்சகன் குத்தினனே மகாபெலவான் தன்மேலே
மன்னன் மதவீமனுக்கு மயக்க மதுவுண்டாகி
பின்ன மடைந்துமவன் பெரியசத்த மும்போட்டு
உதிரமதைக் கக்கியுமே ஒருநிமி டம்மயக்கந்
ததியே பேசாதிருக்க தையலரு மேகண்டு
ஐயையோ னம்பத்தா அழியுங்கா லமெனவே
செய்வாளே தோத்திரங்கள் தெய்வங்க ளை நினைத்து
பிட்டுக்கு மண்சுமந்த புண்ணியரே யென்கணவர்
தட்டுக் கெடாதபடி சல்திவந் தருள்புரிவாய்
ஆதிமூல மென்றதொரு யானையைக் காத்தகண்ணு
வேதினை யடையாமல் வேந்தனைக் காப்பாயே
ஆறுமுகம் படைத்த ஐயா பழநிமலை
வேறுதுணை காணேன் வேந்தனைக் காத்திடுவாய்
விண்ணதி லேவசிக்கும் வேணதொரு தேவர்களே
கண்ண னிடத்திலே கழறுவீர் சங்கதியை
ஆகாய வாணியரே அரசன் தனை நீயும்
சாகா திருந்திடவே சாற்றிடுவீர் நல்வாக்கு
கானகத்தி லேவசிக்குங் காட்டுப் பிடாரிகளா
மான பரன்தனக்கு மரணமில் லாதுசெய்யும்
முப்பத்தி முக்கோடி முனிவர்களே யென்கணவர்
தப்பனை வென்றிடவும் தைரியந் தந்திடுவீர்
அருமையது பூண்டிருக்கும் அங்கயற்கண் மீனம்மாள்
திருமங்கி லியப்பிச்சை தேவியே தாயெனக்கு
கானகத்தி லேதினையைக் காத்தவளே வள்ளியம்மை

மானபரன் தனக்கும் மயக்கந் தனைதீர்ப்பாய்
தரும மனதுடையோர் தான்செயிப் பார்களென்று
அருமையான நூல்களுமே அறைந்திருக்கு முர்பெரியோர்
தப்பனு மிப்போது சயமுட னிருக்கின்றான்
இப்படியென் செய்வேனென்று ஏந்திழை யுமழுதாள்
மங்கை யழுவதை மதவீம னுங்கேட்டு
சிங்கப் பெலங்கொண்டு சிறியோனைக் கீழ்த்தள்ளி
நெஞ்சினி லேயிருந்தும் நிகழ்த்துவான் மங்கையர்க்கும்
அஞ்சாதே பெண்ணே அடியேனுக் கொன்றுமில்லை
இப்போ யிவன்றனையே ஏம புரிதனக்கு
தப்பாம லோட்டுகிறேன் தையலரே பார்த்திருப்பாய்
அம்மைக்குத் தைரியத்தை யவனு மெடுத்தோதி
செம்மையாய்க் கீசகனை தீட்டிய வன்காலை
பிடித்துமே யிரண்டாய்ப் பிளந்து யெறிந்திடவும்
துடித்தே யவனுமே சொர்க்க மதுசேர்ந்தான்
அப்போது பீமன் அவனுடைய தேகமதை
தப்பாது தான்பொருக்கி சாமிபோல் செய்துவைத்தும்
ஆப்ர ணுதிகளை யவனுக்கு மேதரித்து
பாபம் நினையாதபடி பழிகாரன் றன்னிடத்தில்
பண்டுபல காரவகை படையலா யேற்படுத்தி
அண்டையிலே வைத்தா னவனிடம் பூருவும்
காட்டுமல ரைப்பறித்துக் காவலவன் தன்கழுத்தில்
போட்டுமே யங்கோர் புதுமையா யுண்டுபண்ணி
சக்கரைப் பொங்கலதை தலைவாழை தன்னிலையில்
அக்கரை யாகவைத்து அம்மூடன் முன்னாலும்
வீமனு மப்போது மெல்லிகை தனையழைத்தும்
நேமமுட னேயவட்கு நிகழ்த்தியே சங்கதியை
பார்தகனிடத்தில் வந்து பகருவான் யாதெனிலோ

பேதம் நினையாதே பிரபலனே யுந்தனுக்கும்
பண்டுபல காரவகை படைத்ததை யானுனக்கு
கொண்டுக்கோ வாபூதி குறையொன்றுஞ் சொல்லாதே
வருத்த மடைந்திடாதே மன்னவனே யென்மேலும்
பொருத்தமா யிருக்கென்று புண்ணியனு மங்கையரை
அழைத்துமே பொய்கை யண்டையிலே தானேகி
துலைத்தானே பீடைதன்னை தோகை யுடன்மூழ்கி
கங்கை தனைவிடுத்து கரைதனிலே வந்துமவன்
மங்கை தனக்குமே மன்னவனு மேபுகல்வான்
பெண்ணர சேநகர்க்கு போகும் வழியிதுவே
கண்ணே மயங்காது காதலி யேநடந்து
அரமனைக்கு நீபோவா யன்னமே வஞ்சாது
திறமாய் நடவுமென்று செப்பி யனுப்பியவன்
அதிவேக மாகவந்து ஆன மடப்பளியில்
ததியே படுத்துமவன் தையல்மேல் ஞாபகமாய்
எண்ணியே கன்னியரை இராமுழுதுந் தூக்கமற்று
மன்னன் சயனம் மடப்பளி யேயிருந்தான்
மங்கையரு மந்த மாநகர்க்குச் செல்லாமல்
அங்கையே வோரிடத்தி லமர்ந்து யிருந்தனளே
இருவர்கள் சத்தமது ஏகயிடி போல்கேட்க
தெருவதனி லுள்ளோர்கள் திகிலடைந் தேயிருந்தார்
மடிந்தோனின் தம்பியர்கள் மாடி தனிலேறி
துடியான சத்தமதை துடியர் களுங்கேட்டு
என்ன புதுமையென் றெண்ணி யவர்மயங்கி
அண்ணன்றே வியிடத்தி லவர்தெரி யநடந்தார்
நடந்தனரே யந்த நாழி யரண்மனையில்
திடந்தகா பாடமதை துரந்துமே யுள்நுழைந்து
அந்தப்புரந் தன்னிலுமே யவர்களு மேசென்று

சொந்தவண்ணன் றேவி தூக்க மதைப்பார்த்து
தட்டி யிவரெழுப்ப தையலு மேவிழிக்க
மட்டியண்ண னெங்கே மங்கையரே யென்றனரே
படுக்கைவீ டுமுதலாய்ப் பார்த்துமே காணுமல்
இடுக்கம் வந்ததென்று எண்ணியே யெல்லோரும்
சுதர்க்கணை யிடந்தனிலே சொல்லுவோம் சங்கதியை
இதத்துடன் வாருமென்று எல்லோரு மேநடந்து
தமக்கை யிடத்தில்வந்து சாற்றியே சங்கதியை
எமக்குமொரு யோசனையை இயம்புமென்று கேட்டனரே
தம்பிய ருரைத்ததையும் தையலரு மேகேட்டு
வெம்பிய மனமுடனே விளம்புவாள் யாதெனிலோ
மங்கைவண் ணமகளே மன்னர்களே யான்பார்த்தேன்
இங்கேயுங் காணே மினியதி லென்னபலன்
தம்பிகளே நீங்களுமே சல்தியா கநடந்து
தம்பியையே பாருங்கள் தடியனு மாண்டிருந்தால்
மடிந்தவன் றன்னையுமே மன்னவரே நீங்களுமே
விடிந்துவரு முன்னே வேந்தனை யேயடக்கம்
செய்து கிரிகைகளும் சீக்கிரம் வாருமென்று
தைய லுரைத்தனளே தம்பியர்கள் தன்னிடத்தில்
உயிர்விட்டோன் தம்பியர்கள் ஒருநூற்றி மூன்றுபேர்
தைரிய மாயவர்கள் சாமான் களையெடுத்து
ஊருக்கு மேற்கிருக்கும் உசந்த தொருகானில்
பாருபா ரென்றங்கே படைவீரர் வந்தார்கள்
வசந்தமண்ட பந்தனிலே வந்து மவர்களுமே
உசந்ததோர் கீசகன்றன் னுருவத்தைக் கண்டார்கள்
முட்டிவிழுந் தேயவர்கள் மோதி யடிப்பதொடு
கட்டி யழுதவர்கள் காவலனை நொந்துகொண்டார்
என்ன விதியிது எழுதினேன் கற்பனையோ

வண்ணமங்கை தன்னால் வந்த பெருந்தொல்லை
மங்கையின் தன்கணவர் வானுலகு கந்தருவர்
இங்கேவந் துயிவனை எம புரிசேர்த்தார்
அழுதுகொண் டேயிருந்தா லவர்வரப் போரதில்லை
பொழுது விடியுமுன்னே பொசுக்குவோம் வாருமென்றும்
சந்தனக்கட் டையடுக்கி சவத்தையதின் மேல்வைத்து
சிந்தைநொந் தேகிரிகை செய்தார்க ளெல்லோரும்
அக்கினி தன்னையே அள்ளியவன் மேலிட்டு
மிக்க விசனமுடன் வேந்தர்கள் வந்தனரே
அண்ணன் தனைத்தீங்கு ஆகவே செய்ததொரு
வண்ணமகள் நம்மிடத்தில் வந்து வகப்பட்டாள்
நம்மரசன் றன்னிடத்தில் நங்கையரை யுஞ்சேர்த்து
திம்மை யடைந்திடவே தீயுமே யிட்டிடலாம்
மங்கைதனைப் பாரும் மன்னவரே என்றவர்கள்
அங்கையே தேடி அநேகம்பேர் சென்றார்கள்

உபய கீசகர்கள் பணிப்பெண்ணை பிடிக்கவருவது

இவர்கள்பேசும் செய்திகளை ஏந்திழையு மேகேட்டு
தவறுகள் வந்ததென்று தையலரு மேநினைந்து
ஐயையோ நாம்தனியே அகப்பட்டுக் கொண்டோமே
மெய்யாக நம்மையவர் விரட்டிப் பிடித்திடுவார்
முன்னேமே சென்றோமில்லை மூடமதி யென்னதொல்லை
இன்னம் பிழைவருமே எனைக்காரும் தெய்வங்களே
மங்கை யருமழுது மயங்கியே யோர்புறமாய்
தங்கி யிருந்தனளே தக்கதொரு புதரில்
தேடியே நாலுபக்கம் சென்றவர்க ளங்குவந்து
வாடி நிற்கும் தையலரை வம்பர்கள் கண்டார்கள்
வாடிபல வேசையரே மன்னனொடு முந்தனையும்
சோடியாய் வைத்துத் துலைத்திடுவே னென்றனரே

அவர்க ளுரைத்ததையு மாரணங்கு மேகேட்டு
தவறுவந்த தென்று தைய லருமொழிவாள்
அந்தரத்தி லேவசிக்கு மாகாய வாணிகளே
தொந்தரவு செய்கின்றார் துஷ்டர்க ளெந்தனையும்
ஐயையோ கந்தருவ ரைந்துபே ரும்வருவீர்
மெய்யாக யெந்தனையும் விரட்டிப் பிடித்துவிட்டார்
இன்னுஞ்சண நேரமதி லிட்டிடுவா ரேதீயில்
மன்னவரே சீக்கிரத்தில் வருவீ ரெனைக்காக்க
மங்கையரு மேயழுது மகாசத்தம் போட்டிடவே
அங்கே மடப்பளியி லமர்ந்திருந்த வீமனுக்கும்
இடியிடித்தாப் போல இச்சத்தங் கேட்டிடவே
துடித்தே யவனெழுந்து சுருட்டிக் கச்சையிறுக்கி
பெண்ணே பயம்வேண்டாம் பெலவானும் வந்துவிட்டேன்
கண்ணேமயங் காதேயென்று கடல்போ லிறைந்தனனே
வெளியேறி யேநடந்து வேகமொடு காடதனில்
பழிகார ரைவதைக்கப் பார்த்தானே வங்குமொரு
பெருவிருட்ச மதனைப் பிடிங்கியே வேருடனே
அறுகுபோ லனுணியை அவன்கிள்ளியே யெரிந்து
கைதனி லேபிடித்துக் காற்றாய்ப் பறந்துமவன்
தையலிருக் குமிடத்தைத் தான்தேடி வாரானே
அவன்போட்ட சத்தமது அந்தப்படு பாவிகட்கு
தவராகக் கேட்டிடவே தயங்கியே யெல்லோரும்
மன்னனை வதைத்ததொரு வானுலகு கெந்திருவர்
இன்ன மிருக்குறு ரிம்மங்கை யைக்காத்து
நக்கச் சடையோனும் நம்மைப் படைக்குங்கால்
ஒக்க மடியவேதான் ஓகோகோ செய்துவைத்தான்
சிந்தை மிகக்கலங்கி செப்பாம லோரிடத்தில்
வந்தே யிருந்தாரே வம்பனிட தம்பியர்கள்

அப்போது பீமனுமே ஆங்காரங் கொண்டுவெந்து
செப்பமுட னேமரத்தால் தீட்டீனு னேயவரை
கால்வேறு கைவேறு காவலர்க ளப்போது
மேல்வேறு மாகியுமே விட்டா ருயிர்தனையே
மறலியுமே யோடிவந்து மன்னவர்கள் தன்னுயிரை
கரகரனப் பாசமதால் கட்டியே சென்றனனே
ஒக்கம டிந்தார்கள் ஒருநூற்றி மூன்றுபேர்கள்
தக்கபடி மிருகம் தான்புசித்த தந்நேரம்
அப்போது வீமனுமே ஆரணங்கை தானழைத்து
தப்பாது வந்தானே தானொரு பொய்கையண்டை
மங்கையுடன் நீராடி மகிழ்ந்து கரையேறி
சங்கையெல் லாம்விடுத்துச் சாற்றுவான் தையலர்க்கு
பருவதரா சன்குமரி பட்டதொரு கஷ்டமதை
அருகிருந்த மங்கையர்க்கும் அறைந்தான் கதைபூராவும்
அன்னமே யுந்தனுக்கு மானதடை யொன்றுமில்லை
மின்னரசே மாளிகைக்கு வேகமாய்ச்செல் லென்றனுப்பி
மடப்பளியி லேவந்து மதவீம னுஞ்சயனம்
திடத்துட னேசெய்தான் தேவர் புகழ்வோனும்
மங்கையரு மப்போது மனக்கவலை யில்லாது
அங்கேயே சென்று ளவளிருக்கும் மாளிகைக்கு
பட்டணத்தி லுள்ளதொரு பரிசனங்கள் யாவர்களும்
கெட்ட புத்தியாலே கீசகர்கள் மடிந்தார்
கற்புடைய மாதர்தமை கசடன் மோகித்ததினால்
விற்பிடித்த கெந்திருவர் விரைவாய்வந் தேமடித்தார்
நம்ம வரசனுக்கும் நல்லகால மினிமேல்
திம்மைகிடை யாதென்றும் செப்பினா ரம்மானை
கதிரோனுந் தேரதனில் கடும்புரவி யைப்பூட்டி
சதிராகக் கீழ்கடலில் தான்வந் துதித்தானே

பட்டணத்தி லுள்ளதொரு பரிசனங்கள் யாவர்களும்
சட்டமுடன் காடதனில் தானடந்தா ரன்னேரம்
கீசகர்கள் யாவருமே கிடப்பதையங் கேபார்த்து
பாசமொடு ராசனிடம் பகர்ந்தாரே சங்கதியை
மச்சனுடா னுங்கேட்டு மனது வருத்தமுடன்
மிச்சமில்லை மைத்துனர்கள் வேரோ டழிந்தாரே
இனிமேலு மெந்தனையே இருக்கு மரசர்களும்
அனியாயஞ் செய்திடவு மாச்சுதே யென்காலம்
இந்தச் சங்கதிதனையு மிராசாக்க ளுங்கேட்டு
வந்திடுவார் போர்புரிய வகைசொல்ல யானறியேன்
என்னசெய்வே னென்றுமவ னேங்கி யழுவதையும்
மன்னவர் கள்துதிக்கும் மகாகங்கப் பட்டருமே
சாந்த குணமுடையோர் சபைதனி லேயிருந்து
வேந்தன் றனக்குமே விளம்புவார் யாதெனிலோ
அரசனே யிப்பயத்தை யப்பாலே தள்ளிவையும்
திறவான் மடிந்தானென்று செயவீரர் வந்தாலும்
மடப்பளியி லேயிருக்கும் மன்னன் பலாயினனும்
திடத்தோடு சென்றவரை செயிப்பா னரைநொடியில்
மலைத்திடா தேயினிமேல் மன்னு வுனதுசெங்கோல்
நிலைத்திட வேசெய்வான் நின்னிடத்தி லேயிருப்போன்
என்று தைரியத்தை எடுத்தோத ராசனுமே
நன்றாக வெண்ணி நமஸ்கரித்துப் பட்டரையும்
பகவான் செயலென்று பாங்கான மைத்துனரை
தகனமது செய்து தான்வந்தான் மாளிகையும்
சுதர்க்கனை யப்போது தோகை வண்ணமகளே
பாத மதைப்பிடித்து பாவையரு மேதொழுது
அம்மை தனைப்பார்த்து அறைகுவாள் யாதெனிலோ
நம்மிட வேலைதனை நாயகியே செய்யாதே

சுகமாக நீயிருப்பாய் தோகையே யுந்தனையும்
விகடங்கள் செய்தபெரு வீணர்க ளும்மடிந்தார்
ஆகாயக் கெந்திருவ ரவரிடத்தி லெங்களையும்
நோகாது செய்திடவும் நோக்கி யுரைத்திடுவாய்
மங்கையி டந்தனிலும் மகாபிரிய மாகவுமே
சங்கையெல் லாம்விடுத்து சாற்றினுள் தையலரும்
வண்ணமக ளும்நல்ல மனதுட னேயவட்கும்
திண்ணமாய் தைரியமும் செப்பத் துடங்கினளே
அம்மணிநீ யஞ்சாதே அடியே னிருக்கும்வரை
இம்மை வராதபடி சேயிழையே காப்பேனென்ருள்
பாண்டுமென்ன னீன்றெடுத்த பாண்டவரும் பத்தினியும்
நீண்டமச்ச நாடதனில் நீதியோ டிருந்தார்கள்
மாதமும் மாரியது மாராது பெய்திடவும்
பூதலத்தில் செல்வம் பொருந்தி யிருந்ததுவாம்

### அஸ்தினபுரியில் துரியோதனன் சபையில் ஆலோசனை

அரசன் துரியோதன னவன்மாம னுஞ்சகுனி
திறவான் கருணனொடு செப்பும் விகர்ணனும்
கண்ணில்லான் பிள்ளைகள் காவல ரொடுவிதுரன்
மன்னனும் வீஷ்மரும் மற்றுந் துரோணரும்
சபைதனிலே வந்துந் தானிறைய யெல்லோரும்
அபையோரைப் பார்த்து அரசனு மேபுகல்வான்
இப்பவே யென்மனதி லிருக்குமொரு யோசனையை
செப்புவேன் கேளுமென்று செகவர சன்மொழிந்து
ஐவரைக் காடோட்டி ஆண்டுபனி ரண்டாச்சு
செய்கிருரோ வஞ்ஞாதம் தெரியவில்லை யேநமக்கும்
ஆன கணக்கனு யவனழைத்துச் சீக்கிரத்தில்
தானவ னுக்குமே சாற்றியே சங்கதியை

ஐவர்களுந் தையலுடன் அடவியில்ச் சென்றதொரு
வையம் வழங்குமொரு வருடமதை யோதுமென்ருன்
அரச னுரைப்படிக்கு யவனுமே சீக்கிரத்தில்
திறமான கணக்குகளை சீக்கிரத்தி லேபார்த்து
எங்கோனே வோராண்டு மிருந்துமே காட்டகத்தில்
சிங்கார மானதொரு தேசமத னையடுத்து
ஐவர்களும் வேற்றுருவ மாகியே வக்ஞாதம்
செய்துமேமுக் கால்வருடம் தீர்த்திட்டா ரேவேந்தே
இன்னுங்கொஞ்ச நாள்தா னிருக்கு தவர்வரவும்
மன்னவரே யென்று வழுத்தினு னேகணக்கன்
அவனுரைத்த வார்த்தைகளை யரசனு மேகேட்டு
தவறுவந்த தென்று சாற்றுவான் சபையோர்க்கும்
இந்தச் சபைதனிலே இருக்கும் பெரியோரே
சிந்தைமகிழ்ந் தேயெனக்கும் செப்புவீர் யோசனையை
வருத்தமோ டைவர் வனத்தினில் சென்றவரை
திருத்தமாய்க் காணுதற்கு செப்புவீ ரெந்தனுக்கும்
என்றதை யேகேட் டியம்புவா னேசகுனி
நன்ருன மன்னவனே நானுரைப்ப தைக்கேளும்
வேணதொரு சேவகரை விட்டாலுங் காட்டகத்தில்
காணலா மைவரையே காவலனே யென்ருனே
மாம னுரைத்ததொரு வார்த்தை தனைக்கேட்டு
சோமவத ன்முடையான் சொல்லுவான் சேவகர்க்கு
என்மன துக்கிசைந்த வேற்றமுள்ள சேவகரே
உன்மன துபோலு மோர்கிராமம் யான்தருவேன்
வேண்டியதோ ராபரணம் வேந்தரே நீங்களுமே
பூண்டிட யானளிப்பேன் பொய்யில்லை நிச்சயமே
காட்டதனில் சென்று காவலவ ரைவரையும்
நாட்டமுட னேபார்த்து நம்மிடத்தி லேமொழிவீர்

இன்னும் பலவிதமு மெடுத்தோதி யேயவர்க்கு
மன்னனுஞ் செல்லுமென்று வருதி கொடுத்தனனே
வேந்த னிடந்தனிலே விடையது வாங்கியவர்
சாந்தமுட னேநகரந் தன்னை யவர்கடந்து
அதிவேக மாகவுமே யவர்களு மேயேகி
ததியே யவர்தொடர்ந்து தான்வந்தார் காட்டகத்தில்
மங்குவுள் ளபுதரும் மலையின் குகைகளிலும்
தங்கியிருப் பாரென்று தான்பார்த்தா ரேயவர்கள்
ஐவரைக் காணாது அசந்து மவர்களுமே
பையவே தானடந்து பார வனத்தில்வந்தார்
அங்கு வுள்ளநதியும் ஆன மலைகளிலும்
தங்காது மேசென்று தனயர்க ளைப்பார்த்தார்
காணாது மைவரையுங் கலங்கி யவர்களுமே
வீணானே மென்று வேகம தாய்நடந்தார்
புதருக ளெல்லாமே புகுந்து மவர்தேடி
பதறியே காணாது பதைத்துமே வோரிடத்தில்
அங்க மலையாய் வங்கு குவித்திருக்க
தங்கா தவர்சென்று சல்தி யதனருகே
பார்த்து மதுதனையே பயந்து மவர்களுமே
வேர்த்துமே நின்று விளம்புவா ரேயவர்கள்
ஐவர்க ளும்மடிந்து வங்க மலையானார்
செய்வதென்ன நாமும் செல்வோம் நகர்தனக்கும்
என்று மவர்களுமே எண்ணி மனந்தனிலும்
சென்றார் நகர்நோக்கி சீக்கிர மாகவுமே
காடு கடந்துமவர் கரியமலை யுந்தாண்டி
ஓடும் நதிகளையும் ஓர்நிமி டங்கழித்து
வந்தனரே நாடதனில் மன்னர் பெருஞ்சபையில்
சிந்தைநொந் தேயவர்கள் சென்று ரரசனிடம்

சந்தோஷ மாய்வேந்தன் தன்னுடைய காவலரை
சிந்தைநொந் துவிருக்குஞ் செய்தி தனையறிந்து
என்னடா தூதுவரே எங்கெங்கும் நீர்சென்றும்
மன்னவ ரைவரையே மகிழநீர் கண்டீரா
ஓதுவா யென்று வுரைத்ததைக்கேட் டேயவர்கள்
சாது விடத்திலுமே சாற்றுவார் சங்கதியும்
எங்களர சேதாங்க ளியம்பிய படிநாங்கள்
தங்காது சென்றோம் தக்கதொரு கானகத்தில்
தேடியே நாங்களுமே சிந்தை மிகநொந்து
வாடி வரும்போது வங்கு வொருபுதுமை
பாண்டவர் கள்மடிந்து பாரரசே வங்குமொரு
நீண்ட மலையெலும்பாய் நேயர்களு மானார்கள்
சந்தேக மில்லையதில் சாமியே யெங்களுரை
வந்தே பாரென்று வழுத்தினா ரேயவர்கள்
வணங்கா முடிமன்னன் வழுத்திய தைக்கேட்டு
இணங்கச் சபையோரை இதுநிசமா வென்றனனே

## கர்ணன் துரியோதனனுக்குச் சொல்வது

அங்கதே சமதையே ஆண்டு வருங்கருணன்
பங்கமில் லாதபடி பகருவான் யாதெனிலோ
பூவுல கமதனை பொருந்தவே வோர்குடைக்கீழ்
மேவுல கோர்மதிக்க மேன்மையொடு வாண்டுவரும்
ஆண்டவ னேகேளு மடியேனிட யோசனையை
பாண்டவர்கள் சாகவில்லை பாரர சேயவரும்
அக்ஞாத வாசமது அவர்கழிக்க வேநினைந்து
தக்க தொருவேடம் தானெடுத் தெல்லோரும்
தேசமதி லேயிருந்து சேயர்கள் தப்பாமல்
வாசமது செய்து மவர்நாளை யுங்கழித்து

அக்ஞாத வாச மதனையவர் தீர்த்தும்
மிக்க பெலவான்கள் வேந்தனே நாடதனை
கேட்டுமே வந்திடுவார் கிலேசமில் லாதபடி
நாட்டினி லவரையும் நாம்பார்ப்போ மென்றனனே
இந்த மொழிதனையே இராசனு மேகேட்டு
சிந்தைமிக நொந்து சேயனு மங்கிருந்தான்

துச்சாதனன் துரியோதனனுக்குச் சொல்வது

மன்னர்களெல் லாந்துதிக்கும் மகாகிரீட பூபதியே
என்னுரையைக் கேளுமென்று இயம்புவான் யாதெனிலோ
இன்னமிருக் கார்களா ஏமாந்த பஞ்சவர்கள்
முன்னமே காடதனில் முற்றிலும் மாண்டிருப்பார்
சந்தேக மில்லையதிற் றூனுமே யொன்றிருக்கு
வெந்தசோ றுங்கறியும் வேந்தர்கள் தானறியார்
எத்தனை நாளவரு மிப்படி யேயிருந்து
மெத்தப் பசிகொண்டும் வேந்தர் மடிந்திருப்பார்
அன்றியு மொன்றிருக்கு அண்ணு யிதைக்கேளும்
நன்றியற்ற மூதேவி நங்கை யைவர்தேவி
அவர்க ளிடத்திலே ஆரணங்கு நொந்துமிக
தவரான வார்த்தைகளும் தான்மொழிவாள் தையலரும்
அரசை யெல்லாஞ்சூதாடி அவர்க ளிடங்கொடுத்து
திறமான காடதற்கே சென்றுவந்தீர் பாதகரே
வைதுமே யெந்தனையும் வம்பாகச் சேலைதனை
கொய்துமே தூசணமாய் கொடுமைமொழி சொன்னவனை
மடியாது விட்டுவிட்டீர் மன்னரே யுங்கள்கையில்
துடியான வில்லெதுக்கு துலைத்திடுவீ ரென்றிருப்பாள்
தைய லுரைத்ததுவை சகலரு மேகேட்டு
ஐயையோ வென்று மவர்கள் மடிந்திருப்பார்

அவர்களைப் பார்த்துமந்த ஆரணங்கு தப்பாது
சிவன்பதவி சேர்ந்திருப்பாள் சேயிழையும் நிச்சயமே
இனிமேலு மிங்கவர்கள் ஏன்வரப் போருர்மன்ன
தனியா யிருக்கலாம் சங்கடமெல் லாம்போச்சு
இன்னும் பலவிதத்தை எடுத்தோதி யேயவனும்
மன்ன னிடம்விட்டு மறுபுற மேகினனே
தேசமதை யாளுந் திரியோ தனன்கேட்டு
பாசமாய்ச் சபையோர்க்கும் பகருவான் மன்னவனும்
தம்பி யுரைத்ததொரு சங்தி பூராவும்
நம்பும் மொழிதானே நவிலுவீ ரென்றனனே

துரோணுசாரியார் துரியோதனனிடம் சொல்வது

அரசனே நீர்கேளும் அருமையான பஞ்சவரை
திறமான பேச்சதனை செப்பினன் தம்பியுமே
செத்தார்க ளென்றுமவன் செப்பின னேயவர்கள்
பத்தர்களே யிவ்வுலகில் பாரரசே சாகவில்லை
தருமமதை நாளுந் தவராது மோசன்
கிருபை யுடையவரே கிரம மவர்பிசகார்
பார்த்திப னீசனேயே பண்ணி னேக்கித்தவசு
நேர்த்தியாய்ப் பாசுபதம் திருபனு மேவாங்கி
காலகே யனிவாத கவசர்கள் யாவரையும்
காலனின் றன்பதியைக் காட்டி விசயனுமே
இந்திரப் பட்டமதை இவனுக்குக் கட்டிடவும்
தந்திரமா யாண்டான் தக்கபெல வானவனே
வீமனு மிக்க மிகுந்தகோபங் கொண்டாக்கால்
சோமனுெடு மெதிர்ப்பான் சொல்லவொண் ணத்துடியன்
மற்றவர்க ளப்படி வாக்குகள் தப்பாமல்
குற்றமொன் றில்லாது கோமான்க ளும்நடப்பார்

ராச சபைதனிலே நலமாக வேயவர்க்கு
பாசமாய் நீங்கள்சொன்ன பனிரெண்டு வருடமதை
பக்குவ மாய்க்கழித்து பகவா னருளாலும்
அக்ஞாத வாசமதை அவர்கள்பூ ராய்த்தீர்த்து
மேவுலகோர் கொண்டாடி மேன்மை யடைந்ததொரு
பூவுலக வரசர் புண்ணியர் வெளியாவார்
சந்தேக மில்லையதில் சாற்றிய தேவுண்மை
அந்தநாள் பாருமென்று அறைந்தார் துரோணருமே
அரவக் கொடியோனு மவ்வார்த்தை யைக்கேட்டு
மரமிருந் தாப்போலே மன்ன னிருந்தனனே

கிருபாசாரியார் துரியோதனனுக்குச் சொல்வது

நாற்றிசையுங் கொண்டாடும் நல்லகிரு பாசாரி
சாற்றுவார் துரியனுக்கு சங்கதி வுண்மைதனை
இப்புவியை யாளும் ஏந்தலே யான்தானும்
செப்புவதைக் கேளுமென்று செப்புவார் யாதெனிலோ
சூதாடிப் பஞ்சவர்கள் தோற்றுமே போனபின்பு
வாதாடி யேயவர்கள் வைத்தபஞ் சாயமதில்
எங்களுக்கு முன்பு இருந்துமே நீயரசே
சிங்கார மாகவுமே செப்பினதோர் சங்கதியும்
ஈராறு தன்வருட மிருந்துமே கானகத்தில்
ஈராறு மாதமுமே இருக்கவே ணு மக்ஞாதம்
அரசர்களே நீங்கள் ஆளுருத் தெரியாமல்
திறமா யிருந்திடுவீர் செப்பிய வோர்வருடம்
நாங்களுமே யுங்களையும் நல்லபடி கண்டால்
நீங்கள் பதிமூன்று நின்வரு டந்தனக்கு
பின்னுனுஞ் செல்லவேண்டும் பெரியதோர் காட்டகத்தில்
மன்னவரே யென்று வழுத்தின யேமன்னு

அப்படி யேசென்று மைவர்களு மோராண்டு
தப்புகளில் லாதபடி சஞ்சரித்துக் கானகத்தில்
அக்ஞாத வாசமதை அவர்களு மேதீர்த்து
தக்க பெலவான்கள் தயாராக வந்திடுவார்
உங்கள் மனதுமே ஒத்துமை யைக்காணும்
தங்கள் சபதமதைத் தான்தீர்ப்பா ரென்றனரே
அறியவே தான்கேட்டு அந்தத்துரி யோதனனும்
பெரியோர் தனைப்பணிந்து பிழைக்கும்வகை சொல்லுமென்றான்

வீஷ்மாசாரியார் துரியோதனனுக்கு மொழிவது

அப்பா வரசே அருமையான யென்பேரா
செப்புவதைக் கேளுமென்று செப்புவ ரேயவரும்
வஞ்சகனே நீயும் வனங்களிலே சஞ்சரிக்கும்
பஞ்ச வரைத்தேட பாவியேயா ரைவிடுத்தாய்
ஐவர்பஞ்ச பாண்டவரு மக்ஞாத வாசமதை
செய்துமுக் கால்வருடம் தீர்த்திட்டா ரேயவர்கள்
அவர்க ளிருக்கின்ற வானதொரு நன்னகரம்
தவறாது மும்மாரி சதாகால மும்பெய்யும்
மாமறையோர் வேதமுறை மனுநீதி யின்படிக்கு
நேமமுட னேயறைவார் நிஷ்டைகள் புரிவார்கள்
எக்கியச் சாலைகளும் எதேஷ்டமே யவ்வூரில்
பக்கிரி யாண்டியில்லை பவுசுடையோ ரெல்லோரும்
பசுக்களுமே சாஸ்தி பாரரசன் ராச்சியத்தில்
சிசுக்களும் விர்த்தியுடன் தேவதைக ளோசாஸ்தி
புலியும் பசுவுமே பொருந்திடுமெவ் ராச்சியத்தில்
வழியிற் பயமிராது மன்ன ரிருக்கையிலே
மல்லிகை பிச்சிவகை மலருமிரு வாச்சியொடு
நெல்லி மரமுமே நேர்மையா னவிருச்சம்
வாழை பலாக்கொய்யா வான்கரும் புடனேவெகு

தாழை விருச்சமது தானிருக்கு மவ்வூரும்
ஏரி தடாகமதி லெங்கு நிறைந்துஜலம்
மீறியே நிற்க மீனு மதிலூரும்
மன்னர்க ளிருக்குமொரு மாநகரந் தன்னிலுமே
மன்னவனே யிவ்வளவு வளமிருக் குமதிலும்
சென்றிருந்த காவலரை சேயனே நீயழைத்து
நன்ருய் விசாரியென்று நல்யோகி சொல்லினரே

துரியோதனன் முன்சென்ற தூதுவர்களை
விசாரிப்பது

நிலமதனை யாளுகின்ற நேர்மையா னவரசன்
நலமாகத் தூதனிடம் நவிலுவான் யாதெனிலோ
தூதுவரே கேளும் சுவாமியர் சொன்னதொரு
நீதுகளில் லாதநகர் சென்றீரே கண்டதுண்டா
நன்னயமா யென்னிடத்தில் நவிலுவா யென்றுரைக்க
மன்ன னிடந்தனிலே வழுத்துவார் தூதுவர்கள்
எங்கோனே கேளு மெவ்விடமும் யாங்களுமே
தங்காது சென்றுமே தளங்களையெல் லாம்பார்த்தோம்
சாமியவர் சொன்னபடி தப்புகளில் லாமலொரு
பூமிதனி லிருக்கும் புகழ்ச்சிரெம் பவதிகம்
மச்சநா டதனிலே வாகா யிருப்பதொடு
நிச்சயமா யின்னமொன்று நிகழ்த்தினு ரவ்வூரில்
அவ்வா சன்மனைவி யவளிடத்தி லோர்மாது
திவ்விய மானபெண்ணும் சேர்ந்தாள்வே லைதனக்கு
வண்ண மகளெனவும் வாகாய்ப்பணிப் பெண்ணெனவே
திண்ணமா யவ்வூரில் செப்புகிரு ரேநாமம்
மாதவளோ ரூபவதி மங்கைதனைக் கீசகனும்
பேத மதுநினைந்து பிடித்திழுத்தா னுமவனை

அந்தப்பெண் ணின்கணவ ரந்தரம்வாழ் கந்தருவர்
சொந்தமைந்து பேராம் தோகை யவள்தனக்கு
தொட்டிழுத்த கீசகனை துடியாய் வதைத்ததுடன்
ஓட்டிய தம்பியர்க ளொருநூற்று மூன்றுபேர்கள்
வம்பாய் மடித்தாரே வானுலகு கந்தருவர்
நம்பும் படியாக நகரத்தார் கள்மொழிந்தார்
அண்டி வரசனிடம் ஆன மடப்பளியில்
உண்டிசை கள்சமைக்க ஒருவ னிருக்கானும்
பார்தனிலே பேரு பலாயின னுமவனும்
பேர்பெற்ற மல்லனொடு பிசகாது போர்தொடுத்து
வதைத்தா னுமவனை யவ்வூர்ச் சனம்பார்த்து
பதைத்தே யிருக்கின்றார் பட்டணத்தி லுள்ளவர்கள்
என்றுமே தூத னியம்பிட வேவரசன்
நன்றாகக் கேட்டு நவிலுவான் யாதெனிலோ
ஐவர்பஞ்ச பாண்டவரும் அவ்வூரி லேயிருந்து
செய்கிறா ரக்ஞாதம் சிந்தை மகிழ்ந்தவர்கள்
ஆகாயக் கெந்திருவ ரைந்துபே ரங்கிருக்கும்
வாகான வண்ணமகள் மங்கை துரோபதையே
கீசகன் மோகமதால் கிட்டி யவள்தனையும்
பாசமா யிழுத்திருப்பான் பார்த்து மடப்பளியோன்
பதினா யிரம்யானைப் பலங்கொண்ட கீசகனை
சதிரான வீமனே தானவனைக் கொன்றவனும்
வேறொருவர் யாவரெனும் வெல்லமுடி யாதவனும்
பாரோர் மதிக்கும்படி பலமும் பொருந்தினவன்
காமவெறி கொண்டதிலும் காலம் முடிந்ததினால்
வீம னவன்றனையே வென்றிருப்பான் நிச்சயமே
பஞ்சையாம் பாண்டவர்கள் பாவை துரோபதையும்
தஞ்சமென்று விராடனிடம் சாற்றி யவர்களுமே

அவ்வரச னிடத்தி லானவொரு தொழில்கள்
செவ்வை யாகப்பார்த்து சீவனஞ் செய்வாரே
விளம்பின தூதர்மொழி வேறு சந்தேகமில்லை
கிளம்பிடுவார் பஞ்சவரும் கெடுவு தனைக்கழித்து
வருமுன்னே நாமளுமே வம்பர்க ளைப்பார்த்தும்
திரும்பவே பதிமூன்று செப்பி வருடமதை
காட்டினி லோட்டிவிட்டுக் கவலை தனைப்போக்கி
நாட்டை யெல்லாமரசு நலமாகச் செய்திருப்போம்
சபையத னிலிருக்கும் தக்க பெரியோர்களே
இவைகளை யோசித்து எனக்குரையு மென்றனனே

கர்ணன் துரியோதனனிட முரைப்பது

அங்கதே சமதையே ஆண்டு வருங்கருணன்
சிங்கார மாகவுமே செப்புவா னரசனிடம்
மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாளுகின்ற புண்ணிய னேகேளும்
விராடன் கீசன்பெலத்தால் வேண்டிய மதிப்படைந்து
பாராது நந்தமக்குப் பகுதிப்பணம் பூராவும்
அனுப்பவில் லையவனும் அவன்தைரி யமதுவும்
தனுப்பிடித்த கீசகன் றன்பெலத்தை யேயெண்ணி
இருந்தா னரசன் இப்போது கீசகனை
இருக்கிக் கொண்டேகால னேகினன் தெற்குமுகம்
அவனிடத்தி லிப்போது ஆளுதவி யொன்றுமில்லை
தவராது நாமளுமே சைனியங்கள் பூராவும்
ஆனை யசுவமொடு அளவில்லா தரதமும்
சேனைகள் தங்களுக்கு செப்பித் தயிரியத்தை
வாத்தியங் கள்தனையு மடித்துமே யெல்லோரும்
ஆத்திர மாய்ச்சென்று வங்கு விராடநகர்

தன்னி லிருக்கும் தக்கதொரு கோவுகளை
மன்னவரே யாம்பிடித்தால் வழுத்துவார் ராசனுக்கு
அவனு மேகேட்டு ஆத்திரங் கொண்டுசெல்தி
தவராது வந்திடுவான் சனங்களுடன் போர்புரிய
அவ்வர சன்றனையே அரசேவெகு சீக்கிரத்தில்
செவ்வை யாகப்பிடித்து தேர்க்காலில் கட்டியுமே
கொண்டுமே நாம்வந்தால் கூவென்ற சத்தமதை
கண்டுமே பஞ்சவர்கள் காவல னைமீட்க
வருகுவா ரைவருமே மன்னவனே தப்பாமல்
திருவருளே செய்தான் செகதீசனும் நமக்கு
பாண்டவரை நாங்கண்டு பாரரச னேயவர்க்கும்
நீண்டதொரு காட்டகத்தில் நீங்கள் பதிமூன்று
தன்வருடஞ் சஞ்சரித்து தப்புக ளில்லாதபடி
மன்னவரே வாருமென்று வழுத்தினு லேயவரும்
உள்ளதென் றேகேட்டு மொன்று முரையாதபடி
மெள்ள நடந்திடுவார் வேந்தர் வனம்நோக்கி
இன்னும்மீ ராற்வருட மிருந்துமவர் காட்டகத்தில்
பின்னு மொருவருடம் பெலமான வக்ஞாதம்
மன்னர் செய்யாதபடி மரண மடைந்திடுவார்
பின்னுந் தொல்லைநமக்கு பெரியவர சேயில்லை
இப்பொழுதே நாமள் எழுப்பிப் படைதனையே
தப்பாது செல்லவுமே தன்யெண்ண மென்றுரைத்தான்

## துரியோதனனிடம் திரிகர்த்தன் விராடராசன் பேரில் யுத்தஞ் செய்யப்போக விடைகேட்பது

திரண்டசபை யிலிருந்த திரிகர்த்த னுமெழுந்து
திறமா யரசனிடஞ் செப்புவா னேர்செய்தி
மண்டலத்தை யோர்குடைக்கீழ் மகிழ்வுடனே யாண்டுவரும்

ஆண்டவ னேகேளு மடியே னிடமொழியும்
முந்தி யொருவருடம் முதல்வா விராடநகர்
தந்திரமாய்ச் சென்றேன் தளங்களை யான்கூட்டி
வாத்தியங் களடித்து வாகுடனே தேரிருந்தும்
நேத்தியான வில்லதனில் நிட்ரே மானகணை
தன்னைத் தொடுத்து சல்தியாய் வங்குநிற்கும்
மன்னவர்கள் தன்மேலே மாட்டிவிட் டேன்கணையை
அவர்கள்மேற் பாய்ந்தும் ஆயிரங் கோடிவரை
தவராய் மடிந்தாரே தக்க பெலவான்கள்
மடிந்ததையு மங்கிருந்த மன்னவன்கீ சகனிடம்
அடித்து மேநின்று சொல்லினர் சேவகர்கள்
அவனுமே கேட்டு அதிகரோ சமுடனே
தவறின சேனைகளை தான்கூட்டிச் சீக்கிரத்தில்
ரதமதனி லேறியும் நல்லபா கன்றனையே
இதமாய் நடத்தென்று மியம்பவே சல்தியதாய்
நடத்தியே தேரை நாழிகை யென்னிடத்தில்
திடத்தோடு வந்துநின்று செய்தான் பெரும்போரை
நானு மவனுடனே நல்லபோர் செய்திடவும்
வேணுமென்று பாதகனும் வெட்டியே வில்லதையும்
ரதத்தை யவனுடைத்தும் நல்லபரி யைவதைத்து
இதமாக வெந்தனையு மிறுக்கிப் பிடித்துமவன்
கட்டியே தேர்க்காலில் காவலா யெந்தனையும்
திட்டி யறைந்தான் செவியதனில் தப்பாமல்
இம்மிசைக ளெந்தனையும் எட்டி மிதித்தவனும்
வம்மிசம ழிந்திடுவான் வதைசெய்ய வேநினைந்தும்
ஓரடியெனை யடித்தான் உழக்குரத்தங் கக்கிடவும்
பேரிடிபோல் கத்தியவன் பின்னு மடிக்கவந்தான்
காலிரண்டை யும்பிடித்து கர்த்தனே காருமென

மேலிரங்கி யெந்தனையும் மேன்பதவி காட்டாமல்
இன்னுங் கொஞ்சநாளும் இருக்கயா னிவ்வுலகில்
மன்னன் யென்கட்டை மகிழ்ந்து வவிழ்த்துவிட்டும்
இனிமேலு மிவ்வூரை எட்டிப் பார்ப்பாயாயில்
அனியாய மாயுனையே அறுப்பேன் சிரசையென்ருன்
அவனைவிட்டு நீங்கி ஐயையோ காலமென
சிவனை நினைந்துயான் சீக்கிரமா யோடிவந்தேன்
அப்படிக் கொத்தபெலவான் ஆனதொரு கீசகனும்
தப்பாய் மடிந்தானென்று சாற்றினர் தூதுவர்கள்
என்னையு மிம்மிசைகள் ஏகமாய் செய்ததொரு
மன்னன் துலைந்தான் மகாவேந்தே யிப்பொழுது
வேண படையைக்கூட்டி விராட நகர்சென்று
கானகத்தி லேமேயுங் கணக்கடங்கா கோவதனை
ஓட்டியே நாம்வந்தால் ஓடிவரு வானரசன்
தன்னைப் பிடித்து சல்தியாய் யென்தேரில்
மன்னனைக் கட்டியுமே வந்தாலே வங்கிருக்கும்
ஐவர்பஞ்ச பாண்டவரும் அரசன் றனைமீட்க
பையவே வந்திடுமோர் பஞ்சவரை யான்பார்த்து
தங்காது வேகமதாய் தான்வந்து சீக்கிரத்தில்
எங்கோனே யான்மொழிவேன் எனக்குவிடை தாருமென்ருன்

## துரியோதனனும் பேரியோர்களும் திரிகர்த்தனுக்கு படைகள் கோடுத்து மச்சனுடனுப்புதல்

கண்ணில்லான் வேணதவம் கடுமையா யிருந்துபெற்ற
மன்னன் துரியோதனனும் வழுத்தி சபையோர்க்கும்
திரிகர்த்தன் தன்னையும் செப்பியரு கழைத்து
அறியவே யாவர்களும் அளித்து வெகுமதியும்
வேண்டிய மட்டுமரசன் விளம்பி யவன்தனக்கும்

தாண்டுங் குதிரைகளும் சரியான தேர்தனையும்
காலாள் படைகளுடன் கனத்த வரசர்களும்
மேலான குஞ்சரியும் மேன்மைபெற்ற வீரரையும்
பேரிகை டங்காவுடன் பெரிய சதைமேளம்
கோரியதைக் கொடுத்து கோமான் விடையளித்தான்

திரிகர்த்தன் மச்சனுடே புறப்படுவேது

அரசனைத் தான்தொழுது அகன்று படைகளுடன்
சரசரனத் தேர்நடத்தி தான்கடந்து நந்நகரம்
நாடுதனைக் கடந்தும் நதிகளையு மேதாண்டி
காடுகடந்து மவர் கரியமலை யைக்கழித்து
வாத்திய மதையடிக்க வல்லோசை யைக்கேட்டு
நேத்தியாய் தேவர்களும் நின்று புகழ்ந்தனரே
மன்னர்களே யிப்போது மகிழ்ந்து நம்நாடதனை
பின்னமிலா துகழித்தோம் பிரபலரே யிப்பவுமே
மச்சநாட் டெல்லையிதில் மன்னர்களே யிப்போது
மிச்சமொடு வாவினங்கள் வேண்டியது நிற்பதினுல்
இந்தப் பசுநிரையை இப்போது நாமடக்க
தந்திரமா வாயுதத்தை தயார்ச்செய்யு மென்றனனே
அப்போ தவர்க ளரசனு ரைப்படிக்கு
தப்பாது வாயுதத்தை தானெடுத்தா ரெல்லவரும்
எரிஈட்டி சொருகீட்டி எமனூர் காட்டீட்டி
பரிவாய் யெடுத்துமவர் பாங்காக வைப்பதுடன்
குண்டாத் தடியுடனே குலைசெய்யு மாயுதமும்
அண்டாப் பெருவில்லு மவர்களுங் கைப்பூண்டு
வீச்சு வலையும் வேகமாய் பாயும்வலை
பாச்சும் வலைதனையும் பாதகர் கையெடுத்து
தேரை மிகவிரட்டி சென்றார்க ளப்பாலும்

நேரே பசுநிரைகள் நின்றதை யேகண்டு
விரட்டி மடக்குதற்கு விரைவாகச் சென்றுமவர்
மரட்டியே கோன்களையே மடக்கினு ரச்சமயம்
கோன்களுடன் வந்துமவர் கூடியே சீக்கிரத்தில்
வீண்கல கம்விளைத்தும் வேகமாய்க் கணைதொடுத்தும்
அள்ளிவிட் டார்கணையை அந்தக்கோன்கள் பார்த்து
தள்ளிவிட் டாரதையே சல்தி கணைவிடுத்து
கௌரவ சேனைகளை கலக்கிட வேகோன்கள்
கௌரவ மவர்குலைந்து கலங்கிநிற் குஞ்சமயம்
பசுநிரைக ளப்போது பார்த்துமே பாதகரை
தசுக்கு வையாதபடி சல்தியவர் களையும்
காதை மிகவிடைத்து கடுங்கோப முங்கொண்டு
பாதையில் நிற்போரை பாய்ந்துமே மாய்த்திடவும்
ஐயையோ வென்று மலறியவர் தவித்தும்
பைய வவர்நகர்ந்து பாரப்புதர்க் குள்நுழைந்தார்
கொம்பால்ச் சிலபேரை குத்திப் பசுநிரையும்
வம்பாய் மடித்ததுவே மன்னனிட சேனைதனை
பாதம தால்ச்சிலரை பசுநிரை கள்மடித்து
பேதமில் லாதபடி புறப்பட்ட தேநகர்க்கு
திரிகர்த்தன் தன்னிடமே சென்று சிலபேர்கள்
அரிய வுரைத்தார்கள் அவன்தனக்குச் சங்கதியை
கேட்டுமே யம்மன்னன் கிலேச மதுவடைந்து
காட்டுப்புத ருள்ளிருக்கும் காவலரை யழைத்தும்
மன்னன் தைரியமும் வழுத்தி யவர்களுக்கு
பின்ன மில்லாதபடி புறப்பட்டான் கோன்களிடம்
வந்துவப் பாதகனும் வளைத்துமே வில்லதனை
நொந்திட வேகணையை நூறுவிட்டா னேயங்கும்
இருந்ததொரு கோவலர்மேல் எகிப்படக் கணையும்

வருந்தி யவர்களுமே வம்பாய் மடிந்தனரே
இன்னுஞ் சிலபேர்க ளிருந்தவர்க ளச்சணத்தில்
மன்னனை வந்து மடக்கி யவர்களுமே
எரியிட்டி தன்னை இதமா யவர்தீட்டி
விரிவான கத்தியொடு வெகுவுண்டை வில்லுகளும்
வாளுகளுஞ் சக்கரமும் வைத்து யிருகரத்தில்
பாழு மனதுடையோன் பாரரசன் சேனைதனை
எரிந்து மவர்களின்மேல் ஏசப்பே ரச்சணத்தில்
சரிந்திட வேகுடலும் சாய்த்தார்கள் கோபலர்கள்
பசுக்களை வோட்டுவரை பார்த்துமவ ரங்குசென்று
சிசுக்கன் றெடுஆவை திருப்பவந்தக் கோவலர்கள்
திரிகர்த்த னும்பார்த்து செயம்பெற்ற கோபலர்முன்
அறியவே வந்துநின்று அப்பாத கன்வில்லில்
தொடுத்துக் கணைதனையே சொல்லியே மந்திரத்தை
விடுத்தா னவர்களின்மேல் வேகமா கப்பகழி
வந்துமே கோன்களையும் வம்புசெய் யக்கணையும்
நொந்து சிலபேர்கள் நொடிதனி லேமடிந்தார்
மிச்சமுள்ள பேர்கள் வேகமா யோடிவந்தும்
அச்சமில் லாதபடி அரசனோ டெதிர்த்தார்கள்
சேனைகள் மேற்கோபலர்கள் தீட்டிவிட் டார்பகழி
ஆனை யொடுபடையும் அலறியே செத்திடவே
கால்வேறு கைவேறு கண்டச் சிரம்வேருய்
மேல்வேறு மாகியுமே வேணசனம் மடிந்தார்
விடுவேனோ வென்றும் விரட்டியே கோபலர்கள்
கடுத்துக் கணைவிடுத்தே கண்ட வரைமடித்தார்
திரிகர்த்தன் சேனைகளுஞ் சின்னுபின் னப்படவே
அறிந்துமே சங்கதியை அவன்வந்தான் கோன்களிடம்
வல்லனல் வில்லதனை வளைத்துவப் பாதகனும்

சொல்லவொண் ணுக்கணையை தொடுத்துவிட்டான் கோபலர்மேல்
கடுங்கோப மாகவுமே கணைகளும் வந்தவரை
வடுப்படுத்தி யேசிலரை வம்பாய் மடித்ததுவே
ஐயை யோவென்று அலறியே வாயர்களும்
பையவே கீழ்விழுந்து பரதவித் தவர்மடிவார்
மிச்சமதி லொருத்தன் வேகம தாயோடி
அச்ச மொடுபுதரி லவன்மறைந் திருந்தனனே
அப்போ திரிகர்த்தன் ஆனசே னைக்குரைத்தும்
தப்பாது கோவுகளைத் தானோட்டி யோர்புரத்தில்
வைத்துமே பாராவும் வம்பனு மப்போது
தத்துவ முடனேயவன் தானேகி யோர்நகரைக்
கொள்ளை யடித்துப்பாவி கொழுத்தியே தீயாலும்
சள்ளையுமங் குவிளைத்து சனத்தைரெம் பமடித்தான்
அந்த நகரிலுள்ள ஆனபரி சனங்கள்
சிந்தைநொந்து வப்பாலுஞ் சென்றுமே யோசித்து
என்னயினி செய்வது என்றுமே யெல்லோரும்
மன்னன்வி ராடனிடம் வழுத்துவோம் வாருமென்று
அதிவேக மாகவுமே அவர்கள் நொந்துநடந்து
ததியே கடந்தார்கள் தக்கதொரு காட்டகத்தை
அழுதுகொண் டேயவர்க ளரமனை தன்முகப்பில்
தொழுதுமே சேவகரை சொல்லென்று ராசனுக்கும்

குடிகளும் கோபாலர்களும் அரசனிடத்தில் முறையிடுவது

சேவக னுடனேயும் சென்றுமே வந்தவர்கள்
மேவலர்கள் புகழும் வேந்த னிடஞ்சென்றும்
அழுதுமுறை யிட்டுமவர் அரசனை யேதொழுது
பழுதுவந்த சங்கதியைப் பகருவார் யாதெனிலோ
இப்பதிரி கர்த்தனு மேகியே நம்நகரில்

செப்பவொண்ணுக் கோவுகளை சேர்த்து மடக்கினதை
பார்த்துமே நாங்களும் பாதகன் றன்னேடு
வேர்த்து மேநின்று வெகுவாளி யைத்தொடுத்து
அவர்களுட சேனைதனை அழித்தோமே கோடிவரை
தவராது கொன்ருேம் சாமியே யெங்களையும்
அடித்து நொருக்கியே அந்தத்திரி கர்த்தனும்
துடித்துக்கணை யைத்தொடுத்தும் தொலைத்திட்டான் பூராவும்
செத்திட்டார் கோன்களுமே ஜெகவரசே யாளுருத்தன்
தத்தித்தடுமாறி தான்வந்தே னேமொழிய
பதினுயிரங் கோவுகளைப் பாதகனுங் கைக்கொண்டு
ததியே யொருநகரை தான்கொளுத்தி வக்கினியை
கொள்ளையடித்துமவன் குலைகள் மிகப்புரிந்து
சள்ளை மிகவிளைத்து தானிருந்தான் காட்டகத்தில்
இன்னுஞ் சணநேரமதி லிவ்வூர்க்கு மேயவனும்
மன்னவனே வந்திடுவான் மதுக்குதக்க யேற்பாடு
செய்யுமென் றுமுரைத்து செப்பவந்த கோன்களுமே
நைதுமே சென்ருர்கள் நகரந் தனைநோக்கி

### விராடராசன் யுத்தத்திற்குப் புறப்படுவது

அரசனு மப்போது அழைத்துச் சேனுபதியை
திறமா யவன்தனக்கும் செப்பியே சங்கதியை
சும்மா யிருக்காது சுருக்காக நீசென்று
நம்ம படைதனக்கும் நன்ருக நீயுரைத்து
யுத்தகோ லம்பூண்டு ஒருநொடியி லேயவரும்
இத்ததி பயணமென்று மெங்கும் முரசடியும்
செல்லென்று மேயரசன் செப்பிட வேயவனும்
நல்லதென்று தானடந்து நலமாகச் சாம்புவனை
அழைத்து மவனிடத்தி லறைந்து மேசங்கதியை

மலைத்திடாது நீயும் மாட்டென்றான் பேரிகையை
அந்தமொழி கேட்டுமவ னப்படியே வாச்சுதென்று
சந்தோ ஷங்கொண்டு தானடித்தான் பேரிகையும்
பறையோசை கேட்டு படைவீரர் யாவர்களும்
விரைவாய்வந்து சாம்புவனை விசாரித்து சங்கதியை
தேர்தனையே சோடித்து தெய்வலோ கப்பரியை
பார்வேந்தர் கொண்டுவந்தும் பக்குவமாய்ப் பூட்டிவைத்தும்
தக்கதொரு தளத்தை தனித்தனி யாய்பிரித்து
மிக்கவே வாத்தியத்தை மீட்டினா ரச்சமயம்
தங்காது பாளயங்கள் தான்வந்து சேர்ந்திடவும்
பங்கமில் லாதபரி பார்த்தால் பயமாகவும்
ஆனையோ சங்கம் அதிரதர் வெகுசங்கம்
சேனைப் பெருக்கமதை செப்பிடவொண் ணுநெருக்கம்
வில்லா சிரியரொடு வேணதொரு மன்னர்களும்
சல்லாப மாய்வந்து தான்சேர்ந்தா ரோரிடத்தில்
அப்போ விராடமன்ன னங்குவந்து மேபார்த்து
செப்பவொண்ணுச் சேனைகட்கு செப்பித் தைரியமும்
வருகிறே னென்று மன்ன னவர்க்குரைத்து
திரும்பியே வந்துமவன் செய்தா னலங்காரம்
பரையோசைச் சத்தமதை பாரா சன்சுதனும்
விரைவா கக்கேட்டு விசாரித்தான் சங்கதியை
சுவேதனனு மப்போது சுருக்காகத் தேரேறி
வீவேக முடையவனும் விரைவாகப் போர்க்குவந்தான்
இரண்டா வதுபால னிருக்கும் சதானிகனும்
திரண்டவோசை கேட்டுமவன் தீர்க்க விசாரித்து
தவராது தேரேறி சல்தியா கவந்து
அவருட னேசேர்ந்து மவன்சென்றான் போர்புரிய
மூன்று வதுபிள்ளை முனைவீரன் சங்கனென்போன்

நன்ருக வோசையைகேட் டவனும் விசாரித்து
தேவபரி தனையே தேரினில்ப் பூட்டியேறி
பூவரசன் வந்து பொருதினன் படையுடனே
நான்கா வதுகுழந்தை நல்ல வரகாகேதன்
தான்பரை யோசை சந்தி யைத்தெரிந்து
விரைவாகத் தேரேறி வேந்தனுங் கோபமுடன்
அரைநொடி'யிற்படைக ளதனுட னேசேர்ந்தான்
பிள்ளைகள் நால்வருடன் பெருஞ்சேனை பூராவும்
சள்ளையை யெண்ணுது தக்கதொரு வாத்தியத்தை
அடிக்கும் படியவர்கள் ஆடர்க் கொடுத்திடவும்
இடியிடித் தாப்போல எங்கும் முழக்கினர்கள்
வில்லா சிரியரொடு வேணபடை பூராவும்
சல்லாப மாய்ப்பேசி தானடத்தி னர்படையை
செல்வது மேவிராடன் தெரிந்துமே சீக்கிரத்தில்
நல்லபு தல்வர்கள் நால்வர்க ளுஞ்சென்று
போர்செயுந் திறமதனை போய்ப்பார்க்க வேணுமென்று
தேர்தனையே கொண்டுவரச் செப்பினன் தம்பியிடம்
அண்ண னுரைப்படியே அவன்சென்று சீக்கிரத்தில்
மன்னன்மன துக்கிசைந்த வான்பரி யையவிழ்த்து
நயமான தேரதனில் நாட்டிப் புரவிகளை
சயம்பெற வேநினைந்து சல்தி யரசனிடம்
கொண்டுவந் துநிறுத்தி கோமானைத் தேரேற்றி
கண்டவர் கள்மயங்க கடுமையாய்த் தேர்விடுத்தும்
நாற்றிசையுங் கொண்டாடும் நல்லகங்கப் பட்டர்தனை
போற்றி விடைவாங்கி புண்ணியன் நிற்குகையில்
அப்போ மதவீமன் அண்ணன் தனைப்பார்த்து
செப்புவான் கண்சாடை செய்தியும் யாதெனிலோ
இவ்வர சனுடனே ஏகுவோம் போர்க்கென்ருல்

அவ்வர சனமையே அழைக்கவில்லை யென்றனனே
தம்பி யுரைத்ததொரு சங்கதி யையரசன்
தம்மிடத் தில்சாற்ற தான்சென்று பட்டருமே
மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாளுகின்ற புண்ணியனே நீர்கேளும்
மடப்பளியி லேயிருக்கும் மன்னன் பலாயினனும்
திடப்புயத்தோன் வாசவனை செயம்பெற் றதுமறிந்தும்
வல்லவனை விட்டும் வண்போர்க்குச் செல்வதும்நீர்
நல்லதல் லவரசே நன்னயமா யின்னமுங்கேள்
வாம மொடுபரிக்கி வல்லவனு கவிருக்கும்
தாமக் கிரந்தியுமே சமத்தனே போரைவெல்ல
அந்தரத்தோர் கொண்டாட அமைந்தபசுக் காவலனுய்
தந்திர பாலகனும் சமத்தனே போர்களிலும்
ஐவர்க ளிடத்திலே அருமையா யிருந்தவர்கள்
செய்ததொரு யுத்தமதைத் தீர்க்கமாய்ப் பார்த்தேன்யான்
நான்தனி யாயிருக்க நல்லது வோவரசே
தான்தெரியும் பின்னுலே சங்கதி யென்றனரே
பட்ட ருரைத்ததுவை பாரரசனுங் கேட்டும்
திட்டமென்று நம்பியவன் செப்பியே பாகனிடம்
ஐவரையுந் தேரில்வைத்து அமைந்துமே சாரதியாய்
செய்யவே யுத்தமது தீர்க்கமாய் வாருமென்றான்
அரச னுரைப்படியே அப்பாக னுஞ்சென்று
திறமான வான்பரியைத் தெரிந்துதே ரில்ப்பூட்டி
சிங்கார மாகவந்து செப்பிடப் பாகனுமே
தங்காது வந்துமவர் தானேறி யேரதத்தில்
அம்புவில்லைக் கைப்பிடித்து ஆன பணிபூண்டு
தம்பிமார் களுடனே தான்வந்தார் ராசனிடம்
வாத்தியங் களடிக்க வானவர் களுமஞ்சி

பார்த்திருந்தா ரேபடையை பார்வையது குன்றுது
விடைகொடுக் கவரசன் வேந்தர்கள் தப்பாது
தடையில்லா தபடியே தான்வந் ததிரியிடம்
குருசேனை யைக்கண்டு குறுக்கே யிவர்பாய்ந்து
தருளா யிருந்தவரை நாலுபக்கஞ் சூழ்ந்தனரே
அணியணி யாய்ப்பிரித்து அங்கேயூ கம்வகுத்து
தனித்தனி யேயவர்கள் சல்தி சிலைவளைத்து
திரிகர்த்தன் சேனைகள்மேல் தீட்டிவிட் டார்பகழி
அரிகரப் பிர்ம்மாதிக ளஞ்சிடும் படியாமே
கையற்று வீழ்வாரும் கண்கெட்டுப் போவாரொடு
ஐயோ கணைகளுமே அறுத்தெரியு தேதலைகள்
விராடன் மகன்மூத்தோன் வேண்டிய கணைதொடுத்து
பாராத படிவிட்டு பதைக்கும் படிசனத்தை
அறுத்துச் சிரமதையே அவன்குவித்துக் கோடிவரை
திருத்தமாய்க் கோடிவரை தீட்டிவிட் டான்கணையை
செஞ்சிலை யைவிடுத்து சீக்கிர மாகவந்தும்
பஞ்சைகள்மேல் தைத்திடவும் பழியாய் மடிந்தார்கள்
தண்ணிதண் ணியென்று தவித்துவந்தப் பாளையமும்
எண்ணிவோட் டம்பிடித்தா ரேந்தலைக் கைவிடுத்தார்
கண்ணிழந் தபிணமும் காலில்லா தபிணமும்
மண்ணிலே தான்வீழ்ந்து மலைமலை யாய்க்கிடக்கும்
திரிகர்த்த னப்போது செய்திகள் பூராவும்
அறிந்து மவன்றுனும் அதட்டியே சாரதியை
ரதத்தை மிகவிரட்டி நல்ல தொருபடைக்கு
இதமாய்த் தைரியத்தை எடுத்தோத வேயவனும்
அப்படை கள்கேட்டு அகத்திற் றைரியமாய்
செப்பின வரசனுடன் சென்றதுவே போர்புரிய
பதியரசன் சேனைதனை பங்குபங் காய்ப்பிரித்து

ததியே கணைதொடுத்துச் சாடினார் பாதகர்கள்
அதிவேக மாகவுமே அக்கணை புறப்பட்டு
ததியேவந் துபாய்ந்து சனத்தையெல் லாமடிக்க
படுகளத் தைப்பார்த்துப் பயந்துமவர் நிற்குகையில்
விடுவேனோ வென்றும் விரட்டியிப் பாதகர்கள்
அம்புகளைத்தொடுத்து அவர்கள்தன் மேலேவி
வெம்பும் படியவரை வேணகோ டிமடித்தார்
ரெத்த வெள்ளமோட ரெணக்களத்தில் செத்தபிணம்
அத்துடனே வோடுகுதே ஐயோ பரிதாபம்
கானகத்தி லேவசிக்குங் காட்டேரி யும்நரியும்
தானகத்தி லேநினைந்து தக்கதொரு போசனமும்
செம்மையா கநமக்கு சிக்கின தென்றுமது
பம்மாத படிவந்தும் பசுக்கார மாய்ப்பொசிக்கும்
அப்போ திரிகர்த்தன் அரசன் மகனிடத்தில்
தப்பாது வந்து தான்மறித் தானவனை
வல்லனல் வில்லதனை வளைத்துச் சிறுவனையும்
தொல்லை விளைத்திடவே தூண்டிவிட் டான்கணையும்
சுவேதன னுங்கண்டு சுருக்காக வத்தனையும்
விவேகமான பாணமதால் வெட்டி யெரிந்தனனே
வந்ததிரி கர்த்தனும் வம்பாக வேநினைந்து
நொந்திடவே பாலகனும் நூறுவிட் டான்கணையும்
கணைகளும் வந்துமே காவலன் தேரதனை
பணைபோல் பிளந்தெரிந்து பக்கத்தில் சென்றதுவே
பார்த்த திரிகர்த்தன் பாலகன்மே லப்போது
வேர்த்தே சிலைவளைத்து வேண பகழிவிட்டான்
பிழைசெய்ய வேகணையும் பெருவேக மாய்ச்சிறுவன்
சிலையை வொடித்துவிட்டு சென்றது வப்பாலும்
கண்டுதிரி கர்த்தன் காவலவன் தன்சுதன்மேல்

ரெண்டுகணை விடுத்து ரெத்தவர வுந்துளைத்தான்
அவனுஞ்சகி யாதபடி அப்பாலெடுத் தோட்டம்
தவராது சென்றும் தக்கதொரு கானகத்தில்
அத்தனை நோக்கி அவனிருந் துதவமும்
சித்தமொடு பாணம் சேயன்வாங் கயிருந்தான்
திரிகர்த்த னப்போது செப்பவொண் ணுக்கணையை
அறியும் படிபடையை அங்கேவி னன்பாவி
அதிவேக மாகவுமே அப்பகழி கள்வந்து
ததியே மடித்ததே சனங்களைக் கோடிவரை
ஐயை யோவென்று மலறியப் பாளயங்கள்
செய்வதென்ன யென்றுமவர் செப்பாம லோடினர்
அங்கிருக்கும் கோன்களிடம் அந்ததிரி கர்த்தனும்
தங்காது வந்துமவன் சல்திபா ணந்தொடுத்து
கோவலர் மேல்விட்டுக் கோடி வரைமடிக்க
மேவலர்க ளிவனை மேன்மை யொடுபுகழ்ந்தார்
கோவுகள் யாவையுமே கொண்டு வரும்படியாய்
சேவுக ரிடந்தனிலே செல்லென்றன் சீக்கிரத்தில்
அப்படியே சென்றுமவர் அரசனு ரைப்படியே
தப்பாது கோவுகளைத் தானோட்டி வந்தார்கள்
எல்லவரு மப்போது எகித் தடாகக்கரை
சல்லாப மாய்ப்பேசி தானிருந்தா ரம்மானை
கண்டான் விராடனுமே கனகோப முங்கொண்டு
விண்டானே சேனைகட்கும் விரைவாகப் போர்க்கேக
பிள்ளைக ளடிபட்டதை பிரபல னும்நினைத்து
சள்ளைமிக வடைந்து சாற்றவே பாகனுக்கும்
சாரதி யுங்கேட்டு தட்டவே வான்பரியை
பாரதிலே வேகமதாய்ப் பறந்துசென் றதசுவம்
திரிகர்த்தன் சேனையிடம் சென்றுமே நிற்கவங்கு

அறியவே தேரைநிறுத்தி அங்கே கணைபூட்டி
விட்டானே சேனைகள்மேல் வேகமாகக் கணையும்
சட்டென வேபாய்ந்து சனங்களை யும்மடிக்க
அப்பால் விராடன் ஆயிரங் கணைவரையில்
தப்பாமல்ச் சேனைகள்மேல் தானேவி னன்சணத்தில்
அம்புக ளப்போது அதிவேக மாய்வந்தும்
வம்புசெய் தேசிலரை மாண்டிடவும் செய்ததுவே
ஆனை வசுவங்களும் அளவில்லாச் சேதமொடு
சேனை மடிவதையும் திரிகர்த்த னுக்குரைக்க
கண்டானே சேனைதன்னை க்னவருத்தங் கொண்டவனும்
சண்டாளன் வில்லதனில் சரமாரி யாய்த்தொடுத்து
அளவில்லா தகணைபை அவன்தூண்டி விட்டிடவும்
மளமளன வந்ததுவும் மடித்ததே கோடிசனம்
தேர்தனை யும்முடைத்து தீர்க்கப்பரி யைவதைத்தும்
பார்வேந்தன் கைச்சிலையை பட்ட னவுமொடித்தும்
பின்னுங் கணைதொடுத்து பிரபலன்மார் பைத்துளைக்க
மன்னன் விசனமொடு மயங்கிநிற் குஞ்சமயம்
அப்போ திரிகர்த்தன் அந்த விராடன்தனை
தப்ப விடாதபடி தான்பிடித்துச் சீக்கிரத்தில்
பார்வேந்தன் தன்னை பக்குவமாய்க் கொண்டுவந்து
தேர்க்காலில் கட்டியவன் செயசங்க முந்தொனிக்க
காவலர்க ளெல்லாங் கண்டுபயந்தோடுவதை
கோவலர்கள் பார்த்துங் கூட்டமா யோடினர்கள்

விராடராஜன் குழந்தைகள் கங்கபட்டரடியில் வீழ்ந்து
தந்தை கட்டுண்டதைத் தெரிவித்து முறையிடுவது

தரைவேந்தன் பிள்ளைகளும் தந்தைகட் டுண்டதையும்
விரைவாக வேபார்த்து மெய்கலங்கி யேயவர்கள்

ஐயையோ தந்தைதனை அரும்பாவி கட்டினனே
செய்வதென்ன நாமளென்றும் சிந்தையில் யோசித்து
சங்கதி தன்னைநாமள் சாற்றவே பட்டருமே
எங்கிருக் காரென்று இடந்தேடிக் கண்டவர்கள்
பாத மதைப்பிடித்து பரிவா யவரழுதும்
வேத னிடந்தனிலே விளம்புவார் யாதெனிலோ
எங்கள் குருநாதா இப்பவுமென் தந்தைதனை
பங்கமது செய்து பாவிதிரி கர்த்தனுமே
கட்டியே தேர்க்காலில் காவல னேயவனும்
சட்டமாய்த் தேரோட்டி தான்செல்கின் றுன்பாவி
என்ன செய்வோம் நாங்களுமே எங்க ளிடமிருந்த
என்மாம னில்லாம லித்தனை பெருந்தீங்கு
ஐயையோ சாமியென்று அழுதுநிற்கப் பாலகரும்
துய்யகங்கப் பட்டருமே சொல்வார் தைரியத்தை
பயமடை யாதிருங்கள் பார்ப்போ மவன் தனையும்
செயமு மடைந்துநாம் சென்றவனைக் கொன்றிடுவோம்
வாடிய மைந்தர்கட்கு மன்னர் தைரியமும்
நாடி யுரைத்துமவர் நலமா யிருக்கவைத்தார்

கங்கபட்டர் பலாயினனை கண்சாடை காட்டி
போருக்குப் போகச்சொல்வது

தம்பிமத வீமனை தான்பார்த்து மேவிழியால்
நம்பின விராடனை நலமாகக் கட்டவிரும்
என்றுதர்மர்சாடை இருவழியால் நோக்கினதை
நன்றாகக் கண்டுமந்த நல்ல பலாயினனும்
சாரதி தனக்கும் சல்தியெனப் பாகனுமே
பாரதி லேரதத்தை படபடவென் றோட்டிடவும்
போர்க்கோலங் கொண்டு போகுந் துடியதனை

பார்ப்பவர்க ளெல்லாம் பயங்கரங் கொண்டிருக்க
விருவி ரெனச்சென்று வேகமாய்க் கணைதொடுத்து
குருசேனை யத்தனையுங் கொள்ளைகொள்ளப் போகின்ற
மதவீமன் கோபமதை மன்னர்தர் மர்பார்த்து
இதமறியாப் போரை இன்றுசெய் வான்துடியன்
மலையாது நின்று மடித்துவிடு வானுகில்
பிழைகேடு வந்துவிடும் பின்னுலே நாம்சென்றும்
அவனிடத்தில் சங்கதியை அறியும் படிநாமும்
தவரா துரைப்போமென்று தானினைத்துச் சீக்கிரத்தில்
ரதத்தை நடத்தியவர் நல்லபீ மன்றனையே
இதமா யழைத்து இயம்புவார் யாதெனிலோ
உன்குணத்தை யானறிந்து உள்ளதையெல்லாந் தெரிந்தேன்
என்மனத் திலிருக்கு மிஷ்ட மதைத்தெரிவாய்
மன்னவ னேகேளும் மவரிடத்தில் நீசென்றும்
பின்னு முன்னும் பாராமல் பெரும்போர் விளைத்தாலே
கண்டிடுவார் வீமரென்று கனத்தசங் கடந்தம்பி
மண்டல வரசர்களும் மகாசபை தன்னிருந்து
செப்பியபடி நாமும் செல்லவேணுங் காட்டகத்தில்
தப்பிதம் வராதபடி சாக்கிரதை யென்றனரே
நின்றுமே யண்ணரிடம் நிகழ்த்தியே சங்கதியை
நன்றெனவேமொழிந்து நடத்திட ரதந்தனையும்
செப்பிடவே பாகனுக்கு சீக்கிர மேயவனும்
தப்புக ளில்லாதபடி தானடத்தி யேரதத்தை
வந்தார்கள் சீக்கிரத்தில் வருவாரைத் தர்மருமே
விந்தை யொடுபார்த்து மேவியவ சரமாய்
தம்பி யிரட்டையர்கள் தானிருக் குமிடத்தை
நம்பியே சென்று நாத ரவர்களையும்
கண்டுமே தானழைத்துக் காவல னவரிடத்தில்

விண்டுமே சங்கதிகள் விளம்புவார் யாதெனிலோ
இன்னருமைத் தம்பிகளே இப்போ மதவீமன்
மன்ன ரிடந்தனிலே வண்போர்க்குப் போரதினுல்
திரிகர்த்தன் றன்னுடனே திறமான யுத்தமதை
அறியவே செய்வான் அவனுமே வில்லொடித்தால்
தரையிற் குதித்துத்தம்பி சல்திமலே யைப்பிடுங்கி
விரைவா யவன்பேரில் வீசுவான் தப்பாமல்
தேரைக்கை யால்த்தூக்கி சீக்கி ரத்திலேபல
பேரை மடித்திடுவான் பெரும்பிழை வந்திடுமுன்
அவனையும் நீங்களும் அதிக வுசாராக
தவற விடாதபடி சல்தியுத விபுரிந்து
தஞ்சமென் றவிராடன் தன்னுடைய கட்டதனை
சஞ்சலத்தை நீக்கி தயவாயவ னையவிழ்த்து
சிந்தை மிகமகிழ்ந்து சேயர்களே நீங்களுமே
சந்தோஷ மாகவுமே தான்வருவீ ரென்றுரைத்து
செல்லுங்கள் தம்பியென்று சீக்கிர மவருரைக்க
நல்லதென்று கேட்டு நடத்தினு ரோதத்தை
அதிவேக மாகவுமே அவர்கள் விடுத்துவந்து
ததியே தமயனிடம் தான்சேர்ந்தார் சீக்கிரத்தில்
பார்வேந்தர் போற்றும் பலவீமன் றன்னிடத்தில்
நேர்நின்றுகண்சாடை நிகழ்த்தினுர் சங்கதியை
அறிந்துமே வீமன் அருமையான தம்பியிடம்
தெரிந்துகொண் டேன்யானும் செய்யென்ருன் யுத்தமதை
மன்ன னுரைத்ததொரு வசன மதைத்தெரிந்து
பின்னமது நினைந்து பெரியபடை தன்னுடனே
திரிகர்த்தன் நிற்குமிடஞ் சென்றுமவர் சீக்கிரத்தில்
அறியவே வில்வளைத்து அவர்பூசை யும்புரிந்து
தொடுத்துக் கணைதனக்கு சொல்லி வுபதேசம்

விடுத்தார் யெதிரியின்மேல் வீரமா னகணையும்
வந்து மவர்களையும் வம்பு மிகப்புரிந்து
நொந்திட வதைத்ததுவே நொடியில் வெகுசனத்தை
மடிப்பதை யேகண்டு மன்ன ரிருவர்களும்
துடித்தே வெகுகணையைத் தூண்டிவிட்டா ரேயவர்கள்
விட்டகணை பூராவும் வேகமா கவந்து
சட்டன வெகுபெயரைத் தான்மடித் திடவுமங்கு
இருந்த மதவீமன் இருவருட யுத்தமதை
திருத்தமாய்ப் பார்த்து சென்று மறுபுரத்தில்
வல்லவநல் வில்லதனை வளைத்து வப்போதவனும்
சொல்லவொண் ணுக்கணையை தூண்டிவிட்டுச் சேனைகளை
அடித்தா னொருபுறமாய் ஐயையோ வென்றுமவர்
துடித்துமே கீழ்விழுந்து சோம்பி யவர்மடிய
கண்டந்த வாய்வுசுதன் கடுங்கோப மாகவுமே
ரெண்டு கணைதொடுத்து நீட்டினான் சேனைகள்மேல்
பட்டு மவர்களுடல் பதைத்துமே கீழ்விழுந்து
சட்டென வேயவர்கள் தான்சென்று ரேபதவி
அடைந்தவர் கள்போக அப்பால் சிலபேர்கள்
சடைந்தே யவரோடத் தர்மருமே சல்தியதாய்
பொறுமை யுடன்தனுசில் பூட்டிச் சிலகணையை
வறுமை யடைந்து வருவோர்மே லேவிடவும்
அதிவேக மாகவே அக்கணை புறப்பட்டு
பதியி லலைவோரைப் பார்த்துவதி சீக்கிரத்தில்
வந்துமே பாய்ந்திடவே வதிவீர ராயிரம்பேர்
நொந்துமண் ணைக்கவ்வி நொடியில் மடிந்திடவும்
ஐயையோ வென்று அலறியே மிஞ்சினவர்
செய்வதென்ன நாமென்று செப்பாம லோடினரே
அப்போ திரிகர்த்தன் அறிந்துமே சங்கதியை

தப்பாது சேனைகளை தானழைத்து மேயவர்க்கு
செப்பித் தைரியமுஞ் சேர்த்துமே யொன்ருக
மன்னன் திரிகர்த்தனும் மகாகோபந் தன்னுடனே
பின்னமில் லாதபடி பெலவீமன் தன்னிடத்தில்
வந்துமே நின்றுமவன் வாய்மத மாய்ப்பேசி
நொந்து சிலைதனிலே நூறுகணை யைத்தொடுத்து
விட்டானே வீமன்மேல் வேகமாய்க் கணைவரவும்
சட்டெனவே வில்லில் தாநூறு கணைபூட்டி
வந்தகணை யின்பேரில் வம்பனு மேயேவி
நொந்திட திரிகர்த்தனும் நொடியி லறுத்துமவன்
பின்னுஞ் சிலபகழி பிரியம தாய்ப்பூட்டி
மன்னன்திரி கர்த்தன்மேல் மாபாவி யேவிடவும்
அதிரோச மாகவுமே அவ்வாளி புறப்பட்டு
ததியே யவனுடைய சாரதி குதிரைகளை
வந்துமே பாய்ந்திடவே வம்பனுட சாரதியும்
நொந்துமே கீழ்விழுந்து நொடியி லவன்மடிய
கண்டு பெலவீமன் கடுங்கோபந் தன்னுடனே
ரெண்டு கணைதொடுத்து நிமிஷ மவன்தேரை
பொடிப் பொடியாகப் போகத் திரிகர்த்தனும்
துடித்துமே கீழ்நின்று தூண்டிவிட் டகணையும்
அண்டத்தி லுள்ளவர்க ளஞ்சும்படி விரைவாய்ப்
பிண்டங் கலங்கிடவே பெரியசத்தம் போட்டுவர
கண்டு மதவீமன் கர்த்தனை யெண்ணியுமே
ரெண்டு கணைதொடுத்து நிமிச மதையறுத்து
பின்னுஞ் சிலகணையை பிரியம தாயேவி
மன்னன் திரிகர்த்தன் வைத்திருந்த வில்லதனை
ஒடித்திடவும் சீக்கிரத்தி லொருகணை யேவிவிட்டு
துடித்திட வேயவனை துளைத்திட மேனியிலும்

மெத்த மயங்கி வேந்தனிற் குஞ்சமயம்
அத்ததி வீமனுமே அதிவிரைவா யோடிவந்தும்
திரிகர்த்தன் தன்னையே திரும்பாம லேபிடித்து
அறியவே யாவர்களும் அவன்தேருக் காலதனில்
கட்டியே வைத்துமவன் காவலனைக் கையாலும்
கொட்டி யவன்சிரத்தில் சூலையது செய்யாமல்
தங்காது சென்றுமவன் சல்தி விராடன்தன்னை
சிங்காரமா யவிழ்க்க சேயன் றனைப்பார்த்து
பங்க மடைந்திருந்த பாரரச னப்போது
சிங்கப்பெல வானிடத்தில் செப்புவான் யாதெனிலோ
எந்தனுட தெய்வம் இவ்வுருவ மேயெடுத்து
வந்தாயோ காப்பாற்ற மன்னவனே யென்றுமவன்
இன்னும் பலவிதமே ஏகமாய்த் தோத்தரித்தும்
மன்னன் விராடன் மனமகிழ்ந் தேயிருக்க
கோவுக ளைத்திருப்பி கோன்களி டம்விடுத்தும்
மேவுங்கள் நகரமென்று வேந்த னனுப்பிவிட்டும்
நன்முக வீமனும் நல்லதொரு சங்கதனை
நின்றே தொனித்தான் நெடுந்தொலை கேட்கும்வரை
தரும ரிதைக்கேட்டுத் தம்பிமத வீமனுமே
திருப்பி விராடனையும் ஜெயம்பெற்று னென்றவரும்
ரதத்தை மிகநடத்தி நல்ல தொருயிடத்தில்
இதமாக வந்து யிருக்கவு மந்நேரம்
அப்போ விராடனு மந்தமத வீமனுடன்
தப்பாது சேனைகளுந் தான்வந்து பட்டரிடம்
அரச னவனடியி லன்பாக வீழ்ந்திடவும்
திறமா யவருக்குஞ் செப்பினு ரேயாசி
விலாப்பாரி சமிருந்த வேண பலமுடைய
பலாயின னும்வந்து பரிவாய்த் தொழுதிடவும்

சிந்தை மகிழ்ந்துமவர் செப்பிட நல்வாக்கு
அந்தவேளை விராடன் அவரிட மும்புகழ்வான்
சாமியே யிந்த தக்க பலாயினனும்
பூமியுள்ள மட்டும் பூண்டானே நாமமதை
சாமியே யென்னுயிரைத் தத்தஞ்செய் வதுடனே
பூமியு மென்னரசு பொருந்துஞ்சிம் மாதனத்தை
அளித்தே னுன்தங்களிடம் அடிமையு மாவேனென்று
களித்தே விழுந்துமந்த கங்கபட்டர் தாள்பணிய
இன்றோடு வுன்கவலை ஏந்தலே விட்டுவிடு
நன்றாக வாழ்வாயென்று நல்லபட் டருரைத்து
திரிகர்த் தன்தனையே திரும்பிப்பட் டர்பார்த்து
அரிய விராடனுக்கும் அவருரைத்துச் சங்கதியை
இந்தமன்னன் கட்டவிரும் என்றுரைக்க வேயரசன்
சந்தோஷ மாய்ச்சென்று தானவிழ்த்தா னேயவனை
பங்கமில் லாதபடி பாரரசர் யாவர்களும்
அங்கே யிருந்து ஆனந்தங் கொண்டார்கள்

துரியோதனாதிகள் யோசனைசெய்து மச்சனுடே புறப்பிடுவேது

கண்ணில்லான் வேணதவம் கர்த்தனைநோக் கிப்பெற்ற
மன்னன் துரியோதனன் வழுத்துவான் சபையோர்க்கு
இந்தச் சபைதனிலே இருக்கும் பெரியோரே
விந்தையாய் திரிகர்த்தன் மேவின சங்கதியும்
தெரியவில்லை யாதலினால் சீக்கிரம் படைகூட்டி
அறிகுவோம் நாம்போய் அந்த விராடநகர்
அங்கதே சமதையே ஆண்டு வருமரசே
பங்கமில் லாப்படைக்கு பகர்ந்துமே சங்கதியை
சல்திப்புறப் படவும் தயார்ச்செய்யு மென்றரசன்
சொல்லி யதைக்கேட்டு சுருக்காகக் கர்ணனுமே

சேனைத் தலைவருக்கும் செப்பிடச் சங்கதியை
ஆனை யசுவமுட னவர்கள் தயாராகி
அப்போ பயணமென்று அனைவர் களும்பேசி
செப்பவொண்ணு வாத்தியத்தை தீட்டி முழக்கியவர்
அரசன் துரியோதன் அவன்மாம னுஞ்சகுனி
திறவான் விதுரனுஞ் சேர்ந்துவீஷ்மா சாரியொடு
இன்னுஞ் சிலவரசர் ஏகம தாய்ச்சேர்ந்து
மன்ன னுரைப்படிக்கு மகாபடைகள் தன்னுடனே
அவரவர் கள்ரதத்தி லன்புட னேயிருந்தும்
தவராது பாகனுக்கு சங்கதியெல் லாமோதி
வாத்தியத் தையடித்து வானவர் கள்பார்க்க
நேத்தியாய் ரதம்நடத்தி நெடுந்தெருவை யுந்தாண்டி
காடுகடந் துமவர் கரியமலை யைக்கழித்தும்
மேடுபள்ள முள்ளதெல்லாம் விரைவாக வேகடந்து
மச்சநாட் டெல்லைகண்டு வடபாரி சந்தனிலும்
மிச்சமுள்ள கோவுகளை விரட்டிப் பிடித்துமவர்
கோன்களை யேவிரட்டி கொள்ளை யடித்தவர்கள்
வீண்கல கமதனை விளைத்து மவர்களங்கே
நஞ்சைபுஞ் சைபயிரை நாசமாக் கிச்சணத்தில்
பஞ்சைய ரைவிரட்டி பாவிகள் பொருள்கவர்ந்தும்
மாட்டுமந்தை யத்தனையும் மடக்கியே கோன்களையே
தீட்டிவிட் டார்பாணஞ் சென்றிடையர் மேற்படவும்
ஐயையோ வென்றுமவர் அலறியே கீழ்விழுந்து
தெய்வமே யென்றுமவர் சீவனை விட்டார்சிலர்
கண்டுமே வோடக் கடுங்கணையை விட்டவர்கள்
துண்டாய் விழும்படியாய் துடியர்கள் செய்திடவும்
மாடுமேய்க்கும் கோன்பூரா மடிந்து வதிலொருத்தன்
ஈடுசெய்ய வொண்ணுது எடுத்தான் வோட்டம்நகரம்

## கோவலர் அரண்மனைமுகப்பில் உத்தரகுமாரனிடம் முறையிடுவது

அரமனை வாசல்தனில் அவன்வந்து மேயமுக
திறமான காவலர்கள் செப்புவா யென்றுரைக்க
அரசனைக் கூப்பிடுங்க ளதன்பின்னால் சங்கதியை
சரசரனச் சொல்வேனென்று சாற்றவே சேவகரும்
அதிவேக மாகவுமே அரமனைக் குள்ளேகி
பதியரசன் பாலனிடம் பகர்ந்தார்கள் சங்கதியை
தெரிந்துமுத்த ரகுமாரன் சீக்கிரத்தில் கோன்களிடம்
அறிந்திடவே சங்கதியை அவர்களிட மோடிவந்து
மேவலர்க ளுந்துதிக்கு மேன்மை யொடுவமைந்த
கோவலரே செய்திதனை குணமா யுரையுமென்றான்
பதியர சன்மகனே பரமனு மெங்களுக்கு
விதித்த விதிதனையே விளம்புகி றேன்கேளும்
திரியோத னாதிகளும் திரண்டபடை யோடுவந்து
அரிந்தார்கோன் கள்சிரசை அதிலொருத்தன் யான்மீதம்
ஊருக ளைக்கொளுத்தி உள்ளபொருள் கைப்பற்றி
பாரு பசுக்களையும் பாவியர்கள் கைக்கொண்டு
எங்களை யுமடித்து இம்மிசைகள் செய்கிறாரே
உங்க ளையாவெங்கே உமக்குப் பலமிலையா
வீட்டி லிருப்பதுமே வேந்தே தகுமோவென
கேட்டிருந்த சுதர்க்கனை கிலேச மிகவடைந்தும்
ஐயையோ ஈதென்ன அநியாய மேபாவி
செய்யாப் பெருங்கொடுமை செய்யத் துரியோதன்
விரைவாக வேவந்து வேந்தன்பல ரைமடிக்க
தாரைவேந்தர் நீதியோ தானேயிது பாவிகளா
நின்று மவளமுது நேர்மையான கோவலரே
இன்றரசன் வந்திடுவார் எதிர்த்துயுத் தம்புரிய

சென்றிடுங்கள் நீங்களென்று செப்பிடக் கோபலரும்
நன்றெனவே கேட்டு நடந்தார்கள் சீக்கிரத்தில்
சுதர்க்கணை யுமப்போது தோழியி டந்தனிலே
இதமாக வார்த்தை இயம்புவாள் யாதெனிலோ
தாதியேநா மெல்லோரும் தப்ப வழியொன்று
ஓதிடுவேன் கேளுமென வுரைப்பா ளவர்களிடம்
அந்தப் புரந்தன்னி லவர்கள் புகுந்திடுமுன்
தந்திர மொன்றுண்டு தையல ரேசெய்வீரே
ஆளுக்கொரு வில்லெடுத்து ஆரணங்கே தப்பாது
வாளுங் கைக்கொண்டு மங்கைய ரேசல்தி
கோட்டை மதில்மேலே கூட்டமாய் நின்றாலும்
சேட்டைசெய் யவருவோர் சேயிழை யேபார்ப்பார்
மனுநீதிக ளறிந்த மன்ன வருங்கண்டும்
தனுவை வளைத்தேகணை தான்பூட்டா தபடிக்கு
மங்கையர்மேல் போர்தொடுக்க மாகாது மென்றுமவர்
சங்கையொடு சென்றிடுவார் சல்திசெல்லு மென்றுரைத்தாள்
தாதிய ருங்கேட்டு சம்மதப் பட்டவர்கள்
ஓதின் படிநடப்போம் ஒன்றுகுறை யில்லையென்றார்

சுதர்க்கணை வார்த்தையை உத்தரகுமாரன் கேட்டு
தன் பராக்கிரமத்தை மொழிவது

உத்தர குமாரனு முரைத்ததை யேகேட்டு
இத்ததி யென்னசெய்தி எனதன்னை யேமொழிந்தாய்
நானுமர சனில்லையா நல்லவில் லெனக்கில்லையா
வேணுமென் றுயெனக்கும் வெட்டிச்சோற் போட்டாயா
சத்திரிய னாய்ப்பிறந்தும் சமத்து மெனக்கில்லையா
இத்ததியான் கற்றவித்தை இன்றுபா ரென்தாயே
அரவக் கொடியோனையு மவன்படைகள் பூராவும்
பரபரப்பாய் வந்ததொரு பார்மன்னன் கர்ணனையும்

வில்க்கிருபா சாரியோடு வேந்தன் துரோ ணுசாரி
சல்லிய னேடுவந்த சமத்தன் பீஷ்மா சாரியையும்
அஸ்வத்தா மன்முதலாய் அனைவரை யுஞ்சணத்தில்
அஸ்திரங்க ளைத்தொடுத்து அவர்க ளுயிர்வாட்டி
தென்திசை காட்டிடுவேன் சீக்கிரத் திலவரை
என்தாயே கேட்பாயென் றியம்புவான் பின்னுலும்
அருச்சன ணுர்பார்த்து ஆனந்தங் கொண்டிடவும்
திருத்தமா யுத்தமதைச் செய்குவேன் யென்தாயே
வருத்த மடைந்திடாதே மாதாவே யின்றுதினம்
சிறுத்தகுமா ரன்யுத்தஞ் செய்வதைக் கேட்டிடுவாய்
ஆனுலு மின்னமொன்று அம்மையே நீகேளு
தாஞகச் சொல்லலாமா சாரதி வேண்டாமோ
மாற்றலர் தன்குறியை வல்லப மாய்த்தெரியும்
ஏற்றசா ரதியெனக்கு ஈய்ந்தால்த்தா யேநானும்
பகைவ ரிடத்தினிலே பாலகன் யான்சென்றும்
வகையா யுத்தஞ்செய்து மடித்திடுவேன் பூராவும்
சந்தோஷ மாகியுமே தாயேநீ யெந்தனுக்கு
இந்தவே ளைசாரதி ஈகுவா யென்றனனே
சுதனுரைத்த வார்த்தைதனை சுதர்க்கணை யுங்கேட்டும்
இதமா யவனையுமே எடுத்துமார் போடணைத்து
என்னரு மைமகனே இப்போது எந்தனையும்
நன்னயமாய்த் தேர்நடத்தும் நல்லபா கன்கேட்டாய்
காணே னுருத்தனையுங் கண்மணியே யிப்போது
வீணேதா மதஞ்செய்தால் மேவிடுவா ரேயவர்கள்
என்னசெய் வேனென்று ஏங்கிச் சுதர்க்கணையும்
முன்னேவண் ணமகளை மொய்குழலும் பார்த்திடவும்

வண்ணமகள் உத்தரகுமாரனுரைத்ததை
பேடியிடம் மொழிவது

அப்போவண் ணமகளும் அன்பான பேடியிடம்

இப்பவே செல்வோமென்று எண்ணி யவள் நடந்தும்
நாட்டியச் சாலையிலே நாணும லேயிவளும்
மேட்டிமை யோடுசென்று மெல்லிகை யங்குநிற்க
பேடியு மேகண்டும் பெண்ணரசி தன்னையுமே
வாடியம்மா வென்றுமவள் வந்ததென்ன சொல்லென்றாள்
பேடியுமே தான்கேட்கப் பெண்ணரசி வாவென்று
சோடியா யிருபேரும் துடர்ந்துசென் றோரிடத்தில்
வண்ணமக ளப்போது வாகான பேடியிடம்
திண்ணமாய்ச் சங்கதிகள் செப்புவாள் யாதெனிலோ
திரியோத னுதிகளும் திரண்டபடை தன்னுடனே
அறியவே வந்துமவர் அநேகம்பே ரைமடித்தும்
வடபாரி சமதனில் வந்துவப் பாவிகளும்
திடமாய்ப் பசுக்களையுந் திரட்டியொன்றாய்ச் சேர்த்தாராம்
திரிகர்த்த னும்வந்தும் தெற்கே யவன்புகுந்தே
மறித்தானுங் கோவுகளை மன்னர்கள் சென்றாங்கே
துரியோத னன்படைகள் துடர்ந்துமே யிந்நாட்டை
அறியவே கொள்ளைகொள்ள அவர்கள்வா ராராமிப்ப
சுதர்க்கணை யுங்கேட்டுத் துயரமிகப் பட்டதையே
இதமா யறிந்தானே இருந்தவுத்த ரகுமாரன்
அம்மணி யேன்துக்கம் அடைகிறா யானிருக்க
செம்மையா யான்சென்றும் திரியோத னுதிகளை
வாட்டிடு வேன்யானே வலவனென் னிடமிருந்து
ஓட்டிட ரதமதனை உறுதியான மன்னவனுய்
திறமாகக் கற்றவனுந் தேர்ந்து மிகத்தெளிந்த
சாரதி யெந்தனுக்கே சல்திதரு வாயென்றும்
உத்தரகு மாரனுமே ஓதிக்கேட் கவவளும்
சித்தமி கக்கலங்கி செப்பியே யென்னிடத்தில்
அழுது பரதவித்தாள் அந்தமங் கைதனக்கு

பழுதுவந்த சங்கதியை பகரவந்தேன் வும்மிடத்தில்
என்றுமே பேடியிடம் இயம்பவிச் சங்கதியும்
நன்ருகக் கேட்டுமந்த நரனுமே யோசித்தும்
அக்ஞாதநா ளைக்குறித்து அவனுங் கணக்கதனை
தக்கபடி பார்த்துமவன் தானறிந் துகணக்கு
நேத்தோடு தான்கழித்தோம் நிறைந்த வக்ஞாதமதை
தீர்த்தோம் தலைவிதியை தேவ னருளாலும்
என்று மவனினைந்து மெண்ணிக்கன் னியிடத்தில்
நன்ருய் மொழிவானே நல்லசங் கதியதுவை
சாரதியாய் யான்தானும் தையலே போவதிலும்
பாரதிலே சந்தேகம் பாவையே யொன்றுமில்லை
எப்படி யாகிலுமே எந்தனைச் சாரதியாய்
தப்புநினை யாதவர்கள் தானேசெய் யுன்சமத்து
பூராயு ரைத்திடுவாய் பூவரசன் றன்மகனும்
வாராயென் றேயழைக்க வழுத்துவாய் சங்கதியை
சல்தியா யவர்க்குரைத்தும் தையலரே யெந்தனிடம்
சொல்லிட வேநீயும் சுருக்காவா வென்றனனே
பேடி யுரைத்ததொரு பிழையில்லா வார்த்தைதன்னை
தேடிவண் ணமகட்கு செப்பவென் றுமங்கை
அதிவேக மாய்நடந்தும் அம்மங்கை தன்னிடத்தில்
ததியே வண்ணமகளும் சாற்றுவாள் யாதெனிலோ
அம்மையே யுத்தரைக்கும் அதினுட்டி யம்பழக்கும்
செம்மையான பேடியுமே தேர்நடத் தவறியும்
ரெம்பப்போர் வென்றவள் ரெணக்களத்தைக் கண்டவளே
பம்பரத்தைப் போல்ரதத்தை பாங்காய் நடத்தும்விதம்
தெரிந்தவளே ரெம்பவுமே சென்றுரத மோட்டியதை
அறிந்திருக் கேன்யானும் அம்மணி யவள்திறமும்
தேரோட்டும் வித்தைதனைத் தெளியக் கற்றபேடி

வேறொருவர் வேண்டாம் விசனமதை விட்டுவிடு
இத்ததியே நாமிருவர் ஏகிச் சிறுவனிடம்
மெத்த வவனுக்கும் விளம்புவோஞ் சங்கதியை
செல்லுவோம் வாருமென்று செப்பியவ ளேயழைத்து
நல்லவே ளைதனிலே நடந்தார்கள் பாலனிடம்

சுதர்க்கணையும் வண்ணமகளும் உத்தரகுமாரனுக்கு
பேடியின் திறத்தை மொழிவது

சுதர்க்கணையும் வண்ணமகள் சோடியாய் வந்தவரும்
பதமாகப் பாலனிடம் பகருவாள் வண்ணமகள்
மேவுலகோர் கொண்டாட மேன்மையு டனரசு
பூவுலகை யாளுகின்ற புண்ணிய வான்புதல்வா
குருசேனை யத்தனையும் கொல்லநினைந் துநீயும்
வருதிபோல் தேர்நடத்த வலவனில்லை யென்றமைந்தா
பூவுலக மன்னர்களும் புகழும் படிரதத்தை
மேவுல கப்பரியை மேன்மை யுடநடத்தும்
தக்கபடி சாரதியாய்த் தானமைந்தா ளேயுனக்கும்
மிக்கக் கவலையது வேண்டாமே மன்னவனே
உன்தங்கை ருத்திரைக்கும் ஓதுகின்ற பேடியுமே
நன்னயமாய்த் தேர்நடத்த நல்ல பெலசாலி
இப்பூவி லவளைப்போ லெங்குமே தேர்நடத்த
செப்பவுங் கேட்கலையே செகவரசே பார்த்ததில்லை
அந்தப்பே டிதனையே ஐயனே ரதத்தில்வைத்து
சந்தோஷ மாய்ப்போயும் தக்கபடை யைவெல்வீர்
மைந்த னிடத்தினிலே வழுத்தமங்கை சங்கதியை
விந்தையாய்க் கேட்டுமவன் விளம்புவான் யாதெனிலோ

உத்தரகுமார னுரைப்பது

மங்கையே யென்னிடத்தில் மகாபிரிய மாய்வந்து

சிங்காரமா யென்னிடத்தில் செப்பினு யேயவளை
பேடிமுகத் தில்விழித்து பெண்ணேபோர காரியமும்
நாடிவந் தேசனியன் நம்மைப் பிடித்திடுமே
பேடிசா ரதிசெய்ய பேருலகிற் காணேனே
தேடிவந் தெந்தனிடம் செப்பிநீர் மங்கையரே
முன்னேவைத்துப் போர்செய்தால் முற்றிலுந் தோற்பதுடன்
என்னையொத் தவரசன் இகழ்வானே மங்கையரே
சத்திரிய னுப்பிறந்தும் தையலரை முன்னேவைத்து
இத்ததி போர்செய்ய எகலா மோசொல்லும்
என்றதையே வண்ணமகள் இன்ப மொடுகேட்டு
நன்ருயா சன்றனக்கும் நவிலுவாள் சங்கதியும்
அரசனே யப்பேடி அநேகங்கோ டிப்போரை
திறமாய்ச் செயித்தாள் சேயிழையுந் தப்பாமல்
காண்டா வனந்தனையே கனப்பொழுதி லேகொளுத்தி
நீண்ட தொருவில்லும் நேர்மையான பாணமதை
அக்கினிதே வன்கொடுக்க அன்பா யிவள்வாங்கி
முக்கியப் போர்களையும் முனைந்துசெயித் தபேடி
நானுமே பார்த்திருக்கேன் நன்ருய வள்தனையும்
வேணுமென்றே சாரதியாய் வேந்தனே யவள்தனையும்
அழைத்துமே சென்ருல் அதிசீக்கி ரந்தனிலே
துலைத்திடு வாய்நீயே துரியனுட படையை
சந்தேக மில்லையதில் சாமியே யென்னுரையும்
விந்தையாய்ப் பாருமென்று விளம்பவண் ணமகளும்
பதியர சன்மகனும் பாவை மொழிகேட்டும்
விதியிது தானென்று மெல்லியி டந்தனிலே
அன்னையும் நீயும் அறைந்தபடி தப்பாமல்
பின்னமிலாப் பேடிதனை பிரியமு டனழைத்து
எந்தனி டந்தனிலே ஏந்திழையப் பேடிதனை
சந்தோஷ மாய்க்கூட்டி சல்திவா வென்றுரைக்க

வண்ணமகள் பேடியை அழைத்து வருவது

அப்போது வண்ணமக ளரச னுரைப்படிக்கு
தப்பா தவள்நடந்து தையலும்பே டியிடத்தில்
வந்துமே கண்டும் வழங்கியே சங்கதியை
வந்திடுவா யென்றும் மங்கை யழைத்திடவும்
அழைத்தது போதுமென அப்பேடி சீக்கிரத்தில்
மலைத்திடா தரசன்முன் வந்துமே நின்றிடவும்
நிலையாக நின்றுமவள் நிலவர சேயெனையே
அழைத்தசங் கதிதனையே அறையுமென்று கேட்டிடவும்
உத்தர குமாரனுமே உகந்து வதைக்கேட்டும்
சித்தமிக மகிழ்ந்து செப்புவா னவளிடமும்
பேடியே நீயுந்தான் பிரியமுடன் வார்த்தையைக்கேள்
நாடியே நாமும் நற்போர்க்குச் சென்றாலும்
பகைவர்கள் தன்குறியும் பாணம் வரும்விதமும்
வகையாகத் தேர்நடத்தும் வழிதெரியு மோபேடி
சொல்லடி யென்றதட்டி துரைமகன் கேட்டிடவும்
நல்ல தொருபேடி நவிலுவாள் யாதெனிலோ
அரசனே நீருமே அதட்டியே யென்னிடத்தில்
திறமதனைக் கேட்குகிறீர் சேயிழை யான்காணும்
ஆணும்பெண் ணுமில்லா அரசனே யான்பேடி
காணும்பின் னலென்று கைகொட்டி யேநகைக்க
சிரித்துமே நின்றதொரு சேயிழையைக் கண்டரசன்
விரித்துமே யிப்பேடி விளம்பவில்லை யாதலினால்
தேரோட்டுந் தன்திறமை தெரிந்திருப் பாளிவளும்
வேறொரு வர்வேண்டாம் மெல்லியே சரியானால்
ஆனாலுங் கண்டறிவோம் அவள்சமர்த்தைச் சீக்கிரத்தில்
தானாய் நினைந்தரசன் தையலரைத் தானழைத்து
பேடியே லாயமதில் பெரியபுர விபார்த்தும்

சோடியாய்க் கொண்டுவந்து தோகையே ரதம்பூட்டு
என்றரசன் பேடியிட மியம்பினதைக் கேட்டுமவள்
நன்றெனவே சீக்கிரத்தில் நடந்துபரி லாயமதில்
குணமுட னேபரியைக் குறித்து மவள்பார்த்தும்
மனவேக மாய்ச்செல்லும் வான வசுவமதை
பிடித்து மேபேடி பிரியமா கவதனை
அடித்தே நடத்தி ஆகாய வான்பரியை
இதமாகக் கொண்டுவந்து ஏந்திழை தப்பாது
ரதமத னிற்பூட்டி நங்கைய ருஞ்சல்தி
தேடியே சாமானை சீக்கிரத்தி லேரதத்தை
சோடித்துப் பேடியுமே சுருக்காய் ரதம்நடத்தி
சரசரணத் தேர்நடத்தி தையலு மப்போதே
அரமனை வாசல்முன்பு ஆனரதத் தைநிறுத்தி
இறைவனே ரதமதுவும் இங்குநிற்கு தாகையினுல்
விரைவாய்ப் புறப்படுவீர் வேந்தனே வில்லுடனே
என்றுபே டியுரைக்க இதைக்கேட்டு மேவேந்தன்
நன்ருகத் தாயிடமே நாடிவந்தப் பாலகனும்
வேதனை யடைந்திருக்கும் மெல்லியாள் தன்னையிரு
பாதம தைப்பிடித்தும் பாலன் பணிந்திடவும்
விரைவாயவ னைத்தூக்கி மெல்லிகை தப்பாமல்
அறைந்தாளே நல்வாக்கும் அப்போ சிறுவனுமே
தங்காது சென்றுமவன் சல்தியாய் மாளிகைக்குள்
சிங்காரஞ் செய்துகொண்டு சீக்கிரத்தி லேயவனும்
பேடிசல்தி யென்றும் பிரியம தாயழைக்க
வாடியே சுதர்க்கணையும் மலர்க்கண்ணுல் நீர்வடிக்க
பார்த்துப்பே டியதனை பங்கமில் லாமாதும்
வேர்த்துநிற்கும் தையலிடம் விளம்புவாள் சங்கதியும்
அன்னையே வஞ்சாதே அருமை மகன்றனையும்

முன்னையே கொண்டுவந்து மொய்குழலே யான்தருவேன்
பொய்யென்று என்மொழியும் பூவையே யெண்ணுமல்
மெய்யென்று நம்பும் வேந்தனே யான்காப்பேன்
இன்னும் பலவிதமே எடுத்தோதிப் பேடியப்ப
மன்னன் மகன்றனையே வாருமென் றழைத்தனளே
அவ்வார்த்தை யைக்கேட் டந்தச் சிறுபாலன்
செவ்வையாய் வில்லதனைச் செங்கரத்தி லேபிடித்தும்
அன்னை யிடத்து மவன்பணியக் கண்டமங்கை
மன்னனையா சீர்வதித்தும் வழுத்துவாள் சங்கதியை
திரியோ தனனையுந் திரண்டபடை யத்தனையும்
அரியவே வில்நாட்டி அவரையெல் லாமடித்து
கோவுகள் பூராவுங் குழந்தையே நீதிருப்பி
மேவுவாய் நம்மூர்க்கும் வேந்தனே சல்தியதாய்
உத்தரகு மாரத்தியை ஓதி யவளழைத்து
சித்தமா யண்ணனுக்குந் திருஷ்டி கழியெனவும்
அதிவேக மாகவுமே அந்தமங்கை யாலாத்தி
தநியே யெடுத்துஞ் சாற்றுவாள் தமையனிடம்
அண்ணுவே யிப்பவே அமர்செய்ய வந்திருக்கும்
மன்னன் துரியோதனன் மற்றுமுள் ளோர்தரித்த
வஸ்திரங்கள் பூராவு மவிழ்த்துமே யெந்தனுக்கும்
சித்தமதாய்க் கொண்டுவந்து சீக்கிரந்தா வென்றுரைக்க
சங்கதி தன்னையுமே தானறிந்த வுத்திரனும்
சிங்கார மானதொரு சிரிப்புச் சிரித்துமவன்
இன்றுமேயென் தங்கையரும் இயம்பியதோர் சங்கதியும்
இன்றுவிதைக் கும்பருத்தி இதமாக நூல்திருத்தி
நன்றுயோர் துப்பட்டி நாதனே நீகொடுப்பாய்
அன்றொருவன் கேட்டானும் அப்படிப் போலிதுவும்
தங்கை யிடத்தினிலே தானுரைக்க வேசிறுவன்

அங்கே நின்றபேடி அம்மா திடமொழிவாள்
அம்மணி யங்கிருக்கும் அரசருடை பூராவும்
செம்மையாய்த் தானவிழ்த்து சேயிழையே யான் தருவேன்
பிசகென்று எண்ணாதே பெண்ணே நீ யென்னுரையும்
நிசமாக நம்பென்று நிகழ்த்தி யவள் தனக்கும்
அரசனே யிப்போதும் ஆந்தை செயமெனவே
திறமான வாக்கதுவும் செப்புது வாகையினால்
நல்ல சகுனங்களும் நமக்குக் கிடைத்ததினால்
சல்தி பயணமென்றும் தான்செப்பி னாள்பேடி
அப்போ வரசன்சுதன் அநேகமான தோத்திரத்தை
செப்பியே வேண்டி தேரேறி னானவனும்
பெரியோர் களை நினைந்தும் பிரியமா கப்பாலன்
அரிய சிவன்றனையே அவனினைந்து சிந்தையிலும்
பேடியே ரதந்தனையே பெரியபடை நிற்குமிடம்
நாடி நடத்துமென்று நல்லபா லனுரைக்க
நல்லதென்று பேடியந்த நாளிலகா னையெடுத்தும்
சல்லாப மாகரதந் தன்னை நடத்தலுற்றாள்
குதிரையத னைத்தட்டி கோபம் மிகமூட்டி
பதிதனி லேரதத்தை படபடவென் றோட்டிடவும்
அரசன் சுதனறிந்தும் ஆனந்தங் கொண்டிருக்க
அரசனுட தேவியரும் அதிகமகிழ் வடைந்தாள்
நகரத்தா ரெல்லோரும் நல்லசுத னைப்பார்த்தும்
நகரர சன்புதல்வா நலம்பெற்று மேவருக
என்றுமவர் ஈசனையே எண்ணித் தொழுதிடவும்
நன்றாக வோதமும் நகர மதில்வருக
அந்தணர் வீதிகளும் அறையும் வேதமடமும்
விந்தையா கக்கடந்து வேகமாய் ரதம்நடத்தி
தேருவேக மாய்வருக சிறுவனுமே யோசித்து

பாருயிவ ளைப்போல பாருலகிற் கண்டதில்லை
ரெம்ப வனுபோகம் நிபுடியிவள் சாரதிக்கு
பம்பரம் போல்ரதத்தைப் பாங்காய் நடத்தறியும்
சிந்தை தனிலேயும் சிறுபாலன் யெண்ணிடவும்
வந்தது வேரதமும் வடபாரி சந்தனிலே

உத்தரகுமாரன் பேடியிடம் ரதத்தைநிறுத்தச் சொல்வது

மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாளுகின்ற பூவர சன்சுதனும்
திரியோத னுதிகள் திரண்டபடை யோடுநிற்க
தெரியவே பாலனுக்குஞ் சித்த மிகக்கலங்கி
மயக்கமது வுண்டாகி மன்னனு மப்போதும்
பயத்துட னேங்கி பகருவான் பேடியிடம்
பேடிரதத் தைநிறுத்தும் பெண்ணே யெதிரியிடம்
நாடிவந் ததுபிசகு நானுரைப்ப தைக்கேளாய்
பாரடி கூட்டமதைப் பாவையே நம்நேராய்
தேரடி வொருகோடி தெரியுதே பார்பேடி
அரவக் கொடியோனு மவன்தே ரிருக்குங்கொடி
பரபரப்பாய் வாடுகுதே பாவையே வுளமயங்க
ஆனையோ பார்சங்கம் அணிவணியாய் நிற்குகின்ற
சேனைப் பெருக்கமதோ செப்பிடவொண் ணுநெருக்கம்
நச்சேத் திரம்போலே நாலுபக்கஞ் சூழ்ந்துமவர்
இச்சையாய் நிற்குகிறு ரிதோபாராய் நீபேடி
என்னசெய் வேன்யானும் எந்திழையே யென்றுரைத்தும்
மன்னன் புதல்வனுமே மயங்கித்தே ரில்வீழ
பேச்சுக ளில்லாதபடி பிணம்போ லருள்மாறி
காச்சல்சன் னிமுதலாய்க் கண்டது பாலனுக்கு

பேடி உத்தரகுமாரன் சோகம் தீர்ப்பது

பதியர சன்புதல்வன் பார மயக்கமதை
ததிபேடி யுங்கண்டும் சல்தியவ னையெடுத்தும்
விசிறிகொண்டு வீசிடவும் வேந்தன் களைமாறி
பசிப் பிணியுமோடி பாரர சன்சுதனும்
எழுந்து மதுசமயம் இருவிழியைத் தான்விழித்தும்
விழுந்து மறுபடியும் வேந்த னழுதனனே
பேடியிதை யேகண்டு பெரும்பிழை யென்றெண்ணி
வாடிய பாலனுக்கும் வழுத்துவாள் சங்கதியும்
அரசனே வரும்போது அதிகச்சந் தோஷமதாய்
திறவா னைப்போலே செப்பிவந்தாய் செய்திகளை
மன்னவ னேமயக்கம் வந்ததற்குக் காரணத்தை
என்னிடந் தன்னிலே இயம்புவா யின்னமுங்கேள்
படைகளைக் கண்டுமே பயந்தாயோ யாருமிங்கு
தடையேதுஞ் செய்தாரோ தனவா னுடபுதல்வா
எதிரி களைமடித்தே எங்கும்போர் பூண்டிடவும்
விதியது வரசர்கட்கு வேந்தனே நீர்கேளும்
அவர்களைக் கொல்லவேணும் அல்லது மடியவேண்டும்
அவர்களைக் காணுமுன்னே அதிகப்பய மேனுமக்கு
அரசனுய் நீபிறந்தே அதிகமா னபோர்க்கு
புறமுதுகு காட்டியுமே போவாரோ தேரோட்டி
எதிரி நகைத்துமவன் இங்குகையைத் தட்டிடுவான்
பதியாசன் பாலகனே பார்ப்பாயே யுன்திறத்தை
என்றுமே பேடினல்லா ளிசைந்து மொழிந்ததையும்
நன்றாகக் கேட்டுமே நவில்வான் சிறுபாலன்

உத்தரகுமாரன் பேடியிட முரைப்பது

சதிகாரி யேபேடி சண்டாளி யேகேளும்

பதிநீங்கி வரும்போது பார்த்தேன் சகுனமதை
செக்கா னெதிரேக தீயெடுத்து மங்கைவா
பக்கத்தி லழுகுரலும் பார்ப்பா னெதிர்கண்டேன்
அந்தச் சகுனமதை ஆரணங்கே யான்பார்த்தும்
இந்தப் படையுடனே எப்படிப்போர் செய்குவது
பார்த்தாயா நீபடையை பாரரசர் தப்பாது
தீர்த்திடுவா ரெந்தனையும் செப்பினே னுண்மையிது
கர்ணன் சகுனியொடு கனத்தபடை பூராவும்
விற்கை யிற்பூண்டும் வெகுகோபந் தன்னுடனே
வந்துமே நிற்குகிறார் வம்பாக யெந்தனையும்
இந்தவேளை யங்குமே ஏகச்சொல் கிறாய்நீயும்
செப்பிய படிசென்றால் சேயிழையே யெந்தனையும்
தப்பா தொருகணையில் சல்தியாய் மடித்திடுவார்
தாயாரும் யென்மேல் தையலே பிரியத்துடன்
ஆயாச மில்லாம லன்பாய் வளர்த்தாளடி
நான்கடப் பிள்ளையடி நங்கையே யென்தாய்க்கும்
வீண்யெண்ணங் கொண்டியான் விருதாவா யிங்குவந்தேன்
ரதத்தைத் திருப்பிவிடும் நங்கையே நம்மூர்க்கும்
இதமாகச் செல்வோமென் றியம்பியப் பாலகனும்
அலறிக் குரல்போட்டு ஐயையோ தெய்வமென்றும்
குளறி யழுதுமவன் கோதை யிடமுரைப்பான்
புண்ணிய முண்டுனக்கு பூவையே கேள்பேடி
பண்ணிட யுத்தமதும் பாவையே யானறியேன்
வில்யுத்தம் யெந்தனுக்கும் விதந்தெரியா தேபெண்ணே
மல்யுத்தம் யானுமே வகையறி யேன்பேடி
கோடிசர ணமுனக்கு கோதையே யிப்பொழுது
சோடிப் புரவிதனைச் சோம்பலில் லாதுதட்டி
ரதத்தைத் திருப்பிடுவாய் நங்கையே நம்மூர்க்கும்

பதத்தோடு செல்வோம் பாவையே காயமன்றி
தாமத மில்லாதபடி சல்தியா யெந்தனையும்
சோமவத னிபேடி சுருக்காய் நகரில்விடும்
என்றுமவ னுரைத்தும் ஏங்கி வழுதிடவும்
நின்றபேடிகண்டும் நிகழ்த்துவாள் பாலனுக்கும்

பேடி உத்தரகுமாரனுக் குரைப்பது

அரசனே நீர்தானும் அதிகப் பிரியமதாய்
பரபரப்பாய்ப் பேசினுய் பலத்தையங் கேபுகழ்ந்தும்
மாற்ருன் களைமடித்து வந்திடுவேன் நன்மையென்று
ஏற்றமாய் நீபுகழ்ந்தும் எந்தனை யுமிகழ்ந்தாய்
இப்போது வுந்தனுக்கும் என்னதீங்கு வந்ததிங்கு
தப்பான வார்த்தைதன்னைத் தானுரைக்கின் ருய்நீயும்
சத்திரிய னுய்ப்பிறந்தும் தன்கையில் வில்லிருந்தும்
நத்தி யெதிரியின்மேல் நாசமாக்கு மம்புகளை
தொடுத்திட்டா யாநீயும் துடியா யவர்களுமே
அடுத்து விடுத்தகணை ஐயாமேல்ப் பட்டதுண்டா
புண்பட்டுப் போனுலே பூவரசே யுந்தனையும்
விண்ணுள்ளோர் யாவருமே மெச்சிடு வாரரசே
போர்முகத் தில்வந்தும் புகுதாம லேபோனுல்
பார்ப்பவர் கள்நம்மை பரியாசஞ் செய்வார்கள்
இன்றுநா மிங்குவந்தும் ஏகுவோம் நகர்க்கென்ருய்
நன்ரு யிருக்கிறதா நல்லர சேயுமக்கும்
அவர்க ளுடன்போராடி அவரம்பு மேல்த்தைத்தும்
தவராது நேர்ந்தாலும் தரையர சன்மகனே
போர்முனை யில்மடிந்தால் புண்ணியமுண் டுவெதிலும்
பார்மன்னு பிர்மனும் படைத்த விதியாகும்
சஞ்சலத்தை யேபோக்கி தைரியத்தை யும்நிறுத்தி
வஞ்சகர் தன்னையுமே வாட்டுவாய் கணைதொடுத்து

அதிவிரைவா கப்பாலா அள்ளிப் பொழிபகழி
பதியர சன்சுதனே பார்த்திடுவா யுன்திறத்தை
என்றுமே பேடிநல்லா ளெடுத்தோத வேசிறுவன்
நன்ருகக் கேட்டுமவன் நவிலுவான் மங்கையர்க்கும்

உத்தரகுமாரன் பேடிக்கு பதிலுரைப்பது

கேளடி நீ யேபேடி கிருசைகெட்ட நிர்மூடி
பாலகனேக் கொண்டுவந்து பாழாக்க வேநினைந்தாய்
உன்பேச்சை யான்கேட்டு ஒருபாண மேதொடுத்தும்
பின்னமன் றிக்கணையும் பெரியபடை சென்ருலும்
ஆமி யவர்கள்கண்டு மாயிரங் கணைதொடுப்பார்
பாயுமே யென்மேலும் பாவையே யுன்மேலும்
குதிரைக ளும்மடிந்தே குத்துக்கா லும்முரிய
பதிதனிலே நாமளுமே பாதசாரி யாகவேணும்
புண்பட்டு வோடுவதில் பிரயோ சனமென்ன
புண்படு முன்னேநாம் போனலென் னபெண்ணே
நீயுமே சாகாமல் நேரிழையான் நோகாமல்
பாயுமுன் னேகணையும் பாவையே நகர்செல்வோம்
என்னல் முடியாது இங்குபோர் செய்வதற்கும்
உன்னலு மாகாதே வுள்ளது கேள்பேடி
பாண்டுமன்னன் புத்திரரும் பஞ்சலெட்ச ணமுடைய
காண்டீபன் வந்தாலே காவலரை வென்றிடுவார்
வல்லமை யுண்டவர்க்கு மாகாதேவன் றன்கிருபை
நல்லபெல சாலியவர் நங்கையே நீநீலி
அப்படித் திறமுடைய அரசர்வேண்டு மிப்படைக்குள்
எப்படியும் நான்போரே னின்றுசெய் தாலபத்தம்
பிழைப்பது வுங்கஷ்டம் பெண்ணேயேன் வீண்தொல்லே
மலேக்குதே யெந்தனுள்ளம் மங்கையே யிப்பொழுது

தெரியாமல் வந்துவிட்டேன் சேயிழையேயுன்னிடம்யான்
அறியா துரைத்ததற்கும் ஐயையோ போதுமிது
தலைகுனிந் தபடிதான் சஞ்சலத் துடனுரைத்து
மலையருவி போலவுமே மன்னன்கண் ணீர்வடித்தும்
வில்லம்பைத் தேரில்வைத்தும் வேகம தாய்க்குதித்து
சொல்லாம லுமோடித் தொடர்ந்தான் வழிதனையே
அரசன்மக னோடுவதை அப்படி யும்பார்த்து
சரசரனச் செல்லுமந்த தன்ரதத்தை யும்நிறுத்தி
தேரைவிட் டிறங்கியவள் சினந்துகோ பமுடனே
விரைவாயவ னைப்பிடிக்க வேகமா யோடிடவும்

இருவர்களோடுவதை குருசேனைகள் தெரிந்து
கைகோட்டி நகைப்பது

அரவக்கொடி யோன்சேனை அத்தனையு மேபார்த்து
திறமான மன்னரிடம் செப்பிய வர்களுமே
ஒத்தத்தேர் தானேறி ஓங்கியகோ பமுடனே
இத்ததி யிங்குவந்தோன் இறங்கியே யோடுவதை
பார்த்துமே சாரதியும் பாலகனைத் தான்பிடிக்க
வேர்த்துமே வோடுகிறான் விபரீத காலமென்று
கைரண்டை யுங்கொட்டி கனத்தபடை பூராவும்
மெய்யாக வேநகைத்தார் வேந்தர்கள் தானறிய

வீஷ்டுமோசாரியும் மற்ற பெரியோர்களும்
சபைகூடி யாலோசிப்பது

கங்காசுத னப்போது கருணையொடு பார்த்திதையும்
அங்கிருக்கும் மன்னர்களை அழைத்து வருகிருத்தி
அவர்களிடந்தனிலே அந்தத் தவயோகி
தவராது சங்கதிகள் சாற்றுவார் யாதெனிலே

மச்சனுட் டிலிருந்தும் வந்த தொருதேரில்
இச்சையா யொருசிறுவன் ஏறி யதிலிருந்தும்
வரும்போ தவன்குதித்தும் வந்த வழிதனையே
விரும்பியே நகரமதை வேகமாயோடுவனை
நடத்திவந் தோன்ரதத்தை நல்லபாக னுகையினுல்
திடத்தோ டவனுமே சிறுவனுட மோடுகிருன்
பாருமவன் கைவீச்சும் பண்பான சீரினையும்
ஏருநெற் றியழகும் இருக்கின்ற மார்பழகும்
முகத்திற்குதிக் குமழகும் முடிந்தகொண்டை தன்னழகும்
அகத்தின் தைரியமு மவனிடையும் பார்த்தாலே
சிலைவிச யனெனவும் செப்பிடலா மானுலும்
மலைக்குதவ னைப்பார்த்தால் மங்கை யுருவமதால்
காதினி லோலைகளும் கையி லணிந்தவளை
சோதிமய மானநகை துலங்கு தவள்மேலே
ஆணும்பெண் ணு மில்லாத அலியா யிருந்தாலும்
வேணுமே யாயிரங்கண் மெல்லியைப் பார்த்திடவும்
ஆணும்பெண் ணுமென்றும் அறியோமே நாமளுமே
காணுவோம் பின்னுலுங் கன்னிகை வரலாற்றை

குருசேனைகள் யோசனை புரிவது

எல்லோரு மோரிடத்தி லிருந்துமே யோசனையை
சல்லாப மாய்ச்செய்து சாற்றுவ ரேயவர்கள்
திரிகர்த்த நம்மிடமே செப்பி விடைவாங்கி
அரியமச்ச நாட்டி லமர்ந்திருந்த கோவுகளை
மடக்கியே கோன்களையும் வதைத்திருப்பான் மிஞ்சினவர்
திடத்தோ டரசனிடம் செப்பியிருப் பார்செய்தி
அவ்வர சன்கேட்டு அப்பொழுதே சேனையுடன்
செவ்வையாய் விற்பூண்டு சீக்கிரம் புறப்படவும்
வீமன் நகுலனெடு வேந்தன் சகாதேவன்
தாமத மில்லாதபடி தான்சென் றிருப்பார்கள்

அரசன் மகன்நால்வர் அதிகக்கோ பம்பூண்டு
திறமுடனே தேரேறி சென்றிருப் பாரவர்கள்
நல்லபடை தன்னேடு நாமள்வந்த சங்கதியை
மெள்ளவே காவலர்கள் விளம்பவே சென்றங்கும்
இருந்த விளையோனும் என்னவென்று கேட்டிடவும்
வருந்தியே தூதுவர்கள் வழுத்தியிருப் பார்செய்தி
அறிந்துமே பாலகனும் ஐயையோ வெந்தனுக்கும்
தெரிந்துமே தேர்நடத்த செவ்வையான பாகனுமே
இல்லையே யிப்போது எந்தனுக்கு வந்தபெருந்
தொல்லைஈ தென்னவென்று துடித்திருப்பா னேபாலன்
முன்னமூர் வசிசாபம் முடிய விசயனுமே
மன்னன்மக ளுத்திரைக்கு வாகான சங்கீதம்
செப்பிக் கொடுப்பதற்கு சேயிழையு மங்கிருக்க
தப்புவந்த சங்கதியைத் தானறிந்து மேபேடி
அரசன் சுதன்றனக்கும் அன்பான வார்த்தைதனை
திறமா யுரைத்துமவள் சேயனுக்குச் சாரதியாய்
இருந்து ரதமதனை இங்குநடத் திக்கொண்டு
வரும்போது பாலகனும் மகாசேனை தன்னையுமே
பார்த்து மயங்கிப் பாலக னப்போது
வேர்த்துமே தேரைவிட்டு வீழ்ந்துமே பூமியிலும்
நாட்டை யேநாடி நல்லபிள்ளை யோடுவதைச்
சேட்டைசெய் தேபிடிக்கச் சேயிழை யோடுகிருள்
ஐவர்பஞ்ச பாண்டவரு மன்பான பத்தினியும்
மெய்யாக யிந்நகரில் மேவி யிருக்குமூர்கள்
சந்தேக மேயில்லை தான்விளந் திடுந்தொல்லை
வந்தோ னருச்சுனனே வல்லமை யானபேடி
என்ன வருமோகா ணிங்கு பெருங்கெடுதி
முன்னம் சபையதனில் மொழிந்ததுபோல் யுத்தமதும்

விளைத்திடு வானவனும் விபரீத காலமென்று
மலைத்துமே யெல்லோரும் மங்கையைப் பார்த்திருந்தார்

பேடி வுத்தரகுமாரனை தனது
கையால் மறிப்பது

பேடி யதுசமயம் பிரியமதாய்த் தானோடி
நாடியே பாலகன்முன் நங்கையும் போய்க்கையால்
சிரித்துமே தையலரும் சீக்கிரத்தி லேயவன்முன்
மறித்துமே நிற்க மங்கையி டம்புகல்வான்
ஏண்டி குடிகேடி நீ என்னை மறிப்பதற்கு
தாண்டியே வந்தெனக்கு சஞ்சலத் தைக்கொடுத்தும்
நீண்டகை யால்மறித்தே நீயேன் யெனைப்பிடித்தும்
மாண்டிடக் கொண்டுபோக மங்கையே வந்தாயோ
எனக்குமே காலனாக ஏகிவந் தாய்பெண்ணே
உனக்கென்ன வாகுமென்று ஓடிவந் தெனைமறித்தாய்
எப்படியா னாலுமே என்னவுனக் குவதிலும்
செப்படி பேடியென்று சிறுவன் மிகவழுதும்
இப்படி வருமெனவே எண்ணவில்லை யேநானும்
தப்படியான் சொன்னதும் தையலே யதைப்பொறுத்தும்
எந்தனை விட்டுவிடு ஏகிட நகர்தனக்கு
வந்தவழி யான்போரேன் மாதரசே புண்ணியமே
அருமையா னமகண்டி ஆரணங் கிதுவரையும்
பெருமையா யெனைவளர்த்தார் பெண்ணே யிதுவரையும்
தாயாரு மென்மேலே தையலே வெகுபிரியம்
பேயானு லுங்கூடப் பிசகுசெய்யு மோபேடி
வந்தவழி யானோடி மாதா மடிதனிலே
சந்தோஷ மாயிருக்கத் தையல்யெனை விட்டுவிடு
காலைப் பிடிப்பேனடி கன்னிகையே யெந்தனுக்கும்
வேளைப் பிசகுபேடி விளம்பின கெடுதியடி

இன்னும் பலவாறுய் எடுத்தோதி யேசிறவன்
மின்னிடையாள் பாதமதில் வீழ்ந்து மவனழுதான்

பேடி வுத்தரகுமாரனை சாரத்தியம்
செய்யப் புகழ்வது

மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவலகை யாளும் புண்ணியன் சுதாகேளும்
எல்லவரை யும்மடித்து இங்குபசு வைத்திரட்டி
சல்லாப மாய்நகர்க்கு தானேகு வோஞ்சரியாய்
கோவுகளைத்திரட்டி கோமானகர் சென்றாலும்
மேவுல கோர்நம்மை மெச்சிக்கொள் வார்தம்பி
இப்படியே நாமும் ஏகினல் நகரிலுள்ளோர்
தப்பாய் நினைத்திடுவார் தைரிய மில்லையென்றும்
துரியோத னனுடனே சொல்லுஞ் சகுனியொடு
அறிந்ததோர் வீஷ்ட்மரையும் அந்தக் கருணனையும்
இன்னும் பலவரசர் இருக்கின்ற சேனையையும்
மன்னவ னேநொடியில் மடிப்பேன்யான் தப்பாமல்
இன்னுஞ் சணநேரமதில் இறைவனே நீபாரு
மன்னர்படும் பாடுகண்டு மகிழ்ந்திடு வாய்பாலா
பாரரச ரோடுயுத்தம் பண்ணவிலை யென்றமைந்தா
தேராகி லும்நடத்து செல்வனே சீக்கிரத்தில்
எதிரி களைவிரட்டி எல்லாக்கோவை யும்மீட்டி
நதியே நகர்செல்வோம் தடையில்லை வாக்கியமும்
சாரதி செய்வதிலும் சங்கடமென் றெண்ணுதே
பாரதிலே யொன்றுமிலை பாரரசே சங்கடமும்
என்றுமே பேடிநல்லாள் ஏகமாய்ச் சொன்னதையும்
நன்றாகக் கேட்டுமே நல்யோசனைபுரிந்தான்

உத்தரகுமாரன் யோசனை புரிந்து
சாரதியாகச் சம்மதப்படுவது

அரசன் மகனகத்தி லன்பாக யோசித்தும்
கரகரனத் தேர்விடவும் கன்னிகை யுரைத்தனளே

அசையாமல்த் தேர்நடத்த அறிந்திருக் கோம்நாமும்
இசையாக வேநாமு மின்றுதே ரிலிருந்து
சாரதிசெய் யாவிடிலோ தையலே வதைத்திடுவாள்
சாரதித் தொழிலுமே தகுந்தது தானமக்கும்
ஒண்டியா யிவளிடத்தி லோகோநாம் சிக்கியதால்
விண்டுரைத் தமொழிக்கு விளம்பவொண் ணுதுபதில்
என்று மரசன்சுதன் எண்ணியே சிந்தைதனில்
நன்ருகப் பேடியிடம் நல்லகுண மாய்மொழிவான்
நல்லது கேள்பேடி நங்கையேயுன் சொற்போல
உள்ளபடி தேர்நடத்தி வுந்தன்மனம் போல்நடப்பேன்
சந்தேக மில்லையதில் சாமிமே லாணைவைத்தேன்
இந்தவேளை வாவொன் றியம்ப வரசனுமே
சிறுவ னுரைத்ததொரு செய்தியைக்கேட் டேபேடி
விரும்பிச் சுதனேடு வேகமாய்த் தேரேறி
சந்தோஷ மாயரசன் சாரதியாய்த் தேரிருக்க
விந்தை யாய்ப்பேடி விளம்புவா ளவனிடமும்
ஐயாவர சன்சுதனே அழகு ரதந்தனையும்
மெய்யா வடதிசைக்கு வேகமுட னேநடத்தி
சாமுண்டி சன்னதியில் தக்கபெல வானுயொரு
மாமுண்டி காவலாய் வளர்ந்துநிற்கு தோர்மாமும்
அங்கேரதத் தைவிடுவென் றறையப்பே டியுரைபோல்
சங்கையெல் லாம்விடுத்துத் தைரியமாய்ப் பாலனுமே
நல்ல பரியதனை நாட்டிச் சவுக்காலே
சல்லாப மாகவுமே தானடத்தி னுன்ரதத்தை
தேருவரும் விதத்தைச் செப்பிடவொண் ணுவேகம்
பாரும்யிவன் சாரதிக்கு பலமுடைய மன்னவனே
மங்கை யுரைப்படியே மாமுண்டி சன்னிதிநேர்
சிங்கார மாய்ரதத்தைச் சிறுவன் நடத்தினனே

துரியோதனாதிகள் யோசனை புரிவது

சல்லாப மாகரதந் தான்போகும் வேகமதை
எல்லவ ரும்பார்த்து எண்ணியோ சனைபுரிவார்
அதிவேக மாகவுமே அந்தரதம் வந்ததுவும்
மதியாமல் நம்மையவர் வடகிழக்காய்ப் போரவனும்
அருச்சுன னில்லாமல் ஆரொருவ ருமல்ல
திருத்தமாய்ச் செல்கிறவன் தேர்விசயன் தப்பாமல்
என்னவிதி யிதுவோ மிங்குமவன் வந்தாலும்
பின்னங்கள் செய்திடுவான் பிழைக்க வழிபாரும்
என்னசெய்வோ மென்றுமவ ரேங்கிப் பரதவித்து
மன்னவர்க ளெல்லாம் மறுபுறத் தில்நகல
ஆகாயந் தன்னிருந்து ஆகாச் சகுனமது
வாகாகப் பாய்ந்திடவும் மன்னர்க ளுங்காண
அந்தரத்தி லேசகுனம் ஐயையோ நம்மிடமே
வந்துமே பாயுதே வம்புவருந் தப்பாமல்
வந்தவ னருச்சுனனே வதைத்திடு வான்தப்பாது
பந்தவினை துடர்ந்தே படர்ந்ததையோ நாமளையும்
இன்றைக்குத் தப்புவதும் ஈசன் செயலதுவே
இன்றைக் கிறப்பதுவு மெல்லோரும் நிச்சயமே
என்று மவர்கலங்கி இருந்தார்க ளவ்விடத்தில்
நின்று துரி யோதனனும் நினைந்து கலங்கினனே
அரசன் படுந்துயரை அறிந்துகங் காசுதனும்
திறவான் துரோணரிடம் செப்புவார் சங்கதியும்
மாமறை நூலதனை வடிகட்டி யேயுண்ட
நேமனே கேளும் நிசமான வோர்சகுனம்
ஆந்தைவிண் ணிலிருந்தே ஐயையோ விப்படையும்
தீர்ந்து விடுமெனவே செப்பின தோர்சத்தம்
ரெணக்களம் நேர்ந்துமிங்கு ரெத்தவெள்ளந் தன்னோடு

பிணங்கள் மிதந்துசெல்லும் பெரியபடை பூராவும்
பசாசுகள் கூத்தாட பருந்துகள் வட்டமிடும்
பிசகாது நாய்நரியும் பிணந்தன்னை யேபொசிக்க
இந்தச் சகுனமது மிப்படி யாவரையும்
நொந்திட வேசெய்யும் நோக்கி லதன்பலனே
இன்னும் பலவிதமும் எடுத்தோத வேயவரும்
மன்னனரவக்கொடியோன் மறுபுறஞ் சென்றனனே
அப்போகங் காசுதனும் அவர்க ளிடந்தனிலே
செப்புகிறார் சங்கதியை செயவீர ரேகேளும்
ஒத்தத் தேர்மீதேறி ஓங்கியகோ பமுடனே
மெத்தவே கமுடனே வெந்தனும் வந்தனனே
இங்கிருந்த மன்னரையு மெண்ணி யலச்சியமாய்
தங்காது சென்றான் சல்தி வடதிசையே
பார்த்தா லவன்கூறை பார்த்திபன் தப்பாது
தீர்த்திடு வான்படையை செயமடைவான் சீக்கிரத்தில்
அணியணி யாய்ப்பிரித்து அனேகம்படை பூராவும்
தனித்தனியே வில்லெடுத்து சமராட வேசெய்வாய்
என்றவுரை கேட்டரசர் ஏகித் தனித்தனியாய்
நின்றவர்கள் விற்பூண்டு நேர்மையொடு வங்கிருக்க

துரோணாசாரியார் சொல்வது

அப்போ துரோணரும் அந்தவீஷ்ட் மர்தனையே
இப்போது தங்களெண்ணம் எனக்குத் தெரியவரும்
ஐவர்பஞ்ச பாண்டவரும் அக்ஞாதவா சந்தனையே
மெய்யாய்க் கழித்துமவர் வெளியேறி வந்தாரோ
மாடுபிடி சண்டையென்று மன்னர்கள் நம்முடனே
பாடுபட்டுப் போர்செய்து பசுமீட்க வந்தனரோ
பாலர்களும் யோசித்து பார்க்காமல் நாளதனை
காலக் கிரகமதால் கண்டபடி வந்தனரோ

மன்னர் சபையிலேநாம் வழுத்திய படியவர்கள்
இன்னுமே யோராண்டு இருந்திட வேண்டுவனம்
பின்னு லீராற்மாதம் பெருத்ததொரு அக்ஞாதம்
மன்ன ரிருக்கவேண்டும் வருதிதவ றியிருந்தால்
இருவர்க ளுங்கூடி ஏகமா யோசித்து
வருத்த மடைந்தார்கள் மகாமறை நூல்தெரிந்தோர்
துரியோ தனனையுமே சோம்பலாய்ப் போய்க்கண்டு
அறியவே யோதினர் அருச்சுனன் தான்வாரான்
அவனுடன் போர்செய்ய ஆரிருக்கா ரிங்கேகாண்
அவனும் பலமுடையோன் அத்தனைவில் லாலடித்தோன்
தன்னுட னேமூவர் தானெதிர்த்து வந்தாலும்
மன்ன னவர்களையும் மடித்திடுவான் தப்பாது
அந்த விசயனுடன் அமரது செய்திடவும்
இந்தப் படைதனிலே யாரிருக்கா ரென்றனரே

கர்ணன் அதிகக் கோபங்கொண்டு
மொழிவது

அங்கதே சமதனை ஆண்டு வருங்கருணன்
சிங்கம் போலேசீறி செப்புவா னவரிடமும்
என்னநீர் சொன்னீர்காண் இங்குதுரோண சாரியரே
மன்னவ ரைவரையே மகாபெலவா னென்றுரைத்து
அரவக்கொடி யோனிடத்தி லாடைமுதல் நீர்வாங்கி
திறவா னிடத்தினிலே தேகமெல் லாம்வளர்த்தும்
ஐவர்களை வெல்லுதற்கு ஆரிருக்கா வென்றனையே
ஐவர்கள் தன்முடியை அறுப்பேன் சணமதிலே
அருச்சுனன் வந்தாலே அவனெதிரில் யானின்று
சிறுகணை யைத்தொடுத்து தென்திசை காட்டிடுவேன்
இன்னும் பலவிதமும் எடுத்தோதி யேகருணன்
மன்னர்கள் தான்மகிழ வம்பா யுரைத்தனனே

துரியோதனன் கர்ணனிடமுரைப்பது

மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாண்டுவரும் பூபால னுந்துரியன்
அங்கதேச சமதையே ஆண்டுவருங் கர்ணனிடம்
சிங்கார மாகவுமே செப்புவா னேயரசன்
அண்ணு கருணனே நீ அவசரப் படாதிருப்பாய்
இன்னு ளருச்சுன னும் இங்குவந் தானுகில்
நல்லகா லம்நமக்கும் நாசகா லமவர்க்கு
சொல்லாமல் வந்துவிடும் துஷ்டர்கள் தங்களிடம்
முன்னுட் சபைதனிலே மொழிந்த படியவர்கள்
இன்னுள்முத லோராண்டு மிருக்கவே ணு மக்ஞாதம்
அவனிங்கு வந்தாலே அந்தநா ளிற்சபையில்
தவறு துரைத்ததொரு சங்கதி யையுரைத்து
பனிரண்டு தன்வருடம் பாங்கான கானகத்தில்
இனிச்செல்வீ ரென்று எடுத்துரைத்து வப்பாலும்
உருவமது மாறியுமே ஓர்வருட மக்ஞாதம்
திருத்தமா யிருந்திடவும் செப்பி யனுப்பிவைப்போம்
அன்னவ னேடுதான் அமாது ஏதுக்கு
மன்னவனே யென்று வழுத்தினு னேதுரியன்

பேடியும் உத்தரகுமாரனும் வன்னிமரத்தில்
ஆயுத மெடுப்பது

அரசனும் தேர்நடத்த அதிற்பே டியுமிருக்க
சரசரென வேரதமும் தானடத்தி வேகமதாய்
அந்தப்பே டியுரையில் வானேர் புகழ்ரதத்தை
சந்தோஷ மாகவுமே தானடத்தி யுஞ்சிறுவன்
விந்தையொடு காளியின்முன் விட்டு ரதமதனை
அந்த மிருந்த அரசனும் வன்னிமரம்

தன்னிடத்தி லேரதத்தை சல்தியா கநிறுத்தி
மின்னிடைபே டியிடமே விளம்புவான் சங்கதியும்
பேடியே யுன்னுரைபோல் பிரியம தாய்ரதத்தை
நாடியே கொண்டுவந்தேன் நல்லமர மீதோபார்
என்றுமே மன்னவனும் இயம்பக்கேட் டேபேடி
நன்ருகப் பாலனுக்கும் நவிலுவாள் சங்கதியும்
அரசன்மக னேபாரும் அந்த மரத்தினிலே
திறமா யொருவாத்தும் தெரியு மதுதனிலே
பொந்தொன் றிருக்கும் பொதுவரா யுதமதிலும்
விந்தையாய் வைத்திருக்கார் வேந்தன்சுத னேயதிலும்
அம்மரத்தின் மீதேறி யங்கிருக்கும் வில்லதனை
செம்மையா கவெடுத்தும் சீக்கிரமாய் நீரிறங்கும்
என்றுமே பேடி இயம்பக்கேட் டேயரசன்
நன்றெனவே சென்ருன் நல்ல மரத்தடியில்
பார்த்தான் மரந்தனையும் பாலகனு மப்போது
வேர்த்துமே பேடியிடம் விளம்புவான் யாதெனிலோ
நல்ல தொருபேடி நான்மொழிவ தைநீயும்
உள்ளதென் றேகேட்பாய் ஓகோகோ யிம்மரமும்
விண்வரை யில்வளர்ந்து விருக்கு திதுதனிலும்
திண்ணமா யெனையேறச் செப்பினு யேபேடி
கைக்கு மடங்காதே கன்னியே யிம்மரத்தில்
மெய்யேயிதி லேறுதற்கு மேவிடக்கால் வல்லையடி
ஏற முடியாதே என்னலே பார்பேடி
பார மரமிதுவே பாலகனைக் கொண்டுவந்தும்
கொல்ல நினைத்தாயோ குடிகேடி யேபேடி
மெள்ள வழைத்துவந்து விட்டிட்டா யந்தரத்தில்
காலு மடங்காதடி கையு மடங்காதே
மேலும் மரத்திலேறி மெல்லிகையே யானறியேன்

ஐயையோ வுன்னிடத்தி லகப்பட்ட தாலெனையும்
செய்யாத வேலைகளும் செய்யச்சொல் கிருப்பேடி
நகர மதிற்சென்று நல்லசேவ கனிடத்தில்
பசர்ந்துமே சங்கதியைப் பாவையே கூட்டிவாரேன்
வாய்க்கொழுப்பா லெந்தனுக்கு வந்த வினைபேடி
வாய்மதப் பேச்சுக்கும் வாய்த்தேனு னுன்னிடத்தில்
என்றுவர சன்சுதனும் ஏங்கி யழுதிடவும்
கண்டுமே பேடியுமே காவலனுக் கேயுரைப்பாள்

பேடி உத்தரகுமாரனுக் குரைப்பது

மன்னனின் றன்சுதனே மயக்கமு முந்தனுக்கு
இன்ன மிருக்கின்றதா என்னர சேயதையும்
விட்டிடுவா யிப்பொழுது வேகமா யிம்மரத்தில்
சட்டமுட னேறுதற்கும் சங்கதி யைக்கேளும்
அப்பனே சீக்கிரத்தி லந்த ரதந்தனிலே
தப்பாது நீயேறி சல்தி சிகரமதில்
நின்றுமே யவ்வாத்து நேராக நீதாண்டி
கண்டுமதில் ஆயுதத்தைக் காவலனே வேகமதாய்
நீண்ட தொருவில்லும் நேர்மையா னகணையும்
ஆண்டவனே யெண்ணி அப்பனே நீயெடுப்பாய்
நல்லவித மாய்ப்பேடி நவில வரசனுமே
செல்ல நினைவுகொண்டு சித்தந் திடப்படுத்தி
மெல்லி யுரைப்படியே மேவி ரதமருகில்
சொல்லிய படிபாலன் தொடர்ந்தேறிச் சிகரமதில்
அம்மரத்திற்ருண்டி அருமை யுடன்பொந்தில்
தம்மை யொடுவிருக்கும் தக்கதொரு வாயுதத்தை
கண்டுமே பாலகனும் கன்னிகை யுரைப்படிக்கு
ரெண்டுகை யதன்மேலே லேசாக வைத்திடவும்

அஞ்சு தலைசர்ப்பம் ஆர்ப்பரித்துக் கொண்டுமது
துஞ்சிடப் பாலகனைத் துரத்திவர வேயவனும்
ஐயையோ பேடியே அருமைகெட்ட நிர்மூடி
பையரவு மெந்தனையும் பாவையே விரட்டுதடி
கானகத் திலெனையும் கன்னிகையே கொண்டுவந்து
தானகத்தி லேநினைந்தாய் தையலே யெனைமடிக்க
ஆண்டவரு முன்மனம்போ லாக்கிவிட் டாரெனையே
வேண்டாமடி விட்டுவிடு மெல்லிகையே யான்சிறுவன்
உன்னிடத்தி லகப்பட்டேன் ஓகோகோ தலைவிதியால்
மின்னிடை யாளேயெனை வெட்டியாய் மடிக்காதே
வேண்டாமடி யிவ்வேளை மெல்லிகையே விட்டுவிடு
ஆண்டவ னுந்தனுக்கு அருள்புரிவார் தப்பாமல்
என்றுமே பாலகனு மியம்பிப்பே டியிடத்தில்
நின்று வழுதானே நினைந்துமே தெய்வமதை

பேடி உத்தரகுமாரனுக்கு மொழிவது

அப்போது பேடி அரசன்சுத னைப்பார்த்து
தப்பாதவள் புகல்வாள் தன்னுடைய சாரதிக்கு
மெய்யென்று நம்பு வேந்தனே யப்பொந்தில்
ஐவர்க ளாயுதமும் அதிலிருக்கு பாலகனே
பயமுமடை யாதபடி பாலகனே நீயெடுத்தால்
செயமு மடைந்திடுவோம் சீக்கிரத்தில் நாமரசே
என்னாலே யாவும் இல்லையென்று போவதையும்
பின்னாலே காணும் பிரபலன் றன்சுதனே
மரத்தின் மேலேறி மன்னு படைதனையும்
திறத்துடன் நீயெடுத்துச் சீக்கிர மாயிறங்கும்
சல்திசெல்லு மென்று தைய லுரைத்ததொரு
சொல்லதை யேகேட்டு சுதனும்மிக யோசனையை

எண்ணியே சிந்தையிலும் இவனுமே யப்போது
மின்னிடை யாளிடமே விளம்பிக்கேட் பான்சிறுவன்

### உத்தரகுமாரன் பேடியைக் கேட்பது

உத்தர குமாரனும் உறுதிமன தைப்படுத்தி
அத்ததி பொந்திருக்கும் அப்படையில் கையைவைக்க
சீறிவந்த நாகமதைச் சிறுவனுங் காணுமல்
தேறியவன் நினைந்து தெய்வத்தின் கூறெனவே
இந்தச்சங் கதிதனையே இசைந்துபே டியிடத்தில்
சந்தோஷ மாய்க்கேட்கத் தானினைந்து பாலகனும்
பேடியைப் பார்த்து பிரியமுட னேயவனும்
நாடியே கேட்பான் நங்கை யிடந்தனிலே
நல்லதொரு நங்கையரே நானுரைப்ப தைக்கேளு
சல்லாப மாய்ப்படையை தாளுெரு பாம்புசுத்தி
இழுத்தாலும் விடுவதில்லை என்னடி வீண்தொல்லை
அழுத்த மொடுநாகம் அப்படையைக் காத்திருக்கு
இந்த மரந்தனிலே ஏகிவந் தைவர்களும்
விந்தையான வாயுதத்தை மெல்லியரே வைத்தவிதம்
சொல்வாயே நீபேடி சுருக்காகச் சங்கதியை
சொல்லா விடிலினிநான் துய்யமரம் மேலிருப்பேன்
என்று வரசன்சுதன் இயம்பியதை யேபேடி
நன்ருக் கேட்டும் நவிலுவாள் பாலனுக்கும்

### பேடி உத்தரகுமாரனுக் குரைப்பது

அரசன்புதல் வாகேளும் அன்பான பாண்டவரை
அரசன்துரி யோதனனும் அழைத்துமே சூதாடி
ஐவர்களைத் தோற்கடித்து அந்தப் படுபாவி
செய்ய வனவாசஞ் செப்பினு னவருக்கும்
வருந்தி யவர்சென்று மாதுட னேயவர்கள்

இருந்து கழித்தார்காண் ஈராறு தன்வருடம்
அக்ஞாத வாசமதை யவர்கள்செய் யநினைந்து
தக்கவே டம்பூண்டு தான்சென்று ரோரிடத்தில்
அவர்களுட வாயுதமும் அருமைய தாய்க்கட்டி
தவறாது இம்மரத்தில் தான்வைத்து மைவர்களும்
வேறோர் நகரமதில் வேலைகளொன் றையடுத்து
பாரோர் புகழ்மன்னர் பண்பா யமர்ந்திருக்கார்
வேந்தர்கள் போயிருக்கும் மேன்மையா னநகரை
சாந்தகுண மைந்தா தைய லறியேனே
என்றுமே பேடி எடுத்துரைக்கப் பாலனுமே
நன்றாகக் கேட்டு நல்லரச னப்போது

### உத்தரகுமாரன் பஞ்சவரை நினைத்து துக்கப்படுவது

ஐயையோ வென்னவிது ஐவரும் பத்தினியும்
செய்ய வனவாசம் தேர்வேந்தர் காடேகி
அலைந்து திரிந்திடவும் அன்றெழுதி யபிரமன்
நிலையா யெழுதிவைத்தான் நீண்டகா டோட்டியதோர்
பாவிதுரி யோதனனை பரமன் பதிசேர்த்து
மேவி நகரமதை வேந்தர்களா ளாதபடி
களைத்துமே பஞ்சவர்கள் காட்டுக்குச் சென்றிடவும்
மலைத்திட்டா ரையையோ மன்னன் துரியனுக்கு
என்னவிதி யவர்க்கு மிட்டதையோ காலமென்று
மன்னன் சுதன்நினைந்து மயங்கி யழுதனனே
அப்போது பேடியும் அறிந்துமே சங்கதியை
செப்புகிறு ளேயவளும் சிறுபால கன்றனக்கு
மன்னன்புதல் வா நீயும் மயங்கி யழுவதிலே
என்ன பலனதிலும் இன்னமுங் கேளுமன்னு

இந்தப் படையோடு இங்குவந் ததுரியன்
சிந்தை நொந்துமடியச் செய்வேன் சணத்திலேயும்
நான்தான் விசயன் நாயகமே யிப்பொழுது
வீண்தா மதம்வேண்டாம் விரைவாக வில்லையெடு
என்றந்தப் பேடி இயம்பியதைக் கேட்டரசன்
நன்முக வந்துமவன் நரன்பாதத் தைப்பிடித்தும்
சிறியேன் பிழைபொறுப்பாய் செப்பிய துயானுமே
அறியா துரைத்தேனே ஐயனே காருமென்றும்
பாத மதில்வீழ்ந்து பணிந்து சிறுவனுமே
பேதமில்லா தெந்தன் பிழைபொறுப்பாய் என்றுரைக்க
பாண்டுமன்னன் புத்திரனும் பார்த்துமே பாலகனை
வேண்டா மினிக்கவலை வேந்தனே விட்டுவிடு
வென்று எதிரிகளை விசனம்விட்டு நாமளுமே
இன்றுபசு வைத்திரட்டி ஏகிடு வோம்நகர்க்கு
இன்னம் பதட்டமா இயம்பினது இச்சமயம்
மன்னு நிசமெனவே மதித்துக்கொள் ளிப்போது
நேரமா காதபடி நீமரத்தின் மீதேறி
பாரமுள் ளவில்லும் பாசுப தக்கணையை
சீக்கிர மாயதனை சேயனே நீயெடுப்பாய்
தாக்கி யெதிரிகளைச் சங்கரிப்பேன் தப்பாது
என்றுமந் தவிசய னியம்பினதைக் கேட்டரசன்
நன்றெனவே சென்றுமவன் நல்லமர மீதேறி
அங்கிருந்த வில்லதனை அதிசயமாய்க் கையெடுத்து
சிங்காரமா னகணையை சிறுவனுஞ் சேர்த்துடனே
எடுத்து மவைகளையு மிறங்கி மரத்தைவிட்டு
கொடுத்து விசயனிடம் குழந்தை நமஸ்கரித்தும்
நமக்குமே யித்தொழிலும் நரனுக்குச் சாரதியாய்
நமக்குக் கிடைத்ததென்று சந்தோஷங் கொண்டவனும்

தேர்த்தட்டி லுட்கார்ந்தும் திறமாய்ச் சவுக்கெடுத்து
நேர்குதிரை லகானை நிருபனுங் கைக்கொண்டான்

அருச்சுனன் சுயரூப மெடுப்பது

அருச்சுன ராசனுமே அன்னை தந் தைதனையே
விருப்ப மொடுதொழுது வேண்டியே தேவர்களை
இந்திரனை யும்பணிந்து எல்லோரை யும்நினைந்தும்
தந்திர வூர்வசியைத் தானினைத்துச் சிந்தையிலே
அன்றுமே பேடியுரு அவனைவிட் டுநீங்கி
நின்று னருச்சுனனும் நெடியவுல கோர்புகழ
பார்த்துமே தேவர்களும் பார்த்தன் வடிவமதை
வேர்த்து மவர்களுமே விழிசிமிட் டாதிருந்து
அப்போ மலர்மாரி அவர்கள் பொழிந்துமே
செப்பியே நல்வாக்குஞ் சென்று ரிருப்பிடமும்
சிறுவனு மப்போது தேர்விச யனழகை
இருவிழி யாற்பார்த்து இதுபுதுமை யென்றெண்ணி
விசயன்பா தமதிலே வீழ்ந்துவப் பாலகனும்
நிசமான பேடியுரு நினக்குவந்த சங்கதியை
எந்த னிட ந்தனிலே இயம்பவேண்டுஞ் சாமியென்று
சந்தோஷ மாகவுமே தான்கேட்கப் பாலகனும்
அந்த மொழிதனையே அறிந்துமே பார்த்திபன்
விந்தையாய் மைந்தனிடம் விளம்புவான் சங்கதியும்
அப்பனே யெந்தனுக்கு அன்றூர்வசி சாபமதால்
ஒப்பவே யாவர்களு முகந்தபேடி யாயிருந்தேன்
இப்போது யென்னைவிட்டு ஏகியவ் வுருவமது
செப்பினவள் தன்னிடத்தில் சென்றது மவ்வேடம்
ஆதி வரலாறை அறையவெண்ணிப் பாலனுக்கும்
வேதினை யில்லாதபடி விளம்பினன் பூராவும்

இன்றுமே நம்மளுக்கும் ஏற்றவுடை பணியும்
நன்ருக வேண்டுமென்று நரனுமெண் ணிமனதில்

### அர்ச்சுனன் இந்திரனை நினைத்து தனக்கு ஆடையாபரணங்கள் வேண்டுமென்று வேண்டுவது

அந்நேர மேவிசயன் அன்பான இந்திரனை
மன்னன்தி யானித்து மகிழ்ந்துமவ னுரைப்பான்
தந்தையே யெந்தனுக்கு தக்கதொரு ஆடைபணி
இந்தவேளை தாவென்று எண்ணித் தொழுதிடவும்
வானவர்கோ னப்போது மைந்தன் நினைத்ததுவை
தானகத்தி லேநினைந்து சமர்த்தன் விசயனுமே
வெல்லவே துரியனையே வேண்டியே யிப்போது
நல்ல வடிவமதை நரனெடுத்துத் தப்பாமல்
தன்னழகுக் குகந்த தக்கதொரு ஆடைபணி
மன்னனும் நம்மிடத்தில் மகிழ்ந்துகேட்டா னுகையினல்
அவன்மன துக்கேற்ற ஆன வுடமைகளும்
தவருு தனுப்பவுமே தானினைந்து இந்திரனும்
பார்த்தனுக்கு வேண்டும் பலவிதப் பணிதிகளை
சேர்ந்தே யனுப்பினன் சிலைவிசயன் றன்னிடத்தில்
வந்த வரிசைகளை மகிழ்ந்து மவன்வாங்கி
சந்தோஷ மாய்ப்பூண்டான் தன்னுடைய தேகமதில்
பாண்டுமன்னன் புத்திரனும் பாங்காய் ரதத்திருந்து
காண்டீபன் தன்னை கையி லவன்பிடித்து
மன்னனு மச்சமயம் மகாதேவன் றன்னையுமே
பின்னமில் லாதபடி பிழைபொறுத் தாளுமென்று
வேண்டியே யாவரையும் விசயனுந்தப் பில்லாமல்
காண்டீபந் தனுக்குமே காவலன் பூசைசெய்தும்
பாலனி டந்தனிலே பகருவான் சங்கதியும்

சிலனே நம்ரதத்தில் செயிக்கும் அனுமக்கொடியை
கட்டுமென் றப்போது காண்டீப னுரைத்திடவும்
சட்டெனவே கட்டினான் தன்யெசமான் சொற்படிக்கு
நடத்தினதோர் பாலகனை நல்லவிச யன்கண்டும்
திடபுயத் தானென்று தெளிந்துமே யன்னேரம்
விசயன்காண் டீபமெனும் வில்லை யெதிர் நிறுத்தி
செயம்பெற வேணுமென்று செய்தானே யோசைதன்னை
ஓசைத் தொனிமுழக்கம் உலகமெல் லாங்கேட்டு
ஆசையாய்த் தேவர்களும் அங்குவந்தார் பார்த்திடவே
அவ்வோசை யைக்கேட் டரவக்கொடி யோன்படைகள்
இவ்வாறே துமுழக்கம் என்று மவர்மயங்கி
கீழேவிழுந் தவரும் கேவல மடைந்தவர்கள்
பாழே வெகுசனங்கள் பதைத்துக்கை கால்முறிய
பலவிதமாய்ச் சேனைகளும் பரதவித் தப்போது
நிலமதி லும்படுத்தார் நேர்மையில் லாப்படைகள்
அப்போ தருச்சுனனு மன்பொடுசங் கையெடுத்தும்
செப்பவொண் ணுவோசை செயஞ்செயமென் றூதினனே
ஓசையைச் சொல்லுதற்கு உவமைக ளில்லையப்ப
பாசமாய்த் தவஞ்செய்வோர் பதைத்துமே கீழ்விழுக
அஷ்ட கஜங்களுமே அசந்துமே நின்றிடவும்
நிஷ்டை களைவிடுத்தார் நீடு தவமிருந்தோர்
சத்தா சமுத்திரமும் தான்கொதிக்க வச்சமயம்
அத்ததி விண்ணிருக்கும் அருந்ததி யுமுதிர
சப்தமே கங்களுமே தான்பயந் தோடிடவும்
சப்பைக்கா லீசனுமே தைரியம்விட் டேங்கினனே
நிலையான தேரிருந்த நேர்மையான சாரதியும்
தலையெடுக்க மாட்டாமல் தான்படுத்து ரதத்தில்
கண்கள் பொறிப்பறக்க காதுரெண்டை யுமடைக்க
கண்களை மூடியவன் களையாகக் கீழ்விழுக

அப்போ தருச்சுனனும் அந்தச் சிறுவனையே
தப்பாம லேயெடுத்து தகுந்தவுப சாரமதை
செய்து மவனுக்குத் தெளியாம லேமயக்கம்
ஐயையோ வென்று அழுது மவனுமப்போ
தப்புவார்த் தைகள்பேசி சஞ்சல முண்டாகி
அப்போ சுரஞ்சன்னி அவனுக்கு வந்திடவும்
தப்பா யுளறுவதை தனுவிசய னும்பார்த்து
எப்படிச் செய்வதென்று எண்ணி யகத்தினிலே
ஆசையாய் ரிஷிகளுமே அறைந்ததொரு மந்திரத்தை
பாசமாய் விசயனுமே பாலன்செவி யில்மொழிய
அவன்மயக் கந்தீர்ந்து அப்போது கண்விழித்து
தவறான எண்ணமெல்லாம் தான்விடுத்துப் பாலகனும்
விசயன்பா தந்தனிலே விழுந்து நமஸ்கரித்து
செயம்பெறு வோமென்று செப்பியே சீக்கிரத்தில்
குதிரை லகான் தன்னைக் குழந்தையுங் கைப்பிடித்து
ததியே ரதம்நடத்த தயாரா யிருந்ததையும்
அதிசய மாய்விசயன் அதைப்பார்த்துப் பாலனுக்கும்
பதியர சன்சுதனே பாங்காய் ரதந்தனையே
நடத்தென்று தானுரைக்க நல்லசிறு பாலகனும்
படபடன ரதத்தைத் பாரதனி லேநடத்த
தேருவ ரும்விதத்தைச் செப்பிடவொண் ணுவேகம்
பாருளிவ னைப்போல பாகன் இனியமையான்
என்று விசயனும் எண்ணியிருக் குஞ்சமயம்
நன்றாகத் தேர்வரவை நாகக்கொடி யோன்படைகள்
பார்த்துமே யப்போது பார விசனமொடு
வேர்த்துவொரு வர்க்கொருவர் விளம்புவார் யாதெனிலோ

துரியோதனாதிகள் யோசனைபுரிவது

தேர்மேல் வருகிறவன் தேர்விசயன் தப்பாது

பார்வேந்தன் நாமனையும் பஞ்சாக வேநினைந்து
ஒற்றைத் தேர்மீதேறி ஒருவனு கவிருந்து
மற்றவரில் லாதபடி மன்னன் தைரியமாய்
வரும்வேகத் தைப்பாரும் வம்புவிளைத் தெல்லோரையுங்
கருவை யறுத்திடுவான் கண்டிடுவீ ருண்மையிது
தைரிய மில்லாமலும் தான்வருவா னேவவனும்
தைரியங் கொண்டதுமே தன்கைத் தனுப்பலமே
இன்றைக்கு ரணகளத்தில் இறக்கவென்று நாமனுக்கும்
அன்றே பிர்மனெழுதி அமைத்தானே வாகையினல்
ஒக்கவெல்லோ ரும்மடிய ஊழிவிதி வந்ததினுல்
தக்கபடி மடிப்பான் சந்தேக மில்லையதில்
இன்னும் பலவிதமே எடுத்தோதி யேதுரோணர்
மன்னன் துரியனிடம் வழுத்துவார் சங்கதியும்
அப்பா வரசனே அருமையான என்சீடா
செப்புவதைக் கேளென்று தீர்க்கம தாய்மொழிவார்
வருபவ னருச்சுனனே வம்புவிளை யும்மன்னு
ஒருமிக்கத் தீர்த்திடுவான் உள்ளபடை பூராவும்
அவனுடன் நாமெதிர்த்து அமர்செய்யக் கூடிடுமோ
அவனும் பலமுடையான் அவன்முன்னம் நிற்காது
ஓடுவமே யல்லாது யுத்தமது ஏதுமன்னு
ஈடுசெய் யாது நாம் எங்கேதான் சென்ருலும்
நாடிவரும் விசயன் நல்லகணை யைத்தொடுத்து
தேடி வதைத்திடவும் செய்வான் திறமுடையான்
அப்பா துரியோதனு அறைகுவ தைகேக்களும்
இப்பமரி யாதையொடு எல்லாப் படை யுஞ்சேர்த்து
வம்பன் வருமுன்னே வழுத்தியே சேனைகட்கும்
நம்முடைய நகர்தனக்கு நல்லரசே செல்வோங்கேள்
மன்னவனே நாமும் வரும்போது மேசகுனம்
பின்னமாய்க் காட்டியதே பெரும்பிழை வந்துவிடும்

கெட்ட சகுனமதைக் கேட்டுநோம் வந்ததற்குஞ்
சட்டமுட னேநகர்க்கு தான்போ வதுநலமே
இன்னும் பலவிதமே எடுத்தோத வேதுரோணர்
மன்னனர வக்கொடியோன் வழுத்துவா னேயவர்க்கும்

துரியோதனன் துரோணரிட முரைப்பது

மாமறைநா லதனை வடிகட்டி யுண்டதொரு
மாமறையோ ரேகேளும் வழுத்துமென் வாக்கியத்தை
ஐவர்களுஞ் சூதாடி அரசையெல் லாந்தோற்று
நைந்துமே சென்றார்கள் நல்லதொரு கானகமே
அப்போது நாமு மைவர்க் குரைத்ததுவே
தப்பாமல் பன்னிரெண்டு தன்வருடங் காட்டகத்தில்
இருந்திடவே வேண்டும் இதுகழித் தப்பாலும்
ஒருவருட மக்ஞாதம் உருவ மதுமாறி
இருந்திடவே வேண்டும் இதைநாங்கள் கண்டாலும்
மறுபடியே நீங்கள் மன்னர்களே யோராண்டும்
வனத்திலே சஞ்சரித்து வதைக் கழித்து பின்னாலே
அக்ஞாத வாசமதில் ஆளுருத் தெரியாமல்
தக்கபடி யோர்வருடம் தானிருக்க வேண்டுமென்று
அந்தநா ளிற்சபையி லறைந்திருக்க வேயவனும்
இந்தவேளை யிங்குவந்தா லெந்தனுக்கு நல்காலம்
முன்னால்சபை யிற்பேசி முடித்ததொரு சங்கதியை
மன்னன் விசயனிடம் வழுத்தினு லுண்மையென்று
அண்ணனிட முரைத்து அவர்செல்வார் காட்டகத்தில்
பின்னம் நமக்கில்லை பெருவிசன மும்போச்சு
அப்படிக்கு யோசனை அடியேன் நினைத்திருக்க
எப்படித் தோத்தரித்தாய் எண்ணியே பஞ்சவரை
இன்றுபோர்க் குப்பயந்தோர் எல்லோரு மேசேர்ந்து
நன்றாய் நகரதற்கு நடப்பீரே தப்பாமல்

பெண்சாதி பிள்ளையிடம் பிரியமாய்ப் போய்ச்சேரும்
என்தைரி யம்போதும் இப்பொழுதே நீரேகும்
இன்னும் பலவிதமே எடுத்தோதி யேயவனும்
மன்னர் சபைதனிலே வழுத்தினு னேதுரியன்

அஸ்வத்தாமன் துரியோதனனுக் குரைப்பது

செப்பியதோர் சங்கதியைத் தெரிந்துவஸ்வத் தாமனுமே
தப்பா தரசனிடம் சாற்றுவான் சங்கதியும்
வேணு வரசர்களும் வீற்றிருக்க அவ்விடத்தில்
காணவஸ்வத் தாமன் கடல்போ லிரைந்துரைப்பான்
அரசனே பெரியோரை அதிகமாய் நீயிகழ்ந்தாய்
திரவானும் நீயெனவே தெரிந்திருக்கின் றேன்நானும்
எந்தப்போரை நீசெயித்து எங்கு நகரமதை
சொந்தமாய்க் கொண்டாய் சொல்வா யடியேன்முன்
மன்னர்பஞ்ச பாண்டவரை மாயத்தால் சூதாடி
மன்னரைத் தோற்கவைத்து வனத்துக்கு மோட்டிவிட்டாய்
அந்தப்போர் ரைச்செயித்தாய் அதிகப்பல வானேநீ
இந்தவிரா டன்பதியி லிருந்தபெருங் கோவுகளை
மடக்கினுய் தப்பாது மகாபலவா நீயாகும்
திடத்தோ டிதுவரைக்குஞ் செயமடைந்த திதுவே
வேறதுவொன் றுங்காணேம் வேந்தனே பலசாலி
தேரதிற்கட் டிச்சிலரை சென்றிருக்காய் விண்ணுலகம்
எங்கோனே கேளும் எடுத்துமதி யையுரைக்கும்
சிங்காரமா மன்சகுனி செயமடையு மாயுதமும்
பிடித்திருக்கான் பாரு பிரபலனுந் தப்பாது
மடிப்பான் எதிரிகளை மகாபல வான்தொழிலில்
பனிரெண்டு எட்டுடனே பாங்கா யிருக்காறும்
தனியே பகடையுடன் தானிருக்கும் நாலேழும்
அந்தக்காய் செத்ததுவே அதையது குத்துதுபார்

சொந்தமா யொயிலரசே சொல்லுவான் தப்பாது
இப்படியாயு தங்கள் இருக்கேமா மன்கையில்
செப்புமுன்னே சென்று சிலேவிசய னைச்செயிப்பார்
ஒற்றைத்தேர் மீதேறி ஓங்கியகோ பமுடனே
தெற்றெனவே வந்திடுவான் சீக்கிரமா யோர்நொடியில்
அவனுடன் போர்புரிய ஆகாது நாங்களுமே
தவருகச் சென்ருலும் சல்தி மடித்திடுவான்
அண்டத்தி லேவசிப்போர் அவருமிவ னைப்பார்த்து
பிண்டங் கலங்கிப் பேசாது சென்றிடுவார்
அந்த விசயனிங் கண்டி வருமுன்னே
சந்தோஷ மாய்நின்று சமர்செய்கு வாயரசே
இன்னும் பலவிதமே எடுத்துவஸ் வத்தாமன்
மன்னன் துரியனுக்கும் வழங்கின தைக்கேட்ட
அங்கதே சாதிபனும் அதிகக்கோப முண்டாகி
பங்கமில் லாதபடி பகருவான் யாதெனிலோ
சூரியன் றன்சுதனும் துடித்துமே கோபமிக
மீறிபவ்ஸ்வத் தாமனுக்கு விளம்புவா னேசெய்தி
இந்தச் சபைநடுவே இருக்கும் பெரியோரே
சந்தோஷ மாய்க்கேட்பீர் தனையனிட வாய்மொழியை
வந்தோம் விராடநகர் வானவர்கள் தான்மயங்க
சொந்தமாய்ப் பசுநிரையை துடியாகக் கைக்கொண்டோம்
வருகிற விசயன்றனை மதித்துப் பலமாக
இருக்கின்ற பேர்க ளியம்புகி றீரவனை
ஏனிங்கு வந்தார் இவர்கள் கஷ்டமடைய
தானிங் கிருந்துந் தைரியமில் லாதபடி
மன்ன னிடத்திலே மகாபெரிதாய் சங்கதியை
பின்னமடை யும்படிக்கு பேசுகிறு ரேயவர்கள்
வீணேபோர் செய்யவந்தார் மேன்மையுள்ள பெரியோரும்
தானே கெடுவதல்லால் சஞ்சலத் தைக்கொடுத்தார்

வருகிறவன் சமர்த்தன் மற்றவன் சும்பனென்று
நெருநெரென பற்கடித்து நேரே கருணனுந்தான்
நானுமே விற்பூண்டு நரனுட னேயெதிர்த்து
காணுவே னவன்திரத்தை கண்டிப்பேன் கைவில்லை
கடுங்கணையைப் பூட்டி காண்டீபன் றன்சிரசை
விடுவேனுன் தென்றிசைக்கு வேறுசந் தேகமில்லை
இன்னும் பலவாறாய் எடுத்தோதி யேகருணன்
மன்ன னருகினிலே மகாகோப மாயிருந்தான்

கிருபாச்சாரியார் கர்ணனுக்குரைப்பது

அங்கதேச மதையே ஆண்டு வருங்கருணா
இங்கே மொழிந்ததுவும் எல்லா மதுசரியே
வருகிறவன் விசயன் வம்பு விளைந்துவிடும்
தருமநீ திப்படியே தானுரைப்பேன் சங்கதியும்
இன்றுவருந் தேரும் எதிரி பலந்தனையே
நன்றாக யோசியும் நாமதற்குள் ளேவீரம்
பேசவே கூடாதே பெரியதேரில் வாரவனும்
நேசமாய் வில்லெடுத்து நின்றுபோர் செய்தாக்கால்
முப்பத்துமுக் கோடிதேவர் முன்னின் றெதிர்த்தாலும்
செப்பரிய ருத்திரனுஞ் சேர்ந்துமே வந்தாலும்
அஷ்டதிக்குப் பாலகர்க ளவனுட னெதிர்த்தாலும்
நஷ்ட மடைந்திடவே நல்விசயன் தானடிப்பான்
பெலத்தி லவன்மிகுதி பெரியவா யுதம்பூண்டோன்
நிலத்தி லொளிந்தாலும் நிமிஷம் வதைத்திடுவான்
அவனுடன் யுத்தஞ்செய்ய ஆரொருவர் போனாலும்
தவராது மாய்த்திடுவான் சல்தி யவன்கணையால்
இன்னும் பலவிதமே எடுத்தோத வேகிருபர்
மன்னன்கர்ணன் கேட்டு மகாகடின மாயுரைத்தான்

வீஷ்மாசாரியார் துரியோதனனுக் குரைத்தல்
அப்பா துரி யோதனனே அருமையான யென்பேரா
செப்புகிறேன் கேளுந் திறமையான சங்கதியை
பெரியோர் களாயிருப்போர் பேசவேண்டுங் காரியத்தை
அறிய வுரைத்தால் அதுவுமொரு பொல்லாப்பா
அவரு முரைத்தாரே அந்தச் செய்திதனிலே
தவராக வேதுந் தானவ ரோதினரோ
பெரியோர்கள் சிந்தைநொந்தால் பெருவினை தப்பாமல்
தெரியவே வந்துவிடும் செகமதை யாளரசே
இழிவாகப் பேசினதோர் இந்தக் கருண னுக்கு
பழிபாவம் வீண்போமோ பரம னழித்திடுவான்
எல்லோரையும் வாட்டுவே னென்றுரைத்தா னேகருணன்
சல்லாபப் பேச்சுக்களுந் தட்டுப் பறந்திடுமே
அதற்குள் துடிக்கிறுன் அங்கதேச க்கருணன்
இதமாய் விசயனுடன் இன்றுபோர் செய்வானே
சொல்லி நடந்து துரோணரிடம் வரவும்
வில்லியுவ்வத் தாமன் விரைவாய் வந்துசேர்ந்தான்
அப்போ துரியோதனன் அறிந்துமே சங்கதியை
செப்பவொண்ணுப் பயங்கொண்டு தீரமும் விட்டவனும்
வந்து பணிந்தானே மகாயோகி பாதமதில்
சிந்தை மகிழ்ந்தவர்கள் செப்பியே நல்வாக்குங்
கங்கா சுதன்தானும் காவலன் றன்னிடத்தில்
பங்கமில் லாதபடி பகருவார் யாதெனிலோ
அரசே துரியோதனு அம்மூ வருமென்ன
திரமான வில்லுஞ்செப்பவொண் ணுக்கணையும்
கைப்பூண்ட மன்னர் கடுங்கோபங் கொண்டாலே
வையகத் தோரையெல்லாம் மடித்திடுவார் தப்பாது
தவவேடம் பூண்டோர் தருமத்தை யெண்ணியவர்

தவறி மொழிபிசகார் சங்கதியைத் தானுரைப்பார்
அப்படிக் கொத்ததொரு அன்பு மிகுந்தவரை
தப்பான வார்த்தைகளைத் தானுரைத்தான் கர்ணனுமே
இன்னமுஞ் சொல்லுகிறேன் எந்தனிட வாக்கியத்தை
மன்னவனே கேளுமென்று வழுத்துவா ரேபெரியோர்
வேகமாய்த் தேரேறி விசயனிங்கு வந்தாக்கால்
சாகவே செய்வான் சனத்தை யெல்லாம் பூராவும்
இன்று துரியோதனனை எண்ணியவ னிங்கேகி
கொன்றிடவே விட்டிடுவான் கோடிகணை தப்பாது
நாமிருந்து மென்ன நரனுக் கெதிராமோ
தாமத மில்லாமலே சணத்தில் மடித்திடுவான்
கேவலமாய் நாமிருந்தால் கெடுதியது தப்பாது
காவலன் துரியனையே காப்பாற் றிடவேணும்
தக்கதொரு ஐவர்களும் தானிருந்து காட்டகத்தில்
அக்ஞாதவா சத்தவணை அரசனிருக் கென்றுனே
அந்தக் கணக்கதனை அறிவோமே நாமென்று
விந்தையொடு பார்த்து விளம்புவா ரரசனுக்கும்
மன்னவனே யுன்னெண்ணம் மனப்படி யிங்கில்லை
மன்னர்பஞ்ச பாண்டவர்கள் மகிழ்ந்து ஈராற்மாதம்
சந்தோஷ மாயிருந்து தவணைநாள் நேற்றோடு
விந்தையா கக்கழித்து வெளியானு னேவிசயன்
அப்பா துரியோதனு அந்தநா ளிற்சபையில்
செப்பினு யைவருக்குந் தெரியவே யாவர்களும்
மன்னவரே நீங்கள் வனத்திற்பனி ரெண்டாண்டு
பின்னமில்லா திருந்தன் பின்னீடு மேநீங்கள்
உருவமது மாறியே ஓர்வருட மக்ஞாதம்
வருவார்கள் கண்ணுக்கு மன்னு புலப்படாது
ஈராறு மாதங்கழிந் தெந்த னிடந்தனிலே
நேராக வேவந்து நீர்கேட்டா லுந்தேசம்

தந்திடுவேன் நானே சந்தேக மில்லையென்று
அந்தநாளி லெங்களின்முன் னறைந்தபடி பஞ்சவர்கள்
உந்தனுரை போலே ஒடிக்கா னில்வசித்து
விந்தையா யோராண்டு மேவிக் கழித்துமவர்
தக்கவேடம் பூண்டு தான்வந்து யின்னகரில்
மிக்க அவதியுடன் வேந்தர்கள் நாட்கழித்து
இன்று வெளியானர் எந்தலேயுன் சொற்படிக்கு
நன்ருக வேதேசம் நயமாக நீகொடுத்து
ஐவருடன் நேர்ந்திருந்து ஆன தொருநகரை
செய்யா சாட்சியென்று செப்பினர் வீஷ்மருமே

துரியோதனன் பீஷ்மரிடம் உரைப்பது

மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாண்டுவரும் புண்ணிய னுங்கேட்டு
தவயோகி வேடமதைத் தக்கதெனப் பூண்டதொரு
சிவயோகி யேகேளுஞ் செப்புகின்ற வாக்கியத்தை
எந்த னுரைப்படியே ஏகினதோர் பஞ்சவர்கள்
வந்தாலு மிங்கவர்கள் மறுபடியுங் காட்டுக்கு
செல்லும் படியவர்க்குச் செய்தே யுபாயமதை
செல்லவே காடதுக்குஞ் செப்புவேன் தப்பினல்
நல்லதொரு ராச்சியத்தை நான்கொடுக்கே னவருக்கும்
என்றைக்கும் பகையாளி ஏற்பட்டார் பஞ்சவர்கள்
இன்றைக்கே யான்பகையாய் இருப்பது நல்லதுவே
வல்லவர்க்கு நாடு வகுத்துவிடேன் யென்பேரில்
நல்லபடை யைக்கூட்டி நடத்தட்டும் யுத்தமது
சண்டையைச் செயித்துமவர் சமர்த்துட னேயாளட்டும்
சண்டை செய்யும்போதே தைரியம் யானறிவேன்
இப்போது பாண்டவர்கள் என்னுடைய நாடதனில்
தப்பா தடிவைத்தால் தறிப்பேன் சிரமதனை

இன்னும் பலவிதமாய் எடுத்தோதி யேதுரியன்
மன்ன ருகினிலே மவுனம தாயிருந்தான்

துரோணர் துரியோதனனுக்குச் சொல்வது

அப்பா துரி யோதனனே அருமையான என்சீடா
செப்புகிற வசனஞ் செகவரசே நீர்கேளும்
அவர்க்குநா டில்லையென்றாய் அவருமே யுன்கையில்
தவராம லோட்டைத் தான்கொடுப் பார்மன்னு
சந்தேக மில்லையிதில் தம்பியே யென்சொல்லும்
அந்தநா ளிற்றெரியும் அரசனே இன்னமுங்கேள்
வருகிறவன் விசயன் வந்துமே யிங்குநின்று
நெருப்பா யெரித்திடுவான் நிமிசம் படைதனையே
கடுங்கணையைப் பூட்டி காவலரைத் தான்மயக்கி
விடுங்கணையி னாலே வீறிட் டவர்களுமே
தென்றிசை காட்டிடவே சீக்கிரத்தி லேவிசயன்
வென்றிடுவா னிப்போது வீரயுத்தம் தான்புரிந்தே
இப்போது நீயரசே இருக்கும்பசுப் பூராவும்
தப்பாம லோட்டித் தளங்க ளுடனீரும்
நாடுமே போய்ச்சேர்ந்தால் நல்லரசே யெல்லோர்க்கும்
கேடுகிடை யாது கிரமமிது சென்றாலும்
மதிப்புக் கிடமாகும் மன்னு மிதைக்கவனித்
ததியே புறப்படுவாய் தடையில்லை யிங்குனக்கும்
என்று துரோணர் எடுத்தோதக் கேட்டரசன்
நன்றெனவே சம்மதித்து நடக்கத் தயாரானன்

துரியோதனன் கோவுகளையோட்டி நகர் செல்வது

அரவக் கொடியோனும் அவர்மொழிந்த செய்திதனை
திறமாய் நினைந்து சென்றிடவே யெண்ணங்கொண்டு
சேனை களையெல்லாஞ் சேகர மாய்த்திரட்டி

சேனைக ளிடத்தில் செப்பியே சங்கதியும்
மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனமைந்த
கோவுகளை யெல்லாம் கூட்டியே யொன்ருக
அரவக்கொடித் தேரி லரசனும் வீற்றிருந்து
திறமான சாரதிக்குஞ் செப்பிரதத் தைநடத்தி
சேவகர் கோவுகளை சீக்கிர மாய்விரட்டி
பாவமில் லாதபடி பாரவனந் தாண்டினரே
வேந்தன் நகரஞ்செல்ல வேணதள மிங்கிருக்க
சாந்த மொடுவாரான் தனஞ்செய னப்போது
இந்திரனும் பிர்மா இவர்கள்விண்ணில் வந்துநிற்க
அந்தர தேவர்களும் அங்குவந்து கூடிடவும்
பாண்டரசன் வந்து பார்க்கப் பிரியமுடன்
அண்டா வுயரமதில் அனைவருந் தானமர்ந்து
இன்றுநடக் கும்போரை இங்கிருந்தே யெல்லோரும்
நன்ருகப் பார்ப்போமென்று நாதாக்க ளங்கிருந்தார்

அருச்சுனன் அதிவிரைவாக
ரதம் நடத்திவருவது

அப்போ விசயனுமே அனுமக்கொடித் தேரிருந்து
செப்பவொண்ணு வாங்காரம் சீறியே சாரதிக்கும்
சல்திரதத் தைநடத்த சாற்றவே யவ்வரசன்
நல்லதென்று கேட்டு நடத்தினன் வேகமதாய்
குருசேனை முன்னுக குழந்தை ரதம்விடவும்
பருபரெனப் பார்த்தார் பாரச்சேனை பூராவும்
அப்போ விசய னகத்தினில் யோசித்து
இப்போ நமதுகுரு இங்கிருக்கா ரேயவர்க்குஞ்
செப்பவேணுஞ் சேமலாபம் தெரிய அவர்களுமே
அப்பக்காண் டீபமதை ஆசை யுடனெடுத்து

ஓசை கிளப்பினன் உலகமெல்லாம் தான்மயங்க
ஆசையாய் ரெண்டுகணை அவன்தொடுத்து வில்லதனில்
வில்லி னிடமிருந்து விடுபட்டுப் பாணமது
வில்விசயன் எண்ணம்போல் விண்ணிற்சென் றேகணையும்
ஆகாயச் சிந்திடுெடு அரும்பு மலர்தனையும்
வாகாக் வேயெடுத்து வந்து துரோணரிட
காலிலொன்று கங்கைவிட கண்டொன்றரும் புசாத்த
மேலிமை சிமிட்டாது விசயனும் பார்த்திருக்க
விசயனு மப்போது விரைவாய் இருகணையை
நிசமாக வில்வளைத்து நிமிடம்விட் டானங்கே
வந்துவொரு கணையும் வலமாகச் சுற்றிவந்து
தந்தது நமஸ்காரந் தயவாக வன்னேரம்
இன்ன மொருபகழி ஏகி யருகில் நின்று
மன்னர் செவிதனிலே வழுத்துது தப்பாமல்
ஐவர்பஞ்ச பாண்டவரும் அன்பாக வோராண்டு
தெய்வானு கூலமதாற் றிரிந்து வனந்தனிலே
அக்ஞாத வாசமதை ஐவர்களு மேகழித்து
மெய்க் யாதியோடு வெளியேறி யேயவர்கள்
தர்மர்முத லவர்களுந் தையலருஞ் சேமமென்றுர்
தற்சமயம் விசயன் தான்மொழி வதுபோலும்
அம்பு மவர்செவியில் அதிகரீங் காரமதை
நம்பும் படிசெய்ய நல்லதுரோ ணர்கேட்டு
சந்தோஷ மாகவுமே தன்னை மறந்தவரும்
அந்த விசயனையே அதிகம தாய்ப்புகழ்ந்தார்
பாண்டுமன் னன்புத்ரான் பார்த்தனு மப்போது
நீண்டகாண் டீபமதில் நேரான ரெண்டுகணை
தொடுத்துப்பக ழிதனக்கு சொல்லியே வேண்டியதை
விடுத்தான் கிருபரிடம் வேகமா யக்கணையும்
வந்து மவர்செவியில் வாகாய்ரீங் காரமதை

தந்து மவரிடத்தில் சாற்றுது யாதெனிலோ
ஐவர்பஞ்ச பாண்டவரும் ஆரணிய மதனில்
செய்து வனவாசம் தீர்க்கமா யோராண்டு
கழித்துமே யக்ஞாதம் காவலர்கள் தாமிருந்து
பழிகாரன் கண்ணிற் பாராம லேயவர்கள்
மலைத்திடாது மவர்கள் வழுத்தினவக் ஞாதமதை
தொலைத்துமே யின்றுதினம் சுயவடிவந் தாமெடுப்பார்
மாதுடனே ஐவர்களும் மாதேவன் றன்னருளால்
தீதுகளில் லாதபடி சேமகர மென்றதுவே
சிந்தை யொடுகிருபர் செப்பியதைத் தான்கேட்டு
சந்தோஷ மாகியே தானிருக்க வேவிசயன்
எண்ணியே பீஷ்மருக்கும் எடுத்துரைக்க வேநினைந்து
வல்லநல் வில்லதனை வாகாய் வளைத்ததிலே
நல்ல கணையைப்பூட்டி நாத னிடம்விடுத்தான்
அந்தக் கணையும் அதிவேக மாய்வந்தும்
சந்தோஷங் கொள்ளவீஷ்மர் தானுரைக் கும்பகழி
மாதுடன் பாண்டவர்கள் மனமகிழ்ச்சி தன்னோடு
தீதுகளில் லாதபடி சேமகர மென்றதுவே
இந்தக் கணைவந்து இயம்பியதோர் சங்கதியை
விந்தை யிதுவென்று வீஷ்மரெண்ணி யேயிருந்தார்
அர்ச்சுனனு மச்சமயம் அகத்திலே யோசித்து
விற்சிலை தன்னிலே வேண்டிமோக னஸ்திரத்தை
தொடுத்துப் பகழியிடம் சொல்லையே விஞ்சைதனை
விடுத்தான் படைகள்மேல் வேகமாய்க் கணைவந்தும்
மாயவலை கொண்டு மயங்கச் செய் யப்படையை
ஆயனை யெண்ணி அவர்கள் மயக்கமுடன்
தன்னினைப் பில்லாமலே தரைதனி லேவீழ்ந்து
மண்ணிற் புரண்டு வருவதைக்கண் டேவிசயன்
சாரதி தனைப்பார்த்துச் சாற்றுவார் சங்கதியும்

நேரமாகு திங்கே நிமிடம் ரதமதனை

### விசயன் சாரதியை கீழ்திசையில் ரதத்தை நடத்தச் சொல்லுதல்

மீறி யிவர்களையே வேந்தனே தப்பாது
சூரியன் றன்றிசையில் சுருக்காய் ரதமதனை
நடத்தென்று பாலனுக்கு நற்கிரீடி தானுரைக்க
திடமாகக் கேட்டுச் சீக்கிரத்தி லேரதத்தை
பாழ்மன்ன ரைத்தாண்டி பார்ப்பவர் தான்மயங்க
கீழ்திசையை நோக்கி கெருவமொடு வாரானே
தேருவரும் வேகமதைச் செப்பிடவே யொண்ணுதே
பாரிலிவன் சாரதியே பலவானென் றேவிசயன்
சந்தோஷ மாயிருக்க தக்கபெருந் தேவர்களும்
இந்தச் சிறுவனையே ஏக்கமாய்ப் பார்த்திருந்தார்

### துரோணச்சாரி பீஷ்மர் மற்ற மன்னர் யாவரும் யோசனை செய்தல்

அப்போது துரோணர் அந்தச் சபைதனிலே
செப்புவார் யாவருக்குஞ் செய்தியும் யாதெனிலோ
பாண்டுமன்னன் புத்திரன் பார்த்தனுமே யிங்குவந்து
நீண்டகாண் டீபந்தன்னை நேராக வேவளைத்து
தொடுத்துக் கணைதனக்குஞ் சொல்லியே மந்திரத்தை
விடுத்தகணை தானும் விளம்பினதே சங்கதியை
இதுவரையி லேகணையும் இப்படி விளம்பியதை
பொதுவர்களே கண்டதுண்டா புகலுவீ ரெந்தனுக்கும்
இந்தவில் தைரியந்தான் எழில்விசயன் ஒண்டியாக
வந்தவனு மின்று வதைத்திடுவான் தப்பாது
அவனுடன் போர்புரிய ஆரிருக் கின்றூர்கள்
அவனே பலவான் ஆயுதமோ பொல்லாது

பார்த்தனை யேபுகழ்ந்து பாசமுட னேயவனை
பார்த்தார் எதிராக பார்மன்ன னைக்காணேம்
அருச்சுனன் எங்கேயென்று அனைவரு மப்போது
திருத்தமாய் நாற்றிசையும் திரும்பியே பார்த்தார்கள்
சென்ருன் விசயனுந் திரியோ தனனிடத்தில்
இன்றே துரியனையும் எமலோகஞ் சேர்த்திடுவான்
முன்னமிவ ரையழைத்து முடிமன்னன் சூதாடி
மன்னவரைக் காட்டில் வம்பாக வோட்டிவிட்டான்
இன்னமவர்க் குநாடு இல்லையென் றுரைப்பதினல்
பின்ன மடைந்திடுவான் பெரியோரே தப்பாது
இன்று விசயனுமே எண்ணிக் கணைபூட்டி
கொன்றிடு வானவனை கொஞ்சமேனு மஞ்சாமல்
அரச னகப்பட்டான் ஐயையோ பாவமிப்ப
அரசனிட மேநாம் அனைவோருஞ் செல்வோமே
தாமதமில் லாது தளங்களை நாம்கூட்டி
நேமமுடன் செல்வோம் நிமிட மரசனிடம்
என்று துரோணர் எடுத்தோதி யேபடைக்கு
நன்ருய் பயணமதாய் நல்லரச ரங்கிருக்க

அருச்சுனன் துரியோதனனிடம் வந்து கேட்பது

அதிவேக மாய்ரதத்தை அப்பா லகனடத்தி
ததியே துரியனிடம் சல்தியாய் வந்தனரே
அங்குசெல் லும்படைகள் அவ்விசய னைக்கண்டு
இங்கு பெரும்பழிகள் எய்திடுமே தப்பாது
துய்பதொரு விசயன் தொலைத்திடுவான் நம்மையுமே
ஐயையோ யீதென்ன அனியாயக் காலமதால்
பாவிதுரி யோதனனும் பகர்ந்ததை நாம்கேட்டு
ஆவி விடுத்திடவும் அயன்விதியோ யாவருக்கும்
பெரியோர்சொற் கேளாமல் பிசகாய்நாம் வந்ததினல்

அரியச் சிரமதனை ஐயோ விசயன்வந்தான்
அவர்களு மங்கிருக்க ஐயோ விசயனுமே
தவறுகள் செய்யவேதான் சல்தியா மிங்குவந்தான்
எண்ணிப் படைகளுமே இருக்குஞ் சமயமதில்
மன்னனர வக்கொடியோன் வந்தவிச யன்றன்னை
எதிராகக் கண்டுமவன் ஏங்கி மனந்தளர்ந்து
பதியரச னப்போது பார்த்தனைப் பார்த்தவுடன்
எண்ணுவான் சிந்தையிலே இன்றுவிச யன்நம்மை
திண்ணம தாய்ச்சிரத்தை தீர்த்திடுவான் தப்பாமல்
என்றரசன் எண்ணி இருக்குஞ் சமயமதில்
நன்று யருச்சுனனும் நல்ல தொருரதத்தை
சல்தி துரியனிடம் தான்செலுத்தப் பாலனுக்கும்
சொல்லினன் சங்கதியைத் துடியாய்ச் சிறுவனுமே
பாகம தாய்ப்பரியை பாங்கா யவனதட்டி
வேகம தாய்நடத்தி வேந்தன்முன் வந்தனனே
தேர்தனைச் சுழலவிட்டு திரமான சத்தமுடன்
நேர்தனிலே வந்து நின்றான் துரியனிடம்
அப்போ விசயனுமே ஆசையாய்க் காண்டீபம்
ஒப்பவே தான்வளைத்து ஓசையைக் காட்டிவிட்டான்

துரோணர், வீஷ்மர், கர்ணன் முதலான அரசர்கள் யோசனை செய்தல்

காரிடிபோ லோசைதனைக் கண்டவர்க ளங்கேயும்
பேரிடிபோற் சத்தமது பெலமாகக் கேட்பதையும்
துரோண ரறிந்துமே துயரமது வுண்டாகி
விரோதமீ தேதென்று விளம்புவார் வீஷ்மரிடம்
என்னவிப் போமுழக்கம் இதன்வகையை யெந்தனுக்கு
மன்னவரே யோதுமென்று மறையோருங் கேட்டனரே

மனுநீதி தன்னையே மகிழ்ந்து கரைத்துவுண்ட
தனுவேந்தும் வீஷ்மரவர் சங்கதி யைப்புகல்வார்
இடியென் றுரைத்தாலும் இல்லையே கார்மேலே
துடியாய்க் கேட்டமுழக்கம் சொல்லப் பயமாகுதே
பார்த்திப னிங்கேவந்தான் பாசமாய்க் கணைவிடுத்தும்
நேர்த்தியாய் ரதம்நடத்தி நிமிஷமங் கேசென்று
அரவக்கொடி யோனிடத்தி லவன்சென்று இப்பவுமே
பரபரப்பாய் வில்லைப் பார்த்தான் வளைத்தங்கே
ஓசையைக் காட்டியபவ னேட்டிவிட் டானிங்கே
ஆசையாய் வந்ததுவும் அறைந்தது நம்மிடத்தில்
துரியோ தனனையும் துஷ்டத் தனஞ்செய்குவான்
அறிவோம் நாமென்று அங்குயோ சித்திருந்தார்

## அருச்சுனன் பசுக்கூட்டங்களை மீட்பது

விசயனு மப்போதே வேண்டிய யோசனையை
இசைவாக வேயவனும் எண்ணுவான் சிந்தையிலே
அரசன் துரி யோதனனும் அருமை யுடையவனே
திரமான கோவுகளைத் திரட்டியப் பாதகனும்
நாட்டமாய்ச் சாய்த்து நல்லபசு வத்தனையும்
நாட்டிற்செல் லாதபடி நாசழிவா னிங்குவைத்தான்
அத்தினு புரியெல்லை அவனுமே சென்றிருந்தால்
இத்ததி நாமங்கே ஏகவே கூடாது
நல்லகால மிதுவே ராசனிங்கு சிக்கியதும்
சொல்லாமல் வந்தே தோசி யகப்பட்டான்
என்று விசயன் எண்ணி யிருதயத்தில்
நன்றான வில்லின்தொனி நல்லபெரி யோர்களுமே
கேட்டிருப் பாரவர்கள் கிலேசமது வுண்டாகி
வாட்ட மிகவடைந்து வந்திடுவார் சீக்கிரத்தில்

அவர்களும் வந்துமிங்கு அருமையான போர்தொடுத்தால்
அவர்களுடன் செல்லும் அநேக நேரம்வரைக்கும்
வருமுன்னே கோவுகளை மடக்கி நகர்தனக்கு
பருவமாய்ச் சேர்த்திடலாம் பங்கமில் லாதபடி
என்று விசயன் எண்ணிக்காண் டீபமதை
நன்ருய்க்கை யிற்பிடித்து நல்லவக்கி னிக்கணையை
சல்லாப மாய்ப்பூட்டி சல்திபூ சைபுரிந்து
நல்லபடை யின்மேலே நரன்செல்லு மென்றிடவும்
வில்லினிட மாயிருந்து வெளிப்பட வப்பகழி
சொல்லி முடியாதே துடியாய் வரும்வேகம்
அக்கினியின் முழக்கம் அண்டங்கள் தான்கலங்க
முக்கியக் கோபமுடன் மும்முரமே யந்நேரம்
அண்ட முகடுவரை அடங்காச் சுவாலையதாய்
கண்டவரை யெரித்துக் காலன்பதி சேர்க்கவென்று
வருகுதே யக்கணையும் வடவா முகாக்கினிபோல்
கருக்க வருங்கணையைக் கண்டான் துரியனதை
மதியு மவன்கெட்டு மன்னன் விசனிக்க
ததியேயவன் பாளையங்கள் தட்டுக்கெட் டேமலையை
வந்து புகுந்ததே வம்பன்கணை தப்பாது
நொந்திட வெகுபேரை நொடியில் வதைத்திடவும்
கையற்று மடிந்தவரும் காலற்று வீழ்ந்தவர்கள்
ஐயையோ வென்றுமவர் அரன்பதவி சேர்ந்தார்கள்
வேண சனமடிந்தார் வெகுசனங்கள் தாமொழிய
நாணமடைந் தானே நல்லதுரி யோதனனும்
உத்தர குமாரனும் யோசனை கள்செய்து
அத்தருணங் கோவலரை அழைத்துமே கையாலும்
வாருங்க ளாயர்களே மடிந்தாரே பாவியர்கள்
சேருங்கள் கோவுகளை சேகரமா யொன்ருக

நாடுதனைத் தேடி நல்லபசுப் பூராவும்
சோடுபிரி யாதபடி சுருக்காய்ச்செல் வீரென்றான்
மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாண்ட புண்ணியன் சுதன்மொழிந்த
செய்திதனைக் கோவலர்கள் செம்மையா கக்கேட்டு
ஐயனே யுரைப்படிக்கு அடிமை செல்வோ மென்றவர்கள்
எல்லவருஞ் சேர்ந்து எண்ணி யரசனுரை
சல்லாப மாய்ப்பேசி தானவருஞ் சீக்கிரத்தில்

கோவலர்கள் பசுக்களைத் திருப்புவது

சீங்குழலை வாயில்வைத்து செயம்செய மென்றாத
சிங்குழல் சத்தமதைச் செவிகொடுத் தாவுகேட்டு
அறிந்துமே கோவினங்கள் ஆங்கார முங்கொண்டு
விரிந்துமே நின்றதெல்லாம் வேகம தாய்ச்சேர்ந்து
காதை மிகவிடைத்து கன்றுகளை யுங்கூட்டி
பாதை வழிதொடர்ந்து பசுக்களுஞ் செல்லுகையில்
மிச்ச மிருந்தபல வேந்தர் சிலபேரை
அச்சமன்றிக் கோவினங்கள் அவர்களைக் கொம்பாலுங்
குத்தி வெகுசனத்தைக் கொள்ளைகொள்ள வேயவர்கள்
தத்தி விழுந்துமவர் தான்சென்றார் காலன்பதி
சென்றிடவே கோவலருஞ் சீக்கிரம் பசுவிடத்தில்
கண்டவர்கள் நடுங்கி காதவழி சென்றார்கள்
ஆசையாய்ப் பசுவுடனே அங்குசெல்லுங் கோவலர்கள்
ஓசையது காட்டியவர் ஓட்டினார் கோவுகளை
அப்போ தருச்சுனனின் ஆயர்கள் செல்லுகிறார்
இப்போயிவர் சென்றால் எதிரிருக் கார்பெரியோர்
தப்பாகப் போரைத் தான்தொடுத்து மவர்கள்
செப்பவொண்ணுக் கோவுகளைத் திருப்பியவர் கைக்கொள்வார்

67709

நாமவர் பின்சென்று நல்லதொரு கோவுகளைத்
தாமத மில்லாமல் சல்தி நகரமதில்
விட்டு வருவோமென்றால் வேந்தன் துரியோதனனும்
சட்டெனவே சென்றிடுவான் தன்னுடைய நகரத்திற்கே
மட்டித் தனமதுவே வாகா யரசனிடம்
கெட்டியாய் நாம்நின்று கேட்போம் சமாசாரம்
பனிரெண் டொருவருடம் பாங்கான செய்திகளை
தனித்திருக்கும் மன்னனிடம் சாற்றி யவனிடத்தில்
இன்னுஞ் சிலசேதி எடுத்தோதிப் பூராவும்
மன்ன னுடைய மனதை யறிந்திடுவோம்
செல்லும் பசுக்களைத் தீண்டா தொருவருமே
நல்லசரச் கூடாரம் நயமாக ஏற்படுத்தி
அனுப்புவோ மென்று அரசன்மிக யோசித்து
தனுசை வளைத்துமவன் சல்திகணை யைத்தொடுத்து
சங்கோப சங்கமதாய்த் தனஞ்செயன்விட் டுப்பகழி
அங்கேபோய்ச் சென்று அன்பாய்ச் சரக்கூடு
பசுக்களை யுள்ளிருத்தி பாங்காக வேகணையும்
பசுக்களை வேறொருவர் பார்க்கமுடி யாதபடி
அண்டமுக டுவரைக்கும் அம்பினால் கூடாரங்
கண்டவர்கள் கலங்க காண்டீபன் செய்தனனே
மேவலர்கள் கண்டு மேன்மைய தாய்ப்புகழ
கோவலர்க ளப்போது கொண்டாட்ட முண்டாகி
இன்றுமே நம்மரசன் ஏமாந் திராதபடி
நன்றான யுத்தம் நமதுமன் னன்புரிந்து
மேவுலகோர் கொண்டாடும் மேன்மை யானகோவை
சாவுகளில் லாதபடி தான்காத்தான் பாலகனும்
என்று மவர்மொழிந்து ஏக நகர்தனக்கு
நன்றாகக் கோவுடனே நாடிவந்தார் கோவலர்கள்

வருகிற பசுக்கூட்டத்தைப் பார்த்து
ஆசாரிகள் யோசனை செய்தல்

அப்போ துரோணர் ஆனயோ சனைபுரிந்து
செப்புவார் பீஷ்மரிடம் தெளிந்த மிகப்பெரியோர்
அர்ச்சுனனும் வந்திங்கு அம்பால் நமைமயக்கி
கர்ச்சனைகள் செய்து கனவிசயன் வேகமதாய்
அரசன்போன சங்கதியை அறிந்து விசயனுமே
சரசரெனத் தேர்நடத்தி சர்ப்பக்கொடி யோனிடத்தில்
சென்று மவனையுந் தீட்டிக் கணையாலே
கொன்று வெகுபேரை கொண்டுபோன கோவுகளை
மடக்கி விசயனும் மனமகிழ்ந்து கூடாரம்
திடத்துட னேயிட்டுச் செல்லவிட் டானகர்க்கும்
என்ன பிரயோசனம் இங்குநா மிருந்ததற்கு
மன்னவரே விசயன் மடையனம் ராசனையும்
அம்பு தொடுத்துமவன் அநேககோ டிவரைக்கும்
வெம்ப விடுவான் வேந்தனுக் கென்னபாடோ
அரசனிடஞ் செல்வோம் அனைவோரும் வாருமென்று
திரமா யுரைத்துமவர் திருப்பினர் சேனையையும்
தேரிலே றிநடத்தி திரிய னிடமவர்கள்
கோரியே வாரார்கள் கும்பலாய் யாவர்களும்

விசயன் துரியோதனனிடங் கேட்பது

தனக்கிசைந்த சாரதியைத் தானழைத்து மேவிசயன்
உனக்கெதிர் நிற்கின்றான் உலகையா ளுமரசன்
அவனிடத் தில்ரதத்தை அப்பனே விடுமெனவும்
தவறாது நடத்தினன் தன்னெசமான் சொற்படிக்கு
அங்கிருக் கும்படையை அரசன் சுதன்கழித்து
சிங்கார மாய்ரதத்தைச் சிறுவன் நிறுத்தினனே

அர்ச்சுனனுங் கண்டான் அரவக் கொடியோனை
கெர்ச்சனையில் லாமல் கீழே குனிந்துமவன்
வாடியே சோர்ந்து மயங்கிநிற் குஞ்சமயம்
நாடி விசயனுமே நயமாகக் கேட்பானே
அண்ணு மறைவாக ஆகுமோ எந்தன்மேல்
இன்னம் வருத்தமுண்டா ஏனண்ணு தூக்கமா
என்று மவன்கேட்டு இதமாக வில்லதனில்
ரெண்டு கணைதொடுத்து நிமிசந்தே ரையுடைக்க
சாரதியுஞ் சாக தன்குதிரை யுமிழந்து
பாரதிலே நின்முன் பார்த்தனுந் தான்பார்க்க
கண்டான் விசயன் கனகோப முங்கொண்டு
சண்டாளன் றன்னிடத்தில் சாற்றுவான் சங்கதியும்
அண்ணு வுனைவிட் டகலா திருக்கின்ற
மன்னன் சகுனி மாமனெங் கேயரசே
சமர்த்து களுமெங்கே சண்டாளா என்னிடத்தில்
சமர்த்துகள் பூராவும் தான்காட்டு இச்சமயம்
வந்தாயே இங்கேநீ மகாபடைகள் தன்னுடனே
சொந்தமா னகுருவுஞ் சொல்லு மவர்களெங்கே
கர்ணனு மெங்கேயண்ணு கனம்பூண்ட தம்பியெங்கே
விற்பிடித்த மன்னர் வெகுகோடி பேர்களெங்கே
சிங்கார மானதொரு செய்தியை நீயுரைத்து
எங்களைக் கூட்டிவந்து இருந்து சூதாடிடவே
மாமனை யேசண்டாய் வைத்தாய்ப் பிரபலமாய்
நேமமனே சூதாடி நீணிலம் பூராவும்
தோற்வை யடையும்படி துடிமாமன் செய்தபின்னே
தேர்வேந்தே நீசபையில் செப்பினை யெங்களுக்கும்
மங்களமா யீராற் வருடங்காட் டிலிருந்து
தங்கி யீராற்மாதம் தக்கபடி யக்ஞாதம்

உந்த னுரைப்படிக்கும் ஒளிந்திருந்து நாங்களுமே
இந்தவேளை யானும் இங்குவந்தே னண்ணுவே
வந்ததினு லுமக்கும் மனதில் கவலைரெம்ப
தந்திர காரப்பயலே சமர்த்தைநீ காட்டுமடா
கையிலே வில்லிலையா கடுங்கணையுந் தானிலையா
வெய்யிலிலே நிற்கின்ருய் வீரமெங்கே யுந்தனுக்குங்
கண்டாலே பெண்களுங் காவலனே யுந்தனையே
ரெண்டாக்குவார் காலால் நிச்சயங் காரியுமிவார்
அரசர்களும் நகைப்பார் அரவக் கொடியோனே
சிரமமிக வேண்டாம் தேர்வேந்தே யிப்போதே
உன்னையும் யான்வதைத்து உற்றவரையும் மடிப்பேன்
மன்னர் மதவீமன் வாக்குவிட் டிருக்கின்ருன்
மன்னர் சபைதனிலே மடிப்பேனுங் களையென்று
சொன்ன படியாலே சோருதே யெந்தனங்கம்
அதையுமெண் ணுதபடி அம்புதொடுப்பே னுகில்
கதைகள் புராணமதில் காட்டுதே சங்கதியும்
புறங்காட்டி யோடினவர் போரையே நாடாதார்
கரத்தில்வில் லில்லாதார் காளை சிறுவரொடும்
ரதமில்லா மன்னர்களும் நாவலர்பேர் பூண்டவரும்
இதமாக வந்தாலவர் எடுக்கொ ணுதுபடையும்
ஓதுதே புராணமதில் உற்றுப் பார்த்தபெரியோர்
சாதுக்க ளுரைக்கவுமே சகலமும் நான்கேட்டும்
தெரிந்ததி னுலே சீக்கிரத்தி லேயுனையும்
அரியாம லுன்சிரசை அரசனே யான்விடுத்தேன்
உனக்குப் பலமிலையா உன்கையில் வில்லிருக்க
எனக்குப் புறங்காட்டி ஏன்போராய் மன்னுநீ
ஆண்பிள்ளை நீயென்றும் அடங்கியே நீபோயி
வீண்பிள்ளை யானுயே வேந்தே யிதுமழகா

இன்னும் பலவிதமா யெடுத்துரைத் தேவிசயன்
மன்னனைத் தானே மனம்போலு மேபுகன்றான்

## துரோணர் கிருபர், கர்ணன் மற்ற யாவர்களும் துரியோதனனிடம் வருவது

இப்படிக் காகவுமே இங்கிருக்க விசயன்
செப்பவொண்ணுக் கருணன் தேர்ந்தவஸ்வத் தாமாவும்
பெரியோர்கள் யாவரும் பேசியே யொன்றாக
அறியவே தேரேறி அவர்கள் நடத்தியுமே
ஆசையொடு வந்தவர்கள் அரசனைத் தான்பார்த்து
பாசமாய்ச் சென்றுமவர் பாரரசன் றன்னிடத்தில்
வந்துமே நின்றவர்கள் வழங்கினார்கள் சிலதை
நொந்துமே நின்றமன்னன் நோக்கியவ ரைக்கண்டும்
சஞ்சலத்தைப் போக்கி தைரியங் கொண்டவனும்
வஞ்சகத்தை மனதில் வைத்தான் துரியோதனன்

## கர்ணனுக்கும் அர்ச்சுனனுக்கும் யுத்தம்

அங்கதேச மதனை ஆண்டு வருங்கருணன்
சிங்கம்போற் சீறி தேரை நடத்தியவன்
அவசரமா யவனும் அந்த விசயனிடம்
தவராது வந்தும் சாற்றுவான் சங்கதியை
இன்றுமே யுந்தனை எந்தனுட் கணையால்
கொன்றுமே யுந்தனையும் குடிவைப்பேன் தென்திசையில்
இன்னும் பலவாறாய் எடுத்தோத வேகருணன்
மன்ன னருச்சுனனும் மகாகோபந் தன்னுடனே
தன்னுடைய சாரதிக்கு சங்கதியை யுரைத்து
மன்னனு மச்சமயம் மகிழ்ந்துகாண் டீபமதை
எடுத்து வளைத்துமவன் எண்ணியோ ரைந்துகணை
தொடுத்துக் கணைதனக்கு சொல்லி யுபதேசம்

இழுத்துமே காதுவரை ஏகவிட்டான் கர்ணனிடம்
கழுத்துதனை வெட்டுதற்கு கணைகள் வருவதையும்
அங்கதே சாதிபன் அறிந்துமே சங்கதியை
சிங்கம் போற்சீறி சிலகணை விட்டறுத்தான்
அந்தகன் பிள்ளைகள் அனைவரும் பூராவும்
இந்தக்கருணனொடு எல்லவரு மேசேர்ந்து
விசயன்மே லப்போது வெகுகணை தூண்டிவிட
விசயனுங் கண்டுமே விட்டறுத்தான் பூராவும்.
அப்பாற் சிலகணையை அருச்சுன னுந்தொடுத்து
தப்பர்கள் மேலே சாடிவிடக் கணையும்
வந்து யெதிரிகளை வகையுட னேபாய
நொந்து மவர்களுமே நொருங்கிய தேருடனே
விழுந்து மடியவே வெகுசனங்க ளோட
கழுந்துபோல் நின்ருனே கசடன் துச் சாதனனும்
அண்ணனுக் குதவியாய் அனேகம்பே ரங்குவர
மன்னன் விசயன் மாட்டியே யோடவைத்தும்
அப்போ விசயன் ஆயிரங் கணைதொடுத்து
தப்பாது சேனைகள்மேல் சாடிட விட்டனனே
அதிவேக மாகவே அக்கணைகள் வந்துந்
ததியே மடித்ததே சங்கமான பெயரை
ஐயையோ வென்றும் அலறி மயங்கியவர்
கைகா லுதறிச்சிலர் கயிலாயம் போயடைய
அம்புகள் பட்டுமேலே அவர்களுந் தட்டுக்கெட்டு
வம்பு விளைத்தானே மாபாவி யுந்துரியன்
இன்றுமே யிங்கு எல்லோரை யும்விசயன்
கொன்றிடு வானே குறிப்பிது தப்பாது
என்று மவர்கள்பேசி எகினு ரோர்புறத்தில்
நின்றிருந்த கர்ண னுமே நேராகக் கண்டவரை

அந்தக் கருணனுமே அதிகக்கோ பமுடனே
வந்துமே நின்றும் வாகான வில்வளைத்து
ஐந்து கணையெடுத்து அருச்சுனன்மே லேவவுமே
மெத்தக்கோ பமுடனே வேந்தன் கணைவருக
சித்த மொடுவிசயன் சிலையைக் கையிலெடுத்து
நல்லகணை யையெடுத்து நாணி யதிற்பூட்டி
சல்லாப மாகவுமே தான்விடுத் தானுமங்கே
அதிவேக மாகவுமே அக்கணைகள் வந்திடவே
ததியேயெதி ரிகணையைச் சட்டென வறுத்ததுவே
கண்ணுரெண் டும்புகையக் கர்ணனு மச்சமயம்
விண்ணுள்ளோர் தானஞ்ச விட்டான் கணைகளெட்டும்
வடவாமு காக்கினியை வாரிக்கொண் டேயதுவும்
திடவான் விசயன்மேல் சீக்கிர மாய்வருக
காண்டா வனதகனன் கண்டுமே யக்கணையை
நீண்டகாண் டீபந்தன்னை நிருபனுங் கைப்பிடித்து
எட்டுக் கணைதனையே எண்ணி யவன்விட்டு
தட்டென வேயறுத்தான் சண்டாளன் தன்கணையு
அந்தக் கணைபோன தறிந்து விசயனுமே
சந்தோஷ மாகவுமே தான்விடுத்தா னேபகழி
வில்லி லிருந்து விடுபட்டு மேபாணம்
துள்ளிக்கொண் டேயதுவுஞ் சுடராய் வருவதையே
கண்டுமே தேவர்கள் கண்கலங்கி யப்பாலும்
சென்றார்கள் விண்ணுலகம் சீக்கிரத்தி லேயவர்கள்
வடவாமு காக்கினிபோல் வாரி இரைத்தகணை
படபடென வந்துமது பார்மன்னன் கர்ணனிடம்
ரதத்தை யுடைத்தும் நல்ல புரவிகளுங்
கதறியே சத்தமிட்டு காலன்பதிசேர
அங்கதே சமதையே ஆண்ட கொடையாளிக்கும்

சங்கம் வரைதுளையே சரீரத்தி லுண்டாக
கண்டு வருச்சுனனுங் காண்டீபந் தனில்விரைவாய்
ரெண்டு கணைதொடுத்து நிமிடங் கருணனிட
கைவில்லை யும்முறித்து கலங்கிநிற் குஞ்சமயம்
மெய்யாய் விசயனுமே மீண்டுங்காண் டீபமதில்
தொடுத்துக் கணைதனையுஞ் சொல்லி யுபதேசம்
விடுத்தான் படைகள்மேல் வேகமாய்க் கணைவந்தும்
ஆனையோ கோடி அசுவங்கள் கோடிவரை
சேனைகள் வெகுபெயரை சீக்கிரங் கணைபாய்ந்தும்
காலற்று வீழ்ந்தவர்கள் கதறியே வாய்விட்டு
காலன் பதிசேர்ந்தார் கடவுளே தஞ்சமென்று
மிச்சமுள்ள படைகள் வேகம தாயோடி
அச்சமாய் மலைகளுக்குள் அவர்மறைந்தார் சஞ்சலமாய்
கெந்திருவர் கண்டும் கிரீடியை யேபுகழ
அந்தர துந்துமிகள் அச்சமயம் தான்முழங்க
சந்தோஷங் கொண்டாடித் தானிருக்கத் தேவர்களும்
அந்தவே ளைகருணன் அடியினுல் நொந்துமிக
சஞ்சலத்தைக் கொண்டு தலைகுனிந் தபடியே
வெஞ்சின மோங்கியுமே வேந்தனங்கு நிற்கையிலே

## விசயன் கர்ணனைக் கேட்பது

அங்கதே சமதனை ஆண்டு வருங்கருணா
சிங்கம்போல் வந்தாயே சிலையுமே கைக்கொண்டு
உன்திறத்தை என்னிடத்தில் ஒகோகாட் டாதபடி
மன்னர் சபையிலே வாக்குரைத்தாய் என்றனையும்
வென்றிடுவே னென்று வீரமும் பேசிநீ
அன்று வுரைத்தாயே அதுபோலுஞ் செய்யவில்லை
பாஞ்சாலன் வேணதவம் பண்ணியே தான்பயின்ற

பாஞ்சாலி மையிழுத்துப் பாரரசர் மாசபையில்
தவருன வார்த்தைகள் தான்மொழிந்து நீங்களுமே
பவரே யடைந்தீரே பாதகா நீதானும்
வீரியங்க ளைப்பேசி வேகமா யோடிவந்தும்
மீறிக் கணைதனையே வேந்தனே நீதொடுப்பாய்
ஒருகணை பட்டாலும் ஓடிஒளிந்துமே நீ
மறுகணைக்கு நிற்பதில்லை மன்னவனே யுன்வழக்கம்
உன்னைக்கொடை யாளியென் றுலகத்தா ரும்புகழ
உன்னைப் போலோடுவனு மூலகினிலே கண்டதில்லை
அந்தநா ளெங்களையும் அவமதிப் பாய்ப்பேசி
சந்தோஷங் கொண்டுநீங்கள் ததியிருக் குஞ்சமயம்
அண்ணன் மதவீமன் ஆங்காரக் கோபங்கொண்டு
திண்ணமாய்ச் சபைதனிலுஞ் செப்பினு ரேசபதம்
நூத்தி யொருவரையும் நோக்கிவதைக்கும் வரையில்
சாத்தியே தண்டத்தை தான்கிளம் புந்துளியை
தாகம் புசிப்பேனென்று சபைதனி லேயவரும்
வேகம தாகவுமே விளம்பியிருக் கார்வேந்தன்
அந்த வுரைப்படியே அவருமே தப்பாது
சிந்தைமகிழ்ந் தேவதைப்பார் சீக்கிரத்திற் பாவிகளை
அப்போது நானெழுந்து ஆன பெருஞ்சபையில்
தப்பாது வுந்தனையுந் தறிப்பேன் முடியையென்று
அந்தச் சபைதனிலே ஆனழகா நீகேட்டும்
இந்தவேளை வந்துநீ என்னிடத்தில் சிக்கினுய்
இந்தப்பூமி யிலுனையும் இடுவேன் சமாதாக
சொந்தமாய்ப் பூமிதனை துயரமில் லாதாளும்
இப்போ தொடுக்கிறேன் இந்துமு காஸ்திரத்தை
தப்பிக்கொள் ளுன்சிரத்தை தப்பில்லை யென்பேரில்
என்று விசயனுமே எடுத்துரைத்த வச்சமயம்

நன்ருய்க் கருணன்கேட்டு நடுங்கி யுடல்பதறி
மனது திடங்கொண்டு மறுரதத்தில் தானேறி
கனவுகண் டவன்போல கைதனிலே விற்பூண்டு
நேசமாய்ப் பாகனுக்கும் நிகழ்த்தியே சங்கதியை
பாசமொடு வந்தான் பார்த்தனைச் செயிப்பதற்கு
அர்ச்சுனு வோடாதே அரிவேன் சிரமதனை
கொர்ச்சனையைப் பார்ப்பேனென்று கிட்டியே ரதமோடு
என்னை யிழிவாக இயம்பினதோர் பாதகனே
உன்னைச் சணமதிலே ஒழித்திடுவேன் தப்பாது
பாரடா வுன்சமர்த்தை பார்த்தீபா வெந்தனுக்கு
கூறடா பதில்வார்த்தை கொல்லுவேன் சொல்லாவிடில்
இருள்படர்ந்த காட்டில் இருந்து படவா நீ
சருகிலை புசித்தாய் சமர்த்து முனக்குண்டா
இப்பவிடுங் கணைக்கு ஏகிடக் காலன்பதிக்கே
தப்பாம லோட்டுவேன் சணத்திலே யுந்தனையும்
அண்ணன்தம்பி யைப்பிரிந்து அன்பான பெண்டைவிட்டு
மன்னனே யிங்குவந்தாய் மரண மடைவதற்கு
அங்கதே சாதிபனும் அவனிடத்தி லேமொழிந்து
சிங்கம்போற் சீறி சிலைதனைக் கைப்பிடித்தும்
மேவலர்கள் கொண்டாடும் மேன்மையா னகணையை
பூவரசன் தொடுத்து பூசையதற் குச்செய்தும்
நல்லவே ளையதனில் நரன்பேரி லேவிடவும்
அண்டம் வெடிக்க அங்கிருக்கும் தேவர்களும்
பிண்டங் கலங்கிடவும் பேதலித்தார் பின்னுலும்
அதிவேக மாகவுமே அக்கணை வருவதையும்
ததியே விசயன் தான்பார்த்துச் சீக்கிரத்தில்
தன்னுடைய காண்டீபந் தன்னி லொருகணையை
மன்னன் தொடுத்து மகிழ்ந்துமே பூசைசெய்து

வந்த கணைமேலே வம்மனும் விட்டிடவே
அந்தவேளை வந்து அதமாக வக்கணையை
கொடையாளி தன்கணையும் கூர்மை யதுமழுங்கி
தடையில்லா தபடிக்கு தான்போக ரெண்டாக
பாண்டுமைன் னன்சுதனும் பார்த்து அதிசயித்து
ஏண்டாவிந்தக் கர்ணனுடன் இத்தனை போராட்டம்
என்று விசயனுமே எண்ணி யகத்தினிலே
நன்ருக வில்லையந்த நாழி யெதிர்நிறுத்தி
பிர்மாஸ் திரமதனை பிரியமா கத்தொடுத்து
கர்ணன்மே லேவினனே கணையுமே யந்நேரம்
அதிவேக மாகவரும் அக்கணையைக் கண்டவர்கள்
பதியை யிழந்துமவர் பரமன் பதிசேர்வார்
அப்படிக்கு ரோசமொடு அக்கணை வேகமதாய்
தப்பாது கருணனிடம் தான்வந்து சீக்கிரத்தில்
சாரதி குதிரைகளை சல்தி தலையறுத்தும்
சேரக் கருணனையும் செய்தது துளையாக
நெற்றிப்பட்ட மறுத்து நேராக வேதுளைக்க
நெற்றியிற் பட்டவுடன் நெறிகலங்கி யேகருணன்
தலைவிரித்த படியே தானோடி யேயவனும்
நிலைகலங்கி யேமன்னன் நீங்கினு னவிடம்விட்டு
கண்டு வஸ்வத்தாமன் கருண னிடந்தனிலே
ரெண்டு யெட்டில்வந்து நிகழ்த்துவான் சங்கதியும்
அங்கதேச மதையே ஆண்டவரே மன்னு
இங்கேயேன் ஓடுகிருய் எதிர்த்துப்போ ராடாமல்
ஐயா நீ சொன்னதொரு அருமையான வார்த்தைகளை
மெய்யா யெண்ணியிருந்தேன் வீணு யிப்போது
அர்ச்சுனனென் றென்னையெண்ணி அரசே நீ யோடாதே
அர்ச்சுன னல்லகாண் அஸ்வத்தா மன்யானே

அவனை மடிப்பேனென்று அறைந்துமே யென்னிடத்தில்
அவனைவிட்டு வோடலாமா அரசே யிது நீதியோ
வீரமெல்லாம் விட்டு வேந்தே யவன்தனையும்
பாராம லோடுவது பாரர சேதகுமா
விசயனை வதைத்தாயா வேந்தனே யெந்தனிடம்
நிசமான சங்கதியை நிகழ்த்தவுங் கூடாதா
ஓடாதே நில்லுமையா உனக்குமே யிப்போது
கேடாய்வந் தேவிசயன் கிட்டினு னேபாவம்
இன்னும் பலவிதமாய் இகழ்ந்துவஸ் வத்தாமன்
மன்னன் கருணனையே மானங்கெடப் பேசிடவும்
தலைகுனிந் தபடியே தானோடிக் கர்ணனும்
நிலையில்லாது சென்று நிருபனு மோரிடத்தில்
செத்த பிணம்மலையாய்ச் சேர்ந்திருக் குமிடத்தில்
அத்தருணம் ஓடிவந்து அவன்பயந் தொண்டினனே

உத்தரகுமாரன் கர்ணனைப் பார்த்து நகைப்பது

கர்ணனுமங் கோடுவதைக் கண்டுஉத்த ரகுமாரன்
தற்சமய மவனும் சந்தோஷ முண்டாகி
மெத்தப் பிரியமுடன் வேந்த னிரண்டுகையை
அத்ததி கொட்டியே அவன்சிரித்தா னேபெரிதாய்
பதமுடனே யங்கிருக்கும் பார்த்தனு மேகண்டு
அதட்டினான் சிறுவனையும் அண்ட மிடிபோல
கேட்டுச் சிறுவனும் கிலேசமது வுண்டாகி
வாட்டமது கொண்டு மைந்தன் பதறினனே
அப்போ விசயனும் அந்தப்பால கன்றனையே
தப்பாது தூக்கியவன் தன்மடி மீதுவைத்து
சிங்கார மாய்வசனம் செப்பிடப் பாலகனும்
பங்கமில் லாதபடி பார்த்தனை யவன்பணிய

அரசன்சுத னேகேளும் அந்தக் கருணனுமே
திரவானே யுத்தமதில் சென்றதையே நீபார்த்து
அறியா மதியதினல் அரசனே நீபலமாய்
சிரித்தாயே பாலகனே தெரிந்தால் பெரியோர்க்கும்
அதிகக்கோ பமுடனே அவர்களும் விற்பூண்டு
ததியே கணைபூட்டி சங்கரிப்பார் தப்பாது
அவர்கள் வரலாற்றை அந்தச் சிறுவனுக்கும்
தவரா துரைத்தானே தக்கவிச யன்றானும்
மச்சநா டன்கேட்டு மனமு மிகமகிழ்ந்து
இச்சையாய் ரதம்நடத்த எண்ணியப் பச்சிறுவன்
நல்லபரி கள்தன்னை நாட்டிச் சவுக்கதினல்
சல்லாப மாய்நடத்த ததிரதத்தைப் பார்த்தாலே
மண் ணும் கலங்கிடுமே மலேகுகை களுமதிர
விண் ணும் மயங்கிடவே வேகமாய் நடத்தியவன்
வருகும்வே கமதனை வல்லதுரோ ணர்கண்டு
கருவ மவர்கொண்டு காட்டியே சர்ரதிக்கு
சல்திரதத் தைநடத்த சாற்றவச் சாரதிக்கும்
சொல்வாய் மூடுமுன்னே தாண்டி யசுவமதை
பார்த்தனுக்கு முன்னே பாகனுங் கொண்டுவந்து
நேர்த்தியா கநிறுத்தி நிமிஷங் களேயாற

அருச்சுனனுக்கும் துரோணருக்கும் யுத்தம்

அப்போ துரோணர் அருச்சுன னைப்பார்த்து
செப்புகி ருரவரும் தீரவித் தையுடையோர்
சிங்கார மானதொரு சிலேவிசையா எங்களேயும்
இங்கே நிறுத்திவிட்டு எங்குபோ ராய்நீயும்
ஒதுங்கிநீ சென்ருலும் உன்னைவிடப் போரதில்லை
பதுங்கிநீ யேன்போராய் பார்த்தனே யிதுசரியோ

இன்னும் பலவிதமே இயம்பி விசயனிடம்
மன்னன்மயங் கும்படியாய் மறையோர் சிலைவளைக்க
பாண்டர சன்சுதனும் பார்த்துயிச் செய்திகளை
நீண்டதே ரைவிட்டு நிமிஷத்தில் கீழிறங்கி
தன்முடியைப் பூமிதனில் சாய்த்துமே காண்டீபன்
பின்னமில் லாதபடி பெரியோரை யேபணிந்து
அந்தணர் குலமணியே அடிமையான் தங்களுக்கு
எந்தனுடு போர்புரிய இதுவும் தருமமா
ஐயனே தங்க ளருளா லடவிசென்று
மெய்யனே யோராண்டு விருந்துநாங் கள்கழித்து
ஒருவருட மக்ஞாதம் ஒற்றுமை யாயிருந்து
வருதிப் படியேநான் வந்தேனே யிவ்விடமும்
தர்ம நெறிதனையே தானறிந்த புண்ணியனே
தர்மமா யெங்களுக்கு தடைதனைத் தீர்த்துவிடு
குறைகளைத் தீர்த்து கூட்டிவை யாதபடி
விரைவாகப் போர்க்குவந்தீர் வேந்தே யிதுசரியா
என்னவித் தைதெரியும் எந்தனுக்கு மென்குருவே
என்னுட னெதிர்த்திடவும் ஏற்குமோ தங்களுக்கு
குருவோ டெதிர்த்தவர்க்கும் கொலைகளவு செய்தவர்க்கும்
அருநரக மென்றுமே அறையுதே சாஸ்திரங்கள்
இன்னும் பலவிதமே எடுத்துரைத் தேவிசயன்
மன்னன் பணிந்தானே மறையோர் திசைநோக்கி
அறைந்த மொழிதனையே ஆசாரி யுங்கேட்டு
விரைவாகச் சீடனுக்கும் விளம்புவார் வாய்திறந்து
அரவக்கொடி யோனன்னம் அள்ளியுண்டே னுகையினல்
திரமான யுத்தமது செய்யவேணு மித்தருணம்
அப்படிச்செய் யாவிடிலோ அனேகமான பாவமது
தப்பாதென் னிடத்திலுமே தான்சேரு மேவிசயா

இன்னும் பலவிதமே இயம்பியே சீடனுக்கு
மன்னனும் பார்த்திடவே மறையோரும் வில்வளைத்து
சொல்லிமுடி யாதகணை தொடுத்துச் சிலையதனில்
அள்ளிப் பொழிந்தார் அண்டாத கோபமுடன்
கணைகள் வரும்விதத்தைக் கண்டுமே தேவர்களும்
வினைவந்து சூழ்ந்து விசயனிடஞ் செல்கிறதே
ஐயோ குருவுமே அனியாய மானகணை
எய்துவிட்டா ரென்றேங்கி யிருந்தா ரவர்களுமே
அண்ட மிடிந்திடவே அக்கணை வருவதையே
கண்டோர் பயந்து காதவழி சென்றனரே
அங்கே விசயனும் அன்பாய்க் குருவிடத்தில்
சிங்கார மானதொரு செய்தி யுரைக்கலுற்றான்
இத்தனை யான்மொழிந்தும் ஏற்றுக்கொள் ளாதபடி
மெத்தவேக மாக விட்டீரென் மேற்கணையை
என்மேலுந் தோசமில்லை இங்கு கணைதொடுப்பேன்
மன்னவரே சிரத்தை மறைவாக வையுமென்று
வனத்தைக் கொளுத்தியவன் வாங்கினதோ ரம்புதனை
நினைவாகத் தானெடுத்து நீண்டகாண் டீபமதில்
தொடுத்துக் கணைதனக்கும் சொல்லி யுபதேசம்
விடுத்தானே யந்த வேகமாய் வருங்கணைமேல்
சிலையைவிட் டேகணையுஞ் சீக்கிரம தாயங்குங்
கொலைசெய்ய வந்த கொடுமை யானகணையை
சட்டெனவே வந்து தான்பாய்ந் ததுமேலும்
வெட்டி யெறிந்து வீரசொர்க்கஞ் சேர்த்ததுவே
அந்தரந் தனில்வசிக்கும் ஆனதொரு தேவர்கள்
விந்தை யிதுவென்று விசயனை யேபுகழ்ந்தார்
அங்கு துரோணர் அள்ளிக் கணைபொழிந்தார்
சங்கமதாய் விட்டான் சல்தியாக வேவிசயன்

இருவர்கள் பாணங்களும் ஏகயிடிபோல
நெருநெருத்துப் போகும் நேர்மையுள்ள கணைகளுமே
திறயுத்தஞ் செய்வதற்கு செவ்வையாயம் பைத்தொடுத்து
இரண்டு சாமநேர மிருவருக்கும் போராட்டம்
அருச்சுனனு மப்போதான் அடங்காக் கணைதொடுத்து
திருத்தமா யெய்துவிட்டான் செயிக்கப் படைதனையே
வில்லி லிருந்தே வெளிப்பட்டு மப்பகழி
சல்லித்தனம் செய்ய தைரியங் கொண்டுவந்து
சேனைகளின் மேலே திடீரெனவே பாய்ந்து
ஆனையொடு தளத்தை அனேகங்கோடி மடிக்க
பாளையங்க ளெல்லாம் பறந்துமே தட்டுக்கெட்டு
வேளை மடிந்தார்கள் வேணகோடி சனங்களுமே
அலையுதே படைகளும் ஆதரவில் லாதிருக்க
குலையுஞ் சனத்தை குருக்களு மேகண்டு
ரதத்தை நடத்தி நல்ல படைதனையும்
இதமா யருகழைத்து இயம்பியே தைரியத்தை
எல்லவரைச் சேர்த்து ஏகி விசயனிடஞ்
சல்லாப மாய்வந்து தனுசை மிகவளைத்து
தொடுத்துக்கூர் மைக்கணையை சொல்லி யுபதேசம்
விடுத்தாரே யந்த விசயனிடந் தப்பாமல்
அதிவேக மாகவே அக்கணை வருவதையுந்
ததியே விசயனும் தான்கண்டு சீக்கிரத்தில்
காண்டீபந் தன்னில் கணையெட்டை யுந்தொடுத்து
தூண்டியே விட்டானே துரோண ரிடந்தனிலே
வந்தகணை யெல்லாம் வாள்விசயன் றன்கணையுஞ்
சிந்தைநோ கும்படியாய்ச் செய்திட வன்னேரம்
விந்தைகளை யெல்லாம் விசயனு மேபார்த்து
சந்தோஷ மாக தன்னிட சிலையதனில்

குருக்களுக் கென்றுமவன் கூர்மையுள்ள பாணமதை
திருத்தமாய்ப் பூட்டி தீட்டினான் துரோணரும்மேல்
வந்து மதிவேகமாய் மாமறை யோர்தனையுஞ்
சிந்தைநோ கும்படியாய் சீக்கிரத்தி லேமார்பில்
சல்லடைக் கண்போல தான்துளைக்க வேயவரும்
சொல்லாம லோடினார் சோம்பியவ ரப்பாலே
அதிவேக மாயோட அறிந்துவஸ்வத் தாமாவும்
விதியிது தானென்று வெகுகோபத் தைக்கொண்டு

அருச்சுனனுக்கும் அஸ்வத்தாமனுக்கும் யுத்தம்

தந்தையை விரட்டினதோர் சண்டாள னர்ச்சுனனை
இந்தவேளை யவனை ஏமபுரி சேர்த்திடுவேன்
என்று மவன்கூறி எடுத்துமே வில்லதனை
நின்று தொடுத்தானே நேர்மையுள்ள வக்கணையை
வில்லி லிருந்து விடுபட வக்கணையுஞ்
சொல்லி முடியாதே சோதிமய மாகவுமே
கண்டவர்கள் நடுங்க கனகோப மாய்வரவும்
அண்டர்க ளிதைப்பார்த்து அப்பாலே சென்றார்கள்
அங்கு வருங்கணையை அருச்சுன னுங்கண்டு
சிங்கம்போல் சீறி சிலையைக் கரம்பிடித்து
தொடுத்துக் கணையை சொல்லியே விஞ்சைதனை
விடுத்தானே யங்கு வெகுகோபந் தன்னுடனே
பகைவர் கணைதனையே பார்த்து விசயனம்பு
வகையாகச் சென்றங்கே வதைத்தது பூராவும்
இருவர்கள் வெகுநேரம் இப்படிப் போரதனை
கெருவமாய்ச் செய்தார்கள் கிரீடியு மப்போதான்
ஆயுதங்க ளெல்லாம் அள்ளியஸ் வத்தாமன்
பாயுங் கணைகளை பாவிவில் விற்றொடுத்து

விட்டான் விசயன்மேல் வேகமா கக்கணையும்
சட்டெனப் புறப்பட்டதே தணலாய் எரித்துக்கொண்டு
வருகிறதைக் கண்டு வாய்வு சுதன் தம்பி
திருநீல கண்டனைச் சிந்தையில் யெண்ணியேதான்
காண்டாவனத் தையெரித்த கணையை யவனெடுத்து
நீண்டகாண் டீபமதில் நிமிச மதைப்பூட்டி
எந்த னிடத்திலே இங்கு வருங்கணையை
சந்தோஷ மாய்ச்சென்று தானழித்து வாவெனவே
இன்னும் பலவிதமும் இயம்பிக் கணைதனையும்
மன்னன் விடுத்தானே வருங்கணை தன்மேலே
அதிவேக மாகவே அக்கணை புறப்பட்டு
ததியேவந் தகணையைச் சட்டென வெட்டியதே
கண்டுவஸ் வத்தாமன் கணைகள்வீ ணானதையே
ரெண்டு கணையெடுத்து நிமிசம்வில் விற்பூட்டி
விசயனுட சாரதிக்கு வேண்டிக் குறிப்புவைத்து
பிசகாது கொன்று பிரியமாய் வாவெனவும்
உரைத்துக் கணைக்கும் ஓங்கிய கோபமுடன்
விரைவாக விட்டான் வேகமொடு கணைதனையும்
சத்தா சமுத்திரமும் தானஞ்ச வத்தருணம்
மெத்தக்கோப மாய்வரவே விசயனுங் கண்டதையும்
நல்லகணை யாய்ப்பூட்டி நாளியங் கேவிடுத்து
சொல்லிவாய் மூடுமுன்னே துண்டித்தா னக்கணையை
அஸ்வத்தா மன்கண்டும் அதிகக்கோப முண்டாகி
அஸ்திரங்கள் பூராவும் அள்ளி விடுத்தானே
அவனிடத்தி லேயிருந்த அஸ்திரங்கள் யாவுமே
தவறாது விசயனையுஞ் சங்கரிக்க வேவருக
பார்த்து விசயனும் பாரக்காண் டீபமதில்
வேர்த்து வேணபகழி வேண்டித் தொடுத்துவிட்டான்

கண்டவர்க ளஞ்ச கடுங்கோபந் தன்னுடனே
ரெண்டு நிமிடமதில் நேராக வந்தங்கு
இரண்டு கணைகளும் ஏகம தாய்ப்பொருதி
புரண்டுமே பூமியிலும் புண்ணியன் விசயன்கணை
எதிரி கணைதனையே எல்லாங் கருவறுத்து
பதறிப் பகழியும் பார்த்தனிடஞ் சேர்ந்ததுவே
மன்னனஸ்வத் தாமனிடம் மறுவா யுதமுமில்லை
பின்ன மடைந்துமவன் பேசாது நின்றனனே
அருச்சுனன் தனக்கே அக்கினிதே வன்கொடுத்த
பொருத்தமான தனுசும் போக்கத்தி ராக்கணையும்
குறையவில்லை யேபாணங் கொடும்போரி லச்சமயம்
தரைதனையே பார்த்திருந்தான் தனுவே தியன்சுதனும்
விசயனு மேபார்த்து விந்தை யிதுவென்றும்
பிசகாத சாரதிக்கு பிரிய முடன்புகல்வான்
மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாளும் புண்ணியன் சுதாகேளும்
இத்தறி போர்தொடுத்து இங்குநிற்கும் பரித்தாமன்
சுத்தவீரன் காணும் துடியான போர்தனிலும்
சித்தமொடு வாயுதத்தை சிலவாக்கிப் பூராவும்
மெத்த மயங்கியவன் மேனி கருகினன்
சங்கதி தன்னையுமே தானறிந் தேகிருபர்
சிங்கம்போல் நம்மிடத்தில் சிலைகொண் டவர்வாரார்
என்று வருச்சுனனும் இயம்பிச் சிறுவனுக்கும்
நன்றாய்த் தனுசை நாட்டி யிருந்தனனே

கிருபாசாரிக்கும் அருச்சுனனுக்கும் யுத்தம்

அப்போ கிருபாசாரி அறிந்துமே சங்கதியை
இப்ப மருகனும் ஏகாங்கி யானனே

என்று நினைந்தவரும் ஏகக்கோபந் தன்னுடனே
நன்றாய் ரதமேறி நறுநறெனப் பற்கடித்து
வந்தாரே கோபமொடு வாள்விசயன் முன்பாக
வந்தவரைக் கண்டும் வழுத்தியே சாரதிக்கும்
அந்தவேளை தனுசில் ஆயிரங் கணைதொடுத்து
விந்தை யொடுவிடவே வேகம தாய்க்கணையும்
கிறுகிறென வரவே கிருப ரதைப்பார்த்து
வருகும் பகழிதனை மடித்திட வேநினைந்தும்
தன்னுடைய வில்லதனில் சல்தி கணைபூட்டி
மன்னன்விச யன்கணையை மடித்தாரே சீக்கிரத்தில்
இருவர்கள் சண்டைதனை எவரால் சொல்லமுடியும்
நெறுநெறுத்துப் போகுமப்பு நிற்கவிட மில்லாது
அரிகரப் பிர்மாதிகள் அமரதை யேகண்டும்
சரியான யுத்தமென்று தள்ளியப்பாற் சென்றார்கள்
அதிக நேரம்வரையில் அவர்களும் போர்புரிய
ததியே யருச்சுனன் தனுசிற் கணைதொடுத்து
அந்தக் கணைதனையும் அதிவேக மாய்விடுக்க
விந்தையாய் வந்து விசயன்கணை தப்பாமல்
கிருபருட தேரை கிளப்பி யுடைத்தெறிந்து
கிருபரையு மச்சமயம் கிறுகிறெனச் சுற்றியுமே
அவதி மிகப்படுத்தி அந்தக்கணை தப்பாது
சிவபக்தன் விசயனிடம் சேர்ந்ததுவே சீக்கிரத்தில்
கணையா லவதியுற்று களைத்துக்கிரு பாசாரி
வினையிதுதா னென்று வேதிய னச்சமயம்
தேருவொன் றில்லாமல் திகைத்துமே நிற்கையிலே
நேரிருந்தவஸ் வத்தாம னிதையறிந்து சீக்கிரத்தில்
அதிவேக மாய்வந்து அவனுடைய ரதத்தை
ததியே கொடுத்தான் தன்னுடைய மாமனுக்கு

ஏறியதி லாசாரி எடுத்துமே வில்லதனை
கோரித் தொடுத்துவிட்டார் கோடா கோடிகணையை
வருங்கணையைக் கண்டு வாள்விசய னச்சமயம்
விரும்பித் தொடுத்தான் வேண்டிய கணையதனை
ஆசாரி கணைதனையே அறுக்க விசயன்கணை
ஆசாரி மனஞ்சலித் தப்பாலே யோடினார்
விசயன் கணையாலே வேதியன் சேனைகளும்
அசந்து மடிபட்டு அப்பாலே யோடினர்கள்

வீஷ்மாசாரிக்கும் விசயனுக்கும் யுத்தம்

கங்கா சுதனுமே கண்டுமே சேனைகளை
சிங்கார மாயழைத்துச் செப்பித் தைரியத்தை
நாமெல்லோ ருஞ்சென்று நல்விசயன் றன்னிடத்தில்
நேமமுடன் போரை நின்று நடத்திடுவோம்
வாருமென்று படைக்கு வழுத்திக்கங் காசுதனும்
தேருகளை நடத்திச் சென்றார் விசயனிடம்
வில்லை வளைத்துவீஷ்மர் வெகுசத்தத் தைமுழக்கி
தொல்லை விளக்கவுந் துணிந்துநிற் குஞ்சமயம்
சத்தமதைக் கேட்டு சகுனிதுச் சாதனனும்
அத்ததி வந்தவர்கள் அவருட னேசேர்ந்தும்
கூடியே யொன்றாகக் கோடிபடை தன்னுடனே
நாடியே வில்வளைத்து நல்ல கணையாக
பூட்டிக் கணைதனையே புகழ்ந்துமே சங்கதியை
தீட்டிவிட் டாரவர்கள் சிலைவிசயன் றன்மேலே
வில்லி லிருந்துமே விடுபட்டு மேப்பகழி
சொல்லவொண் ணாக்கணையாய் சோதியுரு வம்பூண்டு
வருகிறதை விசயன் மலர்க்கண்ணி னாற்பார்த்து
வருத்தமடை யாதபடி வாகாய்க்காண் டீபமதில்

பத்துக் கணைபூட்டிப் பாதபூசை புரிந்து
அத்ததி யேவினன் அங்கு வருங்கணைமேல்
மாமன் சகுனியையும் மடையனுட சேனைதன்னை
சாமநாழிக் குள்ளே தக்கபடி மடித்து
பொய்யுரையுஞ் சூதும் புகட்டுஞ் சகுனிதனை
கைவில்லையு முறித்துக் காயமது செய்திடவும்
தன்னுயிரைக் கைக்கொண்டு சல்தியந்தப் பாதகனும்
பின்னாலே சென்றானே பேச்சுகளில் லாதபடி
பின்னால் விசயன் பெலமாய்க் கணைதொடுத்து
மன்னன்துச் சாதனனை மயங்கும்படி யாய்த்துளைக்க
அவனு மடிபட்டு அதிக விசனமுடன்
தவறுவந்த தென்று தானோடி னன்பாவி
இருவர்க ளோடுவதை இருந்த வீஷ்மர்கண்டு
அருகில் விசயனிடம் அவர்வந்து சீக்கிரத்தில்
வல்லநல் வில்லதனை வளைத்துக் கணைபூட்டி
தொல்லை விளைக்கவெண்ணி தூண்டிவிட்டா ரச்சமயம்
கண்டு வருச்சுனனுங் கணைமூன்றை யேதொடுத்து
ரெண்டாகச் செய்தானே நிமிடம்வந்த கணையை
துய்யவிச யன்கணையைத் தொடுத்து விடச்சல்தி
வையம்புகழ் வீஷ்மர் வடிவமதில் தைத்திடவும்
மெத்தக் காயமுடனே வேந்தன் மிகக்கலங்கி
அத்ததியி லோடினர் அனேகந்தூரம் வரையில்

அருச்சுனனோடு சயிந்தவன் யுத்தம்

சயிந்தவனுங் கண்டு தன்னுடைய சாரதிக்கு
பயின்றான் ரதமதனை பார்த்தனிடம் விடவும்
துரியோதனன் தம்பியர்கள் துடியாரவன் தன்னுடனே
விரிவா யவர்மொழிந்து விசய னிடஞ்சென்றும்

ஒக்கவே வில்வளைத்து ஒருகோடி தன்கணையை
மிக்கவேக மாகவே விசயன்மே லேவினரே
வருங்கணையைக் கண்டு வம்பாய்க் கிரீடியுமே
விரும்பியே வில்லதனில் வேண்டுங் கணைதொடுத்து
விடுத்தானே யங்கு வீரமொடு பாதகர்மேல்
விடுத்த கணையுமே வேந்த னுரைப்படிக்கு
வந்த கணைதனையே வாட்டி யிரண்டாக
நொந்திடவே வாட்டி நொடியில்வந்து சேர்ந்ததுவே
சங்கதி தன்னையே தானறிந்து மேவிசயன்
அங்கே தொடுத்துவிட்டான் ஆயிரம் பகழிதனை
அதிவேக மாகவுமே அக்கணைகள் தாம்வந்தும்
ததியே யவர்களையுஞ் சன்னபின்ன லாய்த்துளைத்து
ரதத்தையெல் லாமுடைத்து நல்லபா கனைமடித்தும்
இதமான வில்தனையும் இரண்டாகச் செய்திடவும்
பாளையங்க ளெல்லாம் பார்த்துக் கணையதுவும்
வேளைவந்து பாய்ந்தும் வெகுபேரைக் கொன்றிடவும்
சயிக்க முடியாதே தனக்குவில் லில்லாதே
பயித்தியம் பிடித்தவர்போல் பதுங்கியே யோடினார்கள்
அறிந்துகங் காசுதனும் அவர்களு மோடுவதை
தெரிந்துமே சேர்த்துமவர் சேகர மாயழைத்து
பார்த்தனே காத்திருக்கேன் பாதைமி லுந்தனையும்
தீர்த்திடுவே னிங்கு சிலைவிசயா வாவெனவும்
ரோசமொடு வீஷ்மர் நோக்கி மொழிந்ததையும்
நேசமாய்க்கேட் டேவிசயன் நிகழ்த்துவ னேயவர்க்கும்
ஐயாவே யென்னோடு அரும்போரே செய்வதுவும்
மெய்யா யிதுதகுமா வேதநூ லறிந்திலையா
இன்னும் பலவிதமே எடுத்துரைத் தேயவர்க்கும்
பின்னம்வரு முன்னே பேணிக்கோ வுஞ்சிரத்தை

என்று விசய னியம்பி யவரிடமும்
நன்றாக வேவில்லை நாட்டி யதுசமயம்
தொடுத்து மவனும் சொல்லி யுபதேசம்
விடுத்தானே வேகமொடு வீஷ்மர் தனைநோக்கி
அதிவேக மாகவே அக்கணை கள்வரவை
ததியேவீஷ் மர்கண்டு தன்னுடைய சிலையினிலே
வேண்டுங் கணைதனையே வேகமா கத்தொடுத்து
தூண்டியே விட்டாரே துறைகடந் தபெரியோர்
வில்லி லிருந்து விடுபட்டு மேபாணம்
துள்ளியே வந்தும் துடியாய் வருங்கணையை
வெட்டி யெறிந்திடவே விசய னதைப்பார்த்தும்
சட்டமுட னேகணையைத் தான்தொடுத் தேவினனே
விரைவாய் வருங்கணையை வீஷ்மருங் கண்டுசெல்தி
விரைவாய்க் கணைவிட்டு வெட்டி யெறிந்திடவும்
அவருங் கணையை அகோரமா யள்ளிவிட
தவாமல் வருவதையும் தனுவிச யன்கண்டு
எட்டுக் கணைதனையே இவனுந் தொடுத்துவிட
சட்டெனவே வந்து தான்மடித்த தேயதுவை
பார்த்திப னச்சமையம் பனிரண்டு தன்கணையை
வேர்த்துவில் லிற்பூட்டி விரட்டினு னேசல்தி
வேணகோ பமுடனே வேக மொடுகணையும்
காணவே தேவர்களும் கடுமை யாகவந்து
கங்கா சுதன்றனையும் கண்ணுகண் ணுய்த்துளைத்து
சங்கம் வரையாக தனுவையும் கீழ்போட்டு
மெத்த மயக்கமொடு வேந்தனுஞ் சாய்ந்திடவும்
அத்ததி பாகன் அவரை யெடுத்தணைத்து
விசிறிகொண்டு வீசி வேந்தன் களையாற்றி
சவுரியமா கக்கண்டு சல்திரதத் தைவிடுத்து

சென்ருனே வேகமொடு சீக்கிரம் வெகுதூரம்
கண்டான் துரியோதனன் கனமான தம்பிகளும்
ஐயோ துணையில்லையே அனைவரையுந் தப்பாது
மெய்யாய் விரட்டினனே விசய னுருவனுமாய்
எல்லாருஞ் சென்ருர்கள் என்னசெய்வோ மென்றுமவன்
எல்லாத்தம்பி மாரோடும் எண்ணிநிற் குஞ்சமயம்
அப்போ விசயன் அருமையா னகணையை
தப்பாம லேதொடுத்து சல்தியங் குவிடுக்க
துரியோதனன் சேனையெல்லாம் துடித்துமே கீழ்விழுக
நெறிகலங்கி யேவெகுபேர் நிமிடமங் குமடிந்தார்
ரெத்தவெள்ள மோட ரெணகளத்தில் செத்தபிணம்
அத்துடனே சேர்ந்து அனேகலட் சமோட
நரிகளுந் தாம்புசிக்க நாய்களுஞ் சத்தமிட
பரிதாப மேயிதுவும் பரமசிவன் கற்பனையோ
பாவிபிர்மன் இப்படிப் படைத்ததி னுலிவரும்
மேவியிங்கு வந்து வெகுசனங் கள்மடிந்தார்
விசயனும் பார்த்துமதை வெகுசந்தோ ஷமுடனே
இசைவாகச் சாரதிக்கு இயம்புவான் யாதெனிலோ
அரசன் சுதனே நீ அன்பாகக் கேளிதையும்
திரமாக வுன்தங்கை செப்பியதோர் சங்கதியை
மன்னவனே ஞாபகமும் வைத்திருக்கின் ருயோவென
பின்னமில் லாவிசயன் பிரியமாய்க் கேட்டிடவும்
உத்தா குமாரனுமே யோசித் தகமதிலும்
சித்தங் கலங்கி சிறியோன் நடுங்கியுமே
தங்கை யிவரையும் தப்புக ளோதினளோ
இங்கே மொழிந்தாரே என்னவிதி யென்றுமவன்
வருத்த மடைந்துமவன் மயக்க முடனேகி
திருத்தமாய் விசயன்பாதம் சிறுவனு மேவிழுந்து

என்குல தெய்வமே என்னசொன் னாள்தங்கை
மன்னவ ரேபொறுத்து மதலேயைக் காருமென்றும்
இன்னும் பலவிதமே எடுத்தோதிப் பாலகனும்
பின்னும் பணிய பிரபல னுங்கண்டும்
அரசன் புதல்வா அஞ்சாது கேள்நீயும்
பிரபல வார்த்தையென்று பெரிதாய் நினையாதே
நாமும் வரும்போது நல்லதங்கை யோதினதும்
நேமனே நீமறந்தாய் நிருபனே கேள்நீயும்
எதிரிக ளணிந்த இதமான துணிகளையும்
கதியில்லா துவிரட்டி காவலரே வப்பணியை
எனக்குக்கொண்டு வாவென் றியம்பியதோர் சங்கதியும்
உனக்கு மறதியா ஒகோவே றில்லையது
என்றுவிச யன்மொழிந்து எடுத்துமே காண்டீபம்
நின்று தொடுத்தான் நிலத்திலுள் ளோர்மயங்கும்
மோகனஸ் திரந்தனக்கு மொழிந்துமே மந்திரத்தை
வேகமாய்ச் செல்லென்று விசய னுரைத்திடவும்
வில்லினிட் மாயிருந்து விடுபட வப்பகழி
சொல்லி முடியாதே துடியாக வங்குவந்து
திரியோ தனன்முதலாய் சேனைகள் பூராவும்
அறிவில்லாது போக அங்கவர் கீழ்விழுந்தார்
பார்த்து விசயனுமே பாகனுக்கு வோதிடவும்
வேர்த்திருந்தான் சிறுவன் விந்தையிது வென்றெண்ணி

விசயன் உத்தரகுமாரனை எதிரிகள் வஸ்திரங்களை
அவிழ்க்கச் சொல்லுவது

பார்த்திப னச்சமயம் பார்த்துமே பாலகனை
நேர்த்தியா யவனிடத்தில் நிகழ்த்துவான் சங்கதியும்
அரசன் சுதனே அகத்தின் தைரியத்தை

திரமதாக நினைந்து சென்றுவதி சீக்கிரத்தில்
துரியோ தனன்முதலாய் துஷ்டர்கள் பூராவும்
தெரியவே கட்டியிருக்கும் சிரசின் துகிலதனை
தப்பா தவிழ்த்திடுவாய் சல்தியாய்ச் சென்றாலும்
செப்புவேன் கேட்டிடுவாய் செல்லாதே வீஷ்மரிடம்
அவர்மயங்க மாட்டார் அன்பாய் விழித்திருப்பார்
அவரிடஞ் செல்லாதே அரசே யீதுண்மை
குற்றமற்ற தேரேறி குழந்தையே யங்குசென்று
மற்றவர்கள் துகிலை வம்பா யவிழ்த்து நீ
இதமா யவிழ்த்து இங்குசல்தி வாவென்று
ரதமதை யேகொடுத்து நடத்தென்றான் சீக்கிரத்தில்
விசய னுரைப்படிக்கு வேகமாய் ரதம்நடத்தி
பிசகாது சென்று பெரியபடை யுள்நிறுத்தி
அரவக்கொடி யோனிடத்தி லச்சிறுவ னுஞ்சென்று
திரமா யணிந்ததெல்லாம் சிறுவனுமே கைப்பற்றி
அப்பால் நடத்தியுமே அங்குகர்ணன் தன்துகிலை
தப்பா தவிழ்த்தான் சல்தியாய்ப் பூராவும்
அவனைவிட்டு நீங்கி அங்குள்ளவர் யாவரையும்
தவரா தவிழ்த்து சல்தியா கப்பாலன்
பாக்கி யிருக்குமென்று பாளையத்தை யன்னேரம்
நோக்கியே வந்தான் நொடியி லொருவழியாய்
வீஷ்மரிருக் கும்வழியில் மேவியே பாலகனும்
வீஷ்மரையே சிறுவன் வேகமாய்ப் பார்த்திடவும்
மயக்கமில் லாதபடி மன்ன ரிருந்திடவும்
தயக்கம் சிறுவனுக்கே சரீரமு மேநடுங்கி
அதிவேக மாய்ரதத்தை அவனும்பரி யைத்தூண்டி
ததியே வந்துசேர்ந்தான் தன்னெச மானிடத்தில்
விசயனுமே கண்டு வெகுசந்தோ ஷத்தோடு
அசையாமற் றேரை அங்கு நிறுத்திவைத்தார்

### துரியோதனன் கங்காசுதனிடம் வந்து கேட்பது

மேவுலகோர் கொண்டாட மேன்மையுட னரசு
பூவுலகை யாளும் பூமான் துரியோதனன்
கங்கா சுதனிடத்தில் காவலனு மோடிவந்து
பங்க மடைந்தோனும் பணிந்து மவர்பாதம்
சொல்லுகிறு னப்போது தொழுது மவரிடத்தில்
நல்ல பெரியவரே நாமென்ன செய்குவது
யோசனை யெந்தனுக்கு ஓதவேணு மென்று
நேசமாய்க் கேட்டிடவும் நிகழ்த்துவா ரேயவரும்
அரவக் கொடியோனே அறைகுவ தைக்கேளு
பறபறப்பாய் வந்தாய் பார்த்தாயே யிங்கேயும்
அர்ச்சுனனை யெதிர்க்க ஆருமில்லை யிவ்வுலகில்
விற்கையிற் பூண்டு வேணகோடி வந்தாலும்
அரிகரப் பிர்மாதிகள் அனைவருமே வந்தாலும்
தரித்திடுவான் சிரத்தை தனுவிசயன் தப்பாமல்
சோதனை பார்த்தாயா தொடுத்தா னொருகணையை
வேதனை செய்யாது வெம்பவைத்து யாவரையும்
விட்டதே யெல்லோர்க்கும் விசயன் கணையதனுல்
பட்டதே போதும் பகவான் செயலிதுவே
உத்தர குமாரனும் ஓடிரதத் தில்வந்தும்
இத்ததி தலைத்துகிலை எல்லாரை யும்பறித்தும்
வேண்டியதைக் கட்டி விச[illegible] னிடஞ்சேர
பாண்டு மைந்தன்சமர்த்து பார்த்தா லதிசயமே
இனியிருந்தால் தீது ஏகியிருக் கும்படையை
பணிவா யழைத்துமே பாரர சேநகரம்
போவது நல்லதுகாண் போகா விடிலோகேள்
சாவதுவே நிச்சயம் தனுவிசயன் கணையால்
என்று கங்காசுதனும் எடுத்து யிதைமொழிய

நன்றெனவே சம்மதித்தான் நல்லதுரி யோதனனும்
கர்ணன் சகுனியொடு காந்தாரி பிள்ளைகளும்
விற்பெரிய துரோணர் வேதியர் கிருபரொடு
எல்லவருஞ் சேர்ந்து இச்சணம் பயணமென்று
சல்லாப முடன்பேசி தானடந்தார் சஞ்சலமாய்
பேதமில்லாச் சங்கதியை பிதற்றும் விகர்ணனும்
வேதனை யடைந்துவரும் வேந்தன் துரியனையே
ஆனைமேல் வைத்து அவனைப் பதுக்கியுமே
சேனைகளுக் குள்விட்டே சென்றான் பயத்தோடு
பாகமொடு செல்வதை பார்த்தே விசயனும்
வேகமாய்க் கணைபூட்டி விட்டா னங்குசெல்ல
துரியோதன னேறிவந்த துடுக்கான குஞ்சரத்தை
அரிந்து சிரமதனை அப்பாலே தள்ளிடவும்
எல்லவரும் பார்த்து இதுவென்ன விந்தையென்று
சொல்லாம லோடினார் துரியோ தனன்படைகள்

அருச்சுனன் உத்தரகுமாரனைக் கேட்பது

ஐயாவர சன்சுதனே அறைகுவ தைக்கேளும்
மெய்யா விராடநகர் மேவியே வந்திங்கு
மாட்டை மடக்கிய மாபாவி நம்மிடத்தில்
சேட்டைகள் செய்தவர்கள் திரும்பியே யோடுவதால்
இன்னுங் கணைவிடுத்து எல்லோரை யுஞ்சணத்தில்
மன்னு வதைப்போமா மகிழ்ந்துரை யென்றனனே
உத்தர குமாரனும் ஓதிய தைக்கேட்டு
சித்த மகிழ்ந்துமவன் செப்புவான் யாதெனிலோ
நம்முடனே போர்தொடுத்து நாதனே யப்பாவிகள்
செம்மையா யவதிப்பட்டு தேரதனை யேவிரட்டி
புறமுதுகு காட்டியே போரவரை யெய்குவது

கிரமமோ தப்பாகும் கெடுதிவேண் டாம்நமக்கு
கூடாது யென்றும் குழந்தை பணிந்திடவும்
நாடாது விட்டான் நாகக்கொடி யோன்படையை
சிறுவ னுரைத்ததொரு செய்தியைக்கேட் டேவிசயன்
அருமை யிதுவென்றும் அவனைவிச யன்புகழ்ந்தும்
சங்கமதைக் கையெடுத்து சல்தியா கப்பார்த்தன்
சிங்கத் தொனியதுபோல் செய்தா னதுசமயம்
துரோணரஸ் வத்தாமன் சொந்தவீஷ் மாசாரி
விரோதம் விளைந்ததை விதமாயெண் ணுமலவர்
பார்த்தன்தொனி யைக்கேட்டு பதறியே யங்கவர்கள்
வேர்த்துமே நின்றார்கள் விசயனை யேபார்த்து
அருச்சுன னுங்கண்டு அவன்தேரை விட்டிறங்கி
குருக்கள் தனைப்பார்த்து கோடிசர ணஞ்செய்து
திரும்பியே தேரேறி சிலைவிசயன் பாகனுக்கும்
அருமையான ரதத்தை ஐயனடத் தென்றிடவும்
சிறுவனுமே கேட்டு சீக்கிரம் வான்பரியை
அருமையாக நடத்தி அவர்கள்சென் றார்நகர்க்கு

துரியோதனன் நகர்போய்ச் சேர்வது

அரவக் கொடியோனும் அவன்படைக ளெல்லாமே
பறபறப்பாய் வந்தவர்கள் பார்த்தன் கணையால்நொந்து
எல்லவருஞ் சேர்ந்து இருட்டமட் டுந்தங்கி
சொல்லவொண்ணுத் துயரம் துடியர் களுமாகி
வாத்தியத்தை நிறுத்தி வானவர் கள்நகைக்க
காத்திருந்தார் கதிரோன் கடல்தனிலே செல்லும்வரை
கதிரோ னிவர்கள் கவலை தனையறிந்து
ததியே ரதம்விரட்டி தான்சென்றான் மேல்சிந்தும்
பருதி யடைந்ததுவைப் பாதகர்கள் தாம்பார்த்தும்
வருதி தந்துபடைக்கு வந்துசேர்ந் தார்நகரில்

## அருச்சுனன் காளிசன்னதி வந்து வன்னிமரத்தில் ஆயுதத்தைவைத்து பேடியுருவமெடுப்பது

அருச்சுன னுரைப்படிக்கு அந்தச் சிறுபாலன்
திருத்த மொடுரதத்தை தீங்கில்லா மல்நடத்தி
காளிசன்னதி தனையே கண்டு சிறுவனுமே
நீலியிடந் தனிலே நிறுத்தினு னேரதத்தை
ரதத்தையும் விட்டிறங்கி நலமாக வேயிருவர்
இதமாய்க் காளியிடத்தில் இயம்புவார் யாதெனிலோ
அம்மையே யுன்னருளால் அடியேனும் போய்ப்போரை
திம்மை யடையாதபடி செயித்துவந் தேன்தாயே
ஒன்று குறைவில்லை உமையவளே யுன்கிருபை
என்று மிருவர்களும் ஏகமாய்த் தோத்தரித்தும்
வன்னி மரத்தடியில் வந்து விசயனுமே
தன்னு பரணமொடு தக்கதொரு காண்டீபம்
ஆடைகள் பூராவும் அவிழ்த்து வொன்று சேர்த்து
சாடையே காட்டினன் தனஞ்செயன் சிறுவனுக்கும்
உத்தர குமாரனுமே உரைத்ததைத் தானறிந்து
அத்ததி காண்டீபம் ஆபரணம் பூராவும்
வாரி யெடுத்துமவன் மன்ன னுரைப்படிக்கு
எறிமரத் தின்மீது இருக்கின்ற பொந்ததனில்
அச்ச மில்லாதபடி அதில்வைத்துப் பக்குவமாய்
மச்சநாடான் சுதனும் மரத்தைவிட்டுக் கீழிறங்கி
அருச்சுனன் பாதமதி லச்சம யஞ்சிறுவன்
திருத்தமொடு பணிந்தான் தேவர்கள் கண்டுமெச்ச
வந்து பணிந்தவந்த மைந்தனை வாரியெடுத்து
சந்தோஷ மாயந்த தனையனை யாசீர்வதித்தும்
ஊர்வசி தனை நினைந்து உகந்தபேடி வடிவை
பார்மன்ன னு மெடுத்து பாலகன் பக்கம்நிற்க

சிறுவனுமே கண்டு சிந்தைமிக மயங்கி
அருச்சுனனைப் பார்த்து அழுதுகண் ணீர்வடிக்க
பேடியிவ னைப்பார்த்து பேசிச் சிலகதையை
வாடிடா தேயென்று மயக்க மதைத்தீர்த்தாள்

பேடி உத்தரகுமாரனுக்கு உரைப்பது

பேடியு மச்சமயம் பிரியம தாய்மனதில்
வாடிய பாலனுக்கும் வழுத்துவாள் சங்கதியும்
அப்பனே யென்னுரையை அருமையா கக்கேட்டு
இப்பவா யுதம்பூண்டு ஏறிரத மீதிருப்பாய்
சாரதியா யானிருந்து சமர்த்துட னேரதத்தை
பாரதி லேநடத்தி பருதி யடையுமுன்னே
நகரமது செல்வோம் நாதனே நீசல்தி
பகராம லேபதிலும் பாலாரத மேறென்றுள்
அப்பேடி யுமொழிந்த ஆனதொரு சங்கதியை
தப்பாய்ச் சிறுவன் றன்னகத்தி லேநினைந்து
ஐயோயீ தென்ன அனியாய மோயானும்
செய்வதென்ன வென்று சிறுவன்கண் ணீர்வடித்தும்
மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாளும் புண்ணியனே யான்மாட்டேன்
என்றுசிறு வனுரைத்து இருக்கும்பே டிபாதம்
நன்றாய்ப் பணிந்தானே நல்லர சன்சுதனும்
கண்டுமே பேடியும் காவல வன்தனக்கு
விண்டு சிலகதையும் வேந்தன் தனக்குரைக்க
பேடி யுரைப்படிக்கு பிரியமாய் ரதமதனில்
நாடியிருந் துசிறுவன் நலமாய்விற் கைக்கொண்டான்
சந்தோஷ மூண்டாகி தையலந் தப்பேடியும்
அந்தவேளை சாரதியாய் அமர்ந்து லகானதனை
கையிற் பிடித்துமவள் கடுமையாய் ரதமதனை

வையகத் தோர்புகழ மங்கைவேக மாய்நடத்தி
சந்தோஷ மாயவளும் தக்க விராடநகர்
நந்த வனமதிலே நங்கை ரதம்நிறுத்தி
தவித்த பரியதனை தையலு மேபார்த்து
அவிழ்த்துமே விட்டதனை அங்கிருவர் தங்கிடவும்
பேடியு மச்சமயம் பிழையில்லாப் பாலனிடம்
நாடியே யோதுகின்றாள் நாகக்கொடி யோன்செய்தி
ஐவர் களையழைத்து அங்குகூ டாடினதும்
துய்ய தருமரங்கு தோற்வை யடைந்தபின்பு
நாடுவிட்டு வந்து ராசனிட சொற்படிக்கு
காடுதனி லோராண்டு காவல ருமிருந்து
அஞ்ஞாத வாசமதில் அவர்களுரு மாறினதும்
பக்கமதி லேயிருக்கும் பட்டரிட சங்கதியும்
மற்றவர்கள் சங்கதியை வழுத்திச் சிறுவனிடம்
குற்றமில்லாப் பேடி குமாரனுட னங்கிருந்தாள்

தென்திசை சென்ற கங்கபட்டர் விராடராச்சன்
மற்ற மன்னர்களும் விராடநகர் வருவது

மச்சநா டானுடனே மனமகிழ்ந்து பட்டருமே
மிச்சமுள்ள மன்னர்களும் விடியமட்டு மங்கிருந்து
கங்கபட் டருரைபோல் காவலர்கள் யாவருமே
தங்காம லேநடந்து தம்முடைய நகரமதில்
அரண்மனை வாசல்வர அங்கு சுதர்க்கணையும்
அரசனிட பாதமதில் அம்மங்கை யும்பணிந்து
மச்சநா டானிடத்தில் மாது துயரமுடன்
அச்சம தாய்நின்று அறைகுவாள் சங்கதியும்
வடபாரி சந்தனிலே வந்தார் துரியனுடன்
திடவான்வீஷ் மர்சகுனி தேசமா ளுங்கருணன்
கிருபரஸ் வத்தாமா கீர்த்திமன்னர் யாவரையும்

பருத்தபடை யாய்த்திரட்டி பாங்காய் வடதிசையில்
மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனமைந்த
கோவுகளை யெல்லாம் கொலைகாரர் கைக்கொண்டு
பசுமேய்த்த கோவலர்கள் பார்த்துமவ ரைத்தடுக்க
விசுவாச மில்லாதார் வெட்டி யெறிந்தார்கள்
அவருமே யிங்கும் அதிவிரை வாகவுமே
தவறுவந்த சங்கதியைச் சாற்றிநிற் குஞ்சமயம்
உத்தர குமாரனும் உறுதியாய்ப் போர்செய்ய
உத்தரைக்கு நாட்டியமே ஓதிவைக்கும் பேடிதனை
சாரதி யாக்கியவன் சமர்த்துடன் ரதமேறி
பாரவிற் கைப்பூண்டு பாலனுஞ்சென் றானென்றும்
மங்கையெச மானிடத்தில் வழுத்தவே யவ்வரசன்
சங்கதியைக் கேட்டு சரீரம் நடுக்கமதாய்
மகனை நினைந்துமவன் மயங்கியே கீழ்விழவும்
பகவானைப் போலிருக்கும் பட்டரவ னையெடுத்து
தக்க வுபசாரம் தான்செய்ய மன்னவனும்
மிக்கக் கவலையொடு வேந்த னெழுந்திருந்து
பண்ணுவ தென்னவென்று பார விசனமுடன்
கண்ணீரே விட்டழுதான் கங்கபட் டரிடத்தில்
ஆதி பரமனைப்போ லமர்ந்திருக்கும் பட்டருமே
வேதினை மிகவடையும் வேந்தன் தனக்குரைப்பார்
சாரதியாச் சென்ற தையலந் தப்பேடி
பாரதிலே தேர்நடத்தப் படித்தவ ளேசமர்த்தி
இன்னுஞ்சண நேரமதில் இங்கு மவர்வருவார்
மன்னவனே யென்று வழுத்தவே பட்டருமே
எந்தன் குருநாதா இம்மொழி தவராது
இத்தவேளை நாமும் இருக்கும்படை பூராவும்
சேர்த்துமே யொன்றாக சீக்கிரத்தி லேநாமும்
பார்த்துமே பாலகனைப் பாவி துரியனையும்

வதைத்துவர நானிங்கு வாலோசித் தேனதனை
இதைத்தாங்கள் யோசித்து இயம்புமென் றுரைத்திடவும்
பூவுலக வரசர் புகழவே யிந்நகரை
தாழ்வுகளில் லாதபடி தான்காக்கும் புண்ணியனே
சிங்கக்கொடி போட்டு சென்றதொரு பாலகனும்
பங்கமில் லாதபடி பாருஞ்சணத் தில்வருவான்
செல்லவேண்டா மென்று செப்பியதைக் கேட்டரசன்
நல்லதென்று மொழிந்து நாதனுட னங்கிருக்க
அதிவேக மாகவந்து அங்குமொரு தூதன்
பதியரசைக் கண்டு பாங்கா யவன்பணிந்தும்
அரசனே யுன்சுதனும் அருமையாய்ப் போர்செய்து
திரவான் துரியனொடு சேர்ந்த மன்னர் யாவரையும்
விரட்டி யவர்களையும் வேந்தனே கோவுகளை
திரட்டி வருகிறார் செய்திசொல்ல யான்வந்தேன்
என்றுமே தூதன் இயம்பியதைக் கேட்டரசன்
நன்றாகத் தூதனுக்கு நல்ல பரிசளித்து
மந்திரியே கேளாய் மைந்தனு மின்றுபோரை
தந்திர மாய்ச்செயித்து தனையன் வருவதினால்
சேனைக ளோடுநீ சீக்கிர மாய்ச்சென்று
ஆனைமேல் வைத்து அழைத்து வருவாயே
என்று வரச னியம்பவே மந்திரியும்
நன்றெனவே கேட்டு நடத்தினான் சேனைகளை
மந்திரியும் வேகமதாய் மகாபடை தன்னுடனே
தந்திரியுஞ் சென்றான் சமர்த்துள்ள மைந்தனிடம்

கங்கப்பட்டரும் விராடராசனும் சொக்கட்டானடுவது

ஆதி பரம்பொருள்போல் அமைந்த பெரியோரே
வேதையடை யாதவென்றன் வேந்தன் வரும்வரைக்கும்
பழுதில்லா திருபேரும் பாங்கான சொக்கட்டான்

பொழுதுபோ கும்படிக்கு பூமானே யாடிடுவோம்
வாருமென் றுவரசன் வலியவே தானுரைத்து
சேருமென்று காய்களைச் செப்பினன் சீக்கிரத்தில்
கங்கபட்ட ருங்கேட்டு கருணை யொடுசெல்தி
சிங்காரச் சாரிதனை சீரா யவர்பரப்பி
நல்லதொரு காய்களை நாட்டிக் கவரதனை
சல்லாப மாயுருட்டி தானுடி னரவர்கள்
அரசனு மச்சமயம் அங்குரைப்பான் பட்டரிடம்
அரவக் கொடியோனும் அவனுடைய சேனைதனை
என்சுத னுத்திரனும் இன்று விரட்டினுப்போல்
நன்னயமாய் இவ்வாட்டம் நான்செயிப்பேன் இப்போதே
என்று விராடமன்னன் எடுத்துரைக்க வச்சமயம்
நன்ருகக் கேட்டாரே நல்லகங்க பட்டாரதை
பதியரசே கேளும் பகர்ந்துமே யென்னிடத்தில்
ததியே யுமதுசுதன் தான்செயித்தா னென்றுரைத்தாய்
அவனே செயிக்கவில்லை அப்பேடி விற்பூண்டு
தவராது போர்விளைத்து தான்செயித் தாளறியும்
என்றவுரை கேட்டரசன் ஏகக்கோப முண்டாகி
மன்னனும் பட்டரிடம் மறுமடியுந் தானுரைப்பான்
என்னதான் நீர்மொழிந்தீர் இங்குவந்து தூதுவர்கள்
மன்னன் செயித்தானென்று வழுத்தினர் நீரறிய
அவனை யிகழ்ந்து அப்பேடியைப் புகழ்தல்
தவருன செய்தியென்று சாற்றின னேயரசன்
இந்த மொழிதனையும் இருந்தபட்டர் தான்கேட்டு
வித்தையாய்ப் பின்னுலும் விளம்புவா ரரசனுக்கு
இன்னங்கே ளென்மொழியை இவன்செயிக்க வேயில்லை
மன்னனே பேடிதான் வண்போர் செயித்தவளே
எண்ணுதே லேசாய் இந்தப்பேடி சமர்த்தி

முன்னுல்காண் டாவனத்தை முற்றிலு மவளெரித்து
அக்கினி தேவனிடம் அசையாத காண்டீபம்
முக்கியமாய் வாங்கினவள் முந்தி யொருநாளில்
தேவர்க் கிடையூறைச் செய்தநிவாத கவசர்
பாவத்தை யெண்ணுதார் பாவிகால கேயர்
இம்மிசையைத் தீர்க்க இப்பேடி யவர்களையும்
வம்மிச மில்லாதபடி வாட்டிவிட்டான் தென்திசைக்கு
பொன்னுலகத் தோரெல்லாம் புகழுகின்ற வப்பேடி
மன்னனே செயித்தவள் மகன்செயிக்க வேயில்லை
இன்னும் பலவிதத்தை எடுத்தோத வேபட்டர்
மன்னவனுங் கேட்டு மகாகோப மாயுரைப்பான்
வயதிற் பெரியவரே மனுநீதி யைக்கற்றும்
தயவாக வேநீரும் தான்புகழ்ந்தீர் பேடிதனை
என்சுதன் செயித்திருக்க இல்லையென்று நீருமிப்ப
உன்மனதுப் படியே ஓதினுய் பேடிதனை
இப்போது சொன்னுரே இயல்பான தூதுவர்கள்
தப்பென் றுரைத்தீர் சரியிதுவோ வேதியரே
என்னிடசொத் தைத்தின்று என்னை யிகழுவது
நன்மனதோ வென்று ராசனுங் கோபிக்க
கங்கபட்ட ரதையுங் கருணை யொடுகேட்டு
எங்கோனே கேளீர் இன்னுமரை நொடியில்
பேடி செயித்தாளென்று பிரியமுட னிங்குவந்து
கோடிவேந்த ரறிய கொலுவி லுரைப்பார்கள்
என்றுமே பட்டர் எடுத்தோத வேயரசன்
நன்ருகக் கேட்டும் நல்லமதி யில்லாமல்
கோபம் பெரிதாகி கோவைப்பழம் போல்விழியாம்
பாபமறியா வரசன் பாச்சையைக் கீழடித்தான்
தரையினி லடிபட்டு சட்டென வேகிளம்பி

நிறைதவரா கங்கபட்டர் நெற்றியிற் பட்டிடவும்
பொட்டளவு காயம் புண்ணியனுக் குண்டாக
சட்டெனவே ரத்தம் தான்வர வும்வெளியே
அப்போது வண்ணமக ளங்குமே வந்துநின்று
தப்பாது பார்த்தாள் தன்னுடைய வேதியரை
நெற்றியில் ரத்தமதை நேரிழை யாள்கண்டு
நத்தியே யோடிவந்து நங்கைமுந் தாணியதால்
ஒத்தியே ரத்தமதை ஒருதுளிகீழ் வீழாமல்
பத்தியோடு வந்தப் பாவை துடைத்தனளே
அந்த யிரத்தமது அடியினில் வீழ்ந்தாலே
இந்தவி ராடன்பதிக் கிடையூறுண் டாகுமென்று
அதிரூப மானவந்த அம்மை யிதைநினைந்து
ததியே பரிகாரம் தான்செய்தா ளம்மாது
கண்டான் விராடன் கலங்கியே மெய்மறந்து
கொண்டான் விசனமதைக் கோமானந் தச்சணமே
ஐயோ மதிகெட்டு அறியாம லேநாமும்
செய்யாத வேலைதனைச் செய்தோம் பெரும்பாவம்
தீராத கோபமது போராய் முடியுமென்று
பாரா யணத்திலும் பகர்ந்ததை யேகேட்டும்
புத்திகெட்டோ மென்று புலம்பி யரசனுமே
நத்தியது யெண்ணமாய் நடுங்கி யுடலதுவும்
சாய்ந்தபடி யிருந்தும் சஞ்சலங்க ளுண்டாகி
பேய்போ லவனும் பிதற்றிக்கொண் டேயிருந்தான்
இப்படிக் காகவும் இங்கிருக்க வேயரசன்
தப்புகள்செய் தோன்பாலன் சங்கதி யையுரைப்போம்

பேடி ரதம்நடத்த உத்தரகுமாரன் நகருக்குவருவது

அரச னனுப்பியதோர் அந்த மந்திரி படைகள்
சரச்ரென வேநடந்து தன்னுடைய ராஜனிடம்

எதிர்கொண்டு சென்று எல்லோரு மேபணிய
பதியரசன் சுதனும் பார்த்து மனமகிழ
அரசனைச் சுற்றியே ஆனபடை பூராவும்
திறமாய் வளைந்தும் செயக்கொடி யைப்பிடித்தும்
வாத்தியங்கள் முழக்கம் வானவர் கண்டஞ்ச
நேர்த்தியாய் மாதர்நடம் நின்று சோபனம்முழங்க
வந்தார் நகரமதில் வளர்குடிக ளும்பார்த்து
சந்தோஷங் கொண்டு தனபால னைப்புகழ்ந்து
மங்கையர்கள் வாழ்த்தியும் மனமகிழ்ந் தாலாத்தி
சிங்கார மாகவே தெருக்கள்பூ ராச்செய்தார்
அப்போது பேடி அன்பாய் ரதமதனை
தப்புகளில் லாதபடி தானடத்தி யேவிரைவாய்
சரசரென வேநடத்தி சபைதனி லேவரவும்
அரசனுங் கண்டு ஆவலா யோடிவந்து
மகனையே தூக்கி மகிழ்வாயா சீர்வதித்து
பகவானை யேநினைந்து பாலனொடு விருக்க
உத்தர குமாரனும் யோசித் தகமதிலே
அத்தநதி பார்த்தானே அங்கிருக்கும் பட்டரையே
பாதந் தனையெடுத்து பரிவாகக் கண்ணிலொத்தி
பூதலமெல் லாம்போற்றும் புண்ணியரைத் தான்தொழுது
பார்த்தான் முகத்தை பாலகனு மச்சமயம்
வேர்த்திருப்ப தைக்கண்டு விசன மடைந்தரசன்

உத்தரகுமாரன் கங்கப்பட்டர் நெற்றியில்
காயத்தைக்கண்டு தந்தையைக் கடிந்துபேசுவது

நெத்தியிற் காயமதனை நேராய்ப் பாலன்காண
பத்திய தீப்போலே பதறி யுடல்நடுங்கி
சாமியே யிந்தச் சங்கதியை யோதுமென்று

பூமிதனிற் பணிந்தும் பொக்கெனவே வில்லெடுத்து
இப்படிச் செய்தவரை இன்றுயென் கணையாலே
தப்பாமல் நான்வதைத்து சல்தியாய் தென்றிசைக்கு
அனுப்பிடுவே னென்று அவனுமே யச்சமயம்
தனுசை வளைத்து சல்தி கணைபூட்ட
மன்னன் விராடன் மகன்றனை யேபார்த்து
பின்னம்நாம் செய்ததால் பிழைவந்த தென்றுமவன்
நெஞ்சமது துடித்து நிலத்தி லவன்புரண்டு
தொஞ்சு மவனெழுந்து சொல்வான் சுதனிடத்தில்
அப்பனே யானும் அறியாமற் செய்துவிட்டேன்
தப்பனுனே னென்று தலைகவிழ்ந் தான்கீழே
தந்தையைப்பார்த் துச்சிறுவன் தக்க படிதிட்டி
இந்த யிடத்தைவிட் டேகுவா யப்பாலே
இன்னும் பலவிதமாய் எடுத்தோதி யேசிறுவன்
பின்னமில்லாப் பட்டரிடம் பெரிய மதியுடையோன்
பார்தனில் வீழ்ந்து பாதம தைப்பிடித்தும்
பாநரசன் சுதனும் பரிதாப மாயுரைப்பான்
தேசிகனே காப்பாய் செய்ததெல் லாம்பொறுத்து
நேசியே யென்று நிருபனு மேபணிய
பதியரசன் வந்தும் பட்டர்பா தம்வீழ்ந்தும்
அதிதியைக் காக்கவேணும் ஐயனே யென்பிழையை
பொறுக்கவேணு மென்று பின்னு மடிவீழ்ந்து
திருத்தம தாய்ப்பணிந்தான் செகத்தையா ளுமரசன்
கடுங்கோப மாயிருந்த கங்கபட்டர் தான்கண்டு
சுடுபொன்போல் மாறி துயரமெல் லாம்விடுத்து
அவர்களையா சீர்வதித்தார் அன்பு மிகப்பெருகி
சிவனைத் தியானித்து சிந்தை மகிழ்ந்திருக்க
வடபாரி சந்தனிலே வந்ததொரு சங்கதியை

திடமாகப் பேசினார் சேர்ந்திருக் குஞ்சபையோர்
அந்தப்புரஞ் சென்றான் அருமையான பாலனுமே
வந்த சுதன்றனையே மங்கை சுதர்க்கணையும்
வாரி யெடுத்துமவள் வாழ்த்தியா சீர்வதித்து
மீறியே சந்தோஷம் மெல்லிகை யங்கிருக்க
மன்னன் விராடனும் மகிழ்ந்து சுதனிடத்தில்
பின்னம்நினை யாதபடி பிரியமாய் வந்தங்கு
மங்களமா யங்கும் மகிழ்ந்திருக் குஞ்சமயம்
மங்கைபேடி யச்சமயம் மகிழ்ந்துமே யங்குவந்து
குருசேனை தன்னிடமே கொண்ட துகிலையுமே
பருத்த தனமுடைய பாவையையுங் கொண்டுவந்து
தலையிலே வைத்துத் தையலந் தப்பேடி
மலையாம லேநடந்து மகராசன் தான்பயின்ற
புத்திரி யுத்தரியும் புண்ணிய னுடனிருக்க
அத்ததி பேடியுமே அதிகப் பிரியமதாய்
மூட்டை தனைக்கொடுத்து மொய்குழலு மன்னேரம்
சேட்டையா கநடந்து சென்றாளே பின்புறத்தில்
கண்டுவுத்த ரகுமாரன் கன்னிகை நிற்பதையும்
ரெண்டுகண்ணில் நீர்வடித்து நெறிகலங்கி யேபாலன்
கையை நெரித்துமவன் கலகலென வேநகைத்து
ஐயையோ வென்று அழுது பரதவித்தும்
துக்க மிகவடைந்து சோம்பிநிற்கும் பாலகனை
மிக்க விராடனும் மேன்மையான பத்தினியும்

விராடராசனும் சுதர்க்கணையைக் கேட்பது

மதலையைப் பார்த்துமவர் மகிழ்வடைந்த தையெனக்கு
பதறாது சங்கதியைப் பாலா வுரையெனவே
அவர்களைப்பார்த் துப்பாலன் ஆயாச மூண்டாக

தவறுகள் செய்தமன்னன் சங்கதி யுரையென்றான்
ஐயாவே கேளும் அடியேனுட வாக்கியத்தை
பையர வக்கொடியோன் படையெடுத் திங்குவந்து
மாட்டை மடக்கியுமே மாபாத கர்களுமே
ஓட்டமாய்ச் செல்வதையும் உரைக்கவே தூதுவர்கள்
நானுமே சாரதி நல்லவனு யில்லையென
வேணுமென்று வண்ணமகள் விளம்பியே பேடிதனை
சாரதியாய்த் தந்தெனக்கு சாமியி னருள்தனையும்
தீரமாய்த் தந்தும் செயித்துவரு வாயெனவும்
அம்மை யுரைக்க அன்பாய்ப் பிரியமொடு
செம்மையாய்த் தேரேறி சென்று செயித்ததையும்
பூராச்சங் கதிதனையும் புண்ணிய னிடந்தனிலே
நேராய் மொழிந்தே நிகழ்த்துவான் பின்னலும்
ஐயாவே தங்களிடம் அருமைய தாயிருக்கும்
மெய்யான கங்கபட்டர் விளம்பிடும் பெயர்தருமர்
வண்ணமக ளாயிருக்கும் வதனி துரோபதையே
திண்ணமாய்ச் சமையற்றொழில் செய்யும் பலாயினனும்
வீமராச னென்றவரை வேந்தனே நீர்மதியும்
வாமமுள்ள பேடி மன்ன னருச்சுனனர்
குதிரைக் கெசமானய் கொடுத்தீரே வேலைதனை
மதிதனி லேயுயர்ந்த மன்னன் நகுலனவர்
கோவுகளைக் காக்க கொடுத்தீ ரவர்தானும்
மேவுலகோர் புகழும் மேன்மைச் சகாதேவன்
குந்திமைந்த ரைவர்களும் கொடுமை துரியோதனனல்
மூந்தியிவ ரோராண்டு முடிமன்னர் கானிருந்தும்
அக்ஞாத வாசமதற் கானவேட மெடுத்து
பக்குவமாய் நம்மிடத்தில் பஞ்சவர்கள் வந்திருக்கார்
என்னநான் சொல்வேனென் றேங்கி யழுதுமவன்

பின்னங்கள் செய்தாயே பெரியவ ரைப்பார்வி
துரோபதை தன்பேரில் துஷ்டன்மோகங் கொண்டதினுல்
விரோதியாய்ப் போனுேமே வேந்தர்க ளைவருக்கும்
என்றுமே பாலகனும் ஏங்கி யழுதுரைக்க
நன்ருகக் கேட்டே நல்ல விராடமன்னன்
சங்கைகொண் டேயரசன் தையல்சுதர்க்கணையும்
சிங்கத்தைக் கண்டவர்போல் திகைத்துமே கீழ்விழுக
தந்தையுங் கீழ்விழவும் சல்தியாய்ப் பாலகனும்
சிந்தை மிகநொந்துமவன் சீக்கிர மாயெடுத்து
தக்க வுபசாரம் தான்செய்து களைதெளிய
பக்கத்தில் நின்ருனே பதியரச னப்போது
ஐயையோ யென்ன அனியாய மைவரையும்
செய்துவிட் டோமேநாம் தெரியா மதியதனுல்
இன்னும் பலவிதமே எடுத்தோத வச்சமயம்
மன்னன் சுதனுமே வழுத்துவான் தந்தைக்கும்
ஐயா யினிமேல்நாம் அவதிப் படுவதிலும்
செய்வதென்ன வொன்றுமில்லை செப்புவ தைக்கேளும்
என்னெண்ண மொன்றிருக்கு இதையு மவர்க்குரைத்து
நன்னயமாய்ப் பார்த்தனுக்கு நங்குழந்தை யுத்தரியை
கலியாணஞ் செய்யவுமே கருத்தென்று மேபாலன்
நலியாம லேயுரைத்தான் நல்லதந் தையிடத்தில்
கேட்டா ரிருவர்களும் கிலேச மதைநீக்கி
நாட்டம் பெரிதாகி நல்லதென்று சம்மதித்தும்
உந்தன் மனம்போலே உறுதி தவராமல்
மைந்தனே செய்யென்று மகிழ்ந்துரைத் தாரிருவர்
பாலக னதைக்கேட்டுப் பரிவாகச் சிந்தையிலும்
ஆலமுண்ட கண்டனையே அவனிநைந்து யெங்களுக்கும்
வேதினை வராதபடி விமலா வடியாரை

பாதிமதி யணிந்த பரமனே காத்திடுவாய்
என்றுசிறுவன் மொழிந்து எப்போ பருதியுமே
நன்ருய் வருவாரென்று நாதனை யெண்ணியிருந்தார்

## பாண்டுமைந்தரும் பத்தினியும் சுயவடிவம் பூண்டுகோள்வது

அப்போது பஞ்சவர்கள் ஆரணங் கையழைத்து
அப்பொழுதே நடந்தும் அவ்வூரை யுங்கடந்து
ஒருபுறமாய்ச் சேர்ந்து ஒற்றுமை யாய்ப்பேசி
கரும வினைவிடுத்தும் காவலர்க ளந்நேரம்
இருந்த வுருவம்விட்டு எடுத்துச்சுய ரூபமதை
கருவி லுதித்தவர்போல் காந்தியா யங்கிருந்தும்
சங்குசக்க ரந்தரித்த தயாபர னையுமெண்ணி
எங்கும்பே ரோங்கும் எமதர்ம னைத்தொழுதும்
சங்கையில் லாப்பேச்சு தான்பேசி யேயவர்கள்
மங்கள மாகவுமே மகிழ்ந்திருந்தா ரம்மானை
அந்த வனத்திருக்கும் ஆன பறவைகளும்
விந்தையாய்ப் பஞ்சவர்கள் வேடம்பூண் டதறிந்து
சந்தோஷங் கொண்டும் தான்கூச்ச லிட்டுமது
மைந்தர்காள் நீங்கள் வாழ்வு மிகப்பெருகி
மேவி நகரமதில் வேந்தன் துரி யோதனனை
தாவிடக் காலன்பதி தான்செய்து நீங்களுமே
மேவுலகோர் கொண்டாட மேன்மை யொடுநீங்கள்
பூவுலகை யாளுமென்று புகன்றதே பட்சியெல்லாம்
அந்த வனத்திருக்கும் ஆன மிருகமெல்லாம்
மைந்தர்கள் வேடங்கண்டு மகிழ்ந்துவா னந்தமொடு
தன்னுடைய வோசை தனைக்காட்டி யேமிருகம்
மன்னரே நகரமதில் வாழ்வீர்க ளென்றுரைக்க

கானக மதனிலே காமுனிவர் கள்வசிக்கும்
வேண விருட்சமெல்லாம் வேந்தர் வடிவுகண்டு
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவர்க்கு நாமும் பாதகா ணிக்கையதாய்
என்னசெய்வோ மென்றும் ஏங்கி விருட்சமெல்லாம்
நன்னயமா யகத்தில் நல்யோ சனைபுரிந்து
அப்பொழுதே தளிர்த்து ஆன வரும்புகட்டி
தப்பாது தான்மலர்ந்து சல்தியவ் வாசனையை
பின்னமில் லாதபடி பிரியமதா யங்குகொண்டு
மன்னர்க ளைவருக்கும் மகிழ்ந்துவைத்துக் கண்டதுவே
விண்ணதனில் வசிக்கும் வேணதொரு தேவர்களும்
மன்னர் வடிவமதை மகிழ்ந்துகண் டச்சமயம்
சந்தோஷங் கொண்டச் சணத்தி லவர்களுமே
விந்தையாய் மலர்மாரி வேந்தர்மே லேபொழிந்தார்
கோழிகள் யாவுமே குழந்தைகள் வடிவுகண்டு
வாழிவாழி யென்று மகிழ்ந்துசத்த மிட்டதுவே
கதிரோனு மச்சமயம் காவலரைப் பார்க்கவென்று
சதிராய் ரதமதனில் ஜதைப்புரவி கள்பூட்டி
அதிவேக மாய்நடத்தி அருமையாய்க் கீழ்திசையில்
ததியேகிர ணங்காட்டி தையலுட னைவரையும்
பார்த்து வடிவமதை பருதியுங் கண்டுமெச்சி
நேர்த்தியாய் ரதம்நடத்தி நிமிஷம்விண் ணிற்சென்றுன்
கதிரோன் வரவறிந்து காவலரும் பத்தினியும்
ததியே காலவிதியை தான்முடித்து வந்நேரம்
சந்தோஷ மாகவுமே தானிருக்க வெல்லோரும்
அந்தவேளை விசயன் அண்ணல்வத னம்பார்க்க

தருமர் நெற்றியில் காயங்கண்டு அருச்சுனன் கேட்பது

கண்டானே நெற்றிதனில் காயமொன்று விசயனுமே

விண்டேயீ தென்னவென்று வேந்த னிடங்கேட்க
தனஞ்செய னைப்பார்த்து தருமர் நகைத்திடவும்
தனஞ்செய னுங்கண்டு சங்கதி யென்னவென
மாது துரோபதையும் மகிழ்வுட னேசெய்தி
ஓதுவாள் விசயனிடம் உள்ளபடி தப்பாமல்
விராடமன்னன் செய்தானென மெல்லிகையுந் தானுரைக்க
விராடனென் றுரைத்ததையே விசய னுங்கேட் டச்சமயம்
வேர்த்து முகங்கருகி வெம்பியவன் கோபமுடன்
பார்த்துமிக வழுது பரிதாபங் கொண்டவனும்
நானே புறப்பட்டு நகரமதி லேசென்று
கோனே கணைபூட்டி கொல்லுவேன் விராடனையும்
நாட்டினைப் பூராவும் நானே கொளுத்திடுவேன்
சேட்டைகள்செய் தோன்முடியை தென்திசைக்கே சேர்த்திடுவேன்
என்று மொழிந்துமவன் எடுக்கப் படையதனை
கண்டுமே பீமனும் கனகோபந் தன்னுடனே
அருச்சுன னான்வாரேன் அதிவிரை வாயிருவர்
திருத்தமாய் விராடனையுந் தென்றிசை சேர்த்திடுவோம்
அஞ்சாதே தம்பியென்று அதட்டியே வீமன்வர
மிஞ்சிவிட்ட தெனத்தருமர் விளம்புவார் தம்பியர்க்கும்
பதருதீர் தம்பிகளே பகருவதைக் கேளுமென்று
இதமா யிருவருக்கும் எடுத்துரைப்பார் யாதெனிலோ
அந்தநாளில் யானும் அக்ஞாத வாசஞ்செய்ய
விந்தையாய்க் கேட்டதற்கு விளம்பினை யேவிசயா
மச்சநாடு செல்வோமென்று மகிழ்ந்துநீ யுரைத்ததையும்
இச்சையொடு யான்கேட்டு எல்லோரு மிங்குவந்து
அரச னிடந்தங்கி அவனன்னத் தைப்புசித்து
திரமான போருஞ் செய்வ தழகாமோ
அவன்குறை செய்யவில்லை அய்யாகேட் பாய்விசயா

அவனுங்கீ ழேயெறிந்தான் அச்சாரி மேற்கிளம்பி
விரைவாக வந்து விசயனே பட்டதது
குறையில்லை யவன்பேரில் கோபந் தணிவீர்கள்
இன்னும்பல நீதிகளை எடுத்துரைக்கத் தம்பியரும்
மன்ன னுரைப்படிக்கு மனமகிழ்ந் தண்ணரிட
பாதமதில் வீழ்ந்து பணிய யிருவரையும்
பேதமில்லாத் தர்மர் பிரிய முடனவரை
வாரி யெடுத்தும் மகிழ்ந்துவா சீர்வதித்தும்
மீறியே சந்தோஷம் வேந்த னவர்க்குரைப்பார்

### பாண்டுமைந்தர் வன்னிமரம் வந்து ஆயுதமெடுப்பது

தம்பியரே நாமும் தருணத்தி லாயுதத்தை
நம்பிக்கா ளியிடத்தில் நாம்வைத்துச் சென்றோமே
இந்தவேளை நாமும் ஏகுவோம் அவ்விடமே
விந்தையா னமரத்தில் வீற்றிருக்கு மாயுதத்தை
எடுத்து விராடநகர் ஏகுவோம் தம்பியரே
வடுப்படா மாதுடனே வாருமென்று தானழைத்து
தொடர்ந்துமே யெல்லோரும் துயர மதைநீக்கி
நடந்து மதிவேகமாய் நல்லவன் னிமரத்தை
கண்டுமே ஐவர்களும் கன்னியுட னச்சமபம்
விண்டுமே தர்மர் விளம்புவார் பீமனிடம்
மதகரியா நீயும் மரமதிலே தானேறி
இதமா யாயுதத்தை யெடுத்துவரு வாயெனவும்
மன்ன னுரைப்படிக்கு மகிழ்ந்துவன் னொழிகையில்
பின்னமில்லா மரத்தில் பிரியம தாயேறி
ஆயுத மெல்லாம் அவனுமே கைக்கொண்டு
ஆயி கிருபையினல் அவனிறங்கி யண்ணரிடம்

அம்புகளை வைத்து அவனும் மிகப்பணிய
நம்பின தம்பியர்க்கு நலமாயா சீர்வதித்து
அவரவர்க ளாயுதத்தை அருமை யுடனெடுத்து
தவரா தவர்களிடம் தான்கொடுக்க வேவாங்கி
சந்தோஷ மாகவே தானிருக் குந்தருணம்
அந்தவேளை தருமர் அழைத்துமே யாவரையும்
மாமுண்டி சன்னதிமுன் மன்னர்கள் வந்துநின்று
சாமுண்டி தன்னிடத்தில் சாற்றுவா ரேதருமர்
ஆயி மகமாயி அம்பிகையே அம்பையே
தாயிநீ காத்துவைத்தாய் சந்தோஷ மெங்களுக்கும்
இன்றுமுதற் பீடை எங்களைவிட் டேகிடவும்
நன்றாய்க்கண் பாரு நாரணன் தங்கையரே
இன்னும் பலவிதமும் எடுத்தோதிக் காளியிடம்
மன்னர் தருமரும் மகிழ்வான தம்பியரை
வாருங்கள் தம்பியரே மங்கை யுடன்நாமும்
சேருவோம் விராடநகர் சீக்கிரத்தி லேயென்று
எல்லவருங் கூடி ஏகி வழிநடந்து
சல்லாப மாய்வந்து சபாமண்ட பத்தினிலே
மேவுல கோர்புகழும் வேந்தன் விராடன்பதி
பூவுலக வரசர் பூவை யுடனிருக்க
அங்கிருந்த மன்னரெல்லாம் அடிதனி லேபணிய
சிங்கார மாய்த்தருமர் செப்பினர் ஆசிமிக

விராடராசன் பஞ்சவரை வந்துகாணுவது

அதிலொருத்த னெழுந்து அரச னிடமோடி
பதியர சனிடத்தில் பகருவான் சங்கதியும்
ஐவரும் பத்தினியும் அமர்ந்துமே மண்டபத்தில்
தெய்வத்தைப் போலிருக்கு செப்பவந்தேன்யானென்றான்
அந்த மொழிதனையே அரசனு மேகேட்டு

சந்தோஷ மாகவுமே தையல் தனக்குரைத்து
மாலையொடு வேண மலைக்கனிகள் பூராவும்
சேலைபணியும் செப்பிடவொண் ணுநகையும்
விலைமதியா ரத்தினமும் வேண வரிசைகளும்
மலையாது மன்னன் வாரியே தட்டுத்தட்டாய்
சுதர்க்கனையு மச்சமயம் சுதனை வரவழைத்து
இதமாகத் தட்டுகளை எடுத்துமே மூவர்களும்
பதியரச னப்போது பாவை சுதனுடனும்
ததியேதர் மர்பாதம் தான்பணிய யாவரையும்
பாண்டுமன்னன் புத்திரனும் பகர்ந்துமே நல்வாக்கு
வேண்டா மினிக்கவலை விட்டிடு வாயரசே
என்றவுரை கேட்டு எழுந்துமே யவ்வரசன்
நன்ருய்த் தருமரிடம் நவிலுவான் சங்கதியும்
என்குல தெய்வமே ஏழையான் செய்தகுற்றம்
மன்னவ ரேபொறுத்து மகிழ்வாக வெந்தனையும்
ஆதரிக்க வேண்டுமென்று அரச னுரைத்திடவும்
பேதமில் லாத்தருமர் பிரியம தாய்மொழிவார்
அரசனே யுன்னிடத்தி லண்டி யிதுவரையில்
குறைவில்லை யெங்களுக்கும் குமரன் கிருபையினுல்
என்பதியைப் போலே இருந்துமிங் குநானும்
நன்னய மாயரசு நான்செய்தேன் ராச்சியத்தை
ஒன்றுங் குறைவில்லை உன்மேலுஞ் சந்தோஷம்
நன்ருகக் கேளுமென்று நவிலுவா ரேதருமர்
மன்னவனே யெங்களுக்கு மறுதுணையில் லாததினுல்
உன்துணை யன்றியுமே ஒருதுணையுங் காணேன்காண்
எங்களுட னேநீயும் இருக்கும் படைபூராவும்
பங்கம்நீனை யாதபடி பாரரசே யாமேகி
கூடி யனைவோரும் கொற்றவனே சீக்கிரத்தில்

நாடித்துரி யோதனனை நாம்போய் வதைக்கவேணும்
என்றுமே தர்மர் இயம்பியதைக் கேட்டரசன்
இன்றுமே யாங்கள் எல்லோருந் தானடிமை
சந்தேக மில்லையென்று சாற்றி யரசனுமே
விந்தையா யெல்லோரும் வீற்றிருக் குந்தருணம்

தருமரிடம் உத்தரகுமாரன் உரைப்பது

அந்தச் சமயமதில் அரசன்சுத னுத்தரனும்
சந்தோஷ மாய்வந்து தருமரை யும்பணிய
கண்டுமே தர்மர் காவலனை யப்பொழுது
ரெண்டுகரத் தாலெடுத்து நேர்மையாயா சீர்வதிக்க
அப்போ சிறுவனுமே அவரிடத்தி லோர்செய்தி
தப்பா துரைப்பான் தன்னெண்ணம் பூராவும்
இந்தநற் பூமியொடு இருக்கும்படை யத்தனையும்
சொந்தமாய்த் தங்களுக்கு சுவாமி யளித்தேனே
மன்னவரே தாங்கள் மனப்படி யேயடிமை
சொன்ன தொழில்தனையே சுவாமியே செய்வோமே
சாமியேயென் தங்கைக்கும் தனுவில்வல்ல விசயருக்கும்
பூமியி லுள்ளவர்கள் புகழ்ந்திடக் கல்யாணம்
செய்துமே வையுமென்று தீர்க்கமாய்ப் பாலகனும்
பைய வுரைத்து பணிந்தங்கு நின்றனனே

அருச்சுனன் உத்தரகுமாரனுக்கு உரைப்பது

மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாளும் புண்ணியன் சுதாகேளும்
உன்தங்கை யென்னிடத்தில் உகந்துநாட் டியமதனை
மன்னவனே கற்றுள் வளர்த்தபிள்ளை யைப்போல
கூடாது மணம்புரிய கொற்றவனே நீயிங்கு
நாடாத வார்த்தைகளை நவின்றாயே பாலகனே

உன்கருத் தின்படியே ஓதுவேன் கேள்மன்னு
என்மக னபிமனுக்கு ஏற்றவுன் தங்கையரை
செல்வக் கலியாணம் செய்தாலும் யாவருக்கும்
நல்லா யிருக்குமென நவின்றனே வில்விசயன்
தம்பி யுரைத்ததொரு சங்கதிகேட் டேதருமர்
நம்பி யவருமே நல்லதென்று சம்மதிக்க
சங்கதி யைவிராடன் தான்கேட் டகமதிலும்
சிங்கார மாகவும் செய்திக்குச் சம்மதித்து
மேதினி யோர்புகழ மேன்மை யொடுவமைந்த
வீதிக ளெல்லாம் விநோதமான சிங்காரம்
செய்யென்றான் மந்திரியை சீக்கிர மேயவனும்
தெய்வலோ கம்போல சிறப்பித்தா னேநகரை
கல்யாண வாத்தியத்தைக் கடல்போல வேமுழக்கி
கல்யாண வோலைகளை கண்டெழுதி தூதர்கையில்
கொடுத்துமே சங்கதியைக் கூறி யவனிடத்தில்
விடுத்தார்கள் தேசமெல்லாம் வேந்தர்கள் லிகிதமதை
தேசதே சங்களெல்லாம் சென்ற நிருபமதை
பாசமொடு வரசர் பார்த்துப் படித்ததனை
ஐவர்க ளுருமாறி அக்ஞாத வாசஞ்செய்து
மெய்யாய் வெளியானர் மேகவண்ணன் செயலே
எல்லோரும் சந்தோஷ மிவர்கள்வெளி யேறியதை
சல்லாப மாய்ப்பேசி தானிருந்தா ரம்மானை

முன், திரிகர்த்தனிடம் அடிபட்டோடின
விராடன்மைந்தன் சுவேதனன்
ஈசனைநோக்கித் தவஞ்செய்து வரங்கள் வாங்கியதையறிந்து
கிருஷ்ணன் அழைத்து வருவது

முன்போர் நடந்ததிலே முனைந்ததிரி கர்த்தனுக்கு
பின்முதுகு காட்டிப் போனசு வேதனுமே

காட்டினிலே சென்று காய்கனிக ளைப்புசித்து
நீட்டியே யூசிதனில் நின்றான் தவமவனும்
வேதனையில் லாதபடி வேண்டிய காலமிருக்க
பாதிமதி தரித்த பரமனு மங்குவந்து
மைந்தனுங் கேட்ட வரமதை நீலகண்டன்
சந்தோஷ மாய்க்கொடுத்து தான்சென்றார் வெள்ளிமலை
அந்தச்சங் கதிதனையும் அறிந்துமே கோபாலன்
தந்திர மாயவனை தானழைத்து வந்தாலும்
பாரதப் போரதனில் பார்த்தனுக் குத்துணையாய்
தீரயுத்தஞ் செய்வானெனத் தெரித்துமே மாயவனும்
அதிவேக மாகவே ஆயனு மங்கோடி
ததியவனைக் கண்டு சாற்றிச்சில சங்கதியும்
அவனை யுறவாடி அதிகப் பிரியமதாய்
இவனுக்குப் பகையானோர் எல்லோரை யும்மடித்து
தவரா திவனை தான்கூட்டிச் சீக்கிரத்தில்
துவரா புரிவந்து சுகமாக வங்கிருக்க
தீதுக ளில்லாதபடி செய்து வரும்நாளில்
தூதுவ ரோலைதனை தொழுது கொடுத்திடவும்
அந்தச்சுருளை ஆயனுங் கைவாங்கி
சந்தோஷ மாய்ப்படித்து சாற்றுவா ரண்ணருக்கும்
ஐவர்பஞ்ச பாண்டவரும் அக்ஞாத வாசமதை
மெய்யா யவரிருந்தும் வேந்தர்க ளுங்கழித்தும்
மருக னபிமனுக்கு மங்கையாம் உத்தரையை
திருக்கலி யாணமதைச் செய்கிறா ரைவர்களும்
சங்கதியைத் தெரிந்தோம் சல்தி பயணமென்று
தங்கை சுபத்திரையுந் தன்மருக னபிமன்
பெலத்திலும் நானே பெரியவ னென்றுரைக்கும்
பலபத்ர ராமருடன் பாங்கான சாத்தகியும்

கிருதவர்மா மன்னன் கிருதவீ ரியனுடனே
நிருபன் சுவேதனனும் நிமிஷம் பயணமென்று
எல்லவரு மச்சமயம் ஏறி ரதமீதில்
நல்லவேளை யதனில் நடத்தினா ரோதத்தை
நாடு கடந்துமவர் நதிகளை யுந்தாண்டி
காடு கழித்துமவர் கண்டார் விராடநகர்
விந்தையொடுவந்த விபரந் தெரிந்தைவர்
சந்தோஷ மாகவுமே சாற்றி விராடனுக்கும்

விராடராஜனும் பஞ்சவர்களும் கிருஷ்ணன்
முதலானோரை எதிர்கொண்டழைக்க வருவது.

சட்டெனவே யெழுந்து சகலரு மொன்றாக
பட்டுடன் ரத்தினமும் பார்மன்னர் தாமெடுத்து
எதிராக வந்து எம்பெருமா ளைக்கண்டு
சதிராக வேதொழுதார் சகலரு மச்சமயம்
எம்பெருமா ளங்கு எல்லோரையா சீர்வதித்து
தம்முடன் தேரேற்றி சல்திசென் றூர்நகரம்
வாளபிம னங்கேதான் மன்னர்க ளைவரையும்
பாலன் பணிந்தானே பாதமதில் வீழ்ந்து
வாரியெடுத்து மகிழ்ந்துமே வாழ்த்திடவும்
கோரிப் பணிந்தான் கோதை துரோபதையை
மங்கையும் பாலகனை மகிழ்ந்து வாசீர்வதித்து
சிங்கார மாகச் சேர்ந்திருக்க வெல்லோரும்
நல்லதொரு தூதுவர்கள் நகரங்கள் பூராவும்
சல்லாப மாய்ச்சென்று தான்கொடுக் கச்சுருளும்
அவர்க ளதைவாங்கி அருமையா கப்பார்த்து
தவராது விராடநகர் தான்வந்தார் படையுடனே
பாஞ்சால ராசனும் பத்தினி படையுடனே

பஞ்சவரிடத்தில் பரிவாக வந்திருந்தார்
எல்லவருஞ் சேர்ந்து இன்பமான செய்திகளை
சல்லாப மாய்ப்பேசி தானிருக் குஞ்சமயம்
மாய னிடந்தனிலே மன்னன் விராடன்வந்து
ஆயனே நாளைமுகூர்த்தம் அருமையா யிருக்குதென
தங்கள் மனப்படியே தடையில்லை யேயதிலும்
எங்களா லட்டியில்லை யென்றுரே மாயவரும்
அப்போது மந்திரியை அழைத்து நகரதனை
தப்பாது சிங்காரம் தான்செய்யு மென்றுரைக்க
மந்திரி யரசனுரை மகிழ்ந்துமே தான்கேட்டு
சந்தோஷங் கொண்டு சல்திநக ரந்தனையும்
கல்யாண மண்டபமும் காவலர்கள் தான்மகிழ
சொல்ல முடியாத சோடினையே செய்திடவும்
மன்னன் நகரமதை மகிழ்ந்துபார்த்துப் பொன்னகரம்
பின்ன மடைந்து பேசாது சென்றதுவே

### வாளபிமனுக்கும் உத்தரைக்கும் திருமணஞ் சூட்டுவது

மண்டலத்தை யாளும் மகராசர் யாவர்களும்
அண்டை மணவரைமுன் அமர்ந்திருக்க வச்சமயம்
மாமனுங் கண்ணனும் மாப்பிள்ளை யபிமனுக்கு
தாமத மில்லாமல் தயவுடனே சோடினையும்
வேண பணிகளொடு விளம்பிட வொண்ணுவாடை
கோண முடியிசைந்த கொத்துமுத்து மாலைகளும்
இன்னு மவர்க்கு இசைந்தபல வாபரணம்
மன்னர்கள் தான்மகிழ மகிழ்வா யலங்கரித்து
இந்திரனைப் போல இசைந்தவே டம்பூண்டு
வந்திருந்தார் மனையில் மன்னர்கள் தான்மகிழ

தாதியர்க ளன்னேரம் தையலா முத்தரைக்கு
கோதிச் சிகையதனை கொண்டை பெரிதாயிட்டு
நகைதனை யேபூட்டி நல்லமங் கைதனக்கும்
வகையான துகிலினையும் மாது யிடைபூட்டி
நாட்டியமா தர்நடிக்க நங்கைய ரவ்வேளை
கூட்டியே வந்து கோதையை மனையில்வைக்க
சொந்த மாதர்நடித்து சோபனங்கள் பாடிடவும்
அந்தண ராசீர்வதித்து அன்புடனே வேதமதை
வேத வியாசருமே விளம்பியே மந்திரத்தை
நீதிப்படி யோமம் நெய்விட் டவர்வளர்த்து
கங்கணங் கட்டினுர் கன்னிக்கும் மாப்பிள்ளைக்கும்
அங்கனம் தாரைவார்க்க அருச்சுனன் வாங்கினனே
அருமையாய்ப் பாலகனும் அரனை மனத்திலெண்ணி
திருமங்கி லியமதனைச் சேயிழை கழுத்தணிந்தும்
அம்மி மிதித்துமவர் அருந்ததியை விண்ணேக்கி
தம்மனதி லெண்ணி தைய லுடன்பார்த்தும்
மன்னர்கள் பாதமதில் மகிழ்ந்து பணிந்திடவும்
பின்னமில் லாதவர்கள் பிரியமா யாசீர்வதிக்க
அங்குள்ள மங்கையர்க ளனைவரையும் தாம்பணிய
பங்கமில் லாதவர்கள் பகர்ந்தார்கள் நல்வாக்கும்
விண்ணதிலே நின்று வேணபெருந் தேவர்களும்
மன்ன னபிமனுக்கு மலர்மாரி யும்பொழிந்தார்
வானவர்கோ னிந்திரனும் வந்துவிண்ணி லேநின்று
தானகத்தி லேநினைந்து சாற்றினுன் நல்வாக்கும்
மற்று மிருநாளும் வாகாய்ச் சடங்குகளை
சுத்தம தாய்ச்செய்து சுபகா ரியமுடித்தார்
மன்னன் விராடனும் மகளுக்கே சீதனமாய்
நன்னகர் உபலாவியம் நங்கை தனக்களித்தும்

இன்னும் பலநகரும் ஏற்ற படைகளையும்
மன்னன் கொடுத்தான் மகிழ்ந்துமே மாப்பிள்ளைக்கு
வந்த வரசர்களும் வழுத்தி விடைவாங்கி
சந்தோஷ மாய்ச்சென்றார் தங்கள் நகர்தனக்கு
மாயனும் பஞ்சவர்க்கு வழுத்தியே சங்கதியை
ஆயன் ரதமேறி அனைவரையுந் தானழைத்து
தவராது யாவரையும் தானழைத் தவர்நடந்து
துவரா புரிவந்து சுகமாக வேயிருந்தார்
மாது சுபத்திரையும் மாப்பிள்ளையும் பெண்ணும்
தீதுகளில் லாதபடி சென்றாருப லாவியத்தில்
பாண்டுமென்ன னீன்றெடுத்த பாண்டவரும் பத்தினியும்
நீண்ட வுபலாவியத்தில் நேர்மையுட னேயிருக்க
அன்றுவரை சேமம் ஆயனரு ளாலவர்கள்
நன்றாக வேவசித்தார் நாதனரு ளம்மானை

விராடபர்வம் முற்றிற்று

---

உபலாவியத்தில் பஞ்சவர்களும் கிருஷ்ணன்
மற்றவர்களும் யோசனை செய்வது

நலமான பஞ்சவரும் நல்ல கிருஷ்ணனுடன்
பலராம ருமங்கே பார்த்திப ரானவரும்
பாஞ்சால தேசமன்னன் பதியரசன் விராடன்
நீஞ்சமுடியாமல் நிறைந்துமே யங்கிருந்து
எல்லவருமெழுந்து ஏந்தல் தருமரையும்
சல்லாபமாய்த் தொழுது தக்க பெருஞ்சபையோர்
ஆயனையும் பணிந்து அவர்களின் யோசனையை

மாய னிடந்தனிலே வழுத்துவார் யாதெனிலோ
பாவிதுரி யோதனனும் பஞ்சவ ரைவரையும்
தாவி யழைத்துமவன் தன்னுடைய மண்டபத்தில்
மாயமாய்ச் சூதாடி மன்னவரைத் தோற்கவைத்து
ஞாயமில் லாதபடி நங்கையை யங்கழைத்தும்
மாது துரோபதையை மாபாவி கள்சேர்ந்து
தீதுகள்செய்தும் செப்பினது பஞ்சவர்க்கும்
பனிரெண்டு தன்வருடம் பாழடையுங் கானகத்தில்
தனியே யிருந்திடவும் சாற்றினு னப்பாலும்
பின்னு மொருவருடம் பெலமான வக்ஞாதம்
மன்ன ரிருந்திடவும் வழுத்தியது தப்பாமல்
எல்லாங் கழித்துமே இதமான பஞ்சவர்கள்
நல்லகால மதினல் நாதனே பிழைத்தார்கள்
இப்பவே நாங்க ளெல்லாரு மொன்றுகூடி
தப்பாமற் சேனைகளும் சல்தி புறப்பட்டு
அரைநொடியி லேநாங்கள் அஸ்தினு புரியடைந்து
துரியனையே வெல்வோம் சுருக்காய் விடைதாரும்
என்று மவர்க ளியம்பியதைக் கேட்டரசன்
நின்றதோர் மன்னர்கட்கு நிகழ்த்துவா ரேதருமர்

தருமர் அவ்வரசர்களுக் குரைப்பது

மன்னர்களே நீங்கள் மகிழ்ந்துமே யெந்தனிட
பின்னமதைப் பார்த்து பெருமை யடைவதற்கு
செய்யவேணு மென்று செப்பியே யெந்தனிடம்
ஐயா விடைகேட்டீர் அருமையொடு கேளுங்கள்
தர்மம் தலைகாக்கும் தவர விடாமலுமே
கர்ம முனைவிடாது காவலரே யென்றைக்கும்
ஆதிபிர்ம னெங்களுக்கு அமைத்த படியாலும்

வேதனையை யடைந்தோம் வேந்தனே யிதுவரையில்
தாங்களும் யோசித்து சரியாக யெந்தனிடம்
பாங்கா யுரைத்த படைவீர ரேகேளும்
தூது விடுவோம் துரியோ தனன்கேட்டு
ஓதுவானே பதிலும் உள்ளது தப்பாமல்
கிருஷ்ண னிருக்கின்ரூர் கிரமப்படி யாவரையும்
பெருநஷ்டம் வாராமல் பேணி யருள்புரிவார்
என்றுமே தர்மர் எடுத்துரைத்து மன்னருக்கும்
நன்ருக மாயனிடம் நவிலுவார் சங்கதியும்
ஆயனே கேளும் அடிமையான பஞ்சவர்க்கு
மாயா துணையிருந்து மகிழ்ந்துமே யெங்களுக்கும்
இனிமேல் நடக்கும் எல்லாச்சங் கதிகளையும்
தனியே நடத்தவேண்டும் சாமியே யுன்கிருபை
செய்து அடியவரைத் தீர்க்கமாய்க் காப்பதுவும்
ஐயனே யுன்செயலென் றறைந்தார் தருமருமே

கிருஷ்ணபகவா னுரைப்பது

பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமருமே
அருமையா யுரைத்ததையும் ஆயனுங்கேட் டன்னேரம்
சந்தோஷ முண்டாகிச் சபையதனி லேயிருக்கும்
அந்த முடையதோர் அரசரிட மேமொழிவார்
மன்னர்க ளேதருமர் வழுத்திய தைப்போல
மன்னன் துரியனிடம் வழுத்தவே தூதுவரை
அனுப்பினல் நாமும் அவ்வரசன் தன்னிடத்தில்
அனுப்பிச காதபடி அறைகுவார் சங்கதியை
அவனுரைக்கும் சங்கதியை அறிந்துமே தூதுவர்கள்
தவாராது நம்மிடத்தில் சாற்றுவார் பூராவும்
என்றுமே மாயன் எடுத்தோத வேயரசர்

நன்ருகக் கேட்டு நவிலுவா ரேயவர்கள்
மாயனே தங்கள் மனப்படியே தூதுவரை
ஆயனே நாமனுப்பி அறிகுவோம் சங்கதியை
இப்பவே தூதுவர்க்கு இயம்பியே சங்கதியை
தப்பா தனுப்புமென்று சாற்றினு ரேயரசர்
மண்ணையுண்டோன் கேட்டு மகிழ்வு மிகவடைந்து
வெண்ணையுண்ட கண்ணன் விளம்புவா னரசருக்கு
அரசர்க ளேகேளும் அனுப்புமோர் தூதுக்கு
திரவானுய் வேணுஞ் செய்தி களையுரைக்க
இந்தச் சபையி லிருக்கும் உலூகமுனி
விந்தையான சாஸ்திரத்தை விழுங்கின வேதாந்தி
துரியோ தனனிடத்தில் துடியாகப் பேசியவர்
அறிவா ரவனெண்ணம் அத்தனையுந் தப்பாமல்
அவரையே தூதுக்கு அனுப்புவோ மென்றுரைக்க
தவராது ராசர்களும் சரியென் றுரைத்திடவும்
அப்போது மாயன் அரசன் தருமரிடம்
தப்பா துரைப்பார் சகலவர சர்முன்னே
துரியோ தனனும் தொடர்ந்து வரசர்களை
அறியவே படைத்துணையாய் அரச னழைத்திடுவான்
அவனுக்கு முன்னே ஐவர்க ளேநீங்கள்
தவரா தரசரிடம் சல்தியோ லையனுப்பும்
உலூகமுனி சென்று உரைப்பதையெல் லாங்கேட்டு
சலுதியாக வந்திங்கு சங்கதி யைமொழிவார்
அப்பால் வருகிருேம் ஐவர்க ளேநாங்கள்
இப்ப விடைதருவீர் இன்று நகர்செல்ல
என்றுமே மாயன் இயம்பவே யைவர்களும்
நன்ருக வேகேட்டு நாதனையுந் தான்பணிந்து
விடையது கொடுத்திடவும் வேந்தன்பல ராமனுடன்

தடைக ளில்லாதபடி தான்சென்ருர் துவாரகையும்
தேச வரசர்களும் சென்றுமே தர்மரிடம்
பாசமொடு சென்று பகருவார் சங்கதியும்
எங்கோனே யாங்கள் ஏகுவோம் நகர்தனக்கு
சங்கதி வந்தபின் தடையில்லா மல்வாரோம்
இன்று விடைதாரும் என்றுரைக்கத் தருமருமே
நன்ருய் விடையளிக்க நகரமது சென்ருர்கள்
மன்னன்பாஞ் சாலனும் மகிழ்ந்துமே ஐவரிடம்
பின்னுந் துணையாகப் பிரியம தாயிருந்தான்

உலூகமாமுனியைத் தூதுஅனுப்புதல்

மேவுலகோர் கொண்டாட மேன்மை யொடுவரசு
பூவுலகை யாண்ட புண்ணியன் பாண்டுமைந்தன்
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமருமே
அருமை யொடுசபையில் அறைவா ரரசருக்கும்
இந்தச் சபைதனிலே இருக்கின்ற மன்னர்களே
சந்தோஷ மாய்க்கண்ணன் சாற்றி யதுபோல
தேச வ்ரசருக்கும் செல்ல லிகிதமது
பாசமொடு வெழுத பகருங் கணக்கருக்கு
வந்தவர்கள் தவிர வாரா தவர்தமக்கு
சொந்த லிகிதமது துணைப்படை யாய்வரவே
எழுதுமென் றேயரசர் இயம்பக் கணக்கருக்கும்
பழுதிலா தெழுதி பாரரசர் கைக்கொடுக்க
வாங்கிச் சுருளதனை வாகான தூதுவர்கள்
ஓங்கி வளர்ந்தவனம் ஓர்நிமி ஷங்கடந்து
தேச தேசமெல்லாம் சென்று வரசரிடம்
நேசம தாய்லிகிதம் நின்றுமவர் கைக்கொடுக்க
அவர்க ளதைப்பார்த்து அன்பு மிகப்பெருகி
தவராது வாரோமென்று சாற்றினர் தூதுவர்க்கும்

பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமரவர்
உரிமையுட னேவந்து உலூக மாமுனியின்
பாதமதி லேபணிந்து பாரரச னச்சமயம்
பேத மில்லாதபடி பிரியம தாய்மொழிவார்
தக்கபெருஞ் சாஸ்திரத்தை தான்கரைத் துண்டவரே
மிக்கப் பெருஞ்சடையோன் வேடமதைப் பூண்டவரே
ஆய னுரைப்படியே அஸ்தின புரஞ்சென்று
நேயமொடு தாங்கள் நிகழ்த்துவீர் சங்கதியும்
பெரியப்பா தன்னோடு பின்னும் விதுரனுக்கும்
அறிய வுரைப்பீர் அனேகங் கோடிசரணம்
தாத்தா வீஷ்மருக்கும் தக்ககுரு துரோணருக்கும்
தோத்திரங்கள் செப்பி தொழுதேனென் றவர்க்குரையும்
அரவக்கொடி யோனிடத்தில் அவர்களையும் கூடவைத்து
திரமான வாக்கியத்தை தேச வரசனிடம்
சங்கதியை யுரைத்து சல்தி பதில்கேட்டு
இங்குநீங்கள் வாருமென்று இயம்பி ரிஷிதனக்கும்
சல்லாப மாய்ரதத்தில் தானவரை யேற்றி
நல்லவேளை யதனில் நடத்தின ரேரதத்தை
அங்கே ரதம்நடத்தி அதிவிரை வாய்வருக
இங்கேயஸ்தி னுபுரியில் இடுக்கஞ்செய் வோன்செய்தி
துரியோதனுதிகள் சபைகூடி யோசனைசெய்வது
கண்ணில்லான் வேண தவம் கர்த்தனை நினைத்தீன்ற
மன்னன்துரி யோதனனும் மகாசபை தன்னில்வர
கருணன்விது ரன்சகுனி கங்காசுதன் துரோணரொடு
பெருவில்லைக் கைப்பூண்ட பேரரச ரங்குவந்தும்
சல்லாப மாய்க்கூடி தானிருக் குஞ்சமயம்
உல்லாசங் கொண்டுஉரைப்பான் துரியோதனன்
இந்தச் சபைதனிலே இருக்கின்ற மன்னர்களே

சந்தோஷ மாய்க்கேளும் சாற்றுகிற சங்கதியை
பாண்டுமென்ன னீன்ற பஞ்சைய ரைவர்களும்
மீண்டுமே யக்ஞாதம் வெளியேறி யேயவர்கள்
மச்சநா டதனிலே மன்னவர் களுமங்கு
லெச்சையில் லாதபடி நின்று தொழில்புரிந்து
பார்த்தன் சுதனுக்கும் பாவையா முத்தரைக்கு
தீர்க்கமாய் கலியாணம் செய்தாரா மைவர்களும்
பாரத யுத்தமதற்கும் படைத்துணை கள்சேர்க்க
பாரரசர் யாவருக்கும் பகர்ந்திருக்கார் சங்கதிகள்
பழுதில்லாப் பித்தனைப்போல் பாரவேட மேபூண்ட
உலூகமுனி தன்னை உகந்துதா தனுப்பினராம்
இன்னும் பலவிதமே இகழ்ந்துதுரி யோதனனும்
மன்னர் சபையிலே வழுத்தினன் செய்திகளை
அங்கிருந்த பெரியோர் அறைந்ததை யேகேட்டு
பங்கமில் லாதபடி பகருவார் ராசனுக்கும்
மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யர்ளும் புண்ணிய னேகேளும்
ஐவர்பஞ்ச பாண்டவரும் அரசர் தனக்குரைத்து
செய்யவே யுத்தமது சேர்த்திட்டா ராம்படைகள்
நாமுமோ லையெழுதி நல்ல வரசரிடம்
தாமதமில் லாதபடி சல்தி யனுப்புமென்றுன்
அவர்க ளுரைப்படியே அரசனு மேகேட்டு
தவரா தெழுதி தான்கொடுத்து தூதரிடம்
அதிவேக மாக அவரைச்செல் லவிடவே
ததியே நடந்துமவர் சகலதே சந்தோறும்
மன்னரிடங் கொடுக்க மகிழ்ந்து மவர்பார்த்து
பின்னமில் லாதபடி புறப்படுவோ மென்றார்கள்
அப்போகங் காசுதனும் அகத்திருக்கும் யோசனையை

தப்பா துரைப்பார் தக்க வரசனிடம்
வேந்தர்களெல் லாம்போற்ற விபரீத மானகுண
சாந்தனே கேளும் சங்கதியை நன்ருக
இந்தவேளை நீயும் ஏகித் துவாரகைக்கு
சந்தோஷமாய் மாயன் றன்னிடத்தி லேமொழிந்து
மாய னிடத்திலேயும் மன்னுவுன் றிரங்காட்டி
ஆயனைப் படைத்துணையாய் அழைத்துவந்தா யாமாஞல்
பஞ்சவரை நாமும் பறக்கவே விட்டிடலாம்
சஞ்சல மில்லையென்று சாற்றிஞர் கங்காசுதன்
அந்தச்சங் கதிதனையும் அரசனன் பாய்க்கேட்டு
சந்தோஷங் கொண்டு சரியெனச் சம்மதித்தும்
நல்லசோடி வான்பரியை நயமாய்த்தே ரிற்பூட்டி
சல்லாப மாய்ப்பாகன் தான்வந்து மங்குநிற்க

துரியோதனன் துவாரகைக்கு வருவது

அரசன்துரி யோதனனும் அனேகமான படைக்கு
திரமதனைப் போதித்து சீக்கிரம் ரதமேறி
பாரரசர் மயங்க பாம்புக் கொடியதனை
தீரமொடு ரதத்தில் செண்டாவைப் போல்நாட்டி
ரதத்தை நடத்தெனவும் நல்லதென்று பாகனுமே
இதமாய் நடத்தி ஏகிஞ ஞர்கடந்து
காடு கடந்தும் கரியமலை யுந்தாண்டி
மேடுபள்ள முள்ளதெல்லாம் விரைவாக வேகழித்து
குருநாட்டு எல்லைவிட்டு கோபாலன் எல்லையதில்
பருவதங்க ளழகும் பாரநதி யோடுவதும்
நந்த வனந்தனிலும் நல்ல பெரியோர்கள்
விந்தையாய்த் தவமிருக்க வேந்த னதைப்பார்த்தும்
வண்டுரீங் காரம்பாட வனத்தினி லேயங்கும்
துண்டுதுண்டாய்க் குஞ்சரங்கள் துள்ளிவிளை யாடுவதும்

அதிசயங்க ளைப்பார்த்து அங்கு வருமரசன்
பதியி லிதைப்போல பார்த்ததில்லை யானென்று
சந்தோஷங் கொண்டுமெவன் சல்தி ரதம்நடத்தி
அந்த வனந்தாண்டி அப்பால் நடந்திடவும்
அங்கிருக்கும் புதுமை அரசன் விழிநோக்க
சங்கு முலவுவதும் சாளிக்கிரா மந்தவழ
ஏரி தடாகமதில் எங்கும் நிறைந்துலவும்
மீறியே நிற்க மேன்மையான செழிப்பும்
நஞ்சை வயல்களிலும் நலமாய்ப் பயிரோங்க
புஞ்சையே யில்லை புடவைகவிழ்ந் தோன்தேசம்
கடந்து யிவைகளையும் கண்டுதுவ ராபுரியில்
தொடர்ந்துமே பார்த்தான் துரியனு மச்சிறப்பை
வீதிக ளெல்லாம் விளம்பவொண் ணுமேடை
சோதிமய மாகவும் துலங்குதங்கு மாளிகையும்
அதுவுங் கடந்து ஆயர்கள் வீதிவர
பதுமைகள் போலவும் பசுக்கள் நிற்கும்விதமும்
அந்தணர் வீதிகளும் அறையும் வேதமுறைகள்
சந்தோஷ மாய்க்கேட்டு தான்கடந் தவ்வீதி
பார்த்துமர வக்கொடியோன் பார்வை யதுகுன்றி
வேர்த்துமே பாகனுக்கும் விளம்புவா னேசெய்தி
இன்னகரைப் போலே இதுவரையி லேயானும்
நன்னகரைக் கண்டதில்லை நல்லவள நாடாகும்
இன்னும் பலபுதுமை இருக்கும்விந் தையதனை
மன்னனுங் கண்டுமெதை மகிழ்வுட னேவரவும்

துரியோதனன் வரவை கிருஷ்ணனறிந்து காவலர்களிடம் தடைசெய்யாது விடச்சொல்லி சயனித்தல்

ஆரடா காவலரே அரவக்கொடி யோனிங்கு
வீரமொடு வந்தால் விடுவீர் தடை, செய்யாது

என்றுமே மாயவரும் இயம்பியே காவலர்க்கு
நன்ருகச் சென்று நல்லதொரு வறையில்
பாற்கடலில் பள்ளிகொண்டோன் பஞ்சணையிற் பள்ளிகொண்டு
பார்த்தன்பேரில் ஞாபகமாய் பகவானு மன்னேரம்
கண்ணிரண்டை யும்மூடி கரியமால் தன்னகத்தில்
இன்னம் விசயனை இங்குகா ணேமேயென
எண்ணி யிருந்தாரே எழிலான சயனமதில்
விண்ணவருங் கொண்டாட வீற்றிருக் குஞ்சமயம்
அப்போ துரியோதனன் ஆனபடை பூராவும்
தப்பாது கொண்டுவந்து தானிறுத்தி யேமுகப்பில்
தனியேவுட் சென்ருன் தடையில்லா தங்கிருக்க
கனிவுடனே யரசன் கண்டுமங்கு சிறப்பை
கண்ணனந் தப்புரத்தை காவலனுந் தான்தேடி
திண்ணம தாயவனும் திறந்து கபாடமதை
நல்லயெண்ண மில்லாதான் நாத னிடஞ்செல்ல
சல்லாப மாய்க்கண்ணன் சயனங்கொண் டச்சமயம்
பெரிய குறட்டைதனைப் பிரியமாய்விட்டிடவும்
அறிந்துதுரி யோதனனும் ஆயரவர் சயனம்முட்டு
எழுந்தபின் சங்கதியை இயம்புவோ மென்றரசன்
அழுந்தவே தானிருக்க ஆசனத்தைப் பார்த்திடவும்
ஆயனது கால்மாட்டி லங்கிருக்கும் ஆசனத்தை
நேயனுந் தான்கண்டு நின்றுயோ சனைசெய்து
இவனே யிடையன் இவனுடைய கால்மாட்டில்
தவரு யிருப்பதுவும் சரியில்லை யென்றவனும்
மண்ணையுண்டோன் காற்புறத்தில் வைத்திருந்த ஆசனத்தை
மன்னவனு மெடுத்து வைத்து தலைப்புறத்தில்
குறைவென் றவனினைந்து குடிகேட னுந்துரியன்
மறைவாக வேயிருந்தான் மாயவன் முடிப்பக்கம்
ஆயனுங் கண்டு அரச னகநினைப்பை

மாயனும் பெருங்குறட்டை மகிழ்ந்துகாட்டி ஞன்சேட்டை
பாண்டுமென்ன னீன்றெடுத்த பஞ்சவரில் விசயனுமே
ஆண்டவனைக் காணவென்று அங்கு மவன்வந்து
ஆயன் சயனமதை யறிந்துமே யச்சமயம்
மாயனிரு பாதமதை மகிழ்ந்துவிச யன்பிடித்து
எங்களைக் காக்கும்தெய்வம் இன்னமென் னசயனம்
எங்கோனே யென்று இரைந்தே சத்தமிடவும்
மன்னனந்த கோன்சுதனும் மகிழ்ந்து விழிதிறந்து
என்னகா ணர்ச்சுனரே இங்குவந்த காரியமும்
மன்னர் தருமரொடு மற்றுமுள்ளோர் தையலுமே
பின்னமில் லாதபடி பெருமையோ மைத்துனரே
என்றுமே மாயன் இம்மொழிகேட் டேவிசயன்
நன்றெனவே செப்பி நவிலுவா னுயரிடம்
அண்ணனர வக்கொடியோன் அமர்ந்திருக் காரெனவும்
திண்ணமாச் செப்பினன் சிலைவிசயன் கண்ணனுக்கு
ஆய னதைக்கேட்டு அதிகப் பிரியமதாய்
மாயனுஞ் சென்று மன்னன் துரியனையே
கட்டித் தழுவி காவலனே யெந்தனையும்
தட்டி யெழுப்பாது சதிசெய்தா யேமன்ன
கெட்டவதியாலும் கிட்டியெனை மூத்தவளும்
கட்டழகா யானும் கண்துயின்றே னேபாவி
இப்பவே தங்களைக்கண் டிருந்து மதியாமல்
தப்புகள் செய்ததை தயவாய்ப் பொறுத்தருளும்
தாங்க ளிங்குவரவும் தனையனே முன்னோர்கள்
நாங்கள்செய்த நலமோ நற்பூமி செய்தவமோ
இன்னும் பலவாறுய் எடுத்தோதி யேமாயன்
மன்னவனே யிங்குவந்த வகைதனை யோதுமென
சங்கதிகள் தன்னையே தான்கேட்டு மேதுரியன்

பங்கம்நினை யாதபடி பகருவான் யாதெனிலோ
நாளை நடக்கும் நல்லபெரும் போருக்கு
வேளை படைத்துணையாய் வேந்தே யுனையழைக்க
வந்தே னென்றும் மாய னிடத்தினிலே
சந்தோஷ மாயுரைத்தான் சர்ப்பக் கொடியோனும்
இவனுரைத்த வார்த்தைதனை இருந்தமன் னன்விசயன்
தவராதுகேட்டு தானெழுந்து கண்ண னிடம்
சாமியே நாங்களும் தமையன்துரி யோதனரும்
பூமியில் பாரதப்போர் பொருதுஞ் சமயமதில்
அன்றுமே தங்க ளடிமையர்க் குத்துணையாய்
நன்ருகத் தாங்களையும் நானழைக்க வேவந்தேன்
மாயனே மனமதுவும் மகிழ்ந்துமே எந்தனுடன்
ஆயனே வாருமென்று அழைத்தானே வில்விசயன்
அந்தமொழி கேட்டு ஆயனுந் துரியனுக்கு
சந்தோஷ மாகவே தயவாய் மொழியலுற்ருர்
அரவக் கொடியோனே அங்குவுப லாவியத்தில்
முரசக் கொடியோனுக்கு மொழிந்தேன் வருகுவதாய்
மன்னவனே யவர்க்கு வழுத்தியதோர் சங்கதியை
பின்ன மில்லாதுரைப்பேன் பிரபலனே கேளுமென
எந்தனைப் படைத்துணையாய் இங்குகேட்ட வரசே
அந்தவேளை வந்துஅரவக்கொடி யோன் கேட்பார்
இருவரு மெந்தனுக்கு என்னிரண்டு நேத்திரம்போல்
நிருபனே யென்று நிகழ்த்தி யவரிடமும்
ஆருடன் செல்லுவது ஆருகூ டாதுவென
கூறுமென யான்கேட்க கோமான் தருமருமே
என்னை யவருரைக்க இயம்பி னவர்தனக்கு
முன்னே மொழிந்தேன் முறையது தப்பாது
இருதரப்புப் பேர்களிலே யாருயென் முகமதனில்
அருமையாய் விழித்தார்களோ அவர்களுக் குத்துணையாய்

நடப்பே னென்று நல்ல தருமரிடம்
திடமா யுரைத்த செய்தி யிதுமன்னா
அந்த வுரைபோலே யரசனே நீர்பார்க்க
வந்துவிச யன்விழிக்க வள்ளலே பார்த்திருந்தீர்
அந்த விசயனுக்கே ஆவேன் படைத்துணையாய்
சந்தேக மில்லையென சாமியுரைக் கத்துரியன்
ஆயனே யானும் அவனுக்கு முன்னாக
மாயனே வந்தேனே வழுத்துவ துஞ்சரியா
என்றுவர வக்கொடியோன் இயம்பக்கேட் டேமாயன்
நன்று யரசனுக்கும் நவிலுவார் சங்கதியும்
முன்னையே நீர்வந்தும் முகத்தில்விழி யாததினால்
மன்னா வருவதில்லை மனக்கவலை வேண்டாங்காண்
என்றவுரை கேட்டு எழுந்துதுரி யோதனனும்
நன்றாக மாயனிடம் நவிலுவா னேசெய்தி
ஆயனே நீரும் ஆயுதத்தைக் கையெடுத்து
மாயனே யுத்தமது வள்ளலே செய்யொண்ணாது
இந்த வரமெனக்கு ஈகுவா யென்றிடவும்
சந்தோஷ மாய்க்கேட்டு சம்மதித்தார் மாயவனும்
அரசன்துரி யோதனனே அறைகு வதைக்கேளும்
திரவான் பலராமர் சேர்ந்ததோ ரக்ரோணி
அண்ண னொருபக்கம் அரசனே யான்தனியே
மன்னவனே யாயுதத்தை மலர்க்கையால் யானுந்தொடேன்
தீர்க்கமா யிச்சமயம் செகவரசே யோசித்து
ஆர்வேணு மென்றரசை ஆயனுங் கேட்டிடவும்
அருச்சுன னுங்கேட்டு ஆயரவ ரைத்தொழுது
திருத்தமுட னேயவனும் செப்புவா னேசெய்தி
ஆயனே தங்க ளடிமை தனக்குதவி
மாயனே வாருமென்று மன்னன் பணிந்திடவும்

விந்தையதாய்க் கேட்ட விசயன் றனக்காயன்
சிந்தை மிகமகிழ்ந்து செப்புவார் பார்த்தனுக்கும்
யானுமா யுதமெடுக்கேன் எனக்கேட்டாய் மன்னவனே
யானும்வந்தென் செய்கிறது நல்லபா ரதப்போரில்
என்றுமே மாயன் இயம்பக்கேட் டேவிசயன்
நின்று மொழிவான் நீலவர்ணன் றன்னிடத்தில்
என்னிட ரதமதனில் இருந்துமே சாரதியாய்
நன்னய மாய்நடத்த நாதா வரமருளும்
என்றே விசயன் இயம்பவே கண்ணனுமே
நன்றெனவே சம்மதித்தார் நாரா யணன்மகிழ்ந்து
அப்பொழுது மாயன் அரவக் கொடியோனிடம்
தப்பாம லேயுரைப்பார் சங்கதி யுள்ளதுவை
ஒருவக்ரோணி படையும் உண்மையாய்ப் பலராமர்
தருகிறேன் நானுமக்கே சத்திய வாக்கிதுவே
வெண்ணையுண்ட கண்ணன் விளம்பத் துரியனுமே
திண்ணமாய்க் கேட்டு செல்லவிடை தாருமென
பதியரசே கேளும் பரம னெழுதியதோர்
விதிபோல் நடக்கும் வேந்தனே செல்லுமென்றார்
செல்ல விடைவாங்கி செகத்தை யாளுமரசன்
சல்லாப மாய்ப்படைக்குச் சாற்றிப் பயணமென்றும்
சர்ப்பக் கொடிவேந்தன் தானுரைக்கச் சாரதியும்
கற்பகத் தேர்நடத்தி கடந்துமே யவ்வீதி
நலமா யரசன் நடந்துமே யச்சமயம்
பலராம ரைக்கண்டு பாரரசன் தான்மொழிவான்
படைத்துணை மாயனிடம் பகர்ந்துயான் கேட்டதற்கு
தடையில்லா தும்மையுமே தானளித்தா ரேயெனக்கும்
ஆய னுரைப்படிக்கு அட்டிகள் செய்யாமல்
நேயனே வாருமென்று நிகழ்த்தியே கேட்டிடவும்
திருவுள மேயிறங்கி செகவர சேயுமக்கும்

வருகிறூ மென்று வழூத்தப் பலராமர்
இன்னுஞ்சில செய்திகளை இன்பமா யவர்பேசி
மன்னன் விடைவாங்கி மகிழ்ந்து ரதமேறி
பாகனை ரதம்நடத்த பகர்ந்திட வேயவனும்
வேகமாய் நடத்தினனே வேந்த னுரைப்படிக்கு
காடு கடந்துமவர் கரியமலை யுந்தாண்டி
மேடுநதி யுங்கழித்து வேந்தன்வந் தஸ்தினுபுரி
பதியரசன் கொலுவில் பாங்குடன் பெரியோரை
ததியே நமஸ்கரிக்க சாற்றினுர் நல்வாக்கும்
கங்காசுத னப்போது கண்டுதுரி யோதனனை
அங்கேசென்ற சங்கதியை அறைகுவா யென்றிடவும்
படைத்துணை கேட்க பலராம ரைவாங்கி
விடைகொடுத் தனுப்பியதும் வேந்த னுரைத்திடவும்
கங்கா சுதனுங் கருணை யொடுகேட்டு
பங்கமே வந்ததென்றும் பகருவார் துரியனுக்கும்
ஆயனு மப்போரில் ஆயுத மெடுக்காமல்
மாயனுன் னிடமிருந்தால் மன்னு செயிப்பவர்யார்
எண்ணினுய் படைப்பெருக்கம் ஏந்தலே யுத்தனுக்கு
கண்ணன் கொடுத்ததுமே காவலாயோ ரக்ரோணி
இன்னுஞ்சில செய்திகளை எடுத்தோதி யங்கிருக்க
மன்னர் சபைதனிலே வந்துமோர் தூதுவனும்
தேசமெல்லாம் சென்று தெரிசித்த சங்கதியை
பாசம தாய்மொழிய பாரரசர் தான்கேட்டு
எல்லவரு மிதையே எண்ணியே யோசித்து
சல்லாப மாகவே தானிருந்தா ரம்மானை

கிருஷ்ணனும் விசயனும் உபலாவியம்வந்து
மற்றவர்களுடன் யுத்தத்திற்கு யோசனைசெய்வது

ஆயனும் பார்த்தனும் அருமையோ டச்சமயம்

நேயமாய் ரதமேறி நீண்டகாட் டைக்கடந்து
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமரிடம்
அருமையா யங்குவந்தும் அனைவோரு மேகூடி
சல்லாப மாயரசர் தான்தூ தனுப்பிவைத்த
நல்லவு லூகமுனியை நாதனெதிர் பார்த்திருந்தார்

உலூகமுனிவர் அஸ்தினபுரியில்
துரியோதனன் சபைக்கு வருவது

அந்தவுலூக முனிவர் அஸ்தின புரியதனில்
விந்தையொடு துரோணர் விடமேவி யேயைவர்
பாசமொடு மவர்கள் பணித்தவொரு சங்கதியை
நேசமாய்த் துரோணரிடம் நிகழ்த்தியே யப்பாலும்
கிருபர் வீஷ்மரிடமுங் கிட்டியே பஞ்சவர்கள்
அருமை யொடுரைத்ததை அறைந்து மவர்களுக்கும்
பின்னுமவர் சென்று பிரியம தாய்விதுர
மன்ன னிடந்தனிலே வமுத்துவார் செய்திகளும்
யஞ்சக மில்லாத மன்னவ னேதங்கள்
பஞ்சவ ரைவர்களும் பார வனமிருந்து
வையம்புகழ் மன்னவர்கள் வனங்கழித்து மக்ஞாதம்
செய்து உருவம்பூண்டு சேமமொடு மவர்கள்
கோடி சரணமதை கோவேந்தே தங்களுக்கும்
நாடி யுரைத்தாரென்று நல்லவுலூகர் மொழிந்து
பழுதில்லாம லோதி பாரமுனி யச்சமயம்
கொலு முகப்பில்வரவே கூடிய மன்னர்கண்டு
வந்துபணிய வரசர் வந்தவுலூக முனிவர்
சந்தோஷ மாகவே சாற்றினர் நல்லவாக்கும்
அரவக்கொடி யோன்பணிய அருமையான பெரியோர்
அரசனைக் கொண்டாடி ஆசீர் மிகவதித்தும்
சகலமான வரசர் சார்ந்திருக் கக்கொலுவில்

பகவா னுரைபோல பகர்வார் முனிவருமே
இப்போது யானும் இங்குவந்த சங்கதியை
தப்பாது ரைப்பேன் தனவான்க ளேகேளும்
ஐவர்களு மோராண்டு அருமையொடு கானகத்தில்
மெய்யா விருந்து வேந்தர்க ளப்பாலும்
அக்ஞாதவா சமதிலும் ஆளுருத் தெரியாமல்
தக்கபடி யாயிருந்து தான்கழித்தா ரேயவர்கள்
ஆதியிற் சொன்னபடி அவர்கள்தப் பாதிருந்து
பாதித் தேசமதனை பாரரசே கேட்டார்கள்
அந்தநாளிற் பெரியோர் அறைந்தபடி தப்பாமல்
சந்தோஷ மாய்நாட்டை தான்விடச் சம்மதமா
அல்லது மவர்களுடன் அமராடச் சம்மதமா
உள்ள துரையென்று ஓதிக்கேட் டார்முனிவர்
அரவக் கொடியோனும் அறிந்துமே சங்கதியை
பரபரப்பா யுரைப்பான் பார முனியிடத்தில்
தங்கள் மனப்படிக்கு தடையில்லை யுத்தமதும்
உங்கள்யெண் ணம்போல உள்ளதோர் பூமியிலே
பஞ்சவர்கள் காலும் பட்டிடவுங் கூடாது
பஞ்சைகளை யுத்தமதில் பார்ப்பேன் திரமதனை
என்றுதுரி யோதனனும் இயம்பவே யச்செய்தி
கண்டு விதுரனும் காவலனுக் கேயுரைப்பான்
அப்பனே பஞ்சவர்க்கு அன்றுபேசி யபடியே
தப்பாது தேசமதைத் தான்கொடுப்பா யென்றிடவும்
வேண்டி விதுரன் விளம்பினதோர் சங்கதிக்கு
தாண்டி விழுந்தும் சர்ப்பக் கொடியோனும்
உனக்கு யென்னதெரியும் ஓதினு யிங்குவந்து
தனக்குள்ள குற்றமதைத் தானறியா மன்னவனே
இன்னும் பலவிதமே எடுத்தோதி யேசபையில்
முன்னனு மங்கு மவுனமா தாயிருக்க

திரிதராட்டிரன் உலூகமுனிக் குரைப்பது

தவயோகி வேடமதைத் தக்கதெனப் பூண்டதொரு
சிவயோகி யேகேளும் செப்புகின்ற வாக்கியத்தை
இரண்டு தரப்புகளும் என்பிள்ளை யாரொருவர்
முரண்டிப் போர்செய்தால் முற்றிலுஞ் சாவதுடன்
என்குல மடியோடு மீடேறு மற்போகும்
மன்னவ ரைவருக்கும் மறவாமல் நீர்மொழியும்
அவர்கள்சப தப்படிக்கு ஐவர்களும் வேகமொடு
இவரை மடிக்காது எடுத்துரைப்பீர் நீதிதனை
சல்தியாக நடந்து சங்கதியை யைவரிடம்
சொல்லுவீ ரையா துறைகடந்த முனியே
மனுநீதி தானறிந்த மகாரிஷியே பாண்டவர்க்கும்
அனுப்புவேன் தூதுநான் ஐயனே பின்னுலே
என்றுகண் ணில்லாதான் இயம்பியதைக் கேட்டுமுனி
நன்றெனவே மொழிந்து நாழிகை விடைவாங்கி
ரதமதனி லேறிடவும் நல்லகுணச் சாரதியும்
இதமாய் நடத்தியவர் இவ்வூரையுங் கடந்து
அதிவேக மாய்ரதத்தை அப்பா கனும்நடத்தி
ததியே யுபலாவியம் தான்வந்து பாண்டவர்கள்
இடமதனில் மாமுனிவர் ஏகிடவங் கெல்லோரும்
திடவானை யேபணிய செப்பமுனி நல்வாக்கும்
எல்லவ ரிடத்திலும் இன்பமதாய் மொழிந்து
சல்லாபமா யாவரும் தானமர்ந்தா ராசனத்தில்
பாதி மதிதரித்த பரமன்வே டம்பூண்ட
சோதிமய மானமுனி சொல்லுவா ரரசர்கள்முன்
மன்னன் துரியோதனன் வழுத்தினதோர் சங்கதியும்
பின்னமாய்க் கண்ணில்லாதான் பிரியமா யோதினதும்
ஒன்றுவிடாது முனிவர் ஓதினதை யரசருமே

நன்றாகக் கேட்டுமவர் நவிலுவார் மாயனுக்கு
இனித்தடை யொன்றுமில்லை இருக்கும் படைகூட்டி
அனியாயஞ் செய்தானை அதமாக்கு வோமென்று
அண்டவொண்ணுக் கோபமாய் அரசர் துடிப்பதுவை
கண்டங்கே கோபாலன் கைகாட்டி யாவருக்கும்
திரிதராட் டிரனுமே செப்பிவருந் தூதுவரை
அறிந்து நாம் சங்கதியை அப்பாலே யோசிப்போம்
என்றுமே மாயன் இயம்ப வரசரெல்லாம்
நன்றாகப் பார்த்திருந்தார் நல்லவஸ்தி னபுரியை

திரிதராட்டிரன் சஞ்சயனுக்கு சங்கதிகள்கூறி
ஐவர்களிடம் தூதனுப்புவது

அரவக் கொடியோனும் அமரக் கொலுவினிலும்
திரவான் விதுரனொடு செப்பும்மா மன்சகுனி
கர்ணன்துச் சாதனனும் கரைகண்ட வீஷ்மரொடு
விற்பிடித்த மன்னர்களும் வெகுகோடி யங்கிருக்க
திரிதராட் டிதனுமே செப்பியே சஞ்சயனை
அறிய வரசர்களும் அழைத்துமே முன்புவைத்து
சாத்திரங்களை யெல்லாம் தான்கரைத் துண்டமகா
நேத்தியான சஞ்சயனே நிகழ்த்துவ தைக்கேளும்
என்னிட புதல்வர்களும் என்பிரியத் தம்பிபாலர்
பண்ணிட யுத்தமது படைசேர்த்தார் சஞ்சயனே
ஐவர்களும் பலவான் அரன்வாளி யும்பெற்றோர்
ஐவர்களே செயிப்பார் அதிலேசந் தேகமில்லை
துரியோ தனனையும் துஷ்டன் படைபூராவும்
துரிதமாய் வதைத்திடுவார் தூய்மையுள்ள பஞ்சவர்கள்
சந்தோஷமாய்க் கேளாது தடைசெய்கி றான்பாவி
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமனுமே
அருமையொடு கேட்பான் அடியே னுடமொழியை

அவனிடமே சென்று அடியே னுரைக்கிறதை
தவராது நீமொழிவாய் சஞ்சயனே நீர்கேளும்
இந்தச் சடலமதற்கு என்றுமே மன்னவனே
சொந்தமே யொன்றில்லை தொல்லையொன் றில்லாமல்
கானகத்தில் சென்று காய்கனிக ளையருந்தி
வேணதவஞ் செய்தால் வேந்தர்களே முத்தியது
மண்ணாசை பெண்ணாசை மற்றும்பொரு ளாசைதனை
மன்னர்களே விடுத்து மரவுரி யைப்பூண்டு
பெரியோரைக் கண்டு பேசிச் சினேகமதாய்
அரிய தவஞ்செய்தால் ஐவர்களே முத்திகொள்வார்
ராசரிஷி யாகிடலாம் நற்கீர்த்தி தானடைவார்
தேசமெல்லாம் புகழும் செயவீர னேசென்று
அந்தமுள்ள பஞ்சவரை அடவிக்குச் சீக்கிரத்தில்
சந்தோஷ மாய்ச்செல்ல சாற்றுவாய் சஞ்சயனே
அண்டை யிருந்து ஐவர்க ளிடத்திலேயும்
சண்டைநட வாதிருக்கச் சாற்றுவாய் தந்திரமாய்
இன்னும்பல தந்திரத்தை எடுத்தோதி யேகுருடன்
மன்னர்களெல் லாமயங்க வழுத்தினன் செல்லவிடை
ஆசாரிகள் கேட்டு அதிகவி சாரமுடன்
பேசாது சபைதனிலே பெரியோர் களுமிருந்தார்
சஞ்சயனு மச்சமயம் சல்தி பயணமென
வெஞ்சினமா யிருந்தோர் விடையளித்தார் யாவர்களும்
பாகனுடன் தேரேறி பரிவாக வேயவனும்
வேகமாய் ரதம்நடத்தி வேந்தன் நகரந்தாண்டி
காவனங்க ளெல்லாம் கழித்துப லாவியத்தில்
காவல ரைவர்களுங் கண்டுமே சஞ்சயனை

பஞ்சவருடன் யாவரும் சஞ்சயனை ஆசனத்
திருத்தி வரலாற்றைக் கேட்பது

அருளுமிகப் பூண்ட அன்பான சஞ்சயனே

இருமிரு மென்றுமவர் இருத்தியே யாசனத்தில்
அந்தவேளை யதனில் அவரிடத்திற் சேமமதை
சந்தோஷ மாய்க்கேட்டு சகலரு மங்கிருக்க
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமருமே
அருமையாய்ச் சஞ்சயனை அவர்கேட்பார் விந்தையதாய்
ஐயாவே சஞ்சயனே அடுமை யுரைகேளும்
ஐயா பெரியதந்தை அருமைச் சிறியதந்தை
மாமன் சகுனியொடு மற்றுமுள்ள மன்னர்களும்
சோமவத னமுடைய துரியோ தனனோடு
பெரியோர்கள் யாவரும் பின்னும் படைமன்னர்
அரியயெனக் கோதும் அனைவருந் தான்சுகமோ
தரும ரிதைக்கேட்கத் தயவாகச் சஞ்சயனும்
அருமைபூண்ட மன்ன அனைவருந் தான்சுகமே
என்றுரைக்கச் சஞ்சயனும் இதைக்கேட்டு மேதருமர்
நன்ருகப் பின்னும் நவில்வா ரவனிடமும்
அன்பான மன்னவனே ஐவர்களுங் காட்டகத்தில்
பின்னமில்லா தோராண்டு பிரியம தாய்க்கழித்து
அக்ஞாத வாசமதில் ஆனவுரு வம்பூண்டு
தக்கபடி யிருந்து தப்பினோ மேநாங்கள்
இந்தவிதக் கஷ்ட மிவர்க ளடைந்தாரென
வந்தாயோ பார்க்க வழுத்துவா யல்லாது
தூதுவனாய் வந்தாயா துரிதமா யென்னிடத்தில்
ஓதுவா யென்று உரைத்தன ரேதருமர்
சஞ்சயனு முரைப்பான் தயவாய்த் தருமரிடம்
வஞ்சக னுடதகப்பன் வழுத்திய தாதென்றுன்
அரசேதர்ம பூபதியே அரசன் பெரியதந்தை
திரமான சங்கதி செப்பினதை நீர்கேளும்
அவனீன்ற மைந்தர் அன்பான நூற்றொருவர்

தவறுசெய் யுந்துடியர் தன்சொல்லைக் கேளாராம்
உந்த னிடந்தனிலே யுற்றசங் கதிதனையும்
எந்தனை மொழிந்திடவே இயம்பியிருக் காரதுவும்
இந்தச் சடலமதற்கு என்றைக்கும் நிச்சயமாய்
சொந்தமோ வொன்றில்லை துஷ்டருடன் யேன்வாது
மண்ணுசை பெண்ணுசை மற்றுபொரு ளாசைகளை
மன்னர்க ளேவிடுத்து மகாரிஷியைப் போலாகி
இல்லறம் விட்டுநீங்கி எடுத்துத் துறவறத்தை
நல்லபெருந் தவசை நடத்தும் படியாக
பார்மன்னர் தன்சபையில் பாதகத் தை நினைந்தோன்
தீர்க்கமாய்ச் செப்பினுர் திரிதராட் டிரமன்னன்
என்றுரைக்கச் சஞ்சயனும் இதைக்கேட்டு மேதருமர்
நன்றுதான் தந்தை நவின்றதொரு சங்கதியும்
விந்தை யிதுவெனவே விபரீத மாய்மனதில்
சந்தோஷமாய்ச் சஞ்சயன்முன் சாற்றுவா ரேயரசன்
முன்னுளி லெங்களையும் முதல்வன் வரவழைத்து
பின்னம்நினை யாதபடி பெரும்பாவி சூதாட
சகுனியுட னுடிச் சகலமும் யான்தோற்க
பிகுவாய்துச் சாதனனும் பெண்ணையிழுத் துச்சபையில்
மன்னனும் தூஷணையாய் வழுத்தியதை யங்கிருந்த
மன்னர்கள் பார்த்திருந்தார் மகாசபை தன்னிடத்தில்
ஈசன் செயலென்றே எண்ணி யிருக்கவும்நான்
வேசங்கொண் டேபீமன் விளம்பினு னேசபையில்
இட்டான் சபதமது ஏந்தல் துரியனையும்
சட்டமாய் வதைப்பேனென்று சாற்றினுன் பெருஞ்சபையில்
தனையனை மடிக்கும்வரை தண்ணீ ரருந்தாமல்
இனமான கங்கைதன் இடமா யவன்சென்று
அடித்துக் கதையாலே அங்கெழும்புந் துளியதனை
குடிப்பேனு னென்று கோபங்கொண் டவனுரைத்தான்

அர்ச்சுன னு மங்கு ஆசாரிக ளின்முன்பு
கெர்வக்கரு ணன்சிரசை கீழே விழும்படியாய்
எய்குவே னென்று இருகண் பொறியெழவே
நைதே மொழிந்தான் நல்ல பெருஞ்சபையில்
இப்படியெல் லாமவர்கள் இட்டிருக்க வேசபதம்
எப்படிக் காட்டுக்கு ஏகுவது சஞ்சயனே
சபதங்க ளைமுடிக்க தயாராயிருக் கின்ருரென
தவயோகி யாயிருந்தோர் சாற்றவே தூதனிடம்
வீம னருச்சுனனும் வெகுகோப மாயிருக்க
சோமன்வத னமாயன் சொல்லுவார் சஞ்சயன்முன்

கிருஷ்ணபகவான் சஞ்சயனுக் குரைப்பது

சஞ்சயனே கேளும் தயவாக வாக்கியத்தை
வஞ்சகத்தை யெண் ணும் மாபாவி கௌரவரை
கதையெடுத்து வீமன் கண்டுமே போர்க்களத்தில்
வதைத்திடுவான் பாவிகளை மகாதுடியன் தப்பாது
அருச்சுன னுஞ்சபையில் அறைந்தபடி விற்பூண்டு
திருத்தமாய்க் கணைபூட்டி தீர்ப்பான் கருணனையும்
மற்றிருவ ரப்படி வாக்குறுதி தப்பாமல்
கற்றவித்தை யைக்காட்டி காட்டுவார் காலன்பதி
பெரியோர் களைவைத்து பேசியப டியவர்கள்
அறியவே தேசமன்னர் ஐவருக்கும் நாடதனை
கொடுத்திட்டால் சண்டையில்லை கோப மதுதணிவார்
விடுத்திட்ட தூதுவனே விளம்புவாய் கௌரவர்க்கு
என்றுபக வானுரைக்க இதைக்கேட்டுச் சஞ்சயனும்
நன்றெனவே செப்பி நாழிகை விடைவாங்கி
பாகனொடு ரதத்தில் பரிவா யிருந்திடவும்
வேகமதாய் நடத்தி விரைவாய் நகர்கடந்து
அதிவேக மாகவுமே அத்தினபுரி வந்திடவும்

தகியேயர சன்கொலுவில் சகலரு மேகண்டு

திரிதராட்டிரன் சபையில் சஞ்சயன் தூதுபோய்
வந்தசங்கதி மொழிவது

வேண பிரியமதாய் விளம்பி யுபசாரம்
போனசங் கதிதனையே புகலுவா யென்றிடவும்
கண்ணில்லா னச்சபையில் காவலரொ டுசூழ்ந்து
எண்ணிக் கவலையதை இயம்புவா யென்றுரைக்க
அப்போது சஞ்சயனும் அங்கு சபைதனிலே
செப்பச் சுந்தோஷமதாய் சிந்தை மிகமகிழ்ந்து
மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாளும் புண்ணியனே நீர்கேளும்
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமரிடம்
அருமையொடு யானும் அறைந்தேனே சங்கதியும்
தந்தைமொழி வாக்கியத்தைத் தப்போமே நாங்களும்
விந்தையான வாக்கியத்தை விளம்பினு ராகையினல்
சபதங்க ளுரைத்தபடி தப்பாமல் தம்பியர்கள்
சபதங் களைமுடிப்பார் தடையொன்று மில்லையதில்
தருமரும் இம்மொழியைச் சாற்றிட வேயங்கும்
கருவங்கொண் டேயிருந்தார் காண்டீ பனும்பீமன்
மாயவனு மங்கு மன்னர் சபைமுன்பு
ஆய னுரைத்ததை அறைகுவேன் கேள்நீரும்
பஞ்சவர்க்கு நாட்டை பாதி விடுவதொடு
பஞ்சவர்க்குத் துணையாய்ப் படைவந்த மன்னரையும்
வேண்டியே கொண்டால் விளையாமல் யுத்தமது
ஆண்டிடுவார் ராச்சியத்தை அரசர்க ளுஞ்சுகமாய்
என்றுமே மாயன் இயம்பியதோர் செய்திகளை
நன்றாகச் சஞ்சயனும் நவின்று னரசனிடம்
மாயன்மொழி சங்கதியை மன்னவ னுங்கேட்டு

ஆயாசங் கொண்டு அரச னுடல்நடுங்கி
பின்னம் வந்ததென்று பிதற்றி யழுஞ்சமயம்
மன்னன் விதுரனும் வந்து தமையனிடம்
உன்பிள்ளை சொற்கேட்டு ஒத்துமை யாகானே
என்ன மதியுனக்கும் இப்படிப்பி தற்றுகிறாய்
வேதினை யடைவதிலே வேந்தனே யென்னபலன்
ஆதி விதிப்படியே அவர்க்காகும் தப்பாமல்
இன்னும்பல நீதிகளை எடுத்தோதி யேவிதுரன்
மன்னன் களையதனை மாற்றியே யப்பாலும்
அரசனே நம்முடைய அன்பன் துரியனிடம்
திரமான நீதிகளும் செப்பும் மடையனுக்கு
என்று விதுரன் இயம்பியதைக் கேட்டரசன்
நன்றெனவே சம்மதித்து நாகக்கொடி யோன்றனையும்

திரிதராட்டிரன் துரியோதனனுக் குரைப்பது

வரவழைத் தருகினிலே வைத்துச் சுதன்றனக்கும்
திரமான நீதிகளைச் செப்பலுற் றானரசன்
மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாண்டுவரும் புண்ணிய னேகேளும்
தூதுசென்ற சஞ்சயனும் சொன்னஐவர் தம்பதிலே
ஓதினான் யென்னிடத்தில் உடலும் நடுங்குதடா
ஐவர்பலத் தில்மிகுந்தோர் அரன்வாளி யும்பெற்று
செய்யவே யுத்தமதைத் தீர்மானஞ் செய்தனராம்
அருச்சுன் பலவானென் றறைந்தார் பெரியோர்கள்
அருச்சுன னோடு அமரது செய்திடவும்
ஆருமில்லை யென்றும் அறைந்தாரே யென்பாலா
பாருசண்டை விட்டுவிடு பார்த்தன் பகைவேண்டாம்
அன்று சபைதனிலே ஆன பெரியோர்முன்
நன்றாய் மொழிந்தாயே நாதனருள் பஞ்சவர்க்கு

பனிரெண்டு தன்வருடம் பாழடைந்த கானகத்தில்
தனியேநீங் களிருந்தும் தான்கழித் தப்பாலும்
பின்னு மொருவருடம் பெலமான வக்ஞாதம்
மன்னர்களே நீங்கள் மறுவேட மேபூண்டு
இருக்கவேணும் நகரில் இருப்பதைக் கண்டாலும்
மறுபடிப் பதின்மூன்று வருடமே செல்லவேண்டும்
என்றுமே நீயும் யெடுத்துரைத்த படியே
நன்ருகப் பஞ்சவர்கள் நாளைக் கழித்துவந்தார்
இப்போது நீயும் ஏந்தலே யுரைத்தபடி
தப்பாமல் நாடதனை தானவர்க் கேவிடுத்தும்
சண்டையதை நிறுத்தி சமராசி யாகவுமே
அண்டை யிருக்கச்செய் அரசனே நீயவரை
இன்னும் பலவிதத்தை எடுத்து மேயந்தகனும்
மன்னன் துரியனுக்கு வழுத்த மதியதனை

துரியோதனன் தந்தையிடம் மொழிவது

ஐயாவே நீர்கேளும் அடியேனுட வாக்கியத்தை
ஐவரையுந் தாங்கள் அதிகப்பல வானென்றே
சொன்னுர்க ளென்று துயரமா யென்னிடத்தில்
மன்னு மொழிந்தீர் வழுத்தினவ ரைவரின்மேல்
பட்ச முடையவர்கள் பகர்ந்தாரே தங்களுக்கு
அச்சேதி யறியாமல் ஐயா பதறுகிருய்
எதிரிகள் தன்பலமும் எந்தன் தைரியத்தை
அதிவிரைவாய்ப் பார்ப்போம் ஐயனே போர்க்களத்தில்
அவர்க்குமே தேசம்விட்டால் ஐவரும் யென்பேரில்
தவராக யென்றைக்கும் தக்கபல யெதிரி
கொடுக்கா திருப்பது குணமது யெந்தனையும்
தடுக்கா திருமென்று சாற்றித் துரியனும்பின்
அறியவே நாடுகொடேன் ஐவருட சிரமதனை

அறிந்துமே யானும் ஆள்வேன் தனியரசாய்
என்றுமே பாதகனும் இயம்பவே யங்கிருந்த
மன்ன ரரசனுக்கு மதிகள் புகட்டிடவும்
பதியரசன் கேட்டு பகர்ந்ததோர் செய்திகளை
விதிபோல் நடக்கும் வேந்தரே போதுமென்ருன்

திரிதராட்டிரன் வியாசரை நினைப்பது

வஞ்சகன் துரியனுமே வழுத்திய மொழிகேட்டு
சஞ்சலங் கொண்டு தவித்தான் விழியில்லான்
ஐயோ மொழிந்தாலும் அதட்டுகிருன் நாமும்
செய்வதென்ன வென்று சிந்தை மிகக்கலங்கி
தந்தை வியாசரையும் தன்னகத்தி லேநினைந்து
வந்திடத் தோத்திரமே வழுத்தி யிருந்திடவும்
தவயோகி வேடமதை தக்கதெனப் பூண்டதொரு
சிவயோகியும் வியாசர் தெரிந்துமே சங்கதியும்
நல்லகா னகமெல்லாம் நலமாக வேகடந்து
சல்லாப மாய்ச்சபைக்குத் தான்வந்தார் வேதமுனி
நாற்றிசையுந் துதிக்கும் நல்லமுனி யீஸ்வரரை
போற்றிட மன்னவர்கள் பொற்பீட மதிலமர்ந்து
எல்லோர்க்கும் நல்வாக்கு இசையவே யச்சமயம்
சல்லாப மாய்த்திரித ராட்டிரனு மங்குவந்து
தந்தைபாத மதிலே சாஷ்டாங்க மாய்ப்பணிய
சந்தோஷ மாகமுனி தனையனுக் காசிகூறி
மைந்தனே யெந்தனையும் வரநினைந்த சங்கதியை
சிந்தை மகிழ்ந்துமே செப்பென்ருர் மாமுனியும்
தேவர்மூ வர்புகழும் செகந்துதிக்கும் மாமுனியே
பாவமென் செய்தேன் பழிகார னேவெனக்கும்
வந்து பிறந்தானே வம்பன்துரி யோதனனும்
தந்துகள் செய்வதிலும் சமர்த்தனய் வந்தானே

பேயோ பெரும்பூதமோ பிள்ளையாய் வந்ததுவே
காயோடு கந்தமூலங் களைப்புசிக்கும் மாமுனியே
நலமா யிருக்குங்குலம் நாசமாகுங் காலமதால்
தலமான யெந்தனுக்கு தனையனுய் வந்தவனும்
ஐவர்பஞ்ச பாண்டவரை அநாதியாய்ச் செய்துவைத்து
செய்யவே யுத்தமது திரட்டுகி றுன்படையும்
தனியேகாட்டி லலைந்து தவித்துமே வந்தவரை
அனியாயஞ் செய்கிருனே ஐயோ பெரும்பாவம்
இருதரப்புப் பேர்களிலே எவர்கள் செயமடைவார்
அருளவே வேண்டுமென்று அரசன்முனி யைப்பணிய
சாஸ்திரங் களைக்கரைத்து தானுண்ட மாமுனியும்
ஆத்திரமாய்க் கேட்ட அரசன்றனக் குப்புகல்வார்
மன்னர்களெல் லாம்புகழும் மகா க்ரீடபூபதியே
பின்ன மடைவோரை பிரியமாய்க் கேட்டாய்நீ
தர்மசிந் தையுடையோர் தான்செயிப்பார் போரையுமே
கர்மசிந் தையுடையோர் காலன் பதிசேர்வார்
இனிமேலும் நீயே ஈசனை நாடென்று
தனியே யழைத்துமுனி சாற்றினுர் மந்திரமும்
எந்தனுக்குச் செல்லவிடை ஈகுவா யெனவரசன்
சந்தோஷ மாய்ப்பணிந்து தானளித் தான்விடையும்
வாங்கியே வேதமுனி வழுத்தியா சீர்வாதம்
ஓங்கி வளர்ந்தகாவில் ஓர்நிமிடம் போய்ச்சேர்ந்தார்
தப்புகள்செய் யுந்துரியன் தன்னுடைய சபைதனிலே
இப்படிக்கா கவேதான் இருந்தார்கா ணம்மானை

உபலாவியத்தில் தருமர் முதலானபேர்கள்
யோசனைசெய்து கிருஷ்ணனை தூதுபோகமொழிவது

தர்மர்வீ மன்விசயன் சகாதேவ னும்நகுலன்
விற்பிடித்த மன்னர் வேணவா சர்கூடி

எல்லவரு மகத்தில் எண்ணியே யோசனையை
சல்லாப மாய்த்தருமர் சாற்றுவார் மாயனிடம்
மாயவரே நீரும் மனக்கவலை யில்லாது
நேயனேயிக் காரியமும் நினைச்சேர்ந்த தேயலவா
பேசா திருந்தால்நீர் பெருமைக் கழகாமா
நேசமாய்த் தூதனுப்பி நினைப்பையும் யாமறிய
சஞ்சய னிடத்திலே தந்தை பெரியவரும்
வஞ்சகமாய்ச் சங்கதி வழுத்தியதை நீரறிந்தும்
எல்லவரைப் போலே இருக்கலா மாமாயா
சல்லாப மாய்க்கேளும் சாமி யடுமையிடம்
அஸ்தினு புரஞ்சென்று அவர்சபைக்கு நீரேகி
இஷ்டமுட னேயுரையும் எழிற்பாண் டவர்தூதென்று
சண்டைநடக் காமலுமே சமராசி யாயிருக்க
வண்டன் துரியனுக்கும் வழுத்தியும் நீதிகளை
அன்று சபைதனிலே அறைந்தபடி பாண்டவர்கள்
சென்று கழித்துமவர் தீர்க்கமாய் வந்ததினல்
பெரியோர் களைவைத்து பேசித்தே சங்கேளும்
சிறியதுரி யோதனனும் செப்பினல் இல்லையென்று
அப்பாலும் யோசிப்போம் ஆயரேநீ ரிச்சமயம்
தப்பாது செல்லுமென்று தான்மொழிந்தா ரேதருமர்

கிருஷ்ணபகவான் தருமரைக் கேட்பது

பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமருரை
அருமை யுடன்கேட்டு ஆய னவர்க்குரைப்பார்
அரசனே யுன்னுரைபோல் அஸ்தினு புரிசென்று
திரமான சபைதனிலே தேசவர சர்முன்பு
பெரியோர் களைவைத்து பேர்பாதி தேசங்கேட்க
சிறியதுரி யோதனனும் செப்பினு லில்லையென்று
அண்டையிருப் போர்கேட்க அவனுமே மும்முரமாய்

சண்டைக்கி நாள்வைத்தால் சங்கதி யென்னசொல்லும்
நாளை நடக்கும்போரில் நாதன்செய லெப்படியோ
வேளையென்மேல் குற்றம் விளம்பாதீர் மன்னர்களே
மண்ணுசை யைவிடுத்து மாதரா சைவெறுத்து
பொன்னுசை யத்தோடு போக்கிப்பூ பாலர்களே
இல்லறத்தை நீக்கியுமே எடுத்துத் துறவறத்தை
நல்ல தவவேடம் ராசாக்க ளேபூண்டும்
கானகத்தில் சென்றும் கந்தமூ லம்புசித்து
வேணதவஞ் செய்து வெகுமுத்தி யைப்பெறவும்
இப்படி யோசனையா இல்லையதில் வேறுண்டா
தப்பா துரைத்தேன் தருமரே யின்னமுங்கேள்
அந்தநா ளுங்களை அழைத்துமே சூதாடி
பந்தகமாய்ச் செயித்தான் பாவிதுரி யோதனனும்
மாது துகிலதனை வம்பாய்க் களைந்திடவும்
தீது செய்தோர் தங்களுக்கு செப்பினு ளேசபதம்
விரித்த தலையந்த மெல்லிமுடி யாதிருக்க
பரிதாப மேயதுவும் பார்த்தால் மிகப்பாவம்
வீமனுமே சபையில் விளம்பினு னேசபதம்
நேமன்துரி யோதனனை நின்றுவதைக் கும்வரையில்
தாக மருந்தாமல் தன்கதையைக் கங்கைதனில்
வேகம தாயடித்து விண்ணெழும் புந்துளியை
மன்னன்புசிப் பேனெனவும் மகாபெரிய சபையில்
மன்னர்கட்கு முன்னின்று வழுத்தினு னேதுடியன்
விசயனு மங்குசபையில் வேகமாய் வேந்தர்முன்
நிசமாய்க் கருணனை நான் நின்றுவதைப் பேனென்றுன்
மற்று மிருவர்களும் வாக்குரைத்தா ரங்கிருந்தும்
கற்றவித்தை யைக்காட்டி காவல ரே நீங்கள்
சபதமதைத் தீர்த்திடவும் சண்டைசெய வேயெண்ணமா
தபவேடம் பூண்டுகானில் தானிருக்க வேயெண்ணமா

ஐவர்களே நீங்க ளவரவர்க ளின்கருத்தை
மெய்யாயுரையு மென்று விளம்பினு ரேமாயன்

தருமர் கிருஷ்ணமூர்த்திக்கு மொழிவது

பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தொருதருமர்
அருமையாக மொழிவார் ஆயனே கேளுமென
மைத்துனரே யென்கருத்து வழுத்துகிறே னுண்மையிது
சத்துருவின் கூட நாம் சண்டை நடத்தினுல்
ஓதிவைத்த குருவும் ஒக்கவே சாவதொடு
வேதிய ரத்துடனே வீணுய் மடிவார்கள்
பெரியதந்தை பிள்ளையொடு பேரோங்கும் வெகுவரசர்
அறிய மடிவாரே ஐயோ பெரும்பாவம்
செப்பவொண் ணுச்சேனைகள் சேதம் வெகுவாகி
அப்படி நாம்மடித்து அந்தப்பெருந் தேசங்களை
தனியாக நாங்கள் தரையரசு செய்குவது
அனியாய மையோ அதுவேண்டா மேசாமி
சஞ்சய னுரைப்படியே தப்பாம லேநாங்கள்
வெஞ்சினத் தையடக்கி வேற்றுருவ முண்டாகி
காவிவஸ்தி ரந்தரித்து காவனங் கள்தனிலே
மேவியே நாங்களும் மேன்மைத் தவமதனைச்
செய்யலா மென்று தீர்மானித் தேனெனவே
வையம் புகழ்தருமர் வழங்கினுர் மாயனிடம்
இந்த மொழியதனை எம்பெருமாள் தான்கேட்டு
அந்தமுள்ள தர்மரிடம் அறைகுவா ரேகண்ணன்
நன்ருய் மொழிந்தீர் நல்லதர்ம நந்தனரே
அன்றே சபைதனிலே அறைந்த சபதமது
சொல்மொழி தவறினுல் தோஷமென் றேநூலும்
வில்லா சிரியர்களே விளம்பின தறிந்திலையா
சண்டைசெய் யத்தீரம் சமர்த்தில்லா தாலேவர்

அண்டை வரப்பயந்து அவர்சென்றார் காடென்றும்
ராசாக்க ளெல்லாம் நகைப்ப தொடுமவர்கள்
லேசாய் நினைத்திடுவார் நிருபர்களே நீங்களும்
நாடுமே யில்லையென்றால் நல்லதொரு போருக்கு
நாடுவதில் தோசமில்லை நாதனின் றன்கிருபை
மாயனுந் தர்மருக்கு மனு நீதி யைமொழிய
நேயம தாய்க்கேட்டு நிகழ்த்துவா ராயனிடம்
மண்ணையே வாரியுண்ட மகிபனே செங்கமலக்
கண்ணனே யானும் கழறுவ தைக்கேளும்
அஸ்தினா புரிசென்று அரவக் கொடியனிடம்
விஸ்தார மாய்நீரும் விளம்பியே சங்கதியை
பெரியோ ருரைப்படியே பேர்பாதித் தேசமதை
அறியவே கேளும் அதுவுமில்லை யென்றாலே
இந்திரப் பிரசித்தம் ஏமப்பிர சித்தமொடு
மந்திரவா ரணாபுரி மன்னர்வா ழஸ்தினாபுரி
வீமா புரியுடனே விளம்பின வைந்தூரை
நேமாகே ளவருக்கும் நிச்சய மாயதனை
ஐயனே யில்லையென்று அரச னுரைத்தாலே
ஐந்துவீடு கேளும் அதுவுமில்லை யென்றாலும்
சண்டைகள் செய்வதற்கு தவணைக ளேற்படுத்தி
வண்ட னிடந்தனிலே வாக்குறுதி வாங்கியுமே
வருவீரே யென்று வள்ளல் தருமருமே
அருமையாக மொழிந்தார் ஆய னிடந்தனிலே

வீமசேனன் கிருஷ்ணனிடம் மொழிவது

ஐயையோ யென்னவிது அண்ணலு மிச்சமயம்
செய்யாத வேலைகளைச் செப்புகி றாரவரும்
முன்ன மொருதூது மொழிந்தது போதாதென
இன்னமும் தூதங்கே ஏதுக்காய் போகுவது

அந்நாள் சபைதனிலே அனைவருங் கூடியிருக்க
மன்னவரை யழைத்து மாயமாய்ச் சூதாடி
மாது துரோபதையை மாசபை தனிலிழுத்து
தீதுகள் செய்தாரே செகவரசர் நகைக்க
செய்யாத வேலையெல்லாம் செய்தகொலை பாதகர்க்கு
ஐயோ யீதென்ன அண்ண லிறங்குவதும்
நல்லயோ சனைசெய்து நலமா யவர்மனதில்
வெல்ல முடியாதென்று விளம்பினரோ யிவ்வார்த்தை
நான்போவே னங்கு நல்லவத்தி னுபுரியில்
தான்கேட் பேன்தேசம் சர்ப்பக் கொடியனிடம்
இல்லையென் றுரைத்தாலே என்னிட கதையதனால்
தொல்லை யதுவிளைத்தே துட்டரையெல் லாமடித்து
அவன்குல மெல்லாம் அடியோடு தான்தீர
தவராது காலன்பதி சல்தியவ் ரையனுப்பி
மேவுலகோர் கொண்டாட மேன்மை யொடுவமைந்த
பூவுலகைத் தர்மருக்கு பொருந்தமுடி சூடிடுவேன்
மாயனு மப்போது மன்னன்மத வீமனுக்கு
நேயமாய்ச் சிலகதையை நிகழ்த்திக்கோ பந்தணித்தார்

விசயன் மாயவனிட முரைப்பது

காண்டீப னச்சமயம் கண்கள் புகைகிளம்ப
காண்டா வனதகனன் கண்ண னிடமொழிவான்
மன்னரும் தர்மமதை மகிழ்ந்து மனதில்வைத்து
அண்ண னுரைத்ததுவும் ஆச்சரிய மானசெய்தி
மெத்தக்கோப முடனே விசயனு மச்சமயம்
எத்தனை நாள்வரைக்கும் இத்தருமம் பார்க்கிறது
அண்ணன்மத வீமனுக்கு அருமையது பூண்டதொரு
பின்னமில் லாக்கதையும் பெருமையுடன் வாய்த்திருக்க
எந்தனது கரத்தில் இருக்கும்காண் டீபமதை

விந்தையொடு பார்த்தும் விளம்பினு ரிவ்வார்த்தை
பின்னமில்லாத் தம்பியரும் பிடித்துத் தனுசதனை
மன்னர்களை யெல்லாம் மடித்திடுவார் தப்பாது
வேண வரசரொடு வெகுகோடி தளத்துடனே
காணலாம் போர்க்களத்தில் காண்டீபத் தின்திறத்தை
துரியோ தனனுேடு துஷ்டத்தம்பி மார்களையும்
அறிய மடித்திடுவார் அண்ணன்பீமன் தப்பாமல்
கருணனை யான்வதைத்துக் கனத்த படையதனில்
பருத்தவில் திறமையைப் பாருமே கோவலனே
என்று விசயனுமே இயம்பவே கோபமுடன்
நன்ருக மாயவரும் நவின்றுசில நீதிகளும்
அண்ணல் பெரியவர் அவர்மொழி தவராதே
மன்னவரே யென்றும் வழுத்தினுர் மாயவரும்

நகுலராச னுரைப்பது

அப்போ நகுலன் ஆயரவ ரைத்தொழுது
தப்பாம லேமொழிவான் தன்னுடைய எண்ணமதை
அந்தநாளில் எங்களையும் அழைத்துவரச் செப்பியவன்
சொந்தமண்டப மதனில் சூதாட வேபுகன்று
அண்ணலைத் தோற்கவைத்து அரசையெல்லாங் கைப்பற்றி
அன்னமெனுங் துரோபதையின் அரியதுகில் தானவிழ்த்தான்
அப்பவுந் தடுத்துவிட்டார் அண்ணர்பார்க்க எங்களையும்
தப்புவார்த்தை மொழிந்தான் சபையரசர் தான்பார்க்க
அப்பொழுதுந் தடுத்தார் அங்கிருந்தோர் தானகைக்க
ஒப்புயர்வு தான்மிக்க வுத்தமரென் னண்ணுவும்
பெரியோர்க ளப்போது பேசினு ரெங்களுக்கும்
பெரிய வனங்கள்சென்று பேதமில்லா தோராண்டு
தெரியாம லோர்வருடம் சென்றிருந்து வாருமென.
அறியவே யோதினுர் அருமையான பெரியோர்
அப்படியே சென்று அத்தனையுங் கழித்தே

இப்பத்தே சங்கேட்டும் இல்லையென் றவனுரைத்தால்
திண்ணமாய்ப் படையெடுத்து திரியோ தனனோடு
அண்ண னிருவரும் அதமாக்கு வார்பலரை
கருணன் சகுனியொடு காவலன்துச் சாதனனை
பருத்தவில் திறங்காட்டி பார்வேந்த ருயிர்கவர
சமராட வேநாதா சரியான யென்கருத்து
அமர்ந்தே யுரைத்தான் அந்த நகுலனுமே
ஆயனு மச்சமயம் அவன்மதி யைத்தெரிந்து
மாயன் சகாதேவனை மனமகிழ்ந் தேயழைத்தே
என்னவுன் யோசனை என்னிடத்தில் தப்பாது
மன்னு மொழியெனவே வழுத்தினு ரம்மானை

சகாதேவன் கிருஷ்ணபகவானிடம் மொழிவது

சாத்திர மதைக்கரைத்து தானுண்ட பாலகனும்
ஆத்திரமாய்க் கேட்ட ஆய னிடம்புகல்வான்
ஐயனே யிப்படிநீர் அவதிப் படுவதிலே
மெய்யனே யுந்தனுக்கே வேண்டிய கருத்தெதுக்கு
இவ்வளவு கவலைதனை ஏன்கொண்டு நீர்தானும்
இவ்வர்களுக் காய்த்தூது ஏன்போராய் மாபவனே
ஆராண்டாலு மூலகை ஆவதென்ன வுந்தனுக்கு
ஆரணங்கு கூந்தலதை அள்ளி முடித்ததினுல்
உந்தனுக்கு யென்ன ஓதுவாய் வாய்வுசுதன்
அந்தநா ளிற்சபையில் அறைந்த சபதமதை
முடித்தா லுனக்கென்ன முடியாவிட் டாலுமென்ன
துடிக்கிறு யென்று சொன்னுன் சகாதேவன்
மண்ணையுண்ட மாயன் மகிழ்ந்து மிதைக்கேட்டு
வெண்ணை திருடினேன் விளம்புவான் தர்மரிடம்
அறியாதான் செப்பினுன் ஆகையால் வேறிடம்போய்
தெரிந்துமே செய்திகளை சீக்கிரம் வாரேனென்று

அங்கோ ரிடஞ்சென்று அந்தச்சகா தேவனுடன்
தங்கியிருந் தேமாயன் சமர்த்தாக வேமொழிவார்
சகாதேவ னேகேளும் சமரான யுத்தமதில்
சாகாதிருக்கவுமே சண்டை நடவாமல்
தடைகளுண் டோவென்று தானுரைக்க வேமாயன்
விடையதையே கேட்டே விளம்புவான் சாத்திரவான்
பாரத நடக்காமலே பண்ண முடியுமென்று
தீரமாக வேயுரைத்தான் தெளிந்ததொரு சாஸ்திரவான்
மன்ன னுரைத்ததையே மாயவ னுங்கேட்டு
என்னிட மொழிந்தாயே இப்பா ரதமதனை
நடவா திருக்க நல்ல வுபாயமதை
திடமா யுரையென்று செப்பினு னம்மானை

சகாதேவன் கிருஷ்ணனுக்கு மொழிவது

அப்போது பாலகனும் ஐயனை யேதொழுது
தப்பாம லோதுகிறுன் சாஸ்திரத்தை யுண்டமன்னன்
தருமருந் துரியனையே தவவேட மேயாக்கி
பெருமைத் தவசியாய் பிசகாது காடோட்டி
இத்தநற் பூமி எல்லாம் அடங்கலையும்
சொந்தமாய்க் கருணனுக்கு சூடி முடிதனையே
மேவுல கோர்புகழ மேன்மை யுடனரசு
பூவுலகை யாள புண்ணியனை வைத்துமே
கருணனை மடிப்பேனென காவல னுஞ்சபையில்
கர்ச்சனை செய்ததொரு காண்டீபன் றன்சிரத்தை
வெட்டி விடவேண்டும் வேதாந்தக் கோவலனே
தட்டிக் கூந்தல்விரித்து தையல் துரோபதையும்
அன்று சபதமிட்டாள் அனைவோரை யும்மடித்து
நன்ரு யுதிரமள்ளி நாயகந் தலைதேய்த்தும்
கூந்தல் முடிப்பேனென்று கோதை யுரைத்ததினுல்

கூந்தல்களில் லாதபடி கோதையை மொட்டையாக்கி,
தடிவீமன் றன்னை தனியா யழைத்துமே
பிடித்துமே கால்விலங்கு போட்டு மடைப்பதொடு
உந்தனையுங் கட்டி உருட்டிவிட் டால்மாலே
இந்தப்படி செய்தால் இப்பாரதந் தவிழ்க்கும்
என்றுமே மைந்தன் எடுத்தோத வேயிதையும்
நன்ருய்க்கேட் டேமாயன் நவிலுவார் பாலனுக்கும்
அப்பனே சொன்னதுபோ லண்ண ரவருனக்கு
தப்பா தருச்சுனனை சல்தி மடித்திடுவாய்
மாதுமுன் தாரமதால் மன்னவனே தப்பாது
தீதுநினை யாதபடி செய்வாயுன் சொற்போல
அவர்களைச் செய்திடுவாய் அப்பனே தவராது
கவனமா யெந்தனையும் கட்டிடுவே னென்ருயே
உன்னுல் முடியுமோ உரைத்த படிநடக்க
மன்னு மொழியுமென்று மகிழ்ந்தே யுரைத்திடவும்
ஆய னுரைத்ததையே அப்பா லகன்கேட்டு
மாயன் தனக்குமந்த மைந்த னுரைக்கலுற்ருன்
உந்தனையுங் கட்டியான் உனைச்சொந்த மாக்கிடுவேன்
எந்தனை லேசாக எண்ணுதே நீமாலே
என்றுரைக் கச்சிறுவன் இதைக்கேட்டு மாயவனும்
நன்ரு யவனுக்கு நவிலுவார் செய்திகளை
எந்தனை யிப்பவுமே ஏந்தலே கட்டுமென
உந்தனிட வடிவம் ஒருருவ மாகியே
இருந்தாலே கட்டுவேன் என்றுரைக்க மாயனுமே
நிருபன்பூண் டார்வேடம் நினைத்த வுருவமெல்லாம்
தன்னுடைய சாஸ்திரத்தை தான்பார்த்து மேசிறுவன்
விண்ணதி லேவசிக்க விமலனைக் கண்டவனும்
பதினு யிரமுருவம் பார்த்துமே சாஸ்திரத்தில்

ததியவனைக் கட்டவும் தந்திரமா யோசித்து
இருதயத்தி லேயவனும் எண்ணியே மாயவனை
இருதயத்தி னுள்வைத்து இவனும்பா சக்கயிற்ருல்
அழுந்தவே கட்டி ஆயனிரு பாதமதை
அழுந்தவே கட்டிடவும் ஆதிமூல முள்மயங்க
நவத்துவா ரமடைத்து நல்லதொரு சாஸ்திரவான்
தவராது மாயவனைத் தானிருக்க அங்கவரும்
கண்கள் பிதுங்கவும் கால்கள் நடுங்கிடவும்
விண்வழியே செல்லவும் விடமில்லை யாகையினல்
அப்போது செந்திருமால் அவதி மிகவடைந்து
இப்பொழுது மெந்தனையே இருகப் பிணிந்தமைந்தா
கட்டை யவிழுமென்று கண்ணனு மேயுரைக்க
சட்டெனவே கேட்பான் சாஸ்திரத்தை யுண்டமன்னன்
வண்பா ரதப்போரில் மன்னர்க ளைவரையும்
கண்ணனே காப்பேனென கழறுவா யிச்சமயம்
என்றுமே கேட்டானே எம்பெரு மாளிடத்தில்
நன்ருகப் பாலனிடம் நவிலுவா னேமாயன்
நன்னயமாய்க் கேட்டதொரு நல்லசகா தேவனேகேள்
மன்னவ ரைவரையும் மகிபனே யான்காப்பேன்
இத்தருண மெந்தனுட ஏந்தலே கட்டதனை
மைத்துனனே யவிழும் மனமகிழ்ந் தெந்தனையும்
விந்தையாக மொழிந்த விமலனிடம் பாலகனும்
சந்தோஷங் கொண்டு சாற்றுவா னுயரிடம்
காக்கிறே னென்ருயே கைபோடு வாய்நீயே
சீக்கிரத்தில் கேட்டானே திறமை மிகுந்தமன்னன்
ஐயனுங் கைபோட்டார் ஐவரையுங் காப்பேனென
பைய அவிழ்த்தானே பாசக் கயிறதனை
வேதனை தானடைந்தார் வெளியே றினவுடனே
பூதனையே மடித்தார் புகழ்ந்தார் சிறுவனையும்

வந்து பணிந்தான் மாயனை யுஞ்சிறுவன்
சந்தோஷ மாய்வாழ்த்தி சாற்றுவார் செய்தியொன்றும்
எந்தனையே கட்டி இருகப் பிணிந்தமைந்தா
இந்தச்சங் கதியதனை எவர்க்கு முரையாதே
என்று மொழிந்து இருவருங் கைகோர்த்தே
நன்றாக வந்துமவர் நல்லதர்மர் முன்னிலையில்
தரும ரிடந்தனிலே சாற்றுவார் மாயவரும்
அரிய சகாதேவன் அறைந்தது வுஞ்சரியே
உங்க ளுரைபோல ஓதினு னுகையினல்
தங்கள் மனம்போல தான்சென் றெருதூது
அங்கேநான் சென்று அரவக் கொடியனிடம்
சிங்கமாய்க் கேட்பேன் தேசமு மில்லையென்றால்
அத்ததி யவனிடத்தில் ஆனயுத்தம் செய்வதற்கு
சித்தம் திடமுடனே தீர்மான மேற்படுத்தி
சிறியோ ரிடத்திலுமே செய்திகளைத் தானுரைத்து
பெரியோரைக் கொண்டு பேசிமுடித் ததும்யான்
வந்திடுவே னென்று வழுத்தவே மாயன்முன்
நொந்துமே பாஞ்சாலி நோக்கிப் பாதம்வீழ்ந்து
அண்ண னிடத்திலே அழுதுமே தையலரும்
கண்ண னதைப்பார்த்தே கண்ணீ ரையுந்துடைத்து
பதறாதே யுன்சபதம் பாவையே சீக்கிரத்தில்
இதமாய் முடித்திடவே இன்றுயான் தூதேகி
அங்கிருக்குஞ் சங்கதியை யறிந்துவதி சீக்கிரத்தில்
பங்கமது செய்தோரை பதைக்கநாள் வைத்திடுவேன்
மயங்கா திருமென்று மங்கை யிடமுரைக்க
தயங்கா திருந்தனளே தைரிய மாயங்கும்
அப்போது பாஞ்சாலனும் அச்சுதன் றன்னிடத்தில்
தப்பாமலோதுகிறான் சகலரும் பார்த்திடவே
இவர்கள்சப தந்தீர இன்றுமே நீரேகி

தவராது காரியத்தை சல்தியாய்த் தான்முடித்து
வந்திடுவீ ரென்று வழுத்திடவே மாயனுமே
சந்தோஷ மாய்க்கேட்டு சல்தி பயணமென்றார்

கிருஷ்ணபகவான் அஸ்தினபுர மேகுதல்

தேரையங்கு நிறுத்தி தேவ பரிபூட்டி
தேரை யலங்கரித்தும் தேர்ப்பாகன் கொண்டுவந்தான்
பாகனை ரதம்விடவே பகர்ந்திட வேயவனும்
வேகமாய் நடத்தியுமே விரைவாய் நகர்கடந்து
வாத்தியங்கள் சத்தம் வாரிதி போல்முழங்க
நேத்தியாய்ப் படைகளுமே நெருங்கியே பின்தொடர
கானகத்தில் வரவும் கண்ணன் வரவறிந்து
வேண விருட்சமெல்லாம் விமலனைக் காணவென்று
பாசமுட னேயவைகள் பரிவாய் மலர்பூத்து
நேசமொடு வாசனையை நீலவர்ணன் தன்னிடத்தில்
செல்லும் படிவிடுத்து சிந்தை யதுமகிழ
சல்லாப மாய்க்கண்ணன் தான்மகிழ்ந் தப்பாலும்
அந்தவனத் தில்வாழும் அரிய மிருகமெல்லாம்
வந்துமே பார்த்து மாயவ னைத்தொழவும்
அந்த வனங்கடந்து ஆறுகுளந் தாண்டியுமே
சிந்தை மகிழ்ந்து சென்றாரே மாயவரும்
அஸ்தின புரியெல்லை அவர்கள்கண் டெல்லோரும்
விஸ்தார மாய்ப்பேசி வேந்தரு மங்குசெல்ல
வருகிறதைக் கண்டுமே மாதுபூமா தேவியரும்
திருமாலு மின்றைக்குச் செல்கிறார் தூதுரைக்க
பாண்டவர் பக்ஷமாய் பகவானு மங்கிருந்து
நீண்டபார தப்போரை நிச்சயம் செய்திடுவார்
பூமிபாரந் தீர்க்கவே போரார் மனதுகந்து
சாமிசெல்லுங் காரியம் சயமாக வேண்டுமென

தீதுகளில் லாதபடி திருப்புவீ ரென்றுமந்த
மாதுமே செப்பி மனமகிழ்ந் தங்கிருக்க
கண்ணனே பாண்டவர்க்கு கடும்பகைவ ரானவரும்
விண்ணுலகு சேர்வரென்றே விளம்ப வசரீரி
அந்தர தேவர்களும் அந்தரத்தி லேயிருந்து
சந்தோஷ மாயாசி தான்செப்பிச் செல்லுமென
ஆதிசே டன்கண்டு அதிக மகிழ்வுடனே
சோதிநா ராயணனும் துன்ப மதையறிந்து
பூமிபாரந் தீர்க்க புறப்பட்டா ரேயங்கும்
சாமிபோர காரியம் சயமாக வென்றுரைக்க
நாரதரும் கண்ணுவரும் நல்லசம தக்கினியும்
பாரமது தீர்க்கச்செல்லும் பகவானைத் தேடிவர
விதமாய் முனிவரவை வேணுகோ பாலன்பார்த்து
ரதம்விட் டிறங்கி நாராய ணன்தொழவும்
சிந்தை மிகமகிழ்ந்து செய்யுந் தவயோகிகள்
சந்தோஷ மாயவர்க்கு சாற்றிட நல்வாக்கும்
அங்குவந்த மாமுனியை ஆதி மகாமூலம்
இங்குவந்த சங்கதியும் என்ன வுரையுமென
தவயோகி வேடமதை தக்கதெனப் பூண்டதொரு
சிவயோகி மூவர்களும் செப்புவார் மாயனிடம்
மனதில் தொழுதுமவர் வஞ்சகமில் லாதபடி
இனமாகத் தூதுக்கு எம்பெருமா ளேசென்றும்
துரியோ தனனிடத்தில் சொல்லுமொரு வாக்கியத்தை
அறியவே வேண்டுமென ஐயனேயெங் கள்கருத்து
தங்கள்விஸ்வ ரூபமதை சாமியே பார்த்திடவும்
எங்கோனே யென்று இயம்ப முனிவர்களும்
மாய னதைக்கேட்டு மனமகிழ்ந் தன்புடனே
நேயரே கேளுமென நிகழ்த்துவார் முனிகளுக்கு
தங்க ளிஷ்டம்போல சங்கதிகள் கேட்டிடவும்

அங்கேவஸ்தி னபுரியில் அரசர் பெருஞ்சபையில்
வாருங்க ளென்று மாய னுரைத்திடவும்
சேருகிறோ மென்று சென்றார் முனிவர்களும்
கண்ண னும் ரதமேறி காவல ருடனேயும்
மண்ணையுண்ட கண்ணன் வழுத்தவே சாரதிக்கும்
பாகனதைக் கேட்டு பரிவுகொண் டேயவனும்
வேகமாய் நடத்தினான் மேன்மையான ரதத்தை
அந்தவனங் கடந்து அப்போது மேயவர்கள்
சந்தோஷ மாகவுமே சல்தியொரு பூங்காவில்
பதியரசன் நந்தவனம் பாங்காக வேயிருக்க
அதிலே யிறங்கிடவும் ஆயனுடன் மன்னர்களும்
வந்ததொரு சங்கதியை மதித்தவனக் காவலர்கள்
சந்தோஷமா யங்கு தான்பணிய மாயனையும்
ஐய னவர்கள்தனை ஆரெனக் கேட்டிடவும்
பையரவக் கொடியோன் பாரரசர் காவலன்யான்
என்றுமே காவலர்கள் இயல்பாய் மொழிந்திடவும்
நன்றாக வேமாயன் நாழிகை யங்குதங்க
அதிவேக மாகவே அத்தூத ரோடிவந்து
பதியரச னிடத்தில் பகருவார் சங்கதியும்
மண்டலத்தை யாளும் மகாகிரீட பூபதியே
கண்டவர்கள் மயங்கும் காவல னேகேளும்
ஆயனு மிங்குவந்து அருமையான பூங்காவில்
மாயன் சயனமென்று வழுத்தவந் தேனென்றான்
காவலர்க ளப்போது கழறிய சங்கதியை
காவலனுங் கேட்டு கருணைகொண் டச்சமயம்

துரியோதனன் மாயவன் தூதுவந்ததை
மொழிவது

மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு

பூவுலகை யாளும் புண்ணியனு மச்சமயம்
விந்தையான சங்கதியை விளம்பவெண் ணியவனும்
தந்தை யிடந்தனிலே தாள்பணிந் திடவரசன்
மங்களமாய் வாழ்த்தி மகனேநீ யிங்குவந்த
சங்கதி யதனையே சாற்றுவா யென்றனனே
ஐயனே நீர்கேளீர் ஆதிமூல மாயனுமே
ஐவருக் காய்த்தூது ஆவலுட னேமொழிய
செண்பகப்பூந் தோட்டமதில் தேவ னிருக்கிறதாய்
அன்பான தூதர்வந்து அறைந்தார்க ளென்றனனே
திரிதராட் டிரன்கேட்டு சிந்தை மிகமகிழ்ந்து
அறிய மொழிவான் அங்குசபை யோர்களுக்கும்
மற்ற வரசர்களும் மனமகிழ்ந்து கேட்கவுமே
குற்றமில் லாதபடி குருடனு மேபுகல்வான்
ஆயனிங்கு வரவும் அதிகதவம் நாம்செய்தோம்
மாயனு மென்னிடத்தில் மனமகிழ்ந்து வந்தாலே
பாட்டனார் தேடியதோர் பழய கிரீடமதும்
தேட்டமான மணியும் செய்தமுத்து மாலைதனை
கண்ணனுக்குத் தந்து கலந்துமே யான்பேசி
வண்ணன் நினைப்பதனை வாங்குவே னென்றனனே

விதுரன் திரிதராட்டிரனுக் குரைப்பது

மன்னன்கண் ணில்லாதான் வழங்கியதோர் செய்திதனை
பின்னம்நினை யாவிதுரன் பிரியமுட னேகேட்டு
அண்ணு வுரைத்ததுவும் அருமையான நகையை
கண்ணனிட மீய்ந்து கருத்தையெல் லாந்தெரிந்து
ஐவரிட சங்கதியை அறியவு பாயம்நீயும்
செய்கிறு யிப்பவும் திறமான வுன்னெண்ணம்
ஐந்தூர்கள் கேட்டிடவும் அவர்வாரா ரிங்கேயும்
பையவே யவர்க்குரைத்து பஞ்சவர்க்கில் லாமலுமே

செய்திட வெண்ணமாய் செப்பினு யுன்னிடத்தில்
ஐயனும் வந்திடுவார் அரசேவுண் மைமொழிய
இந்த மதியுனக்கும் ஏன்படைத் தான்பிரமன்
சந்தோஷ மாய்நீயும் தன்மைகொள்ள லாகாதா
ஐயையோ பாவம் ஐவருங் கானிருந்து
பையத் தலையெடுத்து பகவானைத் தூதுவிட்டார்
இன்னும் விரட்டிடவே எண்ணுகிருய் மனதில்
மன்னவனே யென்று வழுத்தினு னேவிதுரன்
அப்போ துரோணர் அறைகுவா ரேசபையில்
இப்பநா ராயணனும் இங்குமே தூதுவராய்
ஐவர் களுக்காக அவர்வருவ தைத்தெரிந்து
பையவே யோசனைகள் பண்ணுவ துஞ்சரியா
இந்தப்பேச் சைவிடுத்து எம்பெரு மானைநோக்கி
விந்தையொடு சென்று விமலனைப் போய்க்கண்டு
இங்கு வழைத்துவர எல்லோரு மேநீங்கள்
பங்கமில்லா யோசனையைப் பாருமென் றுரைத்தனரே

துரியோதனன் மொழிவது

அரவக் கொடியோனும் அறைந்த மொழிகேட்டு
பரபரப்பா யங்கு பார்த்துச் சபையதனை
கண்கள் சிவந்துமவன் கனகோப முண்டாகி
விண்வழியே புகையும் மேவியே சென்றிடவே
பல்லைக் கடித்துமவன் பார்த்துச் சபையதனை
தொல்லை யகத்திருத்தி துரியன் மொழியலுற்ருன்
பஞ்சவர்க்காய்த் தூது பகரவே வாரவனை
மிஞ்சவே விட்டாலே மேய்ந்திடுவா னம்மையவன்
அவனுமே யிங்கு அஞ்சிடா மல்வந்தால்
தவராது சிட்சைதனை தானளிப்பேன் மாயனுக்கு
மல்லர்களை நேமித்து வந்தவனைத் தப்பாது

தொல்லையே செய்து துஷ்டனைக் கட்டிவைத்து
சோறுமுப்புஞ் சேர்த்து துயரம் நினையாமல்
பாரு மவனுக்கும் படைப்பேன் நிசமாக
பாவியிவ னைவர் பகர்ந்ததை யேகேட்டு
மேவியிங்கு வந்ததற்கு விளம்பின படிசெய்வேன்
ஐவரிடஞ் சென்று அவர்துடையுங் கிள்ளுவது
மெய்யே தொழிலிதுவும் வேறில்லை யாகையினல்
இவன்தனை விட்டாலே என்னைக்கெடுப்பதற்கு
தவராது செய்வான் தக்கபல யோசனையை
ஐவர்கள் காட்டில் அலைந்து திரிந்தவரை
பையவே சென்றுமிவன் பஞ்சவ ரையழைத்து
எல்லா முரைத்தது இவன்தா னவர்களுக்கு
சொல்லவே யோசனைகள் சூழ்ச்சியைக் கற்றவன்காண்
பஞ்சவர்கள் கேட்டும் பகவானே யெங்களுக்கு
சஞ்சலம் தீரவே சாற்றுவா யுண்மைதனை
என்றுமே பாண்டவர்கள் இரந்துவேண்ட வேயிவனும்
சென்றுவஸ்தி னுபுரியில் செப்பி யவனிடமும்
அரசையே வாங்கிடுவேன் அஞ்சா திருப்பீரென
திரமாய் மொழிந்து தேற்றி யவர்களையும்
வந்திருக்கா னிங்கேயும் வல்லசமர்த்த னேயிவனை
நொந்திடச்செய் யாவிடிலோ நோக்கி யிவனுநம்மை
பாசமாய்ப் பேசி பஞ்சவர்மே லன்புவைத்து
நாச மடையநம்மை நல்லயுக்தி செய்திடுவான்
தவராது யிங்குவந்தால் சல்தியவ னைப்பிடித்து
அவமானஞ் செய்வேன் அட்டியில்லை யென்றனனே

திரிதராட்டிரன் துரியோதனனுக் குரைப்பது

அருமையான பாலா ஐயா துரி யோதனனே
வருகிறமா யன்றன்னை வம்புசெய்ய வேநினைந்தாய்

என்குலத்தை யழிக்க ஏமனுப் நீபிறந்தாய்
உன்போ லரசர்கள் உற்று நகைத்திடுவார்
தர்மசாஸ் திரமுதலாய் தானறிந்த பாலகனே
தர்மமாய்த் தூதுரைக்கத் தானே வருபவரை
மோசம்நினை யாதபடி மொழியுதே சாஸ்திரங்கள்
வேசங்கொண் டேயுரைத்தாய் விமலனை வதைப்பேனென
இப்படி யென்னபுத்தி இதையுரைக் கக்கேளும்
இப்பவிங்கு வாரவர்தான் ஏகாந்தக் கண்ணனுகும்
மும்மூர்த்தியி லொருவன் மூலப் பொருளாதி
தம்மிடத்தில் வந்தால் சரண மடையாமல்
அவனை வதைத்திடவும் ஆகுமோ வுன்னாலே
தவரு புரைத்தாயே சண்டாளா நீதானும்
தவசிகட்குக் கிட்டாதான் தான்வாரா ரிங்கேயும்
அவரிடத்திற் சென்று அடியைப் பணிந்துநின்று
மலைக்காது நீயும் மகிழ்ந்துவார்த் தையாடி
அழைத்து வருகுவாய் அருமையுள்ள என்மகனே
என்றுகண் ணில்லாதான் இயம்பவே சங்கதியை
நன்ருகக் கேட்டு நாகக் கொடியோனும்
கெருவம தாயிருந்தோன் கிட்டித் தகப்பனிடம்
அருமையதாய் வந்து அறைகுவான் யாதெனிலே
தங்களிஷ்டப் படியே தளங்களையெல் லாங்கூட்டி
அங்கவர் முன்சென்று அழைத்து வருவேனென
சிங்கார மாய்நின்று செப்பித் தகப்பனிடம்
தங்காது வந்துமவன் தளங்களுக்குச் செப்பிடவும்
விரைவாய்ப் புறப்பட்டார் வேந்த னுரைப்படியே
கரையடங்காச் சேனை கண்டவர் மயங்கிடவும்
ஆனையோ சங்கமொடு அதிரதர் வெகுசங்கம்
சேனைப் பெருக்கமதோ செப்பிடவொண் ணுநெருக்கம்
எல்லவருஞ் சேர்ந்து எண்ணியே சிந்தையிலும்

நல்லவேளை யதனில் நாத னிடம்நடக்க
வாத்தியங்கள் சத்தம் வாரிதி போல்முழக்க
தோத்திரங்கள் செப்பி சோபனங்கள் பாடிவர
இப்படிக் காகவுமே இவர்கள் வரும்வழியில்
தப்புமொழி புகட்டும் சகுனியு மங்குவந்தான்

சகுனி துரியோதனனுக் குரைப்பது

பொய்யுரையுஞ் சூதும் புகட்டுமா மன்சகுனி
மெய்யாக வந்தான் வேந்த னிடந்தனிலே
வெந்தணலைப் போல வேக முடனவனும்
வந்து மவனும் மறித்தே துரியனையும்
என்ன மதியுனக்கு இயம்புவ தைக்கேளு
மன்னவரே நீரும் வணங்கா முடிமன்னன்
இந்தவுலக வரசர் எல்லாம் பயப்படுவார்
வந்தவனோ கண்ணன் மாடுமேய்க்கு மோரிடையன்
பஞ்சைய ரைவர்களும் பாதம தில்வீழ்ந்து
கஞ்சனை மடித்தோனிடம் கழறியிருப் பார்செய்தி
அவர்கள் மொழிகேட்டு அவன்வாரான் தூதாக
அவனிடத்திற் செல்லாது அரசனே யிங்குநில்லு
சல்தியாய்ப் புகன்றனே சண்டையை விளைத்தவனும்
நல்ல மதியென்று நாகக் கொடியனுமே
மாம னுரைத்ததொரு மதியைக்கேட் டேயரசன்
நேமன் நினைந்துமதை நிமிஷம் திரும்பலுற்றான்
அச்சமயம் சபைக்கு அவன்வந்து மேவிரைவாய்
இச்சையாய்ப் பெரியோரிடம் இயம்புவான் சங்கதியும்
வல்லமையிற் சிறந்த மன்னர்களே யெல்லோரும்
சல்லாப மாய்ச்சென்று சல்தியாய் மாயனையும்
அதிகப் பிரியமதாய் அழைத்துமே வேந்தர்களே
ததியிங்கு வாருமென்று சாற்றினு னேவேந்தன்

கங்கா சுதனுடனே கருணை யொடுதுரோணர்
சிங்கார மானவரசர் செகம்புக ழஸ்வத்தாமன்
அரசரெல்லாஞ் சேர்ந்து அங்கே பயணமதாய்
திரமான தேரேறி சென்றார் ரதம்நடத்தி
அரண்மனை யைக்கழித்து அந்தவீதி யைத்தாண்டி
கரகரெனத் தேரும் கடந்தது அவ்வூரும்
எல்லவரும் யோசித்து இறங்கி ரதத்தைவிட்டு
சல்லாப மாய்வந்து தான்தொழுதார் மாயரையும்
ஆசியவர் கூற ஆனந்தங் கொண்டவர்கள்
பேசிச் சிலகதையை பிரியமுட னேவந்தார்
அஸ்தினு புரியதனில் ஆய னவரும்வந்து
விஸ்தார வீதிகளை வேந்தன்கண்டு மகிழ்ந்தே

கிருஷ்ணன் அங்கிருக்கும்மாளிகை
யாருடையதேனக் கேட்பது

அந்தவீதி யில்வந்தே ஆயனு மேபார்த்தே
இந்த மடமாளிகை யாருடைய தென்றனரே
ஆயனுங் கேட்க அதிலொருவன் யென்னதென
மாயன்கேட் டேமகிழ்ந்து மறுவீதி வந்திடவும்
அங்கோ ரரண்மனை அதிகச் சிறப்பாக
எங்கோனுங் கண்டு இதுயா ருடையதென
அங்கதேச மாளும் அதிகருணன் றன்னுடைய
சிங்கார மாளிகையென்று செப்பப் பெரியோர்கள்
அந்தவீதி கடந்து அப்பாலும் போய்ப்பார்க்க
இந்திரலோ கம்முட்ட இருந்ததோர் மாளிகையை
இதுவும்யா ருடையதென்று எம்பெருமாள் கேட்டிடவும்
விதுரனு மோடிவந்து விளம்புவான் மாயன்முன்
தங்க ளுடையதென்று சாற்றிட வேவிதுரன்
எங்கோனுங் கேட்டு எனக்குமே யிங்குமொரு

மாளிகை யிருக்காவென்று மனதில் மகிழ்வுடனே
நாழிகை போய்நுழைந்தார் நல்ல மனையதனில்
மற்றவர் யாவரையும் மாயன்செல்ல வேயுரைத்து
குற்றமில்லா விதுரன் கோபா லனும்நுழைய
அப்போ விதுரனும் ஆயன்பா தம்பிடித்தே
தப்பாது தோத்திரமே தான்செய்தா னேமகிழ்ந்தே
மூர்த்தியும் இங்குவர முந்தின தவப்பயனோ
பாத்திரஞ் செய்தேனோ பகவானின் றன்னருளோ
இந்தக் குடிசைகள் இயற்றின பெருந்தவமோ
சொந்தமென்று வந்தீர் தொல்லுலகைக் காப்போனே
மாயனிட பாதமதில் மகிழ்வுகொண் டேவிதுரன்
நேயமுடன் பணிய நின்றமாயன் தானவரை
சிந்தைமகிழ்ந் தேயெடுத்து செப்பியே நல்வாக்கு
சந்தோஷ மாகவுமே சாற்றுவார் விதுரனிடம்
விருந்து புசிப்பதற்கு வேந்தனே வந்தேனென
அருமை யுடன்மொழிந்தார் ஆய னவனிடத்தில்
அந்தமொழி தனையே ஆவலு டன்கேட்டு
சந்தோஷ மாய்விதுரன் சல்திசமையற் றொழில்
செய்கின்ற பேர்களை சீக்கிர மாயழைத்து
ஐயன் வருதிபோல அமையுமென்றான் பாகமதை
அப்படியே நல்லதென்று ஆன தொழிற்காரர்
தப்பாமற் சல்தி சமைய லதுநடக்க
மாயனு மப்போது மயக்க மதுகாட்டி
ஆயன் விதுரனிடம் அறைகுவார் யாதெனிலோ
இப்பப் பசிப்பிணியோ எனக்கு வதிகமன்னா
தப்பா மலுமரசே சங்கதி யைக்கேளும்
உனக்குச் சமைத்திருக்கும் உண்மையான சாதமதை
எனக்குப்போட வேண்டுமென்றான் மாயவனும்
விதுர னதைக்கேட்டே விசன மதிலாழ்ந்து

இதுபுதுமை யென்றே எழுந்து பணிந்தவனும்
பூமி தனையளந்து பூசுரரெல் லாந்துதிக்கும்
சாமியே யெந்தனுக்கு சமைத்திருக்கு கூழென்றான்
அந்த மொழிதனையே ஆயனு மேகேட்டு
சந்தோஷ மாயெனக்கு தான்வாரு மென்றனனே
அரச னகமகிழ்ந்தே அப்போ இலைவிரித்தே
திரமாகக் கஞ்சியதை சிரித்துமே வார்த்திடவும்
ஐய னகமகிழ்ந்து அந்த யிலைநேரே
மெய்யாக வேயிருந்து வேந்தனதிற் கையைவைக்க
கஞ்சியு மச்சமயம் கடக்க யிலையைவிட்டு
சஞ்சலத்தை நீக்கி தன்கரத் தாலிலையை
ஒருபக்கந் தான்பிடித்தார் ஒருபக்கந் தானோட
மறுபக்கந் தான்பிடிக்க மாயன் மனமகிழ்ந்து
பின்னு மொருபக்கம் புறப்பட வேகஞ்சி
கண்ண னுங் கண்டு கையொன்று முண்டுபண்ணி
அந்தப்பக்க மும்பிடிக்க அடுத்தபக்க மோடிடவே
விந்தையாய்க் கரமதனை வேந்தனு முண்டுபண்ணி
நான்கு கரத்தாலும் நான்குபக் கம்பிடித்தே
காண்போர்கள் தான்பயங்க கண்ண னு மண்டியிட்டு
பூதனையைக் கொன்ற புண்ணிய னுங்குனிந்து
வேதனையில் லாதபடி விமலன் புசித்திடவும்
விதுரமன் னன்கண்டு மெய்மறந் தங்குநிற்க
விதுரனைப் பார்த்தே விளம்புவார் மாயவரும்
இந்தக்கஞ் சியைத்தானு இகழ்ந்தனை நீமன்னு
விந்தையா யிருக்குதென வேகம தாய்ப்புசித்து
ஆயன் மனமகிழ்ந்து அங்கே விதுரனிடம்
மாயனு மேபுகழ்வார் மன்னவா கேளெனவே
ராவணன் கும்பகர்ணன் ரா ணுவத் தைமடிக்க
ராமனவ தாரமதில் நான்தலை குனியாமல்

அப்போ மடித்தேன் அரக்கர்களைப் பூராவும்
இப்பவும் கஞ்சியது என்னைக் குனியவைத்தே
இருக்கிறதே பாரென்று எம்பெருமாள் தான்மொழிய
இருதயங்கள் பூரித்தே இம்மொழிகேட் டேவிதுரன்
தன்னை மறந்துமே சாமி தனைத்தொழுது
பின்னம் நிலையாமல் பிரியமா யங்கிருக்க
தூதுவர்கள் வந்து தொழுதுமே மன்னனிடம்
ஓதினர் சமைலயது ஓர்நிமிஷ மாச்செனவும்
ஆயனுங் கையலம்பி அங்கிருந்த மன்னருடன்
மாயவனும் பந்தியில் மகிழ்ந்துமே வந்திருக்க
மன்னன் விதுரனுடன் மகிழ்ந்து பலவரசன்
அன்னங் கரிவகையும் அறிந்து பசியாற
எல்லவரும் வந்துமே ஏகாந்த மண்டபத்தில்
சல்லாப மாய்ப்பேசி தானிருக்க வேவிதுரன்
சந்தனங்கள் கந்தம் சவ்வா துடன்கதம்பம்
விந்தையுள்ள பன்னீரும் வேந்தன் வாரியேயிறைத்து
வெற்றிலை பாக்குமுதல் வேந்தர் தனக்கீய்ந்து
குற்றங்களில் லாதபடி கோமான்விது ரன்நடக்க
சந்தோஷ மாகவுமே தானிருக்க வெல்லோரும்
விந்தையாய்ப் பருதியுமே விமலனை யேகண்டு
ஆய னலைந்துமே அவர்வந்தா ராகையினால்
மாயன் சயனமது மகிழ்ந்துமே செய்திடவும்
நாமிருந்தால் சஞ்சலமே நாமுஞ்சென் றாலேயிப்போ
சாமி சயனம் தான்செய்வா ரென்றெண்ணி
நாற்றிசை யுந்துதிக்கும் நல்லசோதி யருணன்
மேற்றிசை யாழிதனில் வீழ்ந்தானே வேகமொடு
அத்ததியில் மாயவனும் அருணன்சென்ற தையறிந்து
பத்தியுடன் செய்தார் பகவானும் மாலைக்கடன்

### கிருஷ்ணன் விதுரனிட மொழிவது

ஆயனு மச்சமயம் அருமையாய் விதுரனிடம்
நேய முடனேயவர் நிகழ்த்துவார் யாதெனிலோ
முன்னமே தான் துரியன் முடிமன்ன ரைவரையும்
மன்ன னழைத்து வழுத்தினான் சூதாட
இட்டகட்ட ளைப்படியே இவர்களு மேயாடி
பட்டணம் பூராவும் பாலர்க ளுந்தோற்க
மாதுபாஞ் சாலிதனை மன்னர் சபையிழுத்து
தீதுநினை யாதவர்கள் சேயிழையாள் தன்துகிலை
பிடித்து இழுத்தார்கள் பெருஞ்சபை யோர்பார்க்க
துடித்துமே மாதும் சோம்பி யழுதிடவும்
மெத்தக் கோபங்கொண்டு வேந்தரைவர் தாமிருக்க
அத்தருணம் பேரியோர் அறைந்தார்கள் மன்னவர்க்கு
ஐவர்களே நீங்கள் அஞ்சாது காட்டகத்தில்
மெய்யா யீராற்வருடம் வேந்தர்க ளேயிருந்தும்
அப்பா லொருவருடம் அஞ்ஞாத வாசமதில்
தப்பாமல் மறுவேடம் தான்பூண்டு மன்னவரே
தங்கள் மனப்படியே தக்க தொருநகரில்
தங்கி யிருப்பதையே தானறிந்தால் நீங்களுமே
அப்பால் பதின்மூன்று அடவிகளி லேசென்று
தப்பா திருப்பீரெனச் சாற்றினர் பெரியோர்கள்
அப்படி யவரிருந்தும் அஞ்ஞாத வாசமதில்
தப்புகளில் லாதபடி தான்வந்தார் மன்னவர்கள்
அன்று பெரியோர்க ளறைந்தமொழி தப்பாது
இன்றுதே சங்கேட்க யான்வந்தேன் தூதாக
மாயன்சந் தோஷமதாய் மகிழ்ந்து விதுரனிடம்
ஆயன் மொழிந்தார் அவனிடத்தில் தப்பாமல்

## விதுரன் கிருஷ்ணமூர்த்தி யிடம்மொழிவது

ஆய னுரைத்ததொரு அருமையான சங்கதியை
நேய னுங்கேட்டு நிகழ்த்துவா னேபதிலும்
அந்தநா ளிற்பெரியோர் ஐவ ரிடந்தனிலும்
சிந்தை மகிழ்ந்துமே செப்பியதோர் சங்கதியும்
பனிரெண்டு தன்வருடம் பாங்கான கானகத்தில்
தனியே வசித்து தப்பாம லோர்வருடம்
அக்ஞாத வாசமதில் ஆளுருத் தெரியாமல்
தக்கபடி கழித்து தான்வந்தி ராமாகில்
மன்னர்களே யுங்களுக்கு மகிழந்துமே நாடதனை
தன்னரசு செய்யும்படி தானளிப்போம் உண்மையென்றார்
அப்படியே சென்று ஐவர் களுங்கழித்து
தப்புவிளை யாதபடி சாமி யெனையிங்கும்
தீதுக ளில்லாமல் செப்பவே சங்கதியை
தூது விடுத்தார்கள் துரிய னிடந்தனிலே
பாவி யிடந்தனிலே பாரளந்த மாயா நீ
மேவியே சென்றங்கே வேண்டிய மதியுரைத்தே
தேசமதைக் கேட்டால் துரியனு மச்சமயம்
வேசமது கொண்டு விளம்புவா னேபதிலே
பஞ்சை யர்க்கு நாட்டை பகிர்ந்து கொடுக்கேனென
வஞ்சகன் செப்பிடுவான் வள்ளலே தப்பாமல்
படைகளைக் கூட்டியும் பாதகன் றன்னையுமே
தடையில்லா தடித்து தான்போட்டா லோர்சமயம்
நொந்திருக்கும் சமயம் நோக்கி யொருக்காலும்
தந்திடவே மாட்டான் தன்னுயி ருள்ளமட்டும்
இன்னும் பலவிதமே எடுத்தோதி யேவிதுர
மன்னன் மாயனிடத்தில் வழுத்தினு னம்மானை

### மாயன் விதுரனுக் குரைப்பது

மன்னர்களெல் லாம்புகழு மகிபனே கேளுமென
பின்னம் நினையாமல் பிரியம தாய்மொழிவார்
விடிந்த வுடனே மேவிக் கொலுதனிலே
துடிய னிடத்தினிலே சோராமல் நாமிருந்து
விபகாரத் தையுரைப்போம் வேந்தர்க ளைவருக்கும்
அபகாரத் தைநினைத்து அவன்கொடுக்க னென்றாலும்
பாரதம் வைத்திடுவோம் பதைக்கத் துடியர்களை
தீரமுட னன்று தீட்டுவா னேபீமன்
இந்தச்சங் கதிதனையும் எடுத்து விதுரனிடம்
சந்தோஷ மாய்மொழிந்து சாமியு மங்கிருக்க
அப்போ கதிரோனும் ஆயன் கருத்தறிந்து
இப்பவே மாயரும் ஏக நினைந்தாரென
நாற்றிசை யுந்துதிக்கும் நல்லசோதி யருணன்
கீற்றிசைச் சிந்ததனில் கிளம்பினான் விண்ணேக்கி
கதிரோன் வரவைக் கண்டுமே மாயவனும்
ததியே காலைக்கடனை தான்முடித் தெல்லோரும்
நல்லசபா மண்டபத்தில் நாதனுட னேயங்கு
சல்லாப மாய்ப்பேசி தானிருந்தா ரம்மானை

### துரியோதனன் மண்டபம் அலங்கரிப்பது

ஆசாரி மார்களுடன் அனைவரு மேகூடி
பாசமொடு யோசித்து பாரமண்டப மதனை
இந்திர லோகமென இயம்பிடச் சோடினையை
தந்திரமாய்ச் செய்தும் சாமி யிருந்திடவும்
பச்சை மரகதத்தைப் பதித்தசிம் மாதனமும்
இச்சையொடு வைத்து இருந்திட வங்கேயும்
அரசன்துரி யோதனனும் அவர்க ளிடந்தனிலே

திரமைகளைப் பேசி சிரித்து மவனுமங்கு
மாதர்க ளாடிடவே மங்களம் பாடிடவும்
வேத மொழிய வித்துவான் கவிகூற
வாத்தியங்கள் முழங்க வானவர் கண்டஞ்ச
நேத்தியான படையும் நெருங்கி விருக்கவங்கும்
அப்போ துரியோதனன் அங்கிருக்கும் மன்னருக்கு
தப்பா துரைப்பான் றன்னுடைய கருத்தையுமே
அரசர்க ளேகேளும் ஐவர்க்காய்த் தூதுக்கு
திரமதாய் வாரவனோ செம்மறியை மேய்த்திடுவோன்
அவனை யெதிர்கொண்டு ஆரொருவர் சென்றாலும்
அவர்கள் தனைமடித்து அனியாயஞ் செய்வதொடு
நாடு நகரமதை நான்கொளுத்தித் தீயாலும்
வீடுகளை யிடித்தே விதைத்திடுவே னுமணக்கு
கால்விலங்கும் போட்டு கடுங்காவல் வைப்பதொடு
தாழ்வுக ளுஞ்செய்வேன் தடையில்லை யுங்களையும்
இன்னும் பலவாறாய் எடுத்துரைத் தேயவனும்
மன்னர் சபையதனில் மவுனம தாயிருந்தான்

கிருஷ்ணமூர்த்தி புறப்பட்டுக்
கோலு மண்டபம் வருவது

கண்ண னெழுந்து காலை பயணமென
திண்ணமாக மொழிய சேனைக ளப்போது
தயாரான பெரும்படைக்கு சங்கதி யையுரைத்து
தயாபரனு மப்போது தங்கப்பணி பூராவும்
வேண்டிய வாபரணம் விமலன் மிகத்தறித்து
பூண்டார் கிரீடம் புதுமையான ஆடைகளும்
தேரதை யேநாட்டி தெய்வலோ கப்பரியை
சாரதி கொண்டுவந்து தான்பூட்டி யதிலிருக்க
ஆயனுஞ் சாத்தகியும் அந்த ரதமேறி

மாயனு மச்சமயம் மகிழ்ந்துமே சாரதியை
பாகனே நீரதத்தை பரிவாய் நடத்தெனவும்
வேகமாய் நடத்தினனே வேதன் மொழிப்படிக்கு
படைகளு முன்னடக்க பாரளந்த மாயவனும்
தடைகளில் லாதபடி தான்வந்து வேகமதாய்
அரசன் சபைநேரே ஐயன் ரதம்வருக
பரபரப்பா யங்கு பார்த்து வரசர்களும்
ஆசாரி மூவரும் அஸ்வத்தாமன் தன்னுடனே
பாசமான விதுரன் பரிவுட னங்குவந்து
ஆயன்பா தந்தொழுதும் அனேகமாய்த் தோத்தரிக்க
மாயன் மனமகிழ்ந்து மன்னவர்க் காசிகூற
கைகொடுத்துக் கூட்டி கரியமா லைச்சபையில்
வையம்புகழ் மாயவனை வருந்தி யழைத்துவந்து
இம்மா நிலவரசர் எல்லாம் புகழுந்திருச்
சிம்மா தனமதனில் தேவனை யிருக்கவைத்து
மெய்யான தோத்திரமே விளம்பிப் பெரியோர்கள்
ஐயனுக்கு பக்கமதி லவர்க ளமர்ந்திருக்க
மன்னன் சகுனி மனதினிலே தோத்திரமே
பின்னமில் லாதுசெய்து பிரிய முடனிருக்க
அங்கதேச மதையே ஆண்டு வருங்கருணன்
பங்கம் நினைந்துமவன் பாரதையே பார்த்திருந்தான்
நாரதர் தன்னுடனே நல்ல ரிஷியிருவர்
பாரரசர் சபையில் பரிவாக வந்திடவும்
எல்லவருந் தொழுக இவர்க ளாசிகூறி
சல்லாப மாய்ச்சிம்மா தனமதில் வந்திருக்க
மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாண்டுவரும் புண்ணிய னுந்துரியன்
அப்போ தைரியமாய் ஆயனை யேபார்த்து

தப்பாம லேமொழிவான் தடித்தனத் தைப்பூண்டோன்
மாயவ னேநீயும் மகிழ்வுடன் நேற்றுவந்தே
ஆயன்குல மானதினல் அடியேனிடம் வாராது
ஏண்டாநீ தள்ளியே என்விடுதி தன்னையுமே
தீண்டாது சென்ருய் சிறிய விதுரனிடம்
என்மேலும் வஞ்சகமா யென்ன நினைந்தாயென
மன்னவனுங் கேட்டான் மகாகோபந் தன்னுடனே

கிருஷ்ணமூர்த்தி துரியோதனனுக் குரைப்பது

மாயனதைக் கேட்டே மன்னன் துரியனிடம்
ஆயனுமே மொழிவான் அருமையான செய்திகளை
மண்டலத்தை யாளும் மகாகிரீட பூபதியே
கண்டவர்கள் மயங்கும் காவல னேகேளும்
இங்கே வருவதற்கு ஏகி வரும்போது
அங்கே யொருமனையும் அதிகச் சிறப்பாக
இருந்ததை யேகண்டு இதுயா ருடையதென
அருகி லிருந்த அருமையான விதுரன்
அவர்மா ளிகையென்றும் அமுது புசிப்பதற்கும்
தவரா தழைத்ததினல் தங்கிவிட் டேன்யானும்
வேரேவஞ் சகமில்லை வேந்தனே யோசியாதீர்
நேரே மொழிவேன் நின்பகை பஞ்சவர்கள்
எதிரி தரப்புமே எந்தனைத்தூ தாகவிட
பதியரசே யுன்னிடத்தில் பாலன்னந் தானுண்டு
அவர்களிட சங்கதியும் அருமையாய் நான்மொழிதல்
தவரல்ல வோவதுவும் சாஸ்திரம் படித்திலையா
உன்னிடம் புசிக்கவுமே ஓதவில்லை சாஸ்திரத்தில்
மன்னவனே யென்று வழுத்தினு னேமாயன்
அரவக் கொடியோனும் அம்மொழியைத் தான்கேட்டு
திரமது கொண்டு செப்புவா னேபதிலும்

ஏனிங்கு வந்தாய் இடையனே யெம்மிடத்தில்
தானிங்கு வந்ததையும் சாற்றுவா யென்றனனே

கிருஷ்ணன் துரியோதனனுக் குரைப்பது

அன்றுமே காத்தோன் ஆய்ப்பாடி தன்னையுமே
இன்று தூதாகவந்து எடுத்து மொழியலுற்றான்
மண்டலத்தை யாளும் மன்னன்துரி யோதனனே
கண்டவர்கள் மயங்கும் காவலனே கேளும்
அந்தநாளில் நீங்க ளைவர் களையழைத்து
விந்தையான மண்டபத்தில் வெகுவரசர் தாம் பார்க்க
மன்னவ ரைவரையே வைத்துச்சூ தாடியதில்
பின்ன மடைந்துமவர் பிரபல னேதோற்க
தவராத பெரியோர்கள் தானிருக் குஞ்சபையிலே
அவர்க்கு மொழிந்தாயே அந்தநா ளில்நீயும்
மங்களமாய் யீராற் வருடமது காட்டகத்தில்
தங்கி யிருந்து தனையர்களே யப்பாலும்
அக்ஞாத வாசமதில் ஆளுருத் தெரியாமல்
தக்கவேடம் பூண்டு தாங்கள் யீராற்மாதம்
இருந்திட வேண்டும் இதையாங்கள் கண்டாலும்
மறுபடிப் பதின்மூன்று வருடம் வனத்திருக்க
வேண்டுமென்று செப்பிடவும் வேந்தர்க ளைவர்களும்
ஆண்டு வருவோமென அவர்சென்று காட்டகத்தில்
பெரியோ ருரைப்படியே பேரரசர் வனமெய்தி
பரிதாப மாகுமே பஞ்சவர்கள் பட்டதுன்பம்
வெயிலும் பனியும் வேந்தர்க ளுஞ்சகித்து
சயித்து மவரிருக்கச் சண்டாள னும்பாவி
வேதன் விதித்தானே வேந்தர்கள் பஞ்சவர்க்கு
பாதகனு மவனே பண்ணிவைத்தான் இவ்வேலை

பனிரெண்டு தன்வருடம் பாழடைந்த காடுகளில்
தனியே யவரிருந்தும் தான்கழித் தப்பாலும்
தக்கவேடம் பூண்டு தானோர் நகரேகி
அக்ஞாத வாசமதை ஐவர்க ளுங்கழித்து
வந்திருக்கார் மன்னர் வருந்தியே சென்றவர்கள்
எந்தனை யழைத்து இயம்பியே சங்கதியை
உந்த னிடந்தூது ஓதவே யெந்தனையும்
சந்தோஷ மாக தானனுப்பி னார்மன்னா
பெரியோர் களைவைத்து பேசிய படிநீயும்
அறிய வெகுவசர் அரசனே நாடதனை
ஐவர்பஞ்ச பாண்டவர்க்கு அன்பாக நீகொடுத்து
வையம் புகழ்ந்திடவே மகிழ்ந்தரசை முடிசூடி
கூடி யிருந்தாலே குருகுலத் தின்பேரும்
நாடி யுலகமெங்கும் நன்றாய்ப் புகழ்வார்கள்
நீங்களண்ணன் தம்பி நேர்மையுட னேயிருந்து
பாங்கா யரசுசெய்தால் பார்த்தபேர் தாம்மதிப்பார்
அன்று பெரியோர் அறைந்தமொழி தப்பாது
இன்று நீ யைவருக்கும் ஈய்ந்திடு வாய்தேசம்
என்றுமாய னெழுந்து இருகரத்தை யும்நீட்டி
நன்றாகக் கேட்டார் நாகக்கொடி யோனிடத்தில்

துரியோதனன் கிருஷ்ணபகவானுக்கு
பதிலுரைப்பது

அரவக் கொடியோனும் ஆய னுரைகேட்டு
பரபரப்பாய்ப் பார்த்தே பாரளந்த கண்ணனையும்
கண்கள் சிவந்துமவன் கனகோப முண்டாகி
விண்வழியே புகையும் மேவியே சென்றிடவே
இடையனே கேளடா என்னுடைய வாக்கியத்தை
அடையவே பஞ்சவரும் அருமையான நகரை

அப்பொழுதே சூதாடி அரசையெல் லாந்தோற்று
ஒப்பவே சென்றூர்கள் உகந்ததோர் கானகத்தில்
அவர்களிடஞ் சென்றே அருமை மதியுரைத்து
தவராமல் தேசமதை தான்வாங்கு வோமென்று
காட்டில் திரிந்தவரைக் கண்ணனே நீசென்று
கூட்டியே வந்தே குடிகேட னேபாவி
உன்பேச்சைக் கேட்டு ஓடியிங்கு வந்தவர்கள்
பின்னும் வனஞ்செல்வார் பெரியசனி யன்பூண்டார்
கலகத்துக்குக் காரணம் கண்ணனே நீதானே
பெலமாய் முடிக்கிருய் பெரும்போரை யும்விளைக்க
இந்தநற் பூமிதனில் ஈயிருக்கும் விடமும்
அந்த முடைய ஐவர்க்கும் யான்விடேன்
வந்தாய்நீ யெண்ணியே வசப்படுத்த யெந்தனையும்
அந்தச் சமர்த்து ஆகாது வுன்னாலே
யாருவந்து யென்னிடத்தி லறைந்தாலும் அவர்களை நான்
நேரு நிற்கவைத்து நிமிஷம் வதைத்திடுவேன்
இன்னும் பலவிதமே எடுத்தோதி யேபாவி
மன்ன னுரைத்தானே மாயவன் றன்னிடத்தில்

கிருஷ்ணபகவான் மொழிவது

ஆதிமகா மூலம் அறிந்துமே சங்கதியை
வேதனை மிகவடைந்து விளம்புவா ரேசபையில்
இந்தச் சபைதனிலே இருக்கும் பெரியோரே
சொந்த வரசனுமே சொன்னதைக் கேட்டீரா
திரிதராட் டிரமன்னு செட்புவ தைக்கேளும்
அறிவீர் சபையோரே அனைவோர்க்கும் வாக்கியமே
உன்தம்பி பாண்டரசன் உண்மையாய்க் காட்டகத்தில்
மன்னன் குழந்தைவிட்டே மரண மடைந்தபின்பு
அந்தச்சேதி யைக்கேட்டு ஐவ ரிடஞ்சென்று
சந்தோஷ மாயவரைத் தானழைத் திங்குவந்து

மனுவிக்யானம் முதலாய் மன்னவனே கற்றதொடு
தனுவித்தை யெல்லாம் தான்கற் றவர்க்குவைத்தும்
இந்திரப்ர சித்தமதை இவர்க்கு முடிசூட்டி
தந்திரமா யாண்டுவந்தார் தனஞ்செய ரைவர்களும்
மண்டப முண்டாக்கி மன்னவர் களையழைத்து
அண்டை யிருந்துநீ ஆடச்செய்தாய் சொக்கட்டான்
ஐவர்களுந் தோற்க அவர்நக ரைப்பறித்து
செய்யாத வேலைகளைச் செய்தார்கள் பாதகரும்
அன்று பெரியோர்க ளறைந்தாரே நீரறிய
சென்றிடுங்கள் வனமே சேயர்காள் நீங்களுமே
பனிரெண்டு தன்வருடம் பாங்கான கானகத்தை
அனியாய மாயுரைத்திர் ஐவர்க ளேகிடவே
அப்பாலீ ராற்மாதம் அறியா திருந்திடவும்
செப்பினு ரேபெரியோர் தெரிந்தால் மறுபடியும்
ஈராறு தன்வருடம் இருப்பதொடு மகளுாதம்
ஈராறு மாதமது இருந்திடவே வேண்டுமென்றீர்
அன்றுவுரைத்தபடி ஐவர்க ளுங்கழித்தே
இன்றுயென்னைத் தூது இயம்ப விடுத்தார்கள்
துரியோ தனனிடத்தில் சொன்னதற் கேயவனும்
அறிய வுரைத்ததையே அறிந்தீர் பெரியரசே
நாடுகொடா விட்டால்நல்லபீ மன்கதையால்
ஈடுடனே நின்று எல்லோரை யும்மடிப்பான்
விசையன் வெகுபலவான் வெகுபேரை யும்வதைத்து
செயம்பெறுவா னவனுந் தீர ரணசூரன்
சகாதேவ னும்நகுலன் தனுவையே கைப்பூண்டு
போகாது மன்னர்களை பொடிப்பொடி யாயறுப்பார்
தவறுகள் வந்திடுமே தரையாசே யுந்தனுக்குந்
தவறு வருமுன்னே சாற்றினேன் சங்கதியை

இன்னும் பலவாருய் எடுத்தோத வேகண்ணன்
மன்னன்விழி யில்லாதான் வழுத்துவான் மாயனிடம்

திரிதராட்டிரன் கிருஷ்ணபகவானுக்
குரைப்பது

மண்ணையே வாரியுண்ட மணிவாயா செங்கமலக்
கண்ணனே கேளுமென்று கழறுவா னந்தகனும்
அருமை மிகப்பூண்ட ஆதிமூல மாயவனே
இருதரப்பு மெந்தனுக்கு இஷ்டச் சுதனறியும்
அதிகப் பிரியம்யான் ஐவர்கள் மேல்மாயா
ததிவந்தா ரென்றீர் சந்தோஷங் கொண்டேன்யான்
பதியதனை யாண்டாலே பகிர்ந்து மவர்களுக்கு
அதிவிரை வாய்க்கொடுப்பேன் ஆண்டவாவுன் சொற்படிக்கு
பாவிபிர் மன்விழியைப் படைக்கா ததினுலே
காவிரிசூழ் பூவுலகை கர்ணன் துரியனிருவர்
ஆண்டு வருகிருர் அருமை யொடுமவர்கள்
ஆண்டவ னேயென்று அறைந்துமே யந்தகனும்
செய்ததொரு புண்ணியத்தால் தேவனே யன்புள்ள
ஐவர்களும் வந்தார் ஆண்டவன் றன்கிருபை
என்மகன் றனக்குமே எந்தலே மதியுரைத்து
மன்னவ ரைவரையும் வந்திருக்கச் செய்வாயே
என்மொழியைக் கேளான் எந்தன் சுதன் துரியன்
உன்னுரையைக் கேட்டு உள்ளதென்று சம்மதிப்பான்
கண்டிக்க லாம்நீயே கண்ணு அவன்றனையும்
தெண்டிப்ப தோடவனை சிட்சையும் செய்திடலாம்
எல்லாப் பவரும் எந்தலே யுனக்கிருக்க
நல்லாய் மொழிந்து நாகக்கொடி யன்றனையும்
பஞ்சவர்க்கு தேசம் பாதி கொடுப்பதொடு
சஞ்சலத்தை விட்டு தானே யிருவர்களும்

எத்தேச வரசர்களும் இவரை மதிக்கும்படி
ஒத்திருக்கச் செய்ய உலகை யளந்தகண்ணு
உன்னாலே யாகும் ஒற்றுமை செய்திடவே
என்னாலே யாகாது என்றானே யந்தகனும்
மண்ணையே யுண்ட மலர்க்கையன் செங்கமலக்
கண்ணனுங் கேட்டு கழறுவான் துரியனிடம்

கிருஷ்ணமூர்த்தி பின்னும்
துரியோதனனுக்குரைப்பது

மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாண்டுவரும் புண்ணிய னேகேளும்
அருச்சுனன் காட்டகத்தில் அதிகத் தவமிருக்க
கிருபைகொண் டேயீசன் கியானதிருஷ்டி யாலறிந்து
விசயனிடம் வந்து வில்லடியுந் தான்வாங்கி
விசயன் றனக்கும் ஈய்ந்தாரே பாசுபதம்
இந்திரனுங் கண்டு இவனிடத் தில்வந்து
தந்திரமாய் மொழிந்து தானழைத்து மேயேகி
இந்திர லோகஞ்செல்ல இவனிடத்தில் வானவர்கோன்
அந்தச் சமயமதி லறைந்தாரே சங்கதியும்
அவனுக்கு பகையோர் அந்தர லோகமதில்
தவறுகள் செய்வோர் தக்க பலவான்கள்
காலகேய நிவாத கவசரெ னுங்கொடிய
ஆலகுண மூக்கோடி அவுணரறு பதாயிரம்பேர்
இம்மிசைகள் செய்வதை எடுத்தோதி விசயனிடம்
வம்மிசத்தை யழிக்க வாங்கினா னேவரமும்
அர்ச்சுன னுங்கேட்டு அவர்களுடன் போர்பொருதி
கெர்ச்சனைசெய் தேமடித்து கிரீடிபேர் பூண்டான்காண்
வீமன் பலவானும் மிகுந்தகோ பங்கொண்டால்
சோமனெடு மெதிர்ப்பான் சொல்லவொண் ணாத்துடியன்

இருவர்கள் போர்செய்தால் எல்லாம் மடித்திடுவார்
வருவதை யேமொழிந்தேன் மன்னு யிதுவுண்மை
அவர்க்குநாட் டையீந்து ஐவருடன் நீயும்
தவராப் பிரியமதாய் சஞ்சலத்தை யேபோக்கி
ஒக்கவே சேர்ந்திருந்தால் உலக வரசர்களும்
தக்கபடி மதிப்பாய் தானினைப்பார் மன்னவனே
இன்னும் பலவிதத்தை எடுத்துமே மாயவரும்
மன்னன் துரியனுக்கு வழுத்தினர் செய்திகளை
அதுசங் கதிதனையே அங்குமே கேட்டிருந்த
விதுரன் துரியனுக்கு வெகுநீதி யைமொழிய
கங்கா சுதனும் காவலன் துரியனுக்கு
பங்கம் நினையாதபடி பகர்ந்தாரே சாஸ்திரத்தை
கண்ணில்லா னச்சமயம் கருணை மிகக்கொண்டு
மன்னன் துரியனுக்கு வழுத்தின நீதிகளை

நாரதமகாமுனிவர் துரியோதனனுக்
குரைப்பது

தவயோகி வேடமதை த்க்கதெனப் பூண்டதொரு
சிவயோகி நாரதரும் செப்புவார் மன்னனுக்கும்
மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாளும் புண்ணிய னேகேளும்
பெரியோ ருரைகளுமே பேச்சுப் பிசகாமல்
அரிராமன் கேட்டதுபோல் ஐவருக்கும் நாடதனை
பாதி கொடுத்திடுவாய் பாரரச னேயதுவும்
நீதிப் படியேயான் நிகழ்த்தினேன் சங்கதியை
ஐவரும் நீங்களும் அரசையே யொத்திருந்து
மெய்யன் கிருபையதால் வேந்தனே யாண்டாலும்
தேச வரசர்களும் தெரிந்துமே சங்கதியை
பாசமொடு பணிந்து பகுதிகள் கட்டிடுவார்

நன்ருக வாழ்வீர் நாதன் கிருபையதால்
என்று மகாமுனிவர் எடுத்தோதி ஞர்நீதி

துரியோதனன் நாரதமுனிவருக்குரைப்பது

அவருரைத்த செய்திகளை அரசனு மேகேட்டு
தவரு யுரைத்தாரென தன்னகத்தி லேநினைந்து
நாரத மாமுனியே நன்ருக வேநீரும்
பாரச்சடை யைத்தரித்து பரமனைப்போலிருந்தும்
பஞ்சவர் பட்சமிருந்து பாவியே யெந்தனிடம்
சஞ்சல மடைந்திடவே சாற்றினுய் சங்கதியும்
காட்டகத்தில் திரிந்தே கந்தமூ லம்புசித்து
நாட்டதனில் வந்தும் நன்ருய் மொழிந்தீர்காண்
ஐவர்கள் பட்சமிருந்தே அன்போடு இங்குவந்தே
பையவே எந்தனையும் பாவி வசப்படுத்த
இந்தயோ சனைகொண் டியம்பிய சங்கதியும்
எந்தனிடஞ் செல்லாது ஏமாற்ற லாகாது
யாருவந்து என்னிடத்தில் அனேகமா யோதினுலும்
பாருலகிற் பாதி பகிர்ந்துகொ டேனவர்க்கு
ஐவரென் பூமியில் அடிவைக்க வென்றெண்ணி
பையவே வந்தாலே பாரு மவர்களையும்
மட்டிப் பயல்களும் வந்தாலே யிங்கேயும்
வெட்டி யெறிந்துநான் வீரசொர்க்கம் சேர்த்திடுவேன்
அன்றுமே யென்னிடத்தி லரசையெல் லாந்தோற்று
இன்று யென்ன தூது ஏன்விடுத்தான் பஞ்சையர்கள்
ஈன மடைந்து இந்தச் சபையதனில்
மானமதை விற்று மன்னர்கள் சென்ருரே
அப்படிச் சென்றவர்கள் அனுப்பிய தூதுவனும்
செப்படி வித்தைக்காரன் செம்மறியை மேய்த்திடுவோன்
அவர்கள்பேச்சைக்கேட்டு அட்டிசெய் யாதுவந்தோன்

அவனு மிடையன் அனேகந் திருடினவன்
மானத்தை விற்று மறதியில் லாதபடி
ஈனத்தை யெண்ணுமல் இங்குவந் தான்சபையில்
பாவிக ளைவருக்கும் பகிர்ந்துமே நாடுகொடேன்
மேவிப் படையெடுத்து வேந்தர்க ளென்மேலும்
போரதை யேதொடுத்து பொக்கிக ளெனைச்செயித்தும்
பாரதையே யாளட்டும் பாவிகொடுஞ் சண்டாளர்.
எந்த னகநினைப்பை எல்லாமே யும்மிடத்தில்
விந்தையாக மொழிந்தேன் வேறென்று மில்லையினி
என்றுமே மன்னன் இயம்பியதைக் கேட்டு
நன்றான மாமுனிகள் நல்ல ரிஷியிருவர்
அந்தமன்னன் றனக்கு ஆனவெகு நீதிகளை
விந்தையாக மொழிய வேந்தனுங் கேட்டதற்கு
சங்கதி பதிலதனைச் சாற்றாத படிதுரியன்
பங்க மடைந்தவனும் பாரதையே பார்த்திருந்தான்

கிருஷ்ணமூர்த்தி பின்னும் துரியோதனனுக்
குரைப்பது.

துரியோ தனனே துடியர வக்கொடியா
விரிவாய் மொழிந்தேன் வேந்தனே முன்னேயும்
இருதரப்புப் பேரும் எனச்குச் சரிதானே
கருவமுங் கொண்டுநீ காவல னேயுரைத்தாய்
சண்டை நடவாமல் சமராசி யாகவுமே
அண்டையி லேமொழிந்து அதைநிறுத்த யான்வந்தேன்
திண்டுமுண்டு வார்த்தை செப்பினு யேயெவரும்
கண்டால் மயங்கிடுவார் காவலா யுன்மொழியால்
இன்னமுஞ் செப்புகிறேன் எந்தலே யன்னுளில்
முன்னம் பெரியோர்கள் மொழிந்தபடி தப்பாது
ஐவர்பஞ்ச பாண்டவர்க்கு அரசையே நீகொடுத்தால்

வையக மெல்லாமே வழங்கும் கியாதிமன்னு
நன்று யிருக்கும் நாட்டை யவர்க்குமே
இன்று விடுமென்று இன்பமதாக் கேட்க
அறிந்து துரியோதனன் ஆதிமூலந் தனக்கு
தெரிந்திடவே பாதகனும் செய்தி புகல்வானே
சும்மாவே யெந்தனுடன் தொந்தரவு செய்கிறாய்
இம்மா னிலமதனில் ஈயிருக்கும் இடமும்
ஆவியுள்ள மட்டும் அருமையான நாடுதனை
பாவிய ரைவருக்கும் பகிர்ந்துகொ டேனேயான்
உண்மை யிதுவென்று உரைத்துவப் பாதகனும்
கண்ண னிடத்திலே கனகோப மாயுரைக்க
கோவர்த்தன கிரியை குடையாகவேபிடிக்க
மேவலர்கள் கண்டு மெச்சினதோர் மாயவனும்
பாவியந்தத் துரியன் பகர்ந்ததை யேகேட்டு
மேவி யவனிடமும் விளம்புவார் யாதெனிலோ
கொடுப்பதில்லை யென்ற கோமானே பஞ்சவர்கள்
கெடுவதை யேகழித்து கிரயமாக வந்தார்
இன்னமும் யான்மொழிவேன் இராசனே தப்பாது
மன்னவ ரைவர்களும் மகிழ்ந்து இருந்திடவே
மன்னவா நீரும் மனமோடு ஐந்தூரை
பின்னம்நினை யாதபடி பிரபலர்க்கு நீவிடுவாய்
நல்லகுண மாயிருந்து நல்லர சேயதிலும்
பொல்லாங்கு இல்லாமல் பொருந்தியே வாழ்வீர்கள்
ஐய னெழுந்து மவர்கரத்தை யும்நீட்டி
வையம்புகழ் மன்னவனே வருந்தியே கேட்டிடவும்
ஆயன் மொழிந்ததையே அத்துடியன் தான்கேட்டு
மாயன் றனக்கு வழுத்துவா னேபதிலும்
இத்தனை யானுரைத்தும் இடையா மதியில்லாது

பித்த னைப்போல பிதற்றுவோ னேகேளும்
ஐவர்க ளிருந்திட ஐந்தூரை யுங்கொடுக்கேன்
மெய்யான வாக்கு விளம்பினேன் தூதுவனே
என்று துரியோதனன் இருகண் புகைகிளம்ப
நன்று யுரைத்தான் நாத னிடந்தனிலே
பூதனை தன்னுயிரைப் போக்கிய தோர்மாயன்
வேதனை மிகவடைந்து விளம்புவார் பின்னுலும்
மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாண்டுவரும் புண்ணிய னேகேளும்
பாதித் தேசமதனை பகிர்ந்துவிடு மென்றதற்கு
பாதியு மில்லையென்றாய் பரமன் செயலதுவும்
ஐந்தூருங் கேட்டேன் அரசர்கள் தான்கேட்க
ஐந்தூரு மில்லையென்றாய் அனியாய மாகமன்னா
இன்னமு மொன்றிருக்கு இதையுமே நீகவனி
மன்னவனே யென்று வழுத்தலுற் றார்மாயன்
ஐவ ரிருந்திடவும் ஐந்துவீ டாகிலுமே
மெய்யாகக் கேட்கிறேன் வேந்தனே யீந்திடுவாய்
என்றுமே மாயன் இருகரத்தை யே நீட்டி
நன்றாய் அளியுமென்று நாத னுங் கேட்டனரே

துரியோதனன் கிருஷ்ணமூர்த்திக்
குரைப்பது.

ஆயன் மொழிதனையும் அப்பாவி யுங்கேட்டு
மாயன் றனக்கும் வழுத்துவான் யாதெனிலோ
தூதுமே வந்தவனே சொல்லுவ தைக்கேளும்
மாதுகுந்தி தேவி மகாவேசை யேயவளும்
தந்திரமா யைவரையே தான்கூடி யேமாது
அந்தவேளை பெற்றாள் அருமையாய்ப் பிள்ளையைந்து
தருதலைக் குட்டிகளும் தாஞெரு மங்கைதனை

மருவுகிறு ரைவர்களு மானக்கே டேயோசி
இப்படியு மன்னர்க ளிருந்துமே பூவுலகில்
தப்புகள் செய்வது சரிதானோ வுந்த னுக்கும்
ஒருத்தியை யைந்துபேர் உலகமில் லாவழக்கம்
திருப்தியாய்க் கூடுகிறார் திருவுள மோயிதுவும்
எந்தன் குலத்துக்கும் இழிவாக வேயிவர்கள்
பந்தவினையாலே பாதகர் பிறந்தார்கள்
இப்படி யேன்படைத்து இந்தமதி யுங்கொடுத்தும்
தப்புகள் செய்கிறார் சனியனைப் பூண்டவர்கள்
அப்படிச் செய்கின்ற அரும்பாவி யர்க்குநீ
எப்படித் தூதுரைக்க என்னிட மேவந்தாய்
நாடுகேட்டாய் மாயா நானுமில்லை யென்றதற்கு
காடுவலைந்து வந்த காவலர்க் கைந்தூரும்
கேட்டாயே நீயும் கெடுதி நினைந்து வந்து
கேட்டது மில்லையென கேடழிவாய் நீயுமெனை
இன்னும் விடுறாயில்லை எந்தனிடம் நீயும்
பின்னுமே கேட்டாய் பிரியமா யைந்துமனை
நன்றாய் நினைந்தாய் நான் சொல் வதைக்கவனி
இன்று வுரைப்பதுமே இதுவுமே சத்தியம்
ஐந்துவீடுங் கொடுக்கேன் ஐவர்என் பூமியிலே
வந்திடவுங் கூடாது வழுத்தினேனு னுள்ளதையும்
படைகளைச் சேர்த்து பாண்டவர்கள் தப்பாது
தடையில்லா மல்யுத்தம் தான்செய்ய வந்தவர்கள்
திறமையைக் காட்டி செயித்துக் கொடிபோட்டும்
தீரர்கள்தம் சமர்த்து தெரியுமே போர்க்களத்தில்
ஆவியிருக் கும்வரையில் ஐவரையிப்பூமி
மேவி வரவிடேன் விளம்பினேன் உண்மையிது
சத்தியம் சத்தியமே சண்டைசெய்ய நிச்சயந்தான்
இத்ததி யான்மொழிந்தேன் இனிமேலும் வார்த்தையில்லை

## கிருஷ்ணன் துரியோதனனைக் கேட்பது.

மண்டலத்தையாளும் மகா கிரீட பூபதியே
கண்டவர்கள் துதிக்கும் காவலவ னேகேளும்
சொல்மொழி தவராத தோஷத்தை தேடாத நீ
நல்வழியே செல்வாய் நாகக்கொடியோனே
பூவுலகில் நீதான் பொய்யுரை யாமனிதன்
மேவுலகி லுங்காணேன் வேந்தே யுனைப்போல
பெரியோர்கள் தன்னுடனே பேசியே யெல்லோரும்
தெரியவே பாண்டவர்க்கும் செப்பி நீ ரேவேந்தே
ஈராற் வருட மிருந்துமே கானகத்தில்
ஈராறு மாதம் இருக்கவேண்டு மக்ஞாதம்
சென்றுமே நீங்கள் சிக்கிர மாய்க்கழித்து
நன்ருக வந்தாலே நாம்தருவோம் தேசமென
அப்படியே சென்று ஐவர்களுங் கழித்து
தப்பாது வந்துமவர் தானனுப்பி னர் தூது
யானுமே வந்து அரசனே யுன்னிடத்தில்
வேணுமென்று யானும் விளம்பியே கேட்டதற்கு
கொடுப்ப தில்லையென்று குறமெல்லாம் நீபடித்து
வடுப்படுத்து வேனென்ருய் யன்னவ ரைவர்களை
ஆதிவாக் கியம் மறந்து அசத்திய னைப்போல
ஓதினுய் சண்டைசெய்ய உத்தமன் நீகாணும்
அருளு மிகப்பூண்ட அன்பான சந்தனுவின்
குருகுலத்தி லேபிறந்த கோமான் நீ சத்தியவான்
முன்மொழிந்தாப் போலே முடிமன்னு பின்னுகும்
மன்னர் சபையிலே வாக்குத்தவ ராதபடி
உறுதிசண்டை யென்று உத்தமா கைகொடெனை
க்ருவம தாய்க்கேட்டார் கண்ணன் துரியன்றனை

## துரியோதனன் கிருஷ்ணனைக் கோபித்துக் கைகொடுத்தல்

வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்த துரி யோதனனும்
சஞ்சல மில்லாமல் சாற்றுவான் மாயனிடம்
சட்டமாய்க் கேட்ட சண்டாள னே நீயும்
கெட்ட மதியுடைய கீழ்ச்சாதி யானதினல்
சத்திய வாக்கு சபையோரெல் லாமறிய
சத்தியம் சத்தியமே சண்டைக்கு நிச்சயந்தான்
மெத்தக்கோ பங்கொண்டு வேந்தன்சிம் மாதனத்தில்
அத்ததியே யடித்தான் ஆங்காரங் கொண்டவனும்
இன்னமுங் கேளடா இடையனே நீதானும்
நன்னயமாய்ப் பேச நடுச்சபையில் வந்தவனே
மடையனே நீயும் வளரவிட மில்லாது
இடையன்வீட்டுக் கஞ்சிக்கே ஏங்கி யிருந்து நீயும்
தின்னபய லானதினல் செப்பவந் தாய்தூது
மன்னனுய்ப் போனேமென்று மகுடந் தரித்தாயே
வெண்ணை திருடவே விரட்டியே மங்கையர்கள்
உன்னைப் பிடித்தும் உரலோடுங் கட்டிவைத்தே
அடித்தார்கள்மங்கையர்கள் அதுபொறுக்கமாட்டாது
துடித்தே விழுந்துசோம்பிப் புரண்டிடவும்
ஐயையோ பாவமென்று அவிழ்த்தே யுனைவிடவும்
பையவே யோடி நீ பால்ப்பானை யைத்திருட
அங்கே யுனையடித்தார் அடிமடையா தப்பாமல்
சங்கையெல்லாம் விற்று தானேவெளி யேறிநீ
சும்மா யிருக்காமல் தொல்லைவிளைத் தாய்ப்பாடி
பொம்மலாட்டங் காட்டி போயோடி யொளிந்துநின்று
கானகத்தில் நீயும் கன்றுகளோட்டிச்செல்ல
கானகத்தி லோர்கங்கை கண்டுமே பெண்களெல்லாம்

சேலை களைந்துவைத்து சீக்கிரம் நதிகுதிக்க
வேளைதுகி லையெடுத்தும் விரைவாக நீசென்று
மறைந்து இருந்திடவே மாபாவி யுந்தனையே
விரைவாகத் தேடி விசனமு டன்பெண்கள்
மரத்தின்மே லேகண்டு மங்கைய ரிழுத்தெறிந்த
குறப்படவா வுந்தனையும் கோதையர் மிதித்தாரே
அதுவும் மறந்து அப்போ வுயிர்தரித்தாய்
பொதுமனு ஷன்போல புத்திசொல்ல வந்தாயடா
துடையுமே கிள்ளிநீ தொட்டிலு மாட்டுகிறாய்
இடையனாய் நீபிறந்தும் இவ்வளவு சமர்த்தெதுக்கு
என்னிடம் நீபேசி ஏமாற்ற வந்ததையும்
ம்ன்ன னறிவேன் மாயாவுன் வஞ்சனையை
இன்னும் பலவிதமே எடுத்தோதி யேதுடியன்
முன்னும்பின்னு மெண்ணாது மூடத்தன மாய்ப்பேச
மாயன் வருத்தமொடு மன்னர்க ளைப்பார்த்து
ஆயன் மொழிவார் அரசரே கேளுமென.
மைத்துனனுங் கெட்டி வார்த்தையது மட்டிதான்
இத்ததி மொழிந்ததும் எனக்குரெம்ப வானந்தம்
வருகிறேன் மென்றுமே மாய னெழுந்ததும்
திரும்பியே பார்த்தார் சேனை தயாராக
எல்லோருமேயெழுந்து ஏகி வெளியில்வர
சல்லாப மொடுகண்ணன் தானேறி யேரதத்தில்
பாகனை ரதம்விடென்று பகர்ந்திட வேயவனும்
வேகமாய் நடத்தினனே மேன்மை யானரதத்தை
அந்தவிடம் நீங்கி அதிவிரை வாய்நடத்தி
சந்தோஷ மாய்விதுரன் தன்மனைக்குச் சென்றனரே
அவர்களும் சென்று அங்கிருந்த பிற்பாடு
தவறுகள் செப்பினதோர் சர்ப்பக் கொடியோனை

அங்கிருந்த பெரியோர் அதிக விசனமொடு
சிங்கக்கோபங் கொண்டிருக்கும் செல்வனுக்குத் தான்மொழிவார்
இம்மா னிலவரசர் எங்கும் புகழ்ந்திடவே
சிம்மா தனத்திருக்கும் திரியோ தனனேகேள்
தூதுரைக்க வந்தவரை துடியாகப் பேசினல்
தீதுகள் வந்திடுமே செகத்தையாளும் மன்னவனே
நல்லா யிருக்கிறதா நல்லர சே நீரும்
சொல்லாத வார்த்தைகளைச் சொன்னய் நீ மாயவனை
என்ன மதியிதென ஏங்கியிருக் கப்பெரியோர்
மன்னன் துரிய னும் வார்த்தை பதிலதனை
சொல்லத் தொடங்கினன் சோம்பின சபையோரே
நல்லாய் மொழிந்தீர்கள் நான்புகல்வ தைக்கேளும்

## துரியோதனன் விதுரனைக் கோபிப்பது

இந்தச் சபைதனிலே இருக்கும் விதுர னும்
வந்தமாயன் றன்னை வழிமறித் தேயிவனும்
அறுசுவை போசனமும் அளித்தவன் கண்ண னுக்கு
கெருவம் படைத்தவனே கேளாய் விதுரா நீ
எனக்குப் பகையாளி இடையன் தூ தாகவந்தால்
உனக்குப் பகையிலையா உறவா நீ சொல்லையா
அவ னுக்கு விருந் துமே அளிக்கலா மோமன்ன
தவறுகச் செய்து நீ தக்க மதிப்படைந்தாய்
வெள்ளாட்டி யுந்தனையும் வேண்டிப் பிரியமதாய்
உள்ளபடி யேபெற்ற உத்தமனே நீகேளு
தாசியுமுன் தாயார் தையலும் ரெம்பப்பேரை
பேசிச் சினேகமாய்ப் பிரியமு டன்கூடி
ஆசையெல்லா மொழிந்து அவனிடத்தி லேயிருந்து
வேசை பறித்திடுவாள் வேண்டிய பொருள்களெல்லாம்

ஒருவ னிடத்திலே ஒரு நூறு தான்பேசி
நறுமலரைச் சூடி நங்கையுஞ் சேர்ந்திருக்க
இன்ன மொருவனுமே ஏகிக் கபாடமதை
மன்னவனுந் தட்டினால் மங்கை யதையறிந்து
மெள்ளவே வந்துமவள் வேந்தன் கருத்தறிய
சல்லாப மாய்ப்பேசி சல்தி யவர்பொருளை
கையிலே வாங்கிடுவாள் கபாடத்தி ஞேமதாய்
செய்கையெல் லாமுடித்து சீக்கிரம் உட்செல்ல
முன்னிருந்தோன் கண்டு முகுந்தனை யேகொஞ்சி
அன்னமே யெங்குசென்று யறைகுவா யென்றுலே
என்கணவா வெளியே இப்போது தான்சென்று
மன்னவரே காண வந்திட்டே னேயடியாள்
அவனுமே கேட்டு அன்னவளைக் கொண்டாடி
தவருதே யென்னைவிட்டு தையலரே யென்றிடவும்
பூமியின் மேலானை பூவைவள்ளி தன்னுணை
சாமியே யுன்னைவிட்டுச் சணநேரம் யான்பிரியேன்
மறுநா ளிவளும் வருபவரைத் தான்பார்க்க
தருவான் பொருளை தான்வாங்கிச் சேர்ந்திடுவாள்
அப்படிக்கே போயி அருமையா கப்பெற்ற
நிப்பந்தி யானபாலா நீயுஞ் சமர்த்தன்தானே
எந்தனுட அன்னத்தை என்றுமே நீபுசித்து
இந்தவேளை வஞ்சகத்தை எண்ணினு யேபாதகா
ஐவருட பட்சமதில் அரசனே நீசேர்ந்து
செய்கிருய் ஏற்பாடு தெரிந்துகொண் டேன்நானும்
ரேவசைபிள்ளை யானதினுல் விருந்தளித்து மாயனுக்கு
ஆசையொடு படைத்தான் ஐயோ பிந்தவிதுரன்
இன்னும் பலவிதமே எதேஷ்டமாய் தூஷணித்து
மன்னனும் பார்த்திருந்தான் மகா சபைதனையே

## விதுரன் கோபித்து துரியோதனனுக் குரைப்பது

விதுர னிதைக்கேட்டு வெகுகோப மூண்டாக
பொதுவரெல்லாம் பார்த்தே பொல்லாத காலமென
கண்கள் சிவந்து கனகோப மூண்டாகி
விண்வழியே பொறிகள் மேவியே சென்றிடவும்
அரசர்களே கேட்டீரா அந்தப்படு பாவியுமே
பரபரப்பாய் மொழிந்தான் பாரரசன் சுதனும்
என்னடா மொழிந்தாய்நீ இந்தச் சபையிருக்கும்
மன்ன ரறியவேதான் வழுத்தினு யேபயலே
உன்னை மடிப்பேன் ஒருநொடியில் தப்பாமல்
என்னை யிகழ்ந்தாயே என்று விதுரனும்
வெட்டுவே னுன்னையென்று விரைவாய்ப் படையெடுத்தே
மட்டி யரசன்முன்னே வந்தானே வேகமொடு
அப்போதோர் யோசனை அவனுக்குத் தோன்றிடவும்
தப்பா துரைப்பான் தக்க பெருஞ்சபைக்கு
இவனை மடிக்கவேதான் எண்ணின யோசனையுந்
தவருய் முடிந்ததுவே தப்பனுக்கு நற்காலம்
தேவர்களும் பார்த்து தெரியாதா னென்றுமெனை
கேவலமாய் நினைப்பார் கெடுதியது செய்தாலே
தன்சுதனைக் கொன்ற சண்டாள னென்றுமெனை
மன்னவர்களும் நகைப்பார் மகாதோஷம் வந்தணுகும்
அதுவும் தொலைந்தால் ஐவர் பகைமேலே
பொதுவரெல் லாமறிய புகன்ருன் மதவீமன்
துஷ்டர் களையெல்லாம் சோராம லேயானும்
இஷ்டப் படியே எமனூர் காட்டிடுவேன்
எல்லோருந் தானறிய இந்தச் சபைதனிலே
சல்லாப மாய்மொழிந்தான் தக்க பலவீமன்

இவனையே யானும் இப்போ மடித்தாலே
அவன்சபதம் தீராதே ஐயையோ யென்னசெய்வேன்
நாளை நடக்கும் நல்லபா ரதப்போரில்
வேளை வதைப்பான் வீமன் துடியர்களை
அந்தச் செய்தியதனை அறிந்துமே யாவர்களும்
எந்தனிடம் செப்பிஞல் இரங்கிவிடும் மனதும்
இந்தவில் லிருந்தாலே என்புத்தி யப்படியே
வந்திடும் தப்பாமல் மன்னரைவர் மேல்கோபம்
அந்தப் பழிவராது அருமையான வில்லதனை
இந்தவேளை வெட்டிடுவேன் என்று விதுரனும்
படைதனைக் கைப்பிடித்து பாரத் தனுசதனை
தடையிலாது வெட்டி தாணுக்கினுன் ரெண்டாய்
இந்தச் சபைதனக்கும் இனிமேலும் யான்வாரேன்
வந்தாலும் யானே வளர்கோவைக் கொன்றவனே
என்றுசப தங்கூறி எழுந்து சபையைவிட்டே
நன்ருக வந்தான் நாழிகை மாளிகைக்கே
அந்தச்செய்தி தனையே அறிந்து பெரியோர்கள்
விந்தையிது வென்று விசனமொடு மொழிவார்
தூதுவந்த பேரை தூஷணமாய்ச் சொன்னதொடு
சாது விதுரனையும் சண்டாளன் திட்டினனே
வேதனை மிகவடைந்து விதுரனும் வில்லொடித்தார்
ஆதி சிவன்கரத்தில் அமைந்த தனுசதுவும்
இந்த வுலகமதில் இத்தனுசைப் போலவுமே
விந்தையா யிருந்ததுவை வேந்தரே காணுமே
அருச்சுன னிடத்திலே அந்தவில் லைப்போல
இருவ ரிடத்திலே இருந்தது சரியாக
விதுரன் வில்லுப்போச்சே வேந்தர்க ளேநமக்கும்
இதுசள்ளை யென்றே ஏங்கியே பெரியோர்கள்

பாரதயுத்தமது பலமாய் நடக்குமே
வீரமான பார்த்தனும் வேகம தாய்வந்து
காண்டா வனமெரித்த காண்டீபன் றன்னையுமே
நீண்ட கணைபூட்டி நிறுத்துவா னேயெதிரில்
விந்தையாக வரும் விசயன் கணையதனை
சந்தோஷ மாய்த்தடுக்க தனுசில்லை மன்னர்களே
கண்ணன் சாரதியாகி காண்டீபன் றன்னோடு
திண்ணமாய் வந்திடுவார் தேவர் புகழ்ந்திடவே
என்னசெய்வோ மென்று ஏங்கிப் பெரியோர்கள்
மன்ன ரிடந்தனிலே வழுத்திவிசன மடைந்தார்

வீஷ்மாச்சாரியார் துரியோதனனுக் குரைப்பது

அப்போது வீஷ்மர் அரசன் றனைப்பார்த்து
தப்பாம லேமொழிவார் தர்ம நீ திப்படியே
அப்பா வரசே அருமையான யென்பேரா
இப்போது கேட்பாய் என்னுடைய வாக்கியத்தை
பெரியோரை நீயும் பெலமாகத் தூஷணிக்க
அறியாயா பாலா அருமறை நூலதனை
தூதுரைக்க வந்தவரைத் தொழுது மவர்களையும்
தீதுநினை யாதபடி தெரியவே னுங்கருத்து
நல்லவுப சாரம் நாமவர்க் குச்செய்து
உள்ளதைக் கேட்கவும் உரிமையான மன்னு
நீதிதனை வேந்தே நீநன்றாய் வாசித்து
ஓதினாய் தூதரிடம் ஓகோகோ கெட்டசெய்தி
ஆய னிடந்தனிலே அருமையொடு பேசாமல்
மாயனைப் பலவாறாய் மன்னனே தூஷணித்தாய்
நாளை நடக்கும் நல்லபார தப்போரில்
வேளை வருவான் மிகுந்த துடிகாரன்

அருச்சுனனுந் திறவான் அவன்காண்டீ பம்பூண்டு
கெருச்சனை செய்து கிரீடியும் போர்க்குவந்தால்
அவனோ டெதிர்க்கவும் ஆளில்லை மன்னவா
தவறுகள் நேர்ந்திடுமே தனஞ்சயன் வாளியதால்
விதுர னிருந்தால் விசயனிடம் தப்பாது
அதுசமயம் வந்து அவனுடனே போர்புரிவார்
அவரை நீ தூஷணமாய் அறைந்ததி னுல்விதுரன்
தவருக வில்லொடித்து சபதமிட்டு வந்தனரே
விளைத்தாய் வினையே வீணுன மன்னனென
களைத்தே யிருந்தார் கரைகண்ட வீஷ்மருமே

துரியோதனன்
சபையோருக்கும் கங்காசுதனுக்கும் மொழிவது

தவயோகி வேடமதைத் தக்கதெனப் பூண்டதொரு
சிவயோகி யேகேளும் செப்புகின்ற வாக்கியத்தை
விதுரன்வில் லொடித்தானென வேந்தர்களே நீங்கள்
அதுவே கவலையதாய் அடைகுறீர் சஞ்சலத்தை
இடையனுந் தூதுரைக்க இங்குமே வந்தவனை
மடையன் விதுரன் மன்ன னெதிர்சென்று
அவனை யழைத்தே அரண்மனைக் குள்ளேகி
தவருய் விதுரனும் தானளித் தான்விருந்தே
எனக்குப் பகையாக இடையனும் வந்தவனை
தனக்குறவாய்ச் செய்து சங்கதி யையறிந்தே
மன்ன ரைவர்பேரில் மடையன் பிரியம்வைத்து
என்னைக் கெடுத்திடுவான் என்றும் விதுரனே
ஐவருடன் சேர்ந்து அவனுமே போர்க்களமே
செய்துமே யுத்தம் திறமதனைக் காட்டட்டும்
வில்லை யொடித்தானென விசன மடைகுறீர்
தொல்லை விளையுமே துஷ்ட னிருந்தாலே

அவன்பெலவா னென்று அவதி மிகவடைந்தும்
அவன்வில்லை யும்புகழ்ந்தீர் அரசர்க ளேகேளும்
சொத்தைவில் லைப்போலே தொண்ணூறு யிரம்வரை
மெத்த யிருக்கிறதே வேந்தர்கள்கை தப்பாது (யில்
அவனு மிருந்தாலென்ன ஐவரிடஞ் சேர்ந்தால்
அவனோ டெதிர்க்கவும் ஆளிலையோ யிங்கேயும்
தவறுகச் சென்றவனை தர்மஞ்செய் யுங்கருணன்
அவரே தறித்திடுவார் அவனுடைய முடிதனையும்
தாங்க ளிருக்கிறீர் தங்களுடன் துரோணர்
ஓங்கிய படைதனை ஓர்நிமிடம் மடிப்பீர்
தங்கள் சுதனஸ்வத் தாமனும் விற்பூண்டு
பாங்காக வேமடிப்பான் படைகளைப் பூராவும்
இன்னும் பலவிதமே எடுத்தோதி யேசபையில்
மன்ன னிருந்தான் மகாகோபந் தன்னுடனே

கர்ணன் துரியோதனனுக்குரைப்பது

மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாளுகின்ற புண்ணிய னேகேளும்
அந்த விதுரனும் அருமை யானதனுசை
விந்தையா யொடித்தானென விளம்பினு ரேபெரியோர்
விசயனொடு வெதிர்க்க விதுரனு லாகுமென
நிசமாய் மொழிந்தார்கள் நின்னிடந் தன்னிலே
அவனை மடிப்பதற்கு அச்சுவ சேனைனயும்
தவராமல் வைத்திருக்கேன் சபையோரெல் லாமறிய
அருச்சுனனும் வந்து அபாரயுத்தஞ் செய்தாலே
திருத்தமான கணையைத் திட்டிச் சிரமறுத்து
அரங்கபூசை செய்வேன் அதுநிச மென்றுமே
திரமதாக மொழிந்தான் செகத்தையா ளுங்கருணன்
அங்கதேச மதையே ஆண்டு வருங்கருணன்

சிங்கம்போற் சீறி செப்பியதோர் சங்கதியும்
கங்கா சுதன்கேட்டு காவலர்க ளிடமே
பங்கமில் லாதபடி பகருவார் யாதெனிலோ
விசயனே டிக்கருணன் வேகம தாயெதிர்த்து
செயம்பெறவே பார்த்தன் சிரசை யிவன்றறிப்பான்
அவனுடனே யெதிர்க்க அதிகவல் லமையுண்டு
தவராம லேமொழியும் தக்கபோ ரைச்செய்வான்
வேண வரசர்களை விரட்டியே கருணனும்
பாணமதிற் சிறந்தான் பார்மன்ன ரேயிவனும்
இன்னும் பலவிதமாய் இகழ்ந்துமே கர்ணனையும்
மன்னர் சபையிலே வழுத்தினு ரேவீஷ்மர்
நாற்றிசையுந் துதிக்கும் நல்லசோதி யருணன்
மேற்றிசை யாழிதனில் வீழ்ந்தானே வேகமொடு
கதிரோனுஞ் சென்றதையே காவலர்கள் தாமறிந்து
ததியே விசனமொடு தான்சென்ருர் மாளிகையும்
சபதமிட்டுப் போன தக்கபல விதுரன்
அபயமிட்டு மாயனிடம் அறைந்தானே சங்கதியும்
அங்கு நடந்த அதிசயம் பூராவும்
சங்கையில் லாதபடி சாற்றினு னுண்மையெல்லாம்
ஆதி மகாமூலம் அனேகமான நீதிகளை
வேதினை யடைந்த விதுர னிடமொழிய
அந்தநல் வாக்கியத்தை அரசனு மேகேட்டு
சந்தோஷ மாகவே தானிருந்தா னம்மானை

### கிருஷ்ணபகவான் குந்தியம்மை மாளிகை செல்வது

விதுர னிடத்தில் விளம்பியே சங்கதியும்
பொதுவர் சுதனும் போனுர் குந்திமாளிகை
வெண்ணை திருடியுண்ட வேதாந்தன் செங்கமலக்

கண்ணன் வருவதையே கண்டுகுந்தி யம்மாளும்
மருமகனே வாருமென மங்கை யெதிர்சென்று
அருமையுட னழைக்க ஆயனு மச்சமயம்
மாமி தனையே மனமகிழ்ந்து சரணம்
சாமியுஞ் செய்ய தையலு மேவாழ்த்தி
இம்மா னிலவரசர் எங்கும் புகழுமொரு
சிம்மா தனத்தில் தேவனை யிருக்கவைத்து
ஐயனே யெந்தன் அருமைமைந்தர் சேமமதை
மெய்யனே மொழியுமென்று மெல்லியும் கேட்டனளே
குண்டுமலை யைப்பிடுங்கி குடையாக வேபிடித்தோன்
விண்டு மாமியிடத்தில் விளம்புவான் செய்திகளை
மாமியே யுந்தன் மைந்தர்களைவர்களும்
சாமி கிருபையினல் தான்சென்று காட்டகத்தில்
பனிரெண்டு தன்வருடம் பாங்கா யவர்களுமே
தனியே யிருந்து தான்கழித் தப்பாலும்
பாராது யாவர்களும் படைத்துமே வேற்றுருவம்
ஈராறுமாதம் இருந்தும் விராடநகரில்
மங்களம் முடித்து மன்னன்வா ளபிமனுக்கு
பங்கமொன் றில்லாது பஞ்சவர்கள் சுகமே.
அந்தநாளிற் பெரியோர் அறைந்தபடி தப்பாமல்
சிந்தைநொந் தைவர்சென்று சீக்கிர மாய்க்கழித்தே
பெரியோ ருரைப்படியே பேர்பாதித் தேசமதை
அறியவே கேட்கவென அனுப்பினர் தூதாக
அரவக் கொடியனிடம் அனைவருந் தான்கேட்க
திரமான நீதிகளைச் செப்பியே யான்கேட்டேன்
எல்லோருந் தான்கேட்க இயம்பின னேபதிலும்
நல்லாய் மொழிந்தாய் நானிருக்கும் வரையில்
சஞ்சலங் கொண்டுசென்ற சமர்த்தர்க ளேயந்த

பஞ்சவர்க்குத் தேசம் பாதி கொடுப்பதில்லை
என்றுமே யென்னிடத்தில் இயம்பத் துரியனுக்கு
நன்று யுரைத்தேன் நலமான நீதிகளை
வேண்டிய மட்டும் விளம்பினதைக்கேட்டு
தாண்டி விழுந்தும் தைரிய முடனுரைத்தான்
பாரத யுத்தமது பதினெட்டு நாளென்று
பாரரசர் பார்க்க படுபாவி கைபோட்டான்
ஒருகாரியமதனை உரைக்கவந் தேனென்று
திருமாலுஞ் செப்பினர் செவ்வையாய் மாமியிடம்
குந்தியம்மன் கேட்டு குறையென்ன வந்ததென
தந்திரமாய் மாயன் தானுரைப்பார் மாமியிடம்
நாளை நடக்கின்ற நல்லபாரதப்போரில்
வேளையே கர்ணனும் விசயனை யேமடிப்பான்
விசய னிறந்தாலே வேந்தர்கள் நால்வருமே
நிசமாய் மடிந்திடுவார் நின்னுடைய மைந்தர்கள்
அனியாய மென்றே ஆயனு மப்போது
தனியா யிருக்குந் தையலிடம் புகன்றார்
அம்மையுமே யப்போது ஐயன் மொழியதனைச்
செம்மையொடு கேட்டு செப்புவாளேபதிலும்
ஐயனே பஞ்சவர்க்கு ஆதரவாய் நீரிருந்து
பைய வுரைத்தாயே பட்சமெல்லாம் விட்டாப்போல்
ஐவரைக் காத்திடவே ஐயா மனம் நோக்கி
ஐவரையும் ராச்சியத்தை ஆளும் படிசெய்யும்
இன்னும் பலவிதத்தை எடுத்தோத வம்மையுமே
கண்ண னதைக்கேட்டு கவலைகொண்டாப் போலிருக்க
மருமகனே யென்னவென மாதுமே கேட்டிடவும்
திருமாலு மச்சமயம் செப்புவான் சங்கதியை
ஓராறு வயதினிலே உத்தமியே யுந்தனிடம்

நேராக வந்தார் நேர்த்தியாய்த் துருவாசர்
அவருக்குப் பணிவிடைகள் அன்போடு நீசெய்ய
அவரும் மகிழ்ந்தே யைந்துமந் திரமதனை
மந்திர முச்சரிப்பும் மகாரிஷியும் மொழிந்தே
தந்திரமாய்ச் சென்றார் தக்கபெருங் காட்டகத்தில்
அந்தரிஷி சென்றபின்பு அப்பால் கேளீர்யாமி
விந்தையான மந்திரத்தை விதமாய் நீ ருச்சரிக்க
கதிரோ னறிந்துசெய்தி கவலையொன் றில்லாது
பதியிறங்கி யுன்னிடத்தில் பருதியும் வந்துநிற்க
அவரையே நீர்பணிய ஆசிகூறி யவரும்
தவராது மூந்தனையே தானுக்கிப் பாலியமாய்
அன்றுமே கூடினீர் அதிகருணன் பிறக்க
நன்றாகப் பார்த்துநீ நைந்தே வழுத்திடவும்
பருதி யுனைப்பார்த்து பாலகனைப் பெட்டகத்தில்
வருதியது செப்பி வைத்து மதைமூடி
சட்டெனவே தூக்கிவந்து சல்திகங் காநதியில்
விட்டுச்சென் றான்பருதி வேகமாய் விண்ணேக்கி
அவன்தான் கருணன் அறிந்ததை சொல்வேன்கேள்
அவனிடம் தாங்கள்சென்று அம்மையென வேசெப்பி
ஐவருமுன் தம்பிகள் அருமையான சுதனே
ஐவருடன் கூடி ஆண்டிடுவாய் தேசமென்று
இந்தச் சங்கதியதனை எடுத்தோதி கர்ணனிடம்
வந்திடுவா யெந்தன் மகனேயென் றழைப்பாயே
வரவில்லை யென்று மன்ன னுரைத்தாலும்
வரமொன்று கேட்டிடுவாய் மைந்த னிடந்தனிலே
காண்டா வனதகனம் காண்டீபன் செய்கையிலே
மீண்டுமச் சுவசேனன் வேந்தனிடம் வந்தமர்ந்தான்
அந்தவிடப் பாம்பை அருமையுட னேவளர்த்து

மைந்தன் விசயனுக்கே வைத்திருக் கான்கருணன்
விந்தையாய்க் கர்ணனிடம் விளம்பிச்சில நீதிகளை
அந்தக் கணைதனையே அருச்சுனன் மேலே நீ
ஒருதரம் விடுவதன்றி உத்தமா மறுதடவை
கெருவமாய் விடாதபடி கேட்டிடு வாய்வரத்தை
அப்படி வாங்காவிடில் அருச்சுனன் சாவதொடு
தப்புநினைந் தேநால்வர் தானும் மடிந்திடுவார்
என்றுமே மாயன் எடுத்தோதி மாமியிடம்
நன்றா யுரைக்க நங்கையு மேகேட்டு
இத்தனைநாள் செப்பவில்லை இதுவென்ன சூதெனவே
மெத்தத் துயரமதை மெல்லியு மேகொண்டு
கர்ணன் வரங்கொடுத்தால் காண்டீபன் பாணமதால்
கர்ணன் மடிந்திடுவான் கண்ணனே நீர்கேளும்
அவனுஞ் சுதன்தானே அவனைக் கெடுப்பதுவும்
தவறுதானே மாயாவென தானமூதா ளம்மைமிக
அழுதுநிற்கும் மாமிதனை ஆயனுமே தான்பார்த்து
பழுதுமே வந்தாலே பாருகர்ண னொருவனுக்கும்
தக்கபல விசயன் தான்மடிந்தா னுமாகில்
ஒக்க மடிவாரே உன்பிள்ளை பூராவும்
எதுநல்ல தென்று எம்பெருமாள் தான்கேட்க
இதுகளை யோசித்தே ஏந்திழையுஞ் சம்மதித்தாள்
எந்தன் பிள்ளைகருணன் இடத்திலே தானேகி
சந்தோஷ மாய்வரத்தை தான்வாங்கி வாரேனென்றான்
நல்லதென்றே மாயன் நங்கையிடஞ் செப்பி
சல்லாப மாய்வந்தார் தக்க விதுரன்மனை
நாற்றிசையுந் துதிக்கும் நல்லசோதி யருணன்
மேற்றிசை யாழிதன்னில் வீழ்ந்தானே வேகமொடு
ஆய னறிந்தே அதிசீக் கிரமதிலே

மாயன் முடித்தார் மாலைக் கடனதனை
பாற்கடலில் பள்ளிகொண்டோன் பஞ்சணையில் பள்ளிகொண்டு
பார்க்கரிய விழிமூடி பகவான் நித் திரைபுரிந்தார்
இப்படிக் காக இவர்களு மிங்கிருக்க
தப்பு நினைப்புடையோன் சபைகூடி யோசனையே

துரியோதனன் சகுனி கர்ணன்
யோசனை செய்தல்.

துரியன்கர் ணன்சகுனி துச்சா தனன்மூதலாய்
அறியவே கூடி அவர்களு மோரிடத்தில்
அவர்களைப் பார்த்தே அரவக் கொடியோனும்
தவருன யெண்ணமதைச் சாற்றுவான் யாதெனிலோ
அண்ணு கருணனே அறைகுவ தைக்கேளும்
கண்ணனும் வந்தானே கவனமாய்த் தூதுரைக்க
ஐவர்பஞ்ச பாண்டவரும் அலைந்தாரே காடதனில்
ஐவரிடஞ் சென்று அவருக்கு மதியுரைத்தே
உவலாவி யந்தனிலே உற்ற துரைத்துவைத்து
இவனகத் தூதுரைக்க இங்குவந்தான் மன்னர்களே
விதுரன் விருந்தளித்து வேண்டியுப சாரஞ்செய்ய
விதுரன் தைரியத்தை வேந்தரே யறிந்தீரா
தூதுமே வந்த துன்மார்க்க இடையனையும்
தீதுசெய்து கொன்ருல் தீங்கு நமக்கில்லை
மன்னர்பஞ்ச பாண்டவரும் வனத்துக்கே சென்றிடுவார்
எண்ணமிது வென்றே எடுத்துரைத் தான் துரியன்
மன்னனுமே மொழிந்த வார்த்தைகேட்டு துச்சாதனன்
பின்னமில் லாதபடி பிரியம தாய்மொழிவான்
இடையனுந் தூதுரைக்க இங்குமே வந்ததொரு
மடையனைக் கொல்லுதற்கும் வழியுரைப் பேன்கேளும்
பாளையத்தைத் திரட்டி பாங்காக நாமிந்த

வேளையே சென்று விதுரன் மனையிருக்கும்
மாயனையும் பிடித்து மயக்கமில் லாதபடி
ஆயனை வதைத்திடுவோம் அண்ணுவே யென்றனனே
இந்தமொழி தம்பி எடுத்துரைக்க வேதுரியன்
சந்தோஷங் கொண்டு தம்பியைப் புகழ்ந்திடவும்

விகர்ணன் அண்ணனுக்கு
நீதியுரைத்தல்.

எல்லவர்க்கு மிளையோனு யிருக்கும் விகர்ணனுமே
சொல்லத் தொடங்கினுன் துஷ்ட ரிடம்நீதி
அண்ணுவே யென்னவிது அன்னீத மானவார்த்தை
மன்னரிடந் தூதுரைக்க வந்தா லவர்களையும்
உபசாரஞ் செய்தவர்க்கு உண்மையெல் லாந்தெரிந்தே
விபகாரம் பேசுவது வேந்தர்க ளேவழக்கம்
தர்மநீதி யிப்படியே சாற்றியது மறிந்து
கர்மவினை தேடுகிறீர் கண்ணனை மடித்திடவே
என்னயிது யோசனையும் இப்படி நீங்கள்செய்தும்
மன்னவரே மாயவனை மடித்திடுவீர் தப்பாது
நல்லயோ சனைபிதுவும் நாசமாய்ப் போங்காலம்
சொல்லாமல் வந்ததென்று துரிய னிடம்புகன்றுன்
அவனுரைத்த தைக்கேட்டு அரசனுங் கோபமொடு
இவனைவைத்துப் பேசுவது என்றைக்குங் கூடாதே
சும்மா யிருடாவென்று துரியன் மிகவதட்டி
அம்மா னவனையும் அப்புறந் தள்ளென்றுன்
அண்ணன்வத னம்பார்த்து அதிலொரு தம்பியுமே
அண்ணுவே கேளும் அடியேனுட வாக்கியத்தை
தூதுமே வந்தவனைச் சுருக்காய் மடிப்பதற்கு
ஓதுகிறேன் கேட்பாய். உண்மையான செய்தியிது
விதுரன்மனை பூராவும் விறகு களையடிக்கி

பொதுவாக வந்தவனைப் பிடித்துவதி னுள்ளவத்து
தீயதைக் கொழுத்திவைத்தும் சேனைகள் பாராயிருந்தா
தீயவதி,யாலே செத்திடுவார் பூராவும் (ல்
மாயனுடன் விதுரன் மன்னர் வெகுவரசர்
ஆயனுடன் மடிவார் அதிலுஞ் சந்தேகமில்லை
நல்ல யோசனைகளிது நான்மொழிந்த சங்கதியும்
வல்லவனே யென்றும் வழுத்திப் பணிந்தானே
அங்கதேச மதையே ஆண்டு வருங்கருணன்
சிங்கார மாகவுமே செப்புவா னரசனிடம்
தம்பியின் யோசனை தகாத காரியமதுவும்
வெம்பிடத் தீவைத்தாலும் விமலனுஞ் சாகானே
தர்ம நீதி யல்லவே தரையரசே யிச்சமயம்
விற்கையிற் பூண்டு வேந்தேநா மெல்லோரும்
வல்லநல் வில்லதனை வளைத்துச் சரந்தொடுத்தே
தொல்லை யதைவிளைத்தே துஷ்டனை மடித்திடுவோம்
இன்னும் பலவிதமாய் எடுத்தோதி யேகருணன்
மன்ன னிடந்தனிலே வழுத்தினன் யெண்ணமதை

சகுனி யோசனை யுரைப்பது.

பொய்யுரையுஞ் சூதும் புகட்டுஞ் சகுனியுமே
மெய்யா யரசனுக்கு விளம்புவான் யோசனையும்
அப்பா வரசேயென் அருமை மருமகனே
செப்புகிறேன் கேளும் சிறந்ததோர் யோசனையை
அம்பெடுத்தே யுத்தம் ஆயனோடு செய்தாலே
வம்பு வளர்ந்துமுந்தி வரும்பார தப்போரே
அவனைச் செயிக்கவும் ஆகாது நம்மாலே
தவறான யோசனைகள் தம்பியே பண்ணுகிறீர்
வந்தகண்ணன் மேலே வாரியே நீங்களுமே
செந்தணலை யிட்டாலும் செத்திடா னேயவனும்

மாயா விநோதன் மகாதந் திரமறிந்த
ஆயனை மடிக்கும்வகை அரசனே நீர்கேளும்
கொலுமண் டபமதனில் குழியொன்று திட்டமதாய்ப்
பழுதில்லாது வெட்டிபாரக் குழியாக
மல்லருடன் ஆயுதமும் வகையாக வுள்வைத்தும்
நல்லபடி மேல்மூடி நாத னறியாமல்
இம்மா னிலவரசர் எல்லாம் புகழுமொரு
சிம்மா தனமதனைச் சிறப்பா யதன்மேல்வைத்து
பங்கமில் லாமலுமே பார்த்தவர்கள் மயங்க
சிங்காரஞ்செய்தே சிறப்புட னங்குவைத்து
அவனை யழைத்து அதிகவுப சாரமுடன்
தவராது மாயவனை தானதி லிருக்கவைத்து
வேடிக்கைகள் காட்டி வேந்தனும் பார்த்திருக்க
பாடி மாதராடி பாசாங்கு செய்தாலே
சந்தோஷ மாய்க்கண்ணன் தானதைப் பார்த்திருக்க
அந்தவேளை யுள்விழுவான் அண்டப் புரட்டனுமே
அங்கிருக்கு மல்லர் ஆயனைக் கட்டியுமே
பங்கமில் லாதபடி பதைக்கவே விட்டிடுவார்
இவனை மடித்தாலே இதைக்கேட்டுப் பாண்டவர்கள்
தவறு வந்ததென்று தானினைந்து பாதகரும்
சேட்டை விளைத்த செந்திருமால் மாண்டானென
நாட்டைவிடுத் தேயவர்கள் நடந்திடுவார் காட்டகத்தி
சண்டையே யில்லை தயாபரனே யென்றுவங்கு (ல்
அண்டை யிருந்தசகுனி அரசனுக்கும் மொழிய
அரவக் கொடியோனும் அம்மானை யேபுகழ்ந்து
திரமான யோசனைகள் செப்பினர் மாமாவென
நன்றுதான் யோசனைகள் நாத னருளெனவும்
நன்றாகத் தூதுவனை நாகக் கொடியோனழைத்து

சகுனி யுரைப்படியே சபையிற் குழிதோண்டி
சகுனங்கள் பார்த்துமவன் சகலமல்ல ருள்வைத்து
மேலேமண் ணல்மூடி யேன்மையா கச்செய்து
காலே யதில் நிறுத்தி கண்டவர் கள்மயங்க
இந்த வுலகத்திலே எங்குமில் லாப்புதுமை
தந்திரங்கள் செய்தான் சண்டாள னுந்துரியன்
அன்றுமே வெய்யோன் அறிந்துமே செய்திகளை
சென்றுமே மாயனிடம் செப்புவோ மென்றெண்ணி
நேர்த்தியாய்த் தேரதனில் நேயப் பரிபூட்டி
ஆத்திரமாய் வந்து அவனுதித்தும் கீழ்திசையில்
நாளிபுறப்பட்டு நல்லதொரு சங்கதியை
மாலிடஞ் சொல்வதுபோல் வந்தானே விண்ணேக்கி
கதிரோன் வரவைக் கண்ண னு மேபார்த்து
விதிகளையே முடித்தார் வேந்தருடன் தப்பாமல்
துரியோ தன னும் சொல்லும் மாமன்சகுனி
பெரியோர்கள் யாவரும் பேசிக் கொலுவிருக்க

துரியோதனன் தூதுவரை விடுத்து கிருஷ்ணபகவானை
தனியாய் அழைத்து வரமொழிதல்

அரவக் கொடியோனும் அழைத்துமே தூதுவனை
திரமான சங்கதியும் செப்பி யவனிடத்தில்
வந்தகண் ணனைமட்டும் வாவென்று தூதா நீ
சந்தோஷ மாயழைத்து சல்திவா வென்றனனே
அரசனைத் தான்தொழுது அந்தமுள்ள தூதுவனும்
அரண்மனையைக் கடந்து அவ்வீதி யுந்தாண்டி
விதுரன் மனைவந்து வேதனை யேதொழுக
பொதுவர் சுதனும் புகலென்ருர் சங்கதியை
எங்க ளரசன் ஏகியே யும்மிடத்தில்
சங்கப்படை யை நிறுத்தி தனுவீரர் கூடாது

உந்தனை மட்டும் ஒண்டியாக வரவே
எந்த னரசன் இயம்பினர் வாருமென்ருன்
சங்கதியைக் கேட்டு சல்தியாய்ப் பயணமென
பங்கமில்லாச் சாத்தகியும் பகவா னுடனெழுந்து
குதிரையை ரதம்பூட்டி கோபமுட னேறி
பதியரசன் சபைக்கு பாரரதம் வந்திடவே
அறிந்தார் பெரியோர் ஆயன் வருவதையும்
பரிவாய் மனதில் பண்ணினர் தோத்திரத்தை
மாயவனை மட்டும்விட மன்னன் துரி யனுரைக்க
நேயமொடு தானே நிறுத்தினர் தூதுவர்கள்
அந்தரதம் விட்டிறங்கி அரசன் சபைநோக்கி
சந்தோஷமாய்ச் சாத்தகியும் தானும் வருகவங்கு
காவலர்கள் கண்டு கண்ணனை நீபோவென
தாவா வறிந்தே சாத்தகி நின்றிடவும்
கண்ண னுங் கண்டதை கபடையெல் லாமதித்து
மன்ன னுக்கு கேடு வந்ததென் றேநினைந்து
சல்லாப மாயன்வர தானங்கு மேயிருந்த
நல்ல மனமுடையோர் நாதனைக்கண் டேபணிந்தார்

துரியோதனன் கிருஷ்ணனை சிம்மாதனத்தி
லிருக்கச் சொல்லுதல்

வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்த துரியோதன னும்
கஞ்சனை மடித்தோனை கருணையொடு வாருமென்று
மைத்துனரே தங்களுக்கு மனமகிழ்ந்து யானமைத்த
பத்துவகை ரத்தினமும் பதித்தசிம் மாதனத்தில்
தாங்க ளிருமென்று சாற்றியே பாதகனும்
பாங்காய் மொழிந்தான் பகவா னிடந்தனிலே
ஆயனதைக் கேட்டு அவன்கபடைத் தான்தெரிந்து
மாய னுஞ் சென்று மகிழ்ந்துசிம் மாதனத்தில்

காலிரண்டை யும்வைக்க கணமது தோற்றிடவும்
மேலிருந்து கீழிறங்க வெகுகோப முண்டாகி
உலக மளந்தவடிவை ஓர்நிமிட மேநினைத்து
பெலமா யெடுத்தார் பேய்முலைப்பா லுண்டகண்ணன்
அண்டச் சுவர்முட்டவே அவர்வளர வங்கிருந்த
கண்டதொரு தேவர்களும் கலங்கினர் மெய்மறந்து
சொல்லவொண்ணுச் சிரசும் சோதி வடிவாகி
சல்லாபக் கைகளே சாங்கோப சாங்கமதாய்
இப்படியா யுருவம் எடுத்துமே மாயவனும்
தப்பு நினைந்தோன் சபையோர்க ளுங்கலங்க
முப்பத்து முக்கோடி முனிவரெல் லாஞ்சேர்ந்து
செப்பரிய மாலை தேடிவந் தேதுதித்தார்
பாசம தாகவே படுகுழியி லிருந்தோர்
நாச மடைந்தார்கள் நாராய ணன்மிதியால்
அந்தர சொர்க்கமுமே அவர்சேர வச்சமயம்
அந்தரம் வாழ்தேவர் ஐயனை யேபணிந்தும்
இந்தக் கோபமடக்கும் இறைவனே பாவியான
அந்தத் துரியனுமே அருமை யறியாதான்
அழிந்திடுமே யுலகம் ஐயனே காருமென
மெலிந்துமே தேவரெல்லாம் மெய்யனைத் தான்தொழுவார்
அரவக்கொடி யன்சபையில் அருமை தெரிந்தவர்கள்
பரபரப்பாய்ப் பார்த்து பயங்கரங் கொண்டவர்கள்
எல்லவரு மெழுந்து எம்பிரா னைத்தொழுது
சல்லாப மாகவுமே சாற்றலுற்ற ரம்மானை
அறியாதான் செய்தகுற்றம் ஐயனே நீர்பொறுத்து
கரியமா லெங்களையே காத்திடுவாய் தப்பாது
பெரியோர்க ளெல்லாம் பிரிய முடன்தொழுக
அரிகே சவமுகுந்தன் அவரையே காக்கவெண்ணி

அவர்களைப் பார்த்தும் அறைகுவார் மாயவரும்
தவறுகள் செய்தானே சண்டாள னுந்துரியன்
என்று மவரிடமே எம்பெரு மானுரைத்தும்
நன்றாய்த் துரியனிடம் நவிலுவார் கோபமொடு
அரவக் கொடிபூண்டவா அதிகச் சமர்த்தா நீ
திரமான யோசனையைச் செய்தாய் பலவானே
இந்தப் படுகுழியில் என்னை மடிக்கவென்று
தந்திரஞ் செய்தாயே சமர்த்தன் காணுமுனக்கு
வாகாக நீங்கள் வம்மிச மோடழிய
ஆகாயந் தன்னி லமைத்திருக் கேன்குழியும்
ஆதியிற் பிர்மன் அமைத்த விதியாலே
வேதினையில் லாதபடி வீழ்வீர் குழியதனில்
உந்தனையு மடித்து உற்றவரை யும்வதைப்பேன்
அந்தநாளில் வீமன் அறைந்திருக் கான்சபதம்
அந்தச் சபதமதை அடியேன் மிகநினைந்து
இந்தவேளை யுங்களையும் எண்ணிவிட் டேனறியும்
உன்குல மடியோடு ஒழிந்துமே சீக்கிரத்தில்
தென்திசை சென்றிடுவீர் சேனையொடு தப்பாது
கடைசிகா லந்தெரியும் காவல னேயென்று
திடமாகத் தானுரைத்தார் செகம்புக ழும்மாயன்
வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்த துரி யோதனனும்
சஞ்சலமில் லாதபடி சாற்றுவான் மாயனிடம்
எந்த னிடந்தனிலே இன்றுமே வந்து நீ
தந்திரஞ் செய்தாய் தடியிடையா நீசமர்த்தன்
சாலவித் தைகளெல்லாம் சரியாக நீகற்று
சாலவித்தை யைக்காட்டி சரிப்படுத்த வந்தாய் நீ
விந்தையொடு காட்டின வெகுசால மோடியெல்லாம்
எந்தனிடஞ் செல்லாது இடையனே நீபோடா

இன்னும் பலவிதத்தை எடுத்தோதியுமந்த
மன்னன் துரியனும் வழுத்தினுன் மாயனிடம்
அவன்மொழிந்த செய்தியை அறிந்துமே கண்ணனும்
தவராது சாத்தகியைத் தானழைத்து மேயவரும்
சபையைவிட்டு வெளியே தான்வரவேபெரியோர்
அபையமென்று மவர்கள் ஆயனுடன் பின்தொடர
ஆண்டவனும் பார்த்து அங்கே பெரியோரை
வேண்டாம் வரவே வேந்தர்களே நில்லுமென்று
அங்குமே வந்த அஸ்வத்தா மன்றனையும்
சிங்கார மாய்ச்சென்று தேவனவன் கைப்பிடித்து,
வாரும்வாரு மென்று வருந்தி யழைத்துமே
நேரு கருணனையும் நோாக வேகண்டு

கர்ணனிடம் கிருஷ்ணமூர்த்தி மொழிவது

கையைப் பிடித்தே கர்ணனிட மன்போடு
ஐயன் புகல்வார் அருமையுட னேயங்கும்
அங்கதேச மதையே ஆண்டுவரும் மன்னவனே
பங்கம்து செய்தானே பாவிதுரி யோதனனும்
நன்று யிருக்கிறதா நல்லரசே யவனும்
சென்றிடுவான் சீக்கிரத்தில் தென்திசை தப்பாது
என்று மவனிடத்தில் இயம்பியே செய்திகளை
நன்ருய்க் கருணனிடம் நவிலுவா ரம்மானை
அங்கதேச மன்னவனே அரசர்க ளுந்தனையும்
பங்க முரைக்கிருரே பாரரசே கேள்செய்தி
தந்தையும் பாண்டரசன் தாயாருங் குந்தியம்மை
விந்தையான பாண்டவர்கள் வேந்தேதம்பி யறியும்
தகப்பன் வளவிலே தாயா ரிருக்கவும்
மிகப்பிரிய மாக வேலனைப் போலவுமே
தவசிவேடந் தன்னை தக்கதெனப் பூண்டதொரு

சிவயோகி துருவாசர் சேயிழை யிடம்வரவே
அவருக்குப் பணிவிடையும் அருமையாய்க் குந்திசெய்
அவரு மனமகிழ்ந்து ஐந்துமந்தி ரங்கொடுத்தும் (ய
மங்கைக் குபதேசம் மாமுனியுஞ் செய்துசிவ
சங்கரனை நோக்கி தான்சென்றார் காட்டகத்தில்
குந்தியம்மா தேவியுமே கொஞ்சநா ளுங்கழித்து
சந்தோஷ மாயவளும் தக்கதொரு மந்திரத்தை
விண்டு ஜெபித்திடவே விருப்பமு டன்பருதி
அண்டையிலே வந்து அச்சமய மேயவனும்
கன்னியைக் கூடி கலந்து சுகித்திடவும்
மன்னவனே நீபிறந்தாய் மாதோ சிறுவயது
எண்ணி விசன முடன் இருதய முங்கலங்கி
கன்னி யழுதிடவுங் கண்டு பருதியுமே
பெட்டியி லுனைவைத்தே பூஷணங் கள்தரித்து
கெட்டியாய் மூடியும் கேளவ ரெடுத்துவந்து
கங்கா நதிதனிலே காவலா வுந்தனையும் .
சங்கைகொண்டு விட்டே தான்சென்றார் மா முனியும்
ஆதி வரலாறை அறிந்தவர் தாமுரைக்க
சேதி யறிந்துநான் செப்பவே யிங்குவந்தேன்
ஐவருடன் நீர்சேர்ந்து அரசை முடிசூடினல்
செய்வாரே யூழியமும் தேர்வேந்த ரைவர்களும்
சந்தோஷ மாய்மொழிந்து தக்கபல வானே நீ
வந்திடுவா யென்று மாய னழைத்தாரே

கர்ணன் கிருஷ்ணமூர்த்திக் குரைப்பது

ஆதி மகாமூலம் அறைந்ததைக் கேட்டுமவன்
சோதிமாய னிடத்தில் சொல்லுவா னேகருணன்
ஐயனே மொழிந்ததும் அடிமை யதைக்கேட்டு
மெய்யனே சந்தோஷம் வேளைகொண் டேன்யா னும்

எந்தன் குலந்தனையே இயம்பினு யேசுவாமி
உந்தனுக்கு யென்ன உதவிசெய் வேனடியேன்
தாங்களுரைப்படியே தம்பிய ருடன்கூடி
நீங்கா திருந்தாலும் நிந்தனை யாவேனே
தேவர் மூவருடனே சிரிப்பார்க ளெந்தனையும்
பாவமதில் வீழ்வேன் பாரளந்த மாயவனே
இன்னுனென் றறியாமலே இருந்ததோர் யெந்தனையும்
பின்னமில் லாதரசன் பிரியம தாய்வளர்த்து
மன்னவ னுக்கியெனை மகுட மதைத்தரித்து
மன்னர்களைப்பணிய வைத்து மனமகிழ்ந்தும்
செல்வமுழு துங்கொடுத்து செலவழிக்க வேவிடுத்தே
நல்லவுப காரமதை நாதனே செய்திருக்க
அவனைவிட்டு வந்தாலும் ஆயனே யெந்தனையும்
தவருய் நினைத்தும் தாரணியில் வாழ்வரசர்
நகைத்திடுவார் யெந்தனையே நாதனே கேளுண்மை
பகைத்துமே வந்திடுவேன் பஞ்சவ ருடனேநான்
துரியோ தனனிடத்தில் சோறுண்ட தேகமதை
அறியவே ரணகளத்தில் ஐயனே சேர்த்திடுவேன்
என்று கருணனும் இயப்பவே மாயனிடம்
நன்ருகக் கேட்டு நாதன் பிரியமொடு
எனக்குத் தெரிந்ததை இன்று வெளியாக
தனக்குரைத் தேன்யானும் சங்கதி பூராவை
அங்கதே சத்தையாளும் அரச னிடஞ்செப்பி
இங்கேயே நில்லுமென்று எம்பெரு மாள்நடந்து
அந்த மிகவுடைய அஸ்வத்தா மன்கரத்தை
சந்தோஷ மாய்ப்பிடித்து சாமியு மேபுகல்வார்

கிருஷ்ணபகவான் அஸ்வத்தாமனிடம்
சங்கதி கூறுதல்.

ஆசாரி தன்சுதனே அஸ்வத்தாம னேகேளு

பாசமான பாண்டவரும் படைவீரா தாங்களுமே
பள்ளிக் கூடத்திலுமே படித்தவர்கள் தப்பாது
பள்ளிக்கூடச் சிநேகம் பாரு மதிசோகம்
அதிகப் பிரியம் ஐவர்களும் மன்னவனே
பதியை யிழந்தவர்கள் பார வனஞ்சென்று
பெரியோ ருரைப்படியே பெருவனத் தில்மன்னர்
தெரிய யீராற்வருடம் திரிந்துமே கானகத்தில்
தக்கவேடம் பூண்டு தானொரு நகரடுத்து
அக்ஞாத வாசமதில் ஆளுருத் தெரியாமல்
ஓர்வருட மிருந்தே ஒன்றுகுறை யில்லாது
பார்மன்னர் வெளியானார் பரம னருளதனால்
அவர்களென் னைத்தூது அனுப்பினா ரிங்கோத
தவராது யானும் சாற்றினே னரசனிடம்
இல்லையென மொழிந்து எந்தனையுங் கொல்லவென்று
தொல்லை விளைத்தானே துரியனு மிச்சபையில்
எல்லாந் தெரியுமே எந்தனுட சிநேகா
பொல்லாத் துரியனும் போய்விடுவான் தென்றிசைக்கு
நன்றாக மாயவனும் நவின்றுமே யச்சணத்தில்
நின்றுமே கண்ணன் நிமிண்டிவிட்டார் மோதிரத்தை
பூமியில் விழுந்திடவே போட்டிடவே யச்சமயம்
சாமிமோ திரம்விழவும் சல்தியவ்ஸ வத்தாமன்
பூமியிற் குனிந்தவனும் பொக்கென வதையெடுத்து
சாமிகையில் கொடுக்க தயாபரனு மச்சமயம்
விண்ணதையே பார்க்க வேகமா யவ்ஸவத்தாமன்
கண்ணன் றனையே கருத்தா யவன் பார்க்க
அசுவத்தாம னேபாரும் ஆகாயந் தன்னிலே
பசுமைத்தோற் றம்போல பருதிதனைக் கார்முகிலும்
மறைக்கிறதே யிச்சமயம் மாரிபெய்யு மோவெனவும்

விரைவாகக் கேட்டாரே வேதாந்தக் கோவலனும்
அந்தவஸ்வத் தாமன் ஆமாவென் றேமொழிந்தும்
சந்தோஷ மாகத் தான்கொடுக்க மோதிரத்தை
வாங்கியே மாயவனும் வழுத்துவா ரவனிடமும்
ஓங்கிடும் பாரத யுத்தங்கொஞ்ச நாளதனில்
துரியோ தனனந்த துஷ்டர்களு முந்தனையே
தெரியச்சே னுபதியாய் செய்குவார் நிச்சயமே
ஐவர்மேற் கிருபைவைத்து ஆகா தென நீரும்
பைய வுரையுமென்று பாரளந் தோனுரைக்க
கண்ண னுரைத்ததையுங் கண்டுவெஸ் வத்தாமன்
என்னமோ வென்று இழுத்தாப்போ லேமொழிந்தான்
சந்தோஷ மாய்விடையைத் தான்வாங்கி மாயவனும்
அந்தவேளை தேரேறி ஆயனும் சாத்தகியும்
பாகனை ரதம்விடவே பகர்ந்திட வேயவனும்
வேகமாய் நடத்தினனே மேன்மையுட னேரதத்தை
விதுரன் மனைகண்டு வேதனு மங்கிறங்கி
பொதுவர் சுதனும் போய்நுழைந்து மாளிகையில்
அந்தவிதுர னிடத்தில் ஆயன் மனமகிழ்ந்து
விந்தையான சங்கதியை விளம்பினர் பூராவும்
விதுரனுங் கேட்டே விசன மிகவடைந்து
இதுபுதுமை யென்றே இருந்தார்க ளம்மானை

துரியோதனன் பெரியோர்களுடன்
யோசனை புரிவது.

ஆயன்செய்த மாய்கைதனை அரவக்கொடி யோன்கண்டு
மாய னிடந்தனிலே மடையனஸ் வத்தாமன்
பஞ்சையைவர் மேலும் பாண ந் தொடுக்கேனென்று
கஞ்சனை மடித்தோனிடம் கைபோட்டான் நிச்சயமாய்

ஆகாய வாணியறிய அந்தர தேவரறிய
வாகான பூமாது மங்கையுந் தானறிய
சத்தியஞ் செய்தானவன் சந்தேக மில்லையதில்
இத்ததி யிங்குசெய்தான் எல்லோரும் கண்டீரா
என்னன்னத் தைத்தின்று எனக்குத் துரோகஞ்செய்ய
மன்னர் களே நினைந்தான் மாபாவி குடிகேடன்
மாமாவே பார்த்தீரா மடையன்செய்த சத்தியத்தை
ஆமாமாவென்று அந்தச் சகுனி யுரைத்தான்
ஆசாரி துரோணரை அழைத்து துரியனும்
பாசாங்கு செய்ததைப் பகருவான் சங்கதியும்
உந்தன்சுதன் சத்தியமே உறுதிசொன்னான் கண்ணனி
இந்தச் சபையிருந்தோர் எல்லோருந்தான் பார்க்க (டம்
இவனுக்குச் சேனாதிபதி எப்படி யான்கொடுப்பேன்
தவறை யிவன் நினைந்து சண்டையைக் கெடுத்திடுவான்
வந்திடு மிடையூறு மன்னர்களே தப்பாதென
நொந்து வுரைத்தானே நோக்கித் துரோணரிடம்
வந்தான் குருசுதனும் மகாசபை தன்னிலே
வந்தவனைத் துரோணர் வகையுடனே கேள்கலுற்றார்
மாயனிடம் நீயும் வழுத்தியே சத்தியத்தை
ஆயனிடங் கைபோட்டாய் ஆகாய வாணியறிய
நிச்சயமா வென்று நின்றவனைக் கேட்டிடவும்
அச்சேதி கேட்டு அவர்களிடம் புகல்வான்
கண்ணனிட மோதிரமும் கழண்டுமண் ணில்விழவே
மன்னவரே யெடுத்து மாயன்கை யிற்கொடுத்தேன்
பாரோர் புகழும் பாரளந் தோனிடத்தில்
வேறொன்றுஞ் செய்யவில்லை வேந்தர்களே நிச்சயமாய்
என்றுவஸ்வத் தாமன் இயம்பச் சபையோர்கள்
நன்றாகக் கேட்டு நாதனையெண்ணி யிருந்தார்

## கிருஷ்ணமூர்த்தி குந்தமாதேவியை கர்ணனிடம் போகச்சொல்வது.

விதுரன் மனைசென்ற வேதாந்தக் கோவலனும்
அதுசமயம் நடந்து அதிக விரைவாக
குந்திமா ளிகைதேடி கோபால னங்குவர
தந்திரவான் வரவை தையலு மேகண்டு
வேண வுபசாரம் மெல்லிகை செய்திடவும்
காணவே தான்தொழுதான் கண்ணனும் மாமிதனை
ஆசீர் வதித்துமவள் ஆசனத் திருக்கவைத்து
பேசியிருந் தார்சிலதும் பேய்முலைப்பா லுண்டகண்ண (ன்
சாமியு மச்சமயம் தையலரைக் கேட்கவெண்ணி
மாமியே கர்ணனிடம் மகிழ்வாகச் சென்ருயோ
என்றுமா யன்கேட்க இதைக்கேட்டுத் தையலரும்
நன்ருக இன்றுதினம் நான்செல்வே னென்றனளே
சீக்கிரத்தில் செல்லுமென்று செப்பியே மாயவனும்
நோக்கியே வந்தார் நொடியில் விதுரன்மனை

## குந்தியம்மை கர்ணனிடஞ் செல்வது.

மாய னுரைப்படியே மங்கை குந்தி யம்மனுமே
சாயமயில் போல்நடந்து சல்திகர்ணன் மாளிகைமுன்
ஆசார முகப்பில்வர அங்குதூத னோடிவந்து
பாசமொடு பணிய பாரரசன் தேவிதனை
அம்மையுமே கண்டு அவனை மிகவாழ்த்தி
செம்மையா யவனிடத்தில் செப்புவாள் சங்கதியும்
உங்க ளரசனிடத்தி லோடி யுரையுமென
பங்கமில்லா மாது பகர்ந்தாளே தூதனிடம்
சேவகர்கள் கேட்டு சென்று கருணனிடம்
காவலரு மங்கு கையால் தொழுதுநிற்க
கருணனுங் கண்டு காவலா யென்னவென

பெருவிற்கை கோமானே பேசுவேன் கேளுமென
பாண்டுவின் பத்தினியும் பாவையு மிங்குவந்து
வேண்டியுரைக் கச்சொன்னர் வேந்தனே தங்களிடம்
என்றுமே சேவகர் இயம்பவே கர்ணனும்
நன்ருக் கேட்டே நாழிகையி லோடிவந்தே
கண்டுமே யன்னைதனை காலில்வீழ்ந்து பணிந்து
கொண்டு நமஸ்காரமும் கூட்டிவந்து மாளிகையில்
ஆசனம் போட்டு அதின்மே லிருக்கவைத்து
பாசமொடு தானே பாதபூசை பண்ணிடவும்
மகனை யெடுத்தே மங்கையா சீர்வதித்தும்
பகவானை யெண்ணி பாவை யருமங்கு
சந்தோஷ மாகவுமே தானிருக் குஞ்சமயம்
அந்தச் சமையத்தில் அருணன் சுதன்கேட்பான்
அம்மையே தங்கள் அடிகளும் கொப்பளிக்க
எம்மைப் பொருட்டாக எண்ணிவந்த காரியத்தை
அன்னையே சொல்லுமென அடியிற் பணிந்துமந்த
மன்னனுங் கேட்டானே மாதாவைத் தான்தொழுது
மாதுமே யச்சமயம் மகன்றனக் குப்பதிலும்
ஓதுவாளம்மை உள்ளபடி தப்பாமல்
கருணனே நீயும் காவலா வெந்தன்சுதன்
அருமையுள்ள ஐவர்களும் அரசே யுனதுதம்பி
உந்தனுட விபரம் ஓதுகிறேன் கேளுமென
மைந்த னிடத்திலே மாதா மொழியலுற்ருள்
என்தாயார் மாளிகையில் இருந்தேன் சிறுவயதில்
மன்னவனே யங்கே வந்தார் துருவாசர்
அஞ்சு பிராயம் அறியாத நாளதனில்
வஞ்சகம் நினையாமல் மாமுனிவரானவர்க்கு
பணிவிடை செய்தேன் பார்த்து மெனையுமவர்

தனியே யழைத்து சாற்றியுப தேசமதை
ஐந்துமந் திரந்தனையும் அவரெனக்குத் தானோதி
தந்திரத்தை யுரைத்தே தான்சென்றார் காட்டகத்தே
மாமுனிவர் சென்றபின்புமந்திரம் தனிலொன்றை
மாமுனிவர் சொற்போல மந்திரத்தை யான்செபிக்க
பருதியு மங்குவந்து பார்த்தே யெனையவரும்
சிறுவய தாயிருக்க செபிக்கவே மந்திரத்தை
வாலைப் பருவமதாய் மன்னனே யானாக
வேளையே கூடிடவும் வேந்தனே நீபிறக்க
அழுதேனே யானும் அச்சமய மேபருதி
பழுதில்லா துந்தனையும் பாரப்பெட்டி யதனில்
வைத்துமே மூடியவர் வளர்கெங்கை யாற்றினிலே
அத்ததி விட்டுவிட்டார் அருமையுள்ள என்சுதனே
அதுதா னறிவேன் அப்பாற்சிறு பெண்ணானேன்
இதுவரையில் யானும் இச்சங் கதிதெரியேன்
இப்பத்தா னெந்தனுக்கு இயம்பினார் தெரிந்தவரும்
அப்பனே யென்று அம்மையும் பின்புகல்வாள்
ஐவர்பஞ்ச பாண்டவர்கள் அருமையான தம்பியர்கள்
ஐவருடன் சேர்ந்து நீ அரசை முடிசூட்டினால்
கைகட்டி நிற்பார்கள் காவலருன் சொற்படியே
ஐயனே வாவென் றழைத்தாளே யம்மையரும்

கர்ணன் குந்திதேவியிடம் மொழிவது.

அங்கதே சாதிபனும் அறைந்ததையெல் லாங்கேட்டு
இங்கேவந்து வெகுபே ரென்தாயா ரென்றுரைத்து
அம்மையே யென்னோடு அதுவுமென் பெட்டிதனில்
செம்மையாய் வைத்திருக்கேன் சேர்த்தனுப் பியதுகிலை
எந்தனிட தாயென்று எவருமே வந்தாலும்
அந்தத் துகிலை அவர்கள்மேற் போர்த்தினுக்கால்

வருத்த மடைந்துமவர் வந்தவழி யேசெல்வார்
விருத்தாந்த மிதுவாகும் மிக்க மதியுடையாய்
அப்படிப் போல அம்மையே வந்தாய் நீ
தப்புகள் நேர்ந்திடுமே தாயே பெருஞ்சங்கடம்
இன்னும் பலவாருய் எடுத்தோதி யேகருண
மன்ன னுரைத்தானே மாதா விடந்தனிலே
மாது மதைக்கேட்டு மைந்தனே யுன்னிடத்தில்
தீது மொழியவில்லை சேயனே இச்சமயம்
சல்லாப மாயுரைத்த தனையனே யெந்தனிடம்
நல்லதந்தப் பட்டைநான் பார்க்கப் போர்த்திடுவாய்
என்றியம்ப வேமாது ஏகிக் கருண னுமே
நன்ரு யருணனையும் நலமாக வேதுதித்து
கொண்டுவந்து துகிலை கொடுக்கவே தாயிடமும்
ரெண்டுகரத் தால்வாங்கி நேராக மேலணிய
அன்றிருந்த பேரழகும் அம்மைக்கு வந்திடவே
நன்ருய் ரதியெனவும் நாரியுந் தானமைந்து
கொங்கையில் பால்சுரந்து கோமான்கர் ணன்வதனம்
சங்கையில் லாதபடி தானே யடித்திடவும்
அங்கர்கோன் கண்டு அகமகிழ்ந் தச்சமயம்
சங்கமாய்த் தோத்திரத்தை தானேதிப் பாதமதில்
விழுந்து பணிந்துமவன் விளம்பிடத் தோத்திரமும்
பழுதில்லா மாது பாலகனை யேயெடுத்தும்
சந்தோஷங் கொண்டு தன்சுத னைவாழ்த்தி
அந்தவேளை மாது அருவிபோல் நீர்வடித்தாள்
கர்ண னுமே கண்டே கண்ணீரை யுந்துடைத்து
கர்ண னும் தோத்திரமே கணக்குக ளில்லாமல்
சொல்லியே தாயார்க்கு தொழுதுமே யங்குநிற்க
மெல்லியுஞ் சுதன்றனக்கு விளம்புவா ளம்மானை

தம்பிமா ருடன்சேர்ந்து தரணி முடிசூடி
வெம்பாது குடிகளையும் வேந்தனே யாதரியும்
உந்தனது தம்பியர்கள் உன்மனம் போல்நடப்பார்
வந்திடுவா யென்று மாதா வழைத்தனளே

கர்ணன் தாயாரிடம் மொழிவது

அன்னை தனைப்பார்த்து அறைகுவா னேகருணன்
முன்னே மொழிந்தாயில்லை முடிவுகா லந்தனிலே
வந்துமே செப்பினுய் மாதாவே யானுமே
இந்தவேளை தம்பியுடன் எப்படி வருவேனே
அரவக் கொடியோனும் அவன்செய்த நன்றிகளை
மறவாமற் பூராவும் மாதா விடமுரைத்து
அப்படி யெனைவளர்த்த அரசனிருக்க யானும்
தப்பு நினைக்கலாமா தாயே யதுநீதியா
நாளை நடக்கின்ற நற்பா ரதப்போரில்
வேளையான் வந்து விசயன்கணை யால்மடிவேன்
இன்னும் பலவிதத்தை எடுத்தோதி தாய்பாதம்
பின்னும் பணிந்தானே பிரியமுள்ள பாலகனும்
அம்மை யிதைக்கேட்டு அருமையான என்பாலா
நம்மையாய் யெந்தனுக்கு நல்லிரண்டு வரந்தாவென
அந்தவேளை கருணன் அம்மையேநீ கேட்டபடி
தந்திட்டேன் யானும் சங்கதி யென்னமொழி
அப்பனே யென்சுதனே அடியே னுரைகேளு
தப்பா தருச்சுனனும் தகிக்கக்காண் டாவனத்தை
அந்தவன லைத்தாண்டி அச்சுவ சேனனென்போன்
உந்த னிடத்தினிலே ஓடிவந்து தங்கினதாய்
எந்த னிடத்திலே இதைமொழிந்தா ராகையினுல்
அந்தநா கக்கணையை அருச்சுனன் றன்மேலே
ஒருதடவை விடுவாய் உண்மையா கச்சுதனே

மறுதரம் விடாமலே வரமொன்று பின்னாலே
தர்மன் பீமன் நகுலன் தக்கசகா தேவரின்மேல்
மர்மமாய்க் கணைபூட்டி மன்னரைக்கொல்லாதபடி
கடுங்கணை பூட்டியே காலனூர் காட்டாமல்
விடுங்கணை லேசாக விட்டுமவர்பேரில்
தப்பா தவர்களையும் தான்காக்கு மோர்வரமும்
இப்போ வரமிரண்டை ஈகுவா யென்றனளே
அம்மையான் தந்தேன் அட்டியில்லா மல்நீயும்
செம்மையா யெந்தனுக்கும் தீர்க்கமா யிரண்டுவரம்
சந்தோஷ மாகவுமே தாயே நீ யெந்தனுக்கும்
இந்தவேளை தாவென் றிரண்டுகையை நீட்டிடவும்
தந்தேனு னுந்தனுக்கும் சாமியே யெந்தனிடம்
அந்த வரந்தனையே அறைகுவா யென்றனளே
அன்னையே யெந்தனையும் அறியாம லேயுலகில்
பின்ன வசையாக பேசுகிறார்தாயே
இழிகுலத்தா னென்று என்னை யவர்மதித்தே
பழித்துமே பேசுகிறார் பாரிலுள்ள பெரியோர்கள்.
பாரத யுத்தமதில் பார்த்தன் கணைபட்டுமே
தேரதிலே சாய்ந்திடுவேன் தேவியே நிச்சயமாய்
அப்பொழுது நீயும் அம்மையே யங்குவந்தும்
தப்பா தெனையெடுத்து தாயேயுன் மடியில்வைத்தால்
இவ்வுலக வரசர் எல்லாம் புகழ்ந்திடுவார்
அவ்வள வுபகாரம் அடியேனுக் குச்செய்வாய்
இந்த வரமொன்று இன்னமொன்றுந் தாயே நீ
இந்தச் செய்தியதனை என்னிட தம்பியிடம்
மன்ன ரிடந்தனிலே வழுத்தினா லேயவரும்
பின்னமதை நினைந்து பிரியமாய்க் காடடைவார்
ஐயையோ பாவமே அலைந்துமே வந்தவர்கள்

வையகத்தை மூடி சூடிமாதாவே யாளட்டும்
இரண்டு வரமதனை எந்தனுக் கன்போடு
தரவேண்டுந் தாயேயென தாள்பணிந்து கேட்டிடவும்
மகனுரைத்த வார்த்தைதனை மாதாவு மேகேட்டு
அகமகிழ்ந்து மங்கை அளித்தா ளிரண்டுவரம்
இன்னும் பலவிதத்தை இயம்பிச் சுதனிடமே
மன்னவ னிடந்தனிலே மாதாவு மச்சமயம்
ஏகவிடை தாருமென ஏந்திழையுந் தான்கேட்க
நாகமதை வளர்ப்போன் நன்றாய் விடையீந்தான்
மகனையா சீர்வதித்து மங்கை வெளியேறி
பகவானை யெண்ணி பாவையரு மேநடந்தாள்
ஆய னிருக்குமிடம் அதிவிரை வாய்வந்தும்
மாயனிடஞ் சங்கதியை வமுத்தினள் பூராவும்
கண்ண னதைக்கேட்டு கவலையெல்லாம் நீக்கி
மன்னவ ரைவர்களும் வழிபார்த் திருப்பார்கள்
வந்துவெகு நாளாச்சு மாமியே யான்போக
தந்திடுவீர் விடையும் தருணம் பயணமென
தையலதைக் கேட்டும் சாமியே ஐவரையும்
வையகத்தோர் புகழ மாயா நீர் காத்திடுவாய்
சென்றுமே வாருமென்று செப்பிட வேமாயன்
நன்றாய்க் கேட்டு நாதனு மச்சமயம்
விதுர னிடம்வந்து விடையது வாங்கியுமே
பொதுவர் சுதனும் புறப்பட்டான் சேனையொடு

கிருஷ்ணபகவான் பாண்டவரிடஞ் செல்வது

ரதத்தை யங்குநிறுத்தி நல்ல பரிபூட்டி
இதமா யலங்கரித்தான் ஏற்ற தொருபாகன்
ஆயனுஞ் சாத்தகியும் அந்த ரதமேற
மாய னுடனே மகாபடை புறப்படவும்

பாகனை ரதம்விடவே பகர்ந்திட வேயவனும்
வேகமாய் நடத்தினன் மேன்மையுட னேரதத்தை
தேவர்களுங் கண்டு தேன்மாரி யும்பொழிய
மூவர்களும் மாயனுக்கு மொழிந்தார்நல் வாக்கதனை
பூமிதேவி பார்த்தே பொங்கியா னந்தமுடன்
சாமியும் யுத்தம்வைத்து சனத்தையெல் லாமடிப்பார்
நமக்குப்பா ரங்குறையும் நாதன் கிருபையென
தமக்குநல்ல காலமென தானினைந்தாள் பூமாது
ஆதிசேடன் கண்டே ஆனந்தங் கொண்டவனும்
சோதிநா ராயணனை தொழுது பணிந்தானே
சோடுசோடாய் ரதத்தை துரிதம தாய்நடத்தி
காடு கடந்துமவர் கரியமலை யுந்தாண்டி
கண்டவர்க ளஞ்சிடவே காவனத் தைக்கழித்து
மண்டலத் தரசர்களும் மகிழ்ந்திட வேரதமும்
உபலா வியமதனில் ஒருகோடி படையுடனே
உபகாரஞ் செய்யச்சென்ற உலகளந்த மாமாயன்
வந்தாரேயங்கும் மன்னரைவர் தாம்பார்த்து
தந்தார்கள் வந்தனமும் சகலவர சர்பணிய
மாயனு மந்நேரம் மகிழ்வா யாசீர்வதித்து
நேயமுடன் சபையில் நிறைந்தார்க ளம்மானை
ஐவர்களும் வந்து ஆய னிடந்தனிலே
ஐயனே சென்றதுவும் அடுமை யிடமுறையும்
என்றுமே தர்மர் இதைக்கேட்க மாயவனும்
நன்றாகக் கேட்டு நவிலுவார் சங்கதியும்
அங்கு நடந்த அதிசயங்கள் பூராவும்
சங்கையில் லாதபடி சாற்றினர் கோவலனும்
அரசர்க ளேகேளும் அந்தப் பாவிதுரியன்
திரமான சண்டைசெய்ய செப்பினு னுண்மையிது

நல்லவேளை யதனில் நாமும் படையெடுத்து
செல்லவேண்டு மெனவே செப்பினன் மண்ணையுண்
அப்படியே நல்லதென்று ஆயனுரைபோலரசர் (டோன்
தப்பாது படைகளையும் தான்சேர்த்து வொன்றுக
பழுதில்லாத வரசர் பார்த்தார் கணக்குகளை
வலுமிகுந்த படைகள் மன்னர்யே ழக்ரோணி
குருச்சேத் திரபூமி கொண்டுபோக வேயரசர்
விருப்பமாக விருந்தார் வேந்தர்க ளங்கேயும்
இப்படிக் காகவே இவரிங் கிருந்திடவும்
தப்பாய் நடப்பார் சபைகூடி யோசனையே

துரியோதனன் சபையில் யோசனை செய்தல்

துரியன்கரு ணன்பெரியோர் துச்சா தனனேடு
அரிய மதிபுகட்டும் அந்தமா மன்சகுனி
எல்லவருங் கூடி ஏகமாய்ச் சபையிருக்க
சல்லாப மாய்த்துரியன் சாற்றுவா னவர்களிடம்
இவ்விடத்தில் வந்து இடையனும் தூதுரைக்க
செவ்வையாய்க் கேட்டு செப்பினே மில்லையென்று
அவனுமே சென்று ஐவ ரிடமோதி
தவராது படைகளைத் தான்சேர்த்தா ராகையினல்
இங்குவந் திருக்கின்ற எனக்குரிய படையை
மங்கள மொடுகணக்கை மன்னவரே பார்ப்போமென்று
படைக ளிடம்வந்தே பாம்புக் கொடியோனும்
படைகளைப் பார்த்தே பாரர சன்மகிழ
சேனைப் பெருக்கமோ செப்பிட வொண்ணுது
ஆனையோ சங்கம் அதிரதர் வெகுசங்கம்
அசுவமோ கோடி அதின்தலைவ ருங்கோடி
பசுக்கார மாய்ரதமோ பகர்ந்திடக் கூடாதே
தக்கபெருஞ் சேனைதனைத் தான்பார்த்து மேகணக்கு

அக்ரோணி பதினென்றும் அறிந்து பதியரசன்
விந்தையிது வென்றே வீஷ்மரிட மோடிவந்து
அந்தவேளை பணிந்து அவரிட மேபுகல்வான்
ஐயாவே கேளும் அருமையான படைகள்
மெய்யனே வந்திருக்கு மேன்மையா யவைகளுக்கு
சேனுபதி யாய்ததாங்கள் செய்துகொள்ளவேணுமென
பூநாகக் கொடியனும் புகன்றனே தாதையிடம்
வீஷ்ம ரதைக்கேட்டு வெகுசந்தோஷ முடனே
தாஷ்டீக வானும் சம்மதப் பட்டனரே
அந்தச் சமயம் அவர்க்குச்சே னுபதியை
சந்தோஷமாய்க் கட்டியே சகலருங் கைகொட்டி
வாத்தியங்க ளடித்து வாகான படைகளையும்
நேர்த்தியாய்ப் பார்த்தே நிறைந்தார் கொலுவினிலே
அரவக் கெடியோனும் அந்தவீஷ்ம ரிடத்தில்
திரமான படைகளும் செல்லக்குரு க்ஷேத்திரமே
யோசனை யென்னவென்று உரிமை யுடன்கேட்க
பாசமுடன் வீஷ்மர் பகருவார் ராசனுக்கும்
நல்லவேளை பார்த்தே நடத்தவேணு மரசே
நல்லதொரு சோதிடனை நாள்யோகங் கேளெனவும்
வேதியனைக் கூட்டிவர வேந்தன் விடைகொடுக்க
சேதியறிந் தேவீஷ்மர் செப்புவா ரரசனிடம்
அப்பா வரசே அருமையான யென்பேரா
தப்பாக வைத்திடுவோர் தனையனே வேதியரும்
நல்லவரா யழைத்தே நாள்வையும் நிச்சயித்து
உள்ளதிது வென்றே ஓதினர் தாதையுமே
அவருரைத்த வார்த்தைதனை அரசனு மேகேட்டு
தவராது வைப்பவரை தான்மொழியு மென்றனனே
கங்காசுத னதையும் கருணை யொடுகேட்டு

சிங்கார மாகவுமே செப்புவார் ராசனிடம்
பாண்டுமென்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரி லிளையோன் பாலன் சகாதேவன்
வடிகட்டிச் சாஸ்திரத்தை மன்னன் விழுங்கினவன்
துடியனே நீசென்று சோம்பலில் லாதபடி
அவனிடத்தில் கேட்டாலும் அதிகப் பிரியமுடன்
தவராது நாள்வைப்பான் சல்தியாய்ச் செல்லுமென
வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்ததுரி யோதனனும்
சஞ்சலங் கொண்டுமவன் சாற்றுவான் தாதையிடம்
அவனும் பகையாளி அவனிடத்தில் நாள்வைத்தால்
தவருக வைத்திடுவான் சந்தேக மில்லையதில்
நல்லதுவோ வென்றே ராச னவர்க்குரைக்க
சொல்வதை யேயறிந்து துடிய னிடம்புகல்வார்
அப்பனே கேளடா அவர்பெருமை தெரியாய்
தப்பா ரொருநாளும் தனஞ்செய ரைவர்களும்
சத்தியத்தை யென்னும் தர்மசிந் தையுடையோர்
பத்தியொடு பணிந்து பாலன் நாள் வைப்பானே
சந்தோஷ மாய்ச்சென்று சல்தியாய் நாள்வைத்து
அந்தப் படியே நீ அரவா னிடஞ்சென்று
தவராது சங்கதியைத் தான்மொழிந்து பாலனிடம்
அவனைக் களப்பலிக்கு ஆக வருதி வாங்கி
வந்திடுவா யென்று மனு நீதி யையறிந்தோர்
சந்தோஷ மாயுரைக்க தான்கேட்டு மேயரசன்

துரியோதனன் சகாதேவனிடம்
நாள்வைக்கச் செல்வது.

நல்தென்று சம்மதித்து நாளி பயணமதாய்
சல்லாப மாயவனும் தக்ககா னங்கழித்து
உரைப்படி யேசென்று உபலா வியமதனில்

தரைவேந்த னும்வந்தான் சகாதேவன் மாளிகைமுன்
அண்ணல் வரவதனை அறிந்து சகாதேவ
மன்ன னு மோடிவந்து மகிழ்ந்துமே தெண்டனிட்டும்
மாளிகையி லாசனத்தில் மன்னனை யிருக்கவைத்து
நாளிகையிற் கேட்டான் நல்லசேம லாபமதை
மன்ன னுஞ் செப்பியபின் வந்தவா றென்னவென
என்னருமைத் தம்பியரே இங்குவந்த சங்கதியும்
மன்னவனே கேளும் வழுத்துவே னிச்சமயம்
மன்னர்பஞ்ச பாண்டவர்க்கும் மகிபனே யெந்த னுக்கும்
நாளை நடக்கின்ற நல்லதொரு யுத்தமதில்
வேளைதர்மர் முடியும் விழுகும் படியாக
நல்லவேளை பார்க்க நாதனே வந்தேனென
மெள்ள மொழிந்தான் வேந்தன்சகா தேவனிடம்
அண்ணலைத் தான்பணிந்து அப்படியே சொல்வேனெ
மன்ன னுஞ் சாஸ்திரத்தை மதியினு லாராய்ந்து (ன
அரவக் கொடியன்ராசி அண்ணல்தர்மர் ராசிதனை
திரமாய்ப் பொருத்தமொடு திசைநாத னத்தனையும்
அறிந்துமே சாஸ்திரவான் அவையெல்லாம் நன்ருக
தெரிந்திட வேமொழிவான் திரியோ தனனிடத்தில்
தர்மர் முடி கீழ்விழவும் சரியான நாளதனை
விற்பூண்ட மன்னவனே விளம்புவேன் நீர்கேளும்
அம்மாவா சித்தினமே அன்று யிரவதனில
ஒன்பது நாழிகைமேல் உன்படை பூராவும்
குருச்சேத் திரஞ்சென்று குலதெய்வங் காளிக்கு
பருத்த மனிதராய் பலிகொடுக்க வேண்டும்மன்னு
எதிரோமக் காரனை ஈய்ந்தால் பிடாரிக்கும்
எதிரிமுடி கீழ்விழுகும் எப்படியுந் தப்பாமல் (ன்
அப்பால்தெய் வச்செயலே அறிந்தமட்டும் செப்பினே

தப்பா தண்ணுவென்று தம்பி மொழிந்திடவும்
வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்த துரி யோதனனும்
பஞ்சைகளை நாமும் பறக்கடிப்போ மென்றெண்ணி
தம்பியே யெந்தனுக்கு தானளிப் பாய்விடையும்
நம்மிட நாடதற்கே நான்செல்ல வென்றனனே
வஞ்சக னுரைத்ததொரு வார்த்தைதனைக் கேட்டிளையோ
வஞ்சகமில் லாதபடி வழுத்துவா னண்ணனிடம் (ன்
போசனஞ் செய்துமிங்கு புண்ணியனே போவெனவும்
நேசமதாய் மொழிந்தான் நின்று சகாதேவன்
எந்தனுக்கு வேண்டாமென் றியம்பி விடைவாங்கி
அந்தவேளை வந்தான் அரவான் மாளிகைதேடி

அரவானிடம் துரியோதனன் வருவது

அந்தகன் றன்சுதனும் அதிவேக மாகவுமே
அந்தவேளை வந்தான் அரவானின் மாளிகைமுன்
தந்தை வருவதையே தானறிந் தேயரவான்
விந்தை யோடுவந்து வீழ்ந்து நமஸ்கரிக்க
ஆசிமிகச் செப்பி அதிகப் பிரியமதாய்
பேசியே சேமலாபம் பிரிய முடனிருக்க
ஐயாவேதாங்களுமே அடிமையிடம் வந்ததுவை
மெய்யனே மொழியுமென விசாரித்தா னேசிறுவன்
அரச னதைக்கேட்டே அரவா னிடத்திலும்
திரமாய் மொழிவான் செய்திகள் தப்பாது
அருமையான சுதனே ஐவருட னெனக்கும்
வருகுது பாரதப்போர் மகிழ்ந்ததற் கே நீயும்
நம்மகுடி காக்கின்ற நலமான தெய்வமது
அம்மன் றனக்கு அடியேனோர் பிரார்த்தனை
அந்தச்சங் கதிதனக்கு அடியேனுக் கோர்வரமும்
தந்திடுவா யென்று தயவுடனே கேட்டிடவே

என் னுயிரைக் கேட்டாலும் ஈய்ந்திடுவே னுந்தனுக்கு
மன்னவனே யென்று மகிழ்ந்துரைத் தேயரவான்
சங்கதி தன்னையுமே சாமியே யெந்தனிடம்
பங்கமில் லாதபடி பகருவா யென்றிடவும்
அம்மை காளிதனக்கு அருமையான சுதனே
நம்மை பெறுவதற்கு நாதா களப்பலியாய்
வந்திடுவா யென்று வருந்த அரவானும்
சந்தோஷ மாகவுமே சாற்றுவான் தந்தையிடம்
அப்பனே யெந்தனுக்கு ஆனநாள் குறித்ததுவை
தப்பா துரையுமெனச் சாற்றிடவே சிறுவன்
அம்மாவாசி யிரவில் ஐந்துநாழி கைக்குமேல்
எம்புதல்வா யென்று இயம்பினனே கபடன்
சிறுவ னதைக்கவர்ந்து சிரித்துவா னந்தமொடு
அருமை யுடனேயவன் அறைவானே தந்தையிடம்
ஐயாவே யிச்சடலம் அநித்தியக் காயமதால்
மெய்யனே யென்னுவி வேந்தே யிருக்குமாகில்
வருவதில் தடையில்லை மன்னவனே தப்பாதென.
அருமையாக மொழிந்தான் அப்பா லனுமரவான்
அரவக் கொடியோனும் அதிக மகிழ்வுடனே
அரவானை வாழ்த்தி அவன்விடையும் வாங்கி
அந்தவூரைக் கடந்தே அஸ்தினு புரிவந்து
சொந்தப்பெரி யோரிடத்தில் சொல்லினன் சங்கதியும்
சகலரு மதைக்கேட்டு சந்தோஷ மூண்டாகி
பகவா னிருப்பார் பஞ்சவர் பட்சமதாய்
தர்மசிந் தையுடையார் தனஞ்செய ரைவரையும்
தர்மந் தலைகாக்கும் தடையில்லை யேயவரை
பெருமையாய்ப் பேசி பெரியோர்க ளெல்லாமே
அருமை யருமையென்று ஐவரை யும்புகழ்ந்தார்

இப்படி யிங்குபேசி ஏகக்குரு சேத்திரமே
தப்பில்லாப் படைகளுடன் தயாரா யிருந்தார்கள்

### உபலாவியத்தில் பஞ்சவர்கள் யுத்தத்திற்குத் தயார்ச் செய்வது

ஐவர்பஞ்ச பாண்டவரும் ஆயன்வெகு வரசர்
செய்தார்கள் யோசனையைச் சிறப்பான சேனைக்கு
சேனாபதிப் பட்டம் செய்திடவே வேணுமென
ஆனாலுந் தர்மரிடம் அறைகுவோ மென்றுமாயன்
தர்மரிட முரைக்க தயவாகக் கேட்டவரும்
விற்றிரமைக் காரனாய் வேதனே செய்யுமென்றார்
ஆயனு மங்குமே அனைவருடன் யோசித்து
மாயன் மனமகிழ்ந்து மன்னன் சுவேதனனை
அந்தவேளை யவனுக் கன்போடு பட்டங்கட்டி
சந்தோஷ மாகவுமே சாற்றினார் சேனைகட்கும்
அப்பால் சுவேதனனும் அணிநான்காய்த் தான்வகுத்து
தப்பாமல் மன்னரையுந் தான்வைத்தான் ஆளாக
குருக்ஷேத் திரப்பூமி கொண்டுபோக வேநினைந்தும்
திருமா லிடஞ்சென்று செப்பினான் சங்கதியை
ஆயனுங் கேட்டு ஐவரிடஞ் சொல்லுமென
மாய னுரைத்திடவும் மன்னன்சிறு வன்கேட்டே
மயங்கியே பாலன்நிற்க மன்னன் தர்ம ரங்குவந்து
தயங்கிநின்ற மன்னனிடம் சங்கதி யைத்தெரிந்தார்

### தர்மர் கிருஷ்ணமூர்த்தியிடம் கேட்பது

மாயவ னிடத்தினிலே மன்னன்தர்மர் வந்துநின்று
ஆயாசும் மாவிருக்க அதுஞாய மல்லவேகாண்
சேனைகளை யழைத்து செல்லக்குரு க்ஷேத்திரமும்
சேனையுடன் வருவாய் செங்கண்மா லேநீரும்
தர்ம ரிவைமொழிய தயவாய்க் கேட்டுமாயன்

தர்ம ரிடந்தனிலே சவாப்புகள்சொல் லாதபடி
பேசாதிருந் துமவர் பெரிய சளைப்படைந்து
பாசாங்கு பண்ணினனே பாரளந்த மாயவனும்
சோரவிட்ட வதனம் சொல்லவொண்ணுத் துக்கமதாய்
பாரளந்தோன் கபடம் பார்த்துமே தர்மரதை
கவலை மிகப்பூண்டு கண்ணனே நாங்களவர்
தவறேது செய்தோமோ தயாபரனே யென்னிடத்தில்
சொல்லவே வேணுமென்று சுவாமி யிடந்தனிலே
நல்லதர்மர் கேட்க நாராய ணன்புகல்வான்
எந்தனையேன் சும்மா இழுக்குறீர் நீரேகாண்
உந்தன்மொழி கேட்பதற்கு உன்வேலைக் காரணுயான்
வரமாட்டே னென்றுசொல்லி மாயனுந் தர்மரிடந்
திரமா யுரைத்ததையும் செகவரசன் தான்கேட்டு
கண்ணீர் வடித்துமவர் காலில் விழுந் தேபணிய
மன்னனைத் தூக்கியந்த மாயனு சீர்வதித்து
என்னவேலை செய்தீர்காண் யேந்தலேயிதுசரியா
மன்னவனே நீர்பணிந்தால் மாபாவ மெந்தனுக்கு
எந்தனை யழைப்பதுவும் இதுசரி யல்லமன்னு.
சொந்தமே இருதரப்பும் சொல்லுவ தைக்கேளும்
யேகராசிசெய்யு கிறீர் யேந்தலே இதுசரியோ
யேக ரகசியமு மெல்லா மறிவேனுன்
இன்னம் பலவிதமா யியம்பவே தர்மரிடம்
மன்னவனுங் கேட்டே மாயனேசொல் லென்றுனே
அப்போது மாயவனும் அந்தத் தர்மரிடம்
செப்புகிறேன் கேளும் தேர்வேந்தே நீர்தானே
தம்பி சகாதேவன் சமர்த்துகளை நீர்கேளும்
தம்பி மொழிந்தான் சர்ப்பக் கொடியனிடத்தில்
உந்தன்முடி கீழ்விழவும் உறுதியாய் நாளதனை

வந்தமன்ன னிடத்தில் வழுத்தினு னேசிறுவன்
அரவான் களப்பலிக்கு ஆனுன் அவனுக்கு
திரமா யவனுக்குச் செப்பினு னேபலவான்
இப்படி நீங்ளெல்லாம் யேகாசி யாயிருந்து
தப்பா வழைக்கிறீரே தர்மரே யெந்தனையும்
எல்லவருஞ் சேர்ந்து யெந்தனிடம் போர்தொடுத்தும்
கொல்ல நினைந்தீர்கள் குருகுல மன்னவனே
நல்லதல்ல வென்று சொல்லி நாத னுரைத்திடவும்
உள்ளதைக்கேட் டேதர்மர் உற்றதம்பி யையழைத்து
சங்கதி யென்னவென்று தான்கேட்க வுஞ்சிறுவன்
பங்கமில் லாதபடி பகருவான் யாதெனிலோ
அண்ணுவே நீர்கேளு மரவக் கொடியன்வர
மன்னனை யான்வணங்கி வந்தவா றேதெனவும்
அன்னவரு முரைத்தா ரைவர்பஞ்ச பாண்டவர்க்கும்
மன்னவனே யெந்தனுக்கும் வருகிறதால் யுத்தமது
தர்மர்முடி கீழ்விழவுந் தான்வைப்பாய் நாளையென
கர்மமில் லாதபடி கருணையுடன் யான்மொழிந்தேன்
என்று சகாதேவ னியம்பவே தர்மரிடம்
நன்ருகக் கேட்டு நல்லரச னச்சமயம்
சத்தியந் தவராமல் தான்வைத்தான் நாளெனவும்
சித்தமிக மகிழ்ந்து செப்புவா ரரசரிடம்
சரியான தம்பிநீ சாஸ்திரத்தை யுண்டதனுல்
அறிந்ததையே மொழிந்தா யதில்தோஷ மில்லைமன்னு
சண்டைசெய்யா விட்டாலும் தம்பிசத்தி யம்போதும்
சென்றிடலாங் கானகத்தில் தேர்வேந்தே யிச்சமயம்
அந்த முடையதொரு அரவானை யங்கழைத்து
சந்தோஷ மாகவேதான் சாற்றுமென்ருர் சங்கதியை
சல்லாப மாய்வந்து தந்தை யிடந்தனிலே

வில்லா யுதம்பூண்ட வேந்தே நிசமெனவும்
எனக்குச் சரிமகனே இந்த அரவானும்
தனக்குள்ள கீர்த்தியதைத் தான்றேடிக் கொண்டானே
பூமியுள்ள மட்டும் போகாதுன் வாக்கியமும்
சாமி மகனேயென்று தழுவினு ரேதருமர்
இப்படி நடந்ததையு மெம்பெருமாள் தான்பார்த்து
செப்பவொண்ணு வானந்தம் தேவர்புகழ் வோன்கொண்டு
தருமரையும் பார்த்து சபையோ ரிடந்தனிலே
அருமைமிகு மன்னர்களே அரசனிடஞ் சொன்னதற்
கெண்டா மொழிந்தாயென இவர்கேழ்காது விடுத்து (கு
தாண்டவ மாடியே சமர்த்தாய்ப் புகழுகிறுர்
நல்லது தானென்று நாதனுமே நகைத்து
சல்லாப மாகவுமே தருமரையே கேட்பார்
பின்னமில்லா மன்னவனே பிரியமாக நாமும்
மன்னு குருசேத்திரமே யாபடை பூராவும்
நல்லவேளை மன்னு நாளையம்மா வாசித்தினம்
வெல்லும் படைகளுக்கு விளம்பித் தைரியத்தை
படைகூட்டிச் சென்றுலும் பகைவர்களை நாமும்
தடையில்லை செயமடைவோம் சங்கதிசொல் சேக்குனே
தங்கள் மனம்போல தடையில்லையே யதிலும் (ம்
பங்கம் வராதபடி படையை நடத்துமென
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமருமே
அருமை யுடன்மொழிய ஆய னதைக்கேட்டு
மண்டலத்தை யாளும் மன்னவனே நீர்கேளும்
சண்டை தொடங்குமுன்னே தங்கள் குலதெய்வம்
அம்மை பத்ரகாளிக்கு ஆனபலி யதுவாய்
செம்மையாய்க் கொடுங்களென செப்பினு ரேமாயன்
ஐயனுரை தர்மர் அருமையா கக்கேட்டு

செய்ய வேணும்நாமும் செகம்புகழ் காளிக்கு
கண்ணு மனம்போல காட்டுக் கிடாதனையும்
திண்ணமாய் வெட்டுமெனச் செப்பிட வேதருமர்
உரைத்த மொழிதனையும் உண்மையாய்க் கேட்டுமாயன்
விரைவாய்த் தருமரிடம் விளம்புவார் சங்கதியும்
மன்னவனே யிந்தப்பலி மாகாளிக்குக் கொடுத்தால்
பின்னமது வந்துவிடும் பிரபலனே தப்பாது
சொற்ப வேலைதனக்கு சொன்ன பலிகொடுப்பார்
இப்பவோ நாமும் எடுத்தது பாரதப்போர்
அதற்குத் தகுந்தபடி அம்மைகாளி தனக்கு
இதமாய்க் கொடுக்கும்பலி எடுத்துரைப் பேன்கேளும்
பஞ்ச லக்ஷணமுடைய பலசாலி யாகவுமே
அஞ்சாத மன்னவனாய் அவர்வெல்லும் வீரனாய்
எதிர்ரோமக் காரனாய் இருக்கவேணு மவனை
அதிவீர காளிக்கு அருமையாக நாமும்
வகையாய்ப் பலிகொடுத்தால் மன்னவரே நாமும்
பகைவரை வென்றிடுவோம் பாரரசே நிச்சயமாய்
திரமாக.மாயவனும் செப்பியதோர் சங்கதியை
முரசக்கொடி யோன்கேட்டு முகுந்தனிடம் புகல்வார்
ஆதிமகா மூலமே அடியேனை யிச்சமயம்
வேதினை யடையும்படி விளம்பினீர் சங்கதியும்
கடையிலே விற்றாலது காசுகொண்டு வாங்கலாம்
கிடையாத பதார்த்தமதை கேட்டாயே யென்னிடத்தில்
எனக்குவது சங்கதியும் யாதொன்றுந் தெரியாது
உனக்குத் தெரிந்தபடி உத்தமனே செய்யுமென்றார்
அந்தமொழி யைக்கேட்டு ஆயனுந் தர்மரிடம்
விந்தைய தாகவே விளம்புவார் செய்திதனை
எதிர்ரோமக் காரர்கள் இருக்கின்றார் நான்குபேர்

அதிலொருத்தன் சல்லியன் அரவக் கொடியனிடம்
படைத்துணையாய்ச் சேர்ந்தான் பார்த்த னொருவனுண்டு
தடைகள் ரெம்பமன்னு தனஞ்செயனைக் கொடுத்தால்
ஐவர்குலம் பாழாய் அழிந்துவிடும் தப்பாது
ஐயையோ பாவம் ஆகாத காரியமே
அந்தமுள்ள அரவான் அரசன் சூரியனுக்கு
சந்தோஷமாய் பலிக்கு தான்வார தாய்மொழிந்தான்
சந்தேகமெண் ணுதபடி தர்மரே நீங்களும்
எந்தனைக் காளிக்கே இன்பமாய்ப் பலிகொடுத்தே
ஆயி யிடந்தனிலே அருமை வரம்வாங்கி
ஆயுதத்தை யெடுப்பீர் அன்பர்களே தப்பாது
மண்ணை யுண்டவாயன் மகிழ்ந்துமே தர்மரிடம்
திண்ணமாய்ச் செப்பினுன் செய்தியிது தனையும்
தர்ம ரிதைக்கேட்டு தன்செவி யையடைத்தும்
கர்மமான மொழியை காதில்கேட்க வேவிடுத்தாய்
ஐயனே யுந்தனையும் அக்காளிக் கேகொடுத்து
வையகத்தை யாண்டால் மகாபுண்ணி யம்பாரும்.
அரவக் கொடியனிடம் அரசைநாங்கள் விடுத்து
திரமான தம்பியொடும் செல்லுவேன் காட்டகமும்
காளைகளே யெழுங்கள் காவனந் தனக்குமே
வேளையே செல்லுவோமென்று வேந்தன் எழுந்திடவும்

அரவானும் தர்மரும் கிருஷ்ணமூர்த்தியிடம்
புகல்வது.

மன்னர் தர்மருரைத்த வார்த்தைகேட்டு மரவான்
என்னவிதி யென்று எழுந்து மொழியலுற்ருன்
மாமாவே யிச்சமயம் மயங்கச்செய்தாய் தந்தைதனை
மாமாவே யுந்தன் மனக்கருத்தை யானறிவேன்
இன்றுகுரு க்ஷேத்திரத்தில் எல்லாப்படை பூராவும்

சென்று வேலைமுடிக்க செய்கிறாய் மாயாநீ
எந்தனைப் பலிகொடுக்க எண்ணினை யுன்கருத்தில்
இந்தவேளை யானும் எதுக்கும் தயார்மாமா
வந்த துரியனுக்கு வழுத்தியது யானும்
எந்தநா ளெனவே ஏந்தலை யான்கேட்க
அம்மாவாசித் தினத்தை அவருங் குறித்ததாய்
எம்மிடத்தில் மொழிந்தார் இதைக்கேட்டு மேயானும்
ஐயனே யிச்சடலம் அநித்தியக் காயமதால்
வையமாளு மன்னை வதுவரையில் யானிருந்தால்
வருகிறேன் தப்பாது மன்னவனே யப்பாலும்
திருவுளச் செயலெனவே செப்பினேனேயானும்
என்று தருமரிடத்தில் இருந்த சிறுவனுமே
நன்றாகவே மொழிந்தான் நாதனுந் தான்கேட்க
என்தலை விதிப்படியே ஏந்தலே முடியுமதால்
என்றைக்கும் சாவு இருக்கிறது தப்பாமல்
என்ன கவலையது யானிருக்கும் வரையில்
மன்னவரே யானும் மாகாளிக்குப் பலியாய்
இந்தச் சமயமதில் ஏகி யவளிடமும்
சந்தோஷ மாய்க்கொடுப்பேன் தடையில்லை யென்றனை
ஆயனையே பணிந்து அந்தப்பல வரவான் (னே
மாயவனே யெந்தனுக்கு வரமொன்று தந்திடுவாய்
அம்மை யிடந்தனிலே அடியேன் சாகாதபடி
செம்மையா யுத்தமது செய்யவேணு மடியேன்
தீரவீர னிடத்தில் தேக மழிந்திடவே
பாரமான வரத்தை பகவானே தாவென்றான்
ஐயனுமே கேட்டு அளித்தே னுனக்கென்று
ஐவ ரிடந்தனிலே ஆயன் மொழிந்திதையும்
அம்மாவாசை யின்று ஆயுத மெடுப்போமென

அமாவாசை நாளையென்று ஆயனிடம் புகல
அரசர்கள் திரமாய் அறையக் கண்ணன் கேட்டு
பரபரப்பாகவுமே பாருங்கள் இன்றெனவும்
இன்றுவம்மா வாசியதால் எல்லோரும் தர்ப்பணமே
நன்ருகச் செய்கின்ருர் நல்லகங்கா நதியில்
பிதுர்க்க ளெல்லாம்வந்து பிண்டமது வாங்குவதை
அதுபாரு மென்றங்கே ஆயனுங் காட்டிடவே
பஞ்சாங்கந்தன்னையும் பாரரசர் பார்த்திடவும்
கஞ்சனைக்கொன் ருேன்மொழிபோல்கண்டுவரசர்களும்
இதுபுதுமை யென்று எண்ணவே யாவரும்
அதுசமயம் பருதி அன்பாய் மதியுடனே
ஆய னிடத்தி லவர்களு மோடிவந்து
மாய னிடத்தில் மகிழ்ந்து மவர் மொழிவார்
ஐயனே யின்று தினம் அம்மாவாசி யெனவும்
செய்கிரு ரிவ்வுலகில் தேவனே தர்ப்பணங்கள்
மேவுலகி லிருவர் மேவியோரிட மிருந்தால்
பூவுலகி லெல்லோரும் புகழ்ந்து கொண்டாடிடலாம்
அப்படி யில்லாதபடி ஆயனே யிவ்வுலகில் •
தப்பாய் நடக்கும் சங்கதி யென்னவென்ருர்
ஆய னதைக்கேட் டறைவா ரவர்களிடம்
நேயமா யிருபேரும் நிற்குநீர் சேர்ந்துமே
இன்று வம்மாவாசியென் றியம்பி யவர்களுக்கு
நன்றுதா னன்றுமுதல் நாளிரண்டு மதும்
வருமென் றுரைக்க வாழ்த்தி யவர்செல்ல
வருகிறதே யிப்பொழுதும் வளமையது தப்பாமல்

பஞ்சபாண்டவர் படையுடன்
குருச்சேத்திரஞ் செல்வது.

மாய னுரைப்பார் மன்னன் தருமரிடமும்

நேயனே யிச்சமயம் நியமித்த நாள்வந்து
இருப்பதி ஞலே எந்தலே குருபூமி
அருமையான படையை அழைத்துச்செல் வோமென்று
சுவேதன னேயழைத்துச் சொல்லுவார் சங்கதியும்
விவேகனே கேளும் வேந்தர்படை பூராவும்
குருச்சேத் திரபூமி கொண்டுபோகவேண்டியதால்
சுருக்காய்ப் பயணமென சொல்வாய் படைகளுக்கு
என்றுமே மாயன் இயம்பின சங்கதியை
நன்றெனவே கேட்டு நகட்டிஞன் வாத்தியத்தை
பேரிகைச் சத்தம் பெரியசதை மேளமொடு
வாரிதிபோற் படையை யங்குமே கொண்டுவந்தும்
ஆனையோ சங்கம் அதிரதர் சங்கமொடு
சேனைப் பெருக்கமோ செப்பிடவொண்ணு நெருக்கம்
குதிரை வெகுகோடி கொற்றவர் கோடாகோடி
பதியில் நடப்பதையும் பார்த்துமே தேவர்களும்
புதுமையிது வென்று புஷ்பமாரி பெய்தார்கள்
அதுதியே சென்ருர் அந்தரத்திலேயவர்கள்
சேனை நடத்தியுமே சென்றுகுரு க்ஷேத்திரத்தில்
சேனைக் கதிபதியும் செப்பியங்கு நிறுத்தி
ஆயனிடம் வந்தே அச்சிறுவன் பணிந்து
மாயாயினிச் செய்யும்வகை வழுத்துவா யென்றனனே
அந்தப் பாலனிடத்தி லாயன் மனமகிழ்ந்து
விந்தையான வாக்கியத்தை விளம்பிஞ ரச்சமயம்
நேசமாய்ப் பாலகனே நின்படை யமர்ந்திருக்க
பாசறை வேண்டுமென்று பகவா னவர்க்குரைத்து
காண்டா வனதகனம் காண்டீபன் செய்கையிலே
மீண்டுமே சென்ற வேந்தன் மயன்றனையும்
அந்த மயனவனை ஆயன் நினைந்திடவும்

வந்தா னதிவிரைவாய் மாயனைத் தான்பணிந்தும்
எந்தனை நினைத்ததுவும் என்னவகை யதனை
விந்தையாய் மொழியுமென்று வேண்டியே கேட்டிடவும்
அன்னவ னுரைதனையும் ஆயன்கேட் டச்சமயம்
மன்னவனே சேனைகளும் மகிழ்ந்து யிருந்திடவே
பாசறைக ளுண்டு பண்ணுமென்று மொழிய
நேசமொடு கேட்டான் நின்ற மய னுமவன்
மாத்திரைக்கோல் கைபிடித்தே மன்னன் கோட்டைக்கிறி
நேர்த்தியாய் மனத்தினிலே நினைந்தானே மாளிகையும்
உண்டான தங்கே உலகமில்லாப் புதுமை
கண்டாலே விண்ணுலகும் கலங்கிடும் மெய்மறந்து
அப்படிக்கு மய னும் அமைத்திட்டா னேயங்கும்
செப்பவொண்ணு மண்டபமும் தேர்வேந் தருமிருக்க
பூசைகள் செய்யுமிடம் பொக்கிஷச் சாலையொடு
ஆசைகொள்ள வரசர் அமைத்தானதி சீக்கிரத்தில்
சேனைக ளெல்லாம் சென்றிருந்து பாசறையில்
ஆனைகளைக் கட்டிவைத்தார் அதற்கேற்ற மண்டபத்தில்
சந்தோஷ மாய்ச்சென்று தங்களுட வாயுதத்தை
விந்தையான மண்டபத்தில் வேந்தர்கள் வைத்துமே
ஆயனிடம் வந்தும் அமரவே யெல்லோரும்
மாய னுங் கண்டு மகிழ்ந்திருக்குஞ் சமயம்
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமருமே
அருமையாக வந்தே ஆயனிடம் புகல்வார்
மண்ணையுண்ட வாயா மலர்க்கையா செங்கமலக்
கண்ணனே யினிநடத்துங் காரிய மோதுவென்றார்
ஆயனதைக் கேட்டும் அருமையான மைத்துனரே
நேயனே நீர்கேளும் நீலிகபாலி தனக்கு
பூசையது செய்துநாம் புண்ணியனே பலியும்

ஆசையுடன் கொடுக்க அம்மை யிடஞ்செல்வோம்
என்றுமாய னுரைக்க இம்மொழிகேட் டேயரசர்
நன்றாய்ப் படையுடனே நடந்தார்க ளம்மையிடம்
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமருடன்
அருமையாக வந்தார் அம்மை காளிமுன்பு

அதிவீர அரவானை காளிக்குப் பலிகொடுப்பது

அருமையாக வந்து அந்தநீலி முன்பு
திருவுளமே மகிழ்ந்தும் செய்து பலிபீடம்
ஆடு கிடாய்தனையும் அம்மையிடம் வெட்டி
சோடுசோடாய்க் கொடுத்தார் சொல்லவொண் ணாப்பலிகளை
அபிஷேக மெல்லாம் ஆயிக்குச் செய்துவைத்து
அபிஷேக மானபின்பு அரவானை நீராட்டி
சிகப்புத் துகில்கட்டி சேர்வையெல் லாமணிந்து
செகதீஸ் வரிமுன்னே தீரனைக் கொண்டுவந்தும்
அவனை நிற்கவைத்து அருமையாய்ப் படைகொடுக்க
தவராமல் வாங்கி தாயிட மேபுகல்வான்
ஆயி மகமாயி அச்சுதன் றங்கையே
மாயி ரணவீர மாகாளி யென்பலியை
ஏத்துக்கொள் தாயே இருதயம் பூரித்து
பார்த்துக்கோ நீயும் பரமேஸ்வரி யெனையே
தோத்திரஞ் செய்து துடியரவா னச்சமயம்
ஆத்திர மாகவே அறுத்தான் சரீரமதை
அவயவங்கள் யாவும் அட்டியில் லாதறுத்து
தவராது பீடம்வைத்து தனஞ்சயன் றன்சுதனும்
கண்ணீர் வடியாது கடுகுதிரம் வாராமல்
மன்னனு மங்கு மயங்கி விழுந்திடவும்
களைத்து விழுந்தவனை கண்ணனு மேயெடுத்து
களைதெளியச் செய்ய காவலனெழுந் திருக்க

பாசமொடு மாயன் பலவரவான் றனக்கு
நேசம தாய்ப்படுக்கை நிமிஷம் தயார்ச்செய்து
ஆயி யிடத்தினிலே அரவானை யுங்கிடத்தி
ஆயிரம்பேர் சேவகரை அழைத்துமே மாயவனும்
பணிவிடை செய்யவும் பகவா னவர்க்குரைத்து
இனிச்சேர்வோ மென்று எல்லோருமே பாசறைக்கு
வந்துமே சேர்ந்து வானிற் பருதிதனை
சந்தோஷ மாய்வரவை தான்பார்த் திருந்தார்கள்
இப்படி யாகவுமே இங்கிருக்க வெல்லோரும்
தப்பாய் நடக்கின்ற சண்டாள னுந்துரியன்
செய்தியைக் கேளுமென செப்பவை சம்பாயணர்
ஜயனே செப்புமென அரசன்சென மேசெயனும்

துரியோதனாதிகள் யோசனை செய்து
குருச்சேத்திரம் புறப்படுவது.

துரீயோதனன் கருணன் சொல்லும் மாமன்சகுனி
பெரியோர்கள் யாவரும் பிரியமுடன் வந்து
சபைதனிலே வரவும் சர்ப்பக் கொடியனும்
அவையில் வீஷ்மரிடத்தில் அறைகுவான் சங்கதியும்
உபலாவிய மதனில் உத்தமனே பாண்டவர்கள்
உபலாவி யத்தைவிட்டு உகந்துகுருச் சேத்திரமும்
ஏழுவக்ரோணி படையும் எல்லா மங்குவரவும்
பாழுமாயன் மோசம் பண்ணிவிட்டான் தாத்தா
அரவானை யானுமே அம்மாவாசை தினத்தில்
திரவீரி காளிக்கே செய்ய நினைத்தேன் பலியும்
அம்மாவாசை தனையே அந்தயிடையன் புரட்டி
அம்மை காளிதனக்கே அரவானை யின்று தினம்
பெலியது செய்தாரே பெரியவரே நாமும்
பெலியது செய்திடவும் பிரியமா யோதுமென்றான்

அப்பா வரசனே அருமைதுரி யோதனனே
தப்பா துரைப்பேன் தகுந்தபலி காளிக்கு
நம்மிடமே யிருக்கும் நல்லபட்டக் குஞ்சரத்தை
அம்மை தனக்குமே ஆக்குவோம் பலியாக
பூசித்து மாரிதனை பூண்டுமே யாயுதத்தை
நேசியே பஞ்சவரை நிமிஷம் வதைத்திடுவோம்
என்றுசே னபதியும் இயம்பக் கேட்டுமரசன்
நன்ருக யோசித்து நடத்தினு னேபலியை
சேனபதி தாதாவே செல்லக்குரு க்ஷேத்திரமும்
வீணுயிருக்காது வேந்தே அணிவகுப்பாய்
என்று துரியோதனன் இயம்பிடவே வீஷ்மர்
நன்ருய்ப் படைகளையே நாழிகை யணிவகுத்தார்
சட்டமுடன் நாலாக தான்வகுத் துப்படையை
இட்டார் கருணனை ஏந்தல் அதிரதனுய்
எல்லா முறைத்துவர இதைக்கேட்டுமே கருணன்
சொல்லவொண் ணுக்கோபம் துடிவேக மாகவுமே
சேனுபதி யிடத்தில் தீர னு மோடிவந்து
சேனு பதியே நீர் செய்தீர் பெருவேலை
எந்தனைக் கேவலமாய் எண்ணிக் கடைசியிலே
நிந்தனையாய் வைத்தாய் நிலைமையெல் லாந்தெரிந்தே
அர்த்த ரதனுக ஆக்கினுய் கேவலமாய்
விற்றிரத்தில் நீரும் வேந்தே சமர்த்தனே
ஏண்டா முழுமூடா இந்தவேலை நீசெய்து
வேண்டாமென் றெந்தனையும் வெறுத்தாயோ வுன்மனதில்
என்னுடனே போர்புரிய இவ்வுலகந் தன்னிலே
மன்னர்க ளாருமுண்டோ மடையா தெரியாதா
அங்கதே சாதிபனும் அறைந்துமே சங்கதியை
பங்கம் நினையாதபடி படையெடுத் தோடிவந்தான்

வெட்டுவே னென்று வேகமொடு கருணன்
திட்டமாய் வருகிறதை தெரிந்து கங்காசுதனும்
தானும் படையெடுத்து சல்லியங்க ளுண்டாக
காணுவோர்க ளெல்லாம் கலங்கியே சிந்தையது
அரவக்கொடியனு மவர்களிட மோடி வந்து
திரமான வார்த்தைகளைச் செப்பி யிருவருக்கும்
தடைகளே செய்து தானிருக்குஞ் சமயம்
கொடையாளி கோபமொடு கூறுவா னேசபதம்
வீஷ்மரிருக்கும் வரையில் வில்லெடுக் கேன்யானும்
வீஷ்மர் மடிந்தாலே வில்லதனைக் கைப்பூண்டு
யுத்தமது செய்வேனென உலகவரசர் முன்பு
மெத்தக் கோபங்கொண்டே வேந்த னுரைத்தானே
இப்படிக் காகவுமே இருக்கும் சமயமதில்
தப்பன் துரியோதனனும் சாற்றுவான் தாதையிடம்
படைகளை நாங்கூட்டி பாங்காய்க் குருசேத்திரமும்
தடையில்லாது செல்வோம் தாதையே யிச்சமயம்
எல்லோருந் தந்தையிடம் ஏகிப் பயணமதை
சல்லாப மாய்மொழிய தான்வந்தா ரந்தகன்முன்

திரிதராட்டிரனிடம் குருச்சேத்திரம் செல்ல
விடைகேட்பது.

துரியோ தனனும் தொழுகவே தந்தையையும்
பெரிய வரசன் பிள்ளை தனையெடுத்து
ஆசிமிகச் செப்ப அனைவரு மச்சமயம்
பேசினார் சிலசேதி பிரபல மாயங்கும்
தந்தை யிடந்தனிலே சாற்றுவா னேதுரியன்
எந்தையே யிப்போது இருக்கும் படைபூராவும்
பதினொரு வக்ரோணி பார்த்தோம் கணக்கதுவை
ததியே பயணமிட தந்தையே யிச்சமயம்
குருச்சேத் திரபூமி கொண்டுபோக விடையும்

அருள வேண்டுமென்று அடியிற் பணிந்தனனே
கண்ணில்லா னுந்தடவி காவலனை வாழ்த்தி
மன்னன் சகுனியிடம் வழுத்துவான் சங்கதியை
பெரும்போர்க்குச் செல்லுகிறீர் பிள்ளைகாள் பத்திரம்
வருங்கா ரியமறிந்து மாற்றான் குணந்தெரிந்தே
அணிகளைப் பிரித்துநீங்கள் அவரவர் போர்தொடுத்து
தனியாக விட்டிடாதீர் தம்பிகள் பத்திரம்
இன்னும் பலவிதத்தை எடுத்தோதி யந்தகனும்
மன்னன் விடையளித்தான் மைந்தருட னெல்லோர்க்கும்
காந்தாரி யிடம்பணிந்து காவலர் விடைவாங்கி
வேந்தன் சேனுபதியே வேகமாய்க் குருபூமி
செல்லவே வேண்டும் சேனையோ டிச்சமயம்
நல்லவேளை யானதினுல் நடத்துவோம் நாம்படையை
அரவக் கொடியோன் அங்குசே னுபதிக்கும்
திரமா யுறுதியதாய் செப்பிடவே யவரும்
பயணமென் றச்சமயம் பறையடித் தேவிளம்ப
பயணம் பயணமென்று பயணபேரிகை முழக்க
அறைந்த சத்தமதையே அரசரெல்லாங் கேட்டு
விரைவாகத் தேரேறி வேந்தர் பயணமாக

துரியோதனன் குருச்சேத்திர பூமி
செல்லுதல்.

காலாட் படைகளும் கடுஞ்சூர வீரருடன்
மேலான மன்னவர்கள் விரைவாய்ப் புறப்படவே
ஆனைகள் சங்கமொடு அதிரதர் வெகுசங்கம்
சேனைப் பெருக்கமோ செப்பிடவொண்ணு நெருக்கம்
தேர்களோ வெகுசங்கம் திரண்ட படையதிகம்
பார்த்தோர்க ளெல்லாம் பயங்கரங் கொள்ளும்படி
தேரதையே நடத்தி திருப்பக்குரு சேத்திரமும்

தேர்கள் வரும்விதங்கள் செப்பிட வொண்ணுவேகம்
சகுனமது பார்த்தார் சாஸ்திரத்தை யறிந்தோர்
சகுனபேதக மாக தானழுது மங்கைவர
செக்கான் யெண்ணெய்கொண்டு சேனைக் கெதிர்வரவும்
பக்கத்தி லாந்தையது பகர்ந்திட வோர்சத்தம்
வாழாக் குமரியவள் வளர்த்துமே யக்கினியை
காலாட்கள் யாவருங் கண்டிட யெதிர்வருக
பூனை குறுக்காச்சு புதுப்பானை யெதிராக
சேனைகள் பார்த்திடவும் சேர்ந்துரெட்டைச் சூத்திரர்
எல்லவரும் பார்த்து இராசனிடம் மொழிவார்
நல்லதல்ல சகுனம் நல்லரசே யிச்சமயம்
என்றுமே சோதிடர்கள் எடுத்து மங்குவுரைக்க
நன்ருகக் கேட்டு நாகக் கொடியோனும்
கொலுமண்ட பந்திரும்பி கோமானுஞ் சேனையொடு
பழுதில்லா தங்கிருந்து பட்டணம் பூராவும்
கதவுகளை மூடக் காவலவ னுத்தரவு
இதமாகச் செய்து இப்பட்டணம் பூராவும்
ஆள்வெளியே ருதபடி அடைத்துக் கபாடமதை
பாழ்மனதைப் பூண்டோன் பயணமா யச்சமயம்
அப்போ தடித்தார் அனேகமான வாத்தியமும்
தப்பாது சேனைகளை தானடத்தி யேவிரைவாய்
குருச்சேத் திரம்வந்தார் கோடாகோடி படையும்
நெறுநெறுத்துப் போகுது நிற்கவிட மில்லாது
பாசறையிற் சென்று பதியரச ரச்சமயம்
நேசமொடு மவர்கள் நிகழ்த்திச்சில சங்கதியை
சந்தோஷ மாக தானிருக்கும் தருணம்
அந்தவேளை பார்த்தான் அரவக் கொடியோனும்
பதினெட்டு வக்ரோணி படைகள் நிறைந்துநிற்க

தத்தியரசன் கண்டு சாற்றுவான் வீஷ்மரிடம்
துரியோதனன் கங்காசுதனைக் கேட்பது.

மூதாதையே கேளும் முன்னிற்கும் சேனைதனை
பேதங்கள் நினையா பெரிய சுத்தவீரன்
எத்தனை நாளதனில் இப்படையை மடிப்பான்
சித்த மகிழ்ந்து நீர் செப்புவா யென்றனனே
அந்த மொழிகேட்டு அருமையொடு வீஷ்மர்
சந்தோஷ மாகவுமே சாற்றுவார் மன்னனுக்கு
அப்பா வரசனே அருமைதுரி யோதனனே
இப்படை பூராவும் என்னிட வாளியதால்
ஒருபகலில் தானே உயிர்விடச் செய்திடுவேன்
இருக்குந் துரோணர் இப்படை யத்தனையும்
மூன்று பொழுதிலே முடித்திடுவார் தப்பாது
இன்று கருணனும் இப்படை யாவையும்
ஐந்து பொழுதிலே அழித்திடுவான் திரவான்
ஐயனருள் பூண்ட அஸ்வத்தாமன் கோபமொடு
இப்படை யத்தனையும் எண்ணியோர் நாழிகையில்
தப்பாது மடித்திடுவான் சர்ப்பக்கொடியா வென்றார்
துரியோ தனனும் சொன்னதோர் செய்திகளை
அறியவே கேட்டு ஆனந்தங் கொண்டவனும்
எந்தனைச் செயித்தே இப்பூமி வாங்கிடவும்
வந்தபஞ்ச பாண்டவர் வானுலகு செல்வார்கள்
இவளவு பலசாலி இருக்கின்றா ரென்தரப்பில்
அவர்களை யான்மடித்து அதாகுதஞ் செய்திடுவேன்
என்றுமே வீஷ்மரிடம் இரைந்துபாவி மொழிய
நன்றாகக் கேட்டுமவர் நவிலுவா ரேபதிலும்
அப்பனே நீயும் அறியாப் பிள்ளை யானதினால்
இப்பயேன் துள்ளுகிறாய் இன்னுமர சேகேளும்

ஐவர்கள் பலமதனை அறைகுவே னேமன்ன
ஐவர்களில் விசயன் அரனைவில் லாலடித்தோன்
அவன்காண்டீ பம்பூண்டு அம்புகளைத் தொடுத்து
தவராது விட்டாலும் தன்படை தன்னுடனே
பதினெட்டு வக்ரோணி பாரு சணமதிலே
பதியை யிழந்தும்வர் பார்த்திடுவார் காலனூர்
சேர்த்து விடுவான் சிலைவிசயன் தப்பாது
பார்த்துக்கோ நீயும் பாரரசே சங்கதியை
மற்றநால்வ ரிருக்கும் மகாபலவான் தீரக்
கற்றவித்தை யெல்லாம் காட்டிடுவார் போர்க்களத்தில்
அற்ப மதியுடைய அரசன் றனக்குமே
விற்றிரமை மிகுந்தோர் விளம்பினர் சங்கதியும்
அரச னதைக்கேட்டு அதிக விசனமுடன்
திரவானு மந்நேரம் சென்றுவோர் மண்டபமும்
அங்கதே சாதிபனும் அறையும்மா மன்சகுனி
பங்கமில்லாத் தம்பியர்கள் பக்க வரசர்கேளும்
எல்லவருங் கூடி இசைந்துசெய்து யோசனையை
நல்ல வுலூகனையும் ராச னழைத்தருகில்
தூதுவ னிடத்திலுமே சொல்லிச்சில சங்கதியை
தூதுவரே நீரும் துருசாய்சென் றைவரிடம்
பங்கம்நினை யாதபடி பாரரசன் தர்மரிடம்
சங்கதி தன்னையே சாற்றிப்பதில் கேட்டுவாரும்
என்றுரைத்து மன்னவனும் ஏக விடைகொடுக்க
நன்றாகக் கேட்டு நடந்து வுலூகனும்
சென்றுதர்மர் சபையில் செய்யவா சீர்பாதம்
கண்டு வுலூகனைக் காவலனு மென்னவென
அப்போது தூதுவன் அறைந்தானே சங்கதியும்
தப்பா யிருந்ததுவை தருமரு மேகேட்டு

தம்பிமார் கோபமொடு சபதத்தைத் தீர்ப்பார்கள்
தம்பி துரியனிடம் சாற்றுவா யென்றுமவர்
நாளை யுத்தமென்று நாதனே யன்போடு
காலை யிடத்திலும் கடினம தாய்மொழிவீர்
என்று தர்மர்மொழிந்து ஏக விடைகொடுக்க
நன்றாகக் கேட்டே நடந்து வுலூகனும்
சர்ப்பக் கொடியனிடத்தில் சாற்றிச் சங்கதியும்
விற்றிரமை மன்னருக்கு விளம்புவா னேயரசன்
நாளையுத்த மென்று நல்ல படைகளுக்கிவ்
வேளை மொழிய விடைகொடுத் தேயரசன்
எல்லவருங் கூடி ஏகமா யோசித்து
நல்ல பருதிதனை நாடி யரசர்களும்
எப்ப விடியுமென்றே எண்ணியங்கு மன்னவர்கள்
தப்பனுட படைகள் தானிருந்த தங்கேயும்

பலராமர் தர்மரிடம் சங்கதி மொழிவது.

பலராமர் பிரியமொடு பாண்டவர் சபைவரவே
பலராம ரைக்கண்டு பஞ்சவரும் பணிய
ஆசிமிகச் செப்பியவர் ஆசனமே யமர்ந்து
பேசிச்சில செய்திகளை பிரியமா யைவரிடம்
பலராம ருஞ்சொல்வார் பரிபூரண மனதாய்
பெலமான யுத்தமதை பேசி நீங்கள் முடித்தும்
வந்திட்டீர் மன்னு வளர்குரு சேத்திரமும்
அந்தத் துரியனுடன் அவன்படை பூராவும்
வென்றுமே நீங்கள் வேத னருளாலும்
சென்று முடிசூடி செகமெல்லாம் நீராள்வீர்
நானுமே சென்றே நல்லதீர்த்த மாடிடவும்
வேணுமென்று சபையில் வேந்தனிடம் மொழிந்தான்
பொறுமையே பூஷணமாய் பூண்ட தருமருமே

அருமையுடன் கேட்டு அவரிட மேபுகல்வார்
நல்லயுத்த மதனை நாதனேபா ராதபடி
செல்லுவதுஞ் சரியா தேவனே யிங்கிருந்து
பார்த்திருந்து தாங்கள் பாதகமில் லாமலுமே
நேர்த்தியா யிருவருக்கும் நியாயந் தனைமொழியும்
என்றுமே தர்மர் எடுத்து முரைத்திடவும்
நன்று யதைக்கேட்டு நவிலுவா ரேபதிலும்
தம்பி யிருக்கின்றான் சங்கதி யுரைப்பதற்கு
வம்பன் துரியன் மடிந்தபின்பு மன்னா
பதினெட்டாம் நாளுமே பார்மன்னா யான்வருவேன்
ததிபயண மென்று தம்பியிட முரைத்து
அப்போ புறப்பட்டார் அங்கு விதுரன்வர
தப்பா திருபேரும் தான்சென்றார் யாத்திரையாய்
கங்கா நதிமுதலாய் கண்டிடவே யிருவர்
தங்காது சென்றார் தக்க பலவான்கள்
அப்போது மாயன் அறைவார் சேனாபதிக்கு
தப்பாது நாளையுத்தம் தளத்துக்கெல் லாம்வருவீர்
என்றவரும் மொழிய எல்லாந் தயாராகி
நன்று யருணனையே நாடி யிருந்தார்கள்
கதிரோ னிவர்கள் கவலை தீர்க்கநினைந்து
ததியே ரதமேறி சல்தி பயணமதாய்
நாற்றிசையுந் துதிக்கும் நல்லசோதி யருணன்
கீற்றிசை யாழிதன்னில் கிளம்பினான் விண்ணோக்கி
இருதரப்புப் படைகள் எல்லாந் துதிசெய்து
அருமையாய்ப் போர்தொடுக்க அவர்கள் தயாராக
ஆயனு மச்சமயம் அருமையாய்த் தேரிருந்தே
மாயன்சா ரதியானார் மைத்துனன் பார்த்தனுக்கு
இப்படிக் காகவும் இவரிங் கிருந்திடவும்

செப்புவோம் நாமும் திரிதராட் டிரன்செய்தி
வைசம்பா யணரும் வழுத்தச்சென மேசெயனும்
ஐயனே மொழியுமென அடிபணிந்து கேட்டனனே

திரிதராட்டிரன் வேதவியாசரை
நினைப்பது

அஸ்தினா புரியதனில் அரசன்கண் ணில்லாதான்
கஷ்ட மிகவடைந்து காவல னச்சமயம்
மகன்றனையே யெண்ணி மனது கொதிப்படைந்து
மிகத்துயரங் கொண்டு வேந்த னு மன்னேரம்
தந்தைவி யாசரையே தான் நினைந்து வரவும்
அந்தவேளை மூனிவர் அருமைச் சுதன்முன்வருக
வந்ததொரு சங்கதியை வழுத்தக்கேட் டேயரசன்
சந்தோஷ மாய்வந்து தந்தைபா தம்பணிந்தான்
சுதனை யெடுத்துமவர் சொல்லியே நல்வாக்கும்
இதமாக யெந்தனை நீ இங்கழைத்த வாறுதனை
திரிதராட்டிர மன்னா செப்புவா யென்றிடவும்
அறிய மொழிவான் அரசன்கண் ணில்லாதான்
பாண்டுவின் பிள்ளைகளும் பாதகரென் மைந்தர்களும்
நீண்டகுருச் சேத்திரத்தில் நின்றுபோர் செய்வதற்கு
சென்றிருக் கின்றார்கள் சேனையொடு தப்பாமல்
சென்றவர் யுத்தமதை சேயன்பார்க்க வென்றாலோ
கண்ணிலையே யெனக்கும் காமுனியே யிச்சமயம்
கண்வெளிச் சந்தன்னை கர்த்தனே தா வென்றானே
தவயோகி யச்சமயம் தந்தோமென்று மொழிய
அவனியாளும் வேந்தனுக்கு அருணன் தெரிந்திடவே
கண்டானே மாளிகையும் காவனங்கள் தன்னோடு

அண்டை யிருந்தபேர்க ளவனுக்குத் தோற்றிடவும்
ஆனை யசுவங்களும் அங்குநிற்கும் விருட்சம்
சேனைகளைக் கண்டான் செகத்தையாளு மரசன்
சித்தங் கலங்கிதேகம் நடுங்கி யவன்
மெத்த மயக்கமுடன் வேந்தனுங் கீழ்விழுக
காமுனியு மப்போது காவலனை யெடுத்து
மாமுனியுந் தானே மயக்கமதைத் தீர்த்தும்
மகன்றனைப் பார்த்து வந்தவா றென்னவென
மகனுந் தந்தையிடத்தில் வழுத்துவான் சங்கதியும்
என்றுங் கண்ணில்லாமல் இருந்ததி னாலையா
இன்றுகண் தெரிந்திடவே எல்லாமே யான்பார்க்க
பயமெனக் குண்டாகி பாரு முடல்நடுங்கி
வியப்ப மொடுமயக்கம் வேந்தனே யெந்தனுக்கும்
இந்தப்பெருஞ் சள்ளை எனக்குவேண் டாஞ்சாமி
தந்திடு பழையபடி தந்தையே யென்றனனே
என்றரசன் கேட்க ஈய்ந்துமே மாமுனியும்
நன்றாக வேமொழிவார் நல்லசுதன் றனக்கு
அமர்க் களத்தில்நடக்கும் அருமையான சங்கதியை
தமக்குவந்து மொழிய சஞ்சயனுர் தனக்கு
ஞானக்கண் தருகுவேன் நலமா யவர்க்குநாம்
மானபரா வுனக்கு வழுத்துவார் சங்கதியை
சஞ்சயனை யழைத்து சாற்றுவார் சங்கதியும்
சஞ்சயனே யுமக்கு தந்தோம்ஞா னக்கண்ணை
வரும்பாண முன்மேலும் வடுவுசெய் யாதபடி
கிருபையாகத் தந்தேன் கேளுநீ சஞ்சயனே
குருச்சேத் திரஞ்சென்று கொடுமை யுத்தம்பார்த்து
வருஞ்சேதி பூராவும் வழுத்துவாய் மன்னனுக்கு
என்றுசொல்லி மாமுனிவர் ஏக விடைவாங்கி

நன்ருகச் சென்ருர் நற்கா னகம்நோக்கி
அன்று வரசனும் அருங்குருடா யிருக்க
சென்ருனே போர்க்களத்தில் தேர்ந்ததோர் சஞ்சயனும்

## பஞ்சவர்களுக்கும் துரியோதனுதியர்க்கும் முதல்நாள் யுத்தம்.

இருதரப்புச் சேனைகளும் எல்லாங் குருபூமி
வருகுதே ரதங்களும் வகைவகை யாயங்கு
ஆனையோ சங்கமொடு அதிரதர் வெகுசங்கம்
சேனைப் பெருக்கமோ செப்பிடவொண் ணுநெருக்கம்
வாரிதிபோல் சத்தம் மடமடென பேரிகையை
பேரிடிபோல் முழக்கம் பெருஞ்சேனைக் கூக்குரலும்
எரியீட்டிக் காரர் எத்தனையோ சங்கமொடு
பரிகளோ கோடிக்குமேல் பார்வேந்தர் வெகுகோடி
பின்னமிலா தணியாய்ப் பிரித்து அங்குதயா ராகி
முன்னணியில் நின்ருர்கள் மூனேந்து சேனுபதியும்
அப்போது மாயவரும் அருச்சுன னிடத்திலே
செப்பரிய ரதத்தை சேகரமாய்க் கொண்டுவந்தும்
விசயனை யதிலேற்றி வேந்தன் சந்தோஷமொடு
பிசகாது சென்ருன் பிரியமாய் விண்ணுேக்கி
அந்தரத்தில் செல்ல வங்குநின்று விசயன்
விந்தையொடு பார்த்தான் விளம்பவொண் ணுப்படையை
மதியுங் கலங்கிமன்னன் மயங்கி விழுந்திடவும்
ததியவனை மாயனும் சல்திமார் போடணைத்து
வேணவுப சாரம் விசயனுக் குச்செய்ய
காணவே பார்த்தன் கனைதெளிய வச்சமயம்
விசயன் விழிதிறக்க வேதாந்த கோவலனும்
விசயனைக் கேட்டார் விபரீத மாயுனக்கு
என்ன மயக்கம் இப்படி வந்ததுவை

மன்னு மொழியுமென மாயனுங் கேட்டிடவும்
விசயனு மச்சமயம் வேர்வையெல் லாமொடுங்கி
நிசமாக மாயனுக்கு நிகழ்த்துவான் சங்கதியும்
மண்ணையே வாரியுண்ட மணிவாயா செங்கமலக்
கண்ணனே கேளும் கழறுவே னிச்சமயம்
ஆசாரி மார்களும் அண்ணன் தம்பியரோடு
தேச வரசரையும் தீர்க்கமாய் யாம்படித்து
எல்லாரையும் வதைத்து இந்தப்பதி யாள்வதும்
நல்ல தல்லவென்று நானினைந்தேன் மாயவனே
எல்ல வரைப்போக்கி யாமும் தனியாகி
நல்லதேச மதனை நாமாள்வ தென்னசுகம்
அரவக் கொடியோன் ஆளட்டும் தேசமதை
திரமான யோசனையும் செப்புகிறேன் கேளும்
பழையபடி நாங்களும் பாழுங் காட்டிலேசென்று
நிலையதை யடக்கியே நிஷ்டைகளும் புரிந்து
ஈசன் பதவிசேர எண்ண மிருக்குதென
நேசமொடு விசயன் நிகழ்த்தினு னம்மானை
ஆய னதைக்கேட்டு அந்தவிச யன்றனக்கு
மாயன் மகிழ்வுடனே வழுத்தினர் பகவத்கீதை
ஆதி வரலாறும் அவனிட மேயோதி
சோதியாம் மாயவனும் சுடர்வடிவைக் காட்டியுமே
பின்னு மவனுக்கு பிரியமொடு போதித்தும்
மன்னனது சிந்தையை மாயவனுந் திருப்ப
அர்ச்சுன னுங் கேட்டு ஆனந்த மேகொண்டு
கெர்ச்சனை செய்தான் கிரீடியு மச்சமயம்
அப்போ தருமருமே ஆயனிடம் வந்து
தப்பாது வீஷ்மரிடம் தான் சென்று யாவருமே
விடையது கேட்போம் வேந்தனே யுத்தஞ்செய்ய

தடையில்லாது மொழிந்தார் தர்மரும் கண்ணனிடம்
அப்படியே நல்லதென்று ஆயனுந் தர்மரிடம்
இப்பவே செல்வோமென்று எழுந்துமே வீஷ்மரிடம்

பஞ்சவருங் கிருஷ்ணனும் வீஷ்மரிடங்
கேட்பது

தங்காது வந்துமவர் சல்தியா யங்கிருக்கும்
கங்கா சுதன்றனையும் காவலர்கள் பணிய
அப்போது மூதாதை யவரையா சீர்வதித்து
இப்போது வந்தவகை என்னசெய்தி யோதுமென்றார்
என்று வீஷ்மர்கேட்க எம்பெருமா னச்சமயம்
இன்றுயுத்தஞ் செய்வதற்கு ஏகிவந்தோ மிங்கேயும்
எல்லாந் தெரிந்தவரே இங்குவந்து நிற்பதுவும்
நல்லா யிருக்கிறதா நல்லரசே தங்களுக்கும்
பஞ்சவ ரைவரும் பாட்டனென்று நினைந்து
சஞ்சல மடைகிறார் தம்மோடு போர்புரிய
உந்தனை மடிப்பதற்கு உதவா தவர்களால்
எந்த விதமென்று இதமாகக் கேட்டிடவும்
சொந்த வீஷ்மாசாரி சொல்லுவா ரேபதிலும்
இந்த யிருதரப்பும் எனக்குச் சரிமாயா
அவனுடன் சேர்ந்தாயென ஐயனே கேட்பாயோ
தவறில்லா மல்யானும் சாற்றுவேன் சங்கதியை
காசிராசன் குமரி கலியாணமென் றேலவர
காசிதேசம் சென்று கன்னிகை மூவரையும்
சுயவரத்தில் யானும் துணிந்துபெண்ணைக் கவர்ந்து
பயமின்றிக் கொண்டுவந்து பாரமாய்க் கலியாணம்
செய்தேனே தம்பியர்க்கு தீர்க்கமாய் ரெண்டுபெண்ணை
மையச் சிலசேதி பகர்ந்தாளே யம்பையும்
சாளுவராசன் மேல் தான்கொண்டேன் மோகமென

சாளுவ ராசனிடம் தள்ளிவிட்டே னவளை
திரும்பியே வந்துமவள் செய்வாய் கலியாணமென
விரும்பிடா தவளையே விரட்டினேன் பங்கமதாய்
பரசுராம ரிடத்தில் பகரவே சங்கதியும்
விரைவாகப் போர்தொடுத்து வீறிட்டு வோடினரே
அப்பாலந்த மங்கை அம்மையைநோக் கித்தவமும்
தப்பா திருந்துமவள் தரணிபதி பாஞ்சாலன்
பத்தினி கர்ப்பமதில் பாலன் சிகண்டிபிறந்து
இத்ததியே யவனும் என்பேரன் தர்மருக்கு
தடை யில்லாதபடியே தான்வந் திவர்களிடம்
படைத்துணை யாய்ச்சேர்ந்தான் பகவானே யானதினல்
யானும் வரவில்லை ஆயர்குடி காத்தோனே
தானு மொழிந்ததற்கு சங்கதி யின்னமுங்கேள்
அந்தச் சிகண்டி அரும்போரில் பத்தாம்நாள்
எந்தன்மே லுங்கணையை ஏகுவான் மாயவனே
அச்சமயந் தன்னி லருச்சுனன் கணைதொடுப்பான்
நிச்சயமாய்ப் பட்டு நீலவர்ண யான்மயங்கி
தெர்ப்பா சயனம் மேலே தேவனேயானிருந்து
விற்போர்க ளெல்லாம் விழியினுற் பார்த்திடுவேன்
என்றுகங்கா சுதனும் இயம்ப அவர்களுமே
நன்ருகக் கேட்டு நாதனும் பூரித்தே
விந்தையொடு பணிந்து விடைதனை வாங்கியவர்
சொந்தக் குருக்கள் துரோணரி டம்வந்தே
பணிந்து மவர்கள் பகரச் சிலசேதி
பணிந்தவர் தமக்கும் பகர்ந்தாரே யுள்ளதுவை
ஆயனு மைவருடன் அவர்கள் விடைவாங்கி
நேயமுடன் வந்தார்கள் நிமிஷ மிருப்பிடமும்

## கிருஷ்ணன்சேனபதியை யுத்தமாரம்பிக்கச் செய்வது

சேனு பதிதனக்கும் செப்புவார் மாயவனும்
சேனு பதியேநீ சேனேயோ டிச்சமயம்
சென்றுமே நீயுத்தம் செய்குவா யென்றிடவும்
நன்றெனவே கேட்டு நகட்டினன் வாத்தியத்தை
படைகளுட மூழக்கம் பார்சிந்து வலேபோல
தடையில்லாது வந்து தானெதிர்த்தான் பாலகனும்
அரவக் கொடியோனும் அறையச் சேனுபதிக்கு
திரமான வார்த்தைகேட்டு செயபே ரிகையடித்து
வந்து வளைந்தாரே வாரிதிபோற் சேனேயொடு
வந்தவரைக் கண்டான் மன்னன் சுவேதனனும்
கண்கள் சிவப்பதொடு கடுங்கோப மூண்டாகி
விண்வழியே புகையும் மேவிடப் பாலகனும்
பாகனேரதம் நடத்த பகர்ந்திட வேயவனும்
வேகமாய் நடத்தினனே மேன்மையான ரதத்தை
அரன்றனேயே நினைந்து அச்சிறுவன் வில்லெடுத்து
திரமாய் வளைத்தான் செகமெல்லாம் தத்தளிக்க
ஓசையைக் காட்டியவன் ஒருநூறு கணைதொடுத்து
ஆசையாய் விட்டானே அந்தவீஷ்மர் மேலே
வருகுதே கணையெங்கும் மண்ணுவிண்ணுங் கொள்ளாமல்
வருங்கணையைக் கண்டார் மகாபலவான் வீஷ்மர்
தானுமே வில்வளைத்து தக்க கணைபூட்டி
வேணுமென்று விடுத்தார் வெகுகோடி பாணம்வரை
அதிவேக மாகவுமே அவன்கணை யிங்குவந்து
ததியே வீஷ்மர்தேரை சல்லி சல்லியாயுடைக்க
வீஷ்மர் மயங்கியுமே வேருெரு ரதமேறி
தாஷ்டிக மாய்வந்து சங்கத் தொனிமுழக்க

இருவர்கள் சண்டையும் இப்படியாய் நடக்க
இருதரப்புச் சேனைகளும் ஏகமாய்க் கணைதொடுத்து
ஆனையொடு வானை அதிரச்சண்டை செய்வதொடு
சேனையொடு சேனை செப்பவொண்ணு யுத்தமது
அரவான் கடோர்க்கயனும் அபிமன்ன னுஞ்சேர்ந்து
அரவக்கொடி யோன்படையை அடித்து நொறுக்குகை
சல்லியனு மப்போது தன்தனுசை வளைத்தே (யில்
சொல்லிமுடி யாப்பகழி தூண்டியே விட்டிடவும்
வந்தகணை யெல்லாம் வாட்டிச் சிறுவர்கள்
அந்தவேளை யவர்கள் அனேகம்பேரை மாய்த்திடவும்
வஞ்சகன் சேனைகளும் வடுப்படவே யவர்கள்
சஞ்சலத்தைக் கொண்டு தானவர்க ளோடிடவும்
சல்லிய னோடிவந்து சந்தித்து நேராக
சொல்லிமுடியாக் கணையை தொடுத்துவிட்டான் பாதக
உத்தர குமாரன்ரதம் உடைந்து மவனுடைய (னும்
மெத்தப் பலமான வில்லு மொடிந்திடவே
பாவிசல்லிய னந்த பாலகன் மேற்கணையை
மேவியே விட்டான் வீரமொடு சண்டாளன்
வடவா முகாக்கினிபோல் வாரி யிரைத்துவந்து
திடபலவா னுத்திரனை சிரசை யறுத்ததும்
சென்றுதுவே வந்தகணை சிறுவ னுயிர்போக்கி
அன்றே யவனும் அரன்பதவிக் காளானான்
அரவக்கொடி யன்படைகள் ஆனந்த மிகவடைந்து
திரமாகப் பேசியே சிரித்தார்கள் சேனையெல்லாம்
கண்டான் சுவேதனனும் கண்களிற் பொறிபறக்க
கண்டவர்கள் கலங்க காவலனும் வந்தெதிர்த்து
சல்லியனை மறித்தே தனுசிற் கணைபூட்டி
சொல்லிவாய் மூடுமுன்னே தூண்டிவிட் டான்பகழி

அம்பு வருவதையும் அதைப்பார்த்துச் சல்லியனும்
வம்புமே வந்ததென வாரிப்பொழிந் தான்கணையை
அந்தச் சுவேதனனும் அதிவேக மாகவுமே
விந்தையான கணையை வில்லில் பூட்டிவிடுத்தான்
வந்த கணையெல்லாம் வாட்டியே ரெண்டாக்கி
சிந்தைநோகச் சல்லியனும் தேரை யுடைத்ததுவே
சாரதியும் மடிந்து சல்லியன் துளைபட்டே
பாரதிலே யோடினுன் பயங்கரத் தைப்பூண்டு
கங்கா சுதனுங் கண்டு மவன்றனையே
சிங்கம் போற்சீறி சிறுவனுடன் வந்தெதிர்க்க
கண்டு சுவேதனனும் கடுங்கோப முண்டாகி
இன்று மிவனையான் எமலோகஞ் சேர்ப்பேனென்று
ஈசனை யெண்ணிப்பாலன் எட்டுக் கணைதொடுத்து
வேசங்கொண்டு விடுக்க வீஷமர் தேருமுடைந்து
தேர்ப்பா கனைமடித்து தேவபரி யிறந்தும்
வேர்த்தே கணைகள் வீஷ்மரையும் பாய்ந்திடவே
வேகமுதா யோடி வேறொரு ரதமேறி
சோகமதா யிருந்தார் துடியாக வந்தமன்னன்
அரவக் கொடியன்கண்டு அவர்க்குத் துணையாக
திரமான மன்னரையும் சேர்த்துமே வந்தெதிர்த்தான்
எட்டுப்பேர் வந்து எதிர்க்கச் சிறுவனுமே
சட்டெனக் கணைதொடுத்து சல்தியாக வேவிடுக்க
வந்தவர்க ளெல்லாம் வானுலகு சேர்ந்திடவும்
அந்தச் சுவேதனனும் அப்பாற் கணைதொடுத்து
சேனைகள்மே லேவிடவும் சின்னபின்ன மாக
ஆனை வெகுகோடி அதிரதரும் மடிந்தார்
பாளைய மெல்லாம் பார்த்தா லலங்கோலம்
வேளையே யோடுகிறார் வேந்தன்படை தட்டுக்கெட்டு

கண்டுமே சேனுபதி கனத்த படையிடத்தில்
அண்டையிலே சென்று அனைவோரை யும்நிறுத்தி
வீஷ்மர் படைகளுக்கு விளம்பித் தைரியத்தை
தாஷ்டீக மாகவுமே தான்தொடுத்தா ரம்புதனை
சுவேதனனு மச்சமயம் துடியாய்க் கணைபூட்டி
விவேகனும் தூண்டிவிட விண்ணிற் கிளம்பியது
வந்த படைகளெல்லாம் வானுளைப் போக்கியுமே
சந்தோஷமாய்ப் பாலனிடம் தான்வந்து சேர்ந்திடவும்
தொடுத்தான் கணையதனை சொல்லக்கணக் கில்லாது
விடுத்தான் வீஷ்மர்மேலே வெகுகோப மாகவுமே
அம்புவதி வேகமாய் அவரிட மேயோடி
வம்புசெய்தே தேரை வாக்கியே ரெண்டாக
அதிவேக மாய்வந்து அங்குவீஷ்மர் தனையே
ததியே துளைபோட்டது சரீரங்கள் பூராவும்
அவரும் மயங்கியங்கே அடுத்த ரதமேறி
தவறுசெய்ய வந்தோர் தான்சென்று ரப்பாலே
சேனைகளைப் பார்த்து சிறுவனு மந்நேரம்
சோனை மழைபோலே சொரிந்தானே யம்புகளும்
படைகள் மேற்சாடி பாரச் சனமடிய
தடைசெய்யக் கூடாமல் தானெடுத் தாரோட்டம்
தேவர்களுங் கண்டு சிறுவனையே புகழ்ந்தும்
தேவரொரு வர்க்கொருவர் செப்பி மொழிவார்கள்
சுவேதனன் கைவில்லு சுவாமியவர் தந்ததது
விவேக முடையவனும் வெகுசனத் தைமடித்தான்
இந்தவில் லிருந்தாலே இப்படை யத்தனையும்
சொந்தமா யொருவன் தொலைத்திடுவான் தப்பாது
வில்லையிவன் வைத்து வேறுவா யுதம்பூண்டு
தொல்லை விளைத்தாலே துஷ்டன் மடிந்திடுவான்

என்றுமே தேவர்கள் இசைந்துமே பேசினதை
நன்ருகக் கேட்டாரே நல்லகங் காசுதனும்
அப்போ ரதம்விரட்டி அந்தச் சிறுவனிடம்
செப்புகிரு ரவரும் தெளிந்த தவயோகி
வில்லா யுதங்கற்ருய் வேந்தனே இதைத்தவறி
மல்யுத்தஞ் செய்வதற்கு மடையா தெரியாதோ
என்றுகங் காசுதனும் எடுத்துரைக் கச்சிறுவன்
நன்ருக வேகேட்டு நாகத்தைப் போற்சீறி
வாளை யெடுத்துமவன் வந்தானே கீழிறங்கி
வேளை யந்தப்பாவி வீஷ்மர் கணைதொடுத்து
அந்தச் சுவேதனனை அறுத்தா னொருகரத்தை
விந்தையொடு பாலகனும் வேருெரு கையாலே
தக்க கெதைபிடித்து சாடியே சேனைகளை
அக்ரோணி ரெண்டுவரை அழித்தான் நிமிஷமதில்
பாவியந்த வீஷ்மர் பத்துக்கணை தூண்டிவிட
மேவிச்சிறுவன் சிரத்தை வெட்டி யெறிந்ததுவே
பருதியும் பாலகனை பார்த்து விசனமுடன்
தருகாமலு மருணன் சஞ்சலமாய்த் தேரோட்டி
மேல்சிந்திற்ப் போயடைய வேந்தர்க ளதுபார்த்து
கால்படைச் சேனையொடு கண்டார்கள் பாசறையும்
அவரவர் பாசறையில் அரசர்கள் போய்ச்சேர்ந்து
தவராது சேனைகளை தான்பார்த்தார்கள் கணக்கு
அரவக் கொடியனுக்கு அதம் நாலுவக்ரோணி
திரமாய்க் கணக்கறிந்து சிந்தைநொந் தேயிருந்தான்
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமரும்
அருமையா கப்படையை அவர்பார்த்துமே கணக்கு
வஞ்சகத்தால் மடிந்த மன்னன் சுவேதனனை
தஞ்சமென்ற விராடன் தானினைந்து மயங்க

அவனை யருகழைத்து அருமையான நீதிகளை
தவராம லேமொழிந்து தான்தேற்றி னாவனை
இப்படிக் காகவே இவரிருக்க விங்கேயும்
தப்பன் துரியோதனன் தானிருக்க வங்கேயும்
திரிதராட் டிரானிடத்தில் சென்றுமே சஞ்சயனும்
அறிந்ததை யெல்லாம் அரசனுக் குரைத்திடவும்
இப்படி யங்கிருக்க இருதரப்புச் சேனைகளும்
எப்ப விடியுமென்று எண்ணி யிருந்தார்கள்

இரண்டாம்நாள் யுத்தம்.

அவர்கள் படுந்துயரை அறிந்துமே வெய்யோனும்
தவராது வந்துதித்தான் சல்தியாய்க் கீழ்திசையில்
கிரணங் களைக்காட்டி கெம்பீரமாய்த் தேர்நடத்தி
தீரமொடு வந்தானே தேவர் பணிநாதன்
காவலர்கள் கண்டுமே காலைக் கடன்முடிக்க
கோவலனு மச்சமயம் கோடிநமஸ் காரஞ்செய்ய
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமருமே
அருமையுடன் மொழிவார் ஆய னிடந்தனிலே
மண்ணையே வாரியுண்ட மணிவாயா செங்கமலக்
கண்ணனே கேளும் கழறுகிற செய்தியதை
சேனுபதி யில்லாமல் தியங்குது சேனையெல்லாம்
சேனுபதி யாரையும் செய்குவா யென்றனரே
அந்த மொழிதனையே ஆயனன் பாய்க்கேட்டு
சந்தோஷ மாய்ச்செய்ய தானினைந்து சிந்தையிலும்
அதிவீர சூரனை அரசன் துஷ்டத் தாய்மனுக்கு
ததியே சேனுபதியாய் தரித்தாரே பட்டமதை
இவனைச் சேனுபதியாய் இன்றுமுதல் நியமித்தோம்
தவராது நடத்திடவே சாற்றியே சேனைகட்கும்
சேனு பதியே நீயும் சென்று படையுடனே

வீணா யிருந்திடா து மேவிச்செய் வாய்போரை
மாயவருஞ் செப்ப மனம்போல் நடப்பேனென்று
ஆயன் மொழிப்படியே அறையச்செய்தான் வாத்தியத்தை
எல்லவருஞ் சேர்ந்து ஏறி ரதமதனில்
சல்லாப மாகவே தான்வந்தார் யுத்தகளம்
யூகயூக மாய்வகுத்து யோசனையிலே சிறந்தார்
யூகத்துக்கு மூன்னின்ருர் ஒருகோடி வீரர்கள்
அரவக் கொடியனும் அவன்படை பூராவும்
திரமாய் முரசடித்து சேனையை யணிவகுத்தும்
தயாராய்ப் படையுடனே சண்டைக்கு இச்சமயம்
தயாரா யிருக்கேனென்று தானடித்தான் வாத்தியத்தை
துஷ்டத்துய்மன் வில்வளைத்து துடியாய்க் கணையேவ
கஷ்டமிகப் பட்டுச்சிலர் காலன் பதிசேர
வீஷ்மரு மச்சமயம் வேகமாய்க் கணைதொடுத்து
தாஷ்டீக மாய்விடுத்தார் சாங்கோப சாங்கமதாய்
சேனைக ளெல்லாம் சின்னுபின்ன மாயோட
ஆனைகள் வெகுமடிய அதிவீர ருஞ்சாக
நல்லயுத்தஞ் செய்தார்கள் நாழிகை பத்துவரை
சொல்லாம லோடுதையோ துஷ்டத்துய் மன்படைகள்
பாண்டுமன்ன னீன்றெடுத்த பஞ்சவரிலே விசயன்
நீண்டகாண் டீபமொடு நேராகப் போய்மறித்து
படைகளே நீங்கள் பயமில் லாதுவாரும்
தடைக ளொன்றில்லாது சாடுவேன் யெதிரிகளை
என்று விசயன் இயம்பித் தைரியத்தை
நன்ருகக் காண்டீபம் நரனுங்கை யிற்பிடித்து
வல்லநல் வில்லதனை வளைத்துவதி வேகமொடு
சல்லாப மாய்த்தொடுத்தான் தக்கபல மானகணை
அந்தக் கணைவரவே அறிந்துமே வேதாந்தி

சிந்தை மிகமகிழ்ந்து சிலையை வளைத்துமவர்
தொடுத்துக் கணைதனக்கும் சொல்லி யுபதேசம்
விடுத்தாரே கோபமொடு விசயன் கணைமேலே
இருவருட வாயுதமும் ஏகியே விண்ணுலகில்
நெருநெருத்துப் போகுது நிர்த்தூளி யானசண்டை
இப்படிக் காகவே ஏகநே ரம்வரையில்
செப்பவொண் ணுயுத்தம் செய்தா ரபாரமதாய்
கலிங்கதேச ராசனை கனகோப மாய்பீமன்
பெலிகொடுக்க வேநினைந்து பிரியமுட னேடிவந்தே
வில்லை வளைத்தும் வெகுகணை யைப்பூட்டி
சொல்லி யுபதேசம் தூண்டிவிட் டான்பகழி
கலிங்கதே சத்தானைக் கண்ணுய்த் துளைத்திடவும்
நலியாம லோடினன் நாழிகை யோசனைதான்
லக்கண குமாரன் நல்ல வபிமனெடு
அக்கணத்தில் யுத்தம் ஆரம்பஞ் செய்தானே
இருவர்கள் சண்டைகள் ஏகநேரம் வரையில்
நெருநெருத்துப் போகுதே நிட்டூர மானகணை
துரியோ தனனும் துணைய னுப்ப மைந்தனுக்கு
அறியச் சண்டைசெய்தார் அனேக நேரம்வரையில்
துரோணரு மோடிவந்து துஷ்டத்தூய்ம னுடனே
விரோதங்கள் செய்தார் விபரீத மாயவர்கள்
காயமில் லாதவர்கள் கணைகளைப் பூட்டிவிட
காயங்கள் சேனையடைந்து கண்டபடி யோடிடவே
வஞ்சகன்சே னைசிலது வம்பாய் மடிந்திடவும்
சஞ்சல மிகவடைந்து தனுவேந்த னுந்துரியன்
துரோணருக் குதவியாய் சூரர்க ளையழைத்து
விரோதம் விளைக்க வேகமாய்ச் செல்லெனவும்
துஷ்டத்தூய் மன்மேலே தொடுத்தார் கணையதனை

துஷ்டத்தூய் மன்கண்டு சோம்பலில் லாதபடி
வாரியிரைத் தான்கணையை மழைமாரி யைப்போலே
மீறியது வந்தே வேதியர் கணையதனை
அவதி மிகப்படுத்த அந்தத் துஷ்டத்தூய்மனும்
அவதிப் படுவதையே அறிந்து வீமசேனன்
சொல்லவொண் ணுக்கோபம் துடியன் மிகப்பூண்டு
சல்தியாய் வந்தெதிர்த்தான் தன்படை தன்னுடனே
துரோணர் தன்மேலே தூண்டிவிட் டான்பகழி
துரோணரும் விட்டார் சொல்லவொண் ணுக்கணையை
இருவர்கள் யுத்தமும் இரண்டு சாமநேரம்
அருமையாய்ச் செய்தார்கள் அதைக்கண்டு லக்கணனும்
ரதத்தை விரட்டிவந்து நல்ல கணைவிடுக்க
இதமாகப் பார்த்து இருந்தவா ளபிமனும்
வில்லை வளைத்தே வெகுசரத் தைப்பூட்டி
தொல்லை விளைத்திடவே சொல்லாம லக்கணனும்
ஓட்டம் பிடித்தான் ஓடுவதை யறிந்த
வாட்டமுடன் துரியன் மகாகோபந் தன்னுடனே
விந்தையாய் ரதம்விரட்டி வேகமுட னேயவனும்
மைந்தன் வாளபியனை மாபாவி யும்வளைந்து
வல்லநல் வில்லதனை வளைத்துமே பாதகனும்
தொல்லைவிளைக் குங்கணையைத் தூண்டியே விட்டனனே
அந்தமுள்ள பாலன் அதிகக் கணைவிடுத்து
வந்த பகழியெல்லாம் வாட்டி நிற்குஞ்சமயம்
இந்தச் செய்தியதனை எழில்விச யன்பார்த்தே
அந்தவேளை யங்குவந்து அதிகக் கோபமுடனே
அரவக் கொடியனையும் ஆசாரி யைவளைத்து
திரமான கணையதனை தீட்டினு னவர்கள்மேல்
அவர்களும் விட்டார்கள் அகோர மானகணையும்

தவராய் வருவதையே தனஞ்செய னும்பார்த்து
விந்தையான கணையை விட்டுவதை யறுத்தே
அந்தவேளை யேவினன் ஆயிரம் பகழிவரை
வந்தகணை வேகமொடு வம்பாயவ ரைத்துளைத்து
சிந்தையும் நொந்திடவே தேகமெல்லாம் வுதிரம்
அவர்க ளடிபட்டு அதிக விசனமுடன்
தவருக வோடினர் தனஞ்செய னைவிடுத்தே
அப்போ விசயனுமே ஆனைசேனை யின்மேலே
தப்பாது விட்டான் சல்தியாய் நூறுகணை
வந்துமே வேகமொடு வம்பாய்ப் படையதனை
நொந்து சேனைசிலது நொடியில் மடிந்திடவும்
இப்படி யாகவங்கு இருக்குஞ் சமயமதில்
அப்போ கதிரோனும் அறிந்துமே சங்கதியை
திருத்தமொடு வான்பரியை தீட்டிச் சவுக்கதினல்
வருத்தமாய் சென்ருன்மேல் வாரிதிக் குள்ளேதான்
இருதரப்பு மன்னர்களும் ஈசன்சென்ற தறிந்து
வருதிகள் வாங்கியே வந்தார்கள் பாசறையும்
அந்தமுள்ள சஞ்சயனும் அங்கு நகர்சென்று
அந்தக னிடத்தினிலே அறைந்தானே சங்கதியும்
விதிமுறைகள் முடித்தே வேந்தர் யிருதரப்பும்
கதிரோன் வரவைக் கவலையுடன் பார்த்திருந்தார்

மூன்ரும்நாள் யுத்தம்.

நாற்றிசையுந் துதிக்கும் நல்ல சோதியருணன்
கீற்றிசை யாழிதனில் கிளம்பினன் விண்ணேக்கி
காலைக் கடன்முடித்தும் காவலர்க ளச்சமயம்
வேளைபயண மென்று விளம்பச் சேனபதிக்கு
வாரிதிபோற் சத்தம் வாத்தியங்க ளடிக்கவே
பேரிடி போலோசை பேரியடங் காமுழக்கம்

தேர்களோ சங்கமொடு செப்பிடவொண் ணுப்படையும்
பார்தனிலே நிற்கப் பார்த்துமே தேவரெல்லாம்
இந்தயுத்தம் போல இத்தனை நாள்வரையில்
வந்ததில்லை யென்று வானவர்கள் பேசியே
விண்ணினிட மாயிருந்து வேடிக்கை கள்பார்க்க
கண்ணனுந் தேரேறி காண்டீப னையேற்றி
யுத்த களந்தனிலே உத்தமர்க ளச்சமயம்
மெத்தச் சிறப்பாய் வேந்தன் துரி யோதனனும்
படைகளைச் சேர்த்து பார்வேந் தனுமங்கு
தடையில்லா வீஷ்மரும் சைனியங்க ளத்தனையும்
கருட யூகமாக கட்டி யங்குநிறுத்த
கருடயூக மதனை கண்டுதுஷ்டத் தூய்மனும்
விற்றிறமை யரசருக்கு வேண்டிய மதிபுகட்டி
அர்த்தசந் திரயூகமாய் அவனுமே செய்துவங்கு
முன்னணியில் நின்று முனைந்துவில் லைவளைத்தே
மன்னன்வெகு கோபமொடு வத்தங்கு நிற்கவுமே
அர்ச்சுனன் கடோர்க்கயன் அதிகப் பலபீமன்
விற்றிரங் காட்டிடவே வேந்தர்க ளும்வந்து
ஆளுக் கொருதிசையும் அவர்கள்போய் வேகமொடு
மேலுலகோர் மதிக்க வில்லதனை யேவளைத்து
தொடுத்துக் கணையதனைச் சொல்லி யுபதேசம்
விடுத்தார்கள் சேனைமேல் வேந்தர்கள்தப்பாது
அம்புவரு விதமோ அக்கினிக் கொழுந்ததைப்போல்
வம்புகள் செய்யுதே வந்தவரைத் தப்பாது
தேர்க ளுடைந்திடவும் தேவ பரிசாக
தேர்வேந் தரும்மடிய சேனை வெகுவுருள
வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்தோன் படையெல்லாம்
பஞ்சாய்ப் பறக்குது பாணம்வரும் வேகமதால்

89

வேந்தன் துரியனுமே வீஷ்மரிட மோடிவந்து
சாந்த குணமுடனே சங்கதியும் புகல்வான்
தவயோகி வேடமதை தக்கதெனப் பூண்டதொரு
சிவயோகி யேகேளும் செப்புகின்ற வாக்கியத்தை
ஐயா பெரியவரே அருமை மிகத்தெரிந்த
மெய்யனே யிங்கிருந்து விபரீதம் பார்க்கிறீர்
ஐவர்மேற் கிருபைவைத்து அரும்போர் தொடுக்காமல்
மெய்யா யிருக்கிறீர் வேந்தே யெனக்காரும்
என்மேல் தயவுவைத்து இப்படையை வெல்லுமென
மன்ன னுரைத்தே யவர்பாதந் தான் வணங்க
கங்கா சுதனும் கண்டு வரசன்றனை
சங்கையில் லாதபடி சாற்றுவார் யாதெனிலோ
மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாளும் புண்ணியனே கேளாய்
முப்பத்து முக்கோடி முனிவர்கள் தன்னுடனே
செப்பவொண்ணு ருத்திரனும் சேர்ந்துயெதிர்த்தாலும்
விசயன் முன்னேவந்து வேந்தனே போர்புரிந்தால்
விசயன் பலவான் வெகுபேரையும் மடிப்பான்
நானுங் கிழவன்மன்னு நரனோ டெதிர்த்திடவும்
வேணுமென்று சென்றாலே விரட்டிடுவான் தப்பாமல்
அந்தநாளி லுனக்கு அறைந்திருக்க யானும்
இந்த வினைதேடி என்னைமடிக்க நினைந்தாய்
எல்லோரும் மாண்டிடவே எழுதினேன் செயலாக்கும்
நல்லதுதா னென்றே நாதனுங் கோபமுடன்
அர்ச்சுனன் றன்முன்னே அதிவேக மாய்வந்து
விற்றிரத்தைக் காட்ட விரைவாய்ச் சிலையெடுத்து
வல்லநல் வில்லதனை வளைத்துத் துடியாக
தொல்லை விளக்கவே தொடுத்து விடக்கணையும்

மாயன்வெகு கோபமொடு வந்துமே தேர்நடத்தி
ஆய னருச்சுனனை அந்தவீஷ்மர் முன்னே
கொண்டுமே வந்து கோபால னங்குநிற்க
கண்டு விசயனுமே கனகோப முண்டாகி
தன்சேனை யத்தனைக்கும் தைரியத்தை மொழிந்து
கண்கள் புகைகிளம்ப காந்தாள முங்கொண்டு
தாதையே தங்களுக்கு தர்மமில்லை யென்றுரைத்தே
தாதை விசயனிடம் தானொரு கணையேவ
விசய னதைக்கண்டு வேகமாய்ச் சிலைவளைத்து
விசன மில்லாதபடி வேந்தன் கணைதொடுத்தே
மந்திர முச்சரித்து வாங்கியே காதளவும்
தந்திரமா யேவினுன் தானொரு நூறுகணை
வில்லினிட மாயிருந்தே விடுபட வக்கணையும்
சொல்லி முடியாது சுடராய் வரும்வேகம்
கங்கா சுதன்கணையைக் கண்டித்து ரெண்டாக
தங்காமல் வந்தது தன்யெசமா னிடத்தில்
இருவர் விடும்பாணம் எண்ணலாஞ் சங்கம்வரை
கெருவங்கொண் டேயவர்கள் கிரமமில்லா யுத்தமதை
செய்தே யிருவரும் சிலைவிசயன் சலித்தே
பையவே கீழ்வைத்தான் பாரக்காண் டீபமதை
கங்காசுத னச்சமயம் கணக்குக ளில்லாமல்
சங்கோப சங்கமதாய்த் தான்பொழிந் தான்கணையும்
விசயனுல் முடியாது வேந்தன் ரதத்திற்சாய
விசய னிருப்பதையே வேதாந்தனு மறிந்து
அர்ச்சுனன் றனக்குமே ஆயனு மேபுகல்வார்
அர்ச்சுனு வென்ன நீ அம்பு தொடுக்காது
தாதையென்று நீயும் தயவதை யெண்ணுகிருய்
பேதை மதிபூண்டால் பெரியபடை யத்தனையும்

இப்படி யிருந்தால்நீ எப்படி வெல்லுவது
செப்படா வென்றுமவர் சீக்கிரம் லகானதனை
விட்டெறிந் தச்சமயம் வேதன்சக்கி ராயுதத்தை
சட்டெனவே கையெடுத்து சாமிரதம் விட்டிறங்கி
கோபமிகப் பூண்டு கோபால னச்சமயம்
பாவம் நினையாது பாரளந்தோன் வீஷ்மரிடம்
ஆயுத மதைவீசி ஐயனுந் துள்ளியே
பாயும் புலிபோல பார்த்தவர்கள் மயங்க
அதிவேக மாகவுமே ஆண்டவ னோடிவா
ததியில் வீஷ்மர்கண்டு சட்டெனக் கீழிறங்கி
ஆயுதங்க ளெல்லாம் அப்பா லெறிந்துவிட்டு
பாயும்புலிபோல் வரும் பகவானைத் தான்தொழுது
என்னையே யிச்சமயம் எம்பெருமா ளேநீரும்
பின்னம்நினை யாதபடி பிரியமாய் மடித்திடுவாய்
செத்தாலும் மோக்ஷம் சீக்கிர மடைவேனென
மெத்தவே தோத்திரமே விளம்பியே வீஷ்மரும்
பணிந்துமே நின்றார் பார்த்த னிதையறிந்தே
அணிகளையே விலக்கி ஆயனிட மோடிவந்து
வேண்டியதை மொழிந்து வேகமொடு தேரேறி
தாண்டியே வந்தான் தன்படைக் குள்ளாக
வில்லை வளைத்தே வெகுசரத்தைத் தொடுத்தும்
தொல்லை விளைத்தான் துரியோ தனன்படையை
அப்போ கதிரோன் அடைந்தானே மேல்கடலும்
செப்பவொண் ணச்சேனை சென்றார்கள் பாசறையும்
மாலைக் கடன்முடித்து மகாபடை யத்தனையும்
வேளை பருதிதனை வேந்தர்கள் பார்த்திருந்தார்
அப்போது சஞ்சயனும் அஸ்தினா புரிசென்று
செப்பினா னரசனுக்குச் செய்திகள் பூராவும்

கண்ணில்லான் கேட்டு கவலையதில் மூழ்கி
மன்ன னிருந்தான் மனது கலங்கியங்கே

நான்காம்நாள் யுத்தம்

கதிரோ னிவர்கள் கவலை தனையறிந்தே
ததியே பயணமதாய் தானுதித்தான் கீழ்சிந்தில்
காலைக் கடன்முடிக்க காவலர்க ளெல்லோரும்
வேளை பயணமென்று விளம்பச் சேனுபதிக்கும்
அப்படியே நல்லதென்று அதிவீர சூரரெல்லாம்
தப்புநினை யாதபடி தான்வந்தா ரைவருடன்
அந்தமுள்ள துரியன் அவன்படை தன்னுடனே
சந்தோஷ மாய்வந்தான் தக்கபோர் செய்வதற்கு
வந்துகுருச் சேத்திரமே வாரிதிபோ லங்கேயும்
விந்தையான யூகமாய் வேந்தர்களும் வகுத்து
சல்லியனும் வேகமொடு தன்படை முன்னின்று
வில்லில் தொடுத்தே விடுத்தான் கணையதனை
பஞ்சவர் சேனுபதி பார்த்து வருங்கணையை
சஞ்சலமில் லாதபடி தன்தனு சைவளைத்து
தொடுத்துக் கணையதனைச் சொல்லி யுபதேசம்
விடுத்தானே யச்சமயம் விண்ணதி லேகிளம்பி
சொல்லிவாய் மூடுமுன்னே துஷ்டத்தூய் மன்பகழி
சல்லியன்விட்ட கணையைத் தாக்கினது ரெண்டாக
துண்டாகப் போய்விடவே தோசிகணை யச்சமயம்
கண்டானே சல்லியனும் கணையும் வீணனதையே
பிர்மாஸ் திரந்தொடுத்து பிரியமுடன் மந்திரித்தே
வில்நாணி யையிழுத்து விட்டான் வழிகாட்டி
துஷ்டத்தூய்மன் தேருடைந்து துடித்துமே சாரதியும்
கஷ்டமிகப் பட்டான் காவலன் சேனுபதி
அவன்மேலுங் காயம் அவன்தனு சை யொடித்தே

தவறுகள் செய்தானே சண்டாளன் சல்லியனும்
அவதி மிகவடைய அந்தத்துஷ்டத் தாய்மனுமே
அவதிப் படுவதையே அறிந்து மதவீமன்
வந்துமே கோபமொடு வாரிதியின் சத்தம்போல்
விந்தையாக வெதிர்த்தான் வேந்தனும் சல்லியனை
வில்லை வளைத்தேயவன் வெகுசரத் தைப்பூட்டி
தொல்லை விளைத்திடவே தூண்டிவிட் டான்கணையும்
சல்லியனுங் கண்டே சல்தி கணையேவினன்
சொல்லி முடியாதே சுடராய் வருகும்விதம்
அத்தனை வரக்கண்டான் அங்கு மதவீமன்
பித்தனைச் சிந்தையிலே பிரியம தாய்த்துதித்து
தேவர்க ளையெண்ணி தெய்வக் கணைவிடவும்
மூவர்க ளஞ்சியே முன்னே வராதுசென்றார்
சல்தியாய்க் கணைவந்தே சல்லியன் தேருடைத்தும்
வில்லை யொடித்தே வெகுசனத்தை வாட்டி
அம்பு செய்யுங்கோலம் அதிகப் பரிதாபம்
வம்பாய் மடிந்தார்கள் மதவீமன் றன்கணையால்
ஆனையை வாரியே அதிகப் பலவீமன்
சேனைமேலே யெறிந்து செல்லவைத்தான் காலனார்
ஏமன்போல் நிற்கும் இந்தமத வீமனுக்கு
சோமனு மஞ்சுவான் துடியனைக் கண்டாலே
இப்படியா யுத்தமது ஏகநேரம் வரையில்
தப்புகள் நேர்ந்திடவும் சண்டைமிக மும்முரமாய்
இருவர்க ளிங்கேயும் இப்படி யாயிருக்க
மறுபுரத்தி லந்த மகாபலவான் சாத்தகிக்கும்
பகதத்தன் தனக்கும் பகரவொண்ணு யுத்தம்
யுகமுடிவு காலம்போ லொருவருட னொருவர்
அந்தப் பகதத்தன் ஆயிரம் பகழிவரை

விந்தையா யேவினனே வீரமொடு கணையை
சாத்தகியுங் கண்டு தனுசைவளைத் தேசல்தி
ஆத்திரமா யேவினன் ஐநூறு பகழிவரை
வந்தகணை யெல்லாம் வாட்டியே சீக்கிரத்தில்
நொந்திடவே செய்து நொடியில் மடித்ததுவே
அந்தமுள்ள சாத்தகி அறிந்துமே சங்கதியை
சந்தோஷ மாகவே தானேவி னன்கணையும்
பகதத்தன் திரேகமதில் பாய்ந்து கணையதுவும்
அகத்தையெல் லாமொடுக்கி அப்பாலே சென்றதுவே
அரவக் கொடியனும் அவன்தம்பி ஐவரும்
திரமான சேனையுடன் சீக்கிரம் வந்தெதிர்த்தார்
அங்குநின்ற பீமன் அறிந்துமே சங்கதியை
தங்காது வந்தெதிர்த்தான் தன்சேனை யோடவனும்
அரவக் கொடியனையும் அவன்தம்பி மார்களொடு
திரமா யங்குநின்று தீட்டினன் கதையாலே
துரியனுடதம்பியர் துடித்து மடிந்திடவும்
தெரிந்துமே பீமன் தீட்டினன் சேனதனை
வீமனும் கோபமுடன் வேகமா யன்னேரம்
தாமத மில்லாது சாடினன் கதையாலே
அடிக்க சேனைகளும் அலறியே யச்சமயம்
துடித்துமே கீழ்விழுந்து சோம்பியுயிர் விட்டனரே
பாரரச ரோட பகதத்தனும் பார்த்து
நேராக யானைமேல் நின்றபடி யம்புதனை
வீமன்மேலே யவனும் வெகுகணை யேவிவிட
தாமத மில்லாது சல்தியா யோடிவந்து
வீமன் மேற்பட்டு வேந்தன் மயங்கிடவும்
நேமன் கடோர்க்கசன் நிமிஷம்வந்தா னங்கே
தந்தையின் சோகமதைத் தான்தீர்த்து மேசிறுவன்

விந்தையா யுண்டுசெய்தான் வேகமாய்க் குஞ்சரத்தை
ஆனைமே லிவனிருந்து அந்தப்பக தத்தனையும்
சேனையின் மேலேயும் திட்டிவிட் டான்கணையை
அவனுமே கண்டு அனேக கணையைவிட
தவராது வருகிறதே சாங்கோப 'சாங்கமதாய்
அந்தக் கடோர்க்கசனும் அத்தனையும் மறுத்து
சந்தோஷ மாக சல்தி கணைபூட்டி
ஈசனைத் தான்தொழுது ஏகவிட் டான்கணையும்
பாசமா யோடிவந்தே பகதத்த னைமடிக்க
சேனைகளெல்லாம் சின்னுபின் னப்படுத்தி
ஆனைகளை வதைத்தே அதாகுதங் கள்புரிந்து
ஆகாசக் கங்கையிலும் அக்கணை நீராடி
வாகாக வந்ததே மன்னன்யெச மானிடத்தில்
துரோணர் வீஷ்மர்கண்டு சொல்லுவார் துரியனுக்கு
விரோதங்கள் நீவிளைத்தே வெகுசனத்தை மடித்தாய்
கடோர்க்கச னுஞ்சிறுவன் கடுமையுத்தஞ் செய்வதினல்
கடோர்க்கச னேடெதிர்க்க காவ லனேகேளாய்
மும்மூர்த்திக ளாலும் முடியாது யெம்மாலே
வம்பு வளர்த்தாயே மகாதுடி யாநீயும்
இன்னும் பலவிதத்தை எடுத்துமவர் மொழிய
மன்னனுங் கேட்டு மனது துயரமுடன்
தம்பிமாரை நினைந்து சஞ்சல முண்டாகி
வெம்பி யழுது வேர்த்துமே கீழ்விழுக
அவனை யெடுத்து அந்தத் துரோணரும்
தவராது செய்தார் தக்க வுபசாரம்
செப்பவொண்ணு யுத்தமதை செங்கதிரோன் பார்த்து
அப்போதே சென்று அடைந்தானே மேல்சிந்தில்
இருதரப்புச் சேனைகளும் ஏகி யெசமானிடம்

வருதியது வாங்கி வந்தார்கள் பாசறையும்
அஸ்திஞ புரிசென்று அந்தமுள்ள சஞ்சயனும்
விஸ்தார மாய்ச்செய்தி விளம்பினன் ராசனுக்கு
சுதனிறந்தா ரென்றும் துயர மதில்மூழ்க
இதமாகச் சஞ்சயனும் எடுத்துரைத்தான் நீதிகளை
அந்தகனுங் கேட்டு அதிக விசனமுடன்
வந்தது தீங்கென்று மன்னன் யெண்ணியிருந்தான்

அன்று இரவில் துரியோதனன்
வீஷ்மரிடங் கேட்பது.

அன்று இரவதனில் அரவக்கொடி யோனும்
சென்றுமே வீஷ்மரிடம் செப்புவான் யாதெனிலோ
தவயோகி வேடமதை தக்கதெனப் பூண்ட
சிவயோகி யேகேளும் செப்புகின்ற வாக்கியத்தை
ஐயா பெரியவரே அறிவி லுயர்ந்தமன்ன
ஐவர்கள் செயமதனை அடைகிறார் நித்தமுமே
காரண மென்னவென்று காலிற் பணிந்தவனும்
பாரரசன் கேட்டான் பரயோகி தன்னிடத்தில்
வீஷ்மரதைக் கேட்டே விளம்பலுற் றார்பதிலும்
தாஷ்டீக முடையமன்ன சங்கதி யுண்மையைக்கேள்
ஆதிநா ராயணனே அந்தமா யன்தானும்
ஆதிநர னயிருந்தோன் அருச்சுனனும் வந்தான்காண்
நரனும்நா ராயணனும் நல்லவ தாரமொடு
திரவானகப் பிறந்தார் தேர்வேந்தே பூமியதில்
பூமிபாரந் தீர்க்க பிறந்த விசயனிடம்
சாமியவன் பட்சமாய் தானிருப்ப தறிந்து
எத்தனை யான்மொழிந்தும் என்பேச்சுக் கேளாமல்
யுத்தம் விளைத்தே ஒக்கமடிக்க நினைந்தாய்

ஏண்டா யிந்தத்தொல்லை என்பேச்சுக் கேளாது
ஆண்டவனைத் தூஷணித்து ஐயோ வினைவளர்த்தாய்
இன்னமுங் கேளாய் என்மொழியைத் தப்பாது
மன்னவ ரைவருக்கும் மகிழ்ந்துதே சங்கொடுத்து
கூடியிருந்தாலே குவலயத்திற் பேரோங்கும்
நாடிப் பகுதியை நலமாய்க் கொடுப்பார்கள்
தம்பிமாரும் நீயும் தரணிதனை யாண்டு
வெம்பிடாமல் குடியை வேந்தனே காப்பாற்றும்
அப்படிச் செய்யாவிடில் அரசனே நீங்கள்பூரா
தப்பாது சென்றிடுவீர் சல்தியாக் காலனூர்
இன்னும் பலவிதமே எடுத்தோத வேதூரிய
மன்னனுங் கேட்டு மவுனம தாயிருந்தான்

ஐந்தாம்நாள் யுத்தம்.

நாற்றிசையுந் துதிக்கும் நல்ல சோதியருணன்
கீற்றிசை யாழிதனில் கிளம்பினன் விண்ணேக்கி
காலைக் கடன்றனையே காவலர்கள் முடித்து
வேளை ரதமேறி வேந்தர்கள் வேகமொடு
யுத்த களம்வந்தார் ஒழுங்கா யிருதரப்பும்
அத்ததி மாயவனும் அருச்சுனனைத் தேரேற்றி
அனுமக் கொடியாட ஆயன்ரதம் விரட்டி
தனுவிற் சிறந்தோனை தைரிய மேபடுத்தி
யுத்தகளந் தனக்கு ஓர்நிமிடம் வந்து
இத்தருணம் சேனுபதி இப்படை யத்தனையும்
அணியணியாய்ப் பிரித்து அங்கங்கு மன்னர்களை
தனித்தனியே வைக்கச் சாற்றச் சேனுபதியும்
படையை யணிவகுத்தான் பார்மன்ன ரைவைத்தும்
தடையில்லாது வந்து சாற்றினன் கண்ணனுக்கு

வீஷ்மருங் கண்டு வெகுயூக மாய்வகுத்தே
தாஷ்டீக வானும் தைரியத்தை மொழிந்து
முகப்பில் வந்து நின்று முகங்கள் கடுகடுக்க
பகவா னிதையறிந்து பார ரதமதனை
முன்னாலே கொண்டுவந்து முகப்பி லதைநிறுத்த
மன்ன னருச்சுனனும் மகாகோபந் தன்னுடனே
வில்லை வளைத்தே வெகுதொனிகள் காட்டி
தொல்லை விளைக்க தொடுத்துவிட் டான்கணையும்
கணைகளும் வந்தே கௌரவ சேனைதனை
வினையை வளர்த்தே வெகுபேரை யும்மடிக்க
பாளையங்க ளெல்லாம் பரதவிக்க வந்நேர
வேளை துரோணர்கண்டு விஷம்போல் கோபமுடன்
பாகனை ரதம்நடத்த பகர்ந்திட வேயவனும்
வேகமாய் நடத்தி விசயன் முன்வந்தானே
அப்போ துரோணர் அடங்காத கோபமுடன்
தப்பாமல் வில்லதையே தான்பிடித்துக் கரத்தில்
வில்லை வளைத்தே வெகுகணை யைத்தொடுக்க
வில்லதனை விட்டு விடுபட்டே யக்கணையும்
வடவா முகாக்கினிபோல் வருகுது சேனையின்மேல்
திடவா னருச்சுனனும் சேனைமேல் வாராது
வல்லநல் வில்லதனை வளைத்தே வெகுகணையை
சல்லாப மாய்ப்பூட்டி தான்விடுத்தா னேயங்கு
வந்தகணை யெல்லாம் வாட்டிரெண்டு துண்டாக
சந்தோஷ மாகவே தான்வந்து சேர்ந்ததுவே
பின்னும் விசயன் பிரியமாய்க் கணைதொடுத்து
மன்னன் துரோணர்மேலே வாரிவிட் டான்பகழி
கண்டுமே ஆசாரி கனத்தவில் லதனிலே
ரெண்டுகணை தொடுத்து லெகுவாய் விடுத்தனரே

விசயன் கணையதனை வெட்டியது ரெண்டாக
விசயனும் பார்த்தே வெகுகோப முண்டாகி
இடியாவஸ் திரமதனில் எட்டுத் தொடுத்துவிட
இடியாவஸ் திரமும் ஏகமுழக்க முடனே
வந்து துரோணரையும் வான்பரிக ளத்தனையும்
நொந்திடவே யுடைத்து நொடியில் விசயனிடம்
வந்துமே சேர்ந்தது வம்புசெய்த கணைகள்
நொந்தே துரோணர் நொடியில்மறு தேரேறி
அந்தச் சமயமதில் அருச்சுனன் றன்னோடு
விந்தையான யுத்தம் வேதியன் செய்தனனே
அப்பா லொருபுறத்தில் அபிமன்னன் கோபமொடு
தப்பாது லக்கணனை தான்மறித்துப் பாலகனும்
நில்லடா வென்று நெருக்கியே பாலகனை
நல்லவில் லைவளைத்து நாழிகைவிட் டான்கணையும்
அந்தமுள்ள லக்கணனும் அறிந்துமே சங்கதியை
விந்தையோடு வில்வளைத்து வெகுகணை யேவினனே
விரைவாய் வந்தகணையை வெட்டியே ரெண்டாக்கி
தரைவேந்தன் றன்சுதனும் சந்தோஷந் தன்னுடனே
தொடுத்துக் கணையதனை சொல்லி யுபதேசம்
விடுத்தா னபிமன்மேல் வேகமான கணையை
கண்டா னபிமன் கடல்போல் வருதையும்
அண்டையில் வாராதபடி ஆயிரங் கணையதனை
அள்ளிப் பொழிந்தான் அதிவேக மாகவுமே
சொல்லி முடியாது துடியாய் வரும்வேகம்
அந்தலக் கணன்கணையை அறுத்துமே ரெண்டாக
விந்தையான பரியை வெட்டியே தேருடைத்து
நீளவே சென்று நிலத்திலே நின்றிருந்த
பாலகனைப் பார்த்து பாய்ந்த துடலெங்கும்

அரவக் கொடியன்சுதன் அவதி யடைந்திடவும்
கிரவான் கிருபருமே சென்று மவரிடத்தில்
அவனை யெடுத்தே அன்பாய் ரதத்தில்வைத்து
தவருகள் நேராமல் தக்கவுப சாரஞ்செய்து
படைகளை நீக்கியே பரிவாய் ரதம்நடத்தி
தடையில்லாது வெளியில் தான்கொண்டு வந்தனரே
அப்பா லொருபுறமும் ஆயன்தம்பி தனக்கும்
தப்பன் பூரிச்சிரசும் தான்பொருதி னூர்களே
சாத்தகி முன்வந்து சல்தியவன் நில்லெனவும்
சாத்தகியுங் கண்டு சஞ்சல மில்லாதபடி
என்னடா யெந்தனையும் இப்படி யதட்டுகிறாய்
உன்னையு மென்கணையா லொருநொடி தன்னிலே
காலன்வா யூர்தனையும் காட்டுவேன் சென்றாலே
காலனு முந்தனையே கண்டுவுப சாரஞ்செய்து
அழைத்துமே செல்லும்படி அடிப்பேன் நிசமெனவே
வளைத்து.வில்லில்தொடுத்தே வருணாஸ் திரம்விடுத்தான்
கண்டு பூரிச்சிரசும் கடுமையான கணையை
ரெண்டுதொடுத்துவிட்டே நிமிஷமதைப் போக்கிடத்தான்
சாத்தகி மீதினிலும் சல்தியாய்க் கணைதனையும்
ஆத்திரமாய் விட்டான் ஐம்பது நூறுவரை
சாத்தகி தேருடைந்தே தன்சா ரதிமடிய
ஆத்திரங் கொண்டவனும் அடுத்ததேரி லேறி
அப்ப னடிபட்ட தறிந்தவன் பிள்ளைபத்து
அப்பனுக் குதவியாய் அவர்விரைவா யோடிவந்தும்
பூரிச் சிரசுவையும் புகுந்து மிவர்வளைத்து
வாரி யிரைத்தார்கள் வம்புசெய் யுங்கணையை
அவனு மிதைப்பார்த்து அதிகக்கோ பங்கொண்டே
தவராது யேவினனே சாஸ்தியான கணையை

வந்த கணையெல்லாம் வாட்டரெண்டு துண்டாக
அந்தவேளை தொடுத்தான் அடங்காக் கணையதனை
பத்துப்பேர்கள் ரதத்தை பாவிகணை யுடைக்க
அத்தருணம் பாலர் அவதி யடைந்திடவும்
பூரிச் சிரசுமே பொல்லாத கோபமுடன்
வாரித் தொடுத்தான் வகைக்குமே பத்துக்கணை
வில்லி லிருந்தே விடுபட்டு மேபாணம்
சொல்லி முடியாது துஷ்டன் கணைவேகம்
அண்டத்தி லுள்ளோர்கள் அஞ்சி யொடுங்கிடவும்
கண்டவர்கள் தத்தளிக்க காலனும் பயமடைய
வருகுதே கணைகளும் மண் ணுவிண் ணுங் கொள்ளாது
வருங்கணையைக் கண்டார் வந்தசாத்தகி மைந்தர்
தானும் விடுத்தார்கள் சங்கோப மானகணை
தானும் விடுத்தகணையை தள்ளியே துஷ்டன்கணை
அப்போது வந்தே அவர்கள் தலைபத்தும்
தப்பா தறுத்துமே தள்ளி யதுகீழே
சாத்தகியுங் கண்டு சல்தி ரதம்நடத்தி
ஆத்திர மாகவுமே அவன்வந்தான் துள்ளியுமே
பூரிச் சிரசுமே பொக்கென ரதத்தைவிட்டு
மீறியே கோபமொடு வேந்தனும் வாளோங்க
இருவர் யுத்தமதும் ஏகநேரம் வரையில்
கெருவமாய்ச் செய்தார்கள் கிலேசமில் லாதபடி
அங்கிருந்த வீமன் அதிசயத் தைப்பார்த்து
தங்காது வந்தான் சல்தி ரதம்நடத்தி
ஆயன் தம்பிதனையே அவன்ரதத்தி லேற்றி
நேயமுடன் சென்ருன் நிமிஷமதில் வெளியே
நல்லகுண வெய்யோன் நடத்தி ரதமதனை
சல்லாப மாய்ச்சென்ருன் தயவாக மேல்சிந்தில்

பதியரசர் யாவரும் பார்த்து மதுசமயம்
விதிமுறையை முடித்து வேந்தர்சென்றார் பாசறையும்
விந்தையெல்லா மறிந்து வேகமொடு சஞ்சயனும்
அந்தக னிடந்தனிலே அறைந்தானே செய்திகளை
அவனு மிதைக்கேட்டு அவதி மிகப்படவே
தவராது சஞ்சயனும் சாற்றினான் நீதிகளை

ஆறும்நாள் யுத்தம்

சுக்கலா தேவிசுதன் துடியர்யுத்தம் பார்க்கவென்று
மிக்கப் பிரியமதாய் வெளியானான் கீழ்சிந்தில்
அரசர்கள் பார்த்தே அன்றுசெபம் முடித்து
திரமாய்ப் படைதனக்கும் செப்பி மதிதனையே
யுத்தகளம் வந்தே யோர்நொடியில் யிருதரப்பும்
மெத்த வகுத்தார்கள் வேண்டிய யூகமதனை
வீமனு மச்சமயம் வேகமாய் ரதம்நடத்தி
காமனை மடித்தோனையும் கடித்திட யெண்ணமதாய்
எதிரிசேனை யிற்புகுந்து ஏகமாய் மடித்திடவும்
பதறியே வோடுகுது பாளயங்க ளப்பாலே
வீமனுக்குத் துணையாய் மிகுந்ததுஷ்டத் தூய்மனும்
வீமனிடஞ் சேர்ந்தே வேகமாய் வில்வளைத்து
வில்லை யெதிர் நிறுத்தி வெகுபகழி தொடுத்தே
தொல்லை விளைக்கவே துஷ்டனு மேவினனே
துஷ்டத் தூய்மன்தானும் தொடுத்தமோ கக்கணையால்
கஷ்ட மிகவடைந்து கலங்கியே கீழ்விழுந்தார்
ஆனையெல்லாம் மடிந்தே அதிவீ ரருமிறந்து
சேனைக ளெல்லாம் செப்பாம லோடுகிறார்
துரோணருங் கண்டு துடித்துக் கணைதொடுத்து
விரோதஞ் செய்தகணையை விலக்கினார் சீக்கிரமே

துஷ்டத்தாய் மன்மேலே தொடுத்து விடக்கணையும்
கஷ்டம் விளைந்தவனும் கைவில்லை யும்வளைத்தே
அகோரமான கணையை அள்ளிவிட் டானங்கே
அகோரக் கணைதனையே அறுத்துவிட் டார்துரோணர்
இருவர்கள் யுத்தமது இப்படி யிங்கிருக்க
மறுகோர் புறத்தினிலே மதவீம னும்நின்று
வாளபிம னுஞ்சேர்ந்து வந்து யுகத்துக்குள்
பாழானது சேனையெல்லாம் பதறி நடுங்கிடவே
ஆனைக ளைவாரிஅடிக்கப் படைகள்மேல்
சேனைகளிற் சிலது சேர்ந்திட்டார் காலனூர்
ஐயையோ வென்று அலையுதே பாளயமும்
ஐயையோ வென்றசத்தம் அந்தகன் சுதன்கேட்டு
அவர்களிடம் வந்து ஆதரவு மொழிந்தே
தவராது சேனையெல்லாம் தான்சேர்த்து வொன்ருக
வீமனிடம் வந்தே வெகுபகழி யேவினன்
வீமனதைப் பார்த்தே வேகமாய்க் கீழ்குதித்தும்
ஆனைகளை வாரியே அடித்தானே தேர்மேலும்
ஆனைகள் பட்டிடவே அவன்தேரு மேயுடைய
அப்பாலும் வீமன் அடங்காக் கணைதொடுத்து
தப்பாம லேவினன் தன்யெதிரி மேலே
அரவக்கொடி யோனுடலில் அம்புகள் தைத்திடவும்
சிரம மிகவடைந்தே தேர்வேந்த னும்மயங்கி
இருந்தானே தத்தளித்து இதையறிந் தேதுரோணர்
வறுமையதை நினைந்தே வந்து மவனிடமும்
ரதமதனி லேற்றி ராசனை யச்சமயம்
இதமாகச் சென்ருர் இவர்யூகத் தைக்கடந்தே
அன்றுகதி ரோனும் அடைந்தானே மேலாழி
சென்ருர்கள் பாசறையும் சேனைக ளம்மானை

இந்தச் செய்தியறிந்தே ஏகிநகர் சஞ்சயனும்
அந்தகன் றன்னிடத்தில் அவனுரைத்தான் செய்திகளை
வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்தோ னிடதகப்பன்
சஞ்சலங்கொண்டே தான்மயங்கி விழவும்
அவனை யெடுத்தே அந்தமுள்ள சஞ்சயனும்
தவராது நீதிகளை தானேதித் தேற்றினன்

ஏழாம் நாள் யுத்தம்

பாரதயுத் தம்பார்க்க பருதியுங் கீழ்திசையில்
பாரச் சிந்தில்வந்தே பகவா னுதித்தானே
இருதரப்புச் சேனைகளும் எல்லாங் குருக்ஷேத்திரம்
நெறுநெறுத்துப் போகுது நிற்கவிட மில்லாதே
யூகங் களைவகுத்தார் ஒருநொடியி லேயிருவர்
யூகமுன் நின்ருரே ஒருகோடி வீரர்கள்
அரவக் கொடியனும் அங்குசே னுபதியை
சிறப்பான யுத்தம் தேவனே செய்யுமென்று
வேண்டியே கேட்டு வீழ்ந்து பணிந்திடவும்
ஆண்டிவேடம் பூண்டோர் அப்படியே நல்லதென்று
அன்றுமே வீஷ்மர் அகோரமான கோபமதை
கொண்டு ரதமேறி கொடுமையாய் வில்வளைத்து
விட்டாரே பாணம் வேந்தனுஞ் சங்கமதை
விட்ட கணையும் வேகமா யோடிவந்து
ஐவருட் சேனைதனை அழித்தது வெகுகோடி
ஐவர்கள் சேனுபதி அந்தத்துஷ் டத்தூய்மன்
கணைகள் தனைப்பார்த்தே கடுங்கோப முண்டாகி
வினையை விளக்கவெண்ணி வேந்தனும் வில்லெடுத்து
வில்லை வளைத்துமவன் வெகுபகழி தொடுக்க
வில்லி லிருந்தே விடுபட்டு மேகணைகள்
வந்தது வேகணையும் வானவர்கண் டஞ்சிடவே
வந்த தனையும் வளர்கங்கை யின்சுதனும்

கண்டுமே நேராய்க் கடினமாய் வில்லினிலே
இரண்டு கணைதொடுத்தே லேசா வதையறுத்தே
இருவர்கள் யுத்தமதை யேகநேரம் வரையில்
கெருவமாய்ச் செய்தார்கள் கிலேசமி லாதபடி
அப்பா லொருபுறத்தில் அந்தக் கடோற்கஜனும்
தப்பன்பக தத்தனொடு தானெதிர்த்தான் வேகமுடன்
பகதத்தன் பார்த்தே பத்துப் பகழிவிட
பகதத்தன் பாணமது பாரமாய்த் தான்வருக
தானு மெடுத்தானே தன்னுடைய பாணமதை
வேணுமென்றே தொடுத்து விட்டான் கணையதிகம்
அம்பு வருகிறது வநேகங் கோடியாகி
வம்பன்விட்ட கணையை வாகுடனே தான்மறித்து
துண்டாக்கி விட்டதுவே சோம்பலில் லாதபடி
கண்டே பகதத்தனுங் கணைகள்ரெண்டு தொடுக்க
வீமன் சுதன்கண்டு வெகுகோப முங்கொண்டு
நேமன் தொடுத்தான் நிமிஷம் வருணாஸ்திரம்
அக்கினி யாஸ்திரத்தை அவித்துமே சீக்கிரத்தில்
முக்கிமா யுத்தம் முனைந்துசெய் தாரங்கே
கங்கா சுதனுமே கணைகளை யேதொடுத்து
சங்கமாய் விட்டார் தருமர் படைமேலே
சொல்லி முடியாதே துடியன் கணைவேகம்
சல்லித் தனமதாய் சாய்த்தது வெகுபேரை
கடுமையுத் தஞ்செய்தான் கங்கா சுதனுமே
கொடுமை யுத்தமதையே கோமான் தர்மரறிந்து
தேரை நடத்திவந்து சிகண்டி யிடத்தினிலே
நேரே யழைத்தும் நிகழ்த்துவார் சங்கதியும்
எந்தனரு மைச்சிகண்டி இந்த வீஷ்மர்தானும்
விந்தையாய் வில்வளைத்து வெகுபகழி தொடுத்தே
கொடுமை யுத்தஞ் செய்து கொளுத்துரார் சேனைதனை

அடிமையைக் காப்பதற்கு அவருடன் போர்புரிவாய்
என்றுமே தர்மர் இதையுரைக் கச்சிகண்டி
நன்ருகக் கேட்டு நாழிகை கோபமுடன்
இவரையே யானும் ஏகக் கணைதொடுத்து
தவராது கொல்வேனென தன்மனதில் நினைந்து
நல்ல சிகண்டியுமே நாழிகை ரதம்நடத்தி
சல்லாப மாகவுமே தனுசை யெதிர்நிறுத்தி
சங்கையில் லாதபடி தான்வந்தான் வீஷ்மர்முன்
கங்கா சுதனுமே கன்னியுரு வைநினைத்து
ரதத்தை நடத்தியே நல்லபடை யைநீக்கி
இதமாக வேநடந்தார் இன்னேர் புறமதிலே
வீஷ்மர் சென்றதறிந்து வெய்யோன் விசனமுடன்
தாஷ்டிக மில்லாதபடி தன்ரதத் தைநடத்தி
நாற்றிசை யுந்துதிக்கும் நல்லசோதி யருணன்
மேற்றிசை யாழிதனில் வீழ்ந்தான் விசனமொடு
பாண்டு மன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரும் படையும் பாசறை சேர்ந்தார்கள்
அந்தகன் றன்சுதனும் அட்சணம் படையுடனே
தந்திரமாய்ச் சென்ருன் தன்பா சறைதனக்கு
அந்தமுள்ள சஞ்சயனும் அஸ்தினு புரிசென்று
அந்தக னிடந்தனிலே அறைந்தானே சங்கதியும்

எட்டாம்நாள் யுத்தம்

கதிரோனும் வந்துகீழ்க் கடலி லுதித்திடவும்
பதியரசர் பார்த்து பகவான் றனைநினைந்தும்
காலைவிதி முடித்தே கடவுளை யேதொழுது
வேளை புறப்பட்டார் வேகமாய்ப் போர்க்களமே
இருதரப்புச் சேனைகளும் எல்லா மணிவகுத்து
கெருவமது கொண்டே கெர்ச்சனை செய்திடவும்

அந்தகன் றன்சுதனும் அவசர மாயோடி
விந்தையாய் வீஷ்மரிடம் விளம்புவான் சங்கதியும்
தவயோகி வேடமதை தக்க தெனப்பூண்ட
சிவயோகி யேகேளும் செப்புமென் வாக்கியத்தை
தங்களுட சமர்த்து தைரியத் தைக்காட்டி
எங்களுக் குதவியாய் இப்படையை வெல்லும்
என்றவன் சொல்லவுமே இதைக்கேட்டு மேதாதை
நன்றெனவே சம்மதித்து நான்தீர்ப்பே னென்றவரும்
அந்தவாக்கை நினைந்தே அவருமே வில்வளைத்து
விந்தையான கணையை விரட்டினர் சேனைமேல்
கணைகள் வருவதையும் கண்டே மதவீமன்
வினையை வளர்க்க வேந்தன் மனதிலெண்ணி
தன்வில்லை யும்வளைத்தே சல்தி கணைபூட்டி
விண்ணுள்ளோர் கண்டஞ்ச விட்டான் கொடுமையதாய்
இருவர்கள் யுத்தமது ஏகநேரம் வரையில்
கெருவமாய்ச் செய்தார்கள் கிலேசமில் லாதபடி
அப்போது வீமன் அந்தவீஷ்மர் மேலே
தப்பாது விட்டான் தானொரு கணையதனை
அவ்வாளி வந்தே அவர்கொடி யையறுத்து
தவ்வாளி போட்டே சல்திதேரை யுடைத்து
சாரதியுஞ் சாக சல்தி பரிமடிய
பாரதிலே நின்றார் பாரத் தவயோகி
அவர்நிற் பதுதனையே அறிந்து துரியனும்
அவர் தனக்குரதமும் அருமைபா கக்கொடுத்து
தம்பி சிலபேரை தானுதவி செய்ய
வம்பாக் கணைகளையே மதவீமன் றன்மேலே
வாரித் தொடுத்தே வாகாய்க் கணையதனை
மாரிபோல வருக மதவீம னும்பார்த்து

தன்னு லியன்றமட்டும் தான்தொடுத் துப்பகழி
மன்னன் வருங்கணையை மறித்துக்கொண் டங்கிருக்க
அப்பால் வீமன்தொடுத்தான் ஆயிரங் கணைவரையே
தப்பாம லேவந்து தன்பாட் டனைவளைத்தே
சாரதியைக் கொன்றே தான்செல்ல வேகணையும்
சாரதி மடியவுமே தக்க குதிரைதனை
அடக்குவா ரில்லாது அதுவும் புறப்பட்டு
தடதடெனச் சென்றது சல்தியா யோர்புறமே
அப்போது வீமனுக்கு அதிகக் கோபமுண்டாக
தப்பாது கதையெடுத்து தரையி லவன்குதித்தே
துரியோதனன் தம்பியர் துடியாய்ச் சிலபேரை
அரியக் கதையாலே அடித்தானே பாதகரை
அவர்க ளடிபடவும் அச்சமயங் காலனூர்
தவராது சென்றூர்கள் தக்க கொடும்பாவி
இதையுமே கண்டு இருந்த துரியோதனன்
பதைத்துமே சென்றான் பாட்டனின் றன்னிடமே
அவரையே கண்டும் அமுது முறையிட்டே
அவரைப் பணிந்தே அரசனு மேபுகல்வான்
வீமனுங் கோபமொடு வெகுபேரை யும்மடித்து
எமனிடம் விட்டானே என்னசெய் வேன்தாதா
என்று மொழிந்துமவன் எங்கி யழுதிடவும்
நன்றாகக் கேட்டு நவிலுவா ரேபதிலும்
இப்ப வருத்தமுமே எனரசே யுந்தனுக்கு
அப்போது யானும் ஆசாரி யிருவரும்
விளம்பி யிருக்கின்றோம் வீரர்கள் தன்சமர்த்தை
விளம்பியதைக் கேட்டே வீரங்கொண் டாய்நீயும்
அந்த பீமனுடனே அரன்வந் தெதிர்த்தாலும்
சிந்தை நொந்துசெல்ல செய்வான் துடியனும்

அவனுட னிச்சமயம் அமர்செய்யப் போனலோ
தவராது வீரசொர்க்கம் தம்பியிது நிச்சயமே
என்று யிவருரைத்து இங்கே யிருந்திடவும்
நன்ருய் நகுலனும் நாடித் தமையனுடன்
வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்தோன் படைகள்மேல்
சஞ்சலமில் லாதபடி சாடிவிட் டார்கணைகள்
கணைகளும் வந்தே காவல ரைப்பாய
வினையை நினைந்தே வெகுபேர் மடிந்தார்கள்
ரெத்தவெள்ள மோடச் செத்த பிணங்கூட
அத்ததி பேய்களும் ஆடுதையோ கூத்தும்
சேனை படுந்துயரம் செப்பவொண் ணுப்பாவம்
ஆனைகள் கூடவே அலறியே சாகுதங்கு
இருவர்கள் சண்டையும் இப்படி யிங்கிருக்க
மறுகொரு புறமதில் மகாபெரிய போரு

அரவானுக்கும் அலம்பசனுக்கும் யுத்தம்

அரவானு மோடிவந்தே அஞ்சிடாம லங்கு
திரமான சேனைதனை திகைத்து மவன்பார்த்தே
ஆவேசங் கொண்டுமவன் அடிக்க மனதுகந்து
பூவேந்தர் யாவும் புகழ்ந்திட வன்னேரம்
வில்லை வளைத்தே வெகுதொனி யைக்காட்டி
தொல்லை விளக்கவே தொடுத்தான் கணைநூறு
சேனைகள் மேற்பட்டே தேம்பியே மாண்டிடவும்
ஆனைகள் கூட அறுபடு தேதலைகள்
வெகுசனத்தை மடித்தான் வீரமொடு வரவான்
வெகுசனம் மாண்டிடவும் வேந்தர்கள் யாவரும்
சத்தமு மிட்டார்கள் சகிக்க முடியாமல்
அத்ததி கேட்டான் அரவக் கொடியோனும்
பாளையத்தைப் பார்த்து பரதவித்து வாடி

வேளையே வந்தான் விரைவாக வேந்தனுமே
அலம்பச னிடம்வந்து அவனைமிகத் தோத்தரித்தே
அலம்புசனே நீயுமே அரவானைப் போய்மடிப்பாய்
என்று வரச னெடுத்துரைக்கச் சங்கதியை
நன்றெனவே கேட்டு நடந்துமே சேனையுடன்
நில்லடா வென்று நெருக்கி யரவானிடம்
மெள்ளவே வந்து வேகமா யதட்டிடவும்
அரவா னதைக்கேட்டு ஆரடா நீயென்று
திரவா னதட்டவும் தேம்பி யலம்புசனும்
வந்துமே பாவி வளைத்துமே வில்லதனை
அந்தவேளை தொடுத்தான் அடங்காக் கணையதனை
வாளி வருகிறதே மண்ணுவிண்ணுங் கொள்ளாமல்
வாளிதனைக் கண்டான் மகாபல வானரவான்
தானும் வளைத்தே தன்னுடைய வில்லதனை
வேணு மென்றுதொடுத்து விட்டான் சிலகணையை
வருங்கணையைக் கண்டித்து வாள்விசயன் சுதனும்
கெருவமுங் கொண்டிருக்க கெட்ட வலம்புசனும்
தொடுத்துச் சிலகணையை சொல்லி யுபதேசம்
விடுத்தானே கோபமொடு வெகுபகழி யந்நேரம்
அரவானுங் கண்டே அனேகபா ணமேவி
வரவொட்டாது வடித்தான் வம்பன் கணையெல்லாம்
அரவான் தொடுத்துவிட்டான் அனேகமான கணையை
திரவா னலம்புசனை தேகமெல்லாம் பாய்ந்திடவும்
மயங்கி விழுந்தான் மகாபெரிய ரதத்தில்
தியங்கியதைப் பார்த்தே சிலைவிசயன் சுதனும்
படைகளின் மேலேயே பாணமதைத் தொடுத்து
தடையில்லாது விட்டான் சங்கோப சங்கமதாய்
வெகுகோடி சனமதனை வீரன் வதைத்துமே

லெகுவாய் விடாதபடி ரெண்டுகணை பூட்டி
அடிக்கின்ருன் சேனைகளை அனியாய மாகவுமே
துடித்தே விழுந்து சோம்பியே மாளுகிருர்
சிந்துவலை போலே சேனைகள் தவித்திடவும்
அந்தவேளை கண்டானே வங்குவலம் புசனும்
களையுந் தெளிந்தே கடுங்கோப முண்டாகி
வளைத்தானே வில்லை வாரிதிச் சத்தம்போல்
அரவான்மே லேவிஞன் அடங்காக் கணைகளையே
திரவானுங் கண்டே சீக்கிர மதையறுத்தான்
அலம்புச னச்சமயம் அனேக மாயஞ்செய்ய
அலம்புசன் மாய்கையெல்லா மழித்தா னரவானும்
அரவானு மச்சமயம் அனேகங் கோடியரவாய்
திரவா னெடுத்தே சேனையெல்லாம் வளைத்தான்
அலம்புசனும் பார்த்தே அதிகச் சடைவடைந்தே
அலம்புசனும் வடிவம் ஆனுன் கெருடன்போல்
பாம்பை யெல்லாம்பாவி பட்சணம் செய்கையிலே
பாம்பான வரவானும் பார்த்துமிதைப் பிர்மிக்க
அப்போ வலம்புசனும் அவன்கைப் படையாலும்
தப்பாது சிரமதையே தான்வெட்டித் தள்ளினனே
சிரசதுவுங் கீழ்விழவும் சிறியோ னுடமுண்டம்
கரகரெனச் சுற்றியே காலா லவனெற்றி
கோடி சனத்தையே கொள்ளைகொண்டு மவனும்
நாடியே சென்ருன் நல்லபதி வைகுந்தம்

கடோர்க்கயனுக்கும் அலம்புசனுக்கும்
யுத்தம்

அண்ண னிறந்ததையே அறிந்து கடோர்க்கயனும்
மன்னன் பீமன்சுதனும் வந்தானே சீக்கிரத்தில்
அண்ணனைக் கொன்ற அலம்புசனை யானும்

திண்ணமாய் மடிப்பேனென தேரை நடத்தியே
அலம்புச னிடத்தினிலே அதிவிரை வாய்வந்து
அலம்புசா வோடாதே அடியேனும் வந்துவிட்டேன்
இருவர்களும் வில்வளைத்தே ஏகக் கணைதொடுக்க
இருவர் கணைகளும் ஏகயிடி யைப்போல
ஒருவர்க் கொருவர் ஓயாது சண்டைசெய்தார்
இருவர்கள் யுத்தமது ஏகநேரம் வரையில்
வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்ததுரி யோதனனும்
சஞ்சலத்தைப் போக்கி தானேவி னன்கணையும்
அந்தக் கடோர்க்கயனும் அறிந்துமே சங்கதியை
இந்தவேளை யிவனை எமலோகஞ் சேர்ப்பேனென்று
வில்லிற் கணைபூட்டி வேகமாக விடுத்து
தொல்லை விளைத்தானே துரியோ தனனையும்
கலங்கியே மன்னன் கால்நடையா யோடிடவும்
அலம்புசனுங் கண்டே அதிகக் கோபமுடனே
அந்தக் கடோர்க்கசன்மேல் அள்ளிவிட் டான்கணையும்
விந்தையாய் வருகிறதை வேந்தன் சுதன்பார்த்து
அந்தச் சமயமதில் அத்தனையுங் கண்டித்து
சந்தோஷங் கொண்டு சங்குத் தொனிசெய்ய
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமருமே
அருமையொடு கேட்டே அந்தச் சமயமதில்
வீமனை யருகழைத்து வேகமாய்ச் செல்லென்றார்
நேமனுங் கேட்டு நிமிஷம்வந்தான் பாலனிடம்
மகனிட மேவந்தே மன்னன் கிருபையதாய்
மிகச்சண்டை செய்தான் வேந்தன் துரியனுடன்
அந்தகன் சுதன்விட்டான் ஆயிரம் பகழிவரை
விந்தையாக வந்து வீமனுட விற்பாய
கணைகளுந் தைத்திடவே கலங்கியங்கு வீமன்

கணையைப் பிடுங்கிடவும் கணையுமே சூழ்ந்திடவே
அப்போ கடோர்க்கயனும் அறிந்துமே சங்கதியை
தப்பாது வந்தான் தகப்ப னிடந்தனிலே
வீமனுக் குபகாரம் வேண்டியது செய்ய
வீம னெழுந்தும் வெகுதுடி யாகவுமே
வில்லை வளைத்தே வெகுபகழி தொடுத்து
தொல்லை விளைத்தான் துரியோ தனனையும்
அவன் கஷ்டப்பட்டதை அறிந்து துரோணருமே
அவனிட மேவந்து ஆதரவு சொல்லியே
வீமனொடு யெதிர்த்து வேண பகழிவிட
வீமன் றேருமுடைந்தே வெட்டியாய்ப் பாகன்சாக
தரைதனிலே நிற்க சங்கதியை யறிந்து
விரைவா யங்குவந்தான் வேந்தனும் வாளபிமன்
மதவீமன் றனக்கு மைந்தன் ரதம்கொடுக்க
இதமா யதிலேறி எடுத்துவில்லை வளைத்து
துரோண ரிடந்தனிலே தொடுத்து விடக்கணையும்
விரோதங்கள் செய்தே வேதியர் வெட்டிவிட்டார்
சேனைகள் மேலேயே தீட்டிவிட்டான் கணையும்
ஆனையொடு மவர்கள் அலறி மடிந்திடவே
படைளுட கஷ்டம் பார்த்தால் பரிதாபம்
தடையில்லா தோடுகிறுர் சர்ப்பக்கொடி யன்சேனை
அந்தச் செய்தியதனை அறிந்து துரியனும்
சிந்தை கலங்கியே தேகம் நடுக்கமுடன்
கங்கா சுதனுடைய காலிற் பணிந்தரசன்
பங்கம்வந்த சங்கதியைப் பாவி யுரைத்திடவும்
வஞ்சகன் றனக்குமே வழுத்தித் தைரியத்தை
அஞ்சாதே யென்று அவர்வந்தார் வேகமதாய்
ஓடின சேனைகளை உத்தமனுந் திருப்பி

நாடினார் யுத்தமதை நல்ல துரோணருமே
அந்தமுடைய விசயன் அவரிட மேவந்து
சந்தோஷ மாகவுமே தான்வளைத்துக் காண்டீபம்
தொடுத்துக் கணையை சொல்லி யுபதேசம்
விடுத்தான் துரோணர்மேல் வேண்டிய பகழிகளை
அந்தக் கணைகளும் அதிவேக மாய்வந்து
அந்தணரைக் கஷ்ட மாக்கிட வம்புகளும்
அவர்படுங் கஷ்டமதை அறிந்து பகதத்தனும்
தவராது வந்தான் தன்யானை மேலேறி
அரவக் கொடியனும் அவன்தம்பி மார்சிலரும்
பரபரப்பாய் வந்தே பாரக் கணைதொடுத்தார்
அந்தமுள்ள விசயன் அறுத்துமே யத்தனையும்
விந்தையாய்த் தொடுத்துவிட்டான் வெகுகோடி பாணமதை
அங்கு பகதத்தனும் அறிந்துமே வந்ததெல்லாம்
சங்கங் கணைவிட்டான் தக்க விசயனிடம்
பார்த்தனுமே கண்டு பத்துக் கணைதொடுத்து
வேர்த்துமே யேவி வெட்டினான் கணையெல்லாம்
அப்போ விசயன் அனேகங் கணைதொடுத்து
தப்பன் பகதத்தனை சல்லடைக்கண் ணாக்கினனே
சந்தோஷ மாய்வந்தோர் தாக்கிடவே கணையும்
வந்தவழி யோடினான் மாபடை யைத்தாண்டி
திரியோதனன் கண்டு திரும்பி யிங்குவரவும்
அறிந்துமே வீமன் அவசர மாகவுமே
கதையைப் பிடித்தே கண்டவரைச் சாடிடவும்
கதையி னடியாலே கண்ட துண்ட மானார்கள்
திரியோதனன் தம்பியர் சிலபேர் மடிந்திடவே
பரிதாப மாகவும் பார்த்தா னரசனும்
அப்போ விசயன் அதிகப் பாணந்தொடுத்து

தப்பாமல் விட்டே சாடினன் சேனைகளை
படுகளந் தன்னையே பார்த்தால் பயமுடனே
நடுக்க மெடுத்திடும் நாதாக்கள் கண்டாலும்
ரெத்த வெள்ளமோட செத்தபிணஞ் சேர
அத்ததி பசாசுகளும் ஆடிநிற் குங்கூத்து
நரிகளு மூளையிட நாய்கள்வந்து புசிக்க
அரிகரப் பிர்மாதி அஞ்சிடுவார் கண்டால்
இருதரப்புச் சேனைகள் ஏகமதாய் மடிந்து
நெறுநெறுத் தேபிணமும் நிலத்திலெங் குங்கிடக்கும்
பருதியிதைப் பார்த்தே பயந்து ரதமோட்டி
கிருகிருத்தே சென்றான் கிரமப்படி மேல்சிந்தில்
அப்போது சஞ்சயனும் அஸ்தின புரிசென்று
தப்பா தரசனிடம் தான்மொழிந்தான் சங்கதியும்
அந்தக னிதைக்கேட்டு அதிக விசனமுடன்
வந்தவிதி யென்று மன்ன னிருந்தனனே
அருணன் சென்றதறிந்து அரசர்கள் யாவரும்
வருதியது வாங்கி வந்தார்கள், பாசறையும்

அன்றிரவில் துரியோதனன் கர்ணன் சகுனி
துச்சாதனன் யோசனை செய்தல்

வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்ததுரி யோதனனும்
சஞ்சலத்தை விளைக்கும் தன்மாம னுஞ்சகுனி
அங்கதேச மதையே ஆண்டுவருங் கருணன்
சிங்கப்பல துச்சாதனன் சேர்ந்தார்க ளெல்லோரும்
அரவக் கொடியோனும் அங்கதேசக் கர்ணனிடம்
திரமான வார்த்தைகளும் செப்புவான் யாதெனிலோ
ஐவர்கள் நம் சேனையிலே அழித்திட்டார் பாதிவரை
ஐவரை வெல்லவுமே ஆகவில்லை நம்மாலே
அண்ணவே யென்று அழுது முறையிடவும்

மன்னன் துரியனுக்கு வழுத்துவா னேகருணன்
மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாளும் புண்ணிய னேகேளும்
அந்தப்பஞ்சை ஐவரையும் அதிகப்பல வானென்று
இந்தவேளை யென்னிடத்தி லியம்பினு யேமன்னு
கெங்கா சுதனும் கிரமயுத்தஞ் செய்யாமல்
பங்கமடைய நாமும் பண்ணுகிரு ரறியும்
அவருமே யுத்தகளம் அணுகா திருந்தாலே
அவருக்குப் பதிலாக அடியேனும் விற்பூண்டு
ஐவர்கள் பூராவும் அறுத்துச் சிரசதனை
செய்கிறேன் யுத்தமென்று செப்பினு னேகருணன்
துரியோ தனனும் துஷ்டத்தம்பி மாருடனே
அறியவே வீஷ்மரிடம் அறைந்தார்கள் சங்கதியை

வீஷ்மர் துரியோதனனுக் குரைப்பது

அந்தமொழி பூராவும் அருமை யுடன்கேட்டு
விந்தையரய்த் துரியனுக்கு விளம்புவார் சங்கதியும்
அப்பா வரசனே அருமையான யென்பேரா
செப்புகிறேன் கேளும் செகவரசே வாக்கியமும்
அங்கதே சாதிபனும் அந்தநாள் விராடபுரம்
பங்க மடைந்தானே பார்த்தன் கணையாலே
அந்தக்கர்ணன் தானே அரசே மொழிந்தவன்
இந்த விசயனையே எப்படியும் வெல்வான்
ஆவி யிருக்கமட்டும் அந்த யுத்தகளத்தில்
மேவியே போர்செய்து வீரமெல்லாங் காட்டிடுவேன்
எனக்கு வயதோ எண்ணூறு மேலாச்சு
உனக்கு மொழிந்தேன் உத்தமா யின்றுநான்
செய்துயான் யுத்தம் திரமையெல்லாங் காட்டி
ஐவருடன் சேனைகளை அதமாகச் செய்திடுவேன்

என்றுமே தாதாவும் எடுத்து மொழிந்திடவே
நன்ருய்க்கேட் டேயரசன் நாடிவந்தான் பாசறையும்
நாற்றிசையுந் துதிக்கும் நல்லசோதி யருணன்
கீற்றிசை யாழிதனில் கிளம்பினுன் விண்ணேக்கி
காலைக் கடன்முடித்தே காவலர்க ளெல்லோரும்
வேளையே வந்தார்கள் வேந்தர்கள் யுத்தகளம்

ஒன்பதாம் நாள்யுத்தம்

இருதரப்புச் சேனைகள் எல்லாங்குரு க்ஷேத்திரத்தில்
நெறுநெறுத்துப் போகுது நிற்கவிட மில்லாமல்
யூகங்கள் வகுத்தார்கள் யோசனேயி லேசிறந்தார்
வேகமாய் வந்தார் வீஷ்மரு மங்கேதான்
ஆயன் ரதம்பூட்டி அனுமக் கொடிபோட்டு
மாயன்மன மகிழ்ந்தே மைத்துனனே டங்குவந்தார்
இளம்பஞ்ச பாண்டவரோ டெதிர்த்தா னலம்புசனும்
இளம்பஞ்ச பாண்டவரும் ஏகக் கணைதொடுத்து
அலம்புசன் மேலேவ அக்கணை கள்பாய
அலம்புசன் தட்டுக்கெட்டு அவன்முதுகு காட்டியே
அப்பாலே சென்றுமவன் அனேகங் கணையேவி
தப்பாது கொன்ருன் தர்மர்சே னைசிலதை
அந்தமுடைய அபிம னிதைப்பார்த்தே
விந்தை யிதுவென்று வேகமா யோடிவந்தும்
அள்ளித் தொடுத்தே அடங்காக் கணையதனை
சொல்லி யுபதேசம் துஷ்டனிடம் விட்டிடவும்
அந்த வலம்புசனும் அத்தனையுங் கண்டித்து
விந்தையாக வவனும் வேற்றுருவ மாகியே
அருணனையே மறைக்க அதிகயிரு ளாகிடவும்
அருமையான தொழிலும் அவன்செய்தா னச்சமயம்
அர்ச்சுனன் றன்சுதனும் ஆதியாஸ் திரம்விடுக்க

கொர்ச்சனையாய் வந்தே கெட்டயிருள் நீக்கினதே
சிறுவனுங் கண்டுமதை சித்தந் திடப்படுத்தி
இருநூறு கணைதனையே ஏவிவிட்டா னங்கே
அலம்புசன் தேருடைந்தும் அவன்புரவி மடித்தே
தலமதனில் நின்றுன் சங்கடங் கொண்டவனும்
இருவர்கள் யுத்தமது இப்படி யிங்கிருக்க
மறுகொரு புறத்திலே மன்னனஸ்வத் தாமனுக்கும்
சாத்தகி தனக்கும் சல்லியங்க ளுண்டாகி
பார்த்தவர்க ளெல்லாம் பயங்கரங் கொள்ளும்படி
அந்தமுள்ள சாத்தகி அள்ளிப் பொழியக்கணை
வந்து வேகமாக வாட்டவஸ்வத் தாமனையும்
துரோணருங் கண்டே துடியாக வேவந்தும்
விரோதம் விளைத்தாரே வெகுகணை யேவியே
விசய னதைப்பார்த்தே வெகுகோப மும்முரமாய்
விசனமெல் லாம்போக்கி வேதியர் முன்னேவந்து
வல்லநல் வில்லதனை வளைத்துக் கணைதொடுத்தே
சல்லாப மாய்விடுத்தான் தன்குரு வின்மேலே
கணைகள் வரும்விதத்தை கண்டாற் பயங்கரமே
கணைகள் வருவதையே கண்டே துரோணரும்
தானு மெடுத்துமே தன்னுடைய வில்லதனை
வேணுமென்று தொடுத்தே விட்டார் கணையதிகம்
விசயனதி சீக்கிரத்தில் வெட்டி யெறிந்திடவும்
விசயனைக் கண்டான் வேந்தன் சுசர்மாவும்
துரோணர்க் குதவியாய் துடியனு மங்குவந்தே
விரோத மதையெண்ணி விடுத்தான் கணையதனை
இருவருஞ் சேர்ந்தே ஏகக் கணைவிடுத்தார்
வருங்கணையைக் கண்டானே வாள்விசய னச்சமயம்
அள்ளிப் பொழிந்தான் அடங்காக் கணையதுவும்

துள்ளி வருகுதே சுடர்களைக் காட்டியுமே
எதிரி கணையெல்லாம் எறித்து நீறுக்கியே
ததியேவந்து சேர்ந்தது தன்யெச மானிடத்தில்
பார்த்தன் தொடுத்தே பத்துப் பகழிதனை
ஆத்திரமாய் விடுத்தான் அங்கே யெதிரிமேல்
துரோணர் தேருமுடைந்து துடியசுவம் மடிந்தே
விரோதம் விளைத்துமே விசயனிடம் வந்தது
அந்த சுசர்மாவும் அடிபட்டு மோடிடவே
விந்தையைப் பார்த்தே விசயனு மச்சமயம்
காண்டா வனதகனம் காட்டிய காண்டீப
நீண்டவில்லை வளைத்து நேராய்க் கணைபூட்டி
சேனைகள் மேலே தீட்டுகி ருன்பாணம்
ஆனையொடு சேனை அலறி மடியுதங்கே
இப்படி யாக இங்கு நடந்திடவும்
அப்பா லொருபுறமும் அந்தப் பகதத்தன்
தர்மருடன் வீமனையும் தான்சுத்திக் கொண்டிடவும்
தர்மருமே பார்த்து தம்பியீ தென்னவென்ருர்
நேமனுமே கேட்டு நிருப னுரையதனை
வீமன் கதையெடுத்தே வேகமா கப்புகுந்து
அடித்தானே சேனைகளை அனேகம்பேர் கள்மடிய
துடித்தே பகதத்தன் சொல்லாம லோடினனே
அந்தமுள்ள வீஷ்மர் அனேக சேனையுடன்
விந்தையாக வந்து வீமனுட னெதிர்த்து
அகோர மானகணையை அள்ளியே விட்டிவும்
அகோரக் கணைவந்தே அனேகம்பேரை மடிக்க
ரெத்தவெள்ள மோடுதே ரெணகள மெல்லாமே
அத்ததியே யங்கும் அனேக தலையுருள

—

பாண்டவ வீரரும் படைகளெல் லாஞ்சேர்த்து
தாண்டவ மாடிடவே சகலரும் வந்தெதிர்த்தார்
வீஷ்ம ரதைப்பார்த்தே வேகமாய் வில்வளைத்து
தாஷ்டீக வானும் சல்தி கணைதொடுத்தே
பாண்டவர் சேனைகளைப் பஞ்சாத் துளைத்திடவும்
ஆண்டவனை நினைந்தே அனேகம்பே ரும்மடிந்தார்
பாளைய மெல்லாம் பார்த்தால் பரிதாபம்
வேளையே கண்டார் வேதாந்தக் கோவலனும்
ரதத்தை நடத்தி நல்ல விசயனுடன்
இதமாக வந்தார் இந்தவீஷ்மர் முன்னாலே
அருச்சுனன் றனக்குமே அனேகமாய்ப் போதித்து
அருச்சுனு யிச்சமயம் அதஞ்செய்வாய் வீஷ்மரை
பகவான் மொழிந்திடவே பார்த்தன் விசனமுடன்
பகவா னுரைபோலே பகழிவிட் டானங்கு
கங்கா சுதனும் கனகோப முண்டாகி
சங்கங் கணக்காக தான்விடுத் தார்கணையும்
விசய னிடமே வேகமாய் வந்திடவும்
விசயனுஞ் சீக்கிரத்தில் வெட்டி யெறிந்திடவும்
கங்கா சுதனுங் கணைகள் வெகுவேக
சங்கம் படைவரவே தான்வரப் பார்த்தனிடம்
காண்டா வனதகனம் கண்ட விசயனும்
நீண்டகாண் டீபமதை நிறுத்தியே முன்னாக
தொடுத்துக் கணையதனைச் சொல்லி யுபதேசம்
விடுத்தான் ததியே வீஷ்ம ரிடந்தனிலே
விந்தையான கணையை வெட்டி யெறிந்தவரும்
சந்தோஷ மாய்விடுத்தார் சங்கோப மானகணை
படைகளை யெல்லாம் பதைத்திட வேகணையும்
தடைசெய்ய லாகாது தானே மடிந்திடவும்

ஐயையோ வென்று அலேயுதே பாளையமும்
ஐயையோ வென்றசத்தம் ஆயனு மேகேட்டு
குதிரைக் கடிவாளம் கோவிந்தன் விட்டெறிந்தே
பதியில் குதித்து பராக்கிரம முண்டாகி
யுத்தவெறி கொண்டவர்போல் ஓடிவர வீஷ்மருமே
அத்ததி கண்டாரே ஆயன் வருகிறதை
ஆயாச மில்லா தம்பையப்பா லெறிந்துவிட்டு
மாயவனைத் தானே மன்னன் மிகத்தொழுதும்
ஆதிமகா மூலமே அடியேனு முன்கையால்
வேதினை யில்லாமல் வேதா யெனைமடியும்
என்றுமே வீஷ்மர் இறங்கியே தோத்தரிக்க
கண்டே யருச்சுன னும் கண்ணனிட மோடிவந்து
அன்று மொழிந்தாயே அமரது செய்யேனென்று
நன்று யிருக்காது நந்தகோ பாலனே
வருவா யென்றழைத்து வந்தே ரதத்தில்வைத்து
கெருவமாய் விசயனிடங் கிருஷ்ணனு மேபுகல்வான்
அப்பா வருச்சுனனே அந்தவீஷ் மர்தனையே
தப்பாது நாளை தான்மடியச் செய்வாயே
என்றுமே மாயன் இயம்பவே பார்த்தனுமே
நன்றுக் கேட்டு நவிலுவான் மாயனிடம்
பூமிதனை யளந்த பொறுமை தனையுடைய
சாமிதங்கள் வாக்கியம் தப்பாது செய்வேனென்றான்
அப்போ கதிரோனும் அடையவே மேல்கடலும்
தப்பாது சேனைகளும் தான்சென்றார் பாசறையே
அன்றுமே சஞ்சயனும் அஸ்தினா புரிசென்று
நன்றாகச் சங்கதியை நவின்றா னரசனிடம்
தவராக ராசன் தானே மயங்கிடவும்
அவனுக்கு நீதிகளை அறைந்தானே சஞ்சயனும்

அந்தகனுங் கேட்டு அதிகவிசன முடன்
வந்த விதியென்றே மன்ன னிருந்தனனே

அன்றிரவில் பாண்டவர்கள் யோசனை செய்தல்

முரசக் கொடியோனும் முகுந்தன் தனைப்பார்த்து
திரமுமே கேட்பார் செகமெய்த்த கண்ணனிடம்
வீஷ்மரு மின்றுதினம் வெகுரோசந் தன்னுடனே
தாஷ்டிகவான் பாதி சங்கரித்தார் சேனைகளை
இவரிருக்கும் வரையில் எப்படிச் செயமடைவோம்
இவரை மடிப்பதற்கு எம்மால் முடியாதே
என்று புலம்பிடவும் ஏகாந்தக் கண்ணனும்
நன்ருகக் கேட்டு நவிலுவா ரேபதிலும்
நாளைத் தினத்தில் நரன்மடிக்கா விட்டாலே
வேளையான் வதைத்திடுவேன் வீஷ்மரைத் தப்பாமல்
என்றுமே மாயவனும் இயம்பிட வேதருமர்
நன்ருகக் கேட்டு நவிலுவா ரம்மானை
மண்ணையே. வாரியுண்ட மணிவாயா செங்கமலக்
கண்ணனே நீரும் கனத்த படைப்போரில்
வில்லதை யேநிறுத்தி வேண கணைபூட்டி
தொல்லை விளக்கேனென்று சொல்லியிருக் காய்முன்னே
பங்கம் வராதபடி பாரளந்தா வாக்கியமும்
சங்கதி யொன்று சாற்றுவேன் கேளுமென
ஆயனே நாமும் அந்தவீஷ்ம ரிடத்தில்
மாயனே கேட்டிடுவோம் மணிவண்ண வாருமென்ருர்
அப்போது மைவருடன் ஆனந்த மாய்க்கண்ணன்
தப்பாது வந்தார் தக்கபல வீஷ்மரிடம்
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமருடன்
அருமையா கப்பணிந்தான் ஐவரு மன்பாக
ஆசிர் வதித்தே அருமை யுடனவரும்

பேசிச் சிலசேதி பிரியமுட னேயவர்கள்
வந்தவா றென்னவென்று மன்னனுங் கேட்டிடவும்
சொந்தமுள்ள பேரன் சொல்லுவா ரேதருமர்
இந்தநல் யுத்தமதை எப்படி யான்செயித்து
இந்தராச் சியமதனை எப்போது ஆள்கிறது
வரவரச் சேனையெல்லாம் வம்பாய் மடிகிறதே
திரமான வார்த்தையதைச் செப்புவா யேதாதா
என்றுரைத்தே தர்மர் இருபாதத் தைப்பிடிக்க
நன்றாகக் கேட்டே நவிலுவா ரேபதிலும்
நானு யுதம்பூண்டு நல்லபோர் செய்யும்வரை
வீணாய் மடிந்துவிடும் வேந்தனே யுன்படைகள்
எந்தனை மடிப்பதற்கு ஈய்ந்தேன் விடையுமக்கு
நிந்தனை வாராது நின்னை வதைத்தாலே
அப்போ தருமர் அவரிடமே கேட்பார்
செப்பினது தான்சரியே தேவனே யுந்தனையும்
எப்படி மடிக்கும்விதம் எந்த னிடந்தனிலே
தப்பா துரையுமென்று சாற்றினா ரேதருமர்
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமரிடம்
அருமையாக மொழிவார் அந்தக்கங் காசுதனும்
அப்பனே கேளும் அடியே னுடமொழியும்
தப்பாது சிகண்டிதனை தானிறுத்தி யென்முன்னால்
அந்த முடைய அருச்சுனன் பின்னின்று
விந்தையான கணையை விட்டாலே யென்மேலும்
அம்புகள் பட்டே அரன்பதவி சேர்ந்திடுவேன்
வம்புக ளில்லையென்றே மன்ன னுரைத்திடவும்
ஆயன்முத லவர்கேட் டவரிடம் விடைவாங்கி
மாயனும் மன்னர்களும் வந்தார்கள் பாசறைக்கு
அப்போ விசயன் அழுதுமே சிந்தைநொந்து

தப்பனும் யானே தாதாவைக் கொன்ருலும்
வையகத்தோ ரெல்லாம் வசைசொல்வா ரெந்தனையும்
ஐயையோ வென்று அழுது தவித்திடவும்
மாயனதைக் கண்டு மன்னன் விசயனுக்கு
ஆயன் மொழிந்தான் அனேகமான நீதிகளை
நாற்றிசையுங் கொண்டாடும் நல்லசோதி யருணன்
கீற்றிசை யாழிதன்னில் கிளம்பினன் விண்ணேக்கி
இருதரப்புச் சேனைகளும் எல்லாம்யுத்த களத்தில்
நெறுநெறுத்துப்போகுது நிற்கவிட மில்லாது
சேனுபதி யெல்லாம் சீக்கிர மணிவகுத்தே
பானுத் தடிக்காரர் பாங்காக முன்னின்ருர்

பத்தாம்நாள் யுத்தம்

ஆயனுந் தேர்பூட்டி அனுமக் கொடிபோட்டே
மாயன் கிருபையுடன் மைத்துனனைத் தேரேற்றி
சாரத்தி யத்தொழிலின் சமர்த்தைக் காட்ட நினைந்து
பாரதில் ரதம்விடவே பார்த்தால் பயங்கரமே
யுத்தகளங் கொண்டுவந்தான் உலகளந்த மாமாயன்
அத்தநி கங்காசுதன் அங்குவந்து நின்று
சங்குநா தந்தொனிக்க சகலருங் கண்டஞ்ச
அங்குமே வந்து ஆயிரங் கணையேவ
ஐவர் படைபுகுந்து அதஞ்செய்ய வேயவர்கள்
ஐயையோ வென்று அனேகம்பே ரும்மடிய
வீஷ்மரு மன்றுதினம் வெகுரோசங் கொண்டுமே
தாஷ்டீக வானும் தான்தொடுத் தார்கணையும்
எத்தனையோ லட்சம் ஏகுது வந்நேரம்
அத்தனையும் வந்தே ஐவர்கள் சேனைதனை
அனியாயஞ் செய்தே அனேகம்பேரைமடிக்க
தனியாக வோடுகிருர் தனஞ்செயன் சேனைகளும்

பாளைய மெல்லாம் பார்த்தால் பயங்கரமே
வேளை துரியோதனன் விளம்புவார் வீஷ்மரிடம்
ஐயாவே யின்று அருமையான போர்செய்து
நையவே விசயனை நாலுதுண்டாய்ச் செய்திடுவீர்
என்று மொழிந்தே இருதாளை யும்பிடிக்க
நன்ருய்த் துரோணர் நவிலுவார் ராசனுக்கும்
மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாளுகின்ற புண்ணியனே நீர்கேளும்
அந்த முடைய அரசர் வெகுபேரை
விந்தையாக யானும் வெட்டியே சாய்த்தேனே
பார்த்தனின் றன்மேலே பகழியை யான்விடுத்து
ஆத்திரமாய் மடிப்பேன் அப்படியில் லாவிடிலோ
அந்தவிச யன்கணையால் அடியேனும் மாளுவதில்
சந்தேக மில்லையெனச் சாற்றினு ரேபெரியோர்
மேவியே யிப்படைக்குள் வீரமும் யான்காட்டி
பாவியுன் சோற்றுக்கடன் பழிகாரா தீர்த்திடுவேன்
என்றுகங் காசுதனும் இயம்பி யரசனிடம்
நன்ருக வந்தே நல்லபடை முன்பாக
அப்போது வீஷ்மர் அள்ளிக் கணைதனையே
தப்பாம லேவிடுத்தார் தன்யெதிரி மேலாக
அதிவேக மாகவே அந்தப்பா ணம்வந்தே
ததியே படைகளையும் சாடி மடித்திடவும்
பாளைய மெல்லாம் பருங்கூச்ச லுண்டாக
வேளைவிச யன்கண்டே வேண்டினுன் ரதம்நடத்த
மாயனுங் கேட்டு மகிழ்ந்து நடத்திவர
ஆயன் வருவதையே அறிந்து சிலவீரர்
வந்து யெதிர்த்து வாள்விச யன்நேரே
நொந்து மவர்விடுத்தார் நூறுகணை தப்பாது

அர்ச்சுனன் கணைவிடுத்து அத்தனையும் ரெண்டாக்கி
அர்ச்சுனன் தொடுத்தான் அனேககோடி கணையை
வந்து கணைகள் வண்கொலை செய்திடவும்
அந்தச் சமயம் அடுத்த மறுபுறத்தில்
அலம்புசன் றனக்கும் ஆயன் தம்பி தனக்கும்
கலகம் விளைந்ததே கடுமையான சண்டை
பகதத்த னங்குவந்தே பாணங் களைத்தொடுக்க
பகதத்த னோடு பாரக் கடோர்க்கசனும்
எதிர்த்தா ரிருவரும் ஏகநேரம் வரையில்
பதியரசன் தம்பி பாரதுச் சாதனனும்
அதிவேக மாய்வரவே அருச்சுன னுங்கண்டு
ததியே யெதிர்த்தானே தம்பி யுடன்விசயன்
விதவித மானசண்டை வேந்தர்கள் செய்திடவும்
அதங்களா கப்படையும் அருச்சுனன் செய்தானே
அரவக்கொடி யன்சேனை அறுபடு தேதலைகள்
கரகரெனத் தேரும் கண்ணன் நடத்திவர
விசயன் கணையாலே வெகுபேர் மடிந்திடவும்
விசயன் நினைந்தான் வீஷ்ம ரிடம்போக
அவனை மறித்தார்கள் அனேகமான மன்னவரும்
தவருய்த் தடுத்தவரை தான்பார்த்து மேவிசயன்
காண்டீபந் தன்னில் கடுங்கணை யைப்பூட்டி
வேண்டியே விட்டான் வேந்த ரிடந்தனிலே
அவரை வளைத்தே அம்புகள் பாய்ந்திடவும்
தவறு நினைந்தோன்படை தானெடுத் தாரோட்டம்
சிலைவிசய னச்சமயம் சிகண்டி தனையழைத்து
மலையாது வந்தான் மன்னன் தாதாவிடத்தில்
சிகண்டியை முன்னிறுத்தி சிலைவிசயன் பின்னிற்க
சிகண்டி பாணந்தொடுத்தே தேகமது பூரித்து

விட்டான் கணையே வீஷ்ம ரிடந்தனிலே
விட்ட கணையும் வேகமாய்த் தைத்திடவும்
கங்கா சுதனுங் கண்டு கணைகளையே
அங்கே நிமிர்ந்து ஆரிதெனக் குறித்தார்
அந்தமுள்ள சிகண்டி அங்குமே நின்றிடவும்
விந்தையைக் கண்டே வேர்த்து வுடம்பெல்லாம்
அப்போ துரைப்பார் அந்தச் சிகண்டியிடம்
இப்போது யென்மேல் எத்தனையை விட்டாலும்
உன்மேலும் பாணம் ஒருக்காலும் யான்போடேன்
மன்னவனே யிப்பிறப்பில் மா நீலி முன்பிறப்பு
ஆகையினு லுன்மே லம்பு தொடுக்கேனென
வகையாய் மொழிந்தே வம்பன்சும் மாவிருக்க
சிகண்டியுங் கேட்டே சிலையிற் கணைதொடுத்து
பகட்டியே விட்டானே பாவியுந் தப்பாமல்
கங்கா சுதனுங் கணைதொடுக் காதிருக்க
அங்கே விசயன் அவன்வில்லை யும்வளைத்தே
தொடுத்தே கணைக்கும் சொல்லி யுபதேசம்
விடுத்தானே பாவியும் வீஷம ரிடந்தனிலே
கணைகளு மோடிவந்து கங்கா சுதன்மேலே
வினையை நினைந்தே வேந்தன்மேல் தைத்திடவும்
பட்ட கணைதனையே பார்த்துமே வீஷ்மரும்
விட்டவன் விசயனென்று வேந்தன் மனமகிழ்ந்தே
வில்லை யெடுத்துமவர் வெகுதொனி யைக்காட்டி
தொல்லை விளக்கவே துடியாக வில்வளைத்து
கணைகள் தொடுத்திடவுங் காண்டீப னும்பார்த்து
கணைகள் வருமுன்னே கடுங்கணை யேவினனே
அந்த விசயன்கணை அதிவேக மாய்வந்து
விந்தையாய் வீஷ்மர்கணையை வெட்டியே தள்ளியதே

அர்ச்சுன னைப்புகழ்ந்தே அப்போ படையெடுத்து
கெர்ச்சனை செய்தே கீழிறங்கி யோடிவர
பார்த்தனுங் கண்டே பத்துக் கணையேவ
பார்த்தன் கணைவந்து பாரக்கத்தி யதனை
வெட்டி யெறிந்ததே வேந்தன்கணை தப்பாது
வெட்டியதைப் பார்த்து வீஷ்மர் விரைவாக
கத்திகே டயமெடுத்து கடுகிவர நினைந்தார்
அத்ததி கண்டானே அந்த விசயனுமே
காண்டீபந் தன்னில் கணையெட்டைப் பூட்டியே
தூண்டியே விட்டு சுருக்காயதை வெட்டினன்
அப்பாலும் விட்டான் அடங்காக் கணையதுவும்
தப்பாது பட்டதையோ தன்னுடைய தாதாமேல்
அந்தச் சிகண்டியும் அடங்காக் கணையேவ
விந்தை யொடுவந்து வீஷ்மர்மேல் பாய்ந்திடவும்
கங்கா சுதன்மேலே கணைகளெல்லாம் பாய்ந்திடவும்
பங்கமாய் மூர்ச்சையானர் பார்த்தன் கணைமேலே
அப்போ யிளந்தென்றல் அவருக் கடித்திடவும்
தப்பாது குளிர்ந்தமழை தான்பெய்ந்த தங்கேயும்
தேவதுந்துமி யதனை சேவித்தார் விண்ணுலகு
தேவர்களுங் கண்டே தேன்மாரி யும்பொழிந்தார்
மூவர்களுங் கண்டு மொழிந்திட நல்வாக்கு
நாவலர்க ளறிந்தே நலமாகப் பாடிவைக்க
அரவக் கொடியோன்படை அலையுதே தட்டுக்கெட்டு
திரமான வீரர்களும் திகைத்தே யலைந்திடவும்
அருமை வீஷ்மர்செய்தி அறிந்துமே மன்னர்களும்
இருதரப்புப் படைகள் எல்லாம் யுத்தம்நிறுத்தி
கங்கா சுதனிடமே காவல ரச்சமயம்
தங்காது வந்தார் தனையன் துரியனிடம்

அந்தச் செய்தியதனை அறிந்து துரோணரும்
சிந்தை கலங்கி திகைத்துமே கீழ்விழுந்தார்
அந்தச் சமயம் அஸ்வத்தாம னெடுத்து
சிந்தைத் துயரமதை தீர்த்தான் துரோணருக்கு
ஐவரு மோடிவந்தே அருமைத்தாதா விடத்தில்
ஐயனையே பார்த்து அழுதார் முறையிட்டார்
கங்கா சுதனுங் கண்டு துரியனையும்
அங்கவனை யழைத்தே அருமைய தாய்மொழிவார்
அப்பா வரசனே அருமையான யென்பேரா
இப்போது யெந்தனுக்கும் இமிசை யதிகமதால்
என்னுடம்பு நோகாது ஏந்தலே யிச்சமயம்
மன்னு தலையணையும் மாயன் சயனமதும்
செய்து கொடுவென்று செப்ப வரசனுமே
செய்தி யறிந்து சீக்கிரந் தன்னிலே
மெத்தை திண்டுமுதலாய் வேகமாய்க் கொண்டுவந்து
மெத்தை தனைவிரித்தே வேந்த னவர்க்குரைக்க
வீஷ்மருங் கேட்டு விளம்புவார் பாவியிடம்
தாஷ்டீக மான சமர்த்திற் பெரியவனே
மண்ணாசை பொண்ணாசை மற்றும் பொருளாசை
மன்னவ னேவிடுத்தேன் வயது பனிரெண்டில்
அதுவும் தெரிந்தே அறியாதான் போலவே
இதுவும் கொண்டுவந்தாய் ஏதுக்கு மெத்தையும்
என்றுமே தாதா எடுத்துரைக்கச் சங்கதியை
நன்ருகக் கேட்டான் நல்ல விசயனுமே
காண்டீபந் தன்னில் கணையிரண் டைப்பூட்டி
வேண்டியே விட்டான் வீஷ்ம ரிடந்தனிலே
கணையிரண்டும் வந்து கவட்டை யாகநின்றே
பனைக்கொடி யோன்சிரசை பாங்காகத் தாங்கிடவும்

அப்போ விசயன் ஆறு கணைதொடுத்தே
தப்பாது செல்லவிட தர்ப்பையது கொண்டுவந்தும்
ஆசனமாய்ச் செய்து ஆகாயந் தன்னிலே
பாசமாய் வீஷ்மரையும் படுக்கவே வைத்திடவும்
ஆனந்தங் கொண்டு அருச்சுனனை யேபுகழ்ந்து
வேண தவயோகி விசனமெல் லாம்போக்கி
தவயோகி வேடமதை தக்க தெனப்பூண்ட
சிவயோகி யச்சமயம் செப்புவார் தூரியனிடம்
அப்பா வரசனே அருமையான யென்பேரா
இப்போது யெந்தனுக்கும் எடுக்குது தாகமிக
தண்ணீரும் வேணுமென்று தாதா மொழிந்திடவும்
மன்னனுங் கேட்டும் மதிதனி லேயுயர்ந்தோன்
தங்கக்கூசா வதனில் தண்ணீருங் கொண்டுவர
கங்கா சுதனும் கண்டு வருவதையும்
சாகப்போம் சமயத்தில் தண்ணீரிப் பாத்திரத்தில்
தாகசாந்தி செய்குவது தகாத காரியமே
என்று மொழிந்துமவர் இவ்விசய னைப்பார்க்க
நன்று யறிந்து நல்ல விசயனுமே
வில்லை வளைத்தே வேகமா யோர்கணையை
நல்லவேளை விட்டானே நாணுமே விண்ணதிலே
அக்கணை சென்று ஆகாயக் கங்கைதனை
பக்குவ மாகவும் பதைக்கும் வீஷ்மர்வாயில்
அருவிபோ லேவிழவே அக்கணை செய்திடவும்
அருச்சுன னைப்புகழ்ந்து ஆனந்தங் கொண்டனரே
அப்போ தருச்சுனன் அருமையொடு மவரை
தப்பா தழைத்தான் தன்னுடைய பாசறைக்கு
இந்த மொழிதனையே இருசெவி யாற்கேட்டு
அந்த விசயனுக்கு அறைகுவா ரேபதிலும்

உத்திரா யணம்வரையில் உந்தன் சயனமதில்
பத்திரமா யிருந்து பரமபதஞ் சேர்வேன்
வருவதில்லை யென்று மாதவசி யுரைக்க
அருமையாய்க் கேட்டே அந்த விசயனும்
அவரையே நாய்நரிகள் அழிவுசெய் யாதபடி
அவரைச்சுற் றிக்கிடங்கு அரைநொடியி லுண்டாக்கி
தண்ணீர் நிரப்பிவைத்து தாளிற் பணிந்திடவும்
மன்னன் விசயனுக்கே மகிழ்ந்துவா சீர்வதித்து
விடைகொடுத் தார்செல்ல வேந்தர்க ளைவருந்
தடையில்லாது வந்தார் தங்களுட பாசறைக்கு
அரவக் கொடியோனை அழைத்துத் தவயோகி
திரமான புத்தியுமே செப்புகிரு ரச்சமயம்
துரியோ தனனே சொல்லுவ தைக்கவனி
அரிராம னிச்சமயம் ஐவர் பக்கமிருந்து
செய்கிற வேலையது தெரியவில்லை யோமன்னு
ஐவர்க்கு நாடதனை அரசே பிரித்துவிட்டு
பஞ்சவரும் நீயும் பாரரசர் பயங்க
வஞ்சகம் நினையாமல் மன்னருட னைத்திருந்து
உன்தம்பி மாரோடு உகந்து மரசாட்சி
மன்னவரே செய்யென்று வழுத்தினர் வேதாந்தி
அந்தகன் சுதன்கேட்டு அம்மொழி யைமறுத்தே
வந்தானே பாசறையும் மன்னனுஞ் சேனையுடன்

### கர்ணன் கங்காசுதனிடம் வருவது

அங்கதேச மதையே ஆண்டு வருங்கருணன்
பங்கம்நினை யாதபடி பதைத்துமே யோடிவந்து
வீஷ்மரிட மணுகி விசன முடனேங்கி
தாஷ்டீக வானும் தாதாபா தம்பிடித்து
அழுது முறையிட்டு அவரிடம் முட்டிவிழ

அழுதவனைப் பார்த்து ஆதர வாய்மொழிய
ஐயனே யும்மையான் அறியாமல் வைதேனே
ஐயனே யெந்தனையும் ஆதரிப்பாய் வேதாந்தி
என்று மொழிந்தே இருகண்ணால் நீர்வடிய
நன்றாகப் பார்த்தார் நல்லகங் காசுதனும்
அங்கதேச மதையே ஆண்டு வருங்கருணா
உங்கள் குலமும் ஓதுவேன் கேளென்று
ஆதி பிறந்ததும் அவன்வளர்ந்த விதமும்
ஓதியே கர்ணனுக்கு உன் தம்பி யைவருடன்
சேர்ந்து நீயும் செகத்தை முடிசூடினால்
பார்வேந்தர் யாவரும் பணிவிடை செய்வார்கள்
செல்லென்று வீஷ்மரும் செப்பக் கருணனுமே
உள்ளதையே கேட்டு ஓதுவா னேபதிலும்
அரவக் கொடியன்றனை அந்தர மாய்ச்செய்தே
திரமான மன்னரொடு சேரவே மாட்டேனே
சோற்றுக் கடன்றனையே தொலைத்து விடயானும்
பார்த்தன் கணையாலே படுவது நிச்சயமே
என்று கருணன் இயம்பிட வேவீஷ்மர்
நன்றாகக் கேட்டு நல்லாசைப் புகழ்ந்தார்
யுத்தஞ் செய்யும்விதம் உரைக்கக் கருணனுமே
அத்ததி விடைவாங்கி அவன்சென்றான் பாசறையும்
வெய்யோனுங் கண்டு விசன மதில்மூழ்கி
மையவே சென்றான் பகவானும் மேல்கடலும்
அந்தமுள்ள சஞ்சயன் அவ் தினபுரிசென்று
விந்தையான சங்கதியை விளம்ப வரசனுக்கு
அவனுமே கேட்டு அலறியே கீழ்புரள
அவனை யெடுத்தே ஆதரவாய்ச் சஞ்சயனும்
அந்தகன் றனக்கு அனேகமான நீதிகளை

தந்திரமாய் மொழிந்தே தான்தீர்த்தான் சோகமதை
கதிரோனும் வந்தேகீழ்க் கடலி லுதித்திடவும்
பதியரசர் பார்த்து பகவான் றனை நினைந்தும்
காலைக் கடன்முடித்தே காவலர்க ளந்நேர
வேளையே போர்க்களத்தில் வேந்தர்க ளும்வந்தே

பதினோராம் நாள்யுத்தம்

அரவக் கொடியோனும் அவன்மாம னுஞ்சகுனி
திரமான மன்னரெல்லாம் சேர்ந்து கருணனொடு
எல்லவருஞ் சேர்ந்தே யேகமா யோசித்தே
நல்ல துரோணரையே நமக்குச் சேனாபதியாய்
செய்யவே ணு மென்று தீர்மான மேசெய்து
டைய மொழிந்தார் பாரத் துரோணரிடம்
அவருமே சம்மதிக்க அரசரெல் லாஞ்சேர்ந்து
அவருக்குச் சேனாபதி அன்பாகக் கட்டியும்
அடிபணிந்து நின்றான் அரவக் கொடியோனும்
வடிவுடைய மன்னவனை யாசீர் மிகவதித்து
சந்தோஷங் கொண்டே தானவ னைப்புகழ்ந்தே
இந்தவேளை யுந்தனுக்கும் என்னசெய்ய வேண்டுமென
மன்னுசொல் லென்றிடவே மனமகிழ்ந் தேயரசன்
மன்னன் றருமரையே மாயமாய்க் கட்டி நீர்
எந்தனிடந் தாருமென்று இயம்பிட வேதுரோணர்
அந்த மொழிகேட்டு அரசனிடம் புகல்வார்
அப்பா வரசனே அருமையான யென்சீடா
செப்புவேன் யானும் தீரன் துஷ்டத் தாய்மனையும்
வதைக்க முடியாது வம்பனை யென்னாலும்
வதைப்பான் அவன்யெனையே வழுத்தினே னுண்மையிது
என்னால் முடிந்தமட்டும் எப்படியுந் தர்மனையும்
மன்னுகட்டித் தாரேனென வழுத்தினார் மாமறையோர்

அப்போ துரோணரும்அணி யணி யாய்வகுத்து
தப்பாது சேனைகட்கே தைரியங்க ளுரைத்தே
பாகனை ரதம்விடவே பகர்ந்திட வேயவனும்
வேகமாய் நடத்தினனே மேன்மையான ரதத்தை
அப்போ துரோணர் ஆவேசங் கொண்டவரும்
செப்பவொண்ணு வில்லை சீக்கிர மேயெடுத்து
வளைத்தே கணைபூட்டி வாரிவிடப் பகழி
துளைக்குதை வர்படையை துடியாக வந்நேரம்
அவரை யெதிர்ப்பதற்கு ஆளில்லாத படியால்
அவரு முலாவியே அடிக்கிறுர் சேனைகளை
அப்பா லொருபுறமும் அந்தச் சகாதேவன்
தப்பன் சகுனியொடு சண்டைமிக மும்முரமாய்
இருவர்கள் யுத்தமது ஏகநேரம் வரையில்
மறுகோர் புறத்திலே மன்னன்மத வீமனுக்கும்
வீவிம் சதிக்கும் விளைந்தது பெரும்போரு
பாவியுடன் வீமன் பாரயுத்தஞ் செய்திடவும்
வீம னடிக்கவே வேந்தன் மயங்கிவிழ
வீமன் கதைபிடித்தே வெகுசனத் தைமடித்தான்
நகுலனு மச்சமயம் நல்லசல் லியனோடு
வெகுவான யுத்தம் விளைந்தது வந்நேரம்
அப்பா லொருபுறத்தில் ஆயன் தம்பிதனக்கும்
தப்பன் கிருதனுக்கும் தான்விளைந் ததுபோரு
இருவர்கள் வில்வளைத்தே ஏகக் கணைதொடுத்தே
ஒருவர்க் கொருவர் ஓயாம லேயுத்தம்
பவுரவ வீரனும் பாலன் அபிமனின்மேல்
பவுருடனே விட்டான் பகழிகள் கோடிவரை
அந்த முடைய அபிமன்ன னத்தனையும்
விந்தையான கணையால் வெட்டி யெறிந்தானே

அப்பச் சிறுபாலன் அனேக-மானகணையை
தப்பன்மே லேவ தான்பட்டு மோடினனே
சீக்கிரமாய் வந்தான் செயத்தரச னங்கேதான்
அக்கிரமம் பேசி அவன்கத்தி யையெடுத்து
அபிமன்ன னைவெட்ட அவனுமே யோடிவர
அபிமன்ன னுங்கண்டே ஐந்து கணையேவி
கத்தியைக் கண்டிக்க கண்டான் செயத்தரசன்
அத்ததி கதைபெடுத்து ஆவலா யோடிவர
சிறுவனுங் கண்டே சிலகணை யைவிடுத்து
வருபவனை யடிக்க வம்பனு மோடினனே
சல்லிய னுங் கண்டு சல்தியா யங்குவந்து
சொல்லிவாய் மூடுமுன்னே தூண்டிவிட் டான்கணையை
அந்தமுடை யபாலன் ஆறு கணைவிடுத்தே
வந்தகணை யெல்லாம் வாட்டினுன் ரெண்டாக
அப்பாற் சிலகணையை அதிவிரை வாயேவ
தப்பாக வந்த சல்லியன்மேற் பாய்ந்திடவும்
சாரதியுஞ் சாக சல்லியன் கதைபிடித்து
பாரதி லோடிவந்தான் பாலக னையடிக்க
கண்டவ ரஞ்சிடவே கடுங்கோப மாய்வரவும்
வண்டன் வருகிறதை மதவீம னுங்கண்டு
தானு மெடுத்து தன்கதை கரம்பிடித்தே
கா ணுமுன்னே வந்து கதையினுற் சாடினனே
சல்லிய னடிபட்டு தயங்கி மயங்கிவிழ
சல்லிய னிடத்தினிலே தான்வந்தான் கிருதவர்மா
துள்ளி விழுந்தோனை தூக்கிரதத் தில்வைத்து
தள்ளியே சென்ருன் சமர்க்களத் தைநீங்கி
அங்கதேசன் சுதனும் அந்தநகு லன்மகனும்
அங்கேயே வந்து அமரதுவுந் தொடுத்தார்

இருவர்கள் யுத்தமது ஏகநேர வரையில்
கெருவமொடு செய்தார் கிலேச மில்லாதபடி
வாளபிமன் வந்து வளைத்துமே வில்லதனை
வேலாயுதம் விடுத்தே வெகுசனத் தைமடித்தான்
அரவக் கொடியன்சேனை அலையுதே தட்டுக்கெட்டு
திரமான மன்னரெல்லாம் செப்பாம லோடுகிருர்
சேனுபதி துரோணர் சீக்கிர மாய்வந்து
சேனுபதி மதிவை செப்பியே சேனைகட்கும்
அவர்களை யெல்லாம் அருமைய தாயழைத்து
தவராது வந்தார் தக்க படையுடனே
அவரவர் வில்வளைத்தே அகோர பாணந்தொடுக்க
தவராய்த் துரோணர் தர்மர்மே லேவினுர்
அப்போ தருமர் அறிந்துமே வில்வளைத்து
தப்பாமல் கணைதொடுத்து தானேவி னுர்சங்கம்
துரோணருங் கண்டு சுருக்கா யதையறுத்து
விரோதம் நினைந்தே வேந்தன்தர் மர்தனையும்
கட்டவேணு மென்று காரம் நினைந்துமவர்
கிட்டவே வந்தார் கிரமந்தப்பி வேதியரும்
அறிந்து சிகண்டி அவர்தம்பியும் நகுலன்
தெரிந்தானே சங்கதியும் சீக்கிரம் விராடனும்
துரோணரிடம் வந்து துடியாக் கணைவிடவும்
துரோணர் கணையேவி துண்டித்தா ரத்தனையும்
அப்பால் தொடுத்தார் ஆயிரங் கணையதனை
தப்பாமல் வந்தே சல்லியம் விளைத்திடவும்
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமரையே
வறுமை யுடன்கட்ட வந்துவிட்டான் துரோணர்
பாளைய மெல்லாம் பார்த்துப் பரிதவித்து
வேளையே கத்தினுர் வேந்தன் மடிந்தாரென்று

ஐயையோ வரசனுக்கு அழியுங்காலம் வந்ததுவே
செய்வதென்ன வென்று தேம்பியே கூச்சலிட்டார்
இந்தச்சத்த மதையே எழில்விச யன்கேட்டு
விந்தை யிதுவென்று விருதய முங்கலங்கி
ஆய னிடமே அவன்சொன்னான் சங்கதியும்
மாயனுங் கேட்டே மலையாதே யென்றுரைத்து
தர்மரைக் காக்கவே தயாபரனு மெண்ணி
தர்மரிடஞ் செல்ல தானடத்தி யோரதத்தை
அதிவேக மாகவே ஆயன் ரதம்நடத்தி
ததியுமே சென்றார் தர்ம ரிடந்தனிலே
காண்டீபத் தில்விசயன் கண்ட கணைபூட்டி
தூண்டியே விட்டான் துளைக்குங் கணையதனை
துரோண ரிடம்வந்தே துன்ப மதைவிளைத்து
விரோதங்கள் செய்ய விசயன் கண்டுமகிழ
அவதி மிகப்பட்டு அப்பா லவர்செல்ல
தவரா தருச்சுனனும் தானேவி னன்கணையு
துரியோ தனன்படையைத் துளைக்குதை யோகணையும்
அரிகரி யென்றுமே அனேகம் பேருமடிந்தார்
பின்னும் விசயன் பெருங்கணை யேவிவிட
மண்ணுவிண்ணுங் கொள்ளாது வந்துமே சேனைதனை
அம்புகள் பட்டிடவும் ஆவி களைப்போக்கி
வம்புகள் செய்யுதே வந்தகணை தப்பாது
கோடி சனத்தை கொள்ளைகொள் ளக்காலன்
நாடி யுயிர்பிடித்து நடந்தானே தென்திசையில்
நாற்றிசை யுந்துதிக்கும் நல்லசோதி யருணன்
மேற்றிசை யாழிதனில் வீழ்ந்தான் விசனமொடு
இருதரப்புச் சேனைகளும் ஏகினர் பாசறையும்
நறுமணஞ்சேர் சஞ்சயனும் நாடி நகரமதில்

திரிதராட் டிரனிடமும் செப்பினன் சங்கதியை
அறியவே கேட்டு அவன்மயங்கி யிருக்க
பாரத யுத்தமதை பார்க்கவென்று வெய்யோனும்
தேரதையே நாட்டி தெய்வ பரிபூட்டி
கதிரோனும் வந்துகீழ்க் கடலி லுதித்திடவும்
பதியரச ரச்சமயம் பார்த்து விதிமுடித்து
இருதரப்புச் சேனைகளும் எல்லாங் குருக்ஷேத்திரம்
நெறுநெறுத்துப் போகுது நிற்கவிட மில்லாது

பனிரெண்டாம்நாள் யுத்தம்

வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்ததுரி யோதனனும்
சஞ்சலங் கொண்டே சாற்றுவான் துரோணரிடம்
இன்றைத் தினத்தில் எனதண்ணல் தர்மரையும்
நன்றாகக் கட்டி நாதனே யென்னிடமும்
கொடுக்க வேண்டுமெனவே குருக்களு மச்சமயம்
வடுப்படா மன்னவனே வழங்கியது போற்செய்வேன்
என்று மிவர்கள் இவ்வாறு பேசியதை
நன்றாய் விசயனுக்கு நவின்றார்கள் தூதுவர்கள்
அந்தச் செய்தியதனை அறிந்துமே பார்த்தனும்
பாஞ்சால ராசனிடம் பகர்ந்துமே சங்கதியை
பாஞ்சால ராசனை பக்கத்துணை யாய்வைத்தும்
சஞ்சத் தகரெனையே சண்டைக் கழைத்தார்கள்
சஞ்சத் தகரோடு சண்டைசெய்ய யான்போறேன்
அண்ணாவும் பத்திரம் அடியேன் வரும்வரையில்
மன்னவனே யென்று வழுத்தினு னேவிசயன்
இருதரப்புப் படையும் எல்லாம் யுத்தகளத்தில்
நெறுநெறுத்துப் போகுது நிற்கவிட மில்லாமல்
துரோணரு மச்சமயம் சூரிய யூகம்வகுத்து
விரோதம் விளக்கவே வேதியன் மனதிலெண்ணி

ஆவேசங் கொண்டுமவர் அங்குமே முன்னின்று
பூவேந்தன் தர்மர் பொறுமையான படையை
அணிகளாய்ச் செய்தே அங்கே யூகம்வகுத்து
அணிமுன்னே நின்ருன் அந்தத்துஷ் டத்தூய்மன்
சஞ்சத் தகரொடு தனுவிசய னச்சமயம்
பம்பரம் போல்ரதத்தை பகவான் நடத்திடவும்
அருச்சுன னேடு அவர்கள்வந்து மெதிர்க்க
இருதரப்புச் சண்டையும் ஏகமதா யங்கும்
இங்கே துரோணர் எல்லாப் படையுடனே
தங்காது சென்றே தருமரை யின்றுதினம்
கட்டவேணு மென்று காந்தாளந் தன்னுடனே
சட்டமாய் வில்வளைத்தே தானேவி னுன்கணையும்
அந்தக் கணையும் அதிகக் கோபமுடனே
விந்தையொடு வந்து வேந்தன் தர்மர்படையை
அதிவேக மாகவே அனேக மன்னர்தனையே
ததியே மடித்து சங்கடங்கள் செய்திடவும்
பாளைய மெல்லாம் பார்த்தா லலங்கோலம்
வேளையே கண்டான் வேந்தன் துஷ் டத்தூய்மன்
பாகனை ரதம்நடத்த பகர்ந்திட வேயவனும்
வேகமாய் நடத்திவந்தான் மேன்மையான ரதத்தை
துரோண ரிடமே துஷ்டத்தூய் மன்வந்தே
விரோதம் விளைக்க வேந்தன் வில்லைவளைத்து
வேண கணைதொடுத்து விளம்பி யுபதேசம்
பாணப் பிரயோகம் பண்ணினுன் கோடிவரை
வஞ்சகன் சேனையிலே வந்து கணைபாய்ந்து
தஞ்சங்க ளடைந்து தான்மடிந்தார் சிலபேர்
கண்டு துரோணர் காலனைப் போல்வந்து
சண்டைகள் செய்தே சனத்தை ரெம்பமடிக்க

துரியோதனன் தம்பியர் துஷ்டத்தாய் மனிடத்தில்
சரியாக வந்தே தான்தொடுத்தார் பாணம்
ஒருவர்க் கொருவர் ஓயாத சண்டையது
இருவர்கள் போரும் ஏகநேரம் வரையில்
மற்ற வரசரும் மனதிற்பயங் கொள்ளாது
கற்றவித்தை யெல்லாங் காட்டினார் யெதிரியின்மேல்
அன்றுதினஞ் சண்டை அதிகமான கோரம்
கண்டுமே தேவரெல்லாங் கலங்கினா ரேயுள்ளம்
அந்தச் சமயம் அறிந்து துரோணரும்
இந்தவேளை தர்மரை எப்படியுங் கட்டவென்று
வஞ்சகன் றனக்குரைத்த வாக்குத் தவறாமல்
சஞ்சல மில்லாமல் தான்வந்தா னேபாவி
சத்து சித்துகண்டு சல்தியா யங்குவந்து
அத்ததி துரோணர்முன் அவன்வளைத் துச்சிலையில்
தொடுத்துக் கணையதனை சொல்லி யுபதேசம்
விடுத்தான் கணையை வேதியர் தன்மேலே
துரோணருங் கண்டு தொண்ணூறு கணையேவ
துரோணர் கணையும் துடியாக வோடிவந்தே
வருங்கணை யத்தனையும் வாட்டிரெண்டு துண்டாக
குருவுமே கண்டே கோடிகணை யேவ
வந்தே கணையும் வம்பன்சத்து சித்ததனை
நொந்திடவே செய்து நொடியில் மடித்திடவும்
கால னவனுயிரைக் கண்டு பிடித்தேக
மேள மடித்தான் வேந்தன் துரியன்படை
அப்போ வெகுமன்னர் அந்தணர் துரோணரிடம்
தப்பாமல் வந்தங்கே சல்திகணை தொடுத்தார்
வந்த கணையெல்லாம் வாட்டிவிட் டேதுரோணர்
அத்தவேளை யேவினான் அடங்காப் பகழிதனை

கணைகளும் வந்தே கண்ட துண் டஞ்செய்ய
வினையை நினைந்து வெகுசனம் மாண்டார்கள்
ஐவர்கள் பாளையமும் அலங்கோல மாயலைய
செய்தே துரோணர் செயபே ரிகையடிக்க
பார்த்தால் பரிதாபம் பஞ்சவர்கள் படையை
தீர்த்திட்டான் விற்பிடித்தே தீரனந்தத் துரோணர்
அப்போது வீமன் அலறியே யோடிவர
தப்பாது தர்மன் தான்வந் தெதிர்த்தானே
வாயுவு சுதன்கண்டு வாரிவிட் டான்கணையும்
பாயு தவன்மேலே பகழிகள் தப்பாமல்
சல்லியனும் வந்தே தர்ம ரிடந்தனிலே
சொல்லி முடியவில்லை துஷ்டன் விட்டகணைகள்
இருவர்கள் சண்டையு மிப்படி யங்கிருக்க
கெருவமொடு வந்தான் கெட்ட விந்தானுவன்
விராட மன்னன்கண்டு வேகமாய் வந்தெதிர்க்க
விராடன்மே லேவினன் வேந்தன் கணை நூறு
அத்தனையுங் கண்டிக்க அந்தச் சமயத்தில்
மெத்தவேக மாய்வந்தான் வீர னலம்புசனும்
அந்தக் கடோர்க்கசனும் ஆவலா யோடிவந்து
விந்தையாய் விட்டான் வேண கணையதனை
அலம்புசனுங் கண்டே அத்தனையுந் துண்டாக்கி
கலகம் விளைக்கக் கடுங்கணை யேவினனே
அத்தனையுங் கண்டித்தே அந்தக் கடோர்க்கயன்
சித்தமொடு யுத்தம் செய்தா ரிருவரும்
வஞ்சகன் சேனைகளும் வம்புக் கணைதொடுத்து
பஞ்சவர் சேனையிலே பகழியை யேவினரே
தடுக்க முடியாமல் தயங்கியே பாளையமும்
நடுக்க மெடுத்தார் நலியாம லும்மடிந்தார்

ரெத்தவெள்ள மோட செத்த பிணம்போக
அத்ததி பேய்களும் ஆடுதெங்கு கூத்து
பார்த்தால் பரிதாபம் படுகள மெல்லாமே
வேர்த்துமே நின்றார் மீதி யிருந்தவர்கள்
இப்படிக் காக இங்கு யிருந்திடவும்
அப்போது சென்ற அருச்சுனன் தென்திசையில்
சஞ்சத் தகரோடு சண்டை மிகச்செய்து
சஞ்சத் தகரை தாக்கிட வாளியால்
அவர்களும் விட்டார் அகோர மானகணைகள்
தவறாய் வருவதையே தறித்தே விசயனும்
அப்போ தொடுத்தான் அருமையா கப்பகழி
செப்பவொண்ணு வர்ச்சுனனுய் தெரிந்திடப் பாதகர்க்கு
எத்தனையோ விசயன் எங்குமே நின்றிடவும்
அத்ததி கண்டார் அசுரர் சஞ்சத்தகர்
அர்ச்சுன னென்றே அடித்துக் கொண்டுமவர்கள்
கெர்ச்சனை செய்தே கீழ்விழுந்து மடிந்தார்
அந்தச் சமயமதில் அடித்திறந் தார்சிலபேர்
விந்தைகளை யெல்லாம் விசயனு மேகண்டு
ரதத்தை நடத்தவேண்ட நந்தகோ பாலனுமே
இதமாய் நடத்த இங்குவந்து மறித்தார்
ஆயனுங் கண்டே அதிசய மென்றுமவர்
மாய னருச்சுனனை மன்னு வதையென்றார்
அர்ச்சுன னனந்தமாய் அவர்மேற் கணையேவ
கெர்ச்சனை செய்துவந்தோர் கீழேதள் ளக்கணையும்
வெகுபேர் மடிந்திடவும் வெகுபேர்கள் தானேட
பிகுவாக விட்டான் பின்னும் விசயன்கணை
விரட்டி யடித்தான் வெகுதூரஞ் சென்றார்கள்
மரட்டினவ ரோட மாயன் ரதம்நடத்தி

அதிவேக மாகவுமே அருச்சுன னும் மாயன்
ததியே தான்வந்தார் தரும ரிடந்தனிலே
இவர்கள் வருமுன்னே ஏங்கிப் படைகளெல்லாம்
தவறுவந்த தென்றே தானிருக் குஞ்சமயம்
ஆய னருச்சுன னும் அங்கோடுஞ் சேனைதனை
நேயமுடன் திருப்பி நிகழ்த்தி மதியதனை
எல்லவருஞ் சேர்ந்து ஏகி யெதிரியிடம்
சல்லாப மாய்வந்து தான்வளைத் தார்தனுசை
பஞ்சவர் சேனைகளும் பகரவொண் ணுக்கணையை
வஞ்சகன் சேனையிலே வாரிவாரி யேயிரைத்தார்
காண்டா வனதகனன் கனகோபந் தன் னுடனே
நீண்டகாண் டீபமதை நேராக வேநிறுத்தி
வல்லநல் வில்லதனை வளைத்துக் கணைபூட்டி
சல்லாப மாகவுமே சாடினுன் சேனைகளை
வருகிற தேகணையும் மண் ணுவிண் ணுங் கொள்ளாமல்
வருங்கணையைக் கண்டே வாளிதனை யேவினுர்கள்
அத்தனையும் வெட்டி அருச்சுனன் தன்கணையும்
மெத்தக்கோபங் கொண்டு விரைவாக வோடிவந்து
வஞ்சகன் சேனைதனை வாட்டியே பாய்ந்திடவும்
பஞ்சாய்ப் பறந்தே பார்மன்ன ரோடினரே
பாளையத்தை யந்நேரம் பார்த்தால் பரிதாபம்
வேளையே கண்டான் வேந்தன் பகதத்தன்
ஆனையி லேறியே அவனுமிகக் கோபமொடு
சேனையிடம் வந்தே செப்பித் தைரியத்தை
ஓடின மன்னரை ஒத்துமை யாய்ச்சேர்த்து
நாடியே வந்தான் நல்ல விசயனிடம்
அர்ச்சுனன் றன் னுடனே அவனுமே வந்தெதிர்த்து
கெர்ச்சனை செய்தே கிரீடியின் முன்வந்து

தொடுத்துக் கணையை சொல்லி யுபதேசம்
விடுத்தானே கோபமொடு விசய னிடத்தினிலே
காண்டா வனதகனம் கண்டு வருங்கணையை
நீண்ட வில்லிற்பூட்டி நீட்டிவிட் டான்கணையும்
வந்த கணையெல்லாம் வாள்விசயன் கண்டித்து
அந்தவேளை விடுத்தான் ஆயிரங் கணையதனை
அதிவேக மாகவந்து அனேகமான படையை
ததியே மடித்தது தடைகளொன்று மில்லாது
அந்தப் பகதத்தன் அறிந்துமே சங்கதியை
விந்தை யிதுவென்று வெண்ணி மனத்தினிலும்
அவனுமே யச்சமயம் ஆலோ சனைசெய்து
தவமதையே செய்து தன்தகப்பன் வாங்கினதோர்
அந்தக் கணையை அவன்கொடுக்க வேயிவனும்
சொந்தமாய் வாங்கினன் துடியன் பகதத்தனும்
சந்தோஷ மாகவுமே தானெடுத்து மதையும்
விந்தையாய் வில்லில்தொடுத்து வேண்டியது மொழிந்து
அருச்சுனன் சிரத்தை அறுத்துவரு வாயெனவும்
திருத்தமாய் விட்டான் சிலைவிசயன் றன்மேலே
வில்லி லிருந்து விடுபட்டுப் பாணமது
சொல்லி முடியாது சுடராய் வருகுவிதம்
அஷ்டதிக்குப் பாலகர் அவதி மிகவடைந்து
அஸ்திர மின்றுமே அழித்து விடும்நரனை
என்று மொழிந்துமே எட்டியே சென்றிடவும்
நன்றாகத் தேவர்களும் நல்யோ சனைபுரிந்து
அர்ச்சுனன் றனக்கு ஆபத்து வேளையிது
அர்ச்சுனனு மின்று அழிந்து விடுவானென
தேவர்கள் பேசி தியங்கியப் பாற்செல்ல
மூவர்களுங் கண்டே மோசமே வந்ததென்றார்

அப்போ கணையும் ஆவலாக வோடி
தப்பாய் விசயன்மேல் தான்வர வேகமாய்
அருகில் வந்தகணையை ஆயன்கை யாற்பிடித்து
நறுமலர் மாலையதாய் நாதனுஞ் செய்ததையும்
கழுத்தி லணிந்தார் கவலையெல் லாம்போக்கி
கழுத்தி லணிந்ததை கண்டுமே தேவர்களும்
ஆனந்தங் கொண்டு அவர்மலர் மாரிபெய்தும்
ஆனந்த துந்துமியும் அடித்தாரே விண்ணிலும்
அர்ச்சுனனுங் கண்டு ஆயனைக் கோபிக்க
அர்ச்சுனு யென்னவென்று ஆதிமூலங் கேட்கவும்
எந்த னிடந்தனிலே இக்கணையை விடாது
வந்த கணைதனையும் வம்புகள் செய்தாயே
இப்படிச் செய்துநீ எனக்கு அபிமானம்
தப்பாகத் தேடிவைத்தீர் சாமியே யென்றனனே
அந்தச் செய்தியதனை ஆயனு மேகேட்டு
வந்த கணையின் வரலாறெல் லாமோத
அந்தப் பகதத்தன் அறிந்துமே சங்கதியை
சிந்தை கலங்கி சேயன் பலங்குறைந்து
நீண்டவில்லை நிறுத்தி நிட்டூரே மானகணை
வேண்டியதைத் தொடுத்து விளம்பியே மந்திரமும்
காதளவு வாங்கி கடுமை யுடனேவ
பேதமில் லாதுகணை பிரியமா யோடிவர
காண்டா வனதகனன் கண்டுமே சீக்கிரத்தில்
நீண்டகாண் டீபமதை நிறுத்தியே முன்னாக
அள்ளிக் கணைதனையே அதிகமா கத்தொடுத்து
சொல்லி யுபதேசம் தூண்டிவிட் டானங்கே
அதிவேக மாக அக்கணை யோடிவந்து
ததியே வந்தகணையை தாக்கினது ரெண்டாக

பின்னும் விசயன் பெலமாய்க் கணைதொடுத்து
மன்னனு மேவினனே மடையன்பக தத்தன்மேல்
அந்தக்கணையும் அதிவேக மாய்வந்து
விந்தையா யவன்சிரத்தை வெட்டியே சாய்த்ததுவே
அப்போ விசயன் அதிக கணைதொடுத்து
தப்பாம லேவினுன் சண்டாளன் சேனையின்மேல்
அதிவேக மாகவுமே அக்கணை யோடிவந்து
ததியே வெகுபெயரை சல்தி மடித்திடவும்
அலையுதே சேனைகளும் அங்கங்கு மேயோடி
அலையுஞ்சே னையிடத்தில் அந்தச் சகுனிவந்து
எல்லவரைச் சேர்த்து எதிர்த்து விசயனிடம்
நல்லசண்டை செய்தான் நாழிகை யொன்றுவரை
மாயசாலஞ் செய்தான் மன்னன் சகுனியுமே
ஆய னருச்சுனனும் அந்தவிந் தைபார்த்து
காண்டீபத் திற்பூட்டி கணைகளை யேவிவிட
தாண்டியே வந்தும் சமர்த்தன் சகுனிதனை
சல்லடைக் கண்ணாக சரீரமெல் லாந்துளைக்க
சொல்லாம லோடினனே சூதில் திறமுடையோன்
அங்கிருக்குங் கருணன் அறிந்துமே சங்கதியை
தங்காமல் வந்து தனுவிசய னைமறித்து
வல்லநல் வில்லதனை வளைத்து வதுசமயம்
சல்லாப மாய்க்கணையைத் தான்பூட்டி யேவினனே
அதிவேக மாகவே அக்கணை யோடிவர
ததியே விசயனும் தான்பூட்டி யேகணையை
அத்தனை கணைகளையும் அறுத்தான் இரண்டாக
மெத்தநேரம் வரையில் வேந்தர்க ளிருவருக்கும்
சல்லியங்க ளாகவே தற்சமய மங்கு
நல்ல கருணன்சுதர் நாடியே வந்துமவர்

வில்லவனைத் தேகணையை விசயன்மே லேயேவ
தொல்லைசெய்த கணையைத் தொலைத்தான் விசயனுமே
எட்டுக் கணைதொடுத்து ஏகவும் பாலகரை
சட்டெனவே வந்து தறித்ததை யோசிரத்தை
அந்த மதவீமன் ஆங்காரக் கோபங்கொண்டு
சந்தோஷ மாய்க்கதையைத் தான்பிடித் துக்கரத்தில்
வஞ்சகன் சேனைகளை வாட்டினு னேகதையால்
சஞ்சல மிகவடைந்தே தான்மடிந்தார் சிலபேர்
அன்று கதிரோனும் அறிந்துமே சங்கதியை
சென்றுனே மேலாழி சீக்கிர மாகவுமே
அன்றுமே தர்மரையும் அந்தத் துரோணரும்.
சென்றுமே கட்டுதற்கு செயலில் லாதபடியே
பாளையத்தைக் கூட்டி பாசறை சென்றிடவும்
வேளை தர்மர் படையும் மேவினுர் பாசறையே
அந்தமுள்ள சஞ்சயன் அஸ்தினு புரிசென்று
அந்தக னிடத்திலே அறைந்தானே சங்கதியும்
அரசனு மேகேட்டு அவதி மிகவடைய
திரமான நீதிகளைச் செப்பினு னம்மானை
நாற்றிசை யுந்துதிக்கும் நல்லசோதி யருணன்
கீற்றிசை யாழிதனில் கிளம்பினுன் விண்ணேக்கி

பதின்மூன்றும் நாள் யுத்தம்

பதியரசர் பார்த்து பகவானை யேநினைந்து
விதிகளை யேமுடித்தார் வேந்த ரிருதரப்பும்
வஞ்சகத்தை நெஞ்சதிலே வைத்ததுரி யோதனனும்
சஞ்சல மோடு சாற்றுவான் துரோணரிடம்
தனுசாஸ்திர முதலாய் தான்கரைத்து முண்டவரே
மனுநீ தியையறிந்த மாமறையோ ரேகேளும்

பஞ்சையைவர் பேரில் பாச மதைநினைந்து
வஞ்சகத்தை நீரெண்ணி மன்னன் தருமரையே
கட்டித் தராதபடி காவலா வெகுவரசர்
கொட்டி நகைத்திடவும் குருவேநீ யேற்பட்டாய்
என்று மொழிய இதைக்கேட்டு மேதுரோணர்
நன்ருக ராசனுக்கும் நவிலுவா ரம்மானை
அப்பா வரசனே அருமையான யென்சீடா
செப்புவேன் கேளும் செகமாளும் மன்னவனே
காண்டா வனதகனன் காளையே யவ்விடத்தில்
நீண்டவில்லைப் பூண்டு நிற்பானே யாமாகில்
கொர்ச்சனை செய்து கிட்டவே சென்ருலும்
அர்ச்சுன னங்குநின்ரு லாகாது கட்டிடவும்
விசயனை நீங்கள் வெளியிழுத்துச் சென்ருலே
விசனமதை யான்போக்கி வேந்தன் தருமரையும்
கட்டுவேன் தடையில்லை காவலா வென்றிடவும்
கிட்டயிருந் ததுரியன் கேட்டு மகிழ்வடைய
அப்போ துரோணர் அனேகம் படைதனையும்
தப்பாது கூட்டிவந்து சல்தியுத்த களத்தில்
பத்ம யூகமாகப் படைத்துமே சேனையெல்லாம்
மெத்தக்கோ பமுடனே வேதியன் நின்ருன்முன்
பாவி சஞ்சத்தகர் பார்த்தனைப் போர்க்கழைத்து
மேவியே சென்ருர் வேந்தனுட ஞேர்புறமும்
அந்த முடைய அருச்சுனன் வில்வளைத்து
சந்தோஷ மாகவே தானேவி ஞன்கணையும்
அங்கே நடத்திஞர் அபாரமா யுத்தமதை
இங்கே தருமர் இருக்கும்படை பூராவும்
வந்து யெதிர்த்தார் வஞ்சகன் சேனையிலே
வந்தவரைக் கண்டார் வாகான மன்னர்களும்

குருக்களுமே யச்சமயம் கோடி கணையேவ
குருக்களுக்கு முன்னே கொழுத்த பீமன்வந்தும்
அத்தனை கணையும் அறுத்தான் நிமிடமதில்
மெத்தக் கோபங்கொண்டு வில்லி துரோணரும்
வில்லில் தொடுத்துவிட்டான் வேகமான கணையையும்
சொல்லி முடியாது துடியாய் வருகும்விதம்
மதவீமன் தேருடைந்து மார்பினிலே தைத்திடவும்
அதமாக வேயவனும் அப்பாலு மோடினனே
அந்தயூகத் தைக்கெடுக்க அனேகம் பேருமங்கு
விந்தைய தாகவே வீரர்க ளோடிவா
துரோணருங் கண்டு துருசாக் கணைவிடுத்து
விரோதம் விளைத்தே வெகுசனத் தைமடித்தார்
ஐவருட பாளையமு மலையுதே தட்டுக்கெட்டு
ஐயன் துரோணரும் அள்ளிவிட் டான்கணையும்
விடுத்த கணையும் வீண்போகாத படியே
தடுக்கமுடி யாதபடி சனங்கள் மடிகிறதே
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமரையே
அருமையறியாத் துரோணர் அருகில்வாரார் கட்டிடவும்
முரசக் கொடியோனும் முன்னிருந்த பாலகனை
பரபரப் பாய்ப்பார்த்தே பகருவா ரம்மானை
அபிமன்ன னேகேளாய் அர்ச்சுனனில் லாவேளை
தபிக்கவடித் தார்படையைச் சண்டாளத் துரோணருமே
இப்ப யெனைப்பிடிக்க எகுதவன் படையும்
தப்பாய் முடிந்தேபாலா சஞ்சலம் வந்திடுமே
அவர் யூகத் தைக்கெடுக்க வாகுமே யுன்னாலும்
தவராக வந்தவனைச் சலுதியாய்ச் சென்றுபாலா
இந்தயூகத் தைக்கெடுத்து எல்லவரை யும்மடிப்பாய்
மைந்தனே யுள் நீசென்ருல் வருகுவோம் பின்னாலே

என்றுதர்மர் மொழிய இருந்த சிறுபாலன்
நன்ருகக் கேட்டு நவிலுவா னேபதிலும்
அப்பனே தங்க ளடுமையின் வாக்கியமும்
செப்புகிறேன் யானும் தேவனே கேளுமென்றும்
எந்தன் தகப்பனும் இன்பம தாய்மொழிந்த
இந்தயூ கத்துக்குள் ளேகிடு வேன்யானும்
திரும்பி வருவதற்கே தெரியாதே ஐயாவே
விரும்பியே வந்திடுவீர் வேந்தரேயென் பின்னுலும்
என்று வுரைக்க எழில்விச யன்சுதனும்
நன்ருய்க்கேட் டேவீமன் நவிலுவான் பாலனுக்கும்
அப்பனேயுன் பின்னுலே அடியேன்வாறேன் தப்பாமல்
இப்பவே செல்லென்று ஏந்தல் விடைகொடுத்தான்
தருமரிடந்தனிலே தான்வந்து மேசிறுவன்
பொறுமையுடன் பணிந்து போகவிடை தாருமென்ருன்
அப்போ தருமரும் அருமைச் சுதனே நீ
இப்பவே.செல்லென்று ஏந்தல் விடைகொடுத்தார்
சிறுவனுமே கேட்டுத் தேகமெல்லாம் பூரித்து
அருமையான சாரதிக்கும் அறைகுவான் சங்கதியும்
மேவுலகோர் கொண்டாட மேன்மை யொடுரதத்தை
பூவுலகி லேநடத்தும் புண்ணிய னேகேளாய்
அருமையான தோழனேகேள் ஐயா மொழிந்ததுவும்
பொறுமை தனிற்சிறந்தோர் போவென் றெனக்குரைத்தார்
போய்வருவா யென்றும் புகலவில்லை யாகையினுல்
போய்மடிவ தின்றுயான் புண்ணியனே நிச்சயந்தான்
வேதன் விதிப்படியே வேந்தன்வாயில் வந்ததுவே
பாதகன் துரோணரும் பண்ணிய யூகமதற்கு
ரதத்தை நடத்தெனவே நல்ல தொருபாகன்
இதமாகக் கேட்டு இயம்புவான் ராசனுக்கு

மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாண்டுவரும் புண்ணியன் சுதாகேளும்
வஞ்சகன் பண்ணிவைத்த வம்புயூ கந்தனையும்
பஞ்சாய்ப் பறக்கடிக்க பாலகா செல்லவந்தாய்
சல்லாப மாய்வந்த சமர்த்தா நமக்கெதிரே
உல்லாச மாகவேபா ருகந்த சிகாமணியே
துரோணரு மங்கு துடியான மன்னருடன்
விரோதன் துரியனும் வேந்தர்கள் நிற்கின்றார்
கர்ணனஸ் வத்தாமன் காட்டுஞ் சகுனியொடு
விற்கையிற் பூண்ட வெகுவரசர் நிற்கின்றார்
நீயுந் துணிந்தாய் நெருக்கினோ மிங்குமே
பாயுமே நம்மேலும் பலபேர்க ளாயுதமும்
யோசனை செய்யுமென உரைக்கவே பாலகனும்
யோசனை யென்னடா ஊழி யெழுத்ததுவும்
இட்டவிதி நமக்கே என்றுங் குறையாது
விட்டிடு ரதமென்றான் விசயனின் றன்சுதனும்.
பாகனுங் கேட்டு பரிவாக வான்பரியை
வேகமாய் நடத்தினான் மேன்மையான ரதத்தை
அதிவேக மாய்நடத்தி அந்தணர் துரோணரிடம்
ததியேவந்து முன்னின்றான் தக்க பலவானும்
துரோணருங் கண்டு துருசாக வில்வளைத்தே
விரோதம் விளக்க வெகுகணை யேவிட்டான்
கணைகள் வருவதையுங் கண்டு சிறுபாலன்
கணைகள் வருவதை கண்டிக்க வேநினைந்து
வில்லை வளைத்தே வெகுகணை யைப்பூட்டி
தொல்லை விளக்கவுந் தூண்டிவிட் டான்பாலன்
வில்லி லிருந்து விடுபட்டு வக்கணைகள்
சொல்லி முடியாது சுடராய் வருகும்விதம்

துரோணர்கணை யத்தனையும் துண்டாகச் செய்திடவே
துரோணருங் கண்டே துஷ்டக் கணையேவ
சிறுவனும் பார்த்தே சிலகணை யைவிடுத்து
வருங்கணை யத்தனையும் மன்னன் ரெண்டாக்கிடவும்
இருவரும் யுத்தம் ஏகநேரம் வரையில்
கெருவமாய்ச் செய்தார் கிலேச மில்லாதபடி
அபிமன்ன னப்போது ஐந்துகணை யேவிவிட
அபிமன்னன் பாணமது அனேக கோடியாகி
துரோணரிட தேரும் தொலைத்துப் புரவியையும்
துரோணர் தன் மார்பிலும் துளைத்தது வேபாணம்
அவரு மடி பட்டே அப்பாலே யோடிடவும்
தவறாக வோடுவதை தானறிந் தேகிருபர்
சாரதியை யெச்சரித்தார் சல்தி ரதம்விடவே
பாரதிலே வேகமாய் பாகன் நடத்திடவே
சிறுவன் முன்னே வந்து சிலகணைக ளேவினான்
சிறுவனும் விட்டே செப்பவொண் ணாக்கணையை
வந்தகணை யெல்லாம் வாட்டினார் துண்டாக
விந்தைதனைக்கண்டே வேதியன்கிர் பாசாரி
கடுமையான கணையைக் காவலன் மேலேவி
கொடுமை செய்ய நினைந்தார் குருக்களு மச்சமயம்
அப்போ தந்தக்கணையும் ஆங்கார மாய்வருக
தப்பாய் வருகுதென்று தானறிந் தேசிறுவன்
வாரிவில்லில் தொடுத்து வம்புக் கணைகளையே
மாரிபோ லேவினான் வருங்கணை யின்மேலே
வந்த கணைதன்னை வாட்டிரெண்டாய் வெட்டியே
விந்தையாய்க் கிருபரை வேகமொடு வளைத்து
துளைத்தது மேனியெங்கும் துடியாக வேகணைகள்
மலைத்துக் கிர்பாசாரி மயங்கியப் பாலோட

சிறுவனுங் கண்டே சிலபகழி தொடுத்து
நெருக்கப் படையிலே நீட்டினு னேகணைகள்
அறுபடு தங்கேயும் அநேக மன்னர்சிரசும்
நிருவாக மில்லாது நிமிடம் மடிந்தார்கள்
அபிமன்ன னைத்தடுக்க ஆளில்லை யங்கேயும்
தபிக்க வடிக்கிறுன் தக்கபலவானும்
அந்தமுள்ள பாலன் அனேகங் கணைதொடுத்தே
சந்தோஷ மாயேவிச் சாய்க்கிறுன் சைனியத்தை
ரெத்தவெள்ள மோடுது ரெணகளத்தி லேயெங்கும்
அத்ததி பசாசுகளும் ஆடுதங்கு கூத்து
படுகள மெல்லாம் பார்த்தாற் பயங்கரமாய்க்
கடுவாய் புலிகள் கறிதனைவந் தேபுசிக்கும்
துரோணருங் கண்டு துதித்தார் சிறுவனையும்
துரோணர் புகழ்ந்ததைத் துரியனு மேகேட்டு
நல்ல சிறுவனை நசுக்கிவிடு வேனெனவே
சல்லாப மாயவனும் சமர்த்துக ளாய்ப்பேசி
வந்தே சிறுவனிடம் வாரிவிட் டான்கணையும்
வந்த கணைகளையே வாளபிமன் தான்பார்த்து
அந்தச்சமயந் தொடுத்தான் ஆயிரம் பகழிதனை
சிந்தை மகிழ்ந்தே சிறுவனு மேவிடவே
வருங்கணை யத்தனையும் வாட்டிரெண் டாக்கியும்
அருகி லிருந்தோரை அதமாகச் செய்ததுவே
அரவக்கொடி யன்தேரும் அழியாப் புரவிகளும்
திரமான மன்னவனும் செப்பாம லோடினனே
அப்போ சிறுவன் அதிகக் கணை தொடுத்து
தப்பாம லேவுகிறுன் தக்க பெரும்படையில்
வெகுபேர் மடிந்தார்கள் விசயன் சுதன்கையால்
வெகுகோடி யோடுகிறுர் வேந்தன் முன்நிற்காமல்

அப்போ தருமரும் ஆனதம்பி வீமனும்
அப்பனில்லா வேளையிலே அபிமன்னன் சென்றானே
வளைத்து மேகொண்ட வம்பர் கௌரவரை
துளைத்திட்டான் பாலன் துரியன்சேனை யத்தனையும்
என்றுமவர் பேசியே யேகச் சிறுவனிடம்
நன்றாகக் கண்டான் நல்ல செயத்ரசன்
வந்துமவன் மறித்தே வாகான வில்வளைத்துச்
சந்தோஷ மாகத் தானேவி னான்பகழி
ஒருவர்க் கொருவர் ஓயாமற் கணையேவ
நெருநெருத்துப் போகுதே நேர்த்தியான சரங்கள்
அப்போ செயத்ரசன் அதட்டிக் கணைதொடுத்து
தப்பாம லேவி தான்மடிக்கி றான்சனத்தை
அந்த மதவீமன் அடிபொறுக்க மாட்டாது
சிந்தை கலங்கியே சென்றா னொருபுறத்தில்
அபிமன்னன் றனக்குமே யாளுதவி யில்லாது
தபிக்க வடிக்கிறான் றன்னெதிரி படையை
அவனைத் தடுப்பதற்கு ஆளில்லை யங்கேயும்
தவராது கணைகளைத் தான்பூட்டி யேசிறுவன்
வஞ்சகன் சேனையிலே மன்னன் சுதனேவ
பஞ்சாய்த் துளைத்து பலபேரை யும்மடிக்க
பாளையத்தை யச்சமயம் பார்த்தால் பரிதாபம்
வேளைகர்ணன் கண்டே விரைவாக வோடிவந்தே
வல்லநல் வில்லை வளைத்துக் கணைதொடுத்து
தொல்லை விளைக்கத் தாண்டிவிட் டான்பாவி
அண்டகோள மெல்லாம் அஞ்சி நடுங்கிடவும்
பிண்டங் கலங்கிடவே புறப்பட்ட தேகணையும்
அந்தமுள்ள சிறுவன் அறிந்துமே சங்கதியை
விந்தையான கணையை விட்டான் பயமின்றி

வில்லி லிருந்து விடுபட்டு மேபகழி
சொல்லி முடியாது துடியன் கணைவேகம்
வந்துமே சீக்கிரத்தில் வங்கதேசன் தன்தேரை
சந்துசந்தாய் கிழித்து தானெறிந் தப்பாலும்
தடையில்லாத படியே தாங்கவொண்ணுக் கோபமுடன்
கொடையாளி மார்பிலும் குறுக்காகப் பாய்ந்ததுவே
சல்லடைக் கண்ணுகத் தான் துளைக் கக்கருணன்
சொல்லாம லோடினன் சோம்பியே யப்பாலே
அப்போ துரிய னுமே அலறியே யோடிவந்து
செப்புவான் துரோணரிடஞ் சிந்தை மிகக்கலங்கி
ஐயா பெரியவரே அறிந்தவ ரேயாவும்
ஐயையோ நம்சேனை அலைகுறதே யிச்சமயம்
இந்தச் சிறுவனுமே எல்லோரை யிச்சமயம்
சந்தோஷமாய் மடிப்பான் தடையில்லை யேசாமி
பதினெட்டு நாட்போரை பாலக னின்றுதினம்
ததியே முடித்திடுவான் சந்தேக மில்லையதில்
இவனைச் சும்மாவிட்டால் இன்றுசா வெல்லோரும்
தவராது யென்றே தான்மொழிந்து மரசன்
குருக்களே பாலகனை கொல்லும் வகையெனக்கு
திருத்தமா யோதுமென்று செகவரசன் கேட்க
தனுவித்தை பூராவும் தானே கரைத்துவுண்ட
மனுநீதி யையறிந்த மறையோரு மேபுகல்வார்
மேவுலகோர் கொண்டாட மேன்மை யுடனரசு
பூவுலகை யாண்டுவரும் புண்ணியனே கேளும்
வெல்லவேவேண்டுமானல் விளம்புவேனோர்யோசனையை
நல்லரசே கேளுமென நவிலுவார் மாமறையோர்
அரசரெல்லாஞ் சேர்ந்தே அச்சிறுவ னைச்சுற்றி
திரமாக யாவரும் சீக்கிரம் வில்வளைத்து

அள்ளிக் கணைவிட்டு அவன்தேரையு முடைத்து
தள்ளியே கீழே தனுசையுந் துண்டாக்கி
பரிதனையே மடித்து பார்த்தன் சுதன்றனையும்
அரிவோஞ் சிரசை அரசனே யுண்மையிது
என்று துரோணர் இயம்பிட வேயரசன்
நன்ருகக் கேட்டு நல்லதெனச் சம்மதித்தும்
அப்போ அழைத்தான் அரசர்கள் பூராவும்
தப்பாது செப்பினன் சங்கதி யத்தனையும்
கர்ணன் சகுனியும் காந்தாரி பிள்ளையொடு
விற்திரமைக் காரர் வெகுபே ரரசருடன்
துரோணர் கிருபரொடு சொல்லுஞ் சயத்தரசன்
விரோதமந்த யெண்ணி வேந்தரெல் லாஞ்சேர்ந்து
சந்தோஷ மாய்வந்து தான்சுற்றிப் பாலகனை
அந்தவேளை யரசர் அடங்காத கோபமுடன்
வில்லை வளைத்து வெகுகணை யைப்பூட்டி
தொல்லை விளைக்கவே தாண்டிவிட்டார் பாலகன்மேல்
அண்டத்தி லுள்ளோர்கள் அஞ்சியப் பாற்செல்ல
பிண்டங் கலங்கிடவே புறப்பட்ட தேகணையும்
அந்தக் கணைகளும் அதிவேக மாய்வருக
விந்தை யதனை விசயன் சுதன்பார்த்தே
தன்வில்லை யும்வளைத்து சல்தி கணைதொடுத்தே
மன்னன் சுதனேவினன் வம்புசெய் யுங்கணையை
வருங்கணை யெல்லாம் வாட்டச் சிறுவனுமே
கெருவமொடு பாதகர் கிளப்பிவிட் டார்பகழி
அந்தச் சிறுவனும் அறுத்துமே யத்தனையும்
விந்தையான கணையில் வேண்டிய தேவினனே
வஞ்சக னுடசேனை வம்புக் கணையேவி
பஞ்சாய்ப் பறக்கடித்தார் பாலன்கணை பூராவும்

சிறுவனு மேபார்த்து திகைத்திட வச்சமயம்
நெறுநெறுத் தேகணையும் நிமிட மிங்குவந்து
அபிமன்னன் தேரும் அவன்குதிரை யத்தனையும்
தபிப்பில்லாச் சாரதியும் சல்தி மடித்ததுவே
அப்பால் கணைவிடுத்தார் அந்தப்படு பாவிகளை
தப்பாமல் வந்து தக்கபல வான்வில்லை
வெட்டி யெறிந்து வீரமொடு சென்றிடவும்
சட்டெனவே பார்த்தான் தனுவிச யன்சுதனும்
வாளா யுதமெடுத்து வந்துபடை யிற்புகுந்து
வாளா யுதத்தாலே வதைக்கிருன் சேனைகளை
வீச்சுக் காயிரம்பேர் விழுகிருர் தப்பாமல்
ஆச்சுதே பாதிச்சேனை அவன்கையால் மாண்டதும்
ஐயையோ வென்று அலையுதே பாளையமும்
ஐயையோ வென்ருேரை அறுப்பான் சிரமதனை
ஓடுவாரை யெல்லாம் ஓடிவெட்டிச் சாய்க்கிருன்
ஆவென்று சொல்லி அலறுவோர்க் கங்கேயும்
போவென்று சொல்லி பிடரியிலே வெட்டாக்கும்
ரெணகள மெல்லாமே ரெத்தவெள்ள மோட
பிணங்கள் மிதந்திடவும் பிசாசுகள் மேலாட
அப்போது வீமனுமே அங்குமே யோடிவர
தப்பனுட படைகள் தான்மறித் தாரவனை
சிறுவனுக் குதவியது செய்யவந்த பீமனுமே
கறுகறுத்துச் சென்ருன் காவல னப்பாலே
அப்போ சிறுபாலன் ஆனதுணை யில்லாமல்
தப்புகளில் லாமல் சாய்க்கிருன் வேணதலை
கொத்தி யெறிகிருன் கோடாகோடி வரையில்
அத்ததி கண்டானே அரவக் கொடிவேந்தன்

துரோணரிடம் வந்தே தொழுதிட வேயவரும்
விரோதங்க ளென்ன வேந்தே மொழியுமென்றார்
ஐயோ சிறுவனுமே அனேகம் பேரைமடித்தான்
ஐயா அரைநொடியில் அழித்திடுவான் பூராவும்
அரச னுரைத்த வார்த்தை அத்துரோணர் கேட்டு
திரவானும் ராசனுக்கு செப்புவா ரேபதிலும்
எல்லவரை யும்மடிப்பான் இன்னு மரைநொடியில்
வல்லவனே யிச்சிறுவன் மகாபல வானரசே
இவனை மடிப்பதற்கு இருக்குதோர் யோசனையும்
தவரா துரைப்பேன் சர்ப்பக்கொடி யாகேளும்
தேத்தரசன் தானும் செய்தான் தவமதையே
ஆத்திமாலை தரித்த அரனுமே யங்குவர
அவரைப் பணிந்தே அவ்வரசன் றானும்
தவராது வாங்கினன் தக்கதொரு வரமும்
வீமனைக் கொல்லுதற்கு விமலன்கொன்றை மாலைதனை
நேமனும் வீமனை நினைத்துமே வாங்கினன்
அவனை மடிக்குமுன்னே அழித்திடுவான் பூராவும்
இவனையிம் மாலையினல் இன்று வதைத்தாலே
நன்றாக நாம்பிழைப்போம் நல்லரசே சொல்வதைக்கேள்
என்று மொழிந்தாரே இசைவாக வேதுரோணர்
அரவக் கொடியோனும் அழைத்துமே மைத்துனனை
திரமா யவனிடமும் செப்பினன் சங்கதியை
அவனும் மொழிவான் அரச னிடந்தனிலே
தவஞ்செய்து வாங்கினேன் தடிவீம னுக்கேதான்
அவனுக்காக யானும் அருமையாய் வைத்திருக்க
இவனுக்குப் போடவே இயம்புகிறாயென்று
சிந்தையும் நொந்தே செப்ப வரசனும்
அந்தமொழி கேட்டு அறைகுவா னேபதிலும்

அவனை மடிக்குமுன்னே அழிப்பானிவன் பூராவும்
இவனுக்குப் போட்டே இன்று மடியுமென
வேண்டியதை யரசன் விளம்பக்கேட் டேயவனும்
தாண்டி விழுந்தே சலுதி புறப்படென்றும்
அப்போது செயத்தரசன் அரன்மாலை யையெடுத்து
தப்பாது வந்தான் சலுதி படைகளுடன்
எல்லவருஞ் சேர்ந்தே ஏகிவந்தே பாலனிடம்
நல்லாவே சூழ்ந்துகொண்டார் நரன்சுதனையுள்வைத்
அப்போ சிறுவனும் அநாகுதஞ் செய்திடவும்
தப்பாமல் வெட்டுகிருன் தலைகள் வெகுகோடி
தேத்தரசன் ருனும் திடீரென மாலைதனை
ஆத்திரமாய்ப் போட்டான் அப்பாலன் றன்கழுத்தில்
வாளபிம னப்போது மயங்கியே நின்றிடவும்
பாலகனை யச்சமயம் பார்த்தால் பரிதாபம்
அப்போது பாலகனும் ஆலோசனை செய்தே
செப்பவொண் ணுத்துயரம் சிறுவனு யேகொண்டு
ஆதி சிவனையும் அவன் நினைந்து சிந்தையிலே
சோதியே யெந்தனுக்கும் தொகுத்த விதியிதுவோ
என்தகப்ப னிங்கே இல்லாத வேளையிலே
வன்கொடுமை செய்கிருர் மாபாவி கவுரவர்கள்
இந்திரன் றன்னையே எண்ணி யகத்தினிலே
தந்திரஞ் செய்தான் சமர்த்துள்ள பாலகனும்
மாலைதனைச் சுற்றி மகாவேக மாகவுமே
வேளை யெறிந்தானே விண்ணதிலே கோபமொடு
கத்தியைக் கரம்பிடித்து காவலரை வெட்டியே
அத்ததியே சாய்த்துவாரான் ஆயிரம் கணக்கேதான்
மாலையு மோடிவந்து மன்னன் கழுத்தில்விழ
வேளையங்கு நின்று வீசியுயர வெறிந்து

அப்பாலும் வெட்டுவான் அனேகமான படையை
தப்பா துருளும் தலைகளெல் லாங்கீழே
இப்படி மடிக்கிறன் எழில்விச யன்சுதனும்
அப்போ கர்ணன் அறிந்தானே சங்கதியை
வில்லை வளைத்தே வேண்டுங் கணைதொடுத்தே
கல்மன துடையோனுங் கண்டித்தான் வாளதனை
அப்போ சிறுவன் ஆங்காரக் கோபங்கொண்டு
இப்போது தந்தை எங்குதான் நிற்கிறரோ
அறிய வேயானும் ஐயா யிச்சங் கதியை
தெரியும் படியாக செய்குவோம் சங்குத்தொனி
என்றுமே யோசித்து எடுத்துமே சங்கதனை
நன்றாய்த் தொனித்தான் நரனுக்குக் கேட்கும்படி
அண்டருல கத்திற்கும் அந்தத்தொனி கேட்டிடவும்
கண்டானே மாயவனும் கனத்தசங் குத்தொனியை
சங்கதியை யறிந்தே சல்திசங் கையெடுத்து
பங்கமிலாச் சத்தம் பகவான் தொனித்தானே
அந்தமுண்டய அருச்சுன னுங்கேட்டு
விந்தை யிதென்ன விளம்புவாய் மாயாவென்றான்
மேவுலகோர் கொண்டாடும் மேன்மையான விசயா
பூவுலகி லிங்கு பொருதியுன் னுடைதிர்த்த
வெங்கல ரதக்காரர் விசயா பதினாயிரம்பேர்
பங்க மடைந்திடுவார் பாரு நிமிஷமதில்
அந்தச் செய்திதனையே அருச்சுன யானறிந்து
சந்தோஷங் கொண்டு சங்கெடுத் தூதினனே
சந்தேக மொன்றுமில்லை சல்தியாய்க் கணைபூட்டி
இந்தவேளை நீயும் எதிரியெல் லாம்மடிப்பாய்
இப்படி யாய்ப்பேசி இவரிருக்க வங்கேயும்
செப்பவொண்ணச் சோகம் சிறுவனு மேதெளிந்து

வாளையுங் கண்டித்தான் வம்பாய்க் கருணனென்று
வேளை கதையெடுத்து வேந்தனு மச்சமயம்
தேத்தரசன் றன்மேலே சீக்கிரமா யோடி
ஆத்திரமா யடித்தான் அவன்றன் சிரசினிலே
அங்க தேசாதிபனும் அறிந்துமே சங்கதியை
பங்கம் நினையாதபடி பாரக் கணையேவி
சிறுவ னெடுகரத்தை சீக்கிர மறுத்திடவும்
பெருத்த கதைதனையே பின்னொரு கையேந்தி
அடிக்கிறான் பாலகனும் அச்சமில் லாதபடி
துடித்தே மடிகிறார் சொல்லவொண் ணுப்பேர்கள்
அப்போ செயத்தரசன் அவசரமா யோடிவந்து
தப்பாது பாலன் தலையி லடித்தனனே
அந்த வடியாலே அண்டந் திறந்திடவும்
பந்த வினையாலே பாலன் மடிந்தானே
அப்போ தருமர் அறிந்துமே சங்கதியும்
செப்பவொண்ணுத் துக்கமொடு தேம்பி யவாழுது
பாளையத்தைக் கூட்டி பாசறை சென்றிடவும்
வேளையே சென்றான் வேந்தன் துரியனும்
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமருமே
வறுமை மிகவடைந்து மயங்கி யிருந்திடவும்
அறிந்து வியாசருமே அங்குவந் தாரேநேர்
தெரிந்து தருமர் திருவடியிற் பணிய
ஆசிமிகக் கூறவும் அவரிட மேயரசன்
தோசி யானென்று சொல்லிப் புலம்பினரே
அந்தமன் னன்றனக்கு அருமையாக வியாசர்
விந்தையான நீதி விளம்பினு ரநேகமதாய்
மாமுனியுஞ் செப்பி மன்னன் றனைத்தேற்றி
காமுனியுஞ் சென்றார் காட்டில் தவம்புரிய

இங்குமே சங்கதிகள் இப்படி யிருந்திடவும்
அங்கு விசயன் அந்தச்சஞ் சத்தகரை
கடுங்கணை யைப்பூட்டி காவ லனுமேவி
விடுங்கணை கள்சென்று வெகுபேரை யும்மடிக்க
சஞ்சத் தகர்களைத் தான்தீர்க்க விசயனுக்கும்
நெஞ்சினிலுந் தோன்றுதே நிலையான களையுமதாய்
ஆகாச் சகுனங்கள் அர்ச்சுனன் கண்டிடவும்
வாகாகக் கேட்பான் மாய னிடந்தனிலே
என்ன சகுனமது இப்படிப் பாயுதிங்கும்
என்னருமை மைத்துனனே எனக்குரையு மென்றிடவும்
ஆயனதைக் கேட்டு அந்த விசயனுக்கு
மாயனுமே புகல்வான் மறைவாகச் சங்கதியை
இந்தநேரச் சங்கதிகள் என்னமோ யானறியேன்
விந்தையான பாசறையில் விசாரிப்போம் வாவென்றான்

கிருஷ்ணமூர்த்தி இந்திரனை அழைத்து
சங்கதி கூறுதல்.

ஆதி மகாமூலம் அருச்சுன னைக்காக்க
சோதிநா ராயணனும் சோம்பலில் லாதபடி
இந்திரன் றன்னைவர இவர்நினைக்க வானவர்கோன்
தந்திர மாய்வந்து தானெதிர் நிற்கவே
அந்தச் செய்தியதனை அறிந்துமே மாயவனும்
இந்த விசயனிடம் இருந்துமே வேற்றுருவம்
எடுத்துமே சென்று இந்திர னிடத்தினிலே
அடுத்துமே சென்று ஐயனு மேபுகல்வார்
இங்கு நடந்த எல்லாச் செய்திதனையும்
பங்கம் நினையாதபடி பகர்ந்து மவரிடத்தில்
விசயனைக் காக்க வேந்தேவழி செய்யுமென்று
நிசமாய் மொழிந்தே நிமிடஞ் சென்றானங்கே
வானவர்கோ னச்சமயம் வருவழி யைப்பார்த்து

தானவ னுய்ச்செய்தான் தக்க குழியொன்று
கட்டைகளைப் பொறுக்கி காவல னதிற்போட்டு
முட்ட வண்டம்வரை மூட்டிவிட்டான் தீயதனை
அத்ததி சுற்றிவாரான் அக்கினியை இந்திரனும்
மெத்தவேக மாய்ரதத்தை விரட்டியே மாயன்வர
கெட்ட சகுனங்கள் கிட்ட விசயனும்
கட்ட மிகப்பட்டு காவலன் வந்திடவும்
அக்கினி தெரிந்திடவே ஆயன் ரதம்நடத்த
அக்கினி யெரிவதையும் அருச்சன னுங்கண்டே
கவனித்துப் பார்த்தான் காளையு மங்கேயும்
அவனுமே கண்டானே அக்குழி முன்னாலே
மெத்தப் பெரியபழம் விருத்தாப் பியகாலம்
பித்தனுக்கு மேலாம் பெரிய தபயோகி
தோலும் நரம்பும் தொங்கும் கிழவனுக்கு
மேலும் பழுத்தபழம் வேதாந்தங் கற்றகிழம்
அவரு மழுதுகொண்டு அக்கினி சுற்றுவதை
அவரையே கண்டான் அருச்சுனனு மெதிரே
மைத்துன னிடத்தினிலே மன்னவனும் மொழிவான்
மைத்துனரே பாரும் மறைவர் நம்நேராய்
அழுது மயங்கியே அக்கினி சுற்றுகிறார்
பழுதென்ன வந்ததோ பார்ப்போம் ரதமதை
சல்தி நடத்துமென சாமியை வேண்டிடவும்
நல்லாவே கேட்டு நாரணனும் புகல்வான்
அருச்சுனனே நாமும் அங்கே செல்லக்கூடாது
திருத்தமாய் சென்றாலோ தேர்விசய னேபிசகு
நம்வேலை பார்த்து நாம்செல்வோம் பாசறைக்கு
சும்மா வாவென்று சொல்லினானேமாயன்
அந்தமுள்ள விசயன் அதைக்கேட்டு மாயனுக்கு

சந்தோஷ மாகச் சாற்றுவா னம்மானே
க்ஷத்திரியன் யானும் சாமி யிதைப்பார்த்தே
சுற்றியே செல்லுவது தோஷமே யெந்தனுக்கு
சென்றுமே யானும் தீர்க்க விசாரித்து
நன்றுசெய்வேன் வேதியர்க்கும் நாதா ரதம்நடத்தும்
இன்னும் பலவிதமே எடுத்தோதி யேவிசயன்
கண்ணனை ரதம்நடத்தக் காளையும் வேண்டிடவும்
பார்த்தனே யுன்னுரைபோல் பாரரதம் விடுவேன்
பார்த்தபின் குற்றமதைப் பகராதே யென்மேலும்
என்றுமே மாயன் இயம்பியே யச்சமயம்
நன்றான வான்பரியை நாட்டினன் கைச்சவுக்கரல்
அதிவேக மாகவுமே ஐயன் ரதம்நடத்த
பதியரசன் வந்தானே பார்ப்பா னிடந்தனிலே
ரதத்தைவிட்டுக் கீழிறங்கி நரனுமே முன்சென்று
இதமாக வேதியரை ஏறிட்டுப் பார்த்திடவும்
அழுது கிழவனும் அக்கினி சுற்றியுமே
பழுதுவந் தாப்போல பரதவித்து வாரானே
விசயனுஞ் சென்றே வேதிய னருகினிலே
அசையாமல் நின்று அந்தணரைத் தான்கேட்பான்
ஐயனே வேதியரே ஆகம முறையறிந்தும்
செய்யாத வேலைதனைச் செய்குறீ ரேநீரும்
வயதோ பெரிதாகி மார்க்கந் தவறியே
பயமில்லாத படியே பாரத்தீ சுற்றுவோனே
எந்தவூ ரையாநீர் இத்துயர முந்தனுக்கு
வந்ததென்ன சாமி வம்பாகத் தீயில்விழ
சங்கதி யெந்தனிடம் சாற்றுவீ ருந்தனையும்
பங்கமாருஞ் செய்தாரா பாரமாய்த் திட்டினரா
என்ன குறைவு இப்படிச் செய்யநீர்

நன்னயமாய் நீரும் நவிலுவா யென்றனனே
அந்தணருங் கேட்டு ஆரப்பா நீயுமே
உந்தனுக்கு முன்னே யானென்ன ஓதுவது
வந்தவழி செல்வாய் வம்புகள்செய் யாதேயென
அந்தணரும் மொழிந்தே அழுது சுற்றிவாரானே
விந்தை யிதுவென்று விசய னகஞ்சோர்ந்து
அந்தணர் தன்னிடமே ஆவலா யோடிவந்து
வேதியர் கரமதனை விசயனு மேபிடித்து
பாதி மதிதரித்த பரமனைப் போலிருக்கும்
சோதிமய மானவரே தொல்லையென்ன வந்தது
வேதினை செய்தவனர் வெட்டுவே யானவரை
சொல்லுமையா வென்று தொழுகவே வேதியரும்
நல்ல மன துடனே நவிலுவா ரம்மானை
உந்தன்தேசம் யாது ஓதுவா யிச்சமயம்
விந்தையான பேரும் விளம்புவா யென்றுமந்த
வேதியர் கேட்க விசயனு மன்னிமிடம்
வேதினையில் லாதபடி விளம்புவா னேபதிலும்
ஐயனே கேளாய் அஸ்தினு புரிதேசம்
பொய்யுரை யில்லை புகலுவது நிச்சயமே
பாண்டுவின் பிள்ளைகள் பஞ்சவ ரைவரிலே
காண்டா வன தகனங் கண்ட விசயன்யான்
உந்தன் வரலாறை ஓதுவா யென்றிடவும்
அந்தணருங் கேட்டு அறைவான் விசயனிடம்
அரசன் சுதனேயான் அறுபதுக்கு மேலே
திரமாய்க் கலியாணஞ் செய்தேன் மனமகிழ்ந்து
அப்பாலோர் பிள்ளை அரசே பிறந்தவனும்
தப்பாது நால்வேதம் தான்கற்றுன் பூராவும்
வயதோபதி னறுயின்றி வம்பாய் மடிந்தானே

வயதோ யெனக்கிப்ப வழுத்தலாந் தொண்ணூறு
அக்குழந்தை சாகவும் அடியே னிருக்கலாமா
மிக்க பலவானே விட்டுவிடு தீயில்விழ
என்று மவனழுதே இழுத்தான் கரமதனை
நன்று யருச்சுனனும் நவிலுவான் வேதியர்க்கு
தேடக் கிடையாத செல்வம் இறந்தாலும்
கூட மடிந்திடவே குவலயத்திற் காணேனே
பேயனே போவென்று பிடித்திழுத் தான்வெளியே
ஆயனும் பார்த்தே அருமைய தாய்மொழிவார்
விசயனே வேதியரும் விருத்தாப் பியக்காலம்
பிசகாய் மடிந்திடுவார் பிழைகேடு நேர்ந்துவிடும்
நம்மைப் பிடிக்குமடா நரனே கொலைபாதகம்
திம்மையைப் பார்க்கவே சிலைவிசயா யிங்குவந்தாய்
எத்தனையான் மொழிந்தும் என்னுரைகே ளாதபடி
சுத்தவீரன் போலே துள்ளியே யிங்குவந்தும்
வேதியரைப் பார்த்து விசன மடைந்திடநாம்
சேதியைக் கேட்கவும் செகதீசன் றன்னருளோ
அந்தணரைத் தீயில்விட்டால் அரும்பாவ முந்தனுக்கு
வந்திடுமே விசயா வழுத்தினே னுள்ளது
ஐயனைத் தீயினிடம் அணுகவி டாதபடி
செய்வா யுபகாரம் தேவர் புகழ்வோனே
என்றுமே மாயன் எடுத்து மொழிந்திடவும்
நன்றாய்க்கேட் டேவிசயன் நவிலுவான் வேதியர்க்கும்
வேண்டுதையே செப்பினலும் விழுவேனுன் தீயிலென்று
மானபரன் கையை மறையோ னிழுத்தானே
பேயனே போவென்று பிடித்திழுக்க வேவிசயன்
ஆயனுங் கோபமொடு அர்ச்சுனா விடாதேயென்றார்
வேதினையில் லாதபடி விசயன் கடுஞ்சினமாய்

வேதியனை வேகமொடு வெளியிழுத்து வந்திடவும்
அந்தமுள்ள வேதியன் அருச்சுனன் றன்னிடமே
விந்தையான சங்கதியை விளம்புவா னம்மானை
அரசனே யுந்தனக்கு அருமைமகன் செத்தாலும்
திரவானே நீருந் தீங்குசெய்ய வொண்ணாது
வேதியனுங் கேட்க விசயனு மேமகிழ்ந்து
வேதியரே யெந்தன்சுதன் வீரனுய் மாண்டாலும்
சாவதில்லை யானும் தக்க பெரியவரே
சாவதில்லை யென்ற தனஞ்செய னையந்த
வேதியனு மச்சமயம் வேந்தே கைபோடுமென
வேதியன் கையதனில் விசய னடித்திடவும்
இனிமேலும் யான்சாகேன் ஏகுவேன் நகரமென
தனியாகச் சென்றுனே சமர்த்துள்ள வேதியனும்
விசயனும் தேரேறி விடவுமே வேண்டிடவும்
விசயன் மொழிப்படியே விரட்டினுன் மாயவனும்
ரதத்தையதி வேகமதாய் நாதன் நடத்தியுமே
இதமாக வந்தார் இங்குமே பாசறைமுன்
பாசறையை விசயன் பார்க்க வதுசமயம்
வேசமது மாறி விளக்குமுத லில்லாமல்
இருந்ததையே கண்டு ஏகவே யவ்விடத்தில்
அருமையான தூதன் அவசரமா யோடிவந்து
அந்தமுள்ள பார்த்தா அருமைவா ளபிமனுவை
விந்தையாய்க் கௌரவர்கள் வெட்டியே சாய்த்தார்கள்
என்றுமே தூதர் இயம்பவே சங்கதியை
நன்ருகக் கேட்டு நல்ல விசயனுமே
அழுதான் பரதவித்தான் அங்கு மயங்கிவிழ
அழுத சத்தங்கேட்டு அங்கு தருமர்வந்து
ஒக்க வழுதார் உரிமையுள்ள தம்பியுடன்

பக்கத்தில் மாயவனும் பாரிற் புரண்டழுதான்
அப்ப வருச்சுனனும் ஆயாச முந்தீர்ந்து
இப்புவே யானும் இந்தச் சடலமதை
அக்கினியை வளர்த்து அதில்விழு வேனெனவும்
அக்கினி வளர்த்திடவே அறைந்தானே வில்விசயன்
அதிவிரைவாய்ச் சேவகர் அக்கினி யைமூட்டி
ததியே விசயனிடஞ் சாற்றினர் சங்கதியும்
விசயனு மச்சமயம் வேகம தாய்வந்து
அக்கினி தன்னையுமே அதிவிரைவாய்ச் சுத்திவர
பக்கத்தில் வந்தேமாயன் பார்த்துமே சங்கதியை
இந்திரனை நினைந்தார் இங்குமே வந்திடவும்
தந்திரமாய் வந்தான் சணமதில் வேதியனும்
அதிகக் கோபமுடன் அருச்சுனன் றன்னிடத்தில்
விதிமுறைக ளறிந்த வேதியனும் புகல்வான்
என்ன வரசனே எந்தனை யேதடுத்த
மன்னவனே நீயும் மடியப் போரா யக்கினியில்
சத்தியங் கெட்டவன் தப்பாய் நடக்கின்றேன்
புத்தியைக் கேட்டியான் பிழைமோசம் போனேனே
இங்கேயே நில்லடா இனிமேலுஞ் சுற்றாதே
பங்கமது வேண்டாம் பகர்ந்தவாக்குத் தப்பாதே
இன்னும் பலவிதத்தை எடுத்தோதி யேமறையோர்
மன்னவனைத் தடுத்தே மறைந்தானே வானவர்கோன்
பாசறைவந்து விசயன் பணிந்து தருமரையும்
நேசமான சுதனை நின்று வதைத்தோர்களை
அண்ணுவே சொல்லுமென அடியிற் பணிந்திடவும்
மன்னன் தருமருமே வழுத்தியே பூராவும்
தேத்தரசன் பாவி சிறுவனைக் கொன்றானென
ஆத்திரமாய் மொழிந்து அழுதார் பரதவித்தே

நரனுமே கேட்டதையும் நன்றாக வேபுகல்வான்
திரமாக நானுமந்த தேத்தரசன் றனையே
நாளை யருணனுமே நலமா யடையு முன்னம்
வேளை மடித்திடுவேன் வீரங்கொண்டு மவனை
வதைக்காமல் விட்டாலோ வளர்த்துமே யக்கினியில்
பதைக்கவே யான்விழுவேன் பாருங்கள் நிச்சயமே
என்று விசயனுமே இட்டான் பெருஞ்சபதம்
நன்றாகக் கேட்டிருந்தார் நல்ல வரசரெல்லாம்
மாயனுஞ் சென்றான் மங்கைதங்கை யிடத்தில்.
ஆயனைக் கண்டே அழுதாளே மங்கையரும்
அந்தச் சுபத்திரைக்கு அறைந்து சிலகதையை
இந்தமாயன் றானும் ஏந்திழையைத் தேற்றியும்
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமரிடம்
அருமையாக வந்து அறைந்து சிலநீதி
தன்னுடைய விடத்தில் தான்வந்து மேவிரைவாய்
கண்ணனும் யோசனையைக் கருத்தில் நினைந்துமே

கிருஷ்ணபகவான் வைகுண்டத்திலிருக்கும்
தன்னுடையசாரதியை வரநினைப்பது

ஆதிமகா மூலம் அருச்சுனனைக் காக்கவும்
ஆதிவை குந்தமதில் அமைந்ததோர் சாரதி
தாருகனை யிங்கே தானினைந்தார் வரவும்
தாருகனு மறிந்தே சாமியிட மோடிவந்தும்
விழுந்து பணிந்து வேதாந்த மேதமக்கு
பழுதுவந்த சங்கதியைப் பகருவீ ரென்றிடவும்
பாக னிடத்தினிலே பரிவுடனே மாயவனும்
வேக முடனே விளம்புவார் சங்கதியும்
அருமையான தோழா அருச்சுன னின்றுமே
பொறுமை யுடனே புகன்றான் பெருஞ்சபதம்

அந்தமுள்ள தேத்தரசன் அவன்றனை யேயிவனும்
விந்தையான அருணன் விழுமுன்னே கொல்வேனென்று
சபதமும் நாளைச் சாற்றினு னுகையினல்
அபத்தம் வராதபடி அருச்சுனனைக் காப்பதற்கு
அவனுங்கொல் லாவிடிலோ அரனிடம் யான்மடிக்க
தவராமல் நாளைச் சக்கரங் கொண்டுவாரும்
நாளைவேண்டு மென்றே நாராயணன் மொழிய
வேளை தருவேனென்று வேதாந்த னைப்பணிந்தும்
விடைவாங்கிச் சென்ருன் வேந்தனும் விண்ணுலகு
படையை நினைந்தே பார்த்தனு மிங்குமே
நாளையுத்த மதனை நானுமே யோசிக்க
வேளை விசயனுக்கே விந்தையான தூக்கம்வர

அருச்சுனன் நித்திரையில் சோர்ப்பனங்
காணுவது

சோம்பிப் படுக்க சொப்பன மச்சமயம்
தேம்பிய வீசயனுக்கு தேருதல் மாயவனும்
சொல்லிய தாக தோன்ற அவனிடமும்
நல்லசங் கதியதனை நாதன் மொழிந்திடவும்
பாசுபதாஸ் திரக்கணையும் பரமனிடம் போய்நாமும்
ஈசுவர னிடத்தினிலே இச்சங் கதிமொழிந்து
வாங்கி வருவோமென்று வாவென்று கையிடத்தும்
தாங்கியே மாலும் தான்சென்ருர் விசயனுடன்
கயிலாயஞ் சென்றுமவர் கர்த்தனை யங்குகண்டே
கயிலாய பதிதனையும் காண்டீப னும்பணிய
ஆதிசிவன் கண்டே அவனையா சீர்வதிக்க
சோதி பரமனிடஞ் சொல்லுவா னேவிசயன்
அந்த முடையதோர் அருமையான பாசுபதம்
எந்தனுக்கு யிச்சமயம் யீசனேதா வென்றிடவும்

சாமி யதையீய தனஞ்செயன் கையால்வாங்க
சாமியிட மிருந்தே தான்வந்தார் ஓர்தபசி
அர்ச்சுனன் றனக்கு அம்பு தொடுக்கும்விதம்
விற்பிடிக்கும் விதமும் வேந்தனுக்குக் காண்பிக்க
மந்திரங்கள் யாவும் மாதேவன் செப்பிடவும்
தந்திரமாய்க் கேட்டான் தனஞ்செய னச்சமயம்
அரனைப் பணிந்தான் ஆசிமிகச் செப்பியவர்
திரமான பாரதத்தைச் செயிப்பாய்நீ சீக்கிரத்தில்
செல்லென்று செப்பவும் சீக்கிரமிங் கேவிழித்து
சல்லாப மாய்ப்பார்த்தான் தன்கையிற் பாணமதை
ஆய னிடத்திலே அண்ணன்தம்பி யிடமும்
நேயனுஞ் செப்பினன் நிமிடமச் சங்கதியை
ஆதிமகா மூலம் அருச்சுன னைப்புகழ்ந்து
வேதினை யெல்லாம் விட்டிடு வாயென்றும்
இன்னும் பலவிதத்தை எடுத்தோத வெல்லோரும்
நன்ருகப் பார்த்திருந்தார் நல்ல பருதிதனை

செயத்தரசனிடம் தூதுவர்கள்
சங்கதி மொழிவது

இங்கே நடந்த இச்சங் கதியதனை
அங்கேமொழி யத்தூதர் அச்சமயம் நடந்தார்
தேத்தரசன் றன்னை தேடியே தூதுவர்கள்
ஆத்திரமாய்ப் பார்த்தே அவனையங்கு கண்டு
தொழுக வரசனுஞ் சொல்லென்முன் சங்கதியை
அழுதுமே செப்பினர் அந்தவிச யன்சபதம்
சிந்தை கலங்கியே செயத்தரசன் கேட்டு
அந்தவேளை யோடினன் அவசர மாகவுமே
துரியோ தனனிடத்தில் சொல்லவே சங்கதியை
அறியவே கேட்டு அரசன் மனஞ்சடைய

அந்தச் சமயமதி லங்குவந்த தேத்தரசன்
சிந்தை கலங்கியே செப்புவான் ராசனிடம்
எந்தனது மைத்துனரே இன்றுயென் னூர்க்கேகி
சந்தோஷ மாயானும் தானிருந் தோர்நாளும்
நாளை நா னங்கிருந்து நலமாய் மறுநாளும்
வேளை வருகிறேன் வேந்தனே யென்றிடவும்
அரவக் கொடியன் அவனை யழைத்துவந்தே
திரவான் துரோணரிடம் செப்பினன் சங்கதியும்
அதையு மவரும் அருமையுடன் கேட்டு
பதைத்திருக்கு மன்னருக்கு பகருவா ரம்மானை
பங்கம் வருமென்று பயந்தேநீர் சென்றாலும்
உங்களைப் போலரசன் ஒத்து நகைத்திடுவான்
இப்படிச் சங்கதியை எந்தலே யிதுவரையில்
செப்பவுங் கேட்டதில்லை செகமாளு மன்னர்களே
நாளைப் பூராவுனையும் நான்காப்பேன் நிச்சயம்
வேளையே செல்வீர் வேந்தர்காள் பாசறையும்
என்று துரோணர் இயம்பக்கேட் டேயரசர்
நன்றாக்ச் சென்றான் நல்லதொரு பாசறைக்கு

பதினான்காம் நாள் யுத்தம்

கதிரோனும் பார்த்தன் கவலைதீர்க்க நினைந்து
அதிவிரை வாகவுமே அவனுதித்தான் கீழ்திசையில்
இருதரப்பு மன்னர்களும் எல்லாமே யுத்தகளம்
நெறுநெறுத்துப் போகுது நேர்மையான படைகள்
அப்போ துரோணர் அருமையாய்ச் சேனைதனை
தப்பாமல் தைரியத்தை தானேதி யந்நேரம்
பனிரெண்டு காதம்வரை படைகளையெல் லாம்நிறுத்தி
தனித்தனியே யூகங்கள் தான்வகுத் தாரங்கு
சக்கிரா யுதமதனைத் தான்வகுத்துச் சேனையிடம்

தக்க பலவானும் தான்மொழிந்து சிலதை
மற்றுமிரண் டுயூகம் மன்னவ ராய்வகுத்து
குற்றமொன் றில்லாது கோமான் சயிந்தவனை
கடைசிதனில் வைத்தே காவல்களு மேற்படுத்த
திடமுடனே யிருந்தான் தேத்தா சனுமங்கு
வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்ததுரி யோதனனும்
சஞ்சலத்தைப் போக்கி தானிருந்தா னம்மானை
ஐவர்பஞ்ச பாண்டவரும் அவர்படைக ளத்தனையும்
வையம் புகழ்மன்னர் வந்துமே யுத்தகளம்
படைகளுக் கெல்லாம் பகர்ந்து தைரியத்தை
தடைகளில் லாதபடி தனுவிசய னந்நேரம்
துரோணரின் முன்னே துடியனும் வந்துநின்று
விரோதம் நினைக்கவே வெகுதொனி காட்டிவிட்டும்
காண்டா வனதகனம் கண்டகாண் டீபமதை
நீண்ட சிலையதனை நேராகவே நிறுத்தி
தொடுத்துக் கணைதனையே சொல்லி யுபதேசம்
விடுத்தான் கணையும் வெகுசனத் தைமடிக்க
அந்தயூ கத்தை அதமாக்க வேசணத்தில்
விந்தையாய்ப் பேசி விசயனை யேபுகழ்ந்தார்
அடுத்தயூ கந்தனிலும் அவன்வந்தா னேதுணிந்து
தடுத்தான் துச்சாதனனும் தனஞ்சய னுங்கண்டு
தொடுத்துக் கணையதனை துடியனை யேபார்த்து
விடுத்தான் விசயனுமே வேகமா கக்கணையும்
துச்சா தனன்தேரும் தொலைந்திடச் சாரதியும்
கெர்ச்சனை செய்துவந்தோன் கிளம்பியே யோடினனே
அந்த விசயன் அதிக ரோஷமுடன்
விந்தையாகத் தொடுத்தான் வேண பகழிகளை
அங்குநிற்கும் படையை ஆவலா கக்குறித்து

தங்காம லேவினனே தக்க பெருங்கணையை
ஆனையுடன் மன்னர் அதமாக வச்சமயம்
சேனைக ளெல்லாம் செப்பாம லோடுகிறார்
படைகளு மோடுவதைப் பார்த்து துரோணரும்
தடையில்லாத படியே தான்வந்தார் விசயன்முன்
வல்லநல் வில்லதனை வளைத்துமே வேதியரும்
சொல்லவொண்ணுக் கணையை தூண்டிவிட் டாரங்கே
வந்தகணை யெல்லாம் வாட்டி விசயனுமே
அந்தவேளை யேவினுன் அடங்காக் கணையதனை
சேனைகள் மேற்பட்டு சின்னுபின்ன மாக
ஆனைக ளெல்லாம் அலறியே மாண்டிடவும்
அப்போ துரோணர் அறிந்துமே சங்கதியை
செப்பவொண்ணுக் கோபம் சிலையாசன் கொண்டு
வந்து வளைத்துமே வம்ப னருச்சுனன்மேல்
நொந்து கணைதொடுத்தே நூறுக்கு மேலேவ
அதிவேக மாகவே ஐயன் கணைவரவை
ததியே விசயனுந் தான்கண்டு சீக்கிரத்தில்
விந்தையான வில்லில் வெகுகணைகள் பூட்டி
சந்தோஷ மாகவே தானேவி னுனங்கே
படைகள்தன் மேலேகணை பாய்ந்திடவு மங்கே
தடைசெய்யா தோடுகிறார் தனஞ்சயனை விட்டுமே
ஆயன் மொழிவார் அருச்சுன னைப்பார்த்து
நேயனே நமக்கும் நேரமாகுது மன்னு
வேலைகள் ரெம்ப விசயா யிருப்பதாலிவ்
வேளை புறப்படவும் வேண்டு மவசியமாய்
என்றுமே மாயன் எடுத்தோத வேவிசயன்
நன்றாகக் கேட்டு நல்ல தெனமொழிந்தும்
குருவு தனைப்பார்த்து கும்பிட் டவனுமே

குருவே நீ யெந்தனுக்கும் குலதெய்வம் போலநீர்
உம்மைச் செயிக்க உதவாது யென்னாலும்
நன்மையாக மொழிந்து நரனுமே யுட்சென்றான்
கண்டான் கிருதவர்மா கனகோப மாய்வந்து
சண்டாள னேவினான் தக்க பெருங்கணையை
வந்தகணை யெல்லாம் வாள்விசயன் கண்டித்து
நொந்திடவே செய்தான் நொடியி லவனையுமே
கண்டு துருசாயுதன் கண்கள் புகைகிளம்ப
சண்டாளன் வந்தெதிர்த்தான் தனுவிசயன் றன்னோடு
அவன்தொடுத் தேவினான் அனேகமான பகழி
தவராம லேவிசயன் சட்டென வறுத்தனனே
அந்தமுள்ள விசயன் அதிகக் கணைதொடுத்து
சந்தோஷ மாக தானேவி னான்கணையும்
அவன்றேரையு முடைத்து அதிகக்கொடுமைசெய்ய
தவராக வோடினனே சண்டாள னப்பாலே
பின்னும் ரதமேறி பிரியமாய் விற்பூண்டு
மன்னவனு மோடிவந்தே மனத்திலே யோசித்து
அருமையாய் வருணனிடம் அவன்வாங் கியகணையும்
பொறுமையில்லா வக்கினி போலப் பெருங்கணையும்
எதிரியை யெரிக்கும் இக்கணை தப்பாமல்
பதறியே விட்டானே பாரளந் தோன்மேலே
மாயனிடம் வேகமாய் வந்திட வேகணையும்
ஆயனும் பார்த்தே அவனைப்போய்க் கொல்லுமென
கண்ணன் மொழிந்திடவே கணையுமங்கு திரும்பி
மன்னன் துருசாயுதனை வம்பாய் மடித்ததுவே
அப்போ விசயன் அருமையுத்தஞ் செய்ய
தப்பாது வந்தான் சலுதிசூ தீசனனும்
அருச்சுனன்மே லேவினான் ஆயிரம் பகழிவரை

அருச்சுனனுங் கண்டே அத்தனையுங் கண்டித்து
பின்னுங் கணைதொடுத்து பிரியம தாயேவ
மன்னன் கணையும் மடித்தது பாதகனை
அவனும் மடிந்திடவே அப்பால் விசயனும்
அவனைவிட்டு நீங்கி அதிவிரைவா யுட்சென்று
தேத்தரசன் றனையே தேடியங்கு வருக
ஆத்திரமாய்த் தானே ஆயன் ரதம்நடத்த
துரோண ரிடமே துரியோ தனன்வந்து
விரோத மதைநினைப்போன் விளம்புவா னம்மானை
ஐயா பெரியவரே ஆகமங்க ளையறிந்த
மெய்யாவே பாரும் விசயனு மிச்சமயம்
உன்னைச் செயித்தே உள்ளே யவன்புகுந்து
என்சேனை பாதி இன்று வழித்திட்டான்
எந்தனது மைத்துனன் ஏகுவேன் ஊர்க்கென
உந்தன் மொழிகேட்டு ஒகோஅவ னைத்தடுத்து
இங்கிருக்கச் செய்தாய் என்னதான் மோசமிது
பங்கஞ்செய் தாய்நீரும் பார்த்தன் தனக்காக
பாசாங்கு செய்து பார்த்தனை யுள்விட்டு
பேசா திருக்குறீர் பின்னமும் வந்திடுமே
இன்னும் பலவிதமே எடுத்து மவனோதி
மன்னனமுதான் மறையோ னிடந்தனிலே
அப்போ துரோணர் அரசன் றனைப்பார்த்து
இப்போது கோபித்தாய் ஏந்தலே யெந்தனையும்
நானோ பெருங்கிழம் நடுக்குது மேலெங்கும்
ஏனோ யெனைச்சும்மா இவ்வாது செய்கிறாய்நீ
முடிக்கிவிச யன்கணையை முன்னாலும் பின்னாலும்
மடித்துக்கொண்டு போரான் மன்னா வெகுபடையை
அவனுமே சென்றான் அதிவேக மாயுள்ளே

அவனைச் செயிக்கவும் ஆகாது யென்னாலே
தர்மர்தனி யாயிருப்பான் சல்தியா யான்சென்று
விற்றிரத்தைக் காட்டி வேந்தனைக் கட்டிடுவேன்
அந்த விசயனிடம் அரசனே நீருமே
இந்தவேளை செல்லுமென யெடுத்தார் குருவும்
வஞ்சகத்தை நெஞ்சினில் வைத்ததுரி யோதனனும்
சஞ்சல மிகவடைந்து சாற்றுவான் துரோணரிடம்
உன்னாலே யாகாதென உரைத்த மறையோரே
என்னாலு மாகாது என்றுவரச னழுக
என்ற மொழிதனையே இருந்த துரோணரும்
நன்றாகக் கேட்டு நல்லரசன் றனக்கு
கவசமொன் றைத்தரித்து காவலன் றன்கழுத்தில்
கவசமுள்ள மட்டுங் கணைதைக்கா துன்மேலே
இந்தக் கவசமது இருந்த வரலாறும்
மந்திரந் தன்னையும் வழுத்தி யரசனுக்கு
அரசனே யிச்சமயம் அர்ச்சுனன் றன்னிடமே
திரமாய்ச் செல்லென்று செப்பினார் மாமறையோர்
ஆனந்த மாகியே அரசனு மேயோடி
தானந்த வேளையே தனஞ்செய னைமறிக்க
அருச்சுன னச்சமயம் அந்தகன் சுதனோடு
நெறுநெறுத்த சண்டை நெருங்குது வங்கேயும்

துரோணர் தர்மரிடஞ் செல்வது

துரோணரு மன்று சொல்லிய சபதப்படி
விரோதம் விளைக்க வேந்தன் தருமரிடம்
வந்து வளைந்துமே வாருதி யைப்போலே
நொந்திடவே பாவி நொடியிற் கணையேவினார்
அந்தத்துஷ்டத் தாய்மன் அறிந்துமே சங்கதியும்
தந்திரமாய் வந்து தானேவி னான்பகழி

துரோணர் கணையுந் துண்டாக வங்கேயும்
விரோதங்க ளாச்சே விபரீத மாகவுமே
துரியோதனன் தம்பியர் துடியர்க ளங்குவர
அறிந்தானே வீமன் ஆங்காரக் கோபமுடன்
வேகமாக வந்து வேந்தர் களைமறித்து
ஏகநேர வரையில் இவர்கள் பெரும்போரு
கவுரவ வீரர்கள் கலந்திட வங்குமே
கவுரவ வீரரொடு கைகலந்தான் வீமன்
சாத்தகியுஞ் சேர்ந்து சமர்த்தன் சிகண்டியொடு
ஆத்திரமாய்த் தர்மரை அதிக வுசாராக
காத்துக் கொண்டே யிருந்தார் காவல ரிருப்பதை
பார்த்து துரோணரும் பலிக்கா மலுமங்கே
சாத்தகியுந் துரோணருஞ் சல்திகணைதொடுத்தே
ஆத்திரமாய்ச் செய்தார் அநேகநே ரம்போரு
அர்ச்சுன னங்கே அனேகம்பே ரைமடித்து
கெர்ச்சனை செய்து கிரீடி யிருக்கவும்
கண்ண னு மச்சமயம் களைகளுஞ் சூழ்ந்திடவே
மன்னின் விசயனிடம் வழுத்துவார் சங்கதியும்
குதிரை தவிக்குது கோமானே யிச்சமயம்
குதிரைதாகந் தீர குளமொன்று செய்யுமென
ஆயனுஞ் செப்ப அந்த விசயனுமே
மாயன் மொழிப்படியே மன்னனும் நல்லதென்று
வல்லநல் வில்லதனை வளைத்து யெதிர்நிறுத்தி
வில்லில் கணைபூட்டி விட்டானே பாதிலும்
கணைகள் பூமிபாய்ந்து காண்டீபன் யெண்ணமதை
நினைந்துமே செய்தது நிமிடத்தில் பொய்கையொன்று
அந்தமுள்ள விசயன் அவன்சேனை பூராவும்
தந்திரமா யொதுக்கி தக்க பலவானும்

வில்லதனி லச்சமயம் வேண கணைபூட்டி
நல்லசரக் கூடு நாளிசெய்தான் சேனைகட்கு
அந்த விசயன் அமைந்த சரக்கூட்டில்
தந்திரமாய்ச் சேனையெல்லாம் தான்வந்திருந்திடவும்
தாகவிடாய் தீருமென்று சாற்ற விசயனுமே
வேகமாய்ச் சென்று வேந்தன்மனம்போல் நடந்தார்
ஆயனு மச்சமயம் அசுவங்களை யவிழ்த்து
மாயனுந் தண்ணீரை வான்பரிக்குக் காட்டி
தானுமே யுண்டு தாகமது தீர்த்து
வேணுகோ பாலன் விசய னிடத்தினிலே
அசுவங்களு மிருக்க அம்பினுல் கூடாரம்
விசுவாச மாக வேணுமென்ருன் மாயவனும்
காண்டா வனதகனங் கண்ட விசயனுமே
நீண்டகாண் டீபமதை நிறுத்தி யெதிராக
வேண்டுங் கணையதனை வேந்த னதில்தொடுத்து
தாண்டியே விட்டான் சொல்லியே சங்கதியும்
அம்புக ளோடிவந்து அமைத்திடக் கூடாரம்
எம்பிரான் கண்டு இருதயங்கள் பூரித்து
ஆயன் பரிகள்தனை அதினுள்ளே கட்டியும்
மாயன் சயனம் மகிழ்ந்துமே யங்குசெய்ய
வஞ்சகத்தை நெஞ்சமதில் வைத்தோன் படைகளும்
சஞ்சலத்தைப் போக்கி சல்திவந்து தடாகம்
அள்ளித்தண் ணீர்புசித்தே ஆனந்தங் கொண்டுமவர்
சொல்லி விசயனையே தோத்தரித்தா ரெல்லோரும்
துரியோ தனன்படைகள் சோம்பல் தெளிந்திடவும்
அறியவே வில்வளைத்து அனேகம்பே ருஞ்சேர்ந்தே
பாவி படைகள் பார்த்தன்மே லேகணையும்
மேவியே விட்டார்கள் வேணகோடி வரையில்

அந்த விசயன் அறிந்துமே சங்கதியை
விந்தையான கணையாய் விட்டுவெறுத்து நிற்க
ஆயனுந் தேர்பூட்டி அருச்சுனனை யேற்றியும்
மாயன் நடத்தியே வம்புசெய்ய வந்தானே
துரியோ தனனும் துரோணர் கவசமுடன்
பெரியவிற் கைப்பூண்டு பேயனு மோடிவந்து
பார்த்தன் றனைமறித்து பார்வேந்த னச்சமயம்
வேர்த்துமவ னேவினன் வேண பகழியதை
அந்தமுடைய விசயன் அறிந்துமே சங்கதியும்
சந்தோஷ மாக தன்வில் லதனிலே
அள்ளியே விட்டான் ஆயிரங் கணைவரையில்
துள்ளியே வந்தும் துரியோ தனனிடத்தே
அம்புகள் காயம் அவனையொன்றுஞ் செய்யவில்லை
வம்பன் தைரியமாய் வாளி தொடுத்தானே
விசயனு மிந்த விந்தை தனையறிந்தே
அசையாது நின்று அவனுமே யச்சமயம்
தொடுத்துக் கணைதனையே சொல்லி யுபதேசம்
விடுத்தானே யங்கு வேந்தன் துரியன்மேல்
பாவியஸ்வத் தாமன் பார்த்துமே சங்கதியை
மேவியே சீக்கிரத்தில் விசயனிடம் வந்து
வில்லில் தொடுத்து விட்டான் கணை நூறு
துள்ளியே பாவிகணை சுடரா யெரிந்துவந்து
விசயனிட பாணமதை வெட்டினது துண்டாக
விசயனு மச்சமயம் வெகுகணை கள்யேவ
துரியோ தனன்றேரும் துடியான வான்பரியும்
அறிந்துவிட் டான்கீழே அப்போ விசயனுந்தான்
துருசாக் கணைகளைத் துரியன் மேலுமேவ
நெறுநெறுத்து வந்தே நிமிடந் துளைத்திடவும்
அப்போது வந்தே அனேக மானவீரர்

செப்பவொண்ணுக் கணையைத் தீட்ட விசயன்மேல்
ஆயனுங் கண்டு அர்ச்சுனு வுசாரெனவும்
மாயனுமே நினைந்தார் மன்னன் விசயனுக்கு
ஆளுதவி வரவே அன்பாய் மனதிலெண்ணி
மாலுந் தொனித்தான் வலம்புரிச் சங்கையேதான்
அங்குமே நின்றவர்கள் அசந்து மயங்கிடவும்
தங்காது விட்டான் தன்ரதத்தை வேகமொடு
தேத்தரசன் நிற்குமிடஞ் சென்றிடவே ரதமும்
ஆத்திர மாகவுமே அனேகம் பேர்கள்வரவும்
அத்தனை பேர்கள்தனை அடித்து விசயனும்
மெத்தக்கஷ்டப் பட்டே வேந்தர்சென்று ரப்பாலே
இங்கேதா னிப்படி எழில்விசயன் போர்புரிய
அங்கே தருமரிடம் அதாகுதங் கள்ரெம்ப
துரோணரு மங்கு தொடுத்துப் பெரும்போரை
விரோதம் நினைந்து வேந்தன் தருமரையும்
கணைகள் தொடுத்தே கண்டித்தான் வில்லதனை.
வினையை நினையாமல் வேந்தனைப் பிடிக்கவெண்ணி
ஓடி வருகிறார் உள்ள துரோணருமே
நாடி வருகிறதை நல்லசகா தேவன்கண்டு
வந்து யெதிர்த்தான் வம்புகளுஞ் செய்ய
அந்தவேளை யங்குவந்தான் ஆயன்தம்பி சாத்தகியும்
துரோணர் தனைமறித்து தொடுத்துமே யுத்தமது
விரோதம் விளைத்தார்கள் வேணநேரம் வரையில்
ரிசிசிங்கன் பிள்ளை நின்ற வலம்புசனும்
தூசிபறந்திடவே தொடுத்தான் கணைகள்தனை
அங்கு கடோர்க்கசன் அறிந்துமே சங்கதியை
தங்காம லோடிவந்து சல்தி கணைபூட்டி
அலம்புசன் றன்னுேடு அந்தச் சிறுவனையும்

நிலத்தில் சிரம்விழவே நிமிட மறுத்தானே
பாவிகளை யங்கு பார்த்து மறலியும்
மேவிப் பிடித்தே வேகமாய்ச் சென்றானே
மடித்து விழுந்திடவும் மறையோர் துரோணரும்
துடித்துமே யோடிவந்து தூண்டிவிட் டார்பகழி
சாத்தகி தன்னையே சாடுகிறார் கணையால்
ஆத்திரப் பட்டே அவன்றேரையு முடைத்தான்
துஷ்டத் தூய்மன்வந்து சுருக்காகத் தேரில்வைத்து
நஷ்டமில் லாதபடி நாடினான் வேறிடமும்
முந்தியே மாயவனும் மொழிந்த சங்குநாதம்
தந்திரமாய்க் கேட்டார் தருமரு மந்நேரம்
அருச்சுனன் றனக்கு அவகேடு வந்ததென்று
அருச்சுனன் கவலை அதிகரிக்க வேயவரும்
சாத்தகியை யழைத்துச் சங்கதியெல் லாமோதி
ஆத்திரமாய்ச் செல்லென்றார் அந்த விசயனிடம்
அந்த மொழிதனை அன்பாய்க்கேட்டுச் சாத்தகி
விந்தையா யெண்ணுகிறீர் விசயனுக் கொன்றுமில்லை
ஆயனிருக்கின்றார் அருச்சுனனைக் காப்பதற்கு
மாயன் சகாயம் மன்னனும் பூண்டவனே
ஒன்றுமில்லை யென்று உரைக்கத் தருமருமே
நன்றில்லை மொழிந்ததும் நாதன்தம்பி யேகேளும்
தடைசெய்யாத படிநீர் சல்தியாய்ச் செல்வீரென
விடையது வாங்கியே வேந்தனு மேசென்றும்
அந்தணர் மேலே அவனுங் கணைதொடுத்து
சந்தோஷ மாய்நுழைந்தான் தக்கயூக மதிலே
அந்தயூகந் தாண்டி அடுத்தயூகம் வரவும்
விந்தையாக யறித்தான் வேந்தன் துச்சாதனனும்
சாத்தகியே நில்லுமெனச் சல்தி கணையேவ

சாத்தகியுங் கண்டு தடுத்துமே யத்தனையும்
கண்ணன்தம்பி யேவினன் கணக்கில்லா தகணைகள்
மன்னன் துச்சாதனனும் வாளிபட்டு வோடியுமே
வேகமாக வரவே வேதியர் துரோணர்முன்
ஆகம முறையறிந்தோர் அழைத்து மவனையும்
என்னடா புத்தி இப்படி யுயிர்பேணி
மன்னவனே யோடுகிறாய் மாற்றான் நகைத்திடவும்
பஞ்சவ ரைவருக்கும் பாரரசைக் கொடுத்து
வஞ்சகம் நினையாது மன்ன ரொடுநீங்கள்
ஒக்கவே கூடி உலகவர சாளுமன்னா
பக்கமில்லை நீங்கள் பாருவண்ணன் தம்பிகளே
இன்னும் பலவிதத்தை எடுத்தோதி யேதுரோணர்
மன்னா நீ யோடினால் மாபடை யத்தனையும்
பின்னாலே யோடிவிடும் பெரும்போரைச் செய்யாமல்
என்னமதி யுனக்கும் இப்படி யேன்படைத்தான்
திரும்பியே சென்று நீ செய்குவா யுத்தமது
விரும்பி யவர்மொழிய வேந்தனு மேகேட்டு
ரதத்தைத் திருப்பியே நல்லரச னும்வந்து
இதமாக நின்று எதிர்த்தான் சாத்தகியோடு
வில்லை வளைத்தே வெகுபாணத் தைப்பூட்டி
தொல்லை விளைத்தானே துச்சா தனனேவி
சாத்தகி யுங்கண்டு சல்தி கணைதொடுத்தே
ஆத்திரமா யேவினன் ஐநூறு கணைவரையே
துச்சா தனன்மேலும் சொருகிடப் பாணமது
அச்சமிக வாகியே அவனுமே யோடினனே
இப்படிக் காக இவர்களு மிங்கிருக்க
தப்பு வந்ததென்றே தருமரு மேநினைந்து
வீமன் றனையழைத்து விளம்பியே செய்திதனை

வீமனே சல்லியாய் விசயனிடஞ் சென்றும்
சங்கதியைத் தெரிந்து சாற்றுவா யெந்தனுக்கு
இங்கேதில் லாதபடி ஏகி வருவாயென
நல்லதர்மர் தானும் நவிலவே பீமனுமே
உள்ளதென்று கேட்டு உமக்குத் துணையாக
துஷ்டத்தூய்மன் றனக்கு சொல்லியே சங்கதியை
நஷ்டம் வராதபடி நாதனைக் காத்திடுவீர்
என்றுரைத்து பீமன் ஏகியே யச்சமயம்
நன்றாகப் பாகனையும் நடத்தென்று னேரதத்தை
தேரு நடத்தினனே திரமையான பாகனும்
தேரு வரும்விதமோ செப்பிடவொண் ணுவேகம்
துரோணர் யூகமதையும் துடியனு மேகடந்து
விரோதம் விளைத்தே வீமனும் வாரானே
துரியோதனன் கண்டே துரோணரிடமோடி
பெரியோர் தனைப்பார்த்து பேயனுங் கோபித்தே
பஞ்சவர் தன்மேலே பட்சமாய் நீருமே
வஞ்சகத்தை நினைந்தாய் மாபாவி யென்மேலும்
வந்தவர் மூவரை வம்பாய்மடிக் காதபடி
சந்தோஷ மாய்விட்டாய் சமர்த்தர்களை யூகமதில்
யோசனை யென்னவென்று ஓதியே கேட்டிடவும்
பாசமொடு துரோணர் பகருவார் சீடனுக்கு
இனிமேல் வருபவரை யான்தடுப் பேனிங்கே
தனியா யிருப்பானே சயிந்தவனும் மங்கேயே
அவனிடஞ் செல்வாய் அதிசீக் கிரமாக
தவராது யின்றவனை தான்காப்பாய் மன்னுநீ
இந்தவேளை சல்தி ஏகுவா யென்றுமே
அந்தணரும் புகன்றார் அரவக் கொடியனிடம்
·வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்ததுரி யோதனனும்

சஞ்சலமாய்க் கேட்டு தானும் ரதமேறி
சீக்கிரமாய் வாரான் தேரை நடத்தியுமே
ஆக்கிரமங் கொண்டு அங்கு மதவீமன்
தண்டா யுதமெடுத்து சாடவே சேனைகளும்
துண்டாய் விழுந்து சோம்பி யவர்மடிய
படைகள் படுந்துயரோ பார்த்தால் பரிதாபம்
தடைசெய்ய வொண்ணுது தக்கபடி மாளுகிருர்
கோடிக்கு மேலே கொள்ளைகொண் டானங்கே
ஓடியொளிகிருர் உள்ளபடை பூராவும்
அங்கதே சாதிபனும் அறிந்துமே சங்கதியை
சிங்கம்போற் கோபமொடு சிலையெடுத் தோடிவந்தே
மதவீமன் றன்னிடமே மன்னனு மோடிவந்து
அதட்டியே கோபமொடு அவனுஞ் சிலைவளைத்து
அள்ளியே விட்டானே அடங்காக் கணைபதுவும்
துள்ளி வருகுதே துடியனிடந் தப்பாது
வருங்கணை யத்தனையும் மதவீம னுங்கண்டே
பெருங்கணை யேவினன் பித்தனை யெண்ணியே
வந்தகணை யெல்லாம் வாட்ட யிவன்பகழி
சிந்தை கலங்கியே செய்யுங் கொடையாளி
பின்னுங் கணைதொடுத்து பிரியமாய்க் கர்ணனும்
மன்னன்பீமன் மேலே வாளிக ளேவினனே
அத்தனையும் வீமன் அறுத்து நிமிடமதில்
மெத்தக்கோபங் கொண்டு விட்டான் கணை நூறு
அதிவேக மாய்வந்து அங்கதேசன் தேருடைத்து
ததியே கருணனையும் தான்பாய மார்பிலும்
ஓடியே சென்றுமவன் ஒருநொடி தேரேறி
நாடியே வந்தான் நல்லபீம னிடத்தில்
சண்டைகளுஞ் செய்தார் சமர்த்தாய் வெகுநேரம்

அண்டையில் வந்திடவே ஆர்க்கும் பயமாகும்
அரவக் கொடியன்தம்பி அங்கு சிலபேர்கள்
திரமாக் வில்வளைத்தே தேவதையெல் லாம்நினைத்து
விட்டார் கணையே வீமன்மே லங்குமே
சட்டென வருகிறதே சண்டாளர் தன்பாணம்
வருங்கணை யத்தனையும் வம்பன்கை யாற்பிடித்து
திருப்பி யெறிந்தான் சேனைகளின் மேலே
வீமனு மச்சமயம் வேகமாய்க் கதைபிடித்து
தாமத மில்லாது சல்தியா யோடிவந்தே
அடித்தா னவர்களை அண்டந் திடுக்கிடவும்
துடித்தே விழுந்து சோப்பியுயிர் விட்டார்கள்
கர்ண னிடந்தனிலே கணைகள் விடபீமன்
கர்ண னம்புபட்டு கலங்கியே யோடினனே
அப்போ பீமன் அடிக்குறுன் சேனைகளை
தப்பாது பட்டுமே சல்தி மடிகுறுர்
அந்தவேளை பீமன் அருமையான தம்பியிடம்
சிந்தை மகிழ்ந்தே செல்லவு மெண்ணியவன்
வந்தானே சீக்கிரமும் வாய்வு சுதனங்கு
அந்த முடைய அருச்சுனனைக் கண்டுமே
அண்ணல் தருமருக்கு அறிக்கை செய்யநினைத்து
மன்னனுஞ் சங்கெடுத்து மகிழ்ந்து தொனித்தனனே
ஆய னருச்சுனனும் அத்தொனி யைக்கேட்டு
மாயன் மனமகிழ்ந்து வந்திட்டான் பீமனென்றுர்
அப்போ தருமரும் அறிந்து தொனியதனை
தப்பாது பீமனுமே தான்சென்று னங்கேயென
சந்தோஷ மாக தானிருக்க வங்கே
தந்திரமாய்ச் சென்ற தக்கபல வான்கருணன்
அதிவேக மாக அங்குமே வீமனிடம்

ததியேவெகு கோபமுடன் தானங்கு வோடிவர
துரியோதனன் தம்பியர் துடியர்கள் நாலுபேர்கள்
அறியவே வந்தார்கள் அந்தபீமன் நேரே
தப்பர்க ளோடிவர தக்கபல வான்கண்டு
அப்போகதை யாலடிக்க அவர்சென்ருர் காலன்பதி
கண்டு துரியனுங் கலக்கமது வுண்டாகி
அண்டை யிருக்கும் அருமையான தம்பியர்க்கு
சங்கதியை யெல்லாம் சாற்றியே மன்னவனும்
அங்கதேசன் கூட அனுப்பின னுதவியாய்
நல்லதெனச் சம்மதித்து நாகக் கணையோனுடன்
சல்லாப மாய்வந்தார் தக்கபல வீமன்முன்
வில்லை வளைத்து வெகுபகழி யேவிவிட
தொல்லைசெய்ய வரவே துடிவீம னும்பார்த்து
வெட்டியே சாய்த்தான் வேந்தர்கள் நால்வரையும்
எட்டியே பார்த்தானே இருந்தவி கர்ணனுமே
வீமனுங் கண்டு விசனமது வுண்டாகி
நேமாயென் தம்பியே நீவந்தா யிங்குமே
உந்தனைக் கொல்லவும் உதவாது யென்னுலே
எந்தன்மனம் நோகுதடா என்னருமைத் தம்பியரே
அப்பனே யெங்களிடம் அருமையாக வேயிருந்து
செப்பவொண்ணு ராச்சியத்தை செய்வா யரசாட்சி
இன்னும் பலவிதத்தை எடுத்தோதி பீமனும்
மன்னன் மயங்கியு மங்குசற் றேயிருந்து
தம்பியிடங் கேட்டானே தக்க பலவானும்
வெம்பி விகர்ணன் விளம்புவான் தமயனிடம்
அந்தநாள் சபைதனிலே அறைந்திருக் காய்சபதம்
எந்தனுட பிறப்பு எல்லோரையு மடிக்க
அந்தச் சபதமும் ஆகுமே பொய்யாக

இந்தவேளை யென்னோடு ஏகிச்செய் வாய்போரு
என்று மவன்மொழிந்து ஏவிவிட் டான்கணையும்
கண்டு மதவீமன் கனகோப முண்டாகி
கதையை யெடுத்துமவன் காவலனை யடிக்க
கதையடி பட்டிடவுங் காலனூர் சேர்ந்தானே
அப்போது பீமன் அவனை மடியில்வைத்து
செப்பி யழுதுதான் தேம்பி வயிறெரிந்தும்
தம்பியே யுந்தனை சண்டாளன் மடித்தேனென
வெம்பி யழுதுமே விட்டவனை நீக்கினான்
அரவக் கொடியனும் அறிந்துமே சங்கதியை
திரமான பிள்ளைகட்கு தேரு தலையுரைத்து
தம்பி மகனே நீங்கள் சல்திசென்று பீமனை
வெம்பிடச் செய்யவே வேணகணை தொடுப்பீர்
என்று மிவன்மொழிய ஏகியே பாலகரும்
நன்றாக வந்தார்கள் நல்லபீமன் முன்னாலே
அப்போது பீமனும் அடித்தான் அவர்கள்மேல்
தப்பாது பட்டே தான்சேர்ந்தார் வைகுந்தம்
அங்கதே சாதிபனும் அதிகக் கவலையுடன்
சங்கங் கணையேவினான் தக்கபலவா னிடம்
அந்த முடைய அவ்வீமன் கோபமொடு
வந்த கணையெல்லாம் வாட்டினான் ரெண்டாக
அப்பால் கருணன் அள்ளிவிடக் கணையும்
தப்பாமல் வந்தே தைத்தது வீமனுக்கு
தேர்ச்சா ரதிமுதலாய் தீர்த்துவிட வீமனும்
பார்தனிலே நின்றான் பாதசாரி யாக
கொடையாளி யச்சமயம் கோடி கணையேவ
தடையில்லாது கணையும் தணலா யெரிந்துவந்தும்
வீமனை யச்சமயம் வேதனை செய்திடவே

நேமன் கணைத்துமே நின்றனே யச்சமயம்
கர்ணனும் பார்த்து கணைத்தோன் சிரமதிலே
விற்கையிற் பூண்டு வேந்த னடித்தானே
அன்றுமே வீமனை அவன்மடியா விட்டதுவும்
நன்றாகத் தாயார்க்கும் நவின்ற மொழியதனால்
விட்டானே பீமனை வேந்தனு மெண்ணியே
சட்டெனவே சென்றான் தள்ளி யொருபுறமாய்
இந்தச்சங் கதிதனையே எழில்விசயன் பார்த்து
வந்துமே சீக்கிரத்தில் மதவீமன் றன்னையே
தன்ரதத்தி லேற்றி சங்கடத்தைத் தீர்த்தும்
மன்னனுங் காண்டீபம் மகிழ்ந்து யெதிர்நிறுத்தி
அங்கதேசன் மேலே அள்ளிவிடக் கணையும்
பங்க மடைந்தே பார்த்தன் கணையாலே
ரதத்தை நடத்தி நடந்தா னொருபுறமும்
இதமாக வந்தானே இங்குவஸ்வத் தாமன்
அர்ச்சுனனை மறித்தே அனேகங் கணையேவ
அர்ச்சுனன் கணையேவி அத்தனையுங் கண்டித்து
காண்டீபந் தன்னிற் கடுங்கணை யைப்பூட்டி
வேண்டியே விட்டான் வேகமொடு வங்கு
அக்கணைகள் வந்து அஸ்வத்தா மன்றன்னை
மிக்க வவதிசெய்ய வேதிய னோடினனே
அர்ச்சுன னைப்பார்க்க ஆயன்தம்பி வரவும்
கெர்ச்சனை செய்தே கிளம்பிப்பூ ரிச்சிரசும்
ஆத்திரமாய்க் கணையை அவனேவி னன்கோடி
சாத்தகியுங் கண்டு தறித்தானே ரெண்டாக
அவனுமே யச்சமயம் அடங்காக் கணையேவ
இவன்றே ரையுமுடைத்து ஏகாங்கி யாகவே
சாத்தகி யச்சமயம் தரைதனிலே நிற்கவும்

ஆத்திரமாய்க் கணையும் அவன்விட்டா னேபாவி
அள்ளிவிட்ட கணையும் ஆங்காரக் கோபமொடு
துள்ளியே வந்து துளைத்திடவே சாத்தகியை
அவனுங் களைத்தே அம்பெடுக் காதுநிற்க
தவருய்ப் பூரிச்சிரசு தான்வந்து சீக்கிரமும்
கத்தியைக் கைக்கொண்டு காவலனை யிழுத்து
சுற்றியே வாரான் தொல்லை தனைவிளைத்தே
அப்போது மாயன் அர்ச்சுன னிடம்மொழிய
தப்பாது விட்டான் தாஞெரு கொடுமைக்கணை
வேகமாக வந்து வேந்தனது கத்திதனை
போகரெண்டு துண்டாக போக்கினதே சீக்கிரத்தில்
பூரிச் சிரசனும் பொக்கென வேபார்த்து
தேரி யவனுமே செப்புவான் விசயனுக்கு
ராசநீதி யல்லவே நரனே செய்தவேலை
ராசனுய் நீபிறந்தும் நல்லநீதி படித்து
இந்தயுத்தஞ் செய்யலாமா இதுவழகோ மன்ன
முத்தின வாலியைப்போல் மொழிந்தானே சங்கதியும்
இந்திரன் சுதன்கேட்டு இயம்புவா னேபதிலும்
முந்தியென் சுதனையே முடிமன்ன ரெல்லாஞ்சேர்ந்து
செய்தது சரியோவென சிலைவிசயன் மொழிய
செய்தியைக் கேட்டுமவன் சீக்கிர மாகவே
யுத்த களம்நடுவில் ஓடி யவனிருந்து
அத்தனை யெண்ணியே அவனுந் தவமிருக்க
சாத்தகியுங் கண்டே சல்தியாய்ப் படைகொண்டு
ஆத்திரமாய் வந்தான் அவனையே வெட்டுதற்கு
அர்ச்சுனனும் மாயன் ஆகாது யென்றுரைக்க
கொர்ச்சனை செய்தே கேளாம லோடிவந்து
மீறியே பாதனும் வேகமாய் வெட்டிடவும்

பூரிச் சிரசும் போய்ச்சேர்ந்தான் காலனூர்

### தேத்தராசனிடம் விசயன் செல்வது

விசயனு மந்நேரம் விளம்புவான் மாயனிடம்
அசட்டைசெய் யாதுவிங்கு அப்பாவி சயிந்தவன்முன்
ரதத்தை விடுமெனவே நல்லவிச யன்வேண்ட
இதமாய் நடத்தினூர் எம்பெருமா ளச்சமயம்
அதிவேக மாகவே ஐயன் ரதம்நடத்த
ததியேவந் தெதிர்த்தார்கள் சங்கமான படையும்
அத்தனை பேர்களையும் அருச்சுன னன்னேரம்
மெத்த வசக்கியே விட்டா னவர்களையும்
துரியோ தனனுஞ் சொல்வான் கருணனிடம்
அரிவாய் சிரசதனை அருச்சுனனை யிச்சமயம்
என்றுமொழி யக்கருணன் ஏகிவந்து பார்த்தனிடம்
நின்று தொடுத்தானே நிட்டூர மானகணை
அந்தமுள்ள விசயன் அறுத்துமே யத்தனையும்
விந்தையாகத் தொடுத்து விட்டான் கணைநூறு
கர்ணன்மேற் பாய்ந்து களையவனு மாக
விற்கிருபா சாரியார் வேகமா யங்குவந்து
விசயனை மறித்தே விட்டார் கணைகோடி
விசயனதைப் பார்த்து வேண்டுங் கணையேவி
வந்தகணை யெல்லாம் வாட்டியே ரெண்டாக
சந்தோஷ மாய்ப்பகழி தான்தொடுத் தைநூறு
மந்திரத்தை யுச்சரித்தே மாதே வனைநினைந்து
தந்திரமா யேவினூன் தக்க பலவான்மேல்
ஆசாரி தன்மேலே அம்புகள் பாய்ந்திடவும்
ஆசாரி யும்மயங்கி அதிவிரைவா யோடினூர்
அப்போது கதிரோன் ஐந்துநாழி கையிருக்க

தப்பாது விசயனையே தான்காக்க மாயவனும்
எண்ணி மனதினிலே இப்போ பருதிதனை
நன்னய மாகவே நாம்மறைக்க வேண்டுமென
தாருகன் றன்னை தானினைந்தா ரன்னேரம்
தாருகனுந் தெரிந்தே சல்தியா யோடிவர
சக்கரத்தைத் தாருமென சாமி கரம்வாங்கி
அக்கிரமஞ் சென்றே அருச்சுனனைக் காக்கவென்று
பருதி தனையே பாங்காய் மறையெனவே
விரும்பியே விட்டாரே விண்ணிலே மாயவரும்
ஆயன்கைச் சக்கரமும் அங்கே பருதிதனை
மாயன் மொழிப்படியே மறைத்தது சீக்கிரத்தில்
அப்போது பருதியும் அடைந்தாப்போல் தோற்றிடவே
செப்பவொண்ணுத் துக்கம் சிலைவிசயன் கொண்டிருக்க
சகல வரசர்களுஞ் சந்தோஷ முண்டாக
விகடங்கள் பேசுகிருன் வேந்தனு ஞ்செயத்தரசன்
அரவக் கொடியனுடன் அவன்சேனை யத்தனையும்
திரவர் னருச்சுனனுந் தீர்ந்திடு வானின்று
சபதப் படிமுடிப்பான் சத்திய வாக்குள்ளான்
தவராத படிவிசயன் சார்ந்திடுவா னக்கினியில்
என்றுமவர் பேசி இருந்திடவே யங்கே
நன்ருன தர்மர் நல்லதம்பி யைநினைந்தும்
கவலைமிகக் கொண்டு கண்ணீர் வடித்திடவும்
தவரு யிருப்பதுவைத் தானறிந்து படைகள்
மிக்கக் கவலைகொண்டு வேந்தர்க ளெல்லோரும்
ஒக்க வழுதார்கள் ஓயாத சத்தமுடன்
தக்க பலவான் தனுவிசய னின்றுமே
அக்கினியில் மாள ஆதி விதியாக்கும்
பொறுமையே பூஷணமாய்ப் பூண்டதருமருடன்

வறுமை மிகவடைந்து மன்னர்க ளங்கிருக்க
அப்போ வருச்சுனனும் ஆயனிடம் புகல்வான்
இப்பவே யிங்குயான் எல்லோரும் பார்த்திடவே
அக்கினியை வளர்க்க அறைந்திட்டான் தீரமுடன்
பக்கங் குழிவெட்டி பாரத்தீயை மூட்டி
விசய னிடத்திலே விளம்பினுர் சங்கதியும்
விசயனுங் கேட்டே வெகுதுயர முடனே
ஆய னிடத்திலே அவனுமே வந்துநிற்க
மாயனும் விசனமுடன் மைத்துன னருகேநின்றும்
இப்படிக் காக இவர்கள் நிற்கவிங்கே
அப்பொழுது துரியனுடன் அவனுடைய மைத்துனனும்
வேடிக்கை பார்க்கவென வெகுமோடி யாயவரும்
நாடிவந்து நின்ருர் நல்ல விசயன்முன்னே
சகல வரசருந் தான்பார்க்க வங்கேயும்
பகவானு மச்சமயம் பார்த்தன் றனைப்பார்த்து
அர்ச்சுனு வுன்யெதிரி அதோநிற்கு ருன்பாரு
விற்றிரத்தைக் காட்டி வேந்தனை நீமடிப்பாய்
என்றுதான் மாயன் இயம்ப விசயனுமே
நன்றுதான் மைத்துனரே நல்யோ சனைமொழிந்தாய்
க்ஷத்திரியன் யானும் தவருவே னுவாக்கு
இத்ததி வெய்யோன் இருந்தா லவனையான்
தலையை யறுத்திடுவேன் சாமியே பொழுதில்லை
தலைவிதியின் படியே தாஞச்சு யென்கதியும்
நானும் விழப்போறேன் நாதனே யென்றுரைக்க
வேணுமென்றே மாயன் விட்டார் விசயனையும்
அக்கினிக் குழியதனை அருச்சுனன் சுற்றிவர
முக்கியமாய்ப் பார்த்தான் முன்னின்று செயத்தரசன்
விசயனு மிரண்டுசுற்று வேகமாய் வந்திடவும்

விசய னிடத்திலே வேணுகோ பாலன்வந்து
அருச்சுனனை யழைத்து ஆயனுங் கிட்டவைத்து
அருச்சுனு யிச்சமயம் அருணன் தெரிந்தாலே
தேத்தரசன் றன்னையும் தீர்க்கமடிப் பாயாவென
ஆத்திரமாய்க் கேட்டான் ஆயனும் மைத்துனனே
சாமியே யெந்தனுக்கும் சணப்பொழு திருந்தாலே
சாமியே யானும் தறிப்பே னவன்முடியை
என்று மொழிந்து எடுத்துரைக்க வேவிசயன்
நன்ருகக் கேட்டு நவிலுவார் விசயனிடம்
அவன்றலையை யறுத்து அப்பால்கீழ்ப் போட்டாலும்
அவர்கள் சிரசு ஆயிரஞ்சுக் காய்வெடிக்கும்
அவன்தகப்பன் சிந்தரசன் ஆரணியந் தன்னிலே
அவன்தபசு செய்கின்முன் அவனிட கரமதனில்
தேத்தரசன் சிரசு தீரனே போய்விழவும்
ஆத்திரமாய் நீயும் அப்பு தொடுக்கவேண்டும்
அர்ச்சுன னிடமொழிய அவனுமே சம்மதிக்க
விற்கரத்திற் பிடிப்பாய் விசயனே நீதயாராய்
ஆயன்வுர நினைத்தார் அங்குமே சக்கரத்தை
மாய னழைத்திடவே வந்தது வேயருகில்
அப்போது வெய்யோன் ஐந்துநாழி கையிருக்க
தப்பாம லேவினுன் தனஞ்செயன் பாணமதை
தேத்தரசன் சிரத்தை சீக்கிர மறுக்கக்கணே
ஆத்திரமாய்த் தொடுத்தான் அனேக நூறுவரையில்
சென்றுமே பாணம் சிரங்கீழ் விழுகாமல்
நன்ருகத் தாங்கி நல்ல வனமதனில்
தவஞ்செய்யும் சிந்தரசன் தன்கையிற் போடவே
தவநிலையை விட்டு தன்சுத னைப்பார்த்தே
துக்கமது வாகி துயரி லவனுழ்ந்து

பக்கத்திற் போட்டானே பாலன் சிரமதனை
அவன்சிரசு வச்சமயம் ஆயிரஞ் சுக்காக
சிவன்தந்த வரப்படியே சீக்கிரம் வெடித்திடவும்
மன்ன ரிருவரையும் மறலிவந் தேயழைத்து
அந்நா ழிகைசென்ருன் அவன்வாழு மூர்தனக்கு
வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்ததுரி யோதனனும்
சஞ்சலங் கொண்டே தனையன் மிகவழுக
ஆச்சரியப் பட்டு வங்குநின்ற வரசர்
காய்ச்சிய நாராசம்போல் கடுங்கோபத் தைப்பூண்டு
வில்லை வளைத்தே விசயனுெடு வந்தெதிர்க்க
தொல்லை யடைந்தவர்கள் சொல்லாம லோடினர்
அப்போது வெய்யோனும் அடைந்தானே மேல்ாழி
தப்பாது சேனையெல்லாம் தனுவிசயன் சேர்த்து
பாசறை வந்துமே பார்த்து தருமரிடம்
நேசமாய் மாயவனும் நிகழ்த்தினுன் சங்கதியை
அவரு மிதைக்கேட்டு ஆனந்தங் கொண்டுமே
தவரா திருந்தார்கள் தங்கள் படையுடனே
சஞ்சயனு மச்சமயம் சல்தியஸ்தி னுபுரியில்
வஞ்சகன் தகப்பனிடம் வழுத்தினுன் சங்கதியை
கேட்டுமே யந்தகனும் கிலேசமது வுண்டாகி
வாட்ட மடைந்தே மண்ணிற் புரண்டானே
அந்தமுள்ள சஞ்சயன் அவனை யெடுத்தணைத்து
விந்தையாய்ச் சிலநீதி விளம்பினுன் மன்னனுக்கு
சஞ்சய னுரையதனைத் தான்கேட்டு மேயரசன்
சஞ்சலத்தைப் போக்கி தானிருந்தா னம்மானை

துரியோதனன் துரோணரிடம் புலம்புவது

துரியோ தனனுஞ் சோர்ந்து மிகச்சிந்தை
அறிவில்லா மூடன் அங்குவந்து துரோணரிடம்

அவரைப் பணிந்தும் அலறிப் புலம்பியே
தவறுவந்த சங்கதியைச் சாற்றுவா னேமுடன்
ஐயா வுனைநம்பி அடியேனிருந்ததற்கு
மெய்யாக யெந்தனையும் விட்டாயே யந்தரத்தில்
ஐவர்கள் மேலும்நீர் அதிகப் பிரியமதாய்
செய்யுத்தஞ் சரியில்லை சிரமமில்லா திருக்கிர்
எனக்குரிய மன்னவரை இழந்துவிட் டேன்பாவி
உனக்குக் கவலையும் ஒன்றுமிலை வேதியரே
ஐவர்கள் மடித்துவிட்டார் அனேகமான மன்னவரை
செய்வதென்ன யினிமேல் செப்புவா யென்குருவே
என்று மொழிந்தரசன் எண்ணி விசனமிட
நன்றாய்க்கேட் டேதுரோணர் நவிலுவார் மன்னனுக்கு
அரவக்கொடி பூண்டவனே அறைகுவ தைக்கேளும்
திரமான வார்த்தைதனை செப்பினு யென்னிடத்தில்
அந்தநாளில் மொழிந்தேன் ஐவர்கள் பலமதனை
அந்தநாளிற் கேட்கிலை நீ அரசேயதி னுற்றிலை
பாண்டுமன்ன னீன்றெடுத்த பண்புடையோ ரானபஞ்ச
பாண்டவரில் விசயன் பலத்தில் மிகுந்தோனிடம்
அடியேனும் போயெதிர்த்து அனேகபாணங் கள்தைத்து
துடித்துமே யோடிவந்தேன் துடியனை விட்டுயோன்
அம்புதைத்த காயம் அரசேயென் மேற்பாரும்
வம்புகள் செய்தான் மகாபல வான்விசயன்
அவனுந் துடியன் அத்தனைவில் லாலடித்தோன்
அவனோ டெதிர்க்கவும் ஆகாது யென்னுலே
வீமன் வெகுதுடியன் வெகுசனத்தை யுமடித்தான்
வீமனொடு போர்புரிய வேந்தரிலை யேயிங்கே
அவர்கள் பலசாலி அறிந்திருக் காய்நீரும்
தவரா ரொருநாளும் சத்திய வாக்கதுவை

முப்பத்துமுக் கோடிதேவர் மூனைந்துமே கோபமொடு
செப்பரிய ருத்திரன் சேர்ந்துவந் தெதிர்த்தாலும்
அர்ச்சுன னோடு அமரது தொடுத்தாலும்
கெர்ச்சனை செய்தே கிரீடி மடித்திடுவான்
அப்படி யாயிருக்க அரசனே யெந்தனை நீ
செப்பாத வார்த்தைகளுஞ் செப்புகி றாய்மன்னா
யானிருக்கும் வரையில் அரசனே யுந்தனையும்
தானிருக்க காத்திடுவேன் சத்திய மீதுண்மை
இன்றுமே யிப்போரில் என்சமர்த்துப் பூராவும்
நன்றாகக் காட்டியான் ராசாக் களைமடித்து
உதவிசெய்வே னென்று உரைக்கத் துரோணரும்
இதமாகக் கேட்டு இருந்தா னரசனங்கே
அப்போது சேனையெல்லாம் அமர்த்தியே சேனாபதி
இப்போது யுத்தமென்று இயம்பிப் படைகளுக்கும்
அப்போ துரோணர் அணிவகுத்து மங்கே
தப்பாது முன்னின்றான் சமர்த்துள்ள வீரர்கள்
பஞ்சவர்க ளச்சமயம் படைக்குவீர மொழிந்து
சஞ்சல மில்லாது தான்வந்தார் யுத்தகளம்

அன்றிரவு யுத்த வாரம்பம்

இருதரப்புச் சேனைகளும் எல்லாந் தயாராகி
நெறுநெறுத்துப் போருதே நிற்கவிட மில்லாது
அரவக் கொடியோனும் அதிகக் கோபமுடனே
பரபரப்பா யோடி பாரரசன் வந்தும்
ஐவர்கள் சேனையின்மேல் அள்ளிவிட் டான்கணைகள்
ஐவர் படையெல்லாம் அலையுதே தட்டுக்கெட்டு
தர்ம ரதைப்பார்த்தே சல்தி யெதிர்வந்து
விற்றிரங் காட்டிடவே வேந்தனு மெண்ணியே
வில்லிற் கணைபூட்டி வேகமா யேவிடவும்

தொல்லை விளைத்ததே துரியோ தனனையும்
தவருஞேன் றேரைச் சல்தி யுடைத்துமே
அவனையும் மார்பில் அம்புகள் தைத்திடவும்
அவதி மிகப்பட்டு அந்தகன்றன் சுதனும்
தவறியே யோடினுன் சனத்தையெல் லாம்நீக்கி
அந்தமுள்ள சாத்தகி அந்தணர் துரோணர்மேல்
விந்தையான கணையை யேவினு னச்சமயம்
அத்தனை கணையும் அறுத்துத் துரோணரும்
மெத்தக் கோபமாக விட்டார் வெகுபகழி
சாத்தகி மேற்பட்டு சங்கட மடைந்துநிற்க
ஆத்திரமா.யங்கு அருச்சுன னும்வந்து
இருவருஞ் சேர்ந்து ஏகக் கணைதொடுத்து
கெருவமா யேவினுர் கிழவர் துரோணர்மேல்
அப்பவே வேதியரும் ஆவேச மேகொண்டு
செப்பவொண்ணுப் பகழி சேனைமே லேவினரே
ஓட்டமாக வந்து உள்ள வரைப்பாய
வாட்ட மடைந்து வம்பாய் மடிகிறுர்கள்
கோடிசனம் வரையில் கொள்ளைகொண் டானங்கே
வாடியே யோடுகிறுர் மன்னரைவர் சேனைகள்
வீமனறிந்தே வேகமா யோடி வந்து
நேமனுஞ் சேனைகட்கு நிகழ்த்தித் தைரியத்தை
சேனைகளைக் கூட்டி சீக்கிர மாய்த்திரும்ப
சேனை வருவதைத் திரியோ தனன்பார்த்து
தம்பி யிருவரைத் தானழைத்து மருகில்
தம்பியரே நீங்கள் சல்திமறி யுங்கள்
என்றரசன் மொழிய ஏகிட விருவர்களும்
கண்டானே பீமன் காவல ரெதிர்வரவே
வாயுவேக மாக வந்து துடியனும்

பேய்வேடங் கொண்டவரை பிடரியி லேயடிக்க
அந்த அடிவாங்கி அவர்களு மேதுடித்தே
சொந்தமாய்க் காலனூர் சோம்பியே சென்றூர்கள்
அந்தமுள்ள கடோர்க் கசனுமதி வேகமொடு
தந்தைக் குதவியாய்த் தான்வந்து சேர்ந்தனனே
கவுரவர் சேனைதனைக் கண்ட துண்ட மாக்குகிறூர்
கவுரவர் வீரரெல்லாங் கலங்குரு ரச்சமயம்
அறிந்துவஸ்வத் தாமன் அங்குமே யோடிவந்து
தெரிந்திட வேபகழிதீட்டி விட் டானூறு
கடோர்க்கசன் றேரைக் கடுங்கணைக ளுடைத்து
கடோர்க்கசன் மார்பிலுங் கலங்கிடத் தைத்ததுவே
துஷ்டத்தூய் மன்கண்டு துடியாக வோடிவந்தே
கஷ்டமிகப் பட்ட கடோர்க்கசன் றன்னையும்
தன்ரதத்தி லேற்றி சல்தியாக வெளியே
மன்னனுக்கு கொண்டுவந்தான் மகாபடை யைவிலக்கி
பஞ்சவ ரப்போது பாவியுட சேனையின்மேல்
அஞ்சாமற் கணைதொடுத்து அனேகம் பேரைமடிக்க
ஐயையோ வென்று அலையுது சேனைகளும்
செய்யவே யுத்தஞ் செயலில்லை மன்னருக்கு
ரெத்தவெள்ள மோடுது ரெணகள மெல்லாமே
அத்ததி பசாசுகளும் ஆடுதங்கு கூத்து
படுகள மெல்லாம் பார்த்தால் பரிதாபம்
விடுவேனே வென்று விசயனு மப்போது
வில்லிற் கணைதொடுத்து வேகமாக விடுத்தே
தொல்லை விளைக்குரூன் தூரியனது சேனைகளை
அலறியே கீழ்விழுவார் அனேகங் கோடிமன்னர்
அலறி விழுவோரை அறுப்பான் சிரமதனை
பதறியே சேனையோட பார்த்துத் தூரியனும்

கதறியே யோடிவந்து கர்ண னிடமழுக
அங்கதே சாதிபனு அறிந்துமே சங்கதியை
பங்கமது செய்ய பார்த்தனின் முன்வந்தும்
வில்லை வளைத்தே வெகுபகழி தொடுத்து
சல்லாப மாயேவ தான்கண்டு விசயனுமே
காண்டீபந் தன்னில் கணைகள் வெகுதொடுத்து
தூண்டியே விட்டான் துடியன் கருணன்மேல்
கர்ணன்கணை யத்தனையுங் கண்டிக்க ரெண்டாக
கர்ணனுங் கண்டே கண்கள் சிவப்பேறி
தொடுத்துக் கணையை சொல்லி யுபதேசம்
விடுத்தானே யந்த விசயனிடம் தப்பாது
விட்ட கணைகள் வேகமா யோடிவர
சட்டெனவே யறுத்தான் தக்க பலவிசயன்
வேர்த்துக் கணைதொடுத்து விளம்பி யுபதேசம்
பார்த்துமே விட்டான் பகையாளி கர்ணன்மேல்
கணைகளும் வந்து கர்ணன் ரதமுடைத்தே
கனைத்த பரிதனையே கண்டித்தது வேசிரத்தை
அங்கதே சாதிபனும் அவதி மிகவடைய
பங்க மடைந்ததைப் பார்த்துவஸ் வத்தாமன்
சல்தியாய் வந்து தனஞ்சய னேடெதிர்த்து
சொல்லி முடியவில்லை துடியன் விட்டகணைகள்
அர்ச்சுனன் கணையேவி அத்தனையுந் துண்டாக்கி
கெர்ச்சனை செய்து கிரீடியு மன்னேரம்
வில்லில் தொடுத்து வேண்டிய கணையேவ
துள்ளியே வந்துந் துளைக்கவஸ் வத்தாமனை
அவனுங் கஷ்டப்பட்டு அப்பாலே யோடிடவும்
தவறுவந்த சங்கதியைத் தானறிந்து மேதுரியன்
சிந்தை கலங்கி தேம்பி யவனழுது

அந்தவேளை சென்றான் அவ்வரச னெட்டியே
அப்பா லொருபுறத்தில் ஆயன் தம்பியோடு
தப்பன் சோமதத்தன் தனியாக வந்தெதிர்க்க
சாத்தகியுங் கண்டு சல்தி யம்புதொடுத்து
ஆத்திரமாய் விட்டு அறுத்தான் சிரமதனை
துரோணருங் கண்டு தொடுத்துக் கணையேவி
விரோதம் விளைத்தே வெகுசனத்தை மடித்தார்
ஐவருட தளமும் அலையுதே தட்டுக்கெட்டு
ஐவரதைப் பார்த்தே அவதிமிக வடைய
அந்தமத வீமன் அதிகக் கோபமுடனே
விந்தையாய்க் கதைபிடித்து வேகமா யோடிவந்தே
தன்சேனை யத்தனைக்கும் தைரியம் போதித்து
மன்னன் திரும்பிவந்து மாட்ட வெதிரிகளை
அரவக் கொடிபடைத்தோன் அறிந்துமே செய்திகளை
பரபரப்பாய் வந்தான் பலபீமன் முன்னாலே
வீம னடித்தானே வேந்தனு மோடிடவும்
வீமனு மங்கு வெகுசனத் தைமடிக்க
கர்ண னதைப்பார்த்து காந்தாள மேகிளம்பி
விற்கையிற் பூண்டு வேகமா யங்குவர
சாத்திர மதைக்கரைத்து தானுண்ட பாலகனும்
ஆத்திரமாய் மறித்தான் அங்கதேச வரசை
ஆங்காரங் கொண்டு அவர்களும் போர்புரிய
பாங்காய்க் கருண னும் பத்துக் கணையேவ
சகாதேவன் தேரை சல்தியாக வுடைத்து
தகாத வேலையெல்லாம் தான்செய்து விட்டதினால்
சிறுவன் களைத்து தேகமெல்லாம் வேர்க்க
வறுமை யதையெண்ணி மாபாவி கர்ண னுமே
சிறுவன் கழுத்தில் சிலையதனை மாட்டி

அருமையாக நினைந்து அவனை யிழுத்தானே
தம்பியை மடிக்காதது தாயார்க் குரைத்ததினல்
வெம்பிடச் செய்தான் வேந்தன் சகாதேவனை
சல்லிய னவ்வேளை சதானீகன் றன்மேலே
சொல்லிவாய் மூடுமுன்னே தொடுத்துவிட் டான்பகழி
சல்லியன்றன் கணையும் சதானீகன் றன்சிரசை
துள்ளி விழுந்திடவே துடியன் கணையறுக்க
அவனுமே சென்ருன் அரன்பதவி தப்பாது
தவராது வெகுபெயரைத் தான்மடித்தான் சல்லியனும்
அங்கதே சாதிபதி ஆவேச மேகொண்டு
சங்கம் படைகள்தனை சாய்த்துவிட் டான்காலனூர்
துஷ்டத்தாய் மன்றன்னை துளைக்கவே யம்புகளும்
கஷ்டமிகப் பட்டு காவல னேடிடவும்
அந்தமுள்ள கிரீடி ஆயனிட மொழிவான்
இந்தக் கருணனும் எரிக்குருன் சேனைகளை
அவனை மடிப்பதற்கு ஆயா ரதம்நடத்து
தவர்ாது இன்றைக்குத் தறிப்பே னவன்சிரத்தை
என்றுி விசயன் இயம்பக் கேட்டுமாயன்
நன்ரு யவனுக்கு நவிலுவா ரேபதிலும்
அர்ச்சுன னேகேளும் அவனிடத்தி லோர்கணையும்
பிர்மாண்ட மானது பெரிய சத்தியொன்று
வைத்திருக்கா னவனும் வம்புக் கணையது
இத்ததி நீயுமே எதிர்க்கப் படாதுகாண்
சென்ருலே வம்பு சிலைவிசயா வந்துவிடும்
நின்றிடு மிங்கே நிச்சய மானசெய்தி
கடோர்க்கசன் றன்னையுங் கருண னிடத்திலே
திடத்தோடு சென்று தீரனை யெதிர்த்திடவும்
சொல்லுவோ மென்று சுருக்காயவ னையழைத்து

நல்லகடோர்க் கசனே நலமாக நீர்கேளும்
தவருய்க் கருணன் சனத்தையெல் லாம்மடித்தான்
அவனேடு நீயெதிர்த்து அருமையாய்ப் போர்செய்யென
ஐய னுரைப்படியே அவன்சென்று சீக்கிரத்தில்
செய்கிருன் யுத்தமது தீர னு மன்னேரம்
அள்ளிப் பொழிகிருன் அடங்காக் கணைகளும்
துள்ளி விழுந்துமே சோம்பி மடிகிருர்
தேரு முடைந்து செம்புரவி மாண்டிடவும்
தாருமாருய்ச் சனங்கள் தக்கபடி மாளுகிருர்
வேண படையை வீரனும் மாய்த்திடவும்
காணவே யோடுகிருர் காவலர் வெகுபேர்கள்
கவுரவ சேனைகள் கலங்குது வன்னேரம்
கவுரவர்கள் தலைவன் கண்டுமே வஞ்சகனும்
பங்கமதை யெண்ணி பாரரச னேடிவந்து
அங்கதேசக் கர்ணனிடம் அழுது பரதவிக்க
அண்ணுயேன் துக்கம் அடியே னிடத்தினிலே
மன்னு மொழியெனவே மயங்கினே னுங்கேட்டு
அண்ணுவே பாராய் அந்தக் கடோர்க்கச னும்
மன்னரை யெல்லாம் வம்பாய் மடிக்குருன்
அவனை மடித்திடவே ஆகுமே யுன்னுலும்
தவாரது சென்று சல்தி யவனிடமே
இருக்கும் வேலாயுதத்தை ஏவி யவன்பேரில்
அறுத் தெறிவாய் சிரசை அண்ணுவேதப்பாது
தாமித மில்லாது சல்தியாய்ச் செல்லுமென
சாமியே யென்று தயவாக வேண்டினனே
அங்கதேசக் கர்ணன் அறைகுவான் மன்ன னுக்கு
பங்கமடையச் செய்ய பார்த்தனையிவ் வேலாலும்
வைத்திருக்கேன் யானும் வதைக்க வவனையும்

பைய மொழிகிருய் பாலன்மே லேகணையை
விட்டாலும் யானே விசயன் பிழைத்திடுவான்
விட்டிடவே கூடாது வேந்தனே யிச்சமயம்
நாகக் கணைதானும் நரனை மடியாவிட்டால்
வேகமாய் வேலாயுதம் வெல்லும் விசயனையும்
அக்கணை விடுவதும் அரசனே யிச்சமயம்
தக்கதில்லை யென்று சாற்றினு னேகருணன்
துரியோ தனன்கேட்டு சோம்பிய சிந்தைமிக
அறியவே கர்ணனிடம் அரச னுரைப்பானே
இன்றை யிரவில் இந்தக் கடோர்க்கய னும்
கொன் றிடுவான் பூராவும் கோமானே நிச்சயமே
இவனை வதையுமென்று மியம்ப வரசனுமே
அவனுரையைக் கேட்டு மப்படியே நல்லதென்று
கர்ண னு மச்சமயங் கனத்த சத்தியெடுத்து
விற்கையிற் பூண்டு வேகம தாய்த்தொடுத்தே
மந்திர தியானமுதல் மன்னனுஞ் செய்ததற்கு
தந்திரமா யேவினனே தக்க பலவான்மேல்
வில்லி லிருந்து விடுபட வேசாமும்
சொல்லி முடியாது சுடர்க்கணை யின்வேகம்
அம்பு வரும்விதத்தை யறிந்துமே தேவர்களும்
வம்பாய்க் கடோர்க்கய னு மடிந்திடுவா னென்றனரே
அப்போது சத்தியுமே அதிவேக மாய்வந்து
தப்பாது கடோர்க்கயனைத் தானறுத்த தேசிரத்தை
அண்டரெல்லாங் கண்டு மாயாசங் கொண்டுமவர்
சண்டாளக் கர்ண னுஞ் சாவான் விசயனிடம்
என்றுதேவர் மொழிந்தே இருந்திட வச்சமயம்
நன்ருய்க் கடோர்க்கய னும் நாதன் பதஞ்சேர்ந்தான்
அப்போர் தருமர் அறிந்துமே சங்கதியும்

இப்போ கருணனை என்கைச் சரமதினால்
வதைத்திடுவே னென்று வம்பு மிகப்பேசி
பதைத்து மவரெழுந்து பாரதனி லோடிவர
தெரிந்து மிதைவியாசர் சீக்கிரமா யோடிவந்து
தெரியவே தர்மருக்கு செப்பினார் நீதிகளும்
அஞ்சாதே தர்மா அஞ்சுநாள் தானிருக்கு
வஞ்சகன் துரியனுமே மாண்டிடுவான் சீக்கிரத்தில்
அப்பால் சுகமடைந்து அரசைமுடி சூடிடுவாய்
தப்பாது யென்றுரைத்து தானடந்தார் மாமுனியும்
அரவக் கொடியனுடன் அவன்படை யத்தனையும்
திரமுமே பேசியவர் சிரித்தார்க ளச்சமயம்
அப்போ துரோணர் அரசன் றனைப்பார்த்து
இப்பவே ஐவரையு மிராசனே போய்வெல்லும்
சமர்த்துகள் பேசாதே சல்திசென் றிச்சமயம்
தமக்குள்ள தொழிலைத் தான்காட்டு விசயனிடம்
என்று நகைத்துமவர் ஏளனங்கள் பேசிடவும்.
நன்றாய்க்கேட் டேதுரியன் நவிலுவான் துரோணரிடம்
எனக்குரிய மன்னர்களை யான்சேர்த்து மேசென்று
தினத்துக்குள் ளேயானும் சிலைபிடித்தோ ரைவரையும்
வெல்லுவே னென்று வேந்தன் சபதமிட்டு
நல்லபடை யைக்கூட்டி நாடிவந்தான் தர்மரிடம்
ஆசாரி கண்டுமே அங்கே நகைத்துமந்த
ஆசாரி சேனையுடன் அமர்தொடுத்தா னோர்புறமும்
அள்ளித் தொடுத்தான் அடங்காச் சரமதுவும்
துள்ளியே வந்து துடியாக வெட்டுகுதே
பஞ்சவர் சேனைதனை பாழாக்கு முன்துரோணர்
வஞ்சகன் விட்டகணை மடிக்க வெகுபேரை
அவதி மிகப்பட்டே அவர்களு மோடிடவும்

தவராம லேவிராடன் தான்சென்று சேனையிடம்
அந்த முடைய வரசனவர்க் குத்திடத்தை
விந்தையாக மொழிந்து வேந்தன் றிருப்பியுமே
அப்போ விராடன் அணியணி யாய்ப்பிரித்து
தப்பாமல் வைத்து தானிருக்க வங்கு
துரோணரு மோடிவந்து தொடுத்துவிட் டான்சரத்தை
விரோதம் விளைப்பதை விராடனு மேபார்த்து
வில்லை வளைத்தே வெகுதொனி யைக்காட்டி
தொல்லை விளைக்கவுந் தொடுத்துவிட் டான்கணைகள்
அதிவேக மாய்வந்து அங்குதுரோணர் கணையை
ததியேகணை ரெண்டாக சல்தி முறித்திடவும்
வேதியருங் கண்டு விடம்போலக் கோபமுடன்
வேதினை யெண்ணு து விட்டார் கணையதிகம்
வந்தகணை பூராவும் வாட்டி விராடனும்
நொந்திடவே பின்னே நூறுகணை யேவினனே
துடியாக் கணைவந்து துரோணரின் வில்லொடித்து
படிதேர் பரிகள்முதல் பாவிகணை சாய்த்திடவும்
மறுதேரி லேறியந்த மறையோனும் விற்பூண்டு
கெருவமா யங்கு கிளப்பிவிட் டார்பகழி
வேகமாய் வந்தும் விராடன் சிரசறுத்து
போகவே செய்தான் புண்ணியன் காலன்பதி
துருபதனுங் கண்டு துடியாக வோடிவந்தும்
நெறுநெறுக்க வேகணையை நீட்டினன் துரோணர்மேல்
சிலையரசன் கண்டு சிலையிற் கணைபூட்டி
கொலைசெய்ய வேநினைந்து குருக்களுந் தூண்டிவிட
துருபத ராசன்றிரசை துடியாய்க் கணையறுத்து
அருமையாக வந்தது அந்தணர் தன்னிடத்தில்
துஷ்டத்தூய்மன் கேட்டே துடியன்வெகு கோபமதாய்

நஷ்டப் படுத்தினன் நம்முடைய சேனை தனை
துரோணர் தனையின்று தொலைத்துவிடு வேனெனவும்
விரோதமதை யெண்ணி வேந்தன் சபதமிட்டு
வந்து யெதிர்த்தான் வம்பு விளக்கவே
தந்தாய் பீமன் தான்வந்து மோர்புறத்தில்
கையில் கதைபிடித்து காவலரை யடிக்க
ஐயையோ வென்று அலறி மடிகிறார்
வேடிக்கை பார்க்கவென வெய்யோனு மச்சமயம்
தேடியே கீழ்சிந்தில் சீக்கிரமாய் வந்தனனே
கதிரோன் வரவைக் கண்டு மரசர்களும்
ததியே விதிமுடித்து தானிறுத்தி னார்யுத்தம்
அந்தமுள்ள சஞ்சயன் அஸ்தினா புரிசென்று
அந்தக னிடத்திலே அறைந்தானே சங்கதியும்
அரசனுங் கேட்டு அதிக விசாரமிட
திரமான நீதிகளைச் செப்பினா னம்மானை

பதினைந்தாம்நாள் யுத்தம்

இருதரப்புப் படையு மெல்லாம் யுத்தகளத்தில்
கருவமாய் வந்துமே கடல்போல் நிறைந்தார்கள்
அன்று துரோணர் ஆவேச மேகொண்டு
நின்று தொடுத்தானே நிட்ரே மானகணை
சேனைக ளெல்லாந் திக்குமுக் காடிடவும்
ஆனையொடு பரிகள் அலறியே மாள்கிறது
வெகுசனத்தை மடித்தார் வேதியர் துரோணரும்
பிகுவான யுத்தம் பெரியோனுஞ் செய்தானே
அர்ச்சுனன் கண்டு ஆங்காரக் கோபமுடன்
கொர்ச்சனை செய்தே கிரீடியு மங்குவந்து
ஓடிய சேனைகட்கு உரைத்து மதியதனை
நாடியே வந்தான் நல்ல குருவினிடம்

வில்லை வளைத்துமவன் வெகுதொனி யைமுழக்கி
தொல்லை விளைக்கவே தொடுத்தேவி ஞன்கணையும்
அந்தணர் துரோணர் அத்தனையும் கண்டித்து
விந்தையான கணையை விரட்டினர் விசயனிடம்
இருவர்கள் யுத்தமது இப்படி யிங்கிருக்க
மறுகொரு புறத்தில் மன்னன் துஷ்டத் தூய்மனுக்கும்
துச்சா தனனும் துடியாக வோடிவந்து
விற்கையிற் பூண்டு விட்டான் கணையதிகம்
அத்தனையும் ரெண்டாக்கி அந்த துஷ்டத்தூய்மன்
மெத்தக் கோபமுடனே விட்டான் சரம்நூறு
அத்தனை கணைகளு மவனிட மேவந்து
சித்தங் கலங்கிடவே செய்தது பாவிதனை
அவனுங் களைத்தே அப்புற மோடிடவும்
அவன்சென்ற சங்கதியை அறிந்து துஷ்டத்தூய்மன்
துரோணரை யெண்ணியவன் துடியாக வோடிவர
துரோணரிடஞ் செல்வதை துரியோ தனன்பார்த்து
சல்திவந்து தடுத்தான் சமர்த்தனு மங்கேயும்
சொல்லிவருமுன்னே துடிவீம னேடிவந்தும்
ஒருவர்க் கொருவர் ஓயாத சண்டைசெய்து
இருவர்கள் கைக்குத்து மிடிபோலே கேட்டிடுமே
அப்போது பீமன் ஆனைகளை வாரியே
தப்பா தெறிந்தானே சண்டாளன் தேரதனில்
ரதமு நொருங்கி நடுக்கங்கள் தன்னுடனே
பதறியே யோடினன் பாவிதுரி யோதனனும்
மறுதேரி லேறி மான மடைந்தோனும்
கெருவமாய்ச் சென்ருன் கிலேசமில் லாதபடி
சாத்தகியும் வந்தே சல்தியவ னைமறிக்க
ஆத்திரமாய்ப் புகல்வான் அரச னவனிடமும்

அந்தநாளில் நாமும் அதிகச் சினேகமடா
இந்தவேளை போர்செய்ய ஏங்குதே சிந்தையது
என்று மொழியவே இதைக்கேட்டுச் சாத்தகியும்
நன்ருக வேடுகல்வான் நாகக் கொடியனிடம்
அந்தநாளின் சினேக மரசே யிருக்கட்டும்
இந்தவேளை நாமும் எதிரிதா னேகாணும்
என்று மொழிந்தே எடுத்துவிட் டான்கணையும்
நன்ருய்த் துரியோதனன் நறுக்கிவிட்டா னத்தனையும்
அரவக் கொடிய னடிபட்டு வோடிடவும்
திரவான் கருணனும் திருப்பி ரதமதனை
சாத்தகி முன்பு தான்வந்து சீக்கிரத்தில்
ஆத்திரமா யேவினன் அடங்காக் கணைகளை
அத்தனை கணைகளையு மறுத்துமே சாத்தகியும்
மெத்தக்கோப முடனே விட்டான் வெகுசரத்தை
துரியோ தனனைத் தொந்தரவு செய்திடவும்
அறிந்துமே கர்ண னங்குவந்து சீக்கிரத்தில்
கர்ணன் வருவதைக் கண்டு மதவீமன்
விற்கையிற் பூண்டு வேகமாய்வந் தேமறித்தான்
வீமன் றனக்கும் வேந்தன் கருணனுக்கும்
சாம பரியந்தரஞ் சண்டைமிக மும்முரமே
அப்போ துரோணர் அடிக்குறுர் சேனைகள்மேல்
தப்பாது பட்டு தான்மடிவார் விழுந்தே
அள்ளிவிட் டான்கணையே அந்தப் படுபாவி
துள்ளிவந்தே பாணந் துளைக்கும் வெகுபெயரை
காலற்று வீழ்வாருங் கையற்று மாள்வாருடன்
மேற்பட்டுச் சாவார் வெகுகோடி வேந்தர்கள்
ஐயையோ வென்று அலைகுரு ரச்சமயம்
ஐயையோ வென்ருேரை ஆயனங்கு பார்த்து

அர்ச்சுனனைத் தட்டி ஆயனுமே மொழிவார்
அர்ச்சுனா துரோணர் ஆயுத மெடுக்கும்வரை
அவரைச் செயிப்பதற்கு ஆகாது நம்மாலும்
அவரு மடித்திட்டார் அனேகமான மன்னவரை
அவரை வதைப்பதற்கு ஆன மருந்துண்டு
தவாராது கேட்பாய் தனஞ்செய னேநன்முக
அஸ்வத்தா மனைமடித்து அந்தச்சங் கதிதனையே
அஸ்வத் தாமனென அவரிட மேமொழிந்தால்
அவருங் களைத்து ஆயுதத்தைக் கீழ்வைப்பார்
அந்த விசயனிடம் ஆயன் விளம்பிடவும்
அவரைச் செயிப்பதற்கு ஆகாது நம்மாலும்
இந்தச்சேதி கேட்டு இயம்புவான் மாயனிடம்
சாமியேநீர் சொல்லுவது சரியில்லாச் செய்தியன்றோ
நேமியேயித் தோஷமது நினைச்சேரு மென்றானே
இப்படிக் காகவே இவர்கள்பேச வங்கே
அப்பா லொருபுறத்தி லந்த மதவீமன்
இந்திர•வர்மனிட மிருந்ததொரு மத்தகமும்
அந்தக்குஞ் சரநாமம் அஸ்வத்தாம னுமதுவும்
அந்தநல்ல மத்தகத்தை அடித்தானே பீமனும்
தொந்தர வடைந்துமது சோம்பியே மாண்டதுவே
சென்றான் துரோணரிடஞ் சீக்கிரத் தில்பீமன்
நன்றாய் மொழிவான் நரனுக்கு மூத்தோனும்
அஸ்வத்தாமன் செத்தானென அறைந்தானே யங்குநின்று
அஸ்வத்தாம னென்றதையே ஆசாரி யுங்கேட்டு
துக்கமதில் மூழ்கி துணிந்துமே பொய்யென்று
பக்கத்தில் நின்றோரைப் பார்த்துக் கணையாலே
வெட்டியே சாய்க்கிறான் வீரரும் மாளுகிறார்
கெட்டியா யுத்தமது கிழவனுஞ் செய்திடவும்

சப்த ரிஷிகளும் தான்வரத் துரோணர்முன்
சப்த ரிஷிகளேயே தான்பணியத் துரோணர்
அப்போ ரிஷிகள் அந்தணர்க்கு மொழிவார்கள்
தப்பனுடன் சேர்ந்து சமர்செய்கு றுய்நீயும்
உந்தனுக்கு மின்ருேடு வுலகவாசை போதும்
வந்திடுவாய் நீயும் வைகுந்த மேபதிக்கு
யுத்தவாசை விட்டு உலகத்தை நீர்வெறுத்தும்
இத்ததி வாருமென்றே ஏகிஞரேரிஷிகள்
அப்போது பீமன் அறைந்ததொரு சங்கதியை
தப்பாம லேநினைந்து தன்னகமுஞ் சோர்ந்து
துடியனு மிச்சமயம் சொல்லியதோர் சங்கதியை
படிவான தர்மரிடம் பாசமொடு கேட்டால்
பொறுமை மிகவுடையான் பொய்யுரை யானவனும்
அருமையாக மொழிவான் அறிந்ததோர் சங்கதியை
சென்றுமே கேட்போமென்று சிலேயரச னச்சமயம்
நன்ருக வாராரே நல்ல தருமரிடம்
ஆயனும் பீமனு மச்சமய மோடிவந்து
நேயன் தருமரிடம் நிகழ்த்துவார் சங்கதியும்
துரோணரு மின்று துடியாக விற்பூண்டு
விரோதம் விளேத்தே வெகுசனத் தையுமடித்தார்
எல்லோரையு மடிப்பான் இன்னுஞ்சண நேரமதில்
கொல்லவே யோசனேகள் கோமானே சொல்லுவேன்கேள்
அஸ்வத்தாமன் செத்தானென அறைகுவாய் பொய்யொன்று
அஸ்வத்தாம னென்ருலே அவருமே யச்சமயம்
ஆயுதத்தை யெறிந்தே ஆயாசங் கொண்டிடுவார்
ஆயுதமில் லாவிடிலோ அவரை மடித்திடலாம்
இந்தப்பொய்யை மொழிந்து எங்களேயெல் லாங்காப்பாய்
இந்தப்பொய்சொல் லாவிடிலோ இன்று மடிந்திடுவோம்

எங்களைக் காத்திடவே ஏந்தலே மனதுவைத்து
பங்கம் நினையாமலே பாரரச னேயோதும்
என்றுசொல்லி வேண்ட எம்பெருமா ளச்சமயம்
நன்ருக வந்தான் நல்லமத வீமனுமே
அண்ணனிட பாத மடிதனை யேபணிந்து
அண்ணுவே கேளுமென அறைகுவான் சங்கதியும்
இந்திர வர்மனிட மிருந்ததொரு தந்தியும்
அந்தமத்த கம்பேரு அஸ்வத்தாம னண்ணுவே
குஞ்சரத்தை யானுங் குத்தி மடித்தேனே
வஞ்சக மில்லையதில் மன்னுபொய் சொன்னுலும்
இந்தப்பொய் யைமொழிந்து எங்களைக் காத்திடுவாய்
வந்த துரோணருக்கும் வழுத்துவாய் சங்கதியை
என்றுரைத்து பீமன் இருபாதந் தான்பணிய
நன்றெனவே சம்மதித்தார் நல்லரசன் தருமர்
துரோணரு மங்குவந்து சோம்பித் தருமரிடம்
விரோதமாய் மொழிந்தானே வேந்தன்மத வீமனுமே
அறிந்ததோர் சங்கதியை அரசனே ,யெந்தனுக்கு
தெரிந்திட வோதுமென்று சிலையரசன் கேட்கவும்
அஸ்வத்தாம னின்று அதாகுஞ் சரமெனவும்
அஸ்வத்தாம னென்றமொழி அந்தணருங் கேட்டு
பலமுங்குறைந்தே பரிதாப முண்டாகி
அலம்பியே நிற்க அறிந்து துஷ் டத்தூய்மன்
வில்லை வளைத்துமவன் வெகுசரத் தைத்தொடுத்து
தொல்லை விளைக்கவே தூண்டிவிட் டான்கணையும்
அவரு மதைப்பார்த்தே அத்தனையும் ரெண்டாக்கி
தவறை நினைந்துமவர் தான்தொடுத் தார்பகழி
துஷ்டத்தூய்மன் தேரும் தொலையவே சாரதியும்
கஷ்டமிகப் பட்டான் காவல னச்சமயம்

பின்னுந் துரோணர் பெரியகணை யேவிடவே
மன்னன் துஷ்டத் தூய்மனை மயக்கின தேபகழி
தவித்து மவனிற்கச் சாத்தகியுங் கண்டே
தவித்தோன் றனையும் தன்ரதத்தி லேற்றியே
தக்கவுப சாரமதைத் தான்செய்து மன்னனுக்கு
தக்கசோக மதனை தான்தீர்த்தான் சாத்தகியும்
அப்போ துரோணர் அஸ்வத்தாமா வையெண்ணி
செப்பவொண்ணுத் துயரில் சிலையரசன் மூழ்கி
ஆயுதத்தை யெல்லா மவரெடுத்துச் சீக்கிரத்தில்
பாயுங் கணைகளெல்லாம் பாரி லெறிந்துவிட்டு
ஆதி சிவனையவர் அன்பாய் மனதிருத்தி
வேதியர் யோகம் விரைவா யிருந்திடவே
அவருடைய வுயிரும் அருமைப் பருதியைப்போல்
தவறுகளில் லாதபடி தான்சென்ற தேவிண்ணில்
ஐவருக்கு மட்டும் அவர்சென் றதுதெரிய
ஐவர்களும் பார்த்தே அருமையாக நினைத்தார்
துஷ்டத்தூய்மன் கண்டு துடியாக வாளெடுத்து
கஷ்ட மிகவடைந்தோன் கத்தியே யோடிவர
விசய னதைப்பார்த்து வேண்டாமென் றேதடுக்க
விசயன்பேச்சைக் கேளாது வேகமா யோடிவர
துரோணர் சிரத்தை துடியனும் வெட்டிடவும்
விரோதம் விளைத்த வேதியரு மடிந்தார்
ஐவருங் கண்டே அலறிப் புலம்பிடவும்
வையம் புகழ்மாயன் மன்னவரைத் தேற்றினனே
அறிந்துமே சங்கதியை அஸ்வத்தாம னப்போது
தெரிந்து கிருபரிடம் சீக்கிர மாகவும்
பஞ்சவ ரைவரொடு பாரச்சேனை பூராவும்
வஞ்சகஞ் செய்தோனை மடிப்பேன் க்ஷணத்திலின்று

என்றவனு மொழிந்தே ஏகிவந்தே சீக்கிரத்தில்
நன்று யெடுத்தான் நாராய ணாஸ்திரமும்
வில்லில் தொடுத்தே வெகுவிஞ்சை யுச்சரித்து
தொல்லை விளக்கவே தூண்டிவிட் டான்சரத்தை
வந்ததுவே பகழி வம்புசெய்ய வேநினைந்து
அந்தரம்வாழ் தேவரெல்லாம் அப்பாலே சென்றார்கள்
அத்தனும் பார்த்தே அஞ்சிப் பயந்திடவும்
அத்தருணங் கணையும் அக்கினி போல்வருக
ஆயனுங் கண்டே அறைகுவார் பஞ்சவர்க்கு
நேயர்களேகேளீர் நிமிடமிந்தக் கணையும்
ஒக்க மடித்துவிடும் ஓகோகோ விக்கணையும்
தக்கயோ சனையொன்று சாற்றுகிறே னிச்சமயம்
ஆயுத மெல்லா மப்பா லெறிந்துவிட்டு
ஆயுதம் வருவதற்கு எல்லோரும் நமஸ்கரித்து
தோத்திரஞ் செய்தாலே தொல்லையொன் றில்லைமன்னா
தோத்திரஞ் செய்யாவிடில் துடியாய் மடித்துவிடும்
என்றுமாயன் செப்ப இதைக்கேட்டு மேதருமர்
நன்றெனவே சம்மதித்தார் நாரணன் சொற்படிக்கு
ஆயுத மெல்லாமே அப்பா லெறிந்தவர்கள்
ஆயுதம் வருவதற்கு எல்லோரு நமஸ்கரித்து
தோத்திரங்கள் செய்தார் சொல்லக் கணக்குமில்லை
ஆத்திரமாய் வந்தகணை அப்பாலே நின்றிடவும்
தடிவீமன் கண்டே சல்தி கதைபிடித்து
அடித்தான் கதையை அண்டமெல் லாம்நடுங்க
அக்கினி சுற்றுகுது மவனையு முள்வைத்து
அக்கினியில் தானே அவதிப்பட் டான்துடியன்
ஆய னருச்சுனனும் அதிவேக மாய்வந்து
மாய னுழைந்தே மதவீம னையிழுத்து

கெதையைப் பிடுங்கி கீழே யெறிந்துவிட்டும்
பதைத்தே தபித்தோனிடம் பகவானும் போதித்து
வந்தகணை தனையும் வம்பன் பணிந்திடவும்
சந்தோஷ மாகத் தான்சென்ற தேபகழி
அந்தரம்வாழ் தேவரெல்லாம் ஆவலாகப் பார்த்து
விந்தை யிதுவென்றே வேந்த னைப்புகழ்ந்தார்
துரியோ தனனுஞ் சொல்லவொண்ணுத் துக்கமொடு
பரிதாப மாகிப் பாரரச னோடிவந்து
அஸ்வத்தாமனிடத்தி லரசனும் போய்நின்று
அஸ்வத்தாமா நீயு மந்தக் கணைதனையே
இன்ன மொருதடவை எடுத்து விடுவாயென
மன்னனும் வேண்டினன் மகாபல வான்றனையே
அரசன் மொழிகேட் டவனுரைப் பான்பதிலும்
அரசனே யிச்சரத்தை அடுத்துத் தொடுத்தாலே
விட்டவரை மடிக்கும் வேந்தனே தப்பாது
தொட்டால் பிழைகேடு தொடப்படா தென்றானே
எந்தனது தந்தையை இன்று மடித்தவனை
எந்தனது படையால் எமபுரஞ் சேர்ப்பேனென்று
கஷ்ட மிகவடைந்து கனகோபந் தன்னுடனே
துஷ்டத்தூய்ம னிடத்தில் துடியனு மோடிவந்து
வில்லை வளைத்துமவன் வெகுபகழி தொடுத்து
தொல்லை விளைத்திடவே தூண்டிவிட் டான்பாவி
அந்தக் கணையுமே அதிவேக மாயோடி
விந்தையாக வந்து வேந்தன் துஷ்டத் தூய்மனையும்
அவதிப் படுத்திடவே அரசனு மச்சமயம்
தவருக வோடினனே தக்க பலவானும்
வந்து மெதிர்த்தான் மகாதுடியன் பீமன்
அந்தவேளை யங்கு ஆசாரி தன்சுதனும்

வேகமாய்க் கணையதனை விட்டான் வெகுவாக
பாகமாய் வந்தே பாய்ந்திடவே பீமனையும்
அவதி மிகப்பட்டு மங்கு துடித்திடவும்
தவறுவந்த சங்கதியைத் தானறிந்து சாத்தகியும்
அஸ்வத்தாமன் மேலே அள்ளிவிட் டான்கணைகள்
அஸ்வத்தாம னத்தனையும் அறுக்கவே சீக்கிரத்தில்
ஆயன்தம்பி தொடுத்து ஐநூறு கணையேவ
நேயனஸ்வத் தாமன் நிமிட மதிலறுத்து
அடங்காக் கணையை அள்ளித் தொடுத்தவனும்
தொடர்ந்துமே விட்டான் சொல்லவொண் ணுப்பகழி
சாத்தகி தேருடைந்து தன்பா கனுமடிய
சாத்தகி மேலுஞ் சல்லடைக் கண்ணுக
தவறுகள் நேர்ந்திடவும் தற்சமய மேயவனும்
அவதி மிகப்பட்டு மப்பாலு மோடினனே
அப்போதஸ்வத் தாமன் அகமதில் யோசித்து
இப்போ வஸ்திரங்க ளிருப்பதினு லென்னபலன்
என்று மவனு மெண்ணியே சிந்தையதில்
கன்றி ய்வன்மனதில் கணைகளெல்லா மெறிந்தே
தவருக வேதியன் தவவேட மேபூண்டு
அவனுமே சென்ருன் அடவி தனைநோக்கி
அப்போ வியாசர் அவனுக் கெதிர்வரவும்
தப்பாம லேபணிந்தான் தனுவேதி யன்சுதனும்
அவனையா சிர்வதித்து அறையென்ருர் செய்திதனை
அவனுமே கேட்பான் அந்த முனியிடத்தில்
ஐயனே யானும் அதிகத் தவமிருக்க
ஐயனு மெந்தனுக்கு அருமையாய்த் தந்தகணை
இன்றுவிட் டேன்யானு மிந்த ஐவர்மேலே
நன்றுசெய்த தேயவர்க்கு நாராய ணுஸ்திரமும்

சங்கதி யிதுதானெனத் தவயோகி யுங்கேட்டு
பங்கமில் லாதமுனி பகர்வா ரவனிடமும்
நாரா யணனும் நரனுமே யிவ்வுருவம்
பாராய் விசயனும் பாரளந்தோன் கிருஷ்ணனும்
அவர்க ளிருவரே அஸ்வத்தா மாயிவர்கள்
அவர்களைச் செயிக்க ஆகாது யாராலும்
என்று மகாமுனியு மெடுத்தோதி யேயவனை
நன்றில்லை செல்லுவது நாள்மூன் றிருக்குதின்னம்
பூராயுத்த முடித்து போவீர் தபசுசெய்ய
வாராயென் றேயழைத்து வந்தனரே காமுனியும்
அரவக் கொடியனிட மஸ்வத்தா மன்சென்று
திரமான யுத்தமதைச் செப்பி நிறுத்தியே
சென்றார்கள் பாசறையுஞ் சீக்கிர மாகவே
நன்றான தர்மர் நல்லதம்பி மாருடனே
படைகளெல்லாஞ் சேர்த்து பாங்குட னேயவர்கள்
தடைகளொன் றில்லாது தான்வந்தார் பாசறையும்
அப்போ வியாச ரைவ ரிடந்தனிலே
தப்பாம லேவருகத் தான்பணிய மன்னர்களும்
பங்கமில்லா முனிவர் பகர்ந்துமே நல்வாக்கும்
சங்கதி தர்மருக்குச் சாற்றுவா ரம்மானை
வஞ்சகனை மடித்து வையகமெல் லாமாள்வீர்
சஞ்சலத்தை நீக்கிடுவீர் தனையர்களே யின்றோடு
இன்னும் பலவிதத்தை இயம்பித் தவயோகி
மன்னரிடம் விடையும் மாமுனிவர் வாங்கியே
நடந்தாரே மாமுனிவர் நல்ல தொருகானில்
திடவான் கதிரோனுஞ் சென்றாழ்ந்தான் மேற்கடலில்.
சஞ்சயனுஞ் சென்று சல்தியஸ்தி னாபுரியில்
வஞ்சகன் தகப்பனிடம் வழுத்தினான் சங்கதியை

அவனுமே கேட்டு மழுது பரதவிக்க
தவராது நீதிகளைத் தானுரைத்தா னம்மானை

பதினறும் நாள் யுத்தம்

அரவக் கொடியனு மன்றுமே பாசறையில்
திரவான் துரோணரத் தேசவரசன் நினைந்து
தேம்பி யழுதும் செகத்தையும் ஆண்டமன்னன்
சோம்பி விழுந்தே துயரி லவனுழ்ந்தான்
அங்கிருந்த மன்ன ரவனுக்கு நீதியொடு
சங்கதிகள் செப்பிதான் தீர்த்தார் சோகமதை
மன்ன னெழுந்து மன்ன ரிடமுரைப்பான்
இனியென்ன செய்குவது எல்லோரு மெந்தனையே
தனியாக விட்டுத் தான்சென்ருர் பெரியோர்கள்
அனியாய மாகவே அனேகமன்னர் மாண்டார்
மன்ன னழுதே மறுபடியுந் தேர்ந்து
நன்னய மாகவே நம்முடைய சேனைகட்கு
சேனு பதியர்ச் செய்வோங் கருணனையும்
சேனைக ளிடத்திலுஞ் செப்புங்கள் சங்கதியும்
என்று மொழிய வெல்லோருஞ் சம்மதித்து
நன்றுயிவ் வேளையென்று ராசன் கருண னுக்கும்
சேனு பதிப்பட்டஞ் செய்துமே சீக்கிரத்தில்
சேனு பதியிடத்தில் செப்புவா னேயரசன்
அண்ணு கருணனே அறைகுவ தைக்கேட்பாய்
திண்ணமாய்ப் பஞ்சவரை செத்திடச்செய் வாய்நீயும்
எந்தனைக் காத்திடவே எந்தலே மனம்வையென
விந்தைய தாய்மொழிந்தான் வேந்தன் துரியோதனனும்
அப்பால் கருண னும் அணிவகுத் துப்படையை
தப்பாமல் சேனையெல்லாந் தானிறுத்தி யங்கேயும்
முன்னணியில் கர்ண னு முனேந்துமே நின்றிடவும்

மன்னன் விசயனுமே மகாசேனை யத்தனையும்
சந்திர யூகமாகச் சல்தி பிரித்துமே
தந்திரமாய் முன்னின்ருன் தக்க பலவானும்
சோமதத்த னப்போ துடியாக வோடிவர
சோமதத்தன் தன்னை துஷ்டபீ மன்பார்த்து
சல்தியாய் வந்து தன்கைச் சிலையோடு
சொல்லிவாய் மூடுமுன்னே தொடுத்துவிட் டான்சரத்தை
சோமதத்தன் கண்டே துடியாக வில்வளைத்து
நேமன் ருெடுத்தான் நிமிடமதில் நூறுகணை
வீமன் கணைதனையே வெட்டியே ரெண்டாக
வீமனுங் கண்டுமதை வெகுகோபந் தன்னுடனே
தொடுத்துக் கணைதனக்குச் சொல்லி யுபதேசம்
விடுத்தானே யச்சமயம் வேந்தனுந் தப்பாது
சோமதத்தன் ரதமும் துடியன் கணையுடைக்க
சோமதத்த னச்சமயம் சோம்பியே பாரில்நின்ருன்
அவன் வளர்த்த குஞ்சரமும் அடக்கம் பதினுயிரம்
அவனைச்சுற்றி வந்தே அன்பாக வேகாத்தும்
மத்தகங்க ளச்சமயம் மகாகோப முங்கொண்டு
மெத்தவேக மாக வீம னிடம்வருக
இருப்புலக்கை கொண்டு இவனையே சாடிடவும்
நெருப்புவிழி யிற்பறக்க நின்றுபீமன் கொக்கரித்து
அடித்து நொறுக்குருன் அத்தனைதந் திகளையும்
துடித்துமே கீழ்விழுந்து சோம்பியே மாண்டிடவும்
அப்போது பீமன் அதிகக்கோப முடனே
தப்பா தடித்தான் தக்கசோம தத்தனையும்
அங்கேயே கால னவனுயிரை வாங்கிடவும்
சிங்கப் பலபீமன் தீட்டுருன் சேனைகளை
பாளைய மெல்லாம் பரிதவிக்கு தந்நேரம்

வேளையே கண்டான் வேந்தன்கே கயவரசன்
வீமனிடம் வந்தான் வேகமாகத் துடியன்
நேமனுஞ் சாத்தகி நிமிட மங்குவந்து
சந்தோஷ மாகத் தனுசிற் கணைபூட்டி
நொந்திட விட்டான் நூறு பகழிகளை
அந்த வரசன் கண்டுஅதிக வுசாராக
வந்தகணை யெல்லாம் வம்பா யறுத்தானே
அந்தவேளை சாத்தகி அடங்காக் கணைதொடுத்து
சிந்தை மகிழ்ந்து திருப்பியே விட்டானே
கேகயரா சன்சிரமும் கீழே விழுந்திடவும்
பகவானை யெண்ணிப் பரம பதமடைந்தான்
அஸ்வத்தா மன்ருனு மறிந்துமே சங்கதியை
கஷ்ட மிகச்செய்யக் காலன்போ லேயவனும்
சாத்தகி யிடமே தான்வரச் சீக்கிரத்தில்
ஆத்திரமாய் வந்தான் அங்கு மதவீமன்
அம்பு தொடுத்துவிட்டான் அஸ்வத்தா மன்மேலே
அம்பு வருவதையே அஸ்வத்தா மன்பார்த்து
தானு மெடுத்துத் தன்னுடைய வில்லதனில்
வேணுமென்றே தொடுத்தே வேண பகழிவிட்டான்
வீமன் கணையெல்லாம் வீறிட்டு வோடிடவும்
வீமனுங் கண்டு வெகுகோப முண்டாகி
தொடுத்து வெகுகணையைச் சொல்லியே விஞ்சைதனை
விடுத்தானே யங்கே வேதியன் தன்மேலே
வருங்கணையைப் பார்த்து வம்ப னஸ்வத்தாமன்
நெறுநெறெனப் பற்கடித்து நீட்டிவிட் டான்பகழி
வீமன்கணை யத்தனையும் வெட்டியே ரெண்டாக
வீமனுங் கோபமொடு வேதியனைக் கொல்வேனென்று

ஆனைகளைத் தூக்கியே அடித்தானே தேர்மேலே
ஆனைகள் பட்டிடவே அவன்ரதமு மேயுடைய
குருக்களின் றன்சுதனுங் குனிந்த படிநிற்க
திருத்தமாய் பீமனுக்கு திரண்டகோ பம்மூள
கெதையைக் கரம்பிடித்து கிளம்பிவாரா னப்போது
பதைத்தே யஸ்வத்தாமன் பராக்கிர மங்கொண்டு
தானுங் கதைபிடித்தே சல்தியாய் வந்தெதிர்க்க
வேணுமென்று மவனை வீம னடித்தானே
அவனு மடித்தான் அந்தமத வீமனையும்
அவனடியை வாங்கி அவதி மிகவடைய
இருவர்கள் யுத்தமது ஏகநேரம் வரையில்
இருவ ரடிபட்டே இருந்தார் களையாகி
அப்போ தருச்சுனனும் அப்பா லொருபுறத்தில்
தப்பர்சஞ் சத்தகர் தானிருக்கு மிடத்தில்
அவர்களைப் போய்மறித்து அனேகமான பாணமதை
தவராது விட்டான் தக்க பலவானும்
வருங்கணையைத் தானே வம்பர்க ளும்பார்த்து
கெருவமொடு தானே கிளப்பிவிட் டார்பகழி
பார்த்தன்விட்ட கணைகள் பாழாகப் போய்விடவும்
வேர்த்துமே யேவினன் விசயன் வெகுகணைகள்
சஞ்சத் தகர்கணையை சாடியே யிப்பகழி
சஞ்சத் தகர்சிலபேர் சல்தி மடிந்தார்கள்
மிச்ச மிருந்தோர்கள் விசன மதில்மூழ்கி
அச்சமொடு வோடினர் அனேகம்பே ரும்வெளியே
களைகள் தெளிந்தே கண்டுவஸ் வத்தாமன்
பழையபடி வந்தும் பார்த்த னெடுமெதிர்த்தான்
துஷ்டன் தொடுத்தான் துடியாய் வெகுகணையை
அஷ்டகாசஞ் செய்து அக்கணைகள் வருக

பார்த்தனுங் கண்டே பத்துவாளி தொடுத்தே
ஆத்திரமா யேவினன் அக்கணை கள்மேலே
அஸ்வத்தாமன் கணைகள் அதாகுதமாய்ப் போயிடவும்
அஸ்வத்தா மன்பார்த்து அடங்காத கோபமுடன்
கணைகள் தொடுத்துவிட்டான் கணக்குக ளில்லாமல்
கணைகளும் வந்தே கஷ்டமிகச் செய்திடவும்
ஆயனிதைப் பார்த்தே ஆச்சரிய முண்டாகி
மாயன் மொழிவான் மன்னன் விசயனிடம்
பார்த்தனே வேடிக்கை பார்த்திருக் காய்நீயும்
பார்த்தா யிவனையும் பதைத்தோடச் செய்திடுவாய்
என்றுமே மாயன் இயம்ப விசயனுமே
நன்றாகக் கேட்டு நரனுமே வில்லதனில்
வேலா யுதந்தொடுத்து விட்டா னவன்மேலே
வேலா யுதக்கணையும் வேகமா யோடிவந்து
சாரதி தன்னை தான்மடிக்கக் கணையும்
சாரதி யில்லாமல் தவித்துவஸ் வத்தாமன்
சென்றான் வெளியே சீக்கிர மாகவே
நன்றாக மாயவனும் நரனையே தான்புகழ்ந்தார்
இப்படிக் காக இவரிருக்க விங்கேயும்
அப்பா லொருபுறமே அருமையான போராட்டம்
தண்டதரன் தண்டனும் தனுசை வளைத்துநின்று
சண்டாளர் விட்டார்கள் சங்கமான கணையை
ஐவர்கள் சேனைகளை அழிக்குதே பாவிகணை
ஐயையோ வென்றே அலைகுரு ரேதவித்து
வேண பகழியேவ வெகுசனங் கள்மடிய
காணும லோடுகிறார் கனத்த பெரும்படைகள்
ஆய னதைப்பார்த்தே அவரைக்காக்க நினைந்து
மாயனுஞ் சங்கதியை வழுத்தி விசயனுக்கு

அவனிடம் நடத்தினுர் ஆயன் ரதமதனை
தவறுகள் செய்தோனை தனுவிச யன்பார்த்து
வில்லை வளைத்தே வெகுதொனி கள்காட்டி
தொல்லை விளைக்கவும் தொடுத்துக் கணைநூறை
தண்ட தரன்மேலே தானேவி ஞன்விரைவாய்
கண்டே யவனுங் கடுஞ்சரத்தை விட்டானே
வேகமா யோடிவந்து விசயன்கணை யத்தனையும்
போகவே ரெண்டாகப் போக்கின தேவாளி
அர்ச்சுன னப்பொழுது ஆங்காரக் கோபமுடன்
கெர்ச்சனை செய்தே கிளப்பிவிட் டான்பாணம்
தண்டதரன் கரத்தை சட்டென வேயறுக்க
துண்டாகக் கீழ்விழவும் துடியனு மப்போது
இடது கரமதனுல் எடுத்துக்கொண்டு படையை
தடதடென வாரான் சமர்த்தாய் வெகுதுடியன்
பார்த்தனுங் கண்டே பத்துக் கணைதொடுத்தே
வேர்த்துமே விட்டான் விசன மதுதீர
தண்டதரன் சிரத்தை தானறுக்க வேகணைகள்
துண்டாய் விழுந்து துடியனும் மாண்டானே
கண்டானே தண்டனுங் கடுங்கோபந் தன்னுடனே
சண்டாளன் வந்தெதிர்த்தான் தனுவிசயன் றன்னேடு
தொடுத்துக் கணையதனை சொல்லியே விஞ்சைதனை
விடுத்தான் விசயனிடம் வேகமா கப்பகழி
அக்கினிச் சுவாலையதாய் அக்கணை கள்வருக
அக்கினி வருவதையே அருச்சுன னும்பார்த்து
வருணுஸ்திரமதனை வம்பனும் விட்டானே
கெருவமா கக்கணையுங் கிளம்பியே விண்ணதிலே
அக்கினி யாஸ்திரத்தை அவித்துமே விட்டிடவும்
முக்கிய மானகணை மோசமாய்ப் போச்சென்று

தண்டனு மேவினனே தாஷ்டீக மானகணை
கண்டே யருச்சுனனுங் கண்டித்து மத்தனையும்
அப்பால் தொடுத்தான் அனேக மானபாணம்
தப்பாது வந்தேகணை தண்டனை மாய்த்ததுவே
அவனுமே சென்ருன் அத்தனின் றன்பதவி
தவராம லேவிசயன் சாடுருன் சேனைகளை
சஞ்சத் தகர்களுந் தானங்கு வோடிவந்து
அஞ்சாத விசயன்மேல் அடுக்கிவிட் டார்பாணம்
விசயனு மச்சமயம் வெகுபகழி தொடுத்து
அசையாது வெட்டினுன் அவர்கள் சிரமதனை
இங்கேவிச யனிருக்க இன்னெரு புறமதிலே
பங்கமில்லா வரசன் பார்த்தனுக்கு மாமன்
பாண்டிய ராசனும் பதைத்துமே யோடிவந்து
தாண்டியே விட்டான் துடியான அம்புகளை
கவுரவ சேனைகள் கலங்குது வங்கேயும்
கவுரவ வீரனும் கண்டானஸ் வத்தாமன்
வந்து யெதிர்த்தான் வம்புசெய்ய நினைந்து
நொந்துமே வில்வளைத்து நொடியில் கணைபூட்டி
மட்டடங் காப்பகழி மறையோனு மேவிடவும்
விட்ட கணையெல்லாம் வேகமா யோடிவர
பாண்டிய னச்சமயம் பத்துக் கணைதொடுத்து
தாண்டியே விட்டான் சுடராய்ச்செல் லுங்கணையை
அஸ்வத்தா மன்கணையை அடித்து முறித்துமே
அஸ்வத்தாமன் தேருடைந்து மவன்பரிகள் சாகவும்
மறுரதத்தி லேறி மறையோன் சுதனுமே
கெருவமாய் நின்று கிளப்பிவிட் டானம்பு
பாதகன் விட்டபகழி பாண்டியனை யச்சமயம்
பேதக மாகவே பிடரியிலே வெட்டிடவும்

அவனும் விழுந்தே அரன்பதவி யடைய
அவன்மடிந்த தறிந்தே அந்தச் சகாதேவன்
வேந்தன்றேரை நடத்தி வேகமாக வந்தும்
காந்தாளங் கொண்டே காவல னங்குவர
துச்சா தனன்கண்டே துடியனு மோடிவந்து
இச்சையாய் விட்டானே ஏராள மானகணை
அந்தர வாசிகளு மஞ்சிட வேகணையும்
தொந்தரவு செய்ய துடியாக வோடிவர
சகாதேவன் கண்டு சல்தியாய் வில்வளைத்து
அகோரமான கணையை அள்ளிவிட் டானங்கே
வந்தகணை யெல்லாம் வாட்ட இவன்பகழி
அந்தக் கணையழிய அறிந்துதுச் சாதனனும்
கொடுமையான கணைக்கு கூறியே மந்திரத்தை
கடுமையா யேவினன் கரைகண்டோன் றன்மேலே
அத்தனை யம்புகளை அறுத்துச் சகாதேவன்
மெத்தக்கோபங் கொண்டு விட்டான் வெகுபாணம்
துடியாய்க் கணைவந்து துச்சா தனனையும்
படியில் விழுந்திடவும் பாய்ந்தது வேபகழி
அவனுந்தே ரில்விழுந்தே ஆயாசங் களடைய
அவனுடைய பாகனு மப்பாலே யோட்டினனே
அப்பா லொருபுறமு மங்கதே சாதிபனும்
தப்பாது சேனைகளைத் தான்வாட்டி வாரானே
கண்டே நகுலமன்னன் கடுங்கோப மேகொண்டு
சண்டாளன் முடியததனைத் தறிப்பே னென்றுகூறி
வந்து வளைத்தே வம்புவிளைத்தோன் மேல்
நொந்திட வேகணையும் நூறுவிட் டானங்கே
கணைகள் வருகிறதைக் கண்டு கொடையாளி
கணைகள் தொடுத்தான் கணக்குக ளில்லாமல்

வருங்கணை யத்தனையும் வாட்டியே துண்டாக
கெருவமாய் கர்ணனுங் கிளப்பிவிட் டான்கணையும்
ஆலகால விடம்போல் அக்கணைகள் கோரமொடு
மாளச்செய் வதுபோல மகாவேக மாய்வருக
தேர்கள் பரிகளெல்லாம் தீர்த்துவிடக் கணைகள்
பார்தனிலே நின்றான் பரிநடத் துந்திரவான்
அங்கதே சாதிபதி அறிந்துமே சங்கதியை
பங்கமது செய்ய பாரரசன் தானினைந்து
வில்லை யெதிர் நிறுத்தி வேண கணைபூட்டி
தொல்லை விளைத்திடவே தூண்டிவிட்டா னச்சமயம்
அதிவேக மாய்வந்து அந்த நகுலனையும்
ததியேமார் பிற்பாய தயங்கினு னேசிறுவன்
அங்கதே சாதிபனும் அப்பா லவன்கழுத்தில்
தங்கைச் சிலையை சமர்த்தாக வேமாட்டி
இழுத்தான் சிறுவனையு மிந்தக் கருணனும்
அழுந்தச் சிரத்திலு மம்பாலே கொட்டியும்
சிலவார்த்தை கள்பேசிச் செல்லென்றான் சீக்கிரமும்
நலமதனை யெண்ணியது நல்ல கருணனும்
அம்மைகுந்தி தேவிக்கு அவன்மொழிந்த வாக்கினால்
சும்மாவே விட்டான் சொந்தச் சகோதரனை
சேனைகள் மேலே தீட்டுகி றான்பாணம்
சேனைகள் மேற்பட்டே சேதம் வெகுவாக
ஓடுகிறார் நில்லாது உத்தமன் றன்படைகள்
சாடுகிறா னவரைச் சண்டாளக் கர்ணனும்
பாளைய மோடுவதைப் பார்த்துச் சகாதேவன்
வேளைவந்து மறித்தே விளம்பித் தைரியமும்
படைகளுக்கு முன்னே பார்மன்ன னிற்கவே
தடைசெய்ய வோடிவந்தான் சண்டாள னுஞ்சகுனி

நில்லடா வுன்னை நிமிடம் வதைப்பேனென
சல்லாப மாய்வந்தான் தக்கபோ ரைவிளைத்தோன்
வில்லை வளைத்தே வெகுசரத் தைத்தொழுது
தொல்லை விளைக்கவே தூண்டிவிட் டான்பாதகனும்
அண்டம் நடுங்கிடவே அக்கணைக ளோடிவர
கண்டே சகாதேவன் கணையெட்டு மேவினான்
சகுனி கணைதனையுஞ் சட்டெனத் துண்டாக்கி
சகுனியைத் துளைக்கவே சல்திவிட் டான்சரத்தை
அப்போ கணையும் அதிவேக மாய்வந்து
தப்பாது சகுனியையுஞ் சல்லடைக்கண் ணாக்கினதே
அவனுங்கஷ் டப்பட்டு அப்பாலு மேயோடி .
தவராது சேனையொடு தான்வந்து சேர்ந்துமே
சத்திய சேனனுஞ் சல்லியங்க ளுண்டாக்க
அத்ததி சங்கதியும் அருச்சுன னுந் தெரிந்து
சல்தியா யோடிவந்து தனஞ்செயனு மந்நேரம்
சொல்லிவாய் மூடுமுன்னே தொடுத்துவிட் டான்கணையும்
அவனுங் கணைதொடுத்தே அத்தனையு மறுத்து
தவறதை யேயெண்ணி சண்டாள னச்சமயம்
ஈட்டிதனை யெடுத்து எறிந்தானே மாயன்மேல்
ஈட்டியு மோடிவந்து இடதுகையில் தைத்திடவும்
ஆயனுங் கோபமொடு அருச்சுனா பாருமென
மாயவ னுரைக்கவே மன்னவனு மச்சமயம்
காண்டீபந் தன்னில் கணைகள்மூன் று தொடுத்து
வேண்டியே விட்டான் விசயனு மங்கேயே
அதிவேக மாய்க்கணையு மவன்கழுத் தையறுக்க
ததியே மடிந்தானே சண்டாள னும்பாவி
சஞ்சத் தகர்வந்து தானெதிர்த் தாரங்கு
சஞ்சத் தகர்தனைச் சல்தி விசயனுமே

கணைகளை யேவிக் காலனூ ரைக்காட்ட
வினையை விளைத்திருந்தான் விசயனு மங்குமே
அப்பா லொருபுறத்தில் அரசன் தருமருக்கும்
தப்பன் துரியனுக்குஞ் சண்டை தொடங்கினதே
அரவக் கொடியோ னுடன் அனேகமான வீரரும்
திரமான கணைகளையே தீட்டினர் தர்மர்மேல்
தர்மபூ மான்பார்த்து சல்தி கணைதொடுத்தே
விற்றுரெனியுங் காட்டி விரட்டினர் பாவிகள்மேல்
துஷ்டர்கணை பூராவும் துண்டாகச் செய்திடவும்
நஷ்ட மடைந்ததை நாகக் கொடியன்கண்டு
கொடுமையான கணைக்குக் கூவியவன் விஞ்சைதனை
கடுகடுத் தேவினன் காவலன் தர்மர்மேல்
அத்தனை பாணமதை அறுத்துத் தருமருமே
மெத்தக்கோபங் கொண்டு விட்டார் கணையிரண்டை
அப்போ கணையும் அரவக்கொடி யோன்றேரை
தப்பா துடைத்துச் சல்திமார் பிற்பாய
பார்தனிலே நின்றுன் பாதகனு மந்நேரம்
வேர்த்தே தருமர் வெகுகோபந் தன்னுடனே
அவனை மடிக்கவென்று ஆங்கார மேகொண்டு
தவராத கணையதனைத் தானெடுத்தா ரச்சமயம்
வீமனதைக் கண்டே வேகமா யோடிவந்து
நேமன் பணிந்தே நிகழ்த்துவான் தர்மரிடம்
மன்னு யிவனை மடித்திட யான்சபதம்
அந்நாள் சபையில் அறைந்தேன் மறந்தாயே
என்றுமே பீமன் இருகரத் தால்தொழுது
இன்று மிவனையே யேந்தலே விடுமென்றுன்
தம்பி மொழிப்படியே தான்விரட்டப் பாதகனை
வெம்பியே சென்றுன் வேந்தன் துரியோதனன்

கதிரோ னிதையறிந்தே கவலை யதில்மூழ்கி
பதியரசர் யுத்தமதைப் பார்த்துமே வெய்யோனும்
சென்றுமே மேல்கடலில் சீக்கிர மாயாழ்ந்தான்
நன்றாகப் பார்த்தோன் நல்லதொரு சஞ்சயனும்
சென்றுவஸ்தி னுபுரியில் தேசமன்ன னிடத்தில்
நன்றாகச் செப்பினான் நடந்ததொரு செய்திகளை
கேட்டுமே யந்தகனுங் கிலேச மிகவடைந்து
வாட்ட முடனே மயங்கி விழுந்திடவும்
அந்தமுள்ள சஞ்சயன் அரசன் றனக்குமே
விந்தையாய்ச் சிலநீதி விளம்பினா னம்மானை

பதினேழாம் நாள் யுத்தம்

நாற்றிசை யுந்துதிக்கும் நல்ல சோதியருணன்
கீற்றிசை யாழிதனில் கிளம்பினான் விண்ணோக்கி
அரசரெல் லாங்கண்டு அன்பாய் விதிமுடித்தும்
திரமான மன்னரெல்லாஞ் சேர்ந்தார்கள் யுத்தகளம்
மாயனிடம் வந்தே மன்னன் றருமருமே
ஆய னிடத்திலே அறைகுவார் சங்கதியும்
கண்ணனே யெங்களையுங் காத்தா யிதுவரையில்
இன்ன மிரண்டுநாளு மெங்கோனே காத்திடுவாய்
இன்னும் பலவிதத்தை எடுத்தோதி மாயனிடம்
மன்னன் றருமருக்கு வழுத்துவா ரேகண்ணன்
சஞ்சலங்கள் வேண்டாம் தருமரே யுந்தனுக்கு
பஞ்சை துரியனையே பறக்கடிப் பான்பீமன்
விசயனுமின்று வேண்டுங் கணைதொடுத்து
நிசமாய்க் கருணனை நின்று வதைத்திடுவான்
மாண்டிடுவா னின்றே மகாபல வான்கருணன்
தாண்டி மறுநாளுந் தம்பி மதவீமன்
துரியோ தனனைத் துடியன் மடித்திடுவான்

அறிவீர்பின் னலென்று ஐய னுரைத்தானே
சேனு பதிதனையே திருமாலு மங்கழைத்து
சேனபதி யேகேளாய் சேனைகள் பூராவும்
அணியணியாய் வகுத்தே அவர்க்குத் திடமுரைத்தே
அணிகள்முன் தானே அரசனே நில்லென்றார்
அப்படியே நல்லதென்று அவனும்வெகு சீக்கிரத்தில்
தப்பாது சேனைகளைத் தான்வகுத் தேயணியாய்
தானுமே முன்னின்றான் தக்க பரிபூட்டி
வேணுகோ பாலனும் வேகமாய் ரதமதனை
சிங்காரஞ் செய்தே தேவ பரிபூட்டி
பங்கமில்லா வனுமான் படபடப்பாய் நின்றாட
அர்ச்சுனனைத் தேரேற்றி ஆயன் ரதம்நடத்த
கெர்ச்சனை செய்தே கிரீடியு மங்குவர
வீமன் றருமரொடு வேந்தர்க ளிருவர்களும்
காமனைப் போலவே காளையர்கள் வந்தார்
அரவக் கொடியோனும் அன்பாய்க் கர்ணனிடம்
திரமா யவனழுதுஞ் செப்புவான் பாதகனும்
அண்ணா கருணனே அறைகுவ தைக்கேளும்
மன்னு வெனக்கிருந்த மன்னரையெல் லாமந்த
பஞ்சவ ரைவரும் பாழாக்கி னார்மன்னு
வஞ்சகன் கண்ணனும் மாயமது செய்தானே
வேறு துணையில்லை வேந்தனே யெந்தனுக்கும்
பாருள்ளோர் யாவரும் பழிப்புக் கிடமாச்சு
காத்திடுவா யென்னைக் கர்ணனே யுண்மையொடு
ஆத்திரமாய் மொழிந்தான் அரசன் துரியோதனன்
அங்கதே சாதிபதி அறைகுவான் மன்னனிடம்
தங்கள் மனப்படியே தப்பாம லேநடப்பேன்
வருத்தமது வேண்டாம் மன்னவனே யின்றுயான்

பருத்தவிற் கைப்பூண்டு பாரயுத் தஞ்செய்தே
பஞ்சவரை யின்றுதினம் பறக்கடிப் பேன்தாமும்
சஞ்சலம் விட்டுவிடுஞ் சாமியே யிப்போது
அருச்சுனனை மடிப்பேன் அல்லது மாள்வேனென
திருத்தமொடு கருணன் செப்பினு னரசனுக்கு
அர்ச்சுனன் ரதமதையே ஆய னடத்துவதால்
அர்ச்சுன னதினுலே அனேகம்பேரை மடித்தான்
அப்படிச் சாரதி அமையவில்லை யேயெனக்கு
அப்படிக் கொத்தவனுய் அரசே தருவாயென்ருன்
துரியோ தனன்கேட்டுச் சொல்லுவா னேபதிலும்
தெரிந்தவரை யென்னிடத்தில் சீக்கிர மாய்மொழிவாய்
என்றரசன் கேட்க இயம்புவா னேகருணன்
நன்ருகத்தேர்நடத்த நான்பார்த்த மட்டிலுமே
கண்டேனே சல்லியனைக் காவலனே யவனும்
அண்டர்கள் நடுங்கிடவே அருமையாய்த் தேர்விடுவான்
ஆயனுக்கு மேலாக அவனடத்து வான்ரதத்தை
மாயனுந் தோற்றிடவே மன்னவன் செய்திடுவான்.
சல்லியனை யெந்தனுக்கு சாரதித் தொழில்தனக்கே
சொல்லி யவனிடமுஞ் சுவாமியே தந்திடுவீர்
என்றுகர்ணன் மொழிய ஏந்தல்துரி யோதனனும்
நன்ருக வேயரசன் நான்தரு வேனென்றும்
அரவக் கொடியோன் அச்சமய மேநடந்து
திரமான மன்னவனுஞ் சென்று சல்லியனிடம்
சல்லியன் கரமதையே தனபால னும்பிடித்து
சொல்லித் துதித்தான் தோத்திர மனேகவிதம்
அரசனே கேளீர் அடியேன் தனக்கின்று
திரமா யொருவரமுந் தீரனே தாருமென
பணிந்துமே கேட்டான் பாம்புக் கொடியோனும்

பணிந்தோன் றனையும் பார்த்துமே சல்லியனும்
சங்கதி தன்னையே தானோது வாயெனவும்
அங்கவ னிடத்தி லரசனு மேமொழிவான்
கண்ண னிருந்தே காவல ரைவரையும்
மண்ணையுண்டோன் காக்கின்றான் மன்னரைக் கைவிடாது
அப்படிப் போலவே அரசேநீ யெங்களையும்
தப்பு வராதபடி தான்காப்பாய் மன்னவனே
என்று மவன்மொழிந்து இருகரத் தாற்பணிய
நன்றாகச் சல்லியனும் நவிலுவான் ராசனுக்கு
அரசனே நீரு மாயனைப் போலெனையே
திரமாய் நினைந்தே செப்பினாய் சங்கதியும்
ஆதிநா ராயணனே அவதார மாய்ப்பிறந்து
சோதியாய் நின்று ஜொலிக்குறான் ரதமதனில்
அவனைச் செயமடைய ஆகுமோ யாராலும்
அவனோ சமர்த்தன் அதிவினோ தக்காரன்
இன்னும் பலவிதத்தை எடுத்தோதிச் சல்லியனும்
மன்னவனே சங்கதியை வழுத்தென்று கேட்டனனே
துரியோதன னச்சமயஞ் சொல்ல மனந்துணிந்து
அறியவே கேட்பாயே ஐயாவே சல்லியனே
கர்ணன்ரத மீதிருந்து கடிவாளங் கைப்பிடித்து
கர்ணனுக்குச் சாரத்தியங் காவலனே செய்வாயே
என்றுமவன் மொழிந்தே இருகரத் தால்தொழுக
நன்றா யறிந்தானே நல்லதொரு சல்லியனும்
ஆங்காரக் கோபங்கொண்டு அவன்விழி கள்சிவக்க
தாங்கமுடி யாதபடி தானுரைப்பான் பதிலும்
தேர்ப்பாகன் பிள்ளைக்கே தேர்நடத்த வேயெனையும்
பார்வேந்தே நீரும் பகர்ந்ததி னாற்பொறுத்தேன்
வேறொருத்தர் செப்பினால் வேந்தே யவர்களையும்

பாரோர்கள் பார்க்கப் படையால் மடித்திடுவேன்
மட்டி யரசனிட மன்ன னுரைக்கவுமே
கெட்டியாய்க் கேட்டரசன் கிலேச மிகவடைந்து
சல்லியன் றன்னையே தான்பணிந்து சீக்கிரத்தில்
சொல்லிச் சிலகதையை துயரமதை நீக்கிடவும்
சல்லிய னதைக்கேட்டு சந்தோஷ முண்டாகி
நல்லதென்று சம்மதித்தான் நாழிகை ரதம்நடத்த
அரவக் கொடியோனும் அதிவேக மாய்வந்து
திரவான் கருண னுக்குச் செப்பினன் சங்கதியும்
அப்போ கருணன் ஆனந்த மேயடைந்து
இப்ப விசயனையே என்கணை யதினலே
தென்திசை சென்றிடவே செய்குவே னென்றுமந்த
மன்னன் சபதமிட்டான் மகாகோபந் தன்னுடனே
பரிலாயஞ் சென்றே பாங்கான சல்லியனும்
சரியான வான்பரியைத் தான்பார்த்து மேசுழியும்
அஸ்வங்க லட்சணமும் அறிந்து சணந்தனிலே
அஸ்வத்தின் குணங்களை அரசனு மேபார்த்து
வேண்டிய பரிகள்தனை வேக முடனவிழ்த்தே
தூண்டியே வந்தரசன் தொடுத்து ரதமதிலே
சாரதி யாயிருந்து தான்பிடித்து லகானை
பாரதில் நடத்தினனே பார்த்தவர் கள்நடுங்க
ரதங்கள் வருவிதமோ நவின்றிடவொண் ணுவேகம்
இதமாய்க் கருணனு மிதையறிந்து மவனும்
சந்தோஷங் கொண்டே தானு மெதிர்சென்றே
விந்தையாய்ச் சல்லியனை வேந்தனு மேபணிய
தானும் பணிந்தே தன்னுடைய ரதத்தில்
கோனும்வந் தேறிடவே குணமாய் நடத்தினனே
அங்கதே சாதிபனும் அறைகுவான் மன்னனிடம்

பங்கமில் லாக்கணையால் பாரும் விசயனையே
சிரசை யறுத்திடுவேன் சீக்கிர மாகநான்
அரன்வந் தெதிர்த்தாலே அவனையும் யான்மடிப்பேன்
இன்னுஞ் சிலசபத மிட்டிட வேகருணன்
மன்னன்சல் லியன்கேட்டு வழுத்துவா னவனிடமும்
கர்ணனே யுன்திறத்தைக் கண்டிருக் கேன்யானும்
விற்றிறமைக் காரன் வெகுபோரைக் கண்டவனீ
விசயன் பலத்தை விளம்புவேன் கேளும்நீர்
விசயனு மீசனையே வேண்டித் தவமிருக்க
அத்தனும் வந்தான் அர்ச்சுனன் றன்னிடமே
பித்தனை வில்லாற் பிடரியி லேயடித்தான்
அரனடி வாங்கியே அளித்துமே பாசுபதம்
திரமான மந்திரமுஞ் செப்பியே சென்றனரே
இந்திரனு மோடிவந்து மிந்தவிசயனையே
தந்திரமாய்க் கூட்டித் தான்சென்று விண்ணுலகும்
இந்திரப் பட்டமதை இவனுக்குக் கட்டிடவே
தந்திரமா யாண்டான் தக்க பலவிசயன்
இந்திரன் றனக்கே இடையூறு செய்தவர்கள்
அந்தரலோகம்வாழ் அதிகப் பலமுடையோர்
காலகேய நிவாத கவச ரெனுங்கொடிய
ஆலகுண முக்கோடி அவுணரறுபா னுயிரம்பேர்
அந்தக் கொடிய அசுரரையெல் லாம்விசயன்
தந்திரமாய் மடித்தான் தக்க பலவானும்
அப்படிக் கொத்ததொரு அதிவீர சூரனை நீ
எப்படி வெல்லுவது எந்தலே முடியாது
அவனுமே யின்று அருமையாய்க் கணைதொடுத்து
தவராதுவுன் சிரத்தைத் தறித்திடுவா னென்றனனே
சங்கதிகள் தன்னைத் தான்கேட்டு மேகருணன்

சிங்கம்போற் சீறி செப்பினுன் சிலசெய்தி
சல்லியனுங் கேட்டு சங்கட மிகவடைந்து
சொல்லிச்சிலசெய்தி தூஷணித்தான் கர்ணனையும்
இருவர்கள் தனக்குமே ஏகச்சண் டையாக
இருவர்கள் சத்தமது எங்குமே கேட்டிடவும்
அரவக்கொடியோன் அதிவேக மாய்வந்தும்
பரபரப் பாய்ப்பேசும் பார்மன்ன ரைப்பார்த்து
சல்லிய னிடத்திலே தான்பணிந்து மேநின்று
சொல்லிச் சிலநீதி சுருக்காய்க்கோ பந்தணியும்
என்றுமவன் மொழிந்து இருகையால் தான்தொழுக
நன்ருகச் சல்லியனும் நலமாக வேயிருந்து
அங்கதேச னிடத்தில் அவன்பிரிய மாய்ப்பேசி
சிங்கார ரதம்நடத்தச் செப்புவா னேகருணன்
இன்றையப் போரினிலே எழல்விசய னம்பாலே
கொன்ருலே யெந்தனையுங் கோமாயென் செய்வாயென
அங்கதே சாதிபனு மவனிட மேகேட்க
சிங்கமதைப் போலச் செப்புவான் சல்லியனும்
நீமடிந்து போனுலும் நிமிடம்யான் வில்வளைத்து
நேமனே யானும் நின்று விசயனெடு
சண்டைகள் செய்து சமர்த்தனை யும்மடித்தே
அண்டையே நால்வரையு மறுப்பேன் சிரமதனை
ஆயன்மேலே யானும் அனேக கணைபூட்டி
மாயனையுஞ் சேர்த்து மடித்திடுவேன் தப்பாது
என்றுமே சல்லிய னியம்பியதைக் கேட்டரசன்
நன்ருகவே ரதத்தை நடத்துமென்று னம்மானை
ரதத்தை நடத்திடவும் நல்லதொரு சல்லியனும்
இதமாக வேபேசி இவர்கள்வா ராரிங்கே
அங்கே யருச்சுன னும் ஆயனை யேபார்த்து

எங்கோனே நாமும் எகுரேரும் போர்செய்ய
கர்ணன்கணை யாலேயான் கண்ணனே மாண்டாலே
விற்றிறத்தோர் நால்வரும் வெட்டியாய் மாள்வாரே
என்னசெய் வாய்நீயு மெந்தனுக் கோதுமென
மன்னனு மச்சமயம் மாயனைக் கேட்டிடவும்
அந்த முடையதோர் அருச்சுன னேகேளு
உந்தனை மடித்திடவே யுதவாது கர்ணனுல்
கூடாது நிச்சயங் கொன்றிட்டா லப்படியும்
வாடாது கேளும் மன்னவனே சங்கதியை
இந்த வுலகங்க ளெல்லா மடிந்திடுமே
சொந்த வனுமான் துடியாய்நிற்கி றுன்தேரில்
ஆகையினுல் வெல்லவு மாகா தவனுலும்
பகைவனை மடித்திடுவாய் பயப்படா தேநீயும்
இன்னும் பலவிதத்தை எடுத்தோதி மாயவனும்
மன்னன் ரதமதையே மகிழ்ந்து நடத்தினனே
விசயனுஞ் சென்று வேந்தன் தருமரையும்
விசயன் பணிந்தே விடையது கேட்டிடவும்
அருச்சுனனை வாழ்த்தி அறைகுவா ரேமதியும்
அருச்சுனு யின்றைக்கு அதிகரு ணன்றனையும்
வென்று வருவாயென விடைகொடுக் கத்தருமர்
நன்ருக வோரதத்தை நடத்தினன் கோபாலன்
அர்ச்சுனன் வருகுவது அறிந்துசஞ் சத்தகர்கள்
கெர்ச்சனைகள் செய்தே கிரீடி யுடனெதிர்த்தார்
விசயனும் பார்த்தே வேகமாய் வில்வளைத்து
அசையாது நின்று அள்ளிவிட் டான்கணையும்
அந்தப் பகழியெல்லா மறுத்துமே பாதகர்கள்
விந்தையான சரத்தை விட்டார் வெகுகோடி
வந்த பகழியெல்லாம் மன்னன்கணை துண்டாக்கி

சந்தோஷ மாகத் தானுமது வந்ததுவே
அவர்களுங் கண்டே ஆங்காரக் கோபமுடன்
தவராம லேவினர் தக்க பெருங்கணைகள்
அண்ட மிடிந்திடவே அக்கணைகள் வருக
கண்டே யருச்சுனனும் கண்கள் பொறிப்பறந்து
காண்டீபந் தன்னில் கணை நூறு மேதொடுத்து
தூண்டியே விட்டான் துஷ்டர்க ளேமடிக்க
அவர்கள் சரத்தையெல்லா மறுத்துமே பூராவும்
தவராகப் பாய்ந்திடவும் தான்விழுந் தோடினர்
அப்போ கருணனு மறிந்துமே சங்கதியை
செப்புவான் சாரதிக்கு சீக்கிர மாகவே
அரசனே பாரு மருச்சுனனு மங்கே
திரவான் களையாகித் தேகமெல் லாம்வேர்த்து
வருகிறு னேயவனும் வம்புசெய்ய விப்போது
திருத்தமாய்க் கணையேவி சிரசையே யிச்சமயம்
அறுத்து விடுவேனென அறைந்தானே சாரதிக்கும்
பொறுக்காமல் சல்லியனும் புகலுவான் மன்னனிடம்
அங்கதேச பதியே அறைந்தாயே சீக்கிரத்தில்
பங்க மடைந்திடுவாய் பார்த்தன் பகழியதால்
சந்தேக மில்லையது க்ஷணத்திலே பாருமென
அந்த மொழிகேட் டரசன்பே சாதிருக்க
அப்பா லொருபுறத்தில் ஆயன்தம்பி தனக்கும்
கப்பல் கொடையாளி கர்ணன்பிள்ளை கள்தனக்கும்
சண்டை தொடர்ந்தது சமர்த்தாக வேயங்கே
அண்டேயே நின்றே அக்கருணன் பிள்ளைகள்
வில்லை வளைத்தே வெகுசரத் தைத்தொடுத்தே
தொல்லை விளைக்கவே தூண்டிவிட் டாரங்கே
சாத்தகியுங் கண்டு சல்தியம் டைத்தடுத்து

ஆத்திரமா யேவி அத்தனையு மறுத்தே
அப்பால் சிலகணையும் அவன்விட வங்கேயும்
தப்பாமல் வந்தே சல்தியாய்ப் பாலகரை
அம்புகள் தைத்திடவே அவரெடுத் தாரோட்டம்
வம்பு விளைத்தான் மாயனுட தம்பியும்
சேனைகள் மேலேயே தீட்டுகி ருன்பாணம்
சேனைக ளெல்லாருஞ் சிதறியே யோடிடவும்
கர்ண னும் பார்த்தே கண்கள் புகைகிளம்ப
விற்கையில் பூண்டு வேகமா யங்குவர
தர்ம ரிதையறிந்து சல்தியா யங்குவந்தே
விற்கையி லேபிடித்து வேந்தன் சரம்விடுத்தார்
கணைகள் வருவதையே கண்டுமே கர்ண னுங்
கணைகள் தொடுத்தான் கணக்குகளில்லாமல்
வில்லி லிருந்து விடுபட்டு மேபகழி
சொல்லி முடியாது சுடராய் வருகுவிதம்
தர்மர் கணையெல்லாஞ் சட்டெனத் துண்டாக
தர்ம ரதையறிந்தே சல்திகணை யேவினர்
அத்தனை யம்புகளை அறுத்துக் கருண னும்
மெத்தக்கோபங் கொண்டு விட்டான் வெகுசரமும்
வேகமாக வந்து வேந்தன்தர்மர் ரதத்தை
போகவே தூளாகப் போக்கிவிட்ட தேகணை
பொறுமை யுடையார்மேல் புகுந்திட வேபகழி
வறுமை யடைந்தே மன்னவனேடினரே
விடுவேனேவென்று விரட்டியே கர்ண னும்
கொடுத்தானே தாயார்க்கு கோமானு மோர்வரமும்
அதையே யவனினைந்து அவரையுஞ் செல்லவிட்டான்
பதைத்துமே யோடினரே பார்மன்னன் றர்மரும்
அப்போது பீமனு மாயன்தம்பி யுஞ்சேர்ந்து

தப்பாது சேனைகளைச் சாடுகிறு ரங்கேயும்
அழுது மயங்கியுமே அப்பாலே யோடுகிறுர்
பழுதுவந்த சங்கதியைப் பார்த்துமே கர்ணனும்
சல்லிய னிடமதிலே சாற்றியே ரதமதனை
சொல்லி யடிக்கின்ற துடிபீமன் றன்னிடத்தில்
ரதத்தைவிட வேண்டினுன் நல்லதொரு சல்லியனும்
இதமாய்நடத்தி ஏகியே யங்கேயும்
மதவீமன் முன்னேயே மன்னன் ரதம்நிறுத்த
அதாகுதஞ் செய்கிறு னங்கே துடியனும்
அங்கதே சாதிபனு மப்போ சிலைவளைத்து
சங்கங் கணைவரையே தானேவி னுனங்கே
வீம னதைப்பார்த்தே விடுத்தான் வெகுபகழி
நேமன் கணையும் நிமிட மதில்வந்து
கர்ணன் சரமெல்லாங் கண்ட துண் டஞ்செய்ய
விற்கோமான் கண்டே வெகுவருத்த மடைந்து
தொடுத்து வெகுபாணஞ் சொல்லியே விஞ்சைதனை
விடுத்தான் கருணனும் வீமன்மேல் தப்பாமல்
கண்டு மதகரியான் கடுங்கணையைத் தானேவ
ரெண்டு நிமிடமதில் நேர்மையான கணையும்
வெட்டி யெறிந்திடவே வேந்தன் கருணனும்
எட்டுக் கணைதொடுத்தே ஏவினுன் தம்பிமேல்
வாய்வுசுத னச்சமயம் வருணஸ் திரமேவ
பேய்பிடித் தாற்போல பிதற்றிவந் தேகணையும்
கர்ணன் கணைபூராக் கண்டதுண்டஞ் செய்திடவும்
கர்ணனு மச்சமயங் கையசந் தேயிருக்க
அப்போ மதபீமன் அடங்காக் கணையேவ
தப்பாது கர்ணனையே சல்லடைக்கண் ணுக்கிடவும்
களைத்து விழுந்தான் காவலன் தன்ரதத்தில்

களைத்து விழுந்தோனைக் கண்டுமே சல்லியனும்
வெளியே ரதம்விரட்டி வேந்தனைக் காப்பாற்ற
பழிநேர்ந்த தென்று பார்த்துத் துரியனுமே
தம்பிய ரைவரையே தானே யருகழைத்து
நம்பிய சோதரர்க்கு நவின்றுமே சங்கதியை
அவர்க்குத் துணையாக அனேகமான மன்னரையும்
தவராது செல்லுமெனச் சாற்றித் தைரியத்தை
தம்பியரே யிச்சமயந் தடிபீமனை நீங்கள்
வெம்பிட மடித்திடுவீர் வீரரே செல்லுமென்றான்
அப்படியே நல்லதென்று அண்ணல் தனக்குரைத்து
தப்பாம லங்குவந்தார் தக்க பலவான்கள்
வீமசேனன் முன்னே வேகமாய் ரதம்வரவும்
வீமனதைப் பார்த்தே வீறிட் டதட்டிவந்து
அடித்தான் கதையாலே அண்டந் திடுக்கிடவே
துடித்துமே கீழ்விழுந்து சோப்பி யவர்மடிந்தார்
அங்கதே சாதிபனு மதிகக் களைதெளிந்து
பங்கம்வந்த சங்கதியைப் பார்த்து மரசனும்
வருத்தமிகவடைந்தே மன்னனும் வந்தெதிர்க்க
திருத்தமாய்ப் பார்த்தான் திசைகள் மெச்சுபீமன்
ஆனையைத் தூக்கியே அடித்தான் கர்ணன்தேரில்
ஆனைகள் பட்டிடவே அவன்தேர் நொறுங்கினதே
கொடையாளி தனக்குக் கோபமிக வுண்டாகி
தடைகளில் லாதபடி தானேவி னான்பகழி
வீமனிட மேகணைகள் வேகமா யோடிவர
வீமன்துண் டாக்கினான் வேந்தன்கணை பூராவும்
அப்போ மதபீமன் ஆனைக்கும்ப லிற்புகுந்து
தப்பா தடிக்குறான் தன்கதை தன்னாலே
கவுரவ சேனைகள் கலங்கியே யோடிடவும்

கவுரவச் சேனுபதி கண்டான் கருணனும்
தன்தனுசை வளைத்து தக்க கணைதொடுத்தே
மன்னனு மேவினன் மகாபல வான்மேலே
அத்தனை பகழிகளை யறுத்துமே பீமனும்
மெத்தக் கோபமாக வேந்தனிற் குஞ்சமயம்
சாத்தகி யோடிவந்து சல்தி கருணனிடம்
ஆத்திரமாய்ச் செய்தா னங்கு பெரும்போரே
ஒருவர்க் கொருவர் உயிரை வெறுத்தன்று
கெருவமாய்ச் செய்தார்கள் கிலேசமில் லாதபடி
இப்படிக் காகவே இங்குமே போராட்டம்
அப்பா லொருபுறமே அருச்சுன ஞர்தனக்கும்
சஞ்சத் தகருக்கும் தான்மூண்ட தேபோரு
சஞ்சத் தகர்களைத் தனுவிசய னச்சமயம்
நாகாஸ் திரமதனை நானுமே யேவிடவும்
நாகாஸ் திரமதுவும் நல்லசஞ் சத்தகரை
சூழ்ந்துமே கொண்டது துடியர்களை யன்னேரம்
ஆழ்ந்துமே பாதகர்க ளப்போது யோசித்து
கெருடாஸ் திரமதனைக் கிளப்பிவிட் டாரவர்கள்
கெருடாஸ் திரமுங் கிளப்பியே நாகமதை
அடித்துமே விட்டது அங்குவொன்றுந் தப்பாது
துடித்து விசயன்மேல் தாண்டிவிட் டார்கணைகள்
அத்தனையும் விசயன் அறுத்துமே சீக்கிரத்தில்
நத்திவந்தா ரிற்சிலரை நமனுலகு காட்டிவிட்டான்
அரவக் கொடியோனு மதிவேக மாய்வந்து
திரமதனைக் காட்டியே சென்முன் றருமரிடம்
துஷ்டத்தூய்ம னறிந்து துடிய னிடம்வந்தே
நஷ்ட மதுசெய்ய நல்லகணை யேவினன்
துரியோ தனன்வில்லுந் துண்டாகப் போய்விடவே

அறிந்தே சகுனியு மங்கேயே யோடிவந்து
துஷ்டத்தூய்மன் மேலே தொடுத்தேவி ஞன்கணையும்
துஷ்டதூய்மன் பார்த்தே துடியாய்ச் சிலைவளைத்து
தொடுத்துக் கணைதனக்கு சொல்லி யுபதேசம்
விடுத்தான் சகுனிமேல் வேகமா கக்கணைகள்
அவன்ரதத் தையுடைத்து மவன்மார்பில் தைத்திடவும்
அவன்மயங்கி வீழ்க அறிந்து துரியோதனன்
தன்மாமன் றன்னையே தன்ரதத்தி லேற்றியும்
மன்னனு மோடிஞன் மகாபடை யைத்தாண்டி
அப்போ சகாதேவனு மந்த நகுலனுமே
தப்பாது சேனைகளைத் தான்மடிக்கு ரூர்வெகுவாய்
வஞ்சகன் சேனைகளை வாட்டிட வேகணைகள்
பஞ்சுபோ லோடுகிரூர் படைகளெல் லாம்பூரா
சேனைக ளோடுவதைத் திரியோ தனன்பார்த்து
சேனைகளைக் காத்திடவே சிந்தை தனிலெண்ணி
தம்பிதுச் சாதனனே சல்திசென்று நீயும்
வெம்பியோடும் படையை வேந்தனே நீதிருப்பி
தைரியங்கள் மொழிந்தே தான்சேர்த்துச் சேனையெல்லாம்
தைரியமாய் நீநின்று சண்டைசெய்யு மென்றனனே,
வேந்த னிடத்திலே விடைவாங்கித் தம்பியும்
சாந்தமா யோடியவன் சல்தியாய்ச் சேனைமுன்னே
ஓடவேண்டா மென்று ஓசைகாட்டி யழைத்தே
கூடவாரு மென்றவனுங் கூட்டியே சேனைகளை
தருமர்முன்னே வரவே தம்பிபீமன் பார்த்து
கெருவமாய்க் கதைபிடித்துக் கிளம்பியவன் கொக்கரித்தே
வந்து மெதிர்த்தானே வம்பனே டச்சமயம்
வந்தவனைக் கண்டே மன்னன்துச் சாதனனும்
அண்டம் வெடிக்க அவன்போட்டுச் சத்தமது

முண்டையே யுன்னை முடிப்பேன் சணமதிலே
இன்னும் பதவிதமே எடுத்தோதி யேமூடன்
மன்னன் பீமன்முன்பு மாதுடியன் வந்தானே
வீம னினைந்தான் வேந்தனை மடித்திடவும்
வீமனுக்குக் கோபமது வெகுவேக மாய்வரவும்
துச்சா தனனுந் துடிபீம னையடிக்க
அச்சமில்லா பீமன் அடியதனை வாங்கியே
கெதையைச் சுழற்றிக் கிளம்பிவந்து கிட்டவுமே
பதைக்க வடித்தானே பலத்தையெல் லாங்கொண்டு
துச்சா தனன்சிரசில் துடியா யடிவிழவும்
துச்சா தனனுஞ் சோம்பியே கீழ்விழுந்தான்
அப்போது பீமனு யாவேச மேகொண்டு
தப்பாதவன் நெஞ்சிலே தன்னகத் தாலிறுத்தி
மாரைப் பிளந்தே மன்னனதி வேகமதாய்
நேரேயுதி ரங்கிளம்ப நினைத்துச் சபதமதை
வாரிவாரி பீமனும் வாய்தனிலே வைத்திடவும்
வாரியே வைப்பதையே மாயவனுங் கண்டே
வீமனிட மோடிவந்து விளம்புவார் சங்கதியும்
வீமா வுதிரமதனை வேந்தே குடியாதே
கொப்பளித்துத் துப்பென்று கோபா லனுமொழிய
அப்போமத பீமனுமே யப்படியே செய்தும்
ஆங்காரங் கொண்டு அதிகக்கோபமுடனே
பாங்காய்துச் சாதனனை பலவானு மேதூக்கி
உடம்பெல்லாம் ரத்தமது ஒவென்ற சத்தமொடு
தடங்கலொன் றில்லாது தன்புயத்தில் வைத்தவனும்
படுகள மெல்லாமே பலவானுஞ் சுற்றிவர
படுகளத்தி லுள்ளோர் பார்த்துபீ மன்றனையும்
அஞ்சி நடுங்கியவர் அப்பாலு மேயோட

தொஞ்சிடாது பீமன் சுற்றிவாரான் பூராவும்
அந்தர வாசிகளு மப்போயிவ னைப்பார்த்து
இந்தப் படுபாவியு மிங்குவந்தா லும்வருவான்
என்றுமவர் பேசியே ஏகினர் விண்ணதிலே
நன்றாக ருத்திர னும் நாடி யிதைப்பார்த்தே
இன்றுமே பீமன் இங்கு வருவானென
சென்றார் கயிலைமலை சீக்கிர மாகவே
அப்போது பீமன் அவனைப்போ டாதபடி
தப்பாது சுற்றிவாரான் தக்கயுத்த களத்தை
அஷ்டகசங் கள்கண்டே அப்பாலே சென்றிடவும்
கஷ்ட மிகப்பட்டான் கண்ணில்லான் சுத னும்
துரியோ தன னுஞ் சொல்லாம லோடிடவே
அறிந்துமே மாயவனு மந்தபீம னிடத்தில்
சீக்கிரத்தில் வந்தே செப்பியே நீதிகளும்
அக்கிரமம் வேண்டாம் அவனையே போட்டுவிடு
என்றுமாயன் மொழிய இதைக்கேட்டு மேநல்ல
தென்றுமே பீமன் எறிந்தான் துச்சாதனனை
அப்போது சேனைகளை அடிக்குறான் கதையாலே
தப்பாம லேபட்டு சனங்கள் மடிகிறதே
கவுரவர் சேனையெல்லாங் கலங்கியே யோடிடவும்
கவுரவ சேனுபதி கண்டான் கருண னுமே
மெத்த விசனமது வேந்தனு மேகொள்ள
அத்ததி சல்லியனு மரசனைத் தேற்றியே
வேண்டிய நீதிகளை விளம்பியிருக் குஞ்சமயம்
தாண்டியே வந்தானே தன் னுடைய சுத னும்
விசய னுங் கண்டே வேகமோ டங்குவந்து
விசயன் றெடுத்துவிட்டான் வேண்டிய சரமதனை
கர்ணன் சுதன்சிரமுங் கண்டித்துக் கீழ்விழுக

கர்ணனை வதையுமென்று கரியமா லும்மொழிய
அப்படியே நல்லதுகாண் ஆயா ரதம்விடென
செப்ப விசயனுமே தேர்நடத்தி னன்மாயன்
கர்ணனின் முன்னையே கரியமால் கொண்டுவர
கர்ண னதைப்பார்த்தே கண்கள் பொறிகிளம்ப
அப்போது தேவர்கள் அந்தரத்தில் வந்துநிற்க
செப்பவொண்ணா ருத்திரனுஞ் சிரமமது யெண்ணமல்
முப்பத்துமுக் கோடிதேவர் முனிவ ருடன்கூடி
அப்பவே வந்துமவர் அந்தரத்தில் நின்றார்கள்
வேணுகோ பாலனுமே விளம்புவார் விசயனிடம்
வேணுமென்ற சரங்கள் விடுவாய் கர்ணன்மேலே
சல்தி மடியுமென்று சாமியுந் தூண்டிவிட
சொல்லிவாய் மூடுமுன்னே தொடுத்துவிட் டான்பகழி
அங்கதே சாதிபனு மக்கணை யைப்பார்த்து
சங்கம் வரைபகழி தான்விட்டான் வருங்கணைமேல்
விசயன் கணையதனை வெட்டியே கீழ்தள்ள
விசயனுங் கண்டே வெகுகோபந் தன்னுடனே
தொடுத்துக் கணைதனக்கு சொல்லியே மந்திரத்தை
விடுத்தானே யந்த வேந்தன் கருணன்மேல்
கொடையாளி கண்டேகோடி கணையேவ
தடையில்லாது வந்து தான்மறித்த தேகணையை
ஒருவர்க் கொருவர் ஓயாது சண்டைசெய்ய
இருவர்கள் யுத்தமது ஏகநேரம் வரையில்
அந்தர வாசிகளு மானந்தங் கொள்ளும்படி
தந்திரமாய் விசயன் தான்விட்டா னேகணைகள்
சேனைகள் மேலே திருப்பி விடப்பகழி
சேனைகள் மேற்பட்டுந் தேம்பியே தட்டுக்கெட்டு
ஐயையோ வென்றழுது அவரெடுக்க வோட்டம்

செய்கிறான் பாரயுத்தஞ் சிலைவிசய னச்சமயம்
கர்ணனை விட்டுமே கனத்தபடை யோடிடவே
கர்ணன் தனியாகக் கலங்கியே நின்றுமே
அப்போ கருணனு மாலோ சனைசெய்தே
இப்ப விசயனையே எந்தன் கணையாலே
கொல்லுவே னென்று கூறி யவனுமே
நல்லநா கக்கணையை நரன்மேல் விட நினைந்தும்
அம்பரு த்தூணியதி லவன்கரத்தை வைத்திடவே
வம்புசெய்யு நாகமது வந்தானே முன்னாலே
அப்போ வதையெடுத்தே ஆசையாய்வில் லில்தொடுத்து
செப்பினான் மந்திரமுஞ் சீக்கிர மாய்க்கணைக்கும்
விசயனை கழுத்துக்கே வேந்தன் குறிபார்த்தே
பிசகாம லேவிடவே பிரிய முடனின்றான்
அப்போது சல்லியனு மவன்யோ சனையறிந்து
செப்புவான் கர்ணனுக்குச் சீக்கிர மாகவே
விசயன் மடிப்பதற்கு வேந்தேநீ யிச்சமயம்
விசயன் கழுத்துக்கே வேகமாய்க் குறிபார்த்தாய்
சாரதியோர் மாயன் தந்திரத்தி லேசிறந்தார்
பாரதிலே மோசம் பண்ணுவா னிச்சயமே
கழுத்துக்குக் கீழே காவலா லெக்குவைத்தால்
பழுதில்லை யின்றேகாண் பார்த்தன் மடிந்திடுவான்
இன்னும் பலவிதத்தை எடுத்துரைக்கச் சல்லியனும்
மன்னன் கருணனுமே மறுத்துவிட்டு மதையும்
இப்படித் தான்விடுவேன் என்றுமவன் யேவினான்
அப்போது நாகமும் ஆலகாலம் போல்வரவே
அந்தர வாசிகளும் அறிந்துமே சங்கதியை
இந்திரன்றன் சுதனும் இறந்திடு வானின்றைக்கு
என்று மொழிந்துமவர் ஏகியே விண்ணிருக்க

கன்றியே யிந்திரனுங் கவலை மிகவடைந்தார்
அத்தனு மச்சமய மஞ்சிப் பயந்திடவே
மெத்தவேக மாக விடவசேன னும்வருக
ஆயனு மந்நேரம் அருச்சுன் றன்ரதத்தை
மாயன்பாத விரலால் மண்ணி லழுத்திடவே
பூமியி னுள்ளேயே புதைந்த தொருமுழமும்
சாமிமாயஞ் செய்திடவே தான்வந்தது வேகணையும்
வேகமா யோடிவந்தே விசயன் கிரீடமதை
போகவே சுக்காகப் பூமியில் தள்ளிவிட்டே
சென்றது வேநாகஞ் சீக்கிரங் கர்ணனிடம்
சென்றதை யேகண்டு தேவர் களுமகிழ்ந்தே
ஆனந்தங் கொண்டே அவர்மலர் மாரிபெய்ய
தானந்த கோன்சுதனுஞ் சந்தோஷ மாயிருக்க
கர்ணனிடம் வந்தே காலனந்த நாகமது
கர்ணனே யென்னைக் கண்ணன்மோசஞ் செய்துவிட்டான்
இன்ன மொருதடவை என்னைவிடு வீர்நீரும்
மன்ன னருச்சுனன் மகாலோகஞ் சென்றாலும்
பாதாளஞ் சென்றாலும் பார்த்தனை யிச்சமயம்
பாதாளம் யான்சென்றே பாரு மவன்றனையும்
தலையைக் கொண்டுவருவேன் சல்தியாய் விடுமெனவே
நிலையாநின் றேதுடித்து நிமிஷம்விடு மென்றுரைக்க
அப்போ கருணனு மாலோ சனைசெய்தே
செப்பிய மொழிதாய்க்குஞ் சேய னதைநினைந்து
அந்தநாகந் தனக்கு அறைகுவான் சங்கதியும்
இந்தத் தடவையுனை யான்விடே னுண்மையிது
எந்தக் கணைதனையு மேகுவே னோர்தடவை
வந்தா லதையானு மறுபடித் தொடுப்பதில்லை
என்று மொழிந்தான் இயல்பாய்க் கருணனும்

நின்றுமே கேட்ட நிட்ரே நாகமது
வேகமா யோடிவர விசயனைக் கொல்லவென்று
வேகமாய் வருவதையே விசயனு மேபார்த்து
வாளைக் கரம்பிடித்தே வம்பனும் வெட்டிடவே
வேளையதிற் பட்டும் வீழ்ந்ததே தட்டுக்கெட்டு
நாலு துண்டாய்ப் போச்சுது நாகமு மப்போது
மேலுலகோர் கண்டே விசயனை யேபுகழ்ந்தார்
ஆயனு மைத்துனன் ஆபத்தைக் காத்துமே
மாயவனு மச்சமய மகிழ்ந்துமே கீழ்குதித்து
மண்டியு மிட்டே மன்னன்றே ரைத்தூக்கி
அண்டி ரதமேறி அருச்சுன னேடிருக்க
சல்லியனும் நின்றே சாற்றுவான் கர்ணனுக்கு
சொல்லியுங் கேட்கவில்லை தோசி கருணவென
இன்னும் பலவிதமு மெடுத்தோதிச் சல்லியனும்
மன்னுவுன் ரதமதிலே மடையா விருக்கேனென்
என்று மொழிந்தே இரங்கி நடந்திடவும்
அன்று கருணன் அதிரோச மேகொண்டு
சாரதியும் நடத்தி தன்வில்லை யும்வளைத்தே
பேரதி லோங்கும் பெரிய கணையேவினன்
அப்போ விசயனுமே அறுத்துமே யத்தனையும்
தப்பாது மேவினன் தானொரு நூறுகணை
இருவர்கள் பாணமது எங்கெங்கு மேபரவி
நெருநெருத்துப் போகிறது நிற்கவிட மில்லாதே
கர்ணனு மச்சமயங் கையசந்து மேயிருக்க
கர்ணனிடம் வந்தே கால னுரைக்கலுற்றான்
அரசனே யுந்தனுக்கு ஆயுள் முடிந்ததினால்
திரமான சண்டைவிட்டுச் சீக்கிரம்வா நம்பதிக்கு
பூமியில் பதிந்துவிடும் புண்ணியனே யுன்ரதமும்

தாமத மில்லையென்று சாற்றிநடந் தான்மறலி
முந்தியொரு மறையோன் முடிமன்னன் கர்ணனுக்கு
தந்திரமாய் மொழிந்தான் சாபமொன்று தப்பாது
அந்தச்சா பப்படிக்கு அரச னதுரதமும்
இந்தவேளை பூமியிலே இறங்கினதே சக்கரமும்
அரச னதைப்பார்த்தே ஆயாசமே யடைந்து
திரத்தை விடாதபடி தேர்வேந்தன் அந்நேரம்
ரதத்தைவிட்டுக் குதித்தே நல்ல கருணனும்
இதமாகத் தூக்கினு னிராசன் ரதமதனை
அப்போது மாய னருச்சனு கணைவிடென
தப்பாது மேவினனே சல்தியாய் நூறுசரம்
அதிவேக மாகவே அக்கணை கள்வந்து
ததியே கருணனைத் தான்துளைக்க மேனியெங்கும்
அங்கதே சாதிப னு மருச்சுன னைக்கேட்பான்
இங்கேயான் றேரையே எடுக்கும் வரைநீயும்
கணைகள் விடுவதே காவலா நீதியல்ல
கணைகள் விடாதேயெனக் கர்ணனுங் கேட்டிடவும்
ஆய னதைக்கேட்டே அவருரைப் பார்பதிலும்
நியாயமு மோதினுய்காண் நீநல்ல மன்னவனே
அத்தநாளில் நீரும் அறையவில்லை ஞாயமதை
உந்தனுக்கும் ஞாயம் உண்டோ வினிக்கூறும்
பாதகன் மேலே பார்த்தாகணை போடுமென
வேத னுரைக்கவே விசயன் தொடுத்தானே
கர்ணனதைக் கண்டே கனகோப முண்டாகி
விற்கையில் பூண்டே வேந்தன் ரதமேறி
வல்லநல் வில்லதனை வளைத்தே கருணனும்
நல்லகணை யாய்த்தொடுத்து நரன்மேலு மேவினனே
வேகமாக வந்துகணை விசயன்மார் பைத்துளைத்து

போகமறு புற்மும் புண்ணியனு மேமயக்கங்
கொண்டு படுத்தான் குப்புற வேவிசயன்
கண்டு கருணனுங் கண்ணன்மே லச்சமயம்
தொடுத்துக் கணைக்கு சொல்லியே மந்திரத்தை
விடுத்தான் பகழிதன்னை வேகமா யோடிவந்து
மாயவன் றன்னையே மார்பைத் துளைத்திடவும்
ஆயன் மயங்கியே அவன்ரதத் திற்படுத்தான்
கொடையாளி கண்டே குதித்துரதத் தைவிட்டு
தடையில்லாத படியே தான்தூக்கி ஞன்ரதத்தை
தன்னுல் முடிந்தமட்டும் தான்தூக்கி யேபார்த்து
மன்னனுல் முடியாமல் மனது சளைப்படைந்து
பின்னுந்தேரி லேறி பெரியவில்லைக் கைப்பிடிக்க
மன்னன் விசயனுக்கு மயக்க மதுதெளிய
ஆயன் களைதெளிந்தே அப்போ தவரெழுந்து
மாயனு மேபுகல்வான் மன்னன் விசயனிடம்
அருச்சுனனே யிச்சமய மந்தக் கருணனையும்
திருத்துமாய்க் கணையேவிச் சீக்கிர மடியுமென்றார்
விசயனு மச்சமயம் வேண்டுங் கணைபூட்டி
அசையாது நின்று அறைந்துமே மந்திரத்தை
ஈசனை யேநினைந்து எடுத்துக் கணையேவ
பாசமொடு பகழி பார்த்தனை விட்டகன்று
கோடையிடி போல்வந்து கொடையாளி மேற்பாய
பேடையிற்போல பிதற்றினு னச்சமயம்
சூரணை யதுதப்பிச் சோர்ந்தே கொடையாளி
திரமை விடாதபடி தெளிந்துமே யந்நேரம்
அம்புகளைப் பார்த்தான் அதிலொன்றுங் காணுமல்
வெம்பி விசனமடைந்து வேந்தன் மயங்கியழ
முன்னுற் பரசுராமன் மொழிந்தசா பப்படியே

இன்னுள் கருணனிட மில்லையே யாயுதங்கள்
அவனுக்கு பிர்மனும் அமைத்த விதியதினுல்
அவனுங் களைத்தே அவன்தேரி லேசாய்ந்தான்
தர்மதேவ தைகள்கண்டே சஞ்சல மேயடைந்து
தர்மக்கொடை யாளியிடந் தான்வந்து சீக்கிரத்தில்
சுற்றியே குந்தி சூழ்ந்ததே கர்ணனையும்
அத்ததி விசயனுமே அம்புக ளேவினனே
கணைகள்வேக மாய்வருகக் கண்டுதர்ம தேவதைகள்
கணைகள் தவராது கவளிகரஞ் செய்திடவும்
விசயன் கணையேவ வெகுகோடி சங்கம்வரை
விசயன்கணை பூராவும் விழுங்கத்தர்ம தேவதைகள்
கையுமசந் தேவிசயன் காண்டீபங் கீழ்போட்டு
ஐய னிடத்திலே அவன்கேட்பான் சங்கதியும்
மைத்துனுவென் பாணமது மன்னன் கருணனையும்
தைத்திடவுங் காணேன் தமியனிடம் வாரதில்லை
அம்புவிட்டே மாயா அசந்ததே யென்கரமும்
வம்புநீ தென்னதொல்லை வழுத்துவாய் கண்ணுவென்ருன்
அப்போது மாயவனு மாலோ சனைபுரிந்தே
செப்பாது சங்கதியை சிலைவிசயா விங்கேயே
இருமெனச் செப்பியே எழுந்துமே மாயவனும்
நெறுநெறென வேநடந்து நிமிடமோ ரிடம்வந்தே

கிருஷ்ணன் பிராமண வேடம்பூண்டு
கர்ணனிடஞ் செல்லுவது

எடுத்தான் உருவமது எல்லோருந் தான்மயங்க
நடுக்க மெடுக்கவே நல்லகிழம் போலாகி
தோலும் நரம்புந் தொங்குங் கிழவனுக்கு
மேலும் பழுத்தபழம் வேதாந்தங் கற்றகிழம்
விருத்தாப் பியக்காலம் வேதியர் பெருவயது

திருத்தமாய் வெண்ணீறும் தேகமெல் லாம்பூசி
தொண்ணூறுக்கு மேலே சொல்லலா மேவயது
விண்ணுள்ளோர் கண்டே வேடிக்கை பார்க்கவந்தார்
கோலது வூன்றியே கோபால னச்சமயம்
கோலாகல மாகக் குதித்துமே வாரானே
படுகள மெல்லாமே பாங்காய்க் கடந்துமே
நடுவேயே வந்தே நந்தகோ பன்சுதனும்
கர்ணனிடம் வந்துமவர் கண்டுமா சீர்வதிக்க
கர்ணனவ ரைப்பார்க்க களைகள்கொஞ் சந்தெளிய
தொழுதுமே வேதியரைச் சொல்லுவான் சங்கதியும்
பழுதில்லா மேனியனே பகருவா யெத்தேசம்
அகோரயுத்த களமே அடியே னிருக்குமிடம்
அகோரமாய் ரத்தவெள்ள மாறுபோ லோடுகுதே
ஏனிங்கு வந்தீர் எந்த னிடந்தனிலே
தானிங்கு வந்ததையே சாற்றுவா யென்றனனே
என்றுமே கேட்க இசைந்த கொடையாளி
நன்றாக வேதியனும் நவிலுவான் சங்கதியும்
அரசனே யென்தேசம் அதிகத் தொலைகேளும்
தூரம் வடக்கேயப்பா துவாரகா புரிநாடு
அங்கே சிலபேர்கள் அருமையுடன் மொழிந்தார்
அங்கதேச மதையே ஆண்டு வருங்கருணன்
கொடையாளி யென்றே கூறினா ரென்னிடமும்
தடையில்லாது வந்தேன் தானிதி வாங்கவேதான்
நகரமதில் சென்று நானும் விசாரித்தே
பகவா னருளாலே பார்த்தேயா னுந்தனையும்
ஐயையோ வுந்தனுக்கு ஆபத்து வேளையிது
செய்வதென்ன வென்றுமவன் தேம்பி யழுதிடவும்
அப்போ கருணன் அந்தணரைப் பார்த்து

செப்புகிரு னவனும் தெளிந்த கொடையாளி
ஐயா பெரியவரே அருமறை நூலறிந்த
ஐயனே யானும் அமர்க்களத்தி லின்று
விசயனம்பு பட்டே வேதினையி லாழ்ந்து
விசன மடைந்தேயான் வேதிய ரேயிருக்க
நேற்றுவந்தால் யானும் நினைத்த படிதருவேன்
பார்த்துவந்தீ ரிச்சமயம் பாவியா னென்செய்வேன்
எந்தனிட மின்னேரம் இருக்கும் பொருளதாய்
உந்தன்மனதுக்கு வுகந்ததை யேகேளும்
இல்லாப் பொருள்கள்தனை எந்தனிடங் கேட்டாலே
பொல்லாதா னாகிடுவேன் பூவுலக மெல்லாமே
இத்தனைநாள் வரையில் ஈய்ந்தான் கருணனும்
இத்ததி யவனுமே இல்லையென் றானவனும்
இவ்வுலக மெல்லாமே எந்தனை யிகழாமல்
அவ்வள வுபகாரம் அந்தணரே நீர்செய்து
இப்போது யெந்தனிட மிருக்கும் பொருள்பார்த்து
தப்பாது கேளுமென்று சாற்றினான் கொடையாளி
இந்த மொழிதனையே எனதைய னுங்கேட்டு
சந்தோஷ மாகத் தான்கேட்பார் கர்ணனிடம்
அரசனே நீர்செய்த அனேகதர்மம் பூராவும்
அரசனே தாவெனவே அந்தமறை யோன்கேட்க
அங்கதே சாதிபனும் ஆனந்த மேகொண்டு
பங்கமது மெண்ணுமல் பகவானுக் கீயவென்று
எண்ணி யகத்திலே இந்தக் கருணனுமே
தண்ணீரைப் பார்க்க தனையனில் லாதபடி
அவன்மேலே தைத்திருக்கும் அம்பைப் பிடுங்கியுமே
அவன்ற னுதிரமதை அள்ளியே கையாலும்
மறையவரை யழைத்தே மன்ன னருகில்வைத்து

தரையரச னச்சமயந் தர்மமதை வார்த்தானே
மாயவனும் வாங்கியே மனமிக வேமகிழ்ந்து
ஆய னெடுத்தான் அளந்த வுருவமதை
கர்ணனைத் தூக்கியே கண்ணன் மடியில்வைத்து
கர்ணனைக் கண்ணீரால் களிப்புடன் நீராட்டி
அங்கதே சாதிபனும் அவர்வடி வைப்பார்த்து
செங்கண்மாலே யரசன் செப்பினன் தோத்திரங்கள்
ஆயனுங் கேட்டே அந்தக் கருணனையும்
நேயனே நீரும் நினைத்த வரங்கேளும்
தருகிறே மென்றே சாற்றிட வேமாயன்
அருமையொடு கர்ணன் ஆயனை யேகேட்டான்
ஆதிநா ராயணனே அச்சுதா அடியனுக்கு
சோதியே யானுமே தொல்புவியி லேழ்பிறப்பும்
பிறந்தாலும் யானும் பிரியமுடன் வந்தவர்க்கு
தரங்கள் தெரிந்தே தானீய்ந்தி டுங்குணமும்
செல்வமு மெந்தனுக்கு தேவே யளிக்கவேண்டும்
நல்ல வரமதையே நாதனே தாவென்றான்
ஐயனுங் கேட்டே அப்படியே தந்தேனென
வையம்புகழ் கர்ணனிடம் வழங்கிச் சிலசேதி
விடையது வாங்கியே வேதாந்தக் கோபாலனும்
தடைகளொன் றில்லாது சல்தியா யோடிவந்து
விசயனிடம் வந்தே விடுவாய் சரத்தையென
விசய னதைக்கேட்டே வேகமாய்ச் சிலைவளைத்து
நல்ல கணைபூட்டி நரனுமே யச்சமயம்
சொல்லியே மந்திரத்தை தூண்டிவிட்டான் வேகமொடு
அதிவேக மாகவே அப்பகழி யோடிவந்து
ததியே கருணனையே தான்மடித்த தேகணையும்
அந்தச் சமயமதில் அவனையே தேவர்களும்

சந்தோஷ மாயழைத்து தான்சேர்த்தார் கள்பதவி
மகனிறந்தா னென்று வருத்த மதைக்கொண்டே
பகவான்மோ சந்தனையே பருதியெண்ணித் துக்கித்தும்
தடதடெனத் தேரை சல்தியாக நடத்தி
குடதிசையில் வெய்யோன் குறுகினன் சஞ்சலமாய்
அறிந்துமே சஞ்சயனும் அஸ்தினு புரஞ்சென்று
தெரிந்ததை யெல்லாஞ் செப்பினு னரசனுக்கு
அரச னதைக்கேட்டே அங்கு மயங்கிவிழ
திரமான நீதிகளுஞ் செப்பினன் சஞ்சயனும்
திரிதராட் டிரன்கேட்டு தேம்பியே யங்கிருக்க
அரிகே சவமுகுந்தன் அருச்சுனன் றன்னேடு
எல்லவருஞ் சேர்ந்து ஏகியே பாசறையும்
நல்ல தருமரிடம் நவின்றூர்கள் சங்கதியும்
பொறுமை மிகவுடையார் புகன்றதை யேகேட்டு
அருமையாய் விசயனையே அவரும் புகழ்ந்திருக்க
இப்படிக் காகவே இவர்களு மிங்கிருக்க
தப்பாய் நடப்போன் சர்ப்பக் கொடியோனிடம்
கர்ண னிறந்ததையே காவலர்கள் மொழிய
கர்ண னிடந்தனிலே கண்ணில்லான் சுதன்வந்து
அரசனை யே தூக்கி அவன்மடி மீதுவைத்து
திரமா யழுதானே செகத்தையாளு மன்னவனும்
அந்தநாளிற் செய்ததையே அரசனு மேமொழிந்து
சிந்தைநொந் தேமயங்கி திடீரெனக் கீழ்விழுந்தும்
அண்ணு கருணு அனுதியாய் யென்னைவிட்டு
மன்னுநீ சென்றூய் வைகுந்த நற்பதிக்கு
என்னைவிட்டுத் தாங்கள் இப்படிச் சென்றதுவும்
மன்னு சரியோவென மயங்கியே கீழ்விழுந்தான்
அப்போது சல்லியனும் அரசன் றனைத்தூக்கி

செப்பிச்சில நீதிகளும் தேற்றினன் மன்னவனை
சல்லியனு மச்சமயம் தானழைத்து மன்னனையுஞ்
சொல்லிய சேனையுடன் சேர்ந்துவந்தார் பாசறையும்
வஞ்சகனு மன்னேர மயங்கியே பாசறையில்
சஞ்சலமா யங்கே தனைய னழுதிருந்தான்

குந்தம்மாதேவி கர்ணனிடம் வந்து
புலம்புவது.

ஆயனுஞ் சென்றே அந்தரந் தன்னில்நின்று
மாய னசரீரியாய் மங்கை யிடம்புகல்வான்
அம்மையே யுந்தன்சுதன் அதிவீரன் கர்ணனுமே
செம்மையாய் விசயன்கணை தீட்டியத னலின்று
அவன்மடிந்தா னென்று அசரீரி யும்மொழிய
தவராம லேகேட்டாள் தையலுங் குந்தியம்மை
மகனே மகனேயென்று மங்கை முகத்தறைந்தும்
மகனையே பார்க்கவென்று மங்கை படுகளமும்
அழுதுமவ ளோடிவந்து அரியசுத னைக்கண்டே
பழுதில்லாத மகனே பார்த்தன் கணையாலே
மடிந்தாயோ பாலாவென்று மகனை யெடுத்தணைத்து
துடித்தே விழுந்தாள் சோம்பியங் கேமயங்கி
ஐயையோ வென்று அம்மை யழுதிடவே
ஐயையோ வென்றதொனி அமர்க்களமெல் லாங்கேட்க
ஐவரிட தூதுவர்கள் அறிந்துமே சங்கதியை
ஐவரிடஞ் சென்றே அடியிற் பணிந்துநிற்க
என்னடா வென்றுமவர் இவனையே கேட்டிடவும்
மன்னவரே யுங்களன்னை மகனென்று கர்ணனையே
அவரிடமே சென்றே அழுகிறு ளம்மையுமே
தவறில்லை யென்று சாற்றினன் தூதுவனும்
தூதர் மொழியவே சோம்பியே பஞ்சவர்கள்

மாதவனே மாயா வழுத்துவா யுண்மையென
பஞ்சவர்கள் கேட்கப் பாரளந்தோ னச்சமயம்
வஞ்சகத்தை யெண்ணியே வழுத்தாம லேயிருக்க.
கண்ணனைக் கூட்டியே காவல ரைவர்களும்
மன்னன் கருணனிடம் வந்தார்கள் சீக்கிரமே
அம்மை தனைப்பார்த்தே அழுதவா றென்னவென
செம்மையாய்ச் சங்கதிகள் செப்பினர் பூராவும்
ஆதி வரலாறும் அவர்க ளிடமொழிந்தே
ஆதிச் சுதனிவனே அருமையான பிள்ளைகளா
எல்லோருக்கு மூத்தவன் இந்தக் கருணனே
சொல்லாது யானிருந்து தோசியாய்ப் போனேனே
என்றுதாயார் மொழிய இதைக்கேட்டுப் பஞ்சவர்கள்
ஒன்றுகச் சேர்ந்தே ஓவென் றலறினர்
அண்ணுவே யுன்மேலே அடியேன் சரம்விடுத்து
மன்னுநா னுந்தனையும் மாபாவி கொன்றேனே
விசயன் கதறியே விளம்ப இவைகளையும்
விசயன் மயங்கிடவும் வேந்தர் நால்வ ரழுதே
அன்னையே நீமுன்னே அறைந்திருந் தால்நாங்கள்
மன்னன் கருணனுக்கு மகுட மதைச்சூட்டி
சென்றிடுவோம் நாங்கள் சீக்கிரங் கானகமே
நன்று யிருந்தாயே நாசக்காரி நீயும்
என்று மொழிந்துமவர் ஏங்கி யழுதிடவே
நின்றிருந்த மாயன் நிமிட மங்குசென்று
அழுதமன்னன் தனக்கு அவன்புகன் றேநீதி
பழுதுவந்த தென்செய்வோம் பாராளு மன்னர்களே
தரையிற் புரண்டே சஞ்சலமா யழுதான்
விரைவாக வங்குநின்ற வேந்தர்கள் தூக்கிடவும்
ஆயனு மப்போது அதிகச்சோக மடக்கி

மாயவன் விசனமொடு மன்னனிடம் புகல்வார்
சொல்லுவதைக் கேளுநந் துக்கிப்பதி லென்னபலன்
நல்லவேளை தன்னில் நாதன் கருணையும்
அடக்கமது செய்வோம் ஐவரே வாருமென்று
திடமான கட்டைகளைச் சேகரித் தேயடக்கி
கர்ணனை யந்நேரம் கட்டையின் மேல்வைத்து
கர்ணனுக்குச் செய்யுங் கருமக் கிரிகையெல்லாம்
தர்மருஞ் செய்தே சல்தியாய்த்தீ யிட்டாரே
கர்ணனின் சடலமது கணப்பொழுதில் நீறாக
ஐவரைக் கூட்டியே ஆயனு மேவந்து
ஐவருந் தானுமே யமுனையில் நீராடி
பாசறை வந்துமவர் பள்ளியங் கேகொள்ள
நேசன் மதவீமன் நினைந்தான் சூரியனையே
இந்தச்செய்தி யதனை இருந்தொரு தூதுவர்கள்
விந்தையொடு சென்று விளம்பினர் சூரியனுக்கு
அந்த மொழிதனையே அரசனு மேகேட்டு
சிந்தை மிகநொந்து செப்புவா னேயரசன்
காடாண்டோர் பஞ்சவர்கள் காவலன் கர்ணனுமே
நாடாண்டு மேயவனும் நல்ல மதிப்படைந்தான்
வெட்டியாய் நம்மன்னர் விருதாகவே மடிந்தார்
கெட்ட மதியாலே கேடுவந்த தென்றழுதான்
அந்த மதவீமன் அருணனை யெண்ணியே
சிந்தையிலே துதித்தான் சீக்கிர மாய்வருக

பதினெட்டாம்நாள் யுத்தம்.

வீமனுள்ள நினைப்பை வெய்யோனுந் தானறிந்து
தாமத மில்லாது சல்தி ரதம்நடத்தி
நாற்றிசை யுந்துதிக்கும் நல்லசோதி யருணன்
கீற்றிசை யாழிதனில் கிளம்பினன் விண்ணேக்கி

பதியரச ரச்சமயம் பகவானை யேகண்டு
ததிகாலைக் கடனைத் தான்முடித் தெல்லோரும்
வஞ்சகத்தை நெஞ்சினிலே வைத்த துரி யோதனனும்
சஞ்சலமே கொண்டு தயங்கி மயங்கியவன்
கொடையாளி தன்னையே கோமானு மேநினைந்து
சடைந்தே யவனிருக்கச் சல்லியனுங் கண்டே
துரியோ தனனுக்குச் சொல்லிச் சிலகதையை
பரிவாகத் தேற்றினன் பாராண்ட மன்னவனை
அப்போ துரியோதனன் ஆசாரி கிருபரையும்
தப்பா தஸ்வத்தாமன் றன்னிட மேமொழிவான்
இன்று நம் சேனைகட்கு இல்லையே சேனுபதி.
இன்று நா மாரையும் ஏற்படுத்த வேண்டுமே
யோசனை செய்து உத்தமரே நீங்களுமே
நேசமா யோதுமென்று நிகழ்த்தின னேமன்னன்
எல்லவருஞ் சேர்ந்து ஏகமா யோசித்தே
நல்லதொரு சல்லியனை நடத்துமென்றார் சேனுபதி
சல்லியனை யழைத்தே தரையரச னச்சமயம்
சொல்லியே சங்கதியை துஷ்டனுடன் யாவர்களும்
சேனுபதிப் பட்டஞ் செய்துமே சீக்கிரத்தில்
சேனைகளுக் கெல்லாஞ் செப்பினர் செய்திகளை
அப்போது சல்லியனும் அணிவகுத்தே படையை
தப்பாது கூட்டிவந்தான் சல்தியுத்த களமும்
ஐவர்களும் வந்தே அணிவகுத் தேபடையை
ஐவர்க ளங்கே அணிமுன்னே நின்றார்கள்
சல்லிய னேடிவந்தே தருமரின் முன்னேயே
சொல்லிவாய் மூடுமுன்னே தொடுத்துவிட் டான்பகழி
முரசக் கொடியோனும் மூன்று கணையேவ
திரமாக வச்சரங்கள் சென்றுமே யங்கேயும்

சல்லியன் கணைதனையே சாடியே துண்டாக்க
சல்லியனும் பார்த்தே சஞ்சலங் கொண்டிருக்க
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமருமே
அருமையான கணையாய் அங்கேவி னர்சிலது
அதிவேக மாய்வந்து அந்தச்சல்லி யன்ரதத்தை
ததியே பொடிப்பொடியாய்த் தான்செய் ததுவேகணை
அஸ்வத்தாமன் வந்தே யவனிடமே யச்சமயம்
அஸ்வத்தாமன் ரதத்தி லவனையே தூக்கிவைத்து
சென்றான் வெளியே சீக்கிர மாகவே
நன்றான கர்ணன்சுதன் நாடியே யங்குவந்தான்
நகுலன்முன் னேவந்து நன்றாகப் பாலனின்றே
நகுலன்மே லேவினன் நல்ல பகழிகளை
அவனுமே கண்டு அச்சமயம் வில்வளைத்து
தவராது விட்டான் தானொரு நூறுசரம்
கருணன் சுதன்தனையுங் கண்ட துண்ட மாக்கிடவே
திருதிரென்ப் பார்த்தே நீட்டிவிட் டான்பகழி
பரிநகுலன் பார்த்தே பத்துக் கணையேவ
அரிகரப்பிர் மாதிக ளஞ்சிட வேவந்து
வேகமா யோடிவந்து வேந்தன் சிறுவனையும்
போகவே வைகுந்தம் போக்கின தேகணையும்
கருணன் சுதன்மடியக் கண்டுதுரி யோதனனும்
கெருவமாய் வந்தான் கிரீடி யிடந்தனிலே
அஸ்வத்தாமன் வந்து அனேக கணையேவ
அஸ்வத்தாமனச்சமய மடிபட்டு மோடினனே
தவறாக வோடுவதைத் தானறிந்து சல்லியனும்
அவனுமே வந்தெதிர்த்தான் அந்தமத வீமனொடு
அந்தப் பலவானும் அவன்வர வைக்கண்டு
விந்தையான கதையை வேந்தன் கரம்பிடித்து

சல்லியன் ரதத்தை தாக்கினு னேகதையால்
சல்லியன் மேனிதனில் தக்க வடிவிழுக
ஓடினன் வேகமதாய் ஒருநொடியி லச்சமயம்
சாடினன் பீமனும் தக்க பெரும்படையை
அரவக்கொடி யோன்படைக ளடிபடு தங்கேயும்
திரமான மன்னரெல்லாஞ் சீக்கிரத்தி லேமடிந்தார்
ஆனைகளை பீமன் அடிக்குரன் தப்பாமல்
ஆனைகள் வெகுகோடி அலறி மடிந்திடவும்
சாத்தகியும் வந்தே தக்கபெருஞ் சேனைகளை
ஆத்திரங் கொண்டே அறுத்தானே பாதிவரை
அரவக்கொடி யோன்படையை அன்றுமுக்கால் வரையில்
சிரசை யறுத்தே தீர்த்திட்டா ரைவர்களும்
மிச்சமுள்ள படைகள் மிக்கதுன் பம்அடைந்து
அச்சமுடன் படைக ளவரெடுத் தாரோட்டம்
ஆசாரி கிருபரும் அறிந்துமே சங்கதியை
பாச முடனேயவர் படைகளுக்கு முன்புவந்தே
வேண்டுந் தைரியத்தை விளம்பியே சேனைகட்கு
தாண்டியவர் வந்தெதிர்த்தார் தக்க விசயனுடன்
வில்லை வளைத்தே வேதியன் கணைதொடுத்து
தொல்லை விளைக்கவே தாண்டிவிட் டானங்கே
விசயன்மே லக்கணைகள் வேகமாய் வந்திடவே
விசயனதைப் பார்த்தே விட்டான் வெகுசரங்கள்
எதிரி கணைதனை இரண்டுதுண்டாய்ச் செய்துமே
அதிவிரைவாய் வந்தது அர்ச்சுனன் றன்னிடத்தில்
பார்த்தனுங் கண்டே பத்துக் கணையேவ
ஆத்திரமாய் வந்தே அங்கு கிருபரையும்
சல்லடைக் கண்ணகத் தான்துளைக் கக்கிருபர்
தொல்லை யடைந்துமே சொல்லாம லோடினர்

அப்போ விசயன் அடித்தானே சேனைகளை
தப்பாது பட்டே தான்மடிந்தார் சிலபேர்
ஐயையோ வென்றே அலறுதே பாளையமும்
ஐயையோ வென்றசெய்தி அறிந்துமே சல்லியனும்
சேனைக ளிடந்தனிலே சென்றுமே சீக்கிரத்தில்
சேனைகள் யாவருக்குஞ் செப்பித் தைரியத்தை
எல்லவருஞ் சேர்ந்தே எதிர்த்து விசயன்மேல்
பொல்லாப் பகழிகளைப் பூட்டிவிட்டார் பாவிகள்
தர்ம ரதைப்பார்த்தே சல்தி கணையேவ
தர்மர்விட்ட கணையுஞ் சல்லியன் றன்சிரத்தை
வெட்டி யெறிந்திடவே வீரசொர்க்கஞ் சேரவும்
மட்டி துரியோதனனும் மயங்கி விழுந்தானே
சூதுபுகட் டுஞ்சகுனி துடியாக வோடிவந்து
தீது வடைந்திருக்கும் திரியனை யே தூக்கி
உபசாரஞ் செய்தே யுரிமையொடு சகுனி
தவராது வேந்தனுக்கு தைரியங் கள்மொழிவான்
மருமகனே யானும் மன்னவ ரைவரையும்
திருத்தமாய்ச் சிரமதனை சீக்கிர மாயறுத்து
தருவேனு னிப்போது தயாபரா வஞ்சாதே
கருவை யறுத்திடுவேன் காவல ரைவரையும்
இன்னுஞ்சண நேரமதி லிதைமுடிப்பேன் தப்பாது
மன்னவனே யென்சமர்த்து வல்லபம் பூராவும்
காட்டிடுவே னின்றே காவலா நீர்பார்க்க
மாட்டிக் கணையதனை மன்னவரை யான்மடிப்பேன்
சஞ்சலம் வேண்டாம் தயாபரா நீங்குமென
வஞ்சக மாமனும் வழுத்தவே சங்கதியும்
அரசன் கனைதெளிந்தே அம்மானை யும்புகழ்ந்து
திரமு மவன்மொழிந்தே சீக்கிரஞ் செல்லென்றான்

சல்லியன் சேனையிடஞ் சகுனியு மோடிவந்து
சொல்லித் தைரியமுஞ் சூழ்ந்தான் சகுனியையும்
விசய னுங் கண்டே வேகமா யங்குவந்து
விசயன் தொடுத்தே வேண்டிய கணையேவ
ஆலகாலம் போலவே அப்பகழி யோடிவந்து
காலனைப் போலவே கணைகளும் பாய்ந்திடவே
சொல்லி முடியாது சோம்பியே மாளும்விதம்
மீத மிருந்தோர்கள் விசன மதில்மூழ்கி
காத வழிதூரங் காலால்க ளோடினரே
சகுனியுங் கண்டே சல்தியா யோடிவந்து
சகுனி மறித்தே சனத்தையெல் லாமங்கு
சங்கதியை மொழிந்தே சல்தியா கத்திருப்பி
சிங்கம்போ லும் வந்தான் சிலையெடுத்துப் போர்புரிய
இளைய சகாதேவன் எண்ணியே யோடிவர
இளையோன் வருவதையே இருந்ததர்மர் பார்த்து
தம்பியரே நீயுஞ் சபதமிட்ட படியே
வெம்பிடச் சகுனிதனை விரைவில் மடிப்பாயென
என்றுதர்மர் மொழிய இதைக்கேட்டு மேநல்லு
தென்று சகாதேவன் எண்ணியே யங்குவர
அப்போ சகுனியும் அவன்வா ரதுமறிந்து
தப்பாது விட்டான் தானொரு நூறுகணை
அந்தச் சகாதேவன் அவன்சிலை யைவளைத்து
சந்தோஷமாய்த் தொடுத்தே தானேவி னான்பகழி
வந்தகணை யெல்லாம் வாட்டியே ரெண்டாக
நொந்தே சகுனி நூறேவினான் சரமும்
அறுத்துச் சகாதேவன் அத்தனை பகழிகளை
பொருத்த மதுபார்த்தே பூட்டிவிட் டானம்பு

அதிவேக மாகவந்து அந்தச் சகுனிதனை
ததியே சிரமறுத்துத் தள்ளினது கீழ்விழுக
அவ்னுமே சென்ருன் அந்தர சொர்க்கமது
அவன்சுத னுலூகனும் அறிந்துமே சங்கதியை
அதிக விசனமது அடைந்து தெளிந்தவனும்
ததியேவந்து மெதிர்த்தான் சகாதேவன் றன்ேனாடு
அள்ளிவிட் டான்கணையே அனேகநூறு வரையில்
தள்ளி வருகுவதைச் சாஸ்திர வான்பார்த்து
தொடுத்துப் பகழிதனைச் சொல்லி யுபதேசம்
விடுத்தானே யந்த வேந்தன்மேல் தப்பாது
ஓங்கிக் கணைவந்தே உலூகன் சிரமதனை
ஓங்கியே வெட்டிடவே யுயிர்விட்டா னேயவனும்
அப்பால் சகாதேவன் அறுத்தானே சேனைகளை
தப்பாமல் மாண்டாரே சல்தி வெகுபேர்கள்
அப்பா லொருபுறத்தில் அந்ததுஷ்டத் தூய்மனுக்கும்
தப்பன் துரியனுக்கும் தான்மூண்ட தேபோரு
துஷ்டத் தூய்மனங்கு தூண்டிவிட் டான்பகழி
கஷ்ட மிகப்பட்டான் காவலன் துரியனுமே
அம்புகள் தைத்திடவும் அவனுமே கத்தியே
வம்புகளை விளைத்தோன் வழியில்லா தோடினன்
ஓடி யரசனுமே ஒருகுளத் ஊதக்கண்டே
நாடிக் கரையிருந்து நல்யோ சனைசெய்தான்
அந்தநாளில் கற்றிருக்கும் அருமையான விஞ்சைதனை
இந்தவேளை யேசெபித்தால் எல்லோரு மேபிழைப்பார்
என்று துரியோதனன் எண்ணியே சிந்தையிலே
நன்றுயிவ் வேளையென்றும் நடந்தானே பொய்கையுள்ளே
ஆசாரி கிருபருடன் அஸ்வத்தா மனுமங்கு
வேசாரி யாயவர்கள் விசயனுக் கேபயந்தே

அங்குமே வந்தே அரசனை யேகண்டு
எங்கோனே யென்றே இரைந்தே யழுதிடவும்
வஞ்சகனுங் கண்டே வந்தா னவர்களிடம்
சஞ்சலங்கள் கொண்டே தான்புகல்வார் மன்னனுக்கு
வணங்கா முடியோனே வழுத்துவ தைக்கேளும்
வனங்களெல்லாந் தேடினோம் மன்னவனே யும்மையும்
இப்போது நாங்கள் ஏகிச் சமர்க்களத்தில்
தப்பாலே மடிப்போம் தனஞ்செய ரைவரையும்
வாருமென்று மழைத்தார் மன்னன் றுரியனையும்
வாருமென் றழைத்தோர்க்கு வழுத்துவான் சங்கதியும்
ஐயோயென் மேற்பாரும் அம்புபட்ட காயமதை
செய்யுதே வேதனைகள் தேகமெல்லாம் புண்ணாக்கி
என்னுடைய யோசனையை எடுத்துரைப் பேன்கேளும்
நன்னயமாய்ச் செயிப்பேன் நல்லவிஞ்சை மந்திரத்தை
தண்ணீரி லுள்ளிருந்து சரியாக நான்செபித்தே
மன்னர் படைகள்தனை மறுபிறப் பாயுயிரும்
எழுப்பியே யானுமே இன்றுவிட்டே நாளைக்கு
வெளுத்துமே பஞ்சவரை வீரசொர்க்கஞ் சேர்த்திடுவேன்
என்னுடைய யோசனையும் இதுதானே நீரறியும்
மன்னர்கள் காணுமுன்னே மறைந்திடு வீர்நீங்கள்
செல்லுங்க ளென்று செப்ப யிருவருமே
சொல்லவே கேட்டார் சுருக்காய் மறைந்தார்கள்
அப்போ தரசன் அந்தத் தடாகமதில்
தப்பாது சென்றே தண்ணீரி லுள்ளேயும்
நவத்துவார மடைத்தே ராசனு மச்சயயம்
பவநா சனையெண்ணிப் பண்ணுகிறான் விஞ்சையது
அருமையான தவத்தை அரசனு மேசெய்து
அரைகுறைக ளாகவே அவனிருக்கின் றானங்கே

பஞ்சவர்க ளைவரும் பகவா னு மப்போ து
வஞ்சகன் றுரியனையே மடித்திட வெண்ணியே
தேடினு ரங்கேயுந் துரியனைக் காணுமல்
வாடி மனஞ்சடைந்து மறுபடியுந் தேடினுர்
படுகள மெல்லாமே பார்த்துமே பீம னும்
நடுவேயும் வந்தே நல்ல பலவா னும்
பிணங்களை யெல்லாம் புரட்டி யவன்பார்த்து
மனமுங் கலங்கினுன் மன்னனைக்கா ணுதபடி
ஆயனிடம் வந்தே அரசனைக் காணேனென
மாய னதைக்கேட்டு மனவருத்த முடனே
ஐவ ருடனேயவர் ஆலோ சனைபுரிய
ஐவருட வேடுவ னும் அறி ந்துமே சங்கதியை
வீம னவ னுக்கு மிகுந்த சினேகமதால்
வீம னிடத்தினிலே வேடுவ னும் வந்து
துரிய னிருக்குமிடஞ் சொல்லினுன் வேடுவ னும்
அறிந்துமே கொண்டே அந்த மதவீமன்
அண்ண னிடம்வந்தும் அறைந்தானே சங்கதியும்
மன்னவருங் கேட்டு மகிழ்ந்துமே வேட னுக்கு
வருசையிவர் கொடுக்க வாங்கிநடந் தான்வேடன்
அறுபட்ட பிணங்களெல்லாம் அங்கும் நகர்ந்ததுவே
ஆய னுங் கண்டுமதை அதிகமோசம் வந்துதென்றே
மாயன் மொழிய மன்னவர் யென்னவென்ருர்
அரவக் கொடியோ னும் அக்கங்கை யி னுள்ளே
திரமான மந்திரத்தைச் செபிக்கிரு னிச்சமயம்
இன் னுஞ்சண நேரமதில் எழும்பும்படை பூராவும்
மன்னவரும் பிழைப்பார் மகாமோசம் வந்ததுவே
செல்லவேண்டும் நாமுஞ் சீக்கிர ந் தன்னிலே
சொல்லவே கேட்டார்கள் சுருக்காய்ப் பயணமானுர்

யுத்தகள மெல்லாம் ஒருநொடியில் தாண்டியே
மெத்தவேக மாய்வந்தார் வேந்தர் குளக்கரையும்
வந்துமே பார்த்தும் வம்பனைக் காணாது
நொந்துமே மாயவனும் நோக்கியே பாண்டவரை
ஆயன்யோ சனைசெய்து அவ்வீமனை யழைத்தே
மாயன் மொழிவான் மைத்துனன் றன்னிடத்தில்
இந்தக்கங்கைக் குள்ளேஇருக்கின்றா னென்னெதிரி
இந்தவேளை யவனை இழுத்துவா வீமா நீ
என்றுமாயன் மொழிய இதைக்கேட்டு பீமனும்
நன்றாய்க் கதைபிடித்து நடந்தானே சீக்கிரமும்
சங்கையில் லாதபடி தானேவி யேபலவான்
கங்கையினுள் ளிறங்கி கதையா லடித்துமவன்
பஞ்சு பஞ்சாய்க் குளத்தை பறக்கடித்து மேபலவான்
வஞ்சகன் றன்னையுமே மயக்கியே யிப்பாவி
வாடா வெளியேயென்று மதவீ மனுமங்கே
ஏடாகூட மாக எண்ணியெண்ணித் திட்டிடவும்
துரியோ தனனுந் துடியன்சொல் லைக்கேட்டு
கரியர சனுமே கவலையது கொண்டே
செபங்களெல் லாம்விட்டு சிந்தைநொந் தேயரசன்
அபகீர்த்தி யை நினைந்து அவன்வெளியே வந்திடவும்
தர்மரு மப்போது சாற்றுவா ரேசெய்தி
விற்கையில் பூண்டா நீ வேந்த சமர்த்தாக
அரசனாய் நீபிறந்தே அமர்செய்ய வும்பயந்து
திரமோடு தின்றுமே செய்யாமல் யுத்தமது
ஏண்டாபோர்க் குப்பயந்து இங்குவந் தேயொளிந்தாய்
சண்டாளா வாடாவெனத் தர்ம ரழைக்கவுமே
வணங்கா முடிமன்னன் மயங்கியே தான்புகல்வான்
பிணக்கான வார்த்தைதனைப் பேசா தடா நீயும்

பயந்துவர வில்லையான் பாரு கணையாலே
வியப்படைந் தேயானும் வேகமா யிங்குவந்து
சிரமப் பரிகாரஞ் செய்துகொண்டு யிருக்க
கிரமந்தப்பி வைதீர்கள் கெட்டிடுவீர் சீக்கிரத்தில்
பதினொரு வக்ரோணி படையெல்லாம் பூராவும்
பதினெட்டு நாளையிலே பாவிக ளாமடித்தீர்
இப்பத் தனியாக இருக்கின்றே னெண்டியாய்
தப்பாக வென்னிடமே சண்டைசெய்ய வந்தீர்கள்
ஐந்துபேரும் வந்திருக்கீர் அமரது செய்திடவே
வந்திடுவீ ரேயொருவர் வண்போர்கள் செய்திடவே
என்று மொழிய ஏந்தல் துரியோதனன்
நன்றெனவே சம்மதித்தார் நல்ல தருமருமே
மன்னன் துரியோதனன் மயங்கி வெளியேறி
பின்னம் நினைந்துமவன் பின்னும் மனந்தேறி
அப்போ பலராமர் அறிந்துமே சங்கதியை
தப்பாமல் வந்தார் தரையரசன் முன்னேயே
ஐவருங் கண்டே அவரைப் பணிந்து நிற்க
ஐவர் தனக்குமே ஆசீர் வதித்திடவும்
தர்மர் மொழிந்தார் சங்கதி பூராவும்
தர்ம ருரைக்கவே தான்கேட் டவரிருக்க
நல்ல சமயமதில் நாதாவே வந்தீரே
எல்லாந் தெரிந்தவர் இங்குவந் தீர்நலமே
இப்ப நடக்கும் யுத்தம் எல்லாமே நீர்பார்த்து
தப்புகளில் லாதபடி தானுரைப்பீர் ஞாயமதை
மத்திச மாகவே மன்னனை வைத்திடவும்
அத்ததி கேட்பான் அரவக் கொடியோனும்
என்னிடத்தி லிச்சமயம் இல்லையே வில்லதுவும்
என்னிட மிருப்பதுவும் இந்தக் கதாயுதமே

கதாயுத யுத்தமது காவலரே செய்வோமென
பதரு துரைத்தான் பாவிதுரி யோதனனும்
நல்லதென்று சம்மதித்து நடந்தார்கள் வேறிடமும்
மெள்ள நடந்தானே வேந்தன் துரி யோதனனும்
வணங்கா முடியோனே மன்னர் தர்மர்பார்த்தே
மனமுஞ் சகியாதபடி மன்னன்வேக மாய்வந்து
பொறுமையே பூஷணமாய்ப் பூண்ட தருமருமே
அருமையுட னேயவர் அவன்கரத் தைப்பிடித்து
தம்பியரே நீயும் தரையில் நடப்பதினுல்
வெம்பிடுமே மேனியது வேந்தனே ரதமேறு
அப்பனே வாவென்று அழைத்தார் தருமருமே
தப்ப னதைக்கேட்டே சங்கதியும் புகல்வான்
எந்தனுக் கிருந்ததுவோ எத்தனையோ கோடிரதம்
அந்த ரதத்தையெல்லாம் அதமாக்கி விட்டீர்கள்
உந்தன் ரதத்திலேயான் ஒருக்காலு மேறேனே
வந்திடுவே னடந்து வருகுவீர் பின்னுலே
என்று மொழிந்தே ஏகிநடந் தானரசன்
நன்றான தருமர் நலிந்தாரவ னேப்பார்த்து
தன்ரதத்தி லேறி தான்வந்தா ரங்கேயும்
மன்னன்வீமன் வந்தான் மகாசமர்த் தாகவுமே
யுத்தஞ்செய்யு மிடமே ஒருநொடியி லேவந்து
அத்ததி கேட்பான் அரவக் கொடியோனும்
என்னுடன் யுத்தமது எவர்செய்ய வாரீரென
மன்னனந்த பீமன் மகிழ்ந்துமே யானென்றுன்
இருவரும் நேர்நின்று எடுத்தார் கதாயுதம்
தருமரதைப்பார்த்து சஞ்சல மிகவாகி
அரவக் கொடியனிடம் அவர்வந்து மச்சமயம்
திரமான புத்தியை செப்புவார் பாவியிடம்

தம்பியரே கேளாய் தயவாயென் வாக்கியமும்
நம்பியே கேளரசே நல்ல துரைப்பேனே
எல்லா மடிந்தார்கள் இருக்கின்றாய் நீயொருத்தன்
சொல்கிறதைக் கேட்பாய் துரியோ தனனேநீ
அரசனே யுந்தனுக்கு அளிப்பேன் கிரீடமதை
அரசனே யாண்டிடுவாய் ஐம்பத்தார் தேசமதை
உந்தனுக்கு நாங்களைவர் ஊழியஞ் செய்திடுவோம்
சந்தேக மில்லையிதில் சாமியே யிச்சமயம்
வந்திடு வாயென்றே வருந்தி யழைத்திடவும்
அந்தகன் சுதன்கேட்டே அறைகுவா னேபதிலும்
நானுமே வந்தாலே நகைத்திடுவார் தேவர்கள்
நானும் வரமாட்டேன் நல்லயுத்தஞ் செய்வேனென்றான்
வீமனும் வந்தே வேகமாய் முன்னே நிற்க
வீமனைக் கண்டவுடன் வேந்தன் றுரியனுக்கு
கோபங்கள் கொண்டே குதித்துவந் தேயடிக்க
மாபலன் பீமனும் வண்கதை யாலதையும்
தட்டியே விட்டுமே தன்னுட கதையாலே
மட்டி யரசன்மேல் மடையனடி பட்டிடவும்
அரவக் கொடியோனும் அதிவேக மாகவுமே
திரமாய்க் கதையாலே தீட்டினான் பீமனையும்
அந்த வடிபடவே அவனுங் குருதிகக்கி
சிந்தைநொந்து வீமன் திகைத்துமே நின்றிடவும்
வாயிலும் மூக்கிலும் வாரிதிபோல் ரத்தம்வர
பாயு மடிதனையும் பார்க்காது பீமனும்
கொக்கரித்தே பீமன் கோபமொடு வடித்தான்
மிக்க வடியுமே வேந்தன்முடி மேற்படவும்
அவனடி வாங்கியு மப்பாலு மோடிவந்தே
தவரா தடித்தான் தடிபீமன் றன்மேலே

இருவர்கள் சண்டையும் ஏகநேரம் வரையில்
கெருவமாய்ச் செய்தார்கள் கிலேசமில் லாதபடி
வீமன் றனக்குமே மிகுந்தகளை வந்திடவும்
வீமன் களைத்தே வீரமெல்லாம் விட்டானே
அப்போ வருச்சுனனும் அண்ணன் றனைப்பார்த்து
தப்பாது வீமனுமே சல்தி மடிவானென
என்று மொழிந்துமவன் ஏங்கி யழுதிடவும்
நன்ருக மாயவனும் நவிலுவார் விசயனுக்கு
அழுகாதே மன்னு அண்ணனுக் கொன்றுமிலை
பழுதுமே வந்திடாது பார்த்திபா பயம்வேண்டாம்
இன்னும் பலவிதத்தை எடுத்தோதி மாயவரும்
மன்னன் விசயன் மயக்க மதைத்தீர்க்க
அப்போ விசயன் ஆயரை யேகேட்பான்
தப்பாது வீமன் சாவானு வெனப்புகன்ருன்
கண்ணனதைக்கேட்டு காண்டீப னுக்குரைப்பார்
மன்னு விசயா வழுத்துவ தைக்கேளும்
அந்தநாளில் வீமன் அறைந்த சபதமதை
இந்தவேளை யவனும் எண்ணவில்லை யேதுடியன்
தொடையி லடித்துமே துரியனை மடிப்பேனென்ருன்
மடையன் மறந்தானே மன்னு வதுதனையும்
கண்டத்துக்கு மேலே கதாயுதச் சண்டைசெய்து
துண்டா யுடைக்கவுஞ் சொல்லுது சாஸ்திரத்தில்
தப்பாய்க்கீ முடிப்பதும் சாஸ்திரவி ரோதமது
அப்போது பீமன் அடிப்பேன் தொடையிலென்று
செப்பிய சபதப்படி செய்தாலு மிப்பவும்
தப்பித மில்லையதில் தனஞ்செய னேகேளும்
தடிய னிடஞ்சென்று சாடைசெய் வாய்நீயும்
நொடியிலே செல்லென்ருர் நோக்கி விசயனையும்

அப்போ துரியனும் அந்தமத பீமனும்
செப்பவொண்ணு யுத்தமது செய்தார்க ளன்னேரம்
துரியனுங் கேட்பான் துடிவீமன் றன்னிடத்தில்
அறியவே நீபுகல்வாய் அன்பா யுயிர்நிலையை
வேந்தனுங் கேட்கவே வீமனு மேமொழிவான்
எந்தனுக் குயிர்நிலையும் இருக்கு சிரமதிலே
உந்தனுக்கு யெங்கே ஓதுவா யென்றிடவும்
எந்தனுக்குஞ் சிரத்தி லென்றானே வஞ்சகனும்
அப்போது வீமன் அடித்தான் சிரமதிலே
தப்பாது பட்டிடவுஞ் சல்திதுரி யோதனனும்
அடித்தானே பீமனை அண்டந் திறந்திடவே
துடித்தே விழுந்துபீமன் சோம்பியவ னெழுந்திடவும்
அருச்சுன னப்போது அண்ணனிடம் வந்துமே
திருத்தமாய்த் தன்தொடையில் சிலைவிசயன் தட்டிடவும்
வீமனுங் கண்டே வேந்தன் சந்தோஷமொடு
வீமன் கோபங் கொண்டு விரைவாய்த் துரியனையும்
அடித்தான் தொடையில் அண்டர்கள் தான்பார்க்க
துடித்தே துரியன் சோம்பியே கீழ்விழுந்தான்
அப்போ பலராமர் அறிந்துமே சங்கதியை
தப்பாக வீமனுமே தானடித்தான் இப்போது
ஐவரில் வீமனும் அனியாய மாயடித்தான்
ஐவர்களை யானும் அடியோடு கொல்வேனென
என்று மவர்மொழிந்தே எடுத்துக் கலப்பைதனை
இன்று கவிழ்த்திடுவேன் என்றுசொல்லி மாட்டினனே
மாயனுங் கண்டே மன்னன் கரம்பிடித்து
ஆயன் மொழிவான் அண்ணன் றனக்குமே
அண்ணவே கோபமதை அமருவீ ரிப்போது
முன்னாளில் வீமன் மொழிந்த சபதம்போல்

துடையி லடிப்பேனெனச் சொல்லி நானேசபையில்
தடையில்லை வாக்கியமே சகலருக் குந்தெரியும்
அந்தப் படிசெய்தான் அதிலொன் றுந் தோஷமில்லை
இந்தவேளை நீரும் ஏகுவாய் நம்மூர்க்கு
என் றுமே மாயன் எடுத்தோதச் சங்கதியும்
நன்ருகக் கேட்டே நடந்தாரே சீக்கிரத்தில்
அப்போது வீமன் அரசன் றுரியனையும்
தப்பாய் மகுடமதைத் தானுதைத்தா னேகாலால்
தருமரும் பார்த்தார் தடிய னுதைத்ததையும்
தருமருக்குக் கோபந் தக்கபடி வந்திடவே
வணங்கா முடிமன்னனை மடையா வுதைத்தாயே
கணப்பொழுதி னுந்தனை கண்டிப்பேன் சிரமதனை
வில்லை வளைத்தே வேகமாய் வந்துநின் று
வல்லவனே யுத்தஞ்செய்ய வாடா நீ தப்பாது
கொண்டுமே கோபமது கோர்த்தார் பாணமதை
கண்டுமே மாயவனுங் கரத்தைவந் தேபிடித்து
மாயவன் தர்மருக்கு வழுத்தினுர் சிலநீதி
ஆயன் மொழிகேட்டு அடக்கினுர் கோபமதை
ஐவர்கள் தன்னிடமே ஆயன் புகன் றுமே
பையவே செல்வோம் பாசறை தனக்கேநாம்
பாசறை வந்திடவும் பருதியு மேபார்த்து
நேசர்களைவரையும் நின் றுவாழ்த்தி வெய்யோனும்
சென்ருனே மேல்கடலும் சீக்கிர மாகவுமே
நன்ருன பஞ்சவரும் நந்தகோன் றன்சுதனும்
மாலைக் கடன்முடித்து மன்னவ ரங்கிருக்க
வேளையே மாயவனும் விளம்புவான் தர்மரிடம்
மன்னவனே மேற்படையும் வந்திடுந் தப்பாது
என்னுடனே வாருமென் றியம்பினுர் மாயவரும்

அப்போது தருமர் ஆய னிடம்புகல்வார்
இப்போது விங்குமே இருக்கின்ருர் வெகுவரசர்
அவர்களை விட்டு ஆயனேநாம் செல்லுவது
தவருய் முடியுஞ் சாமியே வரமாட்டேன்
என்றுமே மாயன் இயம்பியதோர் சங்கதியை
நன்ருகக் கேட்டே நந்தகோன் றன்சுதனும்
நம்முடைய வுயிரை நாதனே தப்பித்து
வெம்பாது காப்போம் வேந்தர்கள் யாவரையும்
செல்லுவோம் வாருமென்று சீக்கிர மேயெழுந்தே
நல்ல துரோபதையும் நாதனது தம்பியுடன்
அழைத்துமே வந்து அங்கோ ரிடத்தில்வைத்து
களைக்காது நடந்துமவர் காட்டகத்தில் வந்துமே
அங்கோ ரிடத்தி லமர்ந்திருக்க வெல்லோரும்
பங்கமில் லாமாயன் பத்திரமாய்க் காத்திருக்க
அப்போது சஞ்சயனும் அஸ்தினுபுரி சென்று
செப்பினுன் சங்கதியைத் திரிதராட் டிரனிடமே
மகனை நினைந்துமன்னன் மண்டை தனிலடித்து
மகனே மகனேயென்று மண்ணிற் புரண்டுமவன்
அந்தகன் கத்திடவே அவன்மனைவி யுங்கேட்டு
சிந்தை கலங்கிமாது தேம்பிப் புரண்டழுக
சஞ்சயனு மவர்க்கு சாற்றச் சில நீதி
சஞ்சலத் தோடுமே தானிருந்தா ரங்கேயும்

அஸ்வத்தாமன் துரியோதனனிடஞ்
சேனபதிப்பட்டம் பெறுவது.

ஆசாரி கிருபருமே அந்தவஸ்வத் தாமாவும்
வேசாரிச் சென்ருேர் விசாரித்தே சங்கதியை
அப்போ தொருவேடன் அவர்க ளிடம்புகல்வான்
இப்போ துரியோதனன் இறக்குஞ் சமயமென

துடையிலடி பட்டுமவர் சோம்பி விழுந்தாரே
தடையில்லை யேயதிலுஞ் சல்தியாய்ச் செல்லுமென்றான்
அவன்மொழியைக் கேட்டே அஸ்வத்தா மன்கிருபர்
அவஸ்தையெல் லாம்போக்கி அரச னிடம்வந்தே
அரசனையும் பார்த்தே அழுதா ரிருவர்களும்
அரசனுங் கூடவே ஆவென்று சத்தமிட
அப்போவஸ்வத் தாமன் அரச னிடம்கேட்பான்
அப்போது யெந்தனுக்கு அளிக்கவில்லை சேனுபதி
அதினாலே தானேமன்னா ஆபத்து வந்ததிப்போ
பதியாச ரைவரையும் பாரு நிமிடமதில்
அறுப்பேன் சிரசையே அரசனே யுண்மையிது
விருத்தமில்லை யானுமே விளம்பின சங்கதியும்
இப்போது கட்டுமன்னா எனக்குமே சேனுபதி
தப்பாம லைவரையுஞ் சல்தி மடித்திடுவேன்
என்றுமவன் புகன்றே இராசனைக் கேட்டிடவும்
நன்றாகக் கேட்டே நல்லதுரி யோதனனும்
சேனு பதியாகச் செய்யவர சன்நினைந்து
சேனுபதிப் பட்டஞ் செய்தானஸ்வத் தாமனுக்கு
அப்போவஸ்வத் தாமன் அரச னிடம்விடையும்
தப்பாமல் வாங்கி சல்தியைவர் பாசறையே
வேகமாய் வந்தான் வீரமது கொண்டே
போகவே பாசறையும் புதுமையொன் றங்கேயே
பெரும்பூத மொன்று பெரியபடை கைக்கொண்டு
கருவமாய் நிற்கவே களைத்தானஸ் வத்தாமன்
அங்கேயே நின்று அவனுமே யோசித்து
பங்கஞ்செய்ய வெண்ணிப் பாரவில்லை வளைத்து
தொடுத்துக் கணையைச் சொல்லி யுபதேசம்
விடுத்தானே யந்த வேதியன் பூதத்தின்மேல்

கணைகள் வருவதையுங் கண்டு பெரும்பூதம்
கணைகள் தவராது கவளீகரஞ் செய்திடவும்
பார்த்துவஸ் வத்தாமன் பகழிநூறு தொடுத்து
வேர்த்துமே வேதியனும் விட்டானே பூதத்தின்மேல்
அந்தக் கணைகளுமே அதிவேக மாய்வருக
விந்தையான பூதமது விழுங்கவே யத்தனையும்
ஆலோசனை செய்து அஸ்வத்தாம னப்போது
ஆலமுண்ட கண்டனே அவதாரப் பூதமிது
இந்தப்பூத மதனை இப்போது சூழ்ச்சியதாய்
சந்தோஷ மடைந்திடவே சல்தி பணிந்திடுவோம்
என்றுமவன் யோசனைகள் எண்ணி யகத்தினிலே
நன்ருய்ப் பணிந்தான் நல்லதொரு பூதமதை
அத்தன் மகிழ்ந்தே அவனிடமே புகல்வார்
மெத்த விசனமதை விட்டிடு யென்சுதனே
மாயவனு மென்னை வரமொன்று தான்கேட்க
ஆயனுக்கு யானும் அளித்தேன் வரந்தனையும்
பதினெட்டு நாளும் படைவீட்டைக் காத்திருந்தேன்
பதியே யெனக்கும் பாங்கான கயிலைமலை
என்பேர் கயிலாயன் என்று மொழிவார்கள்
என்சுதனே நீயும் இத்தனை கணைவரையில்
விட்டாயே பாலா வெகுசந்தோஷ மெனக்கு
கட்டழகா வுனக்குங் கைப்படை யையயானும்
தருகுவேன் யானும் தக்கபல வானேயென
திருத்தமொடு புகல்வான் தேவர் பணிவோனும்
இன்றுராத் திரிமுழுதும் இப்படை யாலே நீ
கொன்றிட வெகுபெயரைக் கொடுத்தேன் வரமுனக்கு
விடிந்தாற் பலியாது வேதியனே யிவ்வரமும்
விடியும்முன் வதைப்பாயென விளம்பிச் செகதீசன்

அசுவத்தாம னிடத்தில் அவர்கைப் படைகொடுத்து
பசுபதியுஞ் சென்றார் பாங்கான கயிலைமலை
அப்போவஸ் வத்தாமன் அவர்படை யைவாங்கி
தப்பாம லைவரையுந் தான்மடிக்க வெண்ணியவன்
கிருதவர் மாவோடு கிருபாசாரி தனையும்
அருகாக வைத்தான் அப்பா சறைவழியில்
வெளியே வருவோரை வெட்டுங்க ளென்றுரைத்து
பழிகாரன் சென்றான் பாசறைக் குள்ளேயும்
தங்காது வெட்டுகிறான் தன்கைப் படையதனால்
அங்குள்ள மன்னர்களை அறுத்தான் சிரமதனை
துஷ்டத்தூய் மன்றன்னை துடியனு மேபிடித்து
கஷ்டமிகச் செய்தே கத்தியால் வெட்டியே
அவன்சிரத்தை யறுத்து அப்பா லெறிந்துவிட்டு
தவராது வெட்டுகிறான் சல்தியாய் மன்னர்களை
பாசறையிற் கூச்சல் பலமாக வுண்டாக
பாசறையி லுள்ளோர் பாய்ந்து வெளியில்வர
இங்கிருந்த இருவர் ஏகப்பேரை வெட்டவே
சங்கம் படைகளைத் தான்தீர்த்திட் டார்பாவி
இளம்பஞ்ச பாண்டவரை இந்தவஸ் வத்தாமன்
கலகம் விளைத்துமவன் கண்டித் தவர்சிரத்தை
பாலகரை மடிக்கப் பாவியஸ் வத்தாமன்
காலன்வந்தே யவரைக் கட்டியே சென்றானே
ஒருவக்ரோணி படையும் உள்ளகுஞ்ச ரம்பரியும்
மறுகொருத்த ரில்லாமல் மடித்திட்டான் சீக்கிரத்தில்
சிறுவர்கள் சிரமதனை சீக்கிரங் கைப்பிடித்து
வருகிறார் மூவர்களும் வழிபாதை யேதொடர்ந்து
அரவக் கொடிமன்னன் அலறிப் புலம்பியே
காடி புலிகளும் காவலனை யுண்ணவா

விரட்ட முடியாது வேந்தன் துரியோதனன்
முரட்டுத் தனமாக மூடனுங் கத்துகிருன்
அந்தச்சத்தங் கேட்டே அழுதுவந் தேமூவர்
சொந்த வரசனிடஞ் சுருக்காக வோடிவந்து
நரிகள் புலிகளது ராசனைப் பாயாது
தெறித்துமே பாணமதால் தீர்த்துவிட் டப்பாலும்
அப்போவஸ் வத்தாமன் ஐவர் சிரமதனை
தப்பாலே வைத்தான் தனதரசன் முன்னாலே
துரியோ தனன்பார்த்து சோம்பி மிகவழுது
அறிய மொழிவான் அஸ்வத்தாம னிடமே
ஏண்டா மூழுமூடா இப்பிள்ளை யைவதைத்தாய்
பாண்டவர்க ளிளையோர் படுபாவி யென்னசெய்தார்
எந்தன் குழந்தைகளும் என்வம்மி சந்தனக்கு
விந்தையாய்ச் செய்வார் வேண்டுங் கிரிகைகளை
வைகுண்டம் போகயான் வழிகாட்டும் பாலகரை
ஐயோ மடித்தாயே அடாமூடா சண்டாளா
எந்தன் முகத்திலே இனிவிழிக் காதே நீ
இந்தப் பழியுனையும் என்றும் விடாதடா
செல்லடா வென்று செப்பி யரசனுமே
சொல்லவொண்ணுத் துயரில் சோம்பி யரசனுமே
அரவக் கொடிமன்னனும் அடைந்தானே வைகுந்தம்
அரவக்கொடி யோன்மடிய அறிந்துவஸ்வத் தாமனுமே
அடித்துமே கண்ணில் அழுது முறையிட்டே
துடித்தே விழுந்து சோம்பி யவனெழுந்தும்
ஏகினன் கானகமே இருந்துதவஞ் செய்திடவே
ஏகினதைக் கண்டுமந்த இருவருஞ் சென்றூர்கள்
அன்று கதிரோனும் அறிந்துமே சங்கதியை
சென்றுமே பஞ்சவர்க்குச் செப்பிட வேநினைந்து

வருபவனைப் போலவே வந்துதித்துக் கீழ்திசையில்
கெருவமொடு வந்தான் கிரணங்கள் காட்டியுமே
ஐவர்களுங் கண்டே அரசன்பூசை யைமுடித்து
ஐவர்களு மாயனும் அங்கிருந் தோரிடமும்
அப்போ தொருதூதன் ஐவரை யேபணிய
செப்படா வென்று சிலைவிசயன் கேட்டிடவும்
அவனும் மொழிவான் ஐவ ரிடத்திலே
தவராதவ்ஸ வத்தாமன் சங்கரித்தான் யாவரையும்
என்று மவன்மொழிந்தே ஏகினான் தூதுவனும்
நன்றாக வங்குவந்தே நல்ல துரோபதையும்
எல்லவருஞ் சேர்ந்து ஏகினார் பாசறையும்
நல்லாவே பார்த்தார்கள் ரத்தவெள்ள மோடுவதை
அம்மையும் பார்த்தே அருமைமைந்த ரைவரையும்
இம்மையதை யெண்ணி தேம்பி யவளழுதும்
மாயவ னோடிவந்தே மங்கை தனக்குமே
ஆயன் மொழிந்தான் அனேக நீதிகளை
துரோபதையுங் கேட்டு சோம்ப லதுதெளிந்து
துரோபதை யப்போது சொல்லுவா ளேசபதம்
அவ்ஸவத்தாமன் கிரீடம் அடியேனுக்கு வேண்டும்
அவ்ஸவத்தாமன் றன்னை அதஞ்செய்துகொண்டுவாரும்
சீக்கிர மாகவே செல்லுங்க ளென்றுமந்த
பாக்கிய வதிமொழிந்தாள் பஞ்சவ ரிடத்தினிலே
அப்போது வீமன் அம்மொழியைக் கேட்டுமே
இப்போது யானுமே ஏகியவ்ஸவத் தாமனையே
அதங்களுஞ் செய்தவனை அம்மகுடம் வாங்கிடுவேன்
பதறாதே பெண்ணே பார்நிமிடம் யான்வருவேன்
வந்திடுவே னென்று வாக்குறுதி செப்பியே
சந்தோஷ மாகவே தானடந்தான் வீமனுமே

அப்போது மாயவனும் அருச்சுனனைப்பார்த்து
இப்போது நாமும் ஏகவேணும் விசயா நீ
வாருமென் றேயழைத்து மன்னனை ரதமேற்றி
காருகந்த மேனியனுங் கருணையாய் ரதம்நடத்தி
வீமனைத் தேடியே வேகமொடு வனத்தில்
வீமனுக்குப் பின்னாலே விசயனும் வாரானே
அப்போவஸ் வத்தாமன் அனேக ரிஷியுடனே
தப்பா திருக்கின்றான் தக்க பலசாலி
வீமனுங் கண்டே வெகுகோப முண்டாகி
வீமன் தொடுத்துவிட்டான் வேண்டிய கணையதனை
அஸ்வத்தாமன் கண்டு அதிகக்கோப முடனே
அஸ்வத்தாம னப்போது அருகுவொன்றைக் கிள்ளியே
பிர்மாஸ்திர விஞ்சை பெலமாக வுச்சரித்து
பிர்மனையே யெண்ணி பிரியமாய் விட்டானே
கடுமையா யப்போது கணைவேக மாய்வருக
கடுமையாய் வருகிறதைக் கண்டுமே மாயவனும்
விசய னிடமே விளம்புவார் சங்கதியும்
விசயனே யிப்போது விடுவாய் பிர்மாஸ்திரம்
சல்திசல்தி யென்று சாமி மொழிந்திடவும்
சல்தியென் றுரைக்கவே தனுவிசய னச்சமயம்
அருகம்பில் லைப்பறித்து அதற்குவிஞ்சை யோதியே
திருத்தமோ டேவினான் சிலைவிசயன் தப்பாது
இருவர் கணைகளும் ஏகியே விண்ணுலகம்
கெருவமாய்ச் சண்டை கிளப்பின தங்கேயும்
அனலா யெரிக்குதே அந்தர வாசியெல்லாம்
தணல்வேதனை யவர்கள் தாங்க முடியாது
எல்லவருங் கூடியே இறங்கியே யிங்குவந்து
நல்ல வியாசரிடம் நவின்றார்கள் சங்கதியும்

இன்னுஞ்சண நேரமதில் எங்களுலக த்தோரும்
மன்னர் கணையாலே மாளுவது நிச்சயமே
இருவர்க ளிடத்திலே இச்சேதி யைமொழிந்து
இருவர்கள் பகழிதனை இழுக்கச்சொல்லும் வேதாந்தி
வேதவி யாசரிடம் விளம்பினர் தேவர்களும்
வேத வியாசர் விளம்பின தைக்கேட்டு
அசுவத்தாமன் றனக்கும் அந்த விசயனுக்கும்
பிசகுக ளில்லாமலே பேசினர் சிலநீதி
அருச்சுன வுன்கணையை அழைத்திடு வாய் நீயும்
திருத்தமாய்க் கூப்பிடென்று செப்பின ரேமுனிவர்
பார்த்தனுமே புகல்வான் பண்பா யுரைத்தவர்க்கு
ஆத்திரமாய்ச் செப்பினீர் அருமை முனியே நீர்
ஆபூதி யென்கணைக்கு அவன்கொடுக்க வேண்டுமே
ஆபூதி கொடுத்தாலே அழைத்திடுவே னென்றனே
மாமுனியுங்கேட்டு மன்னன் சொன்ன சங்கதியை
காமுனியும் புகல்வார் காளையஸ்வத் தாமனிடம்
அருச்சுனன் றன்கணைக்கு ஆபூதி கொடுமெனவே
திருத்தமாய்க் கேட்டார் செப்பியே மாமுனிவர்
அப்போவஸ் வத்தாமன் அம்முனி யிடம்புகல்வான்
இப்பவே யானுமே ஈய்ந்தேன் மகுடமதை
என்று மொழிந்தானே ஈஸ்வரன் றன்சுதனும்
நன்றாக வேமுனிவர் நவிலுவா ரவன்றனக்கு
நீவிட்ட கணைதனையே நினைப்பா யிங்குவரவும்
தாவியவ னைக்கேட்டார் தக்க முனிவருமே
அத்தன் புதல்வனும் அறைகுவா னேமுனிக்கு
இத்ததி யென்கணையும் இந்த ஐவர்கருவை
அறுத்து விடுமென்று அவனும் மொழிந்திடவே
திருத்தமாய் மாயவனுஞ் செப்பின தைக்கேட்டு

ஆயனுங் கேட்பார் அஸ்வத் தாமனிடமே
நேயனே மொழிவதையும் நீயுங் கவனிப்பாய்
உத்தரை கர்ப்பமதில் உண்டுவோர் பாலகனும்
பத்திர மாயதையும் பாதுநீ காத்திடுவாய்
இந்த மொழிகேட்டே எடுத்துரைப் பானவனும்
அந்தக்கெர்ப்ப மதையே அழிப்பேனு னென்றுனே
ஆயனுங் கேட்டு அதிக வருத்தமுடன்
மாயவனுஞ் செப்பினுர் மனப்படி செய்யெனவே
அருச்சுன னப்போது அழைத்தான் பகழிதனே
அருச்சுனன் கணையும் அதிவேக மாய்வந்து
அஸ்வத்தாமன் மகுடம் அதையெடுத்துச் சென்றிடவும்
அஸ்வத்தாமன் பகழி அதிவேக மாய்ச்செல்ல
மாயவனு மப்போது மங்கையுத்தரை யிடமும்
ஆய னுழைந்தான் அவள்வயிற்றில் தப்பாது
அந்தமங்கை தானுமே அறியாளே யொன்றுமே
அந்தவேளை கணையும் அவள் வயிற்றிற் பாய்ந்திடவே
பாய் முடியாது பாரளந்தோ னேப்பார்த்து
சென்றதீ வேககணையுஞ் சீக்கிர மாய்வெளியில்
சென்றதை யேகண்டே சிரித்துவந் தான்மாயன்
அருச்சுனன் றன்கணையும் அந்தக் கிரீடமதை
அருமையாய் விசயனிடம் அதுகொடுத்துச் சென்றதுவே
அப்போதஸ் வத்தாமன் அந்த வியாசருடன்
தப்பாது சென்றுன் தவஞ்செய்யக் காட்டகத்தில்
மாய னருச்சுனனும் மன்னன்மத வீமனுடன்
ஆயன் ரதம்நடத்த அங்குவந்தார் பாசறையும்
பாசறை வந்தே பணிந்தார்கள் தர்மரையும்
நேசமாயா சீர்வதித்தார் நின்றதம்பி மார்களுக்கு
அருச்சுன னப்போது அண்ண னிடந்தனிலே

அருமையா கக்கொடுத்தான் அந்தக் கிரீடமதை
அவருமதை வாங்கியே அம்ம னிடங்கொடுக்க
தவராமல் வாங்கியே தான்புகழ்ந்தா ளம்மானை

விதுர மகாராசன் பஞ்சவரிடம் வருவது.

அன்று விதுர னுமே ஐவரிட மேவருக
நன்முன பஞ்சவர்கள் நாதனை யேபணிந்து
தோத்திரஞ் செய்தார் சொல்லி வெகுவாக
ஆத்திரமாய் விதுரன் அவரை யெடுத்தணைத்து
ஆசீர் வதித்தே ஐவரையும் புகழ்ந்தார்
ஆசீர் வதித்தோரிடம் அறைகுவா ரேதருமர்
பதினெட்டு நாள்யுத்தம் பஞ்சவரும் மொழிந்து
நதிநடந்த சங்கதியைச் சாற்றினுர் பூராவும்
அவரு மிதைக்கேட்டு ஆனந்த மேகொண்டு
அவரு மொழிவார் ஐவ ரிடந்தனிலே
இப்போது யானும் ஏகியஸ்தி னுபுரியில்
தப்பன் தகப்பனிடஞ் சங்கதி விசாரிக்க
செல்லுகிறே னென்று செப்பி யவரிடத்தில்
சல்லாப மாய்நடந்தான் தக்கவஸ்தி னுபுரிக்கு
அண்ணனிடஞ் சென்று அடியிற் பணிந்திடவும்
மன்னன் றனக்கும் வழுத்தினுர் தூதுவர்கள்
தம்பியென்றே மொழியத் தரையிற் புரண்டரசன்
வெம்பி மிகமயங்கி வேந்த னழுதிடவும்
விதுர னு மப்போது வேந்தனை யேதூக்கி
பொதுவான நீதிகளைப் புகட்டினுன் மன்ன னுக்கு
மன்னவனே முன்னுள் வழுத்தி யிருக்கின்றேன்
என்னசெய்வோம் வினையும் இப்படி முடிந்ததுவே
இனிமேல் மயங்குவதில் என்ன பிரயோசனம்
இனித்துக்கம் வேண்டாமென ஏக நீதி தான்புகட்டி

தம்பி யுரைத்ததுவை தான்கேட்டு மேயரசன்
வெம்பிடா திருந்தானே வேந்தனு மங்கேயும்

## கிருஷ்ணபகவானும் பாண்டவர்களும் திருதராட்டிரனிடம் வருவது.

திரிதராட் டிரமன்னன் செப்புவான் விதுரனிடம்
தெரிந்ததொரு தம்பியேநாம் செல்வோங் குருபூமி
வருகுவா யென்று மன்ன னழைத்திடவும்
திருவாய் மொழிப்படியே செல்லுவோம் நாமென்று
அப்போ விதுரன் அறைந்தான்தேர்ப் பாகனுக்கு
தப்பாது கொண்டுவந்தான் சல்தியாக ரதமும்
காந்தாரி யம்மாளுங் கன்னியர் நூறுபேரும்
வேந்தர்களைப்பார்க்க வெளிப்பட்டா ரங்கேயும்
தேரினி லேறினனே திரிதராட் டிரமன்னன்
தேரிய விதுரனுஞ் செப்பினன் ரதம்நடத்த
திடப்புயத்தோன் பாகனுஞ் செப்பி யதுகேட்டு
நடத்தினன் பாகனும் நல்லகங் காநதிக்கு
படுகளம் வந்தார்கள் பாவையரும் மன்னவரும்
படுகளத்தைக் கண்டு பாகன் ரதம்நிறுத்த
அவரவர் மன்னர்களை அம்மாதர் கள்நினைந்து
தவராது வந்தே தக்க படுகளத்தில்
கத்தினர் கன்னியர்கள் கண்ணில்லா னும்பார்த்து
பதறி யழுதானே பாராண்ட மன்னவனும்
அப்போது வேதமுனி அறிந்துமே சங்கதியை
தப்பாது வந்தார் தன்சுதன் முன்னலே
அவனுக்கு மொழிந்தார்கள் அங்கு நின்றமன்னர்
அவனுமே கேட்டு அடியினில் வீழ்ந்தழுக
வியாசரு மன்னனுக்கு வெகுநீதி யைமொழிய
வியாச ருரைகேட்டு வேந்தன் களைதெளிய

காந்தாரி யம்மானையுங் கண்டந்த மாமுனிவர்
காந்தாரி தனக்குங் கழறினார் வெகுநீதி
மங்கையுமே கேட்டு மாமன் மொழிதனையே
இங்கேயு மிச்சமயம் எல்லோரை யுந்தகனம்
செய்யவேணு மென்று செப்பினார் மாமுனியும்
ஐயன் மொழிதனையே அந்தகனுங் கேட்டு
காவல ரச்சமயங் கட்டை யடிக்கிடவும்
காவலன் றாரியனுடன் கனமான மன்னரையும்
கட்டையின் மேல்வைத்தே காலாக் கினிமூட்டி
சட்டெனச் சுட்டுவிட்டார் தக்க பலவீரரை
அப்போது யெல்லோரும் அங்கே கங்கா நதிக்கு
தப்பாது வந்தார்கள் தரையாண்ட மன்னனுடன்
ஆயனு மப்போது ஐவர் தனக்குரைத்து
மாய னழைத்தே வந்தார்கள் மன்னனிடம்
தர்மர்வந் தேபணியச் சாற்றவே யந்தகனும்
தருமரைக் கட்டியே தரைவேந் தனுமழுக்
இருவ ரழுதுமே ஏங்கிப் பரதவிக்க
இருவ ரழுகவே எல்லோருந் தானழுக
வியாசரு மப்போது வேந்தர்களைத் தேற்றியே
வியாகூலம் வேண்டாம் விசனமெல்லாம் விட்டுவிடும்
என்றுசில நீதிகள் எடுத்துரைத்தா ரச்சமயம்
அன்றுமே தர்மர் அந்தகன் பாதமதில்
விழுந்து பணிந்தார் விளம்பினார் மன்னனுக்கு
விழுந்து பணிந்தோரை வேந்த னெடுத்தணைத்து
ஆசீர் வதித்தே அருமையாய்த் தர்மரிடம்
பேசிச் சிலசேதி பிரியமொடு மன்னன்
அப்போது அந்தகனும் அங்கிருந் தோரிடமே
இப்போது யெக்தன்சுதன் எழில்பீமன் எங்கேயென்றான்

ஆயனும் யோசித்து ஐம்பொன்னின் பாவைதனை
மாயனுங் கொண்டுவந்து மன்னன்முன்னே வைத்து
இந்தா யிருக்கின்றான் இங்குபீம னென்றார்
அந்தப் பதுமைதனை அந்தகன்கை யாலெடுத்து
மார்போ டணைத்தே மன்ன னிருக்கிடவும்
மார்பிலுந் தைத்திடவே மன்னன் நொறுக்கிடவே
சரீரத்தில் தைத்தே சல்தி மயக்கமதாய்
அறிவதும் மாறி அரசனுங் கீழ்விழுந்தான்
அப்போ வியாசர் அரசன் றனையெடுத்து
செப்பிச் சிலசேதி தீர்த்தாரே சோகமதை
திரிதராட் டிரமன்னன் தேம்பி யழுதுமே
அறிவில்லாமல் யானே ஐயோகொன் றேன்பீமனை
என்னருமைச் சுதனே என்னசெய் வேன்யானும்
மன்னு வுனையுமே மடையன் வதைத்தேனே
இன்னும் பலவிதமே எடுத்தோதி யந்தகனும்
மன்னன் மயங்கியே வருத்த மடைந்திடவும்
மாயவ னப்போது மன்னன் றனக்குரைப்பார்
ஆயாச மெல்லாம் அரசனே விட்டுவிடும்
வீமனுஞ் சாகவில்லை வேந்தனே யிப்போது
வீமனுக்குப் பதிலாய் வெங்கலப் பொம்மையதை
வைத்தேனு னென்று வரலாறெல் லாமொழிந்து
அத்ததி வீமனையே அழைத்துமே மாயவரும்
அரசனைப் பணியுமென்று ஐயன் மொழிந்திடவும்
அரசனுங் கேட்டே அண்ணல் பாதம்பணிந்தான்
அந்தக னப்போது அவனை யெடுத்தணைத்து
சிந்தை மகிழ்ந்துமே செப்பினான் நல்வாக்கு
அருச்சுனனும் வந்தே அடியில் விழுந்துபணிய
திருத்தமாய் மன்னவனுஞ் செப்பினு னேயாசி

மற்றிருவர் வந்தே மன்னவனைப்பணிய
சுற்றமுட னரசன் சொன்னனே நல்வாக்கு
எல்லவருங் கூடி ஏங்கி விசனமிட
நல்லவேத வியாசர் நவின்றார் சிலகதையும்
அப்போது மாயவனும் ஐவர் களைப்பார்த்து
செப்பத் துணிந்துமே செந்திரு மால்புகல்வார்
அன்னைகாந் தாரியிடம் ஐவர்களே நீங்கள்சென்று
முன்னேபாதம் விழுந்து மொய்குழலைப்பணிவீர்
வாருமென்றே மொழிந்து மாய னழைத்துவந்தே
தேரும் படியாகச் செப்பினர் சிலநீதி
மன்னன் தருமருமே மாதாபா தம்பணிய
மின்னாளு மப்போது வேந்தன்பா தம்பார்க்க
காலிற் பெருவிரலுங் கருப்புநிற மாகிடவே
மாலுமிதைப் பார்த்தே மாமி தனக்குரைப்பார்
இந்தக்கோப மெல்லாம் இன்றோடு விட்டுமே
சொந்தமகனைவருக்குஞ் சொல்லுவீர் நல்வாக்கு
என்றுமாயன் மொழிய இதைக்கேட்டு மங்கையரும்
நன்றான தர்மரையும் நங்கையுமே தூக்கி
ஆசிமிகச் செப்பி அந்தச் சுதனுடனே
பேசிச் சிலசேதி பேதை யழுதிடவும்
வியாசரங் கேவந்து விளம்பி வெகுநீதி
வியாசர் மொழிந்ததை மெல்லியருங் கேட்டு
சஞ்சலத்தைப் போக்கி தையலு மங்கிருக்க
அஞ்சாத வீமனுமே அன்னைதனைப் பணிந்தான்
அப்போது மாதாவும் ஆங்காரக் கோபமுடன்
செப்புகின் றாளே செயவீமன் றன்னிடமே
அண்ணன் துரியோதனனை அடித்தாய் துடையிலே
மன்னவனே யதுவும் மன்னர்கள் நீதியோ

தம்பிதுச் சாதனனை தன்கைக் கெதையாலே
வெம்பிட நீயடித்தும் வீழ்ந்தபின் பூமியிலே
அவன்மார்பை நீபிளந்து அள்ளி உதிரமதை
தவருய்க் குடித்தாய் தகாத காரியம்மன்ஞ
ஆகுமோ வென்றே அம்மையுங் கோபிக்க
பாகுமொழி யம்மையர்க்கு பகருவா னேபீமன்
அம்மையே யானும் அந்தநாள் சபைதனிலே
செம்மையாய்ச் செப்பினது துரியன் தொடையிலே
அடித்திடுவே னென்று அறைந்த சபதம்போல்
துடித்திடவே யடித்தேன் தோசமில்லை யென்பேரில்
துச்சா தனனையுஞ் சொல்லிய சபதம்போல்
அச்சமில் லாமலேயான் அடித்தே னவனையும்
உதிரத்தை யள்ளியான் உண்ணவில்லை தாயேகேள்
உதிரத்தை வாயில்வைத்து உமிழ்ந்துவிட்டேன் மாதாவே
தம்பி விகர்ணனுக்கு தாழ்ந்துசொன்னேன் சங்கதிகள்
தம்பியருங் கேளாது சாவ்ஸ்திவிட் டான்கணைகள்
அப்பரிலவ னையடித்தேன் அன்னையே யான்தானும்
தப்பில்லை யென்மேலே தாயே யெனைக்காரும்
சொல்லிபீமன் பணிந்தான் தோகைபா தந்தனிலே
மெல்லியுமே பார்த்து வேந்தன் றனைத்தூக்கி
ஆசீர் வதித்தாளே அம்மையும் பலவானை
தோசியா னென்றே சொல்லி பீமனழுதான்
அருச்சுனன் வந்தே அன்னைபா தம்பணிய
அருச்சுனன் றனக்குமே அறைந்தாளே நல்வாக்கு
மற்றிருவர் வந்தே மாதாபா தம்பணிய
சுற்றமுட னவர்க்கு சொல்லிஞள் நல்வாக்கு
அப்போது தோகையரும் ஆயனையே கேட்பாள்
தப்பான யுத்தமதை தான்விளைத் தாய்நீயும்

அந்தநா ளிருவருக்கும் அருமையாய்ப் போதித்து
இந்தயுத்தஞ் செய்யாது ஏன்செய் யலைநீரும்
பிள்ளைகள் மடிந்தது பெரும்பாவி யுன்னுலே
சள்ளை விளைத்தே சண்டாளா கெடுத்தாயே
இப்போது யானும் இடுவேன் சாபமுனக்கு
தப்பாது வாங்குமென்று சாற்றினுள் மங்கையும்
ஆயனதைக் கேட்டே ஆனந்த மேகொண்டும்
மாயன் துகிலதனை மங்கைமுன்பு விரித்து
கொட்டும்மாமி யென்று கோபாலன் கேட்டிடவும்
சட்டெனவே மாது தான்மொழி வாள்சாபம்
உந்தனது பிள்ளைகள் உனக்கு வுதவாமல்
விந்தையாய் மடிவாரென விட்டாள் பெருஞ்சாபம்
ஆயனு மப்போது அத்துகிலைச் சுற்றியே
மாயவனுந் தோள்போட்டே மகிழ்வு மிகவடைந்து
அப்போது கண்ணன் அம்மையிடம் புகல்வான்
இப்போது யெந்தனுக்கு இட்டாய் பெருஞ்சாபம்
அந்தநாளில் தூதும் அவ்ஸ்தினு புரிவந்து
விந்தையாய்ச் செப்பினேன் வேண்டும் மதியதனை
அரவக் கொடியோன் அன்றுமே கேளாமல்
திரமான யுத்தமது செய்யவென்று நிச்சயித்தான்
ஆதிநா ராயணனும் அறிவானே சங்கதியும்
வேதினை யென்மேலே வேண்டாமாமி விட்டுவிடு
இன்னும் பலவாருய் எடுத்தோதி நிற்கவுமே
முன்னம் வியாசர்வந்து மொழிவார் காந்தாரிக்கு
இப்போது யெல்லோரும் இந்தக்கங் காநதியில்
தப்பாமல் சென்று ஸ்நானபா னஞ்செய்தே
விற்றிரத் தோரே நீங்கள் வேண்டியே யாவரையும்
தர்ப்பணஞ் செய்யுமென தவயோகி யும்மொழிய

காவலர்க ளெல்லாங் கங்கா நதிசென்று
பாவங்கள் தீரவே பண்ணியே ஸ்நானமது
திரிதராட் டிரமன்னன் செய்தானே தர்ப்பணங்கள்
அறிந்துமே தர்மர் அண்ணன் கருணனுக்கு
விற்புயத்தோ னப்போது வேண்டித் துதித்துமே
தர்ப்பணஞ் செய்தே சகல விதிமுடித்தார்
அப்போது மாதரெல்லாம் அனேக பாவந்தீர
தப்பாம லேயவர்கள் தான்மூழ்கி யேநதியில்
மாது துரோபதையும் மயிர்விரித்து நின்றிடவே
மாதுவிடம் வந்தே மங்கைகாந் தாரியம்மன்
சொல்லிச் சிலசேதி துரோபதை கூந்தலையும்
அள்ளி முடியுமென்று அம்மாது மேமொழிய
அப்போ துரோபதையும் அள்ளியே கூந்தலையும்
தப்பா தொருரோமம் தான்முடிந்தாள் சீக்கிரத்தில்
தேவர்களுங் கண்டே தேன்மாரி யும்பொழிய
மூவர்களும் பார்த்தே மொழிந்தார்கள் நல்வாக்கு
நல்வேளை தனிலே நகர்செல்ல யோசித்து
எல்லோரு மங்கு இருந்தார்க ளம்மானை

திரிதராட்டிரன் தருமரை நகருக்கழைப்பது

பெரியரச னப்பொழுது பிள்ளை தருமருக்கும்
அறியநீதி மொழிந்து அழைத்தா னகர்தனக்கு
தந்தை தனக்குமே சாற்றுவா யேதருமர்
தந்தையே யானுமே சண்டாள னுனேனே
அண்ணன் தம்பி களையும் அழித்துமே யான்பாவி
மன்னர் வெகுபேரை மடித்துவிட் டேனேயான்
இனிநகர்க்கு யானும் ஏகமாட் டேனையா
தனியேகா னிற்சென்று தவயோகி யாகியே
தவங்கள்செய்யப் போகின்றேன் தந்தையே யானுமென

தவருய் மொழிந்ததையும் தான்கேட்டு மேயரசன்
அப்பனே யுந்தனையும் அனுப்பிவிட்டு யானும்
எப்படி யிருப்பேனென ஏங்கியழு தானரசன்
வியாசர் தருமருக்கு விளம்பி வெகுநீதி
ஆயன் மொழிந்தார் அனேகமான நீதிகளை
கூடாது யானுங் கோபாலா செல்வேனே
தேடாதீர் யென்றே செப்பினுர் தர்மருமே
மாமுனி யப்போது மன்னன் தருமருக்கு
காமுனியும் புகல்வார் காவலா வீஷ்மரிடம்
செல்லுவோ மென்று செப்பியழைத்து வந்து
நல்லவீஷ்ம ரிடத்தில் நவின்ருரே சங்கதியும்
அப்போகங் காசுதனும் அழைத்துத் தருமரையே
செப்பினுர் நீதிகளை தெரிந்ததைப் பூராவும்
அப்பா வரசனே அருமையான யென்பேரா
இப்போது நீயுமே ஏகி நகரமதில்
பட்டாபி ஷேகஞ்செய்து பாதுகா ரெல்லோரையும்
திட்டமாய்ச் செல்லென்று செப்பினுர் தாதாவும்
நல்லதென்று சம்மதித்து நல்ல தருமருமே
நல்லவேளை யிச்சமயம் நடப்பீர் நகரமது
என்றுவீஷ்மர் மொழிய எல்லோரு மேநகரம்
நன்ருக வந்தே நல்லசபா மண்டபத்தில்
சிம்மா தனமதனில் சேகர மாயிருந்து
இம்மா நிலந்தனையே என்றுமுடி சூடுவது
என்றுமே கேட்டான் ஏந்தல்கண் ணில்லாதான்
நன்ருன சோதிடர்கள் நாளையென் றுரைத்தார்கள்
அப்போ தரசன் அழைத்துமே தூதுவரை
இப்ப நகரமதை எங்கு மலங்கரியும்
பறை யறையுமென்று பாரர சன்மொழிய
பறையே யறைந்தார்கள் பட்டணம் பூராவும்
சத்தமதைக் கேட்டே சல்தி சனங்களும்
சுத்தமுடன் நகரை சோடித்தார் சீக்கிரத்தில்
திரிதராட் டிரமன்னன் செப்புவான் கணக்கருக்கு
அறியவே ராசர்களும் அனுப்புவாய் நீலிகிதம்
என்றரசன் மொழிய எழுதிக் கணக்கருமே

நன்றாகத் தூதருக்கும் நவின்றுமே சங்கதியை
ஓலையைக் கைக்கொடுத்து ஓடுங்க ளென்றுரைக்க
ஓலையை வாங்கியவர் ஓர் நிமிடஞ் சென்றார்கள்
தேசதேச மெல்லாஞ் சென்றுமே தூதுவர்கள்
ஆசாரப் சுருளதனை அரசர்கள் கைக்கொடுக்க
அரச ரதைப்பார்த்து அஸ்தினா புரிவந்தே
அரசர்க ளெல்லாம் அமர்ந்தார் விடுதியிலே
அப்போ வரசன் அழைத்துமே தூதுவரை
இப்போது மண்டபம் எல்லா மலங்கரியும்
செல்லுங்க ளென்று செப்ப வரசனுமே
சொல்லவே கேட்டார் சுருக்காக வோடிவந்து
இந்திர லோகமதில் இருக்கும்மண் டபம்போல
தந்திரமாய்ச் சோடித்தார் சமர்த்தர்கள் தூதுவர்கள்
வாழை மரங்களும் வருசையாய்க் கட்டியே
தாழையுட காயும் தனித்தனியே கட்டினார்
சிறப்பான சோடினைகள் செய்துமே காவலர்கள்
சிரமேற் றெழுது செய்தோமென் றேமொழிந்தார்
அப்போது மண்டபத்தில் அந்தகன் வந்திருந்து
தப்பா தரசரையும் தானழைத் தங்கேயே
எல்லோருஞ் சேர்ந்து ஏகமா யோசித்தே
நல்லவேளை பார்த்து நலமான தர்மரையும்
சிம்மா தனத்தில்வைத்து சேர்கையாய்த் தம்பியோடு
இம்மா னிலந்தனையே இன்றயா னுங்களுக்கு
பட்டந் தரிக்கின்றோம் பாதுகார் யெங்களையும்
இட்டமறை யோரும் இருந்துவேத மொழிய
விலைமாத ராடிடவே வெகுவரசர் தாம்பார்க்க
கலைமாது குடிகொண்ட கவிரத் தினம்பொழிய
மாமுனி வியாசருமே மன்னன் றருமருக்கு
மாமுனிசந் தோஷமாய் மகுட மதையெடுத்து
சிரத்தினில் வைக்கவுந் தேவர்க ளும்பார்த்து
திரமான வாசிமிகச் செப்பினார் தேவர்களும்
பூமாரி யும்பொழிந்தார் பூவரசர் தம்மேலே
பூமாதேவி கண்டு பொங்கி மகிழ்வடைய
மங்கள வார்த்தையது மங்கையும் மொழிந்துமே

செங்கண்மால் தன்னையே தேவி துதித்தாளே
அரசர்கள் விடைவாங்கி அன்றுசென் றூர்நகரும்
அரசர்கள் செல்லவும் ஆயனு மப்போது
ஐவர்கள் தன்னிடமே அன்பாய்வந்து மாமாயன்
பைய மொழிந்தே பாரர சர்முன்பு
விடையது வாங்கியும் வேதாந்தக் கண்ணனும்
தடைசொல்லாச் சாத்தகியுந் தானும் ரதமேறி
சென்றூர் துவராபுரி சீக்கிர மாகவே
அன்றி ருந்துமே ஐவர் அரசுசெய்ய
மாத மும்மாரி வழிந்தோடிப் பெய்யவுமே
பூதலங்க ளெல்லாம் பொங்கியே செல்வமோங்க
புலியும் பசுவும் பொருந்தியே நீருந்தும்
வழியிற் பயமில்லை மன்னரது ராச்சியத்தில்
ஆறிலொரு கடமை ஐவர்களும் வாங்கி
பாரிலுள்ள குடியை பாலித்து வந்தார்கள்
பூதலத்தி லுள்ளோர்கள் புகழும் படியாக
பேதகமில் லாதபடி புண்ணியர்செய் தாரரசு
ஐவர்களும் பத்தினியும் அஸ்தின புரிநகரும்
தெய்வச் செயலாலே சேயர்களும் வாழி
ஆதிமூல மென்றதொரு ஆனைதனைக் காத்த
சோதிநா ராயணனும் தோகையுடன் வாழி
இந்தவம் மானைதனை இதயமதி லேநினைந்து
அந்தமுட னேபடித்தோர் அருகிருந்து கேட்டவர்கள்
இந்தப் புவிதனில் எந்நாளு மேசிறந்து
செந்திருவின் சகல செல்வமுடன் வாழியவே

முற்றிற்று.

சுபம்! சுபம்!! சுபம்!!!



